## குருவணக்கம்

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

இலக்கணமுத் தூக் கவிரா சேந்திரனென் றொருநாமம்
ஏந்தி வந்து
புலக்கணெனக் கினிதளித்த புண்ணியவென்குருமணியைப்
போற்றி நின்றே
நிலக்கணுயர் மன்பனைகள் கலக்கமிலா நிலைமேவ
நெறிமுன் காட்டும்
வலக்கணிகர் வள்ளுவரின் வழிவந்த இந்நூலை
வழங்கி னேனே. (1)

இத்தரையில் மலப்புழுவிற் கடையாகக் கிடந்துழலும்
ஏழை யேற்கு
முத்தமிழும் பயில்வித்து மூகமொழித் தறிவூட்டி
முருகைப் போற்றச்
சுத்தமிகு சொற்சுவைதோய் வாக்களித்தெத் தேத்தினுஞ்சீர்
துலககிப் பின்னும்
வித்தகநா வலவனெனப் பெயர்கொடுத்த கவிவேந்தர்
வேந்தேபோற்றி. (2)

---

குறிப்பு:— இப்புத்தகத்தோடு இவ் ஆண்டு நிறைவுறுகின்றது ஆதலால் சென்ற ஆண்டுத் தொகுதிகளையும் ஒன்றுசேர்த்துப் பைண்டு செய்துகொள்வதற்கு உதவியாகுமாறு சில பக்கங்களை அதிகப்படுத்தி வரம்புசெய்தும், முகவுரை முதலியன சேர்த்தும், இத்துடன் அனுப்பியிருக்கிறது. அங்ஙனம் அமைத்துக் கொண்டால் பொருட்பாலில் 800 பக்கங்களையுடைய ஒரு தனிப் புத்தகம் முதலில் உங்களுக்கு உரிமையாக அமையப்பெறும்.

சிவமயம்.

# முகவுரை.

இந்நூல் உலகமுய்யத் தோன்றிய தெய்வப்புலமைத் திருவள்ளுவப்பெருந்தகை அருளியுள்ள பொதுமறையினை மருவியுள்ளது. ஆயிரத்துமுந்நூற்றுமுப்பது அரியகுறள்களுக்கும் உரிமையான உண்மைச் சரிதங்களைத் தெரியவுணர்த்துவது. கதைகளைக் குறள் வெண்பாவில் அமைத்துக் குமரேசனை முன்னிலையாக்கொண்டு திருக்குறளோடிணைத்துச் செய்யப்பட்டுள்ளது ஆதலால் இந்நூல் திருக்குறட்குமரேச வெண்பா என்று பெயரெய்தப் பெற்றது. இனிய நடையில் தெளிய எழுதிய சிறந்த உரையோடு திருந்திய கதை விளக்கமும் பொருந்தியுள்ளது. பழையவுரைகளைக் கொண்டு எளிதில் அறியமுடியாத குறளின் நுணுகியபொருள்களெல்லாம் இதனால் இனிது தெளியலாம். பண்டைக்காலத்திலிருந்த முனிவர்கள், அரசர்கள், அமைச்சர்கள், புலவர்கள், வீரர்கள், வள்ளல்கள், முதலிய எல்லோருடைய வரலாறுகளையும், குணஞ்செயல்களையும், பிறஇயல்புகளையும், வள்ளுவர் இயலோடு கலந்து உள்ளங்கை நெல்லிக்கனிபோல் இதில் தெள்ளிதிற் காணலாம்.

இந்நூல் எல்லார்க்கும் எளிதாகப் பயன்படுமாறு 1100-ம் ஆண்டு ஆவணி (15-9-24) தொடங்கி மாதந்தோறும் தனித்தனிப் புத்தகங்களாக உயர்ந்தபதிப்பில் வெளிவருகின்றது. இதன் முதற்பகுதியாகிய அறத்துப்பால் 780 பக்கங்களையுடைய ஒருதனிப்புத்தகமாக அழகிய வடிவில் இற்றைக்கு இரண்டு ஆண்டு கட்கு முன்னர் வெளிவரலாயிற்று. பொருட்பாலின் முதற்பாகமாகிய இது, ஏறக்குறைய 800 பக்கங்களையுடையதாய் இதுபொழுது உருவடைந்து வெளிவருகின்றது. இந்நூலைப்பாடசாலைகளில் பாடபுத்தகமாக வைக்க வேண்டுமென்று அரசாங்கத்தார் ஆதரித்திருக்கின்றார்கள். இதனைப் பாடமாகவைப்பின் இலக்கியச் சுவையோடு திருக்குறளின் அமிழ்தமயமான பொருள் நலங்களையும் உலகநிலைகளையும் பல அரிய நயங்களையும் மாணவர்கள் இனிது நுகர் வார்களென்று யான் எண்ணியிருக்கின்றேன். பாடசாலை அதிகாரிகளும் பண்டிதர்களும் இதில் கண்ணூன்றியருளின் யான் எண்ணியுள்ள இவ் எண்ணம் இனிது நிறைவேறும்.

இந்நூல் தோன்றிய விதமும், ஊன்றியநோக்கமும் முன்வெளி வந்துள்ள அறத்துப்பாலின் முகவுரையில் அறிந்து கொள்ளலாம். இந்நூலும் உரையும் இனிது நிறைவுற அருள் புரிந்துவரும் கலைத்தாயின் அருளாடலை நினைந்து நினைந்து பெருமகிழ்வுறுகின்றேன். ஒன்றுக்கும் பற்றாத என்னை எவரும் பற்றாத இவ்அரிய துறையில் புகுத்தி ஆட்டியருளும் எம் ஆறுமுகப்பெருமான் திருவடிமலர்களைச் சிரமேற் கொண்டாடிச் சிந்தித்து வந்திக்கின்றேன்.

என்னையுந் தொண்டாளடுத்தது கமலத் தெழிலலங்
கவற்றியவுனது
பொன்னடிப் போதின் பெருமையை மற்றோர் புந்தியா
லறிந்துநற் கதியில்
மன்னுதற் பொருட்டோ அல்லது பித்தன் மகனெனுஞ்
செயறெரித் திடவோ
வன்னிகர் தனத்துக் கொடிச்சிதோள்தழுவும் வள்ளலே
மாசிலா மணியே.

திருவள்ளுவர் நிலையம்,
தூத்துக்குடி
16—8—28
1104ஆம் ஆண்டு ஆவணி,மீ 1

இங்ஙனம்
ஜெகவீரபாண்டியன்.

**The Book "Thirukkural Kumaresa Venba"** has been approved as "suitable for school use" at the meeting of the Text Book Committee held on 10—3—26.

*Director of Public Instruction,*
*Madras.*

உ
சிவமயம்.

## இந்நூலைக்குறித்துப் புலவர்கள் அனுப்பியுள்ள அபிப்பிராயங்களுள் சிலவற்றின் சுருக்கங்கள்.

### Rao Sahib. ஸ்ரீமான் வே. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் G. B. V. C. எழுதியது.

திருக்குறட் குமரேச வெண்பா என்னும் இந்நூல், முற்பாதியில் கவி ஒரு வரலாறு கூறி அவ்வரலாறு (கதை) வரல் ஆறு (வந்தவிதம்)யாது? எனக் குமாரக் கடவுளை வினவப், பிற்பாதியில் அக்கடவுள் ஒரு குறளையே விடையாக அருளியுள்ளதாக அமைந்துள்ளது.

அலங்கார இலக்கண இலக்கியங்களை ஒருங்கே அமைத்து காளிதாச மகாகவி செய்துள்ள "சந்திராலோக" கிரந்த சுலோகங்கள் போல, நீதியிலக்கண இலக்கியங்களைப் பொருத்தமாக ஒருசேர அமைத்து ஸ்ரீமான் ஜெகவீர பாண்டியன் அவர்கள் இந்நூலைச் செய்துள்ளார்கள் 1330 அருங்குறள்கட்கும் பொருந்திய கதைகள் இனிதாக இணைந்துள்ளன. இது மிகவும் அருமையான ஒரு பெரிய நூல்.

சுருக்கமான திருக்குறளும், அதன் பெருக்கமான இந்நூலும் முறையே வித்தும் மரமும் ஒத்திருக்கின்றன. இந்நூல் ஒவ்வொருபாட்டின் அடியிலும் சுருக்கமும் துலக்கமுமான பொழிப்புரையும், அரும்பதவுரையும், அரிய இலக்கணக் குறிப்பும், கருத்துரையும், கதை விவரமும் இனிது கூறப்பட்டிருக்கின்றன. ஒவ்வோரதிகாரத்தின் முடிவிலும், அவ்வவ் அதிகாரசாரம் அனைத்தும் பாலிற் கடைந்தெடுத்த வெண்ணெய்போலத் திரட்டியெடுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

இந்நூல் சொன்னயம், பொருள்நயம், தொனிநயம் முதலிய பன்னயமுமலிய திலவி வாசிப்போர் மனத்தை மகிழ்விக்குமாறு வாய்ந்திருத்தல், ஆசிரியரது சபாரஞ்சகப் பிரசங்க சாதுரியத்தை அநுபவித்து அறிந்தோர்க்கு அதனை நினைவுறுத்தும் என்பதில் ஐயம் இல்லை.

தமிழ் அறிந்த ஆடவர், மகளிர், இளையோர், முதியோர் எல்லாரும் எளிதாகவும், இனிதாகவும், படித்து இம்மை, மறுமைப், பயன்கள் இரண்டும் எய்தும்படி இந்நூல் இயற்றப்பெற்றிருக்கின்றது.

வே. ப. சுப்பிரமணிய முதலியார்,
வெள்ளகால்,
24—12—1924.

ஸ்ரீமான் K. சுப்பிரமணியம் அவர்கள் M. A., M. L.,
"Advocate, Tagore Professor of Law" சென்னை.

அன்பார்ந்த ஐயா, நலம், நலம் கேட்க அவல். தங்கள் குமரேச வெண்பா கடவுள் வாழ்த்துப் பகுதி கைவரப் பெற்றுப் பார்த்து மகிழ்வெய்தினேன். தங்களது தெளிவான இனிய தமிழ் நடையும் சொற்பொருள் விளக்குந் திறனும் கற்றார் யார்க்கும் களிபெருவகைதரும் பான்மையன. தங்களது பன்னூலாராய்ச்சியும் இந்நூற்கண் இனிது திகழ்கின்றது. திருக்குறட் பெருநூலை எளிதாகவும், விளக்கமாகவும், திட்பமாகவும், உணர்ந்து இன்புறுதற்குத் தங்கள் நூல் சிறந்த கருவியாகும் என்பது என் கருத்து.

K. சுப்பிரமணியம்.

திருச்சி, ஸ்ரீமான் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்
கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் புலவர்.

அன்புமிக்க ஐயா. நலம்.

தங்கள் திருக்குறட் குமரேச வெண்பாவின் முதலிரண்டு பகுதிகளைப் படித்துப்பார்த்தேன். தங்கள் விரிந்த புலமையும் செய்யுள் இயற்றுந் திறனும், கட்டுரை எழுதும் வன்மையும் நன்கு அறிந்து பெருமகிழ்வெய்தலானேன். செய்யுட்களெல்லாம் மிக்க நயமுடையனவாயும், பொருத்தமான கதைகளைக் கொண்டனவாயும் திகழ்கின்றன. உரையின் நடைப்போக்கும் இன்பம் விளைக்கின்றது. இந்நூலினைக் கற்போர் கல்வியின் பல்வகை நலங்களை ஒருங்கே துய்ப்பர் என்றும், இஃதொன்றே தங்கட்குப் பெரும் புகழை நிறுத்தவல்லது என்றும் நான் உண்மையாகக் கருதுகின்றேன். தமிழுலகம் தங்கட்கு என்றும் பெரிதும் கடப்பாடு உடையதாகும்.

22—12—1924 தங்களன்பன், மு. வேங்கடசாமி.

ஸ்ரீமான் S. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.,
Deputy Inspector of schools, Walajapet.

உலகம் போற்றும உயர்தனி நூலாகிய திருக்குறளின் கருத்துகளைத் தக்க எடுத்துக்காட்டுகளால் தாங்கள் விளக்கிச்செல்லும் அருமை பெரிதும் பாராட்டற்குரியது. தாங்கள் எழுதுந் தெளிதீந் தமிழ் நடை, தமிழ்க் கல்வி நிரம்பப் பெறாதோர்க்கும் இன்பமும் பயனும் ஈயவல்லது. தங்களது ஆழ்ந்தகன்ற தமிழ் நூலாராய்ச்சி, இங்ஙனம் தமிழ்மறை விளக்கத்திற்குப் பயன்பட்டிருப்பது எவர்க்கும் உவகைதரக்கூடியதோர் நிகழ்ச்சியாம். தங்கள் நூல் என்றும் நின்று நிலவும் என்று கருதுகின்றேன்.

4—12—924 ச. சச்சிதானந்தன்.

## H. A. POPLEY.

*National Religious Work Secretary, South India.*

I have much pleasure in expressing my great appreciation of "Thirukkural Kumaresa Venba" which is being published by M. R. Ry. Jegaveerapandian Avl. of Tuticorin. I have been a subscriber to the publication from the outset and have very much enjoyed reading the numbers as they have come out. The illustrations to the various Kural verses are very apt and are couched in pharases which well fit the original. They are also very instructive in illuminating the meaning and purpose of the original.

The author has tried to be simple and exact and has produced a work that will be of real use to people in the Tamil country who desire to study this wonderful classic and to apply its teachings to everyday life.

I trust that the work will have a large circulation and heartily commend it to all Tamil scholars and to the Tamil public.

14th October 26. H. A. POPLEY, Madura.

The Honourable Devan Bahadur

SIR T. N. SIVAGNANAM PILLAI KT.,

"THE HER MITAGE" LUZ, MYLAPORE,

MADRAS. 23rd June 1926.

I have perused with great delight a few parts of THIRUKKURAL KUMARESA VENBA, and have much pleasure in recording my appreciation of this remarkable literary production. The terse couplets of the original are beautifully worked out into venba Quatrains. The verse of Valluvar, which oftentimes appears obscure to the ordinary untrained student of Tamil shines in a clearer light in the new setting. I may say that the first part of each Quatrain serves as a happy foil to the second, which is the original couplet itself incorporated verbatim in the new stanza. The commentary appended to each stanza is an interesting and novel departure from the traditional mode of annotating Kural, and deserves every praise for its lucidity of exposition, exhaustiveness, and wealth of illustrations and parallels from equally renowned Tamil classics. I am sure therefore that this work will form an invaluable addition to every library, public and Private.

T. N. SIVAGNANAM,

Minister for Development. Madras Government.

*M. R. Ry.*

C. V. KRISHNASWAMI AYYAR AVL.

SECRETARY·

CIVIL JUSTICE COMMITTEE.

**CALCUTTA.**

---

I am glad my friend Pandit **Jagaveera Pandian** has set his hand to such work. It is, indeed, an act of great courage to place one's own creation of even singular merit, in the same casket with the supremely lustrous jewels of *Tiruvalluvar's* make, and thus invite comparison, but if that can be ventured by any one at all Mr. Pandian is among those entitled to do so by reason of his erudition and felicity of expression. His act, I believe, is like that of a *bakhta* who hugs the Lord's image he worships to his bosom and caresses it as his babe though it would be sheer profanity for any but a *prapanna* to do it. For ordinary men and women it will be *"les majeste"*, and they can only love, admire, and reverence it, respectfully from afar. To those who need the concrete to comprehend the ideal, the stories which the Pandit has put in front of the *Kurals* must afford great help. They are well chosen and apt; and the verses flow with ease. Would that this useful endeavour receives the generous appreciation the liberal help, it so much needs and so well deserves.

**C. V. Krishnaswami**

20—12—24.

உ

சிறப்புப்பாயிரம்.

அந்நாளி லிருந்ததிரு வள்ளுவருங் கம்பருமீண்
டாளு ரென்ன
இந்நாளில் செகவீர பாண்டியனென் றொரு குரிசில்
எழுந்து தோன்றி
நந்நாளின் அமிழ்தமெனக் குமரேச வெண்பாவை
நயந்து தந்தான்
எந்நாளும் இந்நூலே எந்நூலின் முன்னூலா
இலங்கு மாதோ.

# திருக்குறட் குமரேச வெண்பா.

## பொருட்பால்.

---

பொருட்பால் என்றதற்குப் பொருளை உணர்த்தும் பகுதி என்பது பொருள். ஒரு நூலுட் பெரும் பிரிவு பால் எனவும் சிறு பிரிவு இயல் எனவும் வழங்கப்படும். உயிர்கள் அடைதற்கு உரியனவாக அருளப்பட்டுள்ள அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கனுள் மேல் அறத்தின் இயல்பை உணர்த்தினார். இனி அதனை அடுத்து நின்ற பொருளின் இயல்பை முறையே உணர்த்தப் புகுந்தார். பொருள் என்றது பொன், மணி, நெல் முதலிய செல்வங்களை. இப்பொருள், அறத்தைச் செய்தற்கும் ஐம்புல இன்பங்களை ஆரத் துய்த்தற்கும் உறுதுணையாய் நின்று எல்லாப் பெருமைகளையும் மக்கட்கு உளவாக்குமாதலால் உறுதிப் பொருள்களுள் ஒன்றாக இப்பொருள் கருத நின்றது. ஈட்டிக், காத்து, ஈந்து துய்த்தற்கு இயைந்து நிற்கும் இதனியல்பு, எல்லாப் பொருள்களும் இயல்பாகவே தமக்கு உரிமையாக அமையப் பெற்று உலகினுக்கு உயிரென விளங்கும் அரசனது இயல்பு கூறவே அமையுமாதலால் அரசியல், அங்கவியல், ஒழிபியல், என மூவகையாகப் பகுத்துக்கொண்டு எழுபது அதிகாரங்களான் இதனை உணர்த்துகின்றார்.

### அரசியல்.

அஃதாவது அரசுசெய்யும் முறைமை. இஃது இறைமாட்சி முதல் இருபத்தைந்து அதிகாரங்களான் உணர்த்தப்படும்.

---

### ௩௯-ம் அதிகாரம் இறைமாட்சி.

அஃதாவது அரசனது சிறப்பு. இறை என்றது இங்கு அரசனை. எங்குந் தங்குவோன் என்னும் ஏதுவால் கடவுட்கு இட்டு வழங்கும் இறை என்னும் கடவுட் பெயரை அரசனுக்கு

ஏற்றியது உலகம் காக்கும் அவனது ஒண்மையும் தன்மையும் உணர்தற்கு என்க. முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறைஎன்று வைக்கப்படும்; என்று அடிகள் இட்ட ஆணையையும் ஈண்டு அமைய நோக்குக. மானுட வடிவினனும் மன்னவன் தெய்வமேயாம் எனவும், திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே எனவும், அனைவோர்க்கும் தெய்வம் இலைமுகப் பைம்பூண் இறைஎனவும், வருவனவற்றாலும் இவ்வுரிமை இனிது தெளியப்படும். மன்னரது மாட்சி கூறலின் இது முன்னர் வைக்கப்பட்டது.

---

381 வெற்றி முசுகுந்தன் வேந்தருள்ளே வேந்தனென்றேன்
கொற்றமுற்று நின்றான் குமரேசா—உற்ற
படைகுடி கூழமைச்சு நட்பரணாறும்
உடையான் அரசருள் ஏறு. (க)

இ—ள்.

குமரேசா! முசுகுந்தன் என் அரசருள் அரசனாய்ச் சிறந்து விளங்கினான் எனின், படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆறும் உடையான் அரசருள் ஏறு என்க.

படை என்றது தேர் கரி முதலிய சேனைத் தொகுதியை.

கூழ்—உணவு. ஈண்டு உணவு முதலிய எல்லாவற்றிற்கும் ஏதுவாகிய பொருளை அஃது உணர்த்தி நின்றது.

நட்பு என்றது நட்பினரை. அரண் என்றது நாட்டிற்கும் நகர்க்கும் பாதுகாப்பாயமைந்துள்ள மலை, அகழ், மதில் முதலியவற்றை. அங்கம் ஆறும் உடையான் சிங்க ஏறுபோல்வான் என்பார் ஆறும் உடையான் ஏறு என்றார். ஆறனுள் ஒன்று குறையினும் ஏறு என்னும் தன்மை அவனுக்கு இல்லை என்பதை உம்மை உணர்த்திநின்றது. ஏறு—ஆண் சிங்கம்.

சிங்கங்கள் விலங்குகளுள் சிறந்தன; அவற்றுள்ளும் ஆண் சிங்கம் சிறந்தது; அதுபோல், மக்களுள் அரசர்கள் சிறந்தவர்கள்;

அவருள்ளே ஏ படை முதலிய ஆறு அங்கங்களையும் உடையவன் சிறந்தவன் என்பதாம்.

படைகளும், குடிகளும், பொருள்களும், அமைச்சரும், நட்பினரும், அரணும் ஆகிய இவ் ஆறு அங்கங்களையும் உடையவன் அரசருள் ஆண் சிங்கத்தை ஒத்தவன் என்பதாம்.

ஒரு பெரிய தேசத்தை ஆளுகின்றவனுக்கு அரசன் என்று பெயர்; அத்தகைய அரசர் பலரையும் அடக்கி ஆள்பவன் சக்கரவர்த்தியாவன்; அவன் படை முதலிய அறுவகைநலங்களையுங் குறைவறவுடையனுயின் எல்லா அரசர்களாலும் நன்கு மதிக்கப் பெற்றுத் தன் ஆணையை எங்குஞ் செலுத்த வல்லவனுவன்; ஆதலால், அவ்வன்மையும் தன்மையுங் கருதி அவனை அரசருள் ஏறு என்றார்.

அறிவமைந்த அமைச்சரும், அன்பமைந்த நண்பர்களும், அடலுடைய படைகளும், வளமுடைய குடிகளும், குறையாத பொருள்வளமும், அழியாத அரண் வலியும் முழுதும் உடையவன் அரசர்க்கெல்லாம் அரசனுய் விளங்குவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை முசுகுந்தன்பால் உணரப்படும்.

## கதை.

முசுகுந்தன் என்பவன் சூரிய குலத்து வேந்தன். திலீபன் புதல்வன். தாய் பெயர் மங்கலமதி. ஆதியில் இவன் விதாமன் என்னும் காந்தருவன். முனிவர் சாபத்தால் முசுவானுன். பின்னர் இறைவனருளால் அரசனுயினுன். முசு முக முடையனுய்த் தோன்றினமையால் இவனுக்கு முசுகுந்தன் என்று பெயர் வந்தது. முசு—குரங்குகளில் ஒரு வகை. இவன் சிறந்த போர் வீரன். இறைவன்பால் நிறைந்த அன்பினன். எல்லா நலங்களையும் எய்தித் திருவாரூரிலிருந்து மன்னர் மன்னவனுய் இவன் மாநிலம் புரந்தான். இவனது அன்புடைமையையும், பெருந்தன்மையையும், அருந்திறலையும் வியந்து அறுமுகப் பெருமான் தனக்குத் துணைவராயிருந்த வீரவாகு தேவர் முதலிய இலக்கத்

தொன்பதின்மரையும் இவனுக்குப் படைத் துணையாக அனுப்பி னர். அவரும் அவ்வாறே மக்களாய்த் தோன்றி இவனிடம் படைகளாயடைந்தார். அவரால் இவ்வுலக முழுதும் இவன் பொதுவற ஆண்டான். சித்திரவல்லி என்னும் கற்புடையாளை மணந்து அரச போக முற்றும் இவன் ஆரத் துய்த்தான். நெறி யறிந்த அமைச்சர்களாலும், சிறந்த பொருள்களாலும், உயர்ந்த குடிகளாலும், வலியமைந்த அரண்களாலும், அடலமைந்த படை களாலும் இவன் பெரும் புகழ் பெற்றான். வலாரி என்னும் அசுரனை வெல்லும்பொருட்டு அமரர்கோனும் இவனை வந்து துணைவர வேண்டினான். இவன், சென்று வென்று சிறந்து மீண்டான். தனது அங்கங்களின் வலியால் அரசர்க்கெல்லாம் அரசனாய் விளங்கினான். அக்காலத்தில் திகிரி மன்னர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசர்கள் அறுவருள் படை வலியால் இவன் முதல்வனாயினான். திகிரி மன்னர்—சக்கரவர்த்திகள். படை, குடி முதலிய அறுவகை நலங்களும் குறைவறப் பெற்ற வன் அரசருள் ஏறுபோல்வான் என்பதை உலகம் இவன்பால் ஆர உணர்ந்தது. (விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.)

உற்றவு றஞ்சாப் படையும் உயர்குடியும்
முற்றவாய்ப் பைங்கூழும் முன்வருதல் சேமிக்கும்
வெற்றி யமைச்சும் உதவும் பெருந் துணையும்
கொற்ற அரணும் உடையானே கோமகனே.

(பிரமோத்தரகாண்டம்.)

படை முதலிய ஆறும் முழுதும் உடையவனே அரசரு ளுயர்ந்தவன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

382 அன்று புரஞ்சயன்பால் அஞ்சாமை ஈகையென்றுங்
குன்றாத தென்னே குமரேசா—என்றுமே
அஞ்சாமை யீகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு. (2)

இ—ள்.

குமரேசா! அஞ்சாமை ஈகை ஆண்மை முதலிய குணங்கள் புரஞ்சயன்பால் என்றுங் குன்றுதல் இருந்தன எனின், அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் எனனும் இந்நான்கும் எஞ்சாமை வேந்தர்க்கு இயல்பு என்க.

அஞ்சாமை—மனத் திண்மை. ஊக்கம்— உள்ளக்கிளர்ச்சி. எஞ்சாமை—குறையாமை. இஃது, எஞ்சுதல் என்னும் வினையடியாப் பிறந்த எதிர்மறைப் பெயர்.

அஞ்சாமையும், ஈகையும், அறிவும், ஊக்கமும் என்னும் இந்நான்கு குணங்களும் எப்பொழுதும் குறையாதிருத்தலே அரசர்க்கு இயல்பாம் என்பதாம்.

மேல், படை முதலிய ஆறு அங்கங்களையுமுடையவனே பேரரசன் என்றார்; அவன்பால் இயல்பாக அமைந்திருக்க வேண்டிய உயர் குணங்களிவை என இதில் உணர உணர்த்தினார். இவ்இயல்பு குன்றுமேல் அவன் அரசனுகான் என்பது குறிப்பு.

படை முதலிய அவ் ஆறும் அரசனுக்குப் புறத்துறுப்பாகவும், அஞ்சாமை முதலிய இந்நான்கும் அகத் துறுப்பாகவும் கொள்க.

மலர்தலை உலகினுக்கு உயிரெனச் சிறந்த அரசனுக்கு அஞ்சாமை, ஈகை முதலிய உயர் குணங்களெல்லாம் இயல்பாகவே அமைந்திருக்குமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை புரஞ்சயன்பால் உணரப்படும்.

கதை.

புரஞ்சயன் என்பவன் சூரிய குலத்தில் தோன்றியிருந்த சசாந்தன்என்னும் வேந்தனுடையபுதல்வன். பேரழகன். சிறந்த போர்வீரன். பூதங்கள் அஞ்சுங் கலங்கினும் அஞ்சாத நெஞ்சினன். வண்மை மிக்கவன். நுண்ணிய அறிவுடையவன். திருவயோத்தியிலிருந்து இவன் அரசு செய்து வருங்கால் அமரருக்

கும் அசுரருக்கும் அமர் விளைந்தது. அதில் அமரர் தோல்வி யுற்று அஞ்சி ஓடினர். திருமால் வாயிலாக இவன் பெருமை யை உணர்ந்த இந்திரன், அமரர் சிலருடன் இவன்பால் வந்தான். உற்றன யாவும் முற்ற உரைத்தான். புரஞ்சயன் இரங்கினன். பொங்கியெழுந்து போர்க்கோலம் பூண்டு புரந்தரனோடு பொன் னுலகேகினன். அசுரர் அறிந்தார். "ஒரு மனிதனே நம்மை வெல்ல வந்துள்ளான்" என்று எள்ளி நகைத்தார். உடனே திரண்டார். கடலென வளைந்து அடலுடன் பொருதார். அமரர் நடுங்கினர். புரஞ்சயன் அஞ்சாது புகுந்தான். சுழன்றெ னத் திரிந்து அருஞ் சமர் புரிந்தான். இவன் ஏறி நின்ற தேர் இடையில் உடைந்தது. இந்திரனை நோக்கினன். அவன், ஓர் விடைபோல் விரைந்து இவன்பால் வந்தான். ஆளிபோல் பாய் ந்து அதன்மேல் ஏறி ஊழித் தீயென உடன்று பொருதான். அசுரர் உடைந்து ஓடினர். அமரர் மிடைந்து இவனை அணுகி மகிழ்ந்தார். இழந்த அரசை நீர் எய்துமின் என்று ஈந்து மகிழ் ந்த இவனை இந்திரன் கொடுபோய்த் தன் இருக்கையில் வைத் துத் தமருடன் அமர்ந்து இவனது அமரினைப் புகழ்ந்தான். அன்றுமுதல் இவனுக்குக் ககுத்தன் என்று பெயர் வந்தது. ககு த்தம் என்பது எருத்தின் பிடர். விடையாய் நின்ற இந்திரன் பிடரில் இவன் மேவி நின்றதால் இப்பெயர் இனை மேவி நின் றது இப்பெருமை விளங்கவே இவன் மரபில் அவதரித்த இராம பிரானும் காகுத்தன் எனப் பெற்றார். அஞ்சாமல் சென்று அசுரரை வென்று அமராபதியைக் கைக்கொண்டு அதனை இந்தி ரனுக்கீந்துவந்த இவனது ஊக்கமுடைமையை உம்பரும் இம் பரும் ஒருங்கே புகழ்ந்தார். அஞ்சாமையும், ஈகையும், அறிவும், ஊக்கமும் அரசர்க்கு இயல்பாகவே அமைந்திருக்கு மென்ப தை உலகம் இவன் பால் உணர்ந்தது. (விரிவைப் பாகவதத் தில் காண்க.)

இந்திரனவ்வா றியைந்தொரு விடையாய் ஏந்தலை வெரிநிடைத் தரிப்பப்
புந்திநொந் தவுணர் இரிதரப் பொருது புரஞ்சயன் பொன்னுலல் களித்தான்

நந்தலின் றமரர் புரந்தரனோடு நண்ணினருவக்கா விற்றிருந்தார்
அந்தநல் விடையின்முரிப் புறைந்ததனால் அன்னவன் ககுத்தன்
என்றுயர்ந்தான். (பாகவதம்.)

தான்றனக்கு வெலற்கரிய தானவரைத் தலைதுமித்தென்
வான்றரக்கிற் றிகொலென்று குறையிரப்ப வரங்கொடுத்தாங்
கேன்றெடுத்த சிலையினாய் இகல்புரிந்த இவர்குலத்தோர்
தோன்றலைப்பண் டிந்திரன்காண் விடையேறாய்ச் சுமந்தானும்.
(இராமாயணம்.)

இது, இராமனது குல முறையைக் குறித்துச் சனகனிடம் கூறுங்கால் விசுவாமித்திரர் கூறியது இவற்றால் மேற்குறித்த வுண்மை தெளிவாதல் காண்க.

அஞ்சாமை ஈகை முதலிய உயர் குணங்களைத் தனக்கு இயல்பாக வுடையவனே அரசனாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

383 திண்டோட் புரூரவனேன் தேவரினும் முன்தணிவு
கொண்டுவென்று மீண்டான் குமரேசா—மண்டியே
தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவர்க்கு. (௩)

இ—ள்.

குமரேசா! புரூரவன் தேவரினும் சிறந்த துணிவுடையனாய் என்றுந் தளராமல் ஏன் விளங்கியிருந்தான் எனின், தூங்காமை, கல்வி, துணிவுடைமை ஆகிய இம்மூன்றும் நிலன் ஆள்பவர்க்கு நீங்கா என்க.

உம்மை மேற்சொன்ன நான்கையும் தழுவி இதில் முற்றாய் நிற்றலால் எச்சமும் முற்றும் இயைந்தது என்க.

தூங்காமை என்பது தூங்கல் என்னும் வினையடியாகப் பிறந்த எதிர்மறைப் பெயர். தூங்கல்—சோம்பல், சோர்தல், தாழ்தல்.

தூங்காமை—சோம்பாமை. என்றது தன் காரியங்களில் எப்பொழுதும் கருத்துடையனாய் அரசன் இருத்தல் வேண்டும் என்பது கருதி என்க.

உலகத்தை ஆளுகின்ற அரசர்க்கு விரைவும், கல்வியும், துணிவும் ஆகிய இம்மூன்று குணங்களும் ஒருகாலும் நீங்கா என்பதாம்.

ஆள்பவர்க்கு நீங்கா என்றதனால் தாழ்பவர்க்கு நீங்குமென்க.

மேற்குறித்த நான்கும் இம்மூன்றும் ஆகிய ஏழு குணங்களையும் அரசன் என்றும் எய்தியிருத்தல்வேண்டும் என்பது கருத்து.

துணிவும் கல்வியும் அரசர்க்கு என்றும் அணியாக அமைந்திருக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை புரூரவன்பால் உணரப்படும்.

## கதை.

புரூரவன் என்பவன் சந்திரகுல முதல்வனாகிய புதனுடைய புதல்வன். தாய் பெயர் இளை. எல்லாக் கலைகளிலும் இவன் மிகவும் வல்லவன். காமனும் காமுறும் கட்டழகுடையவன். அருளும் ஆண்மையும் அமைந்த நெஞ்சினன். இவன் இளவரசனாயிருக்கும்பொழுது பிரதிட்டானபுரம் என்னும் நகரையடுத்திருந்த ஒரு பூஞ்சோலையில் அரமகளிர் சிலருடன் ஊர்வசி வந்து உலாவிக்கொண்டிருந்தாள். அப்பேரழகியை அசுரர் சிலர் கண்டார். பெருங்காதல் கொண்டார். வலிந்து கவர்ந்து மேல் விரைந்து சென்றார். அவ் அழகி நடுங்கி அலறி அழுதாள். அமரர் கண்டும் அவரோடு அமர் செய்ய அஞ்சி அகல நின்றார். அவள் அபயக் குரலை இப்புரூரவன் கேட்டு வில்லுடன் விரைந்துபோய் நில் என மறித்தான். அசுரரனைவரும் இவனை வளைந்து பொருதார். அவரனைவரையும் இவன் அடங்கவென்று அம்மடந்தையை மீட்டி அமரர்கோன்பால் அமர விடுத்தான். இவனது விரைவையும் துணிவையும் வியந்து புகழ்ந்து இந்திரன் அவளை இவனுக்கே தந்தான். அவளை முறையே மணந்து நிறை

கலந்துய்த்தான். அவள் ஆயு என்று ஒரு மைந்தனைப் பெற்றாள். தூங்காமையும் துணிவும் குலமன்னர்பால் என்றும் நீங்கா என்பதை உலகம் இவன் பால் உணர்ந்தது.

(விரிவைப் பாகவதத்தில் காண்க.)

பொருப்பினைச் சிற கரிந்தவன் புரத்து மங்கையருள்
உருப்பசிப் பெயர் ஒண்டொடி உருவினிற்சிறந்தாள்
தருப்பொழிற் பயில் காலையில் தானவர்காணு
விருப்புறக் கவர்ந் தேகினரவளுடன் விசும்பில்.

கொண்டுபோதலும் அபயமென் றுருப்பசி கூவ
அண்டர்யாவரும் அஞ்சினர் அவருடன் அடுபோர்
வண்டு சூழ்குழலணங்கையிம் மதிமகன் மகனும்
கண்டுதேர்நனி கடவினன் அசுரர் மெய்கலங்க. (பாரதம்.)

இவற்றால் மேற்குறித்த உண்மையை இனிது தெளியலாம்.

ஆண்மையுங் கல்வியும் அமையப்பெற்றவனே அரசனாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

384 வீரமிகு உக்கிரப்பேர் வேந்தன் குலமானம்
கூரநின்றான் என்னே குமரேசா—நேரும்
அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு. (௪)

இ—ள்.

**குமரேசா!** உக்கிரகுமார பாண்டியன் வீரத்திலும் குலமானத்திலும் என்றும் குன்றாதவராய் ஏன் நின்று விளங்கினான் எனின், அறன் இழுக்காது அல்லவை நீக்கி மறன் இழுக்கா மானமுடையதே அரசு என்க.

அறன் இழுக்காது—அறநெறியில் வழுவாமல்.

அல்லவை—அறன் அல்லாதவை. என்றது கொலை, களவு முதலிய தீமைகளை.

மறன் இழுக்கா மானம்—வீரத்தில் வழுவாத மானம்.

தான் அறநெறியில் வழுவாமல் ஒழுகித் தீயவற்றைத் தன் நாட்டின்கண் நிகழாமல் நீக்கி வீரங் குன்றாத மானமுமுடையவனே அரசனாவான் என்பதாம்.

படை முதலிய ஆறு அங்கங்களும், அஞ்சாமை முதலிய எழு குணங்களும் உடையனாயினும், தான் நெறி வழுவாமல் நின்று நீதியைச் செலுத்தி, வீரத்திலும் மானத்திலும் வழுவாமல் நிற்பவனே அரசனாவான் என்பது கருத்து.

ஒழுக்கமும், உலகை ஓம்புகின்றனும், வீரமும், மானமும் உடையவனே அரசருள் மாட்சிமையுடையவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உக்கிர குமார பாண்டியன் பால் உணரப்படும.

## கதை.

உக்கிர குமார பாண்டியன் என்பவர் மதுரையிலிருந்து அரசுபுரிந்த இறைவனாகிய சோமசுந்தரபாண்டியனுருக்கும் தடாதகைப்பிராட்டியாருக்கும் திருமகனாகி அவதரித்தார். இவர் குமார தெய்வத்தின் கூறாய் வந்தவர். பேரழகுடையவர். "அழகினால் மதனும் பெண்மை அவாவுறாய்; இவன் கோலானே எழு கடலுலகோ! வையம் எழையுய காக்கும்" என்று இவரைக் கண்டவரெல்லாரும் கனிந்து மொழிந்தார். இவர் பருவமெய்திய பின் காந்திமதி என்னுங் கன்னியை மணந்து கதிர்முடி புனைந்து அறநெறி வழுவாமல் இவ் உலகினை ஓம்பினார். தன் நாட்டில் அல்லவை யாதும் அணுகாவண்ணம் நீக்கி இவர் அரசுபுரிந்து வருங்கால் பொன்னுலகம் புகுந்து இந்திரனோடு பொருந்தியிருந்தார். பல்லாயிரவருங் கூடித் தாங்கலாற்றாத வஞ்சம் அமைந்த ஒரு மணி மாலையை இந்திரன் பொறாமையோடு கொண்டுவந்து இவர் கழுத்திலிட்டான். அதனை மிக எளிதாகத் தாங்கி இவர் மகிழ்வோடிருந்தார். அதனால், "ஆரந் தாங்கு பாண்டியன்" என்று ஒரு பெயரும் பெற்றார். மதுரைமேல் வந்த கடலினது

அடலை அடக்கி அகற்றினர். தன்னோடு எதிர்த்த இந்திரனது மகுடத்தை உடைத்து அவனை ஏகென விடுத்தார். பகைவரை ஒடுக்கிப் பல்லுயிர் ஓம்பி மானத்திலும், வீரத்திலும், வாய்மையி லும் இவர் வழுவாமல் நின்றார். மானமும், வீரமும், இவர் மரபி னர்க்கெல்லாம உடைமையாயிருந்தன. இவர் மரபில் வரகுண வீர சேகரபாண்டியன் என்பான் ஒருவன் தமயந்தியின் சுயம் வரத் திற்குச் சென்றிருந்தான். அவள் நளனுக்கு மண மாலை சூட் டினள். அவள்மீது காதல்கொண்டு அங்கு உருமாறி வந்திருந்த இந்திரன், பொறாமையால் "சந்திரகுல வேந்தனாகிய நளனுக்கு இவள் மாலை சூட்டச் சூரியகுல வேந்தர்களாகிய நீவிரனைவிரும் வறிதேயிருந்தீரே" என்று தன்னருகிருந்த மன்னவருக்குள் கலக மூட்டினன். அதனைப் பாண்டியன் கேட்டான். நம் குலத்தை இவன் இழித்துக்கூறினனே என்று கொதித்தான். தன் உடை வாளை உருவினன். அவன்மேல் ஒல்லெனப் பாய்ந்தான். அ கல் விசும்பளிக்கும் அமரர் கோமானே இவ்வுருவுடன் இங்கு வந் துள்ளான் என்று அங்குள்ளார் இவனுக்கு உண்மையை உரைத் தார். பண்டு நம்முன்னோரால் மகுடபங்கமெய்திய இவனோடு இன்று என்னே போரென்று எடுத்தவாளை உறையிடைச் செறித் து இரங்கி மீண்டான். மறனிழுக்காத மானமுடைமையே அர சர்க்கு மாண்புடைமை என்பதை உக்கிரகுமார பாண்டியனும் அவரது மரபினரும் உணர்த்தி நின்றார். விரிவைத் திருவிளையா டலில் காண்க.

என்றலுங் கடவுட் டிங்கள் இருங்குலம் இழித்துக்கூறல்
நன்றாநன் றென்ன நக்கு நாமவேல் வழுதிசீறி
உன்றலை துணிப்பனென்று ஒளிறு வாளுறையினீக்கிக்
குன்றெறி வயிரவொள்வாட் குரிசின்மேற் கனன்றுசென்றான். (1)
வெகுளலை அணங்கிற்காக நளனுருக் கொண்டுமேய
அகல்விசும் பளிக்கும் வேந்தன் இவனென அமரர்கூறத்
தகவொழ மௌலிபண்டு தோற்றவன் றன்னோ டென்கொல்
இகலெனப் புகையும் ஒள்வாள் உறைசெறித் தேகினனே. (2)
(நைடதம்.)

இவற்றால் மேற்குறித்த உண்மையும், வழுதி மன்னரது மறன் இழுக்காத மானமுடைமையும், இனிது தெளிவாம்.

மானமும், வீரமுமே அரசர்க்கு மாண்புடைமை என்பது இதனால் கூறப்பட்டது.

---

385 அன்றேன் பெருவளத்தை ஆக்கிப் பிருதுநலம்
குன்றாமல் காத்தான் குமரேசா—நன்று
இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. (ரு)

இ—ள்,

குமரேசா! பிருதுமன்னன் பெருவளத்தை யீட்டி ஏன் உயிர்களைக் காத்தான் எனின், இயற்றலும், ஈட்டலும், காத்தலும், காத்த வகுத்தலும் வல்லதே அரசு என்க.

இயற்றல்—செய்தல். இவ்வினைக்கு ஏற்ற செயப்படுபொருளை வருவித்துக்கொள்க.

காத்த என்றது காத்துவைத்திருந்த பொருள்களை. இது வினையால் அணையும் பெயர். இயற்றல் முதலிய நான்கையும் ஒருசேர ஆற்றுதல் அருமையாதலால் "வல்லது" என்றார். மேற்குறித்த இவ் வன்மை இல்லாதவனுக்கு அரசன் என்னும் தன்மை இல்லை என்க.

பொருள் வருதற்கு ஏதுவாகிய வழிகளை உளவாக்கலும், அவ்வாறு வந்த பொருள்களை ஒருசேரத் தொகுத்தலும், தொகுத்தவற்றைப் பிறர் கொள்ளாமற் காத்தலும், அங்ஙனம் காத்தவற்றை நெறியறிந்து விடுத்தலும், ஆகிய இவற்றைச் செய்ய வல்லவனே அரசன் என்பதாம்.

தனக்கு முன்னோர் வைத்த அரசுரிமையைக் காத்தற்கு மாத்திரந்தான் உரியவன் என்று அரசன் கருதலாகாது இயற்றவும் ஈட்டவும் வகுக்கவும்தான் வல்லனாதல் வேண்டும் என்பதை அவன் உணர்தல் வேண்டும் என்பது குறிப்பு.

வருவாய்க்கு உரிய நெறிகளை வளமுற விரித்துப் பொருள்களைப் பெருக்கித் தொகுத்துப் பேணிவைத்துப் பின்பு அறம், புகழ், அரசு, இன்பம் என்னும் இவற்றின் பொருட்டு அளவறிந்து அரசன் அவற்றைச் செலவிட வேண்டும் என்பது கருத்து.

உலகத்தை வளம்பெறச்செய்து, பெரும்பொருள் தொகுத்து உயிர்கள் இன்புற அதனை உதவ வல்லவனே, அரசனாவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிருது மன்னன்பால் உணரப்படும்.

## கதை.

பிருது என்பவன் சூரிய குலத்தில் தோன்றியிருந்த வேனன் என்னும் வேந்தனுடைய புதல்வன். இவன் தோற்றம் மிக்க அற்புதமுடையது. இவன்தோன்றும்பொழுது இந்நிலவுலகில்பல நலங்கள் தோன்றின. இந்திரன், குபேரன், வருணன், வாயு முதலிய அமரர் பலரும் இவன் பால் அன்புடையராகிச் சில அணிகளையும் படைக் கலங்களையும் அருளி அகன்றார். பல கலைகளையும் இவன் பயின்று தெளிந்து பருவமெய்தியபின் கந்த வருச்சி என்னும் ஓர் அழகிய மங்கையை மணந்தான். பின் மணிமுடி புனைந்து இவ்வணி நிலம் புரந்தான். பகைவர், கொடியர், மடியர், கள்வர் என்போர் இவன் ஆட்சியில் எங்குங் காண்டல் அரிதாம். இவன் முறை செய்துவருங்கால் வருவாய்க்குரிய நெறிகள் பல தன் நாட்டில் நிலைபெறச் செய்து பெரும் பொருள் ஈட்டி அறம் புகழ் பேணி ஆருயிர் ஓம்பி அரச இன்பம் யாவும் அமையத் துய்த்தான். துய்த்துவருங்கால் சிலகாரணங்களால் நிலவளங் குறைந்தது. வறுமை வளர்ந்தது. குடிகள் தளர்ந்தன. அரசன் வருந்தித் தன் ஆட்சியை இகழ்ந்தான். பார்மகள் என் தன் வளங்களைக் கரந்தாள் என்று சினந்து தன் போர் வில் எடுத்தது நேர்முகம் நோக்குமுன் ஒரு பசுவடிவாகி நிலமகள் ஓடினாள். மன்னன் தொடர்ந்தான். "பார்மகளே, என் அம்பால் நின்னை அழிப்பேன் பார்!" என அணுகி நின்று மன்னன் அடுகணை பூட்டினான்.

அது நடுங்கி நின்று "அரசே நீ பகர்வன தருவல் பழியை விடேல்" என்றது. மன்னன் மகிழ்ந்து நின்று தன் நிலமுழுதும் வளமுறுமாறு வரங்கொண்டு மீண்டான். வருபொருளீட்டி மாநிலங்காத்தான். இயற்றலும், ஈட்டலும், காத்தலும், வகுத்தலும் வல்லவனே அரசன் என்னும் உண்மையை இவன் உலகறிய உணர்த்தினன். தன் ஆட்சியின் மாட்சியால் உலகில் உயர் வளங்களை உளவாக்கினன் ஆதலால் அதுமுதல் இவன் பெயரால் இப்பூமிக்குப் பிருதுவியென்று ஒரு பெயரும்வந்தது. (விரிவைப் பாகவதத்தில் காண்க.)

ஆதித்தன் குலமுதல்வன் மனுவினையார் அறியாதார்
பேதித்த உயிரனைத்தும் பெரும்பசியால் வருந்தாமல்
சோதித்தன் வரிசிலையால் நிமைடந்தை முலைசுரப்பச்
சாதித்த பெருந்தகையும் இவர்குலத் தாரபதிகாண்.

இராமரது குலமுறையைக் கிளத்துங்கால் பிருதுமன்னனைக் கம்பர் இவ்வாறு குறித்துள்ளார்.

பொருள்களை யீட்டி உயிர்களைக் காக்க வல்லவனே அரசனாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

386 மண்டுபுகழ் அத்திமன்னன் மாநிலத்தை ஏனுலகோர்
கொண்டு புகழ்ந்தார் குமரேசா—கண்டுமகிழ்
காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம். (சு)

இ—ள்.

குமரேசா! அத்திமன்னன் ஆண்ட நிலத்தை ஏன் உலகோர் புகழ்ந்து கூறினர் எனின், காட்சிக்கு எளியன், கடுஞ்சொல்லன் அல்லனேல் அம் மன்னன் நிலம் மீக்கூறும் என்க.

காட்சிக்கு எளியன்—காண்டற்கு எளியனாய்; என்றது குடிகள் தமது நிலைமைகளைக் கூற வருங்கால் எளிதில காணத்தக்கவனாய் இனிதிருத்தலை.

மன்னன் நிலம் மீக்கூறும்— மன்னனது நிலத்தை உலகம் மேலாகக்கூறும். மீ என்னுஞ்சொல் உயர்ச்சி, மேல், என்பவற்றை உணர்த்திவரும். கூறும் என்னும் வினைக்கு ஏற்ற எழுவாய் இதில் வருவிக்கப்பட்டது. இனி, நிலம் மன்னனை மீக்கூறும் எனினும் அமையும்.

காட்சிக்கு எளியனாயும் கடுஞ்சொல்லைச் சொல்லாதவனாயும் ஒரு அரசன் இருப்பானாயின் அவனது நிலத்தை உலகம் புகழ்ந்து கூறும் என்பதாம்.

எல்லாமுடைய அரசன்பால் எளிமையும், இன்மையும் இன்னவகையில் இருத்தல் வேண்டுமென்று இஃதுணர்த்திய ஒண்மையை உய்த்துணர்க.

வறுமை அல்லல்களால் வாடிவந்தவரை விரைவிலழைத்து இன்சொல் இயம்பி அவர் தஞ்சொல் ஓர்ந்து முறைதிறம்பாமல் அவர்க்கு உறுவன செய்துவரும் அரசனது நாடு எல்லா நலங்களையும் எய்தி நிற்குமாதலால் அதனை உலகோர் தலைமையாகமதிப்பர் என்பார் "மன்னன் நிலம் மீக்கூறும்" என்றார். நிலம் கூறும் எனவே அவன் பெருமை கூறாமலே தேறப்படும்.

எளிய செவ்வியனாயும் இனிய சொல்லினனாயும் அரசன் இருத்தல் வேண்டுமென்பது கருத்து.

இரக்கமும் இன்சொல்லுமுடையனாய் எவர்க்கும் எளிதில் காட்சி தந்து ஆட்சிபுரியும் அரசனே இவ்வுலகில் மிக்கமாட்சியை அடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அத்திமன்னன்பால் அறியப்படும்.

## கதை.

அத்தி என்பவன் சந்திரகுலத்தில் விளங்கியிருந்த சுகோத்திரன் என்னும் அரசனுடைய குமரன். மிக்க மதிநலமும் தக்க சூழ்ச்சியும் வாய்ந்தவன். ஆட்சிக்குரிய மாட்சிகளெல்லாம் அமையப்பெற்றவன். பிறவுயிர்களையும் தன்னுயிர்போல் பேணும் பேரருளுடையவன். வில் வித்தையிற் சிறந்தவன். யானை ஏற்றத்தில் மிகவும் வல்லவன். அமரரும் வியக்கத்தக்க ஓரழகிய நகரை இவன் புதிதாய் அமைத்தான். அதனை அத்தினபுரம் என்று இவன் பெயரால் அழைத்தார். அதிலிருந்து இவன், மண்பதை யின்புறச் செங்கோல் செலுத்தினன். வறுமை அல்லல்களால் வாடி வந்தவரை விரைவிலழைத்து, இன்சொல் இயம்பி, அவர்தஞ்சொல் ஓர்ந்து நெறி திறம்பாமல் அவர்க்கு உறுவனசெய்தான். அதனால் இவனது புகழ் உலகெங்கும் பரந்தது. பிற அரசர்களும் இவனைப் பேணிவந்து கண்டார். காண்டற்கு எளியனாய் நின்று குடிகள் வேண்டுவனவற்றை விரைந்து செய்து வந்த இம்மன்னன் நிலத்தையும் அதில் வாழ்வோர் நலத்தையும் அனைவரும் விரும்பிப் போற்றினர். காட்சிக்கு எளியனேல், கடுஞ்சொல்லன் அல்லனேல் அம்மன்னன் நிலம் மீக்கூறும் என்பதை இவன் விளக்கி நின்றான். (விரிவை மதிமரபில் காண்க.)

முக்குலத்தினும் மதிக்குலம் முதன்மைபெற் றதுவென்
றெக்குலத்தினில் அரசும்வந்து இணையடி யிறைஞ்ச
மைக்குலத்தினில் புட்கலா வர்த்தமா மெனவே
அக்குலத்தினில் அத்தியென் பவனவ தரித்தான். (1)

கொண்டல் வாகனுங் குபேரனும் நிகரெனக்குறித்துப்
புண்டரீகன்முன் படைத்தஅப் புரவல னமைத்த
தெண்டி சாமுகத் தெழுதுசீர் இபக்கர் மாநகரும்
அண்டர் தானமும் உவமைகூர் அத்தினபுரியே. (2)

(பாரதம்.)

இவற்றால் மேற்குறித்த வுண்மை இனிது தெளிவாதல் காண்க.

எளிய செவ்வியும் இனிய சொல்லும் உடையவனே விழுமிய அரசன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

387 தண்டாத இன்சொலொடு தண்ணளிசேர் போசனேன்
றெண்டான் உலகைக் குமரேசா—கண்டனைய
இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு. (எ)

இ—ள்.

குமரேசா! இனிய சொல்லும் தண்ணளியும் உடைய போசன் ஏன் இவ்வுலகத்தைத் தன் குடைக்கீழ் கண்டான் எனின், இன்சொலால் ஈத்து அளிக்க வல்லாற்கு இவ் உலகு தன் சொலால் தான் கண்டனைத்து என்க.

வல்லானுக்கு இவ் உலகுதான் கண்டனைத்து என்று காண்க.

இன்சொலால்—இனிய சொல்லுடனே.

தன் சொலால்—தன் புகழோடு.

ஆல் உருவு இதில் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது.

தான் கண்டனைத்து—தான் கருதிய அளவினது. சொல்லாலும் செயலாலும் உயிர்கட்கு இதஞ்செய்து கருத்தூன்றிக் காக்கும் ஆண்மையுடையான் தான் கருதுகின்ற நிலமுழுதும் தடையற அடைவான் என்பது கருத்து.

இனிய சொல்லுடனே ஈதலைச்செய்து உயிர்களைக் காக்க வல்ல அரசனுக்கு இவ் உலகம் தன் புகழோடு பொருந்தித் தான் கருதிய அளவினதாம் என்பதாம்.

மேல் காட்சிக்கு எண்மையும் கடுஞ்சொல் இன்மையுமுடையானது ஆட்சி மிக்க மாட்சியை அடையும் என்றார்; இதில், இன்சொல்லும் ஈகையுமுடையனாய்க் காக்க வல்லானுக்கு உண்டாம் ஆக்கம் கூறினார்.

இன்சொல்லும் ஈகையும் காக்குந்திறமு முடையவனை இவ் உலகம் தானே வந்து அடையும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை போசன்பால் உணரப்படும்.

## கதை.

போசன் என்பவன் ஒரு சிறந்த அரசன். இவன், இற்றைக்குத் தொளாயிரம் ஆண்டுகட்கு முன்னர் விதர்ப்ப தேசத்தை ஆண்டுவந்த சிந்துலன் என்னும் வேந்தனுக்குப் புதல்வனாய்த் தோன்றினன். இவன் பாலனாயிருக்கும்பொழுதே தந்தையார் காலம் போயினர். தன் தந்தையுடன் பிறந்த சிறிய தந்தை ஒருவன் இருந்தான். அவன் பெயர் முஞ்சன். கொடிய வஞ்சன். அவனே பின் அரசனாகி ஆட்சிபுரிந்தான். இளவரசனாகிய இவன் பருவமெய்து முன்னரே கலைகள் பலவும் வழுவறவுணர்ந்து அழகுற இருந்தான். உருவநூலில் மிகவும் வல்லவனான நிமித்திகன் ஒருவன் அரசவைக்குள் ஒருநாள் வந்தான். இவனைக் கண்டான். "இவ்வுலக முழுதும் இவன் விரைவில் ஆளுவான்" என்று அரசன்பால் உரைத்தான். முஞ்சன் கேட்டான். தன் பதவி போய்விடுமே என்று கவன்றான். கொலைஞர் நால்வரை அழைத்தான். இவனைத் தனியே கொண்டுபோய்க் கொன்றுவரும்படி குறித்து விடுத்தான். அவரும் கொண்டு சென்றார். குறித்த இடத்தை யடைந்தார். தன்னை அவர் கொல்லத் துணிந்தமையை இவன் குறிப்பால் உணர்ந்தான்.

மனுமுதலோர் பலகோடி மன்னர்வந்திம் மண்ணாண்டு
மாண்டே போனார்
இனிதாக இருந்தவரிங் கொருவரிலை எந்தையட்டும்
இருப்பாராயின்
மனமார எனதுயிரை வடிவாளுக் கிரையிடுங்கள்
மகிழ்ந்து நானும்
தனியாக இறக்கின்றேன் தளராமல் எறிமினென்று
சாற்றி நின்றான்.

இளவரசன் பரிவுடன் கூறிய இப்பொருள் மொழிகளைக்கேட்டவுடனே அப்பொல்லாதவர்களும் உள்ளம் உருகினர். விரைந்து சென்றார். முஞ்சனிடம் இவற்றை மொழிந்து நின்றார். அவனுங்கேட்டான். அலறி ஓடிவந்து போசனை அணைத்து எடுத்தான். அழுதிரங்கினான். பின்பு அணிகலன் கொண்டுபோய் மணிமுடி சூட்டினான். போசன் அரியணை அமர்ந்து இம் முதுநிலம் புரந்தனன். அழகில் அறிவில் ஆண்மையில் மேன்மையில் கொடையில் அளியில் இவனை யொப்பார் ஒருவரும் இலையென உயர்ந்து விளங்கினான். வடமொழியில் இவன் பெரும் புலமையுடையவன். புவி அரசனாகவும், கவி அரசனாகவும் இவன் பொருந்திருந்து எவரிடமும் இன்சொல் இயம்பிக் குடிகளை இனிது காத்தான். அதனால் இவன் புகழ் எங்கும் பரவ உலகமுழுதும் தனக்கே உரிமையாகப்பெற்று ஏறிய அரியணை இறங்காமலிருந்து ஐம்பத்தாறு ஆண்டுகள் இன்புற ஆண்டான். இன்சொல்லுடனே ஈதலைச்செய்து காக்கவல்ல அரசனுக்கு இவ்வுலகம் முழுதும் உரிமையாம் என்பதை உலகம் இவன்பால் கண்டது. விரிவைப் போச சரிதையில் காண்க.

இனிய சொல்லினன் ஈகையன் எண்ணினன்
வினையன் தூயன் விழுமியன் வென்றியன்
நினையு நீதி நெறிகட வானெனின்
அனையமன்னற் கழிவுமுண் டாங்கொலோ.

(இராமாயணம்.)

இன்சொல்லுடனே குடிகளைப் பேணுகின்ற அரசனுக்கு உலக முழுதும் உரிமையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

[தோர்

388 இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
...

388 நின்றோர் மனுவினையேன் தெய்வமென்று மாநிலத்
கொண்டாடுகின்றார் குமரேசா—கொண்ட
முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும். (அ)

இ—ள்.

குமரேசா! அரசுசெய்த மனுவை ஏன் உலகத்தார் தெய்வமென்று கொண்டாடுகின்றார் எனின், முறைசெய்து காப்பாற்றும் மன்னவன், மக்கட்கு இறை என்று வைக்கப்படும் என்க.

முறை—அரசநீதி. இறை—கடவுள்.

காப்பு ஆற்றும்—காத்தலைச் செய்கின்ற.

நெறி வழுவாமல் தன் நீதியை நடத்திப் பிறர் நலியாவண்ணம் உயிர்களைக் காப்பாற்றுகின்ற அரசன் மக்கட்குக் கடவுள் என்று மதிக்கப்படும் என்பதாம்.

இறைவனுக்குரிய காத்தற்றொழிலை அரசன்மேற் கொண்டிருத்தலால் அவனை எல்லாரும் கடவுள் என்றே கருதவேண்டுமென்பது கருத்து.

பிறப்பால் மனிதனாயினும் முறை தவறாமல் உலகினை ஆளுகின்ற அரசன் கடவுளாகவே மதிக்கப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுவாயம்பு மனுவின்பால் உணரப்படும்.

கதை.

சுவாயம்பு மனு என்பவர் முதலூழியில் அரசனாகத் தோன்றி இவ்வுலகினை ஆண்டவர். இவரது மனைவி பெயர் சதரூபை. உருவிலும் திருவிலும் அறிவிலும் ஆண்மையிலும் இவர் ஒப்புயர்வற்றவர். சுநந்தா நதி என்னும் தீரத்திலிருந்து நூறு வருடம் அருந்தவம் புரிந்தார். தனது அன்புறு மனைவியோடமர்ந்து இன்புற்றிருந்து பிரிய விரதன், உத்தான பாதன் என்னும் அரிய புதல்வர்களைப் பெற்றார். உயிரை உடல் தாங்கிநிற்பதுபோல் உலக முழுவதையுங் இவர் நலமுற ஓம்பினார். அசுரர் பலரை வென்று அமரரையும் காத்தார். இவரது ஆட்சித் திறத்தை வியந்து அமரர் சிலர் வந்து இவர்பால் அரசு முறைகளைத் தெளிந்

துசென்றார். அரசனது இயல்பும் உலகோடு அவனுக்குள்ள உரிமையும் அதனை அவன் ஆளும் திறமும் பின் வரும் மன்னர்கள் தெரிந்துகொள்ளுமாறு சில முறைகளை உளவாக்கினார். அவை மனு முறை என வழங்கப்படும். அரசுக்குரிய முறையை வழுவாமற்செய்து உயிர்களைப் பேணிய இவரது பெருமையை வியந்து இவரை அனைவரும் கடவுள் என்றே புகழ்ந்தார். முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும் என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்தது. மனுக்களுள் இவர் முதல்வராவர். இவர் சரிதம் இருக்கு வேதத்தில் உள்ளது.

எந்தவேளையினும் நொந்தவர் துயர்கேட்
டிடரினைப் பவன்தனை தேக
மைந்தனே எனினும் வதைத்திட ஒல்கான்
மாக்களின் சுகநல மன்றிச்
சிந்தனை மற்றோர் பொருளினிற் செலுத்தான்
தீமொழி கனவிலும் புகலான்
தந்தைபோல் தாய்போல் எவரையும் ஓம்புந்
தன்மையனே இறை யன்றே. (நீதிநூல்)

குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும்—அறவோர்க்
கடிகளே தெய்வம் அனைவோர்க்கும் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை. (நீதி நெறி விளக்கம்)

நெறியுடைய அரசனைக் கடவுள் என்றே கருதவேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

---

389 மண்டு புகழ்விக்ர மார்க்கன் அமைச்சரையேன்
கொண்டு பொறுத்தான் குமரேசா—கொண்ட
செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு. (க)

இ—ள்.

குமரேசா! விக்கிரமார்க்கன் ஏன் அமைச்சன் சொல்லைப் பொறுத்து ஆண்டான் எனின், செவிகைப்பச் சொல் பொறுக்கும் பண்புடைய வேந்தன் கவிகைக்கீழ் உலகு தங்கும் என்க.

கவிகை—குடை.

கவிகைக்கீழ் உலகு தங்கும்—குடை நிழலில் உலகம் நிற்கும். குடை என்பது இந்த அரசனது ஆட்சியைக்குறித்து நின்றது. பொறுக்கும் வேந்தன் குடைக்கீழ் உலகம் இருக்கும் என்று காண்க. செவிகைப்ப என்றது புலன் மாறி வந்த உபசாரம் என்க.

அமைச்சரது வாய்க்கும் அரசரது செவிக்கும் அமைந்துள்ள உரிமையை இதில் ஆய்ந்துகொள்க.

அமைச்சர் முதலிய பெரியோர்கள் கூறுகின்ற உறுதிச் சொற்கள் தனக்கு வெறுப்பாக இருப்பினும் அவற்றின் கருத்தை நோக்கிப் பொறுத்துக்கொள்ளும் இயல்பினையுடைய அரசனது குடைக்கீழ் உலகம் நிலைத்திருக்கும் என்பதாம்.

மருந்து கசந்தாலும் அதன் விளைவு நோக்கிப் பொறுத்து ஒருவன் உண்பனாயின் அவன் நோய் நீங்கி இன்பமடைவான் அதுபோல் அறிஞர் கூறும் உறுதிச்சொல் தன் செவிக்கு வெறுப்பாயிருப்பினும் அதன் பயனை உணர்ந்து அரசன் பொறுத்துக்கொள்வனாயின் அவனது ஆட்சி வளர் பிறைபோல் உயர்நிலையடையும் என்பது கருத்து.

உழையிருந்தார் கூறும் உறுதிச் சொற்களை அமைதியோடு கேட்டு நடக்கும் அரசனுக்கு உலகம் முழுவதும் தானே உரிமையாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை விக்கிரமார்க்கன்பால் உணரப்படும்.

கதை.

விக்கிரமார்க்கன் என்பவன் இற்றைக்கு ஆயிரத் தெண்ணூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் நருமதாநதியின் வடபா

விருந்த உச்சயினி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். இவனுடைய தந்தை பெயர் சந்திர சருமன். தாய் பெயர் சுருதகீர்த்தி. இவன் மிக்க மதிநலமுடையவன். பல கலைகளிலும் வல்லவன். தன் நகரிலிருந்த காளிதேவியின் அருள் முழுதும் கைவரப்பெற்றவன். துணிவும் கல்வியும் சூழ்ச்சியும் உடையவன். இவன் வீற்றிருந்து அரசுபுரிந்த அரியணை மிக்க மாட்சிமையுடையது. அதில் முப்பத்திரண்டு தெய்வப்பதுமைகள் இருந்தன. அவை யாவும் பேசுந் திறமுடையன. பண்பில்லாத வேந்தருயின் ஒரு கணமேனும் அதில் அவனைத் தங்க ஒட்டா. இவனொருவனே அவ்அணையிலிருந்து அனைவரும் இன்புறஆண்டான். தனக்கு ஒருமுறையில் தம்பியும் மதிமானுமான பட்டி என்பவன் இவனுக்கு மந்திரியாயிருந்தான். அவன் யாது சொல்லினும் அதன் விளைவை நோக்கிப் பொறுத்தான். அதனால் உலகமுழுதுந் தன் குடைக்கீழ்த் தங்கப்பெற்றான். தன் ஆட்சியில் இவன் புரிந்த அருஞ்செயல்கள் பல. தேவி அருளாலும் தனது செங்கோல் நெறியாலும் இரண்டாயிரம் ஆண்டுகளாக இவ்வுலகினை ஆண்டான். செவி கைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன் கவிகைக்கீழ் உலகம் தங்கும் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. (விரிவை இவன் சரிதையில் காண்க.)

ஆற்றலின் மேம்படப்பட்ட அரசர்கட் கவற்றின்மிக்க
ஆற்றல்தான் சூழ்ச்சியென்ப தாதலான் அதனையாயும்
ஆற்றலார் அமைச்சராக அமைச்சரோடமர்ந்துசெல்லும்
ஆற்றலான் அரசனுகின் அரியதொன் றில்லையன்றே.
(சூளாமணி)

அமைச்சர் சொல்லை அமைந்து கேட்கும் அரசன் இவ்வுலகமுழுதும் அமைய ஆள்வான் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

390 திண்டோட் பரதனையேன் தேர்வேந்தர் தம்முள்ளே
கொண்டார் ஒளியாக் குமரேசா—கொண்ட
கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானும் வேந்தர்க் கொளி. (ய)

இ—ள்.

குமரேசா! சந்திரகுலத்து வேந்தரனைவரும் பரதனை யேன் தங்கள் குல முதல்வனாகக் கொண்டாடினர். எனின், கொடை, அளி, செங்கோல், குடி ஓம்பல் என்னும் இந்நான்கும் உடையான் வேந்தர்க்கு ஒளியாவான் என்க.

குடி ஓம்பல்—குடிகளைப்பேணல்.

வேந்தர்க்கு ஒளியாம்—அரசர்க்கெல்லாம் விளக்காம்.

ஈகையும் இரக்கமும் உடையனாய் முறைதிறம்பாமல் அரசு புரிந்து குடிகளைக்காப்பவனே அரசருள் உயர்ந்தவன் என்பது கருத்து.

கொடுத்தலும் அளிசெய்தலும், நெறிவழுவாது அரசுபுரிதலும், குடிகளைப்பேணலும் ஆகிய இந்நான்கும் உடையவன் வேந்தர்க்கெல்லாம் விளக்காம் என்பதாம்.

விளக்குத்தான் இருந்த இடத்தை விளக்குதல்போல் ஈதல் முதலிய செயல்களையுடையவர், தம் இனத்தை, யெல்லாம் விளக்குவாராதலால் அவரை ஒளி என்றார்.

கொடையும், அளியுமுடையனாய் முறைவழுவாமல் உயிர்களைப் பேணுகின்ற அரசன் தன்குலத்துக்கெல்லாம் பேரொளியாய் நின்று பெருமையை நல்குவான் என்பது கருத்து. இவ்வுண்மைபரதன்பால் காணப்படும்.

கதை.

பரதன் என்பவன் சந்திரகுல வேந்தனாகிய துஷ்யந்தன் புதல்வன். தாய் பெயர் சகுந்தலை. பலகலைகளிலும் இவன் நல்ல புலமையுள்ளவன். இசைநூலில் மிகவும் வல்லவன். மக்கள் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களை உடலுறுப்புக்களின் குறிப்பால் உணர்த்துதற்குரிய உயர்கலைக்கு இவன் உயிரென இருந்தான். அதனால் பரதம் என்று இன்றும் இவன் பெயரால் அது வழங்கப்படுகின்றது. ஒளிமுடி புனைந்து இவ்வுலக முழுதையும் அளியுடன் ஆண்டான், பயிர்களுக்கு மேகம்போல்

இவன் உயிர்களுக்கு உதவினான். ஈகையும் இரக்கமும் உடைய வனாய் முறைவழுவாமல் குடிகளை ஓம்பியதால் இவன் புகழ் உலகெங்கும் பரந்தது. இவனது ஆட்சியின் செம்மையை அமரரும் போற்றினார். எவருஞ்செய்தற்கரிய அரியவேள்விகள் பல இவன் இனிது செய்து முடித்தான். பதினேழுகோடி வெள்ளை யானைகளைத் தன் ஆசிரியனுக்குத் தானமாகக் கொடுத்தான். அசுரரோடுபொருது இந்திரன் ஒருகாலத்தில் அஞ்சிநடுங்கினான். அவ்வமையம் இவன் அங்குப்புகுந்து அசுரரை அடங்கவென்று அமரரைக்காத்தான். இவன் பேரும் புகழும் புத்தேளுலக மெங்கும் புகுந்துலாவின. செங்கோல் செலுத்தி இவன் சிறந்து விளங்கினமையால் இவன் மரபினரெல்லாம் பாரதர் என்று இவன் பெயரால் பகரப்பெற்றார். அம்மரபின் இறுதியிலிருந்த பாண்டவ துரியோதனர்களுடைய சரித்திரங்கூறும் நூலும் பாரதம் எனநின்றது. குணஞ்செயல்களால் தன் குலத்துக் கெல்லாம் இவன் விளக்காய் விளங்கினான். கொடை அளி முதலிய உயர் நலங்களையுடையவன் அரசர்க்கெல்லாம் ஒளியாகி நிற்பான் என்பதை இவன் உணர்த்தி நின்றான். விரிவைப் பாகவதத்தில் காண்க.

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால் யானுயிர் என்ப தறிகை
வேல் மிகு தானை வேந்தர்க்குக் கடனே. (புறநானூறு)

அளியோடு இவ்வுலகைக்காப்பவன் அரசர்க்கெல்லாம் ஒளியாய் விளங்குவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

( இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள் )

படைகளும், குடிகளும், பொருள்களும், அமைச்சரும், நட்பினரும், அரண்களும் ஆகிய இவ் ஆறுங்குறைவற உடையவனே அரசருள் உயர்ந்தவன். அஞ்சாமையும் ஈகையும் அறிவும் ஊக்கமும் என்னும் இந்நான்கு குணங்களும் இயல்பாக

அமையப்பெற்றவனே அரசனுவான். துணிவும், கல்வியும், சோம்பலின்மையும் அவன்பால் இயல்பாக அமைந்திருத்தல் வேண்டும். வீரத்திலும் மானத்திலும் குன்றுதவனுய்நின்று நெறி வழுவாமல் அவன் ஒழுகுதல் வேண்டும். வருவாய்க்குரிய வழிகளைப் பெருக்கிப் பொருள்களைத் தொகுத்து நெறியறிந்து அவற்றை அவன் செலவிடுதல் வேண்டும். எளிய செவ்வியும் இனிய சொல்லுமுடையனுய் அரசன் இருப்பனுயின் அவன் ஆட்சி மிக்கமாட்சியை அடையும். இனிய சொல்லுடனே ஈதலைச் செய்து குடிகளைக்காக்க வல்லவனுக்கு உலகமுழுவதுந்தானே உரிமையாம். பிறப்பால் மனிதனுயினும் வழுவில்லாத அரசனைக் கடவுள் என்றே கருதவேண்டும். அமைச்சர் சொல்லை அமைந்து கேட்கும் அரசன்பால் உலகமுழுதும் அடங்கி நிற்கும். அளியோடு இவ்வுலகைக் காப்பவன் அரசர்க்கெல்லாம் ஒளியாய் விளங்குவான்.

௩௯-வது இறைமாட்சி முற்றிற்று.

---

## ௪௦-ம் அதிகாரம் கல்வி.

அஃதாவது கற்றற்குரிய நூல்களைக் கற்றல். பொருள் முதலிய எல்லா நலங்களையும் எய்தி இன்புறுதற்கு ஏதுவாயுள்ளது அறிவேயாகும். அவ்வறிவு கல்வி ஒன்றானே கவினுறத் தோன்றும். இத்தகைய கல்வியை அரசன் கல்லானுயின்

கல்லா அரசனும் காலனும் நேரொக்கும்
கல்லா அரசனிற் காலன் மிக நல்லன்
கல்லா அரசன் அறம் ஓரான் கொல்லென்பான்
நல்லாரைக் காலன் நலிய கில்லானே.

எனறபடி அவனுல் எல்லாத் தீமைகளும் இவ் உலகில் நிகழுமாதலால் ஒரு தலையாக அவனை கற்றல் வேண்டுமென்பதும், அவன்பால் அமைந்திருக்கவேண்டிய மாட்சிகள் எல்லாவற்றினும் கல்வியே முதன்மையானது என்பதும், உணர்த்தவேண்டியே இஃது இறைமாட்சியின் பின்வைக்கப்பட்டது.

391 கற்ற பெருவழுதி கற்றபடி யேநின்று
கொற்றமுற்றார் என்னே குமரேசா—முற்றவே
கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. (௧)

குமரேசா! உக்கிரப் பெருவழுதியார் கற்றற்குரிய நூல்களையெல்லாம் முற்றுங் கற்று அதன்படியே நின்று வழுவாமல் ஒழுகினார் எனின், கற்பவை கசடு அறக் கற்க; கற்றபின் அதற்குத்தக நிற்க என்க.

கற்பவை—கற்கப்படும் நூல்கள்.

கசடு—குற்றம், ஐயம், குறைவு.

கற்றற்குரிய நூல்களைக் குற்றம் அறக்கற்க; அங்ஙனம் கற்றபின் அக்கல்விக்குத் தக்கபடி நெறி வழுவாமல் நிற்க என்பதாம்.

உயிர்க்கு உறுதி பயக்கத்தக்க அறிவு நூல்களை ஐயமறக் கற்று அதன்படி ஒழுக்க நெறியில் வழுவாமல் நின்று ஒருவன் ஒழுகவேண்டும் என்பது கருத்து.

கசடு அறக்கற்றலும் கற்றபடி நிற்றலுமே மக்கட் பிறப்பின் மாண்பயனும் என்பது குறிப்பு.

பழுது அறக் கற்றுத் தான் கற்றபடியே நெறி வழுவாமல் ஒருவன் ஒழுகவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உக்கிரப் பெருவழுதியால் உணரப்படும்.

## கதை.

உக்கிரப் பெருவழுதி என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் மதுரையிலிருந்து செங்கோல் செலுத்திய வெண்குடை வேந்தர். திருவும் கல்வியும் சேரப்பெற்றவர். இப்பெருந் தகையின் அறிவும் ஆற்றலும் அளவிடலரியன. பல்காப்பியங்களையும் பல்கால் பயின்ற நல்லிசைப் புலவருள் இவர் தன் சொல்வழி ஒழுகினர். திருவேறு தெள்ளியராதலும்

வேறு என்னும் ஒள்ளிய உரை இவரை உள்ளாதிருந்தது. உண்மை திண்மை வண்மை ஒண்மை தண்மை எண்மை முதலிய உயர் குணங்களெல்லாம் இவர்பால் ஒருங்கு அமைந்திருந்தன. புலவர்களோடு கலந்து கலைகளை ஆய்வதையே பொழுதுபோக்கும் விளையாட்டாக இவர் பொருந்தியிருந்தார். கற்றவர்களுடைய குற்றமற்ற தன்மையை முற்றும் உணர்தற்கு உற்ற இடமாகத் தம் முன்னோர் வகுத்திருந்த சங்கப்பலகையில் இவரும் சிங்கம்போல் தங்கியிருந்தார். இவரோடு குழுமியிருந்த நல்லந்துவனார், மருதனிளநாகனார், நக்கீரனார் முதலிய புலவர் திலகர்களும் இவரது கலையுணர் புலமையைப் புகழ்ந்து மகிழ்ந்தார். அக்காலத்தில் அங்கு அரங்கேற்றவந்த நமது வள்ளுவப்பெருந்தகையின் தெள்ளிய திருக்குறளைக் கேட்டார். அவ்வள்ளலது ஒள்ளிய தன்மையை உணர்ந்து தம் உள்ளம் உருகினார். உவந்து துள்ளினார்.

நான்மறையின்மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சம்
சிந்திக்க கேட்க செவி.

என்று எவருங் கேட்க ஓர் உயர்கவி பாடினார். உலகினைத் தாங்கி நின்றும் இவர் புலமையில் ஓங்கினார். உறுதி பயக்கும் நூல்களை வழுவறக் கற்று அவ்வாறே நெறிநின்றொழுகினார். கற்கப்படும் நூல்களைக் கசடு அறக்கற்று அதற்குத் தகவே மக்கள் நிற்கவேண்டும் என்பதை இவர், நின்றுணர்த்தினார். (விரிவை வழுதி மரபில் காண்க.)

ஐயந்தீரக்கற்று அறிவுடன் ஒழுகுவோனே குலமகன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

392 காணுமிரு கண்ணிழந்தும் கற்றகவி வீரர்சீர்
கோணாத தென்னே குமரேசா—பேணுகின்ற
எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு. (உ)

இ—ள்.

குமரேசா! எண்ணும் எழுத்தும் கற்ற வீரராகவர் கண்ணிழந்தும் ஏன் புகழ் கண்டார் எனின், எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ்விரண்டும் வாழும் உயிர்க்குக் கண் என்க.

எண்—கணிதம். இஃது எண்ணுதல் என்னும் ஏதுவான் வந்தது. எண்ணுதல்— ஆராய்தல். தருக்க நூலை இது குறித்து நின்றது. எழுத்து என்பது ஆகுபெயராய் அதன் இலக்கணத்தை இங்கு உணர்த்தி நின்றது. வாழும் உயிர் என்றது மக்களை.

எண் என்பனவும் மற்றை எழுத்து என்பனவும் ஆகிய இவ் இரண்டுகலைகளையும் சிறந்த உயிர்கட்கு இரண்டு கண்களென்று அறிந்தோர் சொல்லுவர் என்பதாம்.

தருக்கநூலும் இலக்கணநூலும் உறுதிப்பொருளைக் காண்டற்குக் கருவிகளாகுமாதலால் அவற்றைக் கண்களாக மக்கள் கருதவேண்டுமென்பது கருத்து. காணுதமும் பாணிநீயமும் எல்லா நூல்களையும் எளிதிலறிதற்கு இனிய கருவிகளாம் என்ற வடமொழித் தொடரையும் ஈண்டு உளங்கொண்டுணர்க.

மேல், கற்றற்குரிய நூல்களை ஒருவன் கற்கவேண்டும் என்றார். அவை, எவை என்பார்க்கு இஃது உணர்த்தியதென்க. கருவி நூல்களையும், அறிவு நூல்களையும், தெளிவுறக் கற்றவரே மக்களுட் சிறந்தவர் என்பது கருத்து.

கல்வியைக் கண்ணினுஞ் சிறந்ததாக எண்ணிக் கற்கவேண்டுமென்பது குறிப்பு.

கண் இலராயினும் கல்வியுடையவர் அறம் பொருள் இன்பங்களை அமையக்கண்டு பெரும் புகழுடைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது, இவ்வுண்மை வீரராகவர் பால் உணரப்படும்.

## கதை

வீராகவர் என்பவர் சறரேறக்குறைய இற்றைக்கு மூந்நூறு வருடங்கட்கு முன்னர்த் தொண்டை நாட்டிலே பொற்

களந்தை என்னும் நகரிலே வேளாளர் குலத்திலே வடுகநாத முதலியார் என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றினார். இளமைப் பருவத்திலேயே இவரது விழிகள் ஒளியிழந்தன. இவர் மிக்க நுண்மதியாளர். நோக்கிப் படித்தற்கு நோக்குகள் இல்லையே யென்று தன் நிலைமையை நோக்கி நோக்கி நொந்தார். இவரது கல்வியில் ஆர்வத்தைப் புலவர் சிலரறிந்து சிலகவிகளை வாய்ப் பாடமாக இவர்பால் கூறினார். அவைமுழுதும் இவர்க்கு மனப் பாடம் ஆயின. அவற்றின் பொருள் நயங்களைத் தானாகவே பின்பு இவர் ஆய்ந்து மகிழ்ந்தார். பஞ்ச இலக்கணங்களையும் பல்வகைக் காப்பியங்களையும் தம் நெஞ்சே ஏடாகக் கற்றார். சிறந்த கவிகளை விரைந்து பாடுதற்குரிய தெளிந்த புலமையை யுற்றார். "ஏடாயிரங்கோடி எழுதாது தன்மனத்து எழுதிப்படித்த விரகர்" என்னும் ஏற்றம் பெற்றார். அந்தகராயிருந்தும் கவிகள் பாடியதால் அந்தககவிவீரராகவ முதலியார் என்று இவரை அனைவரும் புகழ்ந்தார். பெருநிலமன்னர் குறுநிலக்கிழவர் முதலிய பலரிடத்துஞ்சென்று தம்புலமையைப் புலப்படுத்திப் பெரும் பரிசில் பெற்றார். ஈழநாடு சென்று அங்குப்பரராச சேகரன் என்னும் அரசனையுங்கண்டு அவன்பால் அரும்பரிசில் கொண்டார். சோழமண்டலத்தில் இவர் திரிந்துவருங்கால் ஓர் நீர்நிலையை அணுகித் தாம் வைத்திருந்த கட்டுச்சோற்றை ஓர் பக்கத்தே வைத்தார். உடனே அதனை ஒரு நாய் கவர்ந்துசென்றது. அருகிலிருந்தவன் நிகழ்ந்ததையுணர்த்தினன். இவர் வயிற்றில் பசி யெழுந்தது. வாயில் ஒரு பாட்டும் எழுந்தது.

சீராடையற்ற வயிரவன் வாகனஞ் சேரவந்து
பாராரும் நான்முகன் வாகனந் தன்னைமுன் பற்றிக்கொண்டு
நாராயணனுயர் வாகனமாயிற்று நம்மை முகம்
பாரான்மை வாகனன் வந்தே வயிற்றினிற் பற்றினனே.

என்று நகைச்சுவையோடு தம் கவிச்சுவையைக்காட்டி நடந்துவந்து தம் நகரினையடைந்தார். வயிரவன் வாகனம்—நாய். நான்முகன் வாகனம்—அன்னம். நாராயணன் வாகனம்—கருடன். மைவாகனன்—அக்கினி. நாய் அன்னத்தை எடுத்துக்கொண்டு

பறந்து போக; என் வயிற்றில் பசித்தீ பிடித்ததே என்பது இதன் கருத்து. கண் இல்லாதிருந்தும் தம் கல்வியுடைமை யால் எல்லா நலங்களையும் எய்தி இவர் இன்புற்றிருந்தார். எண் ணும் எழுத்தும் உயிர்க்குக் கண்ணும் என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து மகிழ்ந்தது. (வீரவைப் புலவர் புரா ணத்தில் காண்க.)

இன்னங் கலைமகள் கைமீதிற் புத்தகம் ஏந்தியந்தப்
பொன்னம் பலகைதனில் புக்கிருந்தாள் என்னபுண்ணியமோ
கன்னன் களந்தைக் கவிவீரராகவன் கச்சியிலே
தன்னெஞ்சம் ஏடெனக் கற்றான் ஒருமுத் தமிழையுமே.

வீரகன் முத்தமிழ் வீர ராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெல்லாம்
உரகனும் வாணனும் ஒப்பத் தோன்றினால்
சிரகர கம்பிதஞ் செய்ய லாகுமே.

இவற்றால் இவரது நிலையையும் புலமையும் இனிது தெளிவா தல் காண்க. எண்ணும் எழுத்துமே மக்கட்குக் கண்ணும் என் பது இதனால் கூறப்பட்டது.

---

393 காணுமிரு கண்ணுமற்றார் கற்றுயர்ந்தார் கண்ணிருந்தும்
கோலிழந்தான என்னே குமரேசா—மேலான
கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். (௩)

இ—ள்.

குமரேசா! குருடும் முடமும் கொண்டிருந்தும் இரட் டைப் புலவர் பெருமை பெற்றார்; கல்லாத சந்தனன் கண்ணு டையவனாயிருந்தும் எழுத்தைக் காணமாட்டாமல் ஏன் இழிந் தான் எனின், கண்உடையர் என்பவர் கற்றவரே; கல்லாதவர் முகத்து இரண்டு புண்ணுடையர் என்க.

மேல், எண்ணும் எழுத்தும் மக்கட்குக் கண்ணும் எனறூர்; கண் என்பது முகத்திலுள்ள இருபொறி அன்றோ? என்பார்க்கு இஃது உணர்த்திய தென்க. கல்லாதவர்களுடைய கண்களைப் புண்கள் என்றது அவற்றின் இழிவும், இயைபும் கருதி என்க.

கண்ணுடையர் என்று புகழ்ந்து சொல்லப்படுபவர் கற்றவரே; மற்றைக்கல்லாதவர் முகத்தின்கண் இரண்டு புண்ணுடையரேயாவர் என்பதாம.

கல்லாதவர் முகத்திலுள்ள கண்கள் எழுத்தைக் காணும் விழுப்பம் இழந்தமையால் புண்களாக அவை இழிக்கப்பட்டன. கண்ணுடையராயினும் கல்வியில்லாதவர் குருடரேயாவர் என்பது குறிப்பு.

கற்றவர் இருந்த இடத்திருந்தே தமது நூலறிவால் எல்லாவற்றையும் இனிது நோக்கி இன்பமுறுவர்; கல்லாதவர் கருத்துப் பொருள்களுள் ஒன்றையுங் காணாராய்க் கண் விழித்திருப்பர் என்பது கருத்து.

கற்றவர் அறிவுடையராகி உயர்வர் என்பதும், கல்லாதவர் கண்ணுடையராயினும் யாதும் அறிகிலாராய் இழிவர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை இரட்டைப் புலவர்பாலும் சந்தனன் கண்ணும் உணரப்படும்.

## கதை.

இரட்டையர் என்பவர் இற்றைக்கு இறுநூறு வருடங்கட்கு முன்னர்ச் சோழநாட்டிலே ஆமிலந்துறை என்னும் ஊரிலே செங்குந்தர் குலத்திலே சேனாதன் என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றினர். இவ் இருவரும் ஒருவயிற்றிற் பிறந்தவர்கள். மூத்தவர் முடவர். இளையவர் குருடர். தெய்வத்திருவருளால் எல்லாக் கலைகளிலும் இவர் வல்லுநராயினர். பல இடங்கட்குஞ் செல்ல விரும்பினர். முடவர்மேலிருந்து வழிகாட்டக் குருடர் அவரைத் தம்தோளில் வைத்துச் சுமந்து பலரிடமுஞ் சென்று கவிகள் பாடிப் பரிசில்கள் பெற்றூர். மேலிருக்கும்

முடவர்தாம் கண்டதைக் குறித்துப் பாதிபாடுவர்; அக்குறிப்பையறிந்து மற்றைப் பாதியையும் இளையவர் உடனே பாடி முடிப்பர். ஒருநாள் இவர் வழியே செல்லுங் காலத்தில் மாங்காடு என்னும் ஊரிலிருந்த ஓர் வேளாளன் தன் மகளை மருமகன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனான். அப்பொழுது மெய்தீண்டி அன்போடு மகளை அருகணைத்துச் சென்றான். மேலிருந்தவர் அவன் மெய்பண்பைவிடுத்து விநோதமாக,

மாங்காட்டு வேளாளன் மகளை மருமகன்பால்
போங்காட்டில் இன்பம் புணர்ந்தானே; என்றார்.

ஆங்கானுர்

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.

என்று இளையவர் முடித்தார். இவ்வாறு தமது ஞானக் கண்ணால் எதையும் குறிப்பாகக்கண்டு அரிய கவிகள் பல பாடித் திரிந்தார். இவரது அறிவின் திறத்தை வியந்து இளஞ்சூரியன் முதுசூரியன் என்று இவரை அனைவரும் புகழ்ந்தார். "ஒண்பாவில் உயர்கம்பன்" என்னும் கவியில் "பண்பாய கலம்பகத்துக்கு இரட்டையர்" என்று இவர் புகழப்பெற்றார். ஒருவரை ஒருவர் பிரியாமல் உருவிலும் அறிவிலும் ஒத்திருந்தமையால் இரட்டையர் என இவர் இசைக்கப்பெற்றார். தில்லைக்கலம்பகம் முதலிய சிலநூல்களும் செய்துள்ளார். கண்ணுடையர் என்பவர் கற்றவரே என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைப் புலவர் சரிதையில் காண்க.

கதை.

சந்தனன் என்பவன் பாடலிபுரத்துவேந்தன் மகன். சிறந்த அழகன். ஆயினும் கல்வியில்லாதவன். ஏலக்குழலாள் என்பவள் இவன்மீது காதல்கொண்டு தன் விருப்பத்தை எழுதி ஒரு ஓலையை இவன் முன்னே வீசினாள். அதனை எடுத்தான். கண்ணிருந்தும் அதனை இவன் காணமுடியாமல் கற்ற ஒருவனிடம் கொடுத்

தான். அவன் செய்த வஞ்சத்தால் அவள் மாய்ந்தாள். அத ளுல் இவனும் மாண்டான். கல்லாதவர் முகத்து இரண்டு புண்ணு டையர் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்தது.

வெண்பா இருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்த்துக் கையால் எழுதானைப்—பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாளே
எற்றோமற் றெற்றோமற் றெற்று.

இது, சந்தனன் கல்லாமைக்கிரங்கி வன்கொலையாய் மாண்டு பின் பேய்வடிவாய் வந்து தன்னை அச்சுறுத்தியபோது ஔவை இசைத்தது.

கண்ணுடையாராயினும் கல்வி யில்லாதவர் குருடரேயாவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

394 மேவினார் பின்பு மிகவுள்ள வன்பிரிந்தார்
கோவூர்க் கிழார்முன் குமரேசா—யாவும்
உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில். (ச)

இ—ள்.

குமரேசா! தம்மை ஒருமுறை கண்டவர் பின்னர் நினை ந்து நினைந்து உருகுமாறு ஏன் கோவூர்க்கிழார் புரிந்து பிரிந்தார் எனின், உவப்பத் தலைக்கூடி உள்ளப்பிரிதல் அனைத்தே புலவர் தொழில் என்க.

உவப்ப—உவகையுறுமாறு. தலைக்கூடி—சேர்ந்து. தலை இதில் அடையுருபாய் நின்றது. அஃதாவது தனக்கென வேறு பொருளின்றித் தன்னையடுத்துநின்ற சொற்களை அலங்கரித்து நிற்பது. இது வடமொழியில் உபசர்க்கம் எனப்படும்.

உள்ளப்பிரிதல்—நினையுமாறு நீங்குதல்.

கூடல் உவத்தலையும்; பிரிதல் உள்ளலையும் பிறர்க்கு உளவாக்கு மென்ற தனால் புலவரது நிலைமை புலப்பட நின்றது. எவரும் உவகையுறுமாறு கூடிநின்று பின்னர்த் தம்மை அவர் நினைந்து உருகுமாறு பிரிதலே புலவரது தொழில் என்பதாம்.

தமது இனிய மொழிகளையும் பழுதில் செயல்களையும் விழுமிய குணங்களையும் எண்ணி எண்ணி, இனி இவரை என்றுகாண்போம் என்று பிறரெல்லாரும் ஏமுறுமாறு கற்றவர் ஒழுகுவார் என்பார் "உள்ளப் பிரிதல் புலவர் தொழில்" என்றார். அறிவுடையார் கேண்மை பிரிவின்கட் பீழை தரும் என்பது கருத்து. மேல், கற்றவரே கண்ணுடையர் என்றார்; இதில் அவரது இயல்பு இஃதென இயைய உணர்த்தினார். பல்வேறு வகைப்பட்ட நூல்களை எல்லாம் ஒருங்கே கற்றிருப்பினும் உவப்பக்கூடி உள்ளப்பிரியார் புலவர் அல்லர் என்பது குறிப்பு. புலவர் இயல்பு இவையேயாம் என்று அடிகள் உணர்த்திய புலமை நயத்தைப் புலவர் என்பார் ஈண்டுப் புலங்கொளல்வேண்டும்.

தம்மை ஒருமுறை கண்டவர் இனி இவரை என்று காண்பேம் என்று எண்ணி அன்புறுமாறே உண்மைப்புலவர் ஒழுகுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கோவூர்க் கிழார்பால் உணரப்படும்.

கதை.

கோவூர்க்கிழார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூற்றிருபது ஆண்டுகட்கு முன்னர்ச் சோழநாட்டிலே கோவூர் என்னும் நகரிலே வேளாளர் குலத்திலே அமிர்தநாதன் என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றினார். பல நூல்களையும் வழுவறப் பயின்று இளமையிலேயே அந்நாட்டுக்கு இவர், தலைமைப் புலவராய் விளங்கினார். கல்விக்கு அறிவும், அறிவுக்கு ஒழுக்கமும் பயனும் என்பதை அனைவரும் உணர்ந்து ஒழுகுமாறு இவர் சிறந்து ஒழுகினார். கற்பவை கசடு அறக் கற்க கற்ற பின் அதற்குத்தக நிற்க என்னும் நீதிக்கு இவர் நிலையமாய் நின்றார். அருளும் இன்சொல்லும் அமையப் பெற்றவர். இவரது பெரும்புலமையையும் அருங்

குணங்களையும் அறிந்து அந்நாட்டு வேந்தனாகிய நலங்கிள்ளி என்பவன் தன்பால் அழைத்துவைத்து இவர்பால் அன்பு செய்துவந்தான். இவரும் வானுறு மதிபோல் அவ் அரசனது அவையில் விளங்கியிருந்தார். பெருங்கிள்ளி என்னும் மன்னனுக்கும், தம் அரசனுக்கும் இடையே பெரும் பகை மூண்டது. அப் பகைமையை ஒழித்து அவ் இருவருக்கும் இவர் உவகையை விளைத்தார். இவரது தகைமையை வியந்து அரசரும் பிறரும் இவர்பால் பேரன்புகொண்டார். நல்லிறையனார், மள்ளனார், ஐயூர் முடவனார், ஆலூர் மூலங்கிழார், இளந்தத்தனார் முதலிய இக்காலத்துப் புலவர் பலரினும் குணஞ்செயல்களால் இவர் முதல்வராய் நின்றார். எவ்வுயிரும் இன்புறுமாறே இவர் இன்னருள்செய்தார். இவரது இனநலத்தால் நலங்கிள்ளியுங் கலைகள் பலவுங் கற்றுக் கவிகள் பாடுந் தலைமையும், பெற்றான். தமிழ்நாடு முழுவதுங் காண விரும்பி இவர் தமது அரசனைப் பிரிந்து அகன்றார். பல இடங்கட்குஞ் சென்றார். இவரை ஒருமுறை கண்டவர் இனி என்று காண்போம்என்று எண்ணி ஏங்குமாறு இவர் நண்ணிதிரிந்தார். அரசனும் இவரைப் பிரிந்திருக்கலாற்றாது விரைந்து போய்க் கண்டு தம் வியனகர்க்குக் கொணர்ந்தான். இவரைக்கண்டு உரையாடினவர் பின்பு என்றும் மறவாதவராய் இவர்பால் அன்புசெய்தார். இவரது சிறந்த கல்வியையும் நிறைந்த ஒழுக்கத்தையும் அழகிய மொழிகளையும் அனைவரும் நினைந்து இன்புற இவர் நெறிநின்றொழுகினார். உவப்பக் கூடி உள்ளப் பிரிதலே புலவர் தொழில் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. இவரது புலமை நயமும் சரிதக் குறிப்பும் புறநானூற்றில் இனிது புலனாம்.

மற்றவரெல்லாம் மகிழ்வுற ஒழுகலே கற்றவர்க்கு இயல்பு என்பது இதனால் கூறப்பட்டது.

395 தேடுபுகழ்ச் சாந்திகண்ணன் தேருதங்கன் தாழ்ந்துகற்[றம்
கூடினார்சீர் என்னே குமரேசா—தேடி
உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர். (௫)

இ.—ள்.

குமரேசா! சாந்தி, கண்ணன், உதங்கன் என்னும் இம் மூவரும் தாழ்ந்து நின்று கற்றும் ஏன் உயர்ந்து விளங்கினர் எனின், உடையார் முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார் பெரியரே; கல்லாதவர் கடையரேயாவர் என்க. பெரியர் என்பது இதில் வருவிக்கப்பட்டது. இது சொல்லெச்சம்.

உடையார்—செல்வர். இல்லார்—வறியர். பொருளினது உண்மை இன்மைகளை இவை உணர்த்தி நின்றன.

ஏக்கற்றும்—கீழ்ப்படிந்து நின்றும். இஃது ஏக்கறுதல் என்பதன் அடியாகப் பிறந்த தெரிநிலை வினையெச்சம்.

ஏக்கறுதல்—நசையால் தாழ்தல். உம்மை இழிவுசிறப்பு.

கல்லாதவர் கடையரே என்றதனால் கற்றாரது தலைமைகாண நின்றது. ஏகாரம் தேற்றம்.

பொருளுடையார்முன் அஃதில்லாதவர் தாழ்ந்து நிற்றல் போல் கற்றார் முன் கீழ்ப்படிந்துநின்று கல்வியை விரும்பிக் கற்றவரே மேலோர் ஆவர்; அங்ஙனம் கல்லாதவர் கீழோரேயாவர் என்பதாம்.

பொழுதொடு சென்று, வழிபாடுசெய்து ஆசிரியன் இரு என்றபின் இருந்து பணிவோடு கற்கவேண்டுமாதலால் ஏக்கற்றும் என்றும், கற்றார் அறிவுடையராகிப் பெருமையடைவராதலால் அவர் பெரியர் என்றும், அங்ஙனங் கல்லாதவர் மூடராகி இழிவராதலால் அவர் கடையரேயாவரென்றும், இஃதுணர்த்தியதென்க.

வருந்தியேனும் திருந்த ஒருவன் கற்றல் வேண்டும் என்பது கருத்து. கற்கை நன்றே கற்கை நன்றே பிச்சை புகினுங் கற்கை நன்றே என்றதும் ஈண்டுக் காணத்தக்கது.

முன் தாழ்ந்து நின்று கற்பினும் கற்றவரே பின் உயர்ந்தவராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாந்தி, கண்ணன், உதங்கன் என்னும் இம்மூவர் பாலும் உணரப்படும்.

## கதை

சாந்தி என்பவர் விசிகன் என்னும் ஒரு வேதியன் புதல்வர். அருளும் பொறையும் அமைதியும் உடையவர். கல்வியை நன்கு பெறவிரும்பி நல்லாசிரியரை நாடித்திரிந்து முடிவில் பூதி என்பவரைப்பொருந்தினர். அவர் ஆங்கிரசருடைய அருந்தவப் புதல்வர். சிறந்த புலவராயினும் பெருஞ்சினமுடையவர். ஒரு கணமேனும் அவருடன் அணுகியிருத்தற்கு எவரும் இசையார். சாந்திமாத்திரம் அவரைச் சார்ந்து கற்றார். அவரது வெகுளி என்னுங் கொடு நெருப்பை இவர் தமது அமைதியால் ஆற்றிவந்தார். அறிவும் பிறவும் இருந்தும் ஒரு மகவின்மையால் அவர் மிகவும் வருந்தினர். சுவர்ச்சசன் என்னும் தன்னுடன் பிறந்தானுக்கு அது குறித்து ஒரு வேள்வியியற்றினர். இடையே சாந்தியை அங்கு வைத்து விட்டு ஒருகால் அவர் சிறிது வெளியே சென்றார். அவ்வமையம் அவ் வேள்வித்தீ அவிந்தது. அவரது வெகுளித்தீயால் முன்னரே அல்லல்பல எய்தியிருந்த இவர் அன்று கொண்ட கலக்கத்தை யார் சொல்ல வல்லார். இவரது கல்வி விருப்பிற்கும் ஏக்கத்துக்கும் இரங்கித் திங்கடவுளுந் தோன்றி "அஞ்ச வேண்டாம் உனக்கு யாது வேண்டும்" என்றார். ஆசிரியருக்கு வெகுளி நீங்கி எல்லாவுயிர்களிடத்தும் அருள் ஓங்கவும், பிள்ளைப்பேறு எய்தவும், அவிந்தகொழுங்கனல் குண்டத்திலெழுந்துவரவும், இவர் விரும்பி வேண்டினர். அவ்வாறே ஆகுக என்று அவர் அருளி அகன்றார். ஆசிரியர் வந்தார். எனறும் இல்லாத அமைதியும் இரக்கமுந் தமது உள்ளத்தில் எய்தக்கண்டார். நிகழ்ந்ததை யுணர்ந்தார். சாந்தியின் சாந்த குணத்தையும் கற்றல் கருதி இவர் நிற்றலையும் வியந்து எல்லாக் கலைகளும் இவர்க்கு எய்தும் வண்ணம் அவர் எண்ணி நோற்றார். கலைகள் பலவும் இவர் வழுவறத்தெளிந்தார். புலவர் பலரினும் அக்காலத்தில் இவர் தலைமை எய்தினர். கல்வியை விரும்பி ஆசிரியன் முன் தாழ்ந்து நின்றாலும் கற்றவரே பின் உயர்ந்தவராவர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. (விரிவை மார்க்கண்டேயத்தில் காண்க.)

## கண்ணன் கதை.

யதுகுல மன்னனாகிய கண்ணன் இளமைப் பருவத்தில் சாந்திபனி என்பவரைச் சார்ந்து கற்றார். கற்குங்கால் அவருக்குக் கீழ்ப்படிந்து நின்று பலவகையானும் வழிபாடுசெய்தார். பள்ளித் தோழராகிய குசேலரோடு கூடி ஒருநாள் காட்டுக்குச் சென்றார். மணிமுடி புனையுந் தமது திருமுடியில் ஆசிரியருக்காக விறகுஞ் சுமந்தார். பிற்றைநிலைமுனியாது கற்றல் நன்று என்பதை இவர் காட்டி நின்றார்.

## உதங்கன் கதை.

உதங்கன் என்பவர் பிருகு முனிவரது மரபில் வந்தவர். தந்தைபெயர் திர சருமன் என்பர். கல்வியே உயிர்க்கு உற்றதுணை என்பதை இவர் இளமையிலேயே உணர்ந்தார். பயிலவர் என்னும் முனிவரை அடுத்துக் கல்வி பயின்றார். பயிலுங்கால், அவர்க்குக் கீழ்ப்படிந்துநின்று பலவகையானும் இவர் பணிசெய்துவந்தார். ஒருநாள் காட்டில் சென்று விறகு தொகுத்துக் கட்டித் தமது சடைத் தலையில் தாங்கினர். சுமை தாங்கலாற்றாது துவண்டுவந்தார். ஆசிரியரது இல்லை அடைந்து மெல்ல இறக்கினர். அதில் சடை ஒன்று சிக்கித் துணிபட அதிலிருந்து உதிரங் கான்றது. பயிலவர் கண்டார். பரிவுங்கொண்டார். இவரது அன்பை வியந்து தமது அருமைக் குமரியையே இவருக்கு மணம்புரிந்துதந்தார். கல்வியை விரும்பித் தாழ்ந்து நின்று வழிபாடு செய்தமையால் குருவருளும் திருவருளும் கூடப்பெற்று எல்லாக் கலைகளிலும் இவர் வல்லுநரானர். இவரது புலமைத் திறத்தை வியந்து அமரரும் புகழ்ந்தார். சாந்தி, கண்ணன், உதங்கன் என்னும் இம்மூவரும் ஏக்கற்றுங் கற்றதனால் பின்பு மேலோராகி விளங்கியிருந்தார். இவருடன் இருந்த சிலர் வழிபாடுமுதலியன செய்தற்கு நாணி விலகினர். அதனால் அறிவிலராகி யிழிநிலை யடைந்தார். உடையார்முன் இல்லார்போல் நின்று ஏக்கற்றும் கற்றாரே உயர்வர்; கல்லாதவர் கடையரேயாவர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. (விரிவை வியாச பாரதத்தில் காண்க.)

உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனந்திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடை யோனாறு அரசும் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே. (புறநானூறு)

எவ்வகையாரினும் கற்றவரே உயர்ந்தவர்; கல்லாதவர் கடையாவர் என்பது இதனால் கூறப்பட்டது.

396 சீராரும் கீரருமேன் தென்முனிபால் கற்றபின்பே
கூரறிவு மிக்கார் குமரேசா — நேராகத்
தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு. (௬)

இ—ள்.

குமரேசா! கற்றுயர்ந்த நக்கீரருக்கும் அகத்தியர் பால் கற்ற பின்பு என் அறிவு மிக்கது எனின், மணற்கேணி தொட்ட அனைத்து ஊறும்; மாந்தர்க்கு அறிவு கற்ற அனைத்து ஊறும் என்க. உம்மை அவாது உணர்வின் உயர்வை உணர்த்தி நின்றது.

தொட்ட என்றது தொடுதல் என்னும் வினையடியாகப் பிறந்த பெயரெச்சம். தொடுதல்—தோண்டுதல், தீண்டுதல்.

தொட்ட அனைத்து—தோண்டிய அளவு.

மணற்கேணி ஊறும்—மணலில் நீர் சுரக்கும்.

கேணி—கிணறு, குளம்: அஃது ஈண்டு ஆகு பெயராய் நின்று தன்னிடமுள்ள நீரைக் குறித்தது.

மேல், எக்காற்று நின்றேனும் கற்றல்வேண்டும் என்றார்; அங்ஙனம் சிறிது கற்றால் அமையாதோ என்பார்க்கு இஃது அருளியதென்க.

தோண்டிய அளவுக்குத்தக்கவாறு மணலின்கண் நீர் ஊறும்; அதுபோல கற்ற அளவுக்குத் தக்கவாறு மக்கட்கு அறிவு ஊறும் என்பதாம்.

மணலைப் பறிக்கப்பறிக்க நீர் பெருகுவதுபோல நூல்களைப் படிக்கப்படிக்க மனிதர்க்கு அறிவு வளரும் என்பது கருத்து. அறிவுக்கு நீரை உவமை கூறியது அதன் நன்மையும் தன்மையும் நாடிஎன்க. ஒருவன் கல்விய ஊற்றுநீர் எல்லார்க்கும் பயன் படுதல்போல் நல்லான் ஒருவன் கல்வியறிவு உலகுக்கெல்லாம் உவகையூட்டுமென்க.

ஆற்று மணலின்கண் நீர் அமைந்திருந்தாலும் அதனைத் தோண்டிய அளவுக்கே அது சுரந்துதோன்றும்; தோண்டல் இன்றேல் அது தோன்றலும் இன்றாம்; இத்தன்மை மக்கள் உளத்து மருவியிருக்கும் அறிவுக்கும் கற்றலுக்கும் ஒத்திருத்தலால் அஃது இங்கு ஒப்பாய் நின்றது. இஃது எடுத்துக் காட்டு உவமையாம்.

இடைவிடாது பன்னாளும் நுண்ணிய நூல்களைக் கற்றல் வேண்டும் என்பது கருத்து.

சிலநாட் பழகிற் சிலவும் பலியா
பலநாட் பழகிற் பலிக்கும் என்க. (இலக்கணக்கொத்து).

தான் கற்ற நூலினளவே ஒருவனுக்கு நுண்அறிவு உண்டாகுமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நக்கீரர் பால் உணரப்படும்.

## கதை

புலவர் திலகராய் விளங்கியிருந்த நக்கீரர் இறைவனோடு வாதித்தபின்னர்த் தந்நிலைமையை யுணர்ந்தார். நெடுநாண்கொண்டார். அகத்தியமுனிவரை அணுகியிருந்து அரிய நூல்களையெல்லாம் தெளியக்கற்றார். அதனால் அறிவு மிகுந்தார். அதன்பின் தமது

முன்னைய அறிவின் சிறுமையை முன்னியிரங்கினார். தொட்ட அளவுக் கேற்ப நீர் ஊறுவதுபோலக் கற்ற அளவுக் கேற்பவே மக்கட்கு அறிவு மிகும் என்பதை இவர் உணர்ந்து மகிழ்ந்தார். உலகமும் இவர்பால் உணர்ந்து தெளிந்தது. (விரிவைத் திருவிளையாடலில் உணர்க.)

கற்றகீரனும் பின்புதான் முன்செய்த கவிகள்
முற்றுமாய்ந்துசொல் வழுக்களும் வழாநிலை முடிபும்
உற்றுநோக்கினன் அறிவின்றி முழுதொருங் குணர்ந்தோன்
சொற்றபாடலிற் பொருள்வழுச் சொல்லினேன் என்று.

மறையின் அந்தமும் தொடாததாள் நிலந்தொடவந்த
நிறைபரஞ்சுடர் நிராமய நிருத்தற்குப் பிழைத்தேன்
சிறிய கேள்வியோர் கழியவுஞ் செருக்குடை யோரென்
றறிஞர் கூறிய பழஞ்சொலென் னளவிற்றே யம்ம.

இவை, கீரனார் கற்றுத்தெளிந்த பின் தாம் முன் பெற்றிருந்த அறிவின் குறைவை நினைந்து கவன்று கூறியன. கற்ற அளவுக்கே அறிவு ஊறும் என்பதை இவர் கண்டு தெளிந்தமை இவற்றால் காணப்படும்.

கற்ற அளவுக்கேற்பவே மக்கட்கு அறிவு வளரும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

397 சென்றவிட மெல்லாம் சிறந்தேன் குமரகுரு
குன்றாச்சீர் பெற்றார் குமரேசா—நின்றவிடம்
யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு. (எ)

இ—ள்.

குமரேசா! தாம் சென்ற இடமெல்லாம் சிறந்து விளங்கிக் குமரகுருபரர் ஏன் பெரும்புகழ் பெற்றார் எனின், கற்றவருக்கு யாதானும் நாடு ஆம்; யாதானும் ஊராம்; இங்ஙனமாகவும் ஒருவன் சாந்துணையும் கல்லாத ஆறு என் என்க.

ஆல் இரண்டும் அசைகளாய் நின்றன.

யாது ஆனும்—எந்த நாடு ஆயினும். ஆயினும் என்பது இதில் ஆனும் என நின்றது. சாம் துணையும்—சாகும் அளவும். வறிதே கழிக்கும் ஒழியும் என்னாது இழிவை உம்மை விளக்கி நின்றது. கல்லாத ஆறு—கல்லாது கழிவது: ஒழுக்கம், வழி, என்பவற்றை உணர்த்திவரும் ஆறு என்னுஞ் சொல் இங்குச் செலவின்மேல் நின்றது.

மேல், கற்ற அளவிற்றாக அறிவு ஊறும் என்றார்; அதனால் வரும் பயன் யாது என்பார்க்கு இஃது அருளியதென்க.

கற்றவர்க்கு எந்நாடும் தந்நாடாம்; எவ்வூரும் தம் ஊராம் இப்படியிருக்கவும் தான் இறக்கும் அளவும் ஒருவன் கல்லாது கழிகின்றது என் கருதியோ என்பதாம்.

சாகும்பொழுது ஒன்று கற்றாலும் அத்துணையும் பின்பு அது நன்றாகும் ஆதலால் சாந்துணையும் என்றார். அடுத்த கவியில் இஃது இனிது விளங்கும்.

கல்வியே உயிர்க்கு உற்ற துணை; அது கண்ணினுஞ் சிறந்தது; அதனையுடையவரே உயர்ந்தோர்; என உணர்த்திய உரைகளை உணராது ஒழியினும், கற்றார் எய்தும் மாட்சியைக் காட்சியால் கண்டறிந்தும் தான் சாதும்வரையும் கல்லாது நின்ற ஒருவனைக்கண்டு அவனது கழிவுக்கு அடிகள் இரங்கியதாக இதனைக் கருதிக்கொள்க.

கற்றவன் சென்ற இடமெல்லாம் சிறந்து விளங்கிப் பொருளும் பூசனையும் அங்குத் தகவோடு பெறுவான் என்பார் அவனுக்கு "யாதானும் நாடாம் ஊராம்" என்றார்.

எந்த நாடாயினும் கற்றவனுக்கு அது சொந்த நாடேயாகும் என்பது கருத்து.

இவ்வுண்மை குமரகுருபரர்பால் உணரப்படும்.

கதை.

குமரகுருபரர் என்பவர் இற்றைக்கு முந்நூறு வருடங்கட்குமுன்னர்ப் பாண்டி நாட்டிலே ஸ்ரீவைகுண்டம் என்னும் திருநகரிலே வேளாளர் குலத்திலே சண்முகசிகாமணிப்பிள்ளை யென்பவருக்குப் பிள்ளையாய்த் தோன்றினார். தாய் பெயர் சிவகாமியம்மை. இவர், பிறந்து ஐந்து வயது வரையும் ஒன்றும் பேசாமல் ஊமையாயிருந்தார். பெற்றோர் வருந்தி இவரை அழைத்துக்கொண்டு திருச்செந்தூரை யடைந்து எம்பெருமான் திருமுன் உய்த்து ஊமை நீங்க அருள்புரியுமாறு தவம்புரிந்திருந்தார். பெருமான் அருளால் அது விரைவில் நீங்கக் குருபரர் பேசுந்திறமை பெற்றார். பெரும் புலமையுடையவராய்ப் பரமன் புகழைக் கலிவெண்பாவால் பாடித் துதித்தார். அது கந்தர் கலிவெண்பா என்று இதுபொழுது வழங்கப்படும். செந்திற்பெருமான் திருவருள் பெற்றுப் புலவர் பெருமானாகிய இவர் பருவமெய்திய பின்னர்ப் பல இடங்கட்குஞ் சென்று தமது புலமையால் பெரும் புகழ்கொண்டார். மதுரையையடைந்து மீனாக்ஷியம்மைமீது பிள்ளைத்தமிழ் என்று ஒரு பிரபந்தம் செய்தார். பிரபந்தம்—பாமாலை. அங்கு அரசுபுரிந்திருந்த திருமலை நாயக்கர் என்பவர், இவரது மதிநலத்தையும் கவிநலத்தையும் கேள்வியுற்று இவரை மகிழ்ந்துகொண்டு போய்ப் பல வரிசைகள் செய்தார். பிள்ளைத்தமிழின் தெள்ளிய நயங்களைச் சொல்லக்கேட்டு அரசன் பெருமகிழ்வெய்திக் கரி பரி முதலிய பலவிருதுகளுதவி ஓர் அழகிய மணிமாலையையும் இவர் கழுத்திலிட்டான். அங்கிருந்து பெருஞ் சிறப்புடன் எழுந்து தருமபுரத்தை அடைந்து மாசிலாமணிதேசிகர் என்னும் பெரியாரை வணங்கி அவருள்பெற்றுச் சிதம்பரமுதலிய பல தலங்கட்கும் சென்று எங்கும் பெருஞ் சிறப்படைந்து முடிவில் காசியையடைந்தார். அங்கிருந்த மகம்மதிய அரசனையுங்கண்டு தமது கல்வித்திறத்தால் தன வயப்படுத்தினார். அவன் விரும்பியாங்கு அவன் தாய்மொழியாகிய இந்துஸ்தானையும் கலைத்தாய் அருளால் புலப்படத்தெளிந்தார். இவரது புலமையை வியந்து ஒரு பெருநிலப் பகுதியை இவருக்கு உரிமையாக அவ் அரசன் தந்

தான். அதில் அழகிய மடங்களும் ஆலயங்களும் அமைத்துத் தாம் பெற்ற பொருள் முழுதும் அவற்றைப் பேணவிடுத்தார். அவை இன்றும் இவர் பெயரால் நின்று விளங்குகின்றன. கந்தர் கலிவெண்பா, நீதிநெறி விளக்கம், மதுரைக் கலம்பகம் முதலாகப் பல நூல்கள் இவரால் செய்யப்பட்டுள்ளன. கற்றவருக்கு யாதானும் நாடாம் யாதானும் ஊராம் என்பதை உலகறிய உணர்த்தி இவர் உண்மையினுறைந்தார். (விரிவை இவர் சரிதையிற்காண்க.)

மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையோன்—மன்னர்க்குத்
தன்தேசம் அல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்
சென்றவிடம் எல்லாம் சிறப்பு. (ஔவை.)

ஆற்றவுங் கற்றார் அறிவுடையார் அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை—அந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம் ஆயினால்
ஆற்றுணா வேண்டுவ தில். (நான்மணிக் கடிகை.)

கற்றோர் சென்ற இடமெல்லாம் சிறப்படைவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

398 பற்றிரளு முன்கவிகள் பாடினார் சம்பந்தர்
குற்றமற என்னே குமரேசா—உற்ற
ஒருமைக்கட் டான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து. (அ)

இ—ள்.

குமரேசா! பால் அருந்தும் பருவத்திலேயே கல்வியில் வல்லுநராகிச் சம்பந்தர் ஏன் மேலான கவிகளைப்பாடினார் எனின், ஒருமைக்கண் தான் கற்ற கல்வி, ஒருவற்கு எழுமையும் ஏமாப்பு உடைத்து என்க.

பல் திரளுமுன்—பற்கள் முழுதும் நன்றாய் முளைக்கு முன்னரே: இது சம்பந்தரது பாலப் பருவத்தைக்குறித்து நின்றது.

ஒருமைக்கண்—ஒருபிறப்பில். ஒருவற்கு—ஒருவனுக்கு. எழுமையும்—எழுபிறப்பினும்; உம்மை முற்றும்மை.

இறுமாப்பு, செம்மாப்பு என்பனபோல் ஏமாப்பு என்பது ஒரு தொழிற்பெயர். இது களித்தல், காத்தல், உதவுதல், என்பவற்றை உணர்த்திவரும். ஒரு பிறப்பின்கண்ணே தான் கற்ற கல்வியானது ஒருவனுக்கு எழு பிறப்பினும் உதவியாய் நிற்கும் என்பதாம்.

கல்வியானது உயிருடன்கலந்துநின்று அதுபுக்குழி எல்லாம் புகுந்து சென்று அறிவைப் பெருக்கி எல்லா நலங்களையும் அதற்கு எய்துவிக்குமாதலால் ஒருமையில் கற்ற கல்வி எழுமையினும் ஒருவனுக்கு ஏமாப்பு ஆம் என்றார்.

சென்ற இடமெல்லாம் சிறப்பைத் தருகின்ற கல்வியைத் தான் இறக்கும்வரையும் ஒருவன் கல்லாதிருப்பது என்ன கருதியோ? என்று மேல்இரங்கிக்கூறினார்; அதனை நோக்கி முதிர்ந்து தளர்ந்து இறந்து படநிற்கும மூப்புப்பருவத்தில் கற்றதனால் ஒருவனுக்குப் பயன் என்னை? என்பார்க்கு இஃதுணர்த்திய தென்க. இறக்குங் காலத்திலேனும் ஒருவன் ஓர் எழுத்தைக் கற்று இறப்பின் பிற்பிறப்பில் அதனை வருந்தாது அறிந்துகொள்ளுமாறு அவ்வளவில் அக்கல்வி அவனுக்கு உதவிபுரியும் என்பது கருத்து. கல்வி, செல்வமுதலிய நலங்களுள் ஏதேனும் ஒன்று வியக்கத்தக்கவிதமாக ஒருவன்பால் அமைந்திருப்பின் விட்டகுறை வந்து, அவனைத்தொட்டு நின்றது என்று உலகம்அதனை வியந்து வழங்குதல் காண்க.

முற்பிறப்பில் ஒருவன் கற்றகல்வி, பிற்பிறப்பில் எல்லா நூல்களையும் இளமையிலேயே எளிதில் உணருமாறு அவனுக்கு உதவிசெய்யும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திருஞான சம்பந்தர்பால் உணரப்படும்.

## கதை.

திருஞான சம்பந்த சுவாமிகள் என்பவர் சோழநாட்டிலே சீகாழி என்னும் பதியிலே வேதியர் குலத்திலே சிவபாத இருதயர் என்பவர்க்குப் புதல்வராய் அவதரித்தார். தாய்பெயர் பகவதியார். இவர், சமய குரவர்கள் நால்வருள் ஒருவர். இவரது காலம் இற்றைக்கு ஆயிரத்து முந்நூறு வருடங்கட்கு முன் என்பர். சிலர் நாலாயிரம் ஆண்டுகட்கு முன்னர் என்பர். இவர் ஓதாதுணர்ந்த உத்தமஉணர்வினர். இறைவனருளால் இளமையிலேயே இவர் புலமை நிரம்பினர். பன்னூலும் பயின்றுதெளிந்த பெரும் புலவர்களும் வியந்து நோக்கத்தக்க சிறந்த கவிகளை ஐந்துவயது நிரப்புமுன்னரே இவர் விரைந்து பாடினர். ஏகபாதம் மாலை மாற்று முதலிய மிறைக்கவிகளும், யாழ்முறி முதலிய இசைவிகற்பங்களும் எளிதில்பாடி இசைதிசை பரப்பினர். பொய்யில் புலவராகிய இவர் பரமனைநோக்கிப்பாடிய பாடல்களெல்லாம் தேவாரம் என்று போற்றப்படுகின்றன. தே—தெய்வம். ஆரம்—மாலை. அழகிய பூமாலை போலக்கடவுளுக்கு விரும்பிய பாமாலை ஆதலால் அது தேவாரம் என நின்றது. இவரது பாடல்களை ஆயுந்தோறும் இன்பம் ஊறும். பல அற்புதங்களையும் அவை நிகழ்த்தியுள்ளன.

புனலில் ஏடெதிர் போகெனப் போகுமே
  புத்தனார் தலை தத்தெனத் தத்துமே
கனலில் ஏடிடப் பச்சென் றிருக்குமே
  கதவம் மாமறைக் காட்டில் அடைக்குமே
பனையில் ஆண்பனை பெண்பனை யாக்குமே
  பழைய என்புபொற் பாவைய தாக்குமே
சினவரா விடம் தீரெனத் தீருமே
  செய்ய சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே.

இதனால் இவரது அருட் புலமை இனிது புலனும். இத்தகையபெரும் புலமையைப் பற்றிரண்டு முன்முளைத்துப் பாலருந்துங் காலத்தே இவர் பெற்றமைக்குக் காரணம் முற்பிறப்பில் சற்றிருந்தமையேயாம் என்று அனைவரும் கருதித்துதித்தார். ஒருவனுக்கண் தான் கற்றகல்வி ஒருவனுக்கு எழுமையும் ஏமாப்பு

டைத்து என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து தெளிந்தது. விரிவைப் பெரியபுராணத்தில் காண்க.

ஒரு பிறப்பில் கற்ற கல்வி எழுபிறப்பினும் ஒருவனுக்கு உதவும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

399 கண்டாரெல் லாமகிழக் கண்டுகண்டு கல்வியின்பம்
கொண்டாரேன் ஔவை குமரேசா—தண்டாமல்
தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். (௯)

இ.—ள்.

குமரேசா! தமது கல்வியை வியந்து எல்லாரும் மகிழ்வதைக் கண்டு ஔவையார் ஏன் அதனையே விரும்பினர் எனின், தாம் இன்புறுவது உலகு இன்புறக்கண்டு கற்றறிந்தார் அதனையே காமுறுவர் என்க.

கற்றறிந்தார் கண்டு காமுறுவர் என்று கூட்டுக.

இன்புறுவது என்றது கல்வியை. இன்புறுதற்கு ஏதுவாயது என்னும் இயைபான் வந்தது.

உலகு இன்புறக்கண்டு—உலகத்தார் இன்புறுவதை நோக்கி.

கல்வியும் செல்வமும் மக்கள் இன்புறுதற்கு ஏதுவாயவை; அவற்றுள் செல்வத்தை ஒருவன் சேர்ந்தின்புறுங்கால் பிறரும் இன்புறார்: கல்வியை ஒருவன் கலந்து இன்புறுங்கால் எல்லாரும் இன்புற்று அவனை ஏத்திப்போற்றுகின்றார். இவ் ஒப்பருஞ் சிறப்பைக் கற்றறிந்தவர் உற்றறிந்து தாம் பெற்றதையே பற்றி நிற்பர் என்பார் "காமுறுவர்" என்றார்.

தாம் இன்புறுதற்கு ஏதுவாகிய கல்விக்கு உலகமும் இன்புறுதலை நோக்கிக் கற்றறிந்தார் மேலும் மேலும் அதனையே விரும்புவர் என்பதாம்.

ஆயுந்தோறும் பேசுந்தோறும் தனக்கு இன்பந் தருகின்ற கல்விக்குப் பொருளுங்கொடுத்துத் தன்னைப்புகழ்ந்து போற்றி

உலகத்தார் மகிழ்ந்து வருதலால் அவ்அரிய சிறப்பைக்கண்டுகற்றறிந்தவர் அதனையே கருதி நிற்பார் என்பது கருத்து. அறிந்தார் காமுறுவர் என்றதனால் அறிவின்றிக்கற்றவர் அதனை அவ்வளவாக விரும்பார் என்பது குறிப்பு. கற்றலும் அறிதலும் வேறு வேறுதலை உற்றுநோக்குக.

கரும்புதின்னக் கூலியுங்கொடுத்தது போலத்தாம் இன்புறுங்கல்விக்குப் பிறரும் இன்புற்றுத் தன்னைப் போற்றுந்தன்மை வேறெதையடைந்தாலும்எய்தாதென்பதை மெய்யாகவுணர்ந்தவர் கல்வியையன்றி வேறொன்றையுங் காமுறார் என்பதாம்.

மெய்யாகக் கற்றறிந்தவர் செல்வம் அதிகாரம் முதலிய எதையும் விரும்பாமல் கல்வியையே காமுற்று நிற்கின்றார்களே இதற்குக் காரணம் என்னை? என்பார்க்கு இது காட்டியதென்க.

கற்றறிந்தவர் வேறெதையும் விரும்பாமல் கல்வி ஒன்றையே கருதி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஔவையார் பால் அறியப்படும்.

## கதை.

ஔவையார் என்பவர் கல்வியிற் சிறந்த ஓர் முதிய தவமகள். நமது நாயனாரோடு உடன் பிறந்தவர். இவர்பெயரை அறியாதார் மிகவும் அரியர். அதிகமான் தந்த அரிய நெல்லிக்கனியை உண்டு பல நூறு ஆண்டுகளாக இவ்வுலகில் நிலவியிருந்தவர். கம்பர் ஒட்டக்கூத்தர் முதலிய கவிச் சிங்கங்களெல்லாம் அஞ்சுமாறு திரிந்த கிழச்சிங்கமானவர். இவரது பிறப்பு, இருப்பு காலம் கோலம் முதலியவற்றைக் குறித்து நிகழுகின்ற வாதங்கள் பல இவற்றானே இவரது புலமையும் பெருமையும் இனிது புலனும். உயிர்கள் இன்புற உலகமெங்கும் இவர் உலாவித்திரிந்தார். அரிய பொருள்களை இனிய மொழிகளில் பொதிந்து எவருந் தெளியுமாறு எளிய நடையில் உணர்த்தும் அளியினையுடையவர், இவரது கவிகள் பாலர் மனத்தும் பதிந்து நிற்கும். பண்டிதர் உள்ளத்தும் பல பொருள்கள் பயந்து நிற்கும். எவரிடமும்

இவர் இனிய பண்பினர். பிறர்செய்த நன்றி சிறிதாயினும் அதனை என்றும் மறவார்.

பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே. என்று தனக்கு நெல்லிக்கனி தந்த அதிகமான் புகழை நிலைபெற வாழ்த்தினர். "கோடி பொன்பெறும்படியாக ஒரு பாடல் பாடுமின்" என்று பாண்டியன் புலவர்களை நோக்கி ஒரு காலத்தில் கூறினன். அவர் பாட ஆற்றுது கூடி மயங்கினர். ஒளவையார் அறிந்து அங்குப் புகுந்தார். அடி ஒன்று கோடி பொன் பெறும்படி பாடுவேன் என்று அரசன் முன் நின்றார். அவன் பாடுக என்றான்.

மதியாதார் வாசல் மதித்தொருகால் சென்று
மிதியாமை கோடி பெறும்
உண்ணீர் உண்ணீரென்று உபசரியார் தம்மனையில்
உண்ணாமை கோடி பெறும்
கோடிகொடுத்தும் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுதல் கோடி பெறும்
கோடான கோடி கொடுப்பினும் தன்னுடைநாக்
கோடாமைகோடி பெறும் என்றார்.

அரசன் கேட்டு அகமிக வியந்தான். பெறும் பெறும் என்று அனைவரும் புகழ்ந்தார். இவர் எங்குஞ்சென்று இன் கவிமாரி பெய்து எதையும் விரும்பாமல் இனிது திரிந்தார். இவரது கல்வியை விரும்பிப் பிறர் பொன்பல தரினுங்கொள்ளாது ஒருபொழுது உணவு மாத்திரமே உண்டு உவந்து சென்றார். தாம் இன்புற்றிருந்த கல்வி யொன்றையே இவர் காமுற்று நின்றார். கற்றறிந்தார் விரும்புவது கல்வியே என்பதை உலகம் இவர்பால் கண்டது. விரிவைப் புலவர் புராணத்தில் காண்க.

கல்வி ஒன்றையே கற்றவர் விரும்புவர் எனபது இதனல் கூறப்பட்டது.

400 கண்டசெல்வம் பேணுமல் காடவர்கோன் கல்வியையேன்
கொண்டுமகிழ்ந்தார் குமரேசா—நண்டாத
கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

இ—ள்.

குமரேசா! தன்பால் இருந்த அரச செல்வத்தையும் மதியாமல் கல்வி யொன்றையே பெரிதாகக் கருதிக் காடவர் கோன் ஏன் மகிழ்ந்தார் எனின், ஒருவற்கு, கேடு இல் விழுச் செல்வம் கல்வியே; மற்றையவை மாடு அல்ல என்க.

ஒருவற்கு—ஒருவனுக்கு. கேடு இல்—அழிவு இல்லாத. விழுச் செல்வம்—சிறந்தசெல்வம். விழுமம் என்னும் உரிச்சொல் ஈறு குறைந்து இதில் விழு என நின்றது. விழுமம்—சிறப்பு. மாடு என்பது இடம், பக்கம், எருது, செல்வம் என்பவற்றை உணர்த்திவரும், இங்கு அது செல்வத்தைக் குறித்து நின்றது. மற்றையவை என்றது பொன் மணி முதலிய செல்வங்களை.

ஒருவனுக்கு அழிவில்லாத சிறந்த செல்வம் கல்வியே; அஃதல்லாத பொன்னும், மணியும் முதலாய மற்றைச் செல்வங்களெல்லாம் செல்வம் அல்ல என்பதாம்.

கல்வியைக்கேடு இல்லாத விழுச்செல்வம் என்றது எவராலுங் கவரப்படாததாய், கொடுக்கக் கொடுக்கக் குறையாததாய், என்றும் அழியாததாய் எழுமையினும் ஏமாப்பு உடையதாய்த் தக்கார்கண்ணே தங்கிநிற்கும் தகவுநோக்கி என்க.

கள்வர் முதலியோரால் கவரப்படுதலும், கொடுத்தழிக் குறைதலும், ஏதாவது ஓர் ஏதுவால் இடையே கெடுதலும் இயல் பாக உடையதாய்ப் புல்லியர்கண்ணும் செல்வம் புலவி நிற்கும் ஆதலால் கேடு இன்மையும் பீடு உண்மையும் அதற்கு இலவாயின.

கல்வி உயிரோடு செல்லும் உயர்வினையுடையது. செல்வம் உடலோடு அழியும் இழிவினையுடையது. ஆதலால் இதனினும் அதனையே ஒருவன் ஈட்டவேண்டுமென்பது கருத்து.

கல்வி ஒன்றையே அழிவில்லாத செல்வமாக அறிவுடையார் கருதுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை காடவர் கோன்பால் காணப்படும்.

## கதை.

காடவர் கோன் என்பவர் ஒரு சிற்றரசர். இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர்த் தொண்டை நாட்டிலே காஞ்சிபுரத்திலே பல்லவர் குலத்திலே இவர் தோன்றியிருந்தார். மதிநலமும் மன நலமும் ஒரு நிலையாக அமையப்பெற்றவர். அரசுபுரிவதில் ஆர்வங் குறைந்து அரிய நூல்களையே இவர் ஆய்ந்து வந்தார். புலவர் சிலருடன் கலந்து கலைகள் பலவுந் தெளிந்தார். நூலுணர்வினரோடு கூடி நுகர்வுடைமை விண்ணுலகே ஒக்கும் என்னும் உண்மையை இவர் உணர்ந்து மகிழ்ந்தார். தம் கோல் நயத்தை வியவாமல் நூல் நயத்தையே இவர் நயந்து நுகர்ந்தார்.

பாரோர் தொழுதும் வெண்குடைக்கீழ்ப் பாரெல்லாம் ஆண்ட
பெருமையரசர் செல்வத்தும் உம்மை—கடியிலங்கு
தோடேந்து கொன்றையந் தார்ச் சோதிக்குத் தொண்டுபட்டு
ஓடேந்தி உண்பதூஉம். என்று பாடி அரச செல்வத்தை வெறுத்துத் தமது அணிகலர் விட்டு அகன்று பரமன் எழுந்தருளியிருக்கும் தலங்கள்தோறும் சென்று பல கவிகள் பாடினர். அவை பதினோராந் திருமுறையிலுள்ளன. அழிவும, இழிவும், அல்லலும் உடையதென்று செல்வத்தைக் கருதினர். கல்வியே உயிர்க்கு உற்ற துணை என்று தம் கருத்துட் கொண்டார். இவர் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவராக வைத்து ஐயடிகள் காடவர் கோன் என்று போற்றப்பட்டார். ஒருவனுக்கு கேடு இல்லாத விழுச்செல்வம் கல்வியே. மற்றையவை மாடு அல்லஎன்பதை இவர் பாடி உணர்த்தினர். (விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.)

கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி. (ஔவை)
வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பின் அரசர்செறின் வவ்வார்

எச்சம் எனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற. (1)

இம்மை பயக்குமால் ஈயக்குறை வின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை உலகத்தும் யாங்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து. (2)

(நாலடியார்)

கைப்பொருள் கொடுத்துங்கற்றல் கற்றபின் கண்ணுமாகும்
மெய்ப்பொருள் விளக்கும் நெஞ்சில் மெலிவிற்கோர் துணையுமாகும்
பொய்ப்பொருள் பிறகள் பொன்னும் புகழுமாந் துணிவியாக்கும்
இப்பொருள் எய்தினின்றீர் இறங்குவதென்னை யென்றான்.

(சீவகசிந்தாமணி)

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியும் கைகொடுக்கும் கல்வியி னூஉங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை. (நீதிநெறிவிளக்கம்)

கல்வியே ஒருவனுக்கு அழிவில்லாத செல்வம் என்பது இதனால் கூறப்பட்டது.

(இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.)

வழுவறக் கற்றலும் அதன்படி நெறி நின்று ஒழுகலுமே ஒருவன் பிறவிக்குப் பயன். எண்ணும் எழுத்தும் மக்கட்குக் கண்ணேயாகும். கற்றவரே கண்களையுடையவர். கல்லாதவர் குருடேயாவர். உலகம் இன்புறவொழுகலே புலவர்கள் தொழிலாம். எவ்வகையாயினும் கற்றவரே மேலோர். கல்லாதவர் கடையரேயாவர். நூலளவுக்குத் தக்கவாறே மக்கட்கு நுண்ணறிவுண்டாகும். கற்றவன் சென்ற இடமெல்லாம் சிறந்து விளங்குவான். தான் ஒரு பிறப்பில் கற்ற கல்வி ஒருவனுக்கு எழுபிறப்பினும் உதவும். கல்வி ஒன்றையே கற்றவர் விரும்புவார். கல்வியே ஒருவனுக்கு அழிவில்லாத விழுமிய செல்வம்.

சஙு-வது கல்வி முற்றிற்று.

# ௪௧-ம் அதிகாரம் கல்லாமை.

அஃதாவது கற்றலைச்செய்யாமை. கண்ணினும், சிறந்ததாய், எழுமையினும் உதவுவதாய், அழிவு இல்லாததாய், விழுமிய செல்வமாய, கல்வியின் மாட்சியை மேல் உணர்த்தினர், அஃது இல்லாமையால் எய்தும் இழிபினைத்தெளிய விளக்கி அதன் சிறப்பை இன்னும் நன்கு உணர்த்தவேண்டியே யிதனையும் இசைத்தார். மேலது உடன்பாட்டிலமைந்தும் இஃது எதிர்மறையில் நின்றும் கல்வியின்பெருமையை உணர்த்துகின்றதாதலான் அதன் பின் இது வைக்கப்பட்டது.

---

401 வாட்டமில்லாப் புத்தர் மணிவா சகரோடு
கோட்டிகொண்டேன் தாழ்ந்தார் குமரேசா—கோட்டில்
அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். (க)

இ—ள்.

குமரேசா! சாகன் முதலிய புத்தகுருக்கள் அவையின் கண்வந்து மாணிக்கவாசகரோடு வாதாடி ஏன் நவையுற்றார் எனின், அரங்கு இன்றி வட்டு ஆடி அற்றே நிரம்பிய நூல் இன்றிக் கோட்டி கொளல் என்க.

கோட்டி கொளல், ஆடியற்றே என்று கூட்டுக. ஒழுங்குபடா என்பதை உவமை உணர்த்தி நின்றது.

அரங்கு—இடம், அறை, ஆற்றிடைக்குறை. ஈண்டு அது, வட்டு ஆடுதற்கு வகுத்த தானத்தை உணர்த்தி நின்றது.

வட்டு—ஒருவகை விளையாட்டுக் கருவி. உருளுமாறு வட்டமாயமைக்கப்பட்டிருத்தலான் அஃது இப்பெயர்பெற்றது.

கோட்டி என்பது கூட்டம் இழிவு குலைவு என்பவற்றைக் குறித்து வரும். அஃது ஆகு பெயராய் நின்று அக்கூட்டத்தில் உரைக்குஞ் சொல்லைக் குறித்தது.

கோட்டி கொளல்—சொல்லைச் சொல்லுதல்.

கட்டளை அன்ன வட்டரங்கு இழைத்துக், கல்லாச்சிறாஅர் நெல்லி வட்டாடும் வில்லேருழவர் வெம்முனைச் சீறூர் என நற்றிணையினும்; வட்டுஞ் சூதும் வம்பக் கோட்டியும் என மணிமேகலையினும்; பொருளில் வறுங்கோட்டி என நாலடியாரினும்; வெள்ளைக் கோட்டி எனச் சிலப்பதிகாரத்தும் வருவன ஈண்டுக் கருதற்குரியன.

அறிவு நிரம்புதற்கு ஏதுவாகிய நூல்களைக் கல்லாமல் ஒருவன் அவையின்கண்ணே ஒன்றைச் சொல்லுதல் அறைகளை அமைக்காமல் வட்டு ஆடினாற்போலும் என்பதாம்.

கல்லா ஒருவன் அறிஞர் அவையில் ஒன்றைச் சொல்லுதல் அறிவில்லாத சிறுவர் அறைகளை அமைக்காமல் வட்டு ஆடுதலை ஒக்குமென்றார், எள்ளிநகைத்து அஃது இழிக்கப்படுதல் கருதி.

நிலத்தில் சில அறைகளை வரைந்துகொண்டு அவற்றில் வட்டை உருட்டிச் சிறியவர் விளையாடுவர் அவ்வட்டாடலுக்கு அரங்கு இன்றியமையாததுபோல அவையின்கண் உரையாடலுக்கு நூலறிவு இன்றியமையாதென்க. இதனை எடுத்துக்காட்டியது கல்லார் புன்மை காண்டற்கென்க.

நிரம்பிய நூலறிவு இல்லாதவர் அவையின்கண் ஒன்றைச் சொல்லின் அதனால் அவர்க்கு இழிவே உண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாகன் சாதகன் முதலிய புத்தர்பால் காணப்படும்.

## கதை.

இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர்ச் சோழநாட்டிலே புத்தர் சிலர் வாழ்ந்திருந்தனர். அவர்கட்கும் தில்லைவாழந்தணர்கட்கும் இடையே பகைமை மூண்டது. தில்லையரை வெல்ல விரும்பினார். அதற்காகத் தம் இனத்தவர் பலரை இலங்கையிலிருந்து வரவழைத்தார். வந்தவர்கள் இருந்தவரோடு

கலந்து தில்லை வாழ்வோருக்குத் தம் கருத்தைக் குறித்து வரும்படி ஒரு தூதனை உய்த்தார். சாகன், சாதகன் என்பவர் அவர்க்குத் தலைவராவார். சொற்போரேனும் மற்போரேனும் இயைந்ததைச் செய்ய அவர் துணிந்திருந்தார். தூதன் சென்றான், உற்றதை உரைத்தான். வேதியராதலால் சொற் போர் செய்யவே துணிந்து இசைந்தார். புத்தர் அறிந்து புகுந்தார் அங்கு. இவர் நிரம்பிய நூலறிவு இல்லாதவர்; ஆயினும் வாதம் புரிவதில் மிகவும் வல்லவர். புத்தர் நெருங்க வேதியர் சித்தங் கலங்கினர். அவ்வமையம் இறைவனருளால் மாணிக்கவாசகர் ஆங்கு எழுந்தருளிவந்தார். வேதியர் வணங்கி வேண்டி வாதவூரரைத் தமக்கு முதல்வராக நிறுத்தினர். அடிகளும் அமைந்து நின்றார். வாதம நிகழ்ந்தது. சொல்லும் பொருளும் ஒவ்வாமல் புத்தர் வலுரையாடினர். உங்கள் சிவன் பெண்ணாசை பிடித்தவன்; தன் உடலிற் பாதி மனைவிக்குக் கொடுத்தவன்; பெரும் பித்தன்; தன்னைக் கொன்றுவிடுமே என்று உணராமல் நஞ்சையுங் குடித்தவன்; என இவ்வாறே பல பொருளில் மொழிகளைப் பொருளறியாமலே புகன்றார். மணி வாசகர் புன்னகை செய்து அவர் வினாவுக்கெல்லாம விடையாக ஓர் ஊமைப் பெண்ணையே முன்னிலையாக்கி உணர்த்தினர். அவர் மறுத்துரைக்க ஆற்றாது மாறி அகன்றார். வாசகம் வல்லார் முன்னின்று யாவர் வாய் திறக்க வல்லார் என்று அனைவரும் அடிகளை வாழ்த்தி வணங்கினர். அவர் வினாவியவெல்லாம் ஒருநெறிப்படாமையால் உடைந்துபோயின. நிரம்பிய நூல் இன்றிக் கோட்டிகொளல் அரங்கு இன்றி வட்டு ஆடியதை ஒக்கும் என்பதை உலகம் அவர்பால் உணர்ந்தது. (விரிவைத் திருவாதவூர்ப் புராணத்தில் காண்க.)

கற்பன ஊழற்றார் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றாத்தைவாய் அங்காத்தல்—மற்றுந்தம்
வல்லுரு வஞ்சன்மின் என்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல். (நீதிநெறிவிளக்கம்.)

கல்லா ஒருவன் அவையின் கண் ஒன்றையுஞ் சொல்லலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

402 காளிதா சன்பாட்டைக் கல்லாதாள் கொண்டுசொல்லிக்
கோளிழிவேன் கொண்டாள் குமரேசா—தாளுடனே
கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று. (௨.)

இ—ள்.

குமரேசா! லீலாவதி என்பவள் காளிதாசனது பாட்டைக் கொண்டுபோய் அவையின் கண்ணே சொல்லி ஏன் அதனுல் பழி கொண்டாள் எனின், கல்லாதான் ஒன்றைச் சொல்லக் காமுறுதல் முலை இரண்டும் இல்லாதாள் பெண் காமுற்று அற்று என்க.

சொல் காமுறுதல்—சொல்லை விரும்புதல்.

பெண் காமுற்று அற்று—பெண்மையை விரும்பினுற்போலும். இரண்டு என்னும் வரையறையுடையது ஆதலால் தொகையும் உம்மையும் முலையைத் தொடர்ந்து நின்றன.

இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும். (தொல்காப்பியம்.)

முற்றும் இன்மையை உம்மை உணர்த்திநின்றது.

மேல், கல்லாதவன் சொல்லாடல் அரங்கு இன்றி வட்டு ஆடலை ஒக்கும் என்றார்; இதில், அவனது அவா முலையில்லாதவளது அவாவை நிகர்க்கும் என்றார்.

கல்லாத ஒருவன் சொல்லை விரும்புதல் முலை இரண்டும் இல்லாத ஒருத்தி பெண்மையை அவாவுதல் போலும் என்பதாம்.

முலையில்லாதாள் என்றது பெண்மையும் ஆண்மையும் இழந்தபேடியை. போகவுறுப்பு முதலிய நலங்களெல்லாம் நன்கு அமைந்த மெல்லியலார்போல அப்புல்லியளும் விரும்பின் அது பழிப்புக்கே இடமாகுமாதலால், கல்லா ஒருவன் நல்லார் அவையில் வல்லான்போலச் சொல்ல விரும்புதலுக்கு அஃது உவமையாய் நின்றது.

இனி முலை சிறிதும் இல்லாத பேதை நல்ல மங்கைபோலக் காமுறுதல், என்று கொண்டு கல்லாத ஒருவன் கற்றவன்போலச் சொல்ல விரும்புதலுக்கு ஒப்பாக்கினும் அமையும்.

கலையில்லாதவனை முலையிலலாதவளுக்கு உவமை காட்டியது அவனது நிலைமை நோக்க என்க.

தான் கல்லாதிருந்தும் கற்றவன்போல நல்லார் முன்னே ஒருவன் சொல்ல விரும்பின் அதனால் அவனுக்கு இழிவே உண்டாகும் என்பது கருத்து. இவ்வுண்மை லீலாவதிபால் உணரப்படும்.

## கதை.

லீலாவதி என்பவள் விதர்ப்ப நாட்டிலே போகபுரி என்னும் நகரில் இருந்தவள். மிக்க சாகசமுள்ளவள். கவிச் சிங்கமாகிய காளிதாசனுக்கு இவள் காமக்கிழத்தியா யிருந்தாள். சிலர் செய்த புல்லிய சூழ்ச்சியால் போசனுக்கும், காளிதாசனுக்கும் இடையே சிறிது முறிவு நிகழ்ந்தது. அதனால் அரசனைவிட்டுப் பிரிந்து எவரும் அறியாவண்ணம் இவளிடம் வந்து அவர் இனிதமர்ந்திருந்தார். அரசன் அவரைப் பிரிந்திருக்கலாற்றாது சில ஒற்றர்களை அழைத்து அவரைக் கண்டு வரும்படி கட்டளையிட்டான். அவருஞ் சென்று தேடி எங்குங் காணாது வந்து இரங்கி மொழிந்தார். அரசன் கவன்றான். அவ்வமையம் அங்கோர் அழகிய மங்கையைக் கண்டான். அவளது மலர் முகத்தில் விளங்கிய இரு விழிகளின் மதர்வை மகிழ்ந்தான். உடனே அவரை அறியுமாறு ஓர் அரிய உபாயத்தை நாடி "ஒரு பூவின் மேல் இரண்டு பூக்கள் பூத்தன" என்று அவள் முகத்தையே குறித்து வடமொழியில் ஒரு சமுத்தியை ஆக்கி இதன் கருத்தைப் பொருத்தி முடிப்பவர்க்கு இருபதினாயிரம் பொன் பரிசில் தரப்படும் என்று பறையறைவித்தான். ஒருவர் தான் கருதிய தொன்றை ஒரு தொடரில் அமைத்துக் குறையும் பாடுக என்று புலவர்க்குத் தருவது சமுத்தி என்க. அதனை லீலாவதி கேட்டாள். ஒருநாள் இரவு காளிதாசன்பால் இதனை ஓதினாள். உடனே அவர்

"பெண்ணே! உன் முகமாகிய தாமரையில் இரு விழிகளாகிய நீலங்கள் மலர்ந்துள்ளன" பார் என்றார். மங்கை மகிழ்ந்தாள். பரிசிலை நோக்கினாள். உறங்கும்போதே புலவரது உயிரைப் போக்கினாள். மன்னன் முன் வந்தாள். குறித்த சமுத்தியைத் தானே முடித்ததாகக் கூறி நின்றாள். அதில் பெண்ணை முன்னிலையாக்கி யுள்ளதையும், கவியின் இயல்பையும் நுண்ணுணர்வு மிக்க அவ் அண்ணல் கண்டு "புலவர்திலகத்தைக் கொலைபுரிந்தாயோ" என்று கூறித் துடித்தார். அவள் உள்ளம் பதைத்தாள். அதன்பின் அரசன் அவள் இல்லம் புகுந்து உண்மை தெரிந்தான். இறைவனருளால் அவரும் பிழைத்தார். அவள் இழிவும் பழியும் எய்தி நொந்தாள். கல்லாத ஒருவன் கற்றவனைப் போல அவையின் கண்ணே ஒன்றைச் சொல்லின் அதனால் அவனுக்கு இழிவே உண்டாம் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்தது. விரிவைப் போசசரிதையில் காண்க.

வெற்றியுறு கோளரிப்பல் வீழ்ந்தசில கொண்டுநாய்
கொற்றப்புலிமுன் குரைப்பொக்குங் குற்றமறக்
கற்றவர்முன் முன்னூல் உரைசில கற்றார்போல்
மற்றவர் கேட்டுரைக்கும் மாண்பு. (இன்னிசை இருநூறு)

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. (ஔவையார்.)

கல்லாதவன் கற்றவன்போலச் சொல்லாடவிரும்பின் அஃது எல்லார்க்கும் நகையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

403 கற்றும் மதுரகவி கல்லார்போல் சொல்லாடிக்
குற்றமுற்றார் என்னே குமரேசா—முற்றவே
கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

இ—ள்.

குமரேசா! கற்றிருந்தும் காளமேகப் புலவர்முன் தருக்கிச் சொல்லியதால் ஏன் மதுரகவியார் குற்றமுற்றார் எனின், கல்லாதவரும் நனி நல்லர்; கற்றார் முன் சொல்லாது இருக்கப் பெறின் என்க.

உம்மை அவர் நல்வர் அன்மையை நாட்டி நின்றது.
நனி என்னும் உரிச்சொல் மிகுதியை உணர்த்தும்.
உறு தவ நனி என வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப. (தொல்காப்பியம்.)

மேல், கல்லாதவன் கற்றார் முன் அறிந்தவன் போலத் துணிந்து ஒன்றையுஞ்சொல்லலாகாது, சொல்லின் பழிப்பு உண்டாம் என்றார்; சொல்லாதிருப்பின் அதனால் வரும் பயன் என்னை என்பார்க்கு இஃது உணர்த்தியதென்க.

கற்றவர் முன்னே ஒன்றையுந் துணிந்து சொல்லாமல் அடங்கியிருப்பாராயின் கல்லாதவரும் மிக நல்லவராவர் என்பதாம்.

தம்மினும் நன்றாகக் கற்றவர் முன்னே அங்ஙனங் கல்லாதவர் அடக்கமில்லாமல் ஏதேனுஞ் சொல்லுவாராயின் அதனால் அவர் சிறுமைப்படுவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அதிமதுர கவிராயர் பால் உணரப்படும்.

கதை

அதிமதுர கவிராயர் என்பவர் இற்றைக்கு நானூறு ஆண்டுகட்கு முன்னர்ச் சோழ நாட்டிலே இருந்தார். இலக்கிய நூல்களில் நல்ல பயிற்சியுடையவர். கவி பாடுவதில் மிக வல்லுநர். செறிவு இலதாயினும் இவரது கவிகள் அதிக சுவையுடையன. அதனால் இவர் அதி மதுர கவி எனப் பெற்றார். இவர் திருமலைராயன் என்னும் சிற்றரசனை அணுகி மிக்க வரிசைகள் பெற்று அவர் அவையின் கண்ணே தங்கியிருந்தார். பலபேர் இவரை அணுகிப் பயின்றார். அரசனது நட்பு முதலியவற்றால் கவிரா

யர் பெருஞ் செருக்குற்றூர். அணுகியிருந்தவர்களும் கல்வி நிரம்பு முன்னரே எல்லாந் தெரிந்தவராக இறுமாப்படைந்தார். இப் பொல்லாப் புன்மை நாளும் பொங்கி எழுந்தது. கவிகுல திலகராகிய காளமேகப் புலவர் ஒருநாள் அங்கு வந்தார். அரசவையில் புகுந்தார். மதுரகவியின் மாணவரெல்லாரும் இவரை மதியாது நகைத்தார். இது காட்டுச் சரக்கின் கூட்டமா? என்று புலவர் புன்னகையோடு தம்புலமையைக்காட்டினூர். காட்டுச் சரக்கு என்றது அதிமதுரத்தை. இதனைக்கேட்டார் கவிராயர். அவர் முதலாக அனைவரும் வாதாடத் துணிந்தார். தம் மனம்போனவாறு முரணுன பல கேள்விகள் கேட்டார். அவையெல்லாவற்றிற்கும் விரைவாகவும், அழகாகவும் இவர் எதிர் விடை தந்தார். அவ்வமையம் இவர் பாடியுள்ள கவிகளெல்லாம் மிக வியக்கத்தக்கன. இங்ஙனம் வெற்றிபெற்றிருந்தும கவிராயர் போதனையால் அரசனும் இவரை மதியாதிருந்தான். அதனால் இவர்க்கு வெகுளி மூண்டது.

கோளர் இருக்குமூர் கோள்கரவு கற்றவூர்
காளைகளாய் நின்று கதறுமூர்—நாளையே
விண்மாரி யற்று வெளுத்து மிகக்கறுத்து
மண்மாரி பெய்கஇந்த வான். என்று வசை ஒன்று பாடி

மனங் கொதித்து அகன்றூர். அதனால் அவ்வூர் மழை வளங் குன்றி இழிநிலையடைந்தது. தம் நிலைமையை அறிந்து புலவர் முன் ஒன்றுஞ் சொல்லாமலிருந்த சில கல்லாதவரும் அங்கு நல்லவராயினூர். தம்மை வியந்து தருக்கிச் சொன்னவர் நன்மையிலராய் நலிந்து தொலைந்தார். கல்லாதவராயினும் கற்றூர் முன் சொல்லாடாமல் அடங்கியிருப்பாராயின் அவர் மிக நல்லராவர் என்பதை அவர் அன்று நாட்டி நின்றூர். (விரிவைப் புலவர் சரிதையில் காண்க.)

கல்லாதவர் ஒன்றுஞ் சொல்லாமல் அவையில் அடங்கியிருப்பின் அஃது அவர்க்கு நலமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

404 ஒள்ளியனாய் வந்துநின்றும் ஒருவில்லா நந்தனையேன்
கொள்ளவில்லை ஔவை குமரேசா—உள்ளுணர்ந்து
கல்லாதான் ஒட்பங் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார். (ச)

இ.—ள்.

குமரேசா! அறிவுடையனாய் வந்து நின்றும் நந்தனை ஏன் ஒரு பொருளாக ஔவையார் மதிக்கவில்லையெனின், கல்லாதான் ஒட்பம் கழிய நனறு ஆயினும் அறிவுடையார் கொள்ளார் என்க. ஒட்பம் ஒள்ளிய தன்மை; அஃதாவது அறிவுடைமை.

கழிய நன்று—மிகவும் நன்று: கழிய என்றது கழி என்னும் உரிபடியாகப் பிறந்த வினையெச்சம். அது மிகுதியை உணர்த்தும்.

கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும். (தொல்காப்பியம்.)

கல்லாதானுக்கு அறிவு உண்டாதல் அரிது என்பது ஆயினும் என்பதால் அறியப்படும்.

கல்லாதவனது அறிவு மிக நன்றாயிருப்பினும் அறிவுடையார் அதனை உயர்வாகக் கருதார் என்பதாம்.

கல்லாதவன் இயல்பாகவே நுண்மதியுடையனாயினும் கற்றவர் அவனை ஒரு பொருளாக மதியார் என்பது கருத்து. இவ்வுண்மை நந்தன்பால் அறியப்படும்.

## கதை.

நந்தன் என்பவன் சோழநாட்டிலிருந்த ஒரு பெருஞ் செல்வன். தனது மதி நலத்தால் குறுநில மன்னனாகி இவன் பெருமை பெற்றிருந்தான். நளினமான சொல்லால் எவரையுந் தன் வசஞ் செய்ய வல்லவன். பேருபகாரிபோல் வெளியே பிதற்றுவான். உள்ளே பேராசையுடையவன். நய வஞ்சகன். ஒரு காசும் உதவான். கல்லாதவனாயிருந்தும் நல்லவன்போல் நடித்து மிக்க செல்வாக்கை எய்தியிருந்தான். ஔவை ஒருநாள்

அவன் நகர் வழி வந்தாள். இவன் கண்டான். "அரிய பிறவியைப் பெற்றால் அதனால் பெரியகாரியங்களைச் செய்யவேண்டு"மென்று வாயாற் கூறி ஒண்மையுடையனாய் ஒடுங்கி வந்து ஔவை முன் நின்று தன் மீது ஒரு கவி பாட வேண்டினான். அம்மை நோக்கி அவன் தன்மையை ஓர்ந்தார்.

மூவர் கோவையும் மூவிளங் கோவையும்
பாடிய என்றன் பனுவல் வாயால்
என்னையும் பாடுக என்றனிர் நும்மை
எங்ஙனம் பாடுவேன்
புலவர் வாய்ச்சொற் புலம்பலுக் கிரங்கீர்
அவிச்சுவை அல்லது தமிழ்ச்சுவை தெருளீர்
உடர் உண்ணீர் கொடைஇர் கொள்ளீர்
ஓவாக் கானத்து உயர்மரம் பழுத்த
துவ்வாக் கனியிற் றோன்றிய நீரே.

என்று அவன் புன்மை தோன்றக் கூறினார். மிக்க அறிவுடையவன்போல் வந்துநின்றும் அவனிடம் கல்வியில்லாமையால் அவனைக் கழித்துச் சென்றார். கல்லாதவன் ஒட்பம் கழிய நன்று ஆயினும் அறிவுடையார் அதனை ஒரு பொருளாகக் கொள்ளார் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது.

பன்றிக் குருளை படாஅம்போர்த்து நிற்பினும்
வென்றிக் களிறெனை விள்ளுப யாவரே
நன்றுகல் லார்கவி பாடினும் நாவல்லோர்
என்றும் மதிப்ப திலை.

கல்லாதான் மதியை அறிவுடையார் ஒரு பொருளாக மதியார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

405 கன்றிநின்ற சம்பந்தன் காளமே கங்காணக்
குன்றிநின்றான் என்னே குமரேசா—நன்றாகக்
கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். (ரு)

இ—ள்.

குமரேசா! கல்வியுடையேன் என்று தன்னை மதித்துக் களித்துநின்ற சம்பந்த ஆண்டான் காளமேகத்தைக் கண்டவுடனே ஏன் இழிந்து நொந்தான் எனின், கல்லா ஒருவன் தகைமை கற்றவன் தலைப்பெய்து சொல்லாடச் சோர்வுபடும் என்க.

தகைமை சோர்வுபடும் என்று காண்க.

தகைமை—தகுதியுடையனுந் தன்மை.

தலைப்பெய்து—கண்டு: ஒருவரைஒருவர் பார்த்துஎன்றபடி. பெய்து ஆட என்பதற்கு ஏற்ற எழுவாய் இதில் வருவிக்கப்பட்டது. தலைப்பெய்தலும், சொல்லாடலும் இருவர்க்கும் பொது.

மேல், கல்லாதவனது ஒண்மையை உண்மையறிவுடையார் ஒரு பொருளாகக் கொள்ளார் என்றார்; இதில் தன்னை அறிவுடையனுக அவன் மதித்திருக்கும் மதிப்புக் கற்ற ஒருவனைக் கண்டவுடனேயே அழிந்துவிடும் என்றார்.

கல்லாத ஒருவன் அறிவுடையனுகத் தன்னை மதித்திருக்கும் மதிப்பு கற்ற ஒருவன்கண்டு உரையாடியவுடனே தொலைந்து போம் என்பதாம்.

வழுவறக் கல்லாதவனது இழி தகைமை துகளறக் கற்றார் முன் சொல்லாடிய உடனே வெளியாகிவிடுமாதலால் அவன் தகைமை சோர்வுபடும் என்க.

நூல்களை நன்றாகக் கல்லாதவன் அவற்றை நன்கு கற்ற ஒருவனைக் கண்டவுடனேயே குன்றிவிடுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. (இவ் வுண்மை சம்பந்த ஆண்டான் பால் உணரப்படும்.

கதை.

சம்பந்த ஆண்டான் என்பவன் இற்றைக்கு நானூறு ஆண்டு கட்கு முன்னர்த் திருவண்ணாமலையிலே யிருந்தவன். ஆதிசைவ மரபினன். எவரிடமும் வாதே புரிபவன். சிறிது கற்றவனாயி னும் பெருஞ்செருக்குற்றவன். பொதுமகளிரிடமே தனது பொழுதுமுழுதும் போக்கும் போக்கினையுடையவன். கண்டவ ரோடெல்லாம் இடக்குரையாடி ஒற்றழிந்த கல்வியையே உவந்து திரிந்தும் தன்னைச்சிறந்த அறிவுடையனாக நினைந்திருந்தான். ஒருநாள் அங்குக்காளமேகப் புலவர் வந்தார். இவனைக்கண்டார் அவ்வமையம் மயிர்வினைஞன் இவனுக்குச் சவரஞ்செய்துகொண் டிருந்தான். தன் இடல்பின்படி இவன் எளனமாக அவரை நோக் கிமன்னு என்று எடுத்து மலுக்கு என்று முடித்து என்மீது ஒரு கவிபாடும் என்றான். உடனே அவர்,

> மன்னுதிரு வண்ணா மலைச்சம்பந் தாண்டாற்குப்
> பன்னு தலைச்சவரம் பண்ணுவதேன்—பின்னின்
> இளைத்த இடை மாதர் இவன்குடுமி பற்றி
> வளைத்திழுத்துக் குட்டாமலுக்கு. என்றார்.

தன்னை அவமதித்துப்பாடியதை இவன் அறிந்து சினந்தான். தரு க்கிஎழுந்து தருக்கஞ்செய்தான். வெள்ளைமேகம் என்னை என் செய்யும் என்றான். அவர், "உன் வாயிலேறி உள்ளேசாயும்" என்றார். புலவருரைத்த பொருளுரையை நோக்கி அனைவரும் நகைத்தார். ஆண்டான்சோர்ந்து அடங்கிச்சென்றான். கல்லாத வன் தகைமை கற்றவன் கண்டு சொல்லாடச் சோர்வுபடும் என் பதை அன்று எல்லாரும் உணர்ந்தார். (விரிவைப் புலவர் சரிதை யில் காண்க.)

> காணாமல் வேணதெல்லாம் கத்தலாம் கற்றார்முன்
> கோணாமல் வாய்திறக்கக் கூடாதே—நாணாமல்
> பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்கால்
> கீச்சுக்கீச் சென்னுங் கிளி. (ஔவை.)

எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்
எழுத்தறிவார் காணின் இலையாம்—எழுத்தறிவார்
ஆயுங்கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை. (நன்னெறி)

கல்லாதவனது பெருமிதம் கற்றவனைக் கண்டவுடனேயே கெடும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

406 உண்டென்னும் மாத்திரமே ஓங்கினர் சேகர்முன்
கொண்டிலர்சீர் என்னே குமரேசா—மண்டி
உளரென்னும் மாத்திரையர் அல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர். (சு)

இ—ள்.

குமரேசா! கல்லாத சேகர் வலியுடையராயிருந்தும் ஒன்றுக்கும் உதவாதவராகி ஏன் ஒருங்கே ஒழிந்தார் எனின், கல்லாதவர், உளர் என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக் களர் அனையர் என்க.

மாத்திரையர்—அளவினர், மாத்திரை—அளவு.

பயவாக்களர்—ஒன்றும் விளையாத உவர்நிலம்.

கல்லாதவர் களர் அனையர் என்றது பிறர்க்கு ஒரு பயனும் இன்றித் தாமும் இழிக்கப்படுதல் கருதி என்க.

கல்லாதவர் உளர் என்னும் அளவினரே அல்லாமல் ஒன்றும் விளையாத களர்நிலத்தையே அவர் ஒப்பர் என்பதாம்.

தோற்றத்தானும், போதல் வருதல் முதலிய செயல்களானும் இருக்கின்றார்களென்று குறிக்கப்படுகின்ற அவ்வளவே அன்றிக்கல்லாதவரால் வேறு எவ்விதத்தும் பயன் இல்லை என்பார் அவரை "உளர் என்னும் மாத்திரையர்" என்றார். பிறந்திருந்தாலும் கல்லாதவர் பிறவாதவரே யாவர் என்பதுகருத்து.

கல்லாதவர் ஒன்றுக்கும் உதவாதவராதலால் அவர் பிறப்பு இழிக்கப்படும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சேகர்பால் உணரப்படும்.

## கதை.

கீசகர் என்பவர் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர் மச்சநாட்டிலே தோன்றியிருந்தார். இவர் அந்நாட்டு வேந்தனாகிய விராடனுக்கு மைத்துனராவர். முற்பிறப்பில் இவர் காலகேயர் என்னும் காந்தருவ மரபினர். ஆண்டுச்செய்த தீவினையால் ஈண் டுச்சேர்ந்து தோன்றினார். இவர் நூற்றுமூவர். உருவிலும் திண் மையிலும் ஒத்த நிகரானவர். கல்லாத மதியினர். பொல்லாத செயலினர் அரசனது தானைக்குத் தலைவரென்று பாவனைகாட்டித் தம் ஊனையே ஓம்பினார். செருக்கும் சினமும் பெருக்கித் திரிந் தார். தம் முன்னோனாகிய கீசகன் துரோபதையை விழைந்து உயிர் இழந்தமையை இவர் தெளிந்தார். தம் அண்ணன் அழி வுக்கு அவ்வண்ண மகளே காரணம் என்று எண்ணிச் சினந்தார். அப்பத்தினியைப் பிடித்துப் படுகொலை செய்யத் துணிந்தார். ஒருங்கே திரண்டார். இரவு புகுந்து அவள் படுத்திருந்த மஞ்சத் தோடு எடுத்துச் சென்று ஒரு தனியிடத்தை யடைந்தார். பாஞ் சாலி உணர்ந்து பதைத்துக்கூவினார். வீமன் விரைந்தோடி வந்து அனைவரையும் இறந்துகநூறி அம்மெல்லியலைக்கொண்டு போய்த்தம் இல்லில் விடுத்தான். நூற்றுமூவரும் ஒருங்கே நொந்துயிர் துறந்தார். கல்லாதவராகிய இவர் ஒருவருக்கும் ஒரு பயனும் இல்லாதவராயிருந்தமையால் இவர் இறந்தமைக்காக எவ ரும் இரங்கிலர். கல்லாதவர் பயவாக்களர் அனையர்; அவர் இருத்த லும் இறத்தலும் ஒன்றேயாம் என்பதை உலகம் இவர்பால் உண ர்ந்தது. விரிவைப் பாரதத்தில் காண்க.

குலமிகவுடையர் எழின்மிக வுடையார் குறைவில் செல் வமும் மிகவுடையர்
நலமிகவுடையர் என்னினும் கல்விஞானம் அற்பமும் இலாதவரை
வலமிகு கிகிரிச் செங்கையாய் முருக்கின் மணமிலா மலரென மதிப்பேன்
சலமிகு புவியில் என்றனன் வாகைத் தார்புனை தாரை மா வல்லான். (பாரதம்)

இது, தன் உள்ளக்கிடக்கையைக் கண்ணனிடம் உணர்த்தும் கால் நகுலன் உரைத்தது.

கல்லாதவர் களர்நிலம் போலப் பயனற்றவர் என்பது இத னால் கூறப்பட்டது.

407 நுண்ணுதமிழ் கல்லாரைத் தேர்புலஞ்சேர் சண்பகமேன்
கொள்ளா திகழ்ந்தாள் குமரேசா—கொள்ளுகின்ற
நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழினலம்
மண்மாண் புனைபாவை யற்று. (எ)

இ—ள்.

குமரேசா! எழிலுடையராயிருந்தும் கல்லாதவரை ஏன் சண்பகம் கொள்ளாது இகழ்ந்தாள் எனின், நுண்மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம் மண்மாண் புனைபாவை அற்று என்க.

புலம் இல்லான் புனைபாவை அற்றுஎன இயைத்துக்காண்க.

நுண்மாண் நுழைபுலம் என்றது நுணுகிச் சிறந்து பலநூல் களிலும் நுழைந்துசென்ற அறிவை.

புலம்—அறிவு. நுண்மையும் மாண்பும் நுழைவும் புலத்தை அடுத்துநின்று அதன்நலத்தை விளக்கின. நுண்புலம், மாண் புலம், நுழைபுலம் எனத்தனித்தனி அமைந்துங் காண்க. நுண்பு லம் உடையார் சிலர் மாண்பும் நுழைவும் இலராயும், இருத்தலால் இம்மூன்றும்ஒருங்குடையவரே பெரும்புலமையை அடைவர்என்க.

எழில் என்றது இளமையை; செழுமை குன்றாது மேலும் மேலும் கிளர்ந்து எழுதலால் உடலின் இளமை எழில்என நின்றது.

நுணுகிச்சிறந்து பல நூல்களினும் நுழைந்து பாய்ந்த அறிவு இல்லானது இளமையும் அழகும் மண்ணால் மாண்புறப்புனைந்த பாவையின்து எழிலும் அழகும் போலும் என்பதாம்.

மேல் கல்லாதவனது பிறப்புப் பயனற்றது என்றார்; இதில் அவனுடைய அழகும் இளமையும் இழிவுறும் என்றார். உருவ மும் வனப்பும் உடையதாய் உள்ளீடு இல்லாமையால் புனைபாவை புலம் இல்லானுக்கு உவமையாய் நின்றது.

அழகும் இளமையும் உடையவனாயினும் கல்வியில்லாதவனை நல்லார் விரும்பார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சண்பகம்பால் உணரப்படும்.

## கதை.

சண்பகம் என்பவள் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர்ச் சோழநாட்டிலே உறையூரிலே மரகதவடிவு என்பவருக்குப் புதல்வியாய்த் தோன்றினாள். இவள் பேரழகுடையவள். பல நூல்களையும் இளமையிலேயே பயின்று புலமை நிரம்பினாள். அழகும் அறிவும் ஒருங்கே அமைந்து இளமையோடு திகழ்ந்தாள். இவளை மணந்து மகிழ அனைவரும் விழைந்தார். அரசர் முதலாக அனைவரும் வந்தார். சிறந்த கல்வியுடையவனையே கலந்து மகிழ இவள் காதலித்திருந்தாள். தன்னை விழைந்து வந்தவரது நுழைபுலமுடைமையை இவள் உணர விரும்பி அவர்பால் சில உரைகளையாடினாள். அவற்றிற்கு அவர் எதிர் கூறலாற்றாது இரங்கி நாணினார். இவளது புலமையை அஞ்சி அனைவரும் அகன்றார். எழிலும் அழகுமுடையராய்த் தன்னை நயந்து வந்த அரசிளங்குமரர்களையும் இவள் நயவாதிகழ்ந்தாள். பின்பு சங்கப்புலவர்களைச் சார்ந்து பல நூல்களையும் வழுவறக்கற்று நுண்ணிய நுழைபுலம் எய்திய அண்ணல் ஒருவனையே தனக்கு அருந்துணைவனாக்கொண்டு இவள் பொருந்தி வாழ்ந்தாள். நுண்மாண் நுழைபுலம் இல்லாரது எழில் நலங்களை நல்லார் ஒரு பொருளாகக் கொள்ளார் என்பதை இவள் உணர்த்தி நின்றாள். விரிவைப் புலவர் புராணத்தும் தமிழுலகத்தும் காண்க.

மண்ணிற்செய் பாவைமீது வயங்குபொற்பூச்சோ தண்பூங்
கண்ணியை மாற்றிற்சூடுங் காட்சியோ பழம்பாண்டத்திற்
பண்ணிய கோலமோநற் பண்பொடு ஞானங் கல்வி
புண்ணியம் ஏதும் இல்லான் பூண்டபேரெழிலுடம்பே.
(நீதி நூல்.)

குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையாற்
கல்வி யழகே அழகு. (நாலடியார்)

மனைக்குப்பாழ் வாணுதல் இன்மை தான்செல்லும்
திசைக்குப்பாழ் நட்டோரை இன்மை—இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை இன்மை தனக்குப்பாழ்
கற்றறி வில்லா உடம்பு (நானமணிக்கடிகை.)

கல்லாதவனது உடலழகு பாழேயாம் என்பது இதனால் கூறப்பட்டது.



408 கற்றகணி கண்ணனின்றான் கானன் திருவடைந்தும்
குற்றமுற்றான் என்னே குமரேசா—உற்றறிந்த
நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கட் பட்ட திரு. (அ)

இ—ள்.

குமரேசா! கணிகண்ணன் வறுமையுற்றும் பெருமை பெற்றான்; கானன் என் திருவெய்தி நின்றும் சிறுமை எய்தினன் எனின், நல்லார்கட்பட்ட வறுமையினும் கல்லார்கட்பட்ட திரு இன்னாது என்க.

நல்லார் என்றது கற்றாரை: கல்வியாகிய நலத்தையுடையவர் என்க. நல்லார்கண் பட்ட—கற்றாரிடத்தில் பொருந்திய. கண்—ஏழனுருபு. வறுமையின்—நல்குரவினும். இன் உருபு இதில் எல்லைப்பொருளது.

மேல், கல்லாதவனது அழகும் உருவமும் பாழாம் என்றார் இதில் அவன் திருவுடையனாயினும் இழிவே அடைவன் என்றார்.

கற்றார் மாட்டு நின்ற வறுமையினும் கல்லார் மாட்டு நின்ற செல்வம் இன்னாது என்பதாம்.

வறுமை, இன்னாமைக்கு ஏதுவாயது; செல்வம் இனிமைக்கு ஏதுவாயது; இவை சார்ந்தாரது இயல்பால் தம் இயல்பு திரிந்த வென்க. இனிய திருவும் கல்லார்கட்படின் இன்னாதாம் என்ற இதனால் அவரது தீண்டற்கரிய புன்மை தெளியப்படும். கல்லாத மூடரைக் காணவும் ஆகாதே என்றது திருமந்திரம். கற்றவர் வறுயுறினும் அறிவொழுக்கங்களில் குன்றாமல் நின்று பெருமையடைவர்; கல்லாதவர் செல்வம் எய்தினும் அதனால் செருக்கும்,

னமும் கொண்டு சிறுமையேயடைவர்; என்பது கருத்து.

கல்வியில்லாதவர் எவ்வளவு செல்வமுடையராயினும் கற்றவர்போல் மேன்மையை அடையார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கணிகண்ணன் கண்ணும் கானன்பாலும் உணரப்படும்.

## கதை.

கணிகண்ணன் என்பவர் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர்க் காஞ்சிபுரத்திலே யிருந்தவர். ஓர் எளிய குடும்பத்தில் பிறந்தவர். பல நூல்களையும் வழுவறக் கற்றவர். திருமழிசையாழ்வாரது திருவருள் பெற்றவர். ஒரு பொருளையும் விரும்பாமல் உளப்பற்று அற்றவர். கல்வி ஒன்றையே கருதி யிருந்தவர். பொருள் தேடும் நெறியிற் புகாமல் வறுமையுற்றிருந்த இவரை ஒருநாள் அந்நகர்வேந்தன்கண்டான். அவன் பெயர் கானன். நன்கு கல்லாதவன். தான் பெற்றிருந்த திருவையே நினைந்து பெருமிதங்கொண்டவன். தன்னினுஞ் சிறந்தார் எவரும் இல்லை என்று செல்வக்களிப்பால் சிறியார் சிலருடன் சேர்ந்து வந்த அவன் இவரைத் தெருவில் மறித்து "என்மீது ஒரு கவி பாடுக" என்றான். நெறியுடையவராதலால் அச் சிறு செயலுக்கு இவர் இசைந்திலர். நரனைப்பாடுதல் நரகத்தைக் கூடுதல் ஒக்கும் எனப் பொருள்பட "நர கவனம் நரக வனம்" என்று கூறிக் கணிகண்ணர் அவனைக்கணியாது சென்றார். அரசன் சினந்து "இந்நகரைவிட்டு ஓடிப்போ" என்று அவரை வெருட்டினான். அவரும் இதோ போகின்றேன் என்று அதனைவிட்டு அகன்றுபோனார். நிகழ்ந்ததைத் திருமழிசையாழ்வார் உணர்ந்தார். அவரைப் பிரிந்திருக்கலாற்றாது தாமும் போகத் துணிந்தார்.

கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவனும்யான் செல்கின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்.

என்றுகூறிப் பின்னேசென்றார். திருமாலும் மலர்மகளோடு அவர் பின்னே சென்றார். அதனால் அந்நகரமெங்கும் பெருந்து

யர் பரந்தது. அனைவரும் அல்லல் அடைந்தார். அரசனை இகழ்ந்தார். அரசன் அஞ்சி ஓடிக் கணிகண்ணர் அடியில் விழ்ந்தான். செய்த பிழையைப் பொறுத்துத் திரும்பிவருமாறு விரும்பிவேண்டினன். கண்ணர் ஆழ்வாரிடங்கூறி அருளுடன் மீண்டார். மாலே வணங்கி ஆழ்வாரும் வந்தார். மாலும் யாதும் மகிழ்ந்து பின் வந்து முன் இருந்த இடத்தே பொருந்தியிருந்தார். ஊரும் நாடும் உவகை பூத்தன. செல்வக்களிப்பால் தான் செய்ததற்கு இரங்கி அன்றுமுதல் கற்றாரைப்போற்றி அரசன் கல்வியை விரும்பினன். வறுமையுற்றிருந்தும் கணிகண்ணர் கல்வியுடைமையால் பெருமைபெற்றார். அரசன் திருவுற்றிருந்தும் கல்லாமையால் சிறுமையுற்றான். நல்லார்கட்பட்ட வறுமையினும் கல்லார்கட்பட்ட திருஇன்னாது என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. (விரிவைக் கச்சிமான்மியத்தில் காண்க.)

கல்லாதவன் திருவுடையனாயினும் அதனால் இழிவே அடைவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

409 ஏத்துபுகழ் மன்னரினும் ஏற்றமுற்றார் கற்றஒட்டக்
கூத்தனார் என்னே குமரேசா—ஏத்துகின்ற
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு. (கூ)

இ—ள்.

குமரேசா! உயர்ந்த அரசரினும் ஒட்டக்கூத்தர் ஏன் சிறந்து விளங்கினார் எனின், மேல் பிறந்தாராயினும் கல்லாதார், கீழ்ப்பிறந்தும் கற்றார் அனைத்துப் பாடு இலர் என்க.

மேல் கீழ் என்பன குலத்தின் உயர்வையும் தாழ்வையுங் குறித்து நின்றன. உம்மை இரண்டனுள் முன்னது உயர்வு சிறப்பு பின்னது இழிவுசிறப்பு. பாடு—பெருமை.

மேல், கல்லாதவர் திருவுடையராயினும் வறியரினும் அவர் சிறியரே என்றார்; இதில், அவர் உயர்ந்த பிறப்பினராயினும் இழிந்தவரேயாவர் என்றார்.

கல்லாதவர் உயர்ந்த சாதியில் பிறந்தாராயினும் தாழ்ந்த சாதியில் பிறந்திருந்தும், கற்றவர்போலப் பெருமையைப் பெற்றிலர் என்பதாம்.

உயர்ந்த குலத்திற் பிறந்தவராயினும் கல்லாதவர் இழிந்தவரேயாவர் என்பது கருத்து. திருவும், குலமும், தன்னையுடையானை உயர்த்தவல்லனவே எனினும் கல்வி இல்வழி அவற்றால் பயன் இல்லை என்பது குறிப்பு. அவை உடலோடு ஒழிவன; இஃது என்றும் உயிரோடு நின்று திகழும் என்க.

நாற்பால் குலத்தின் மேற்பால் ஒருவன் கற்றிலனாயிற் கீழிருப்பவனே எனவும், எக்குடிப்பிறப்பினும் யாவரேயாயினும், அக்குடியில் கற்றோரை வருகஎன்பர் எனவும்,கல்லா ஒருவன் குலநலம் பேசுதல் நெல்லினுட் பிறந்த பதராகும்மே எனவும், கீழ்ப்பால் ஒருவன் கற்பின் மேற்பால் ஒருவனும் அவன் கட்படுமே எனவும், வருவன ஈண்டு கருதற்குரியன.

எக்குலத்திற் பிறந்தவனாயினும் கற்றவனே எவரினுஞ் சிறந்தவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஒட்டக்கூத்தர்பால் உணரப்படும்.

## கதை

ஒட்டக்கூத்தர் என்பவர் இற்றைக்கு ஆயிர ஆண்டுகட்கு முன்னர்ச் சோழநாட்டிலே உறையூரிலே கைக்கோளர் என்னுஞ் செங்குந்தர் மரபிலே பிறந்தார். சிலர் பாண்டி நாட்டிலே மலரி என்னும் ஊரே இவர் பிறந்த இடம் என்பர். இவர் பல்வேறு வகைப்பட்ட நூல்களையெல்லாம் ஒருங்கே கற்ற பெரும் புலவர். கவிகள் பாடுவதில் மிகவும் வல்லவர். "கோவை உலா அந்தாதிக்கு ஒட்டக் கூத்தன்" என்று சுட்டிப் போற்றும் பட்டம் பெற்றவர். இவரது பெருமையை அறிந்து சோழமன்னன் இவரைத்தன்பால் அழைத்துவைத்து அன்புடன் போற்றினான். இவரும் அரசன் அவையில் ஒரு திலகமாக விளங்கிப் புலமையை நடத்தினார். புன் கவிகளைப் பாடி வருகின்ற வன் கவிகளை இவர் பொறாதடக்கினார்.

குட்டுதற்கோ பிள்ளைப்பாண்டியனிங்கில்லை குறும்பியளவாக்காதை
க்குடைந்து தோண்டி
எட்டினமட்டறுப்பதற்கோவில்லியிலை யிரண்டொன்றுமுடிந்து
தலை இறங்கப்போட்டு
வெட்டுதற்கோ கவிஒட்டக்கூத்தன் இல்லைவிளையாட்டாக்கவிதனை
விரைந்துபாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத்துரைகளுண்டு தேசமெங்கும் புலவ
ரெனத் திரிகலாமே.

இது, பிற்காலத்துப் புலவரொருவர் தற்காலத்தின் இயல்பையு ணர்ந்து முற்காலத்தை நினைந்துகூறியது. இதனால் அக்காலத் தில் இவர் புலமையைப் போற்றிவந்த இயல்பு இனிது புலனும். தகாத பட்டங்களைத் தமக்குத் தாமே சூட்டிக்கொண்டு களித் துத் திரிந்த போலிப் புலவர்களெல்லாம் இவர் தலையெடுத்தவுட ன் ஒளித்து ஒடுங்கினர். குலோத்துங்க சோழனோடு உடன் வீற்றிருக்குங்கால் சிற்றரசர் சிலர் வந்து இருவருள் அரசன் யாவனோ என்று திகைத்து நின்றார். அதுபொழுது புலவர்,

"ஆடுங் கடைமணிநாவசையாமல் அகிலமெங்கும்
நீடுங் குடையைத் தரித்த பிரான்" என்று அரசனைச் சுட்
டிக் கூறிக்குறையும் முடிக்குமுன் "இந்த நீணிலத்தில்
பாடும் புலவர் புகழ் ஒட்டக் கூத்தன் பதாம் புயத்தைச்
சூடுங்குலோத்துங்க சோழனென்றே என்னைச் சொல்லுவரே".

என்று அரசன் சொல்லி முடித்தான். அரசர் முதல் யாவரும் வணங்கிப்போற்ற இவர் விளங்கியிருந்தமையை இது விளக்குதல் காண்க. மேற்பிறந்தாராயினும் கல்லாதவர்கற்றவர்போல மேன் மையை யடையார் என்பதை இவர் விளக்கி நின்றார். தக்கயாகப் பரணி, விக்கிரமசோழன்உலா, ஈட்டி எழுபது முதலிய பிரபந்தங் களும் இராமாயணத்தில் உத்தரகாண்டமும் இவர் பாடியுள்ளார். விரிவைப் புலவர் புராணத்தில் காண்க.

எத்தனை புலவரேமுன் இறைவனை வசஞ்செய்துற்றார்
அத்தனை பேருள்ளாரும் அருந்தமிழ் ஒட்டக்கூத்தன்
ஒத்தவர் முடிமேல் தம்தாள் உறவைத்ததில்லை யில்லை
இத்தனை அதிட்டம் அன்னோற் கிசைந்தமை வற்றந்தானே.

இஃது, இவரது பெருமையை வியந்து முருகதாசர் அருளியது. மேற் பிறந்தாராயினும் கல்லாதவர்க்குப் பெருமையில்லையென்பது இதனால் கூறப்பட்டது.

---

410 நூல்கற்ற ஐவர்போல் நூற்றுவர்சீர் கொண்டிலரேன்
மேல்பெற்றிருந்தும் குமரேசா—சால்பில்
விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர். (ய)

இ—ள்.

குமரேசா! நூல்களைக்கற்ற ஐவர்போல ஏன் நூற்றுவரும் மேன்மை பெற்றிலர் எனின், விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல் கற்றார் ஓடு ஏனையவர் என்க.

விலங்கு—மாடு, ஆடு முதலிய மிருகங்கள்.

ஐவர் தருமன் முதலானவர். நூற்றுவர் துரியோதனன் முதலியோர். இவைதொகைக்குறிப்பு. ஏனையவர் என்றது கல்லாதவரை

விலங்கு மக்கள் என உபமானத்தில் நிறுத்தியதற்கேற்ப கல்லார், கற்றார் என நிரலே நிறுத்தாது மாறி நிறுத்தியதால் இஃது எதிர்நிரல் நிறை என்க. மொழிகள் பொருளைக்கொள்ளும் விதங்கள் எட்டனுள் இதுவும் ஒன்று.

பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்
வேறு நிரல்நிறீஇ முறையினும் எதிரினும்
நேரும் பொருள்கோள் நிரல்நிறை நெறியே. (நன்னூல்)

மேல், உயர்ந்த குலத்தில் பிறந்திருந்தாலும் கல்வியில்லாதவர் இழிந்தவரே என்றார்; இதில் அவர் மக்களாய்ப் பிறந்திருப்பினும்மாக்களே யாவர் என்றார்.

மக்களோடு ஒப்பிட்டுப் பார்க்க மிருகங்கள் எவ்வளவு இழிவினை யுடையனவோ அவ்வளவு இழிவினை, மேலான நூல்களைக் கற்றாரோடு நோக்கக் கல்லாதவர் உடையர் என்பதாம்.

கற்றார்க்கும் கல்லார்க்கும் உள்ள வேற்றுமையை உணர்த்து தற்கு மக்களையும் விலங்கையும் ஒப்புக்காட்டியது உணர்வின் இயல்பை உணர என்க.

உண்ணல் உறங்கல் உறுதல் உழைத்தல்களையே செய்து விசேட உணர்வு ஒன்றும் இன்றி ஒங்கி ஒழிதலால் கல்லாதவரை விலங்கு என்றார். உருவத்தால் மனிதராயினும் கல்லாதவரை மிருகமென்றே கருதவேண்டும் என்பது கருத்து.

பெறுதற்கரிய பிறவியை ஒருவன் பெற்றாலும் கல்வியைப் பெறவில்லையானால் அவன் பிறப்பு மிக இழிக்கப்படும் என்பது குறிப்பு.

ஒத்த பிறப்பினராயினும் கல்லாதார், கற்றாரைப்போல உண்மையான உயர்வினை அடையார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தருமர் முதலிய ஐவர்பாலும் துரியோதனன் முதலிய நூற்றுவர் கண்ணும் அறியப்படும்.

## கதை

தருமன் முதலிய ஐவரும் துரியோதனன் முதலிய நூற்றுவரும் இளமையில் ஒருங்குசேர்ந்து கற்றுவருமாறு வீடுமர் செய்தார். முதலில் இவர்கட்குக் கிருபரே குருவாயிருந்து எழுத்து அறிவித்துப் பயிற்றிவந்தார். ஐவர் ஆர்வத்தோடு கற்றார். அவர் செல்வக்களிப்பால் வீணே திரிந்து வந்தார். நாள் பல கழிந்தபின் இவர்களது கல்வியறிவைக் காணவிரும்பி வீடுமர் முதலியோர் நாடிச்சூழ்ந்து இருதிறத்தாரையும் அழைத்து ஒரு சிறு தொகைப் பொருளைக்கொடுத்து இதற்கு வீடு நிறைந்த பண்டம் வாங்கி விரித்து வைம்மின் என்று பிரித்து விடுத்தார். நூற்றுவர் சென்றார், வைக்கோற் பொதியை வாங்கிச் செறித்துவைத்தார். ஐவர் சென்றார். குறித்தவீட்டை அடைந்து அலகிட்டுத் தூசுதுடைத்து வாசநீர் தெளித்துநறுவிய தூபம் கொளுத்தி அழகிய தீபங்களேற்றி அடைகாய் கனிகளை அமையவைத்து முதியோர் வரவை அன்போடு எதிர்பார்த்திருந்தார். விடுத்தவர் அடுத்துவந்து நூற்றுவர் இல்லை நோக்கினர். நுழையாது மீண்டார். பின் ஐவர் இல்லை அடைந்தார். அங்கு அகமகிழ்ந்து

அமர்ந்தினி திருந்தார். பிள்ளைகள் இயல்பைப் பேசித்தெளிந்தார். அதன்பின் துரோணர் வந்து படைக்கலம் பயிற்றுவித்தார். அதனையும் அவர் நன்கு கல்லாது கழித்தார். ஐவரேகற்றுத் தேர்ந்தார். அதனால் இவர் மிகப் புகழ்பெற்றார். அவர் பகைப்பழியுற்றார். இலக்கு நூல்கற்றாரோடு ஏனையவர் விலங்குகளேயாவர் என்பதை அவர் விளக்கினார். ஒரு நாள் துரோணர் அந் நூற்றுவரோடும் ஓர் நீர் நிலையையணுகி இறங்கி நீராடினார். அங்கோர் முதலை வந்து அவரைப்பற்றி உள்ளே ஈர்த்தது. ஆசிரியர் அலறினார். அம்மாணவர் ஒன்றுஞ்செய்யலாற்றாது கும்பலாய் நின்று கூக்குரலிட்டார். விசயன் ஓடிவந்து ஓர் பகழியை ஏவி அம்முதலையைத் துணித்தான். ஆசிரியர் பிழைத்து வெளியேவந்து விசயனைத் தழுவி அவன் இசையினைப் புகழ்ந்தார். கற்றாரது உயர்வையும் கல்லாதாரது இழிவையும் அனைவர்க்கும் அவர் அன்று காட்டி மொழிந்தார். விரிவைச்சபாபருவத்தில் காண்க.

கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினும் நூல்
வல்லான் ஒருவனையே மானுவரோ—அல்லாரும்
எண்ணிலா வான்மீன் இலகிடினும் வானகத்தோர்
வெண்ணிலா வாமோ விளம்பு. நீதிவெண்பா.

கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு—மெல்ல
இருப்பினும் நாயிருந் தற்றே இராதொன்
றுரைப்பினும் நாய்குரைத் தற்று. நாலடியார்.

துங்க யானைமுன் படுத்தினும் படுத்துக சுடர்மணிப்
பகுவாய வெஞ்
சிங்கம் வாயிடைச் செலுத்தினுஞ் செலுத்துக தென்புலத்
தவர்கோமான்
வெங்கண்மாநர கத்திடை வீழ்த்தினும் வீழ்த்துக
விடையேறும்
எங்களுபக தழிழறியாருடன் இயம்புதல் தவிர்ப்பாயே.

---

இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.

நன்றாகக் கல்லாதவர் அவையின்கண் ஒன்றையுஞ் சொல்லலாகாது. அவர்சொல்ல விரும்பின் அது பழிப்புக்கே இடமாம். சொல்லாதிருப்பின் அவர்மிக நல்லவராவர். கல்லாதவர் இயல்பாக

வேறுண்மரிய அறிவுடையாரினும் அறிவுடையார் அதனை ஒரு பொருளாகக் கொள்ளார். கல்லாதவரது பெருமிதம் கற்றவரைக் கண்டவுடனேயே தொலைந்துபோம். அவர்களர்நிலம் போலப் பயனற்றவர். அவரது இளமையும் அழகும் பாழேயாகும். அவர் திருவுடையராயினும் இழிவே அடைவர். உயர்ந்த குலத்திற் பிறந்தவராயினும் கல்லாதவர் இழிந்தவரே யாவர். மக்களாயப் பிறந்திருந்தாலும் அவர் மிருகங்களே யாவர்.

சக-வது கல்லாமை முற்றிற்று.

---

## சஉ-ம் அதிகாரம் கேள்வி.

அஃதாவது கற்றறிந்தார் கூறுகின்ற உறுதிப்பொருள்களைக்கருதிக் கேட்டல். கற்றல் கண்கருவியாக நிகழும். இது செவிகருவியாகத் திகழும். கற்றவர்க்கும் கல்லாதவர்க்கும் அறிவும், பயனும், ஒருநிகராகசயவல்லதாதலான் கல்வி கல்லாமைகளின் பின் இது வைக்கப்பட்டது.

411 கொண்டசெல்வ மெல்லாங் கொடுத்துச் செவிச்செல்வம்
கொண்டானேன் போசன் குமரேசா—கண்டபெருஞ்
செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாந் தலை. (க)

இ—ள்.

குமரேசா! தான் கொண்டிருந்த செல்வத்தை யெல்லாம்கொடுத்துச் செவிச் செல்வத்தை ஏன்போசன்கொண்டான் எனின், செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம்; அச்செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை ஆகலான் என்க.

பொருட்செல்வம், கல்விச்செல்வம், சொற்செல்வம், முதலாகச் செல்வங்கள் பல உள்ளன ஆதலால் செல்வத்துள் என்றார். இளமை முதலியன அமையப்பெற்றவர்க்கே அவை அரிதின் எய்தும்; இது யாதும் வருந்தாது எவரும் எளிதிலெய்தி இன்புறுமாறு இசைந்து நிற்கும் ஆதலால் செவிச்செல்வம் அச் செல்வத்துள் எல்லாம் தலை என நின்றது.

செவிச் செல்வம்—செவியால் எய்தும் செல்வம்; என்றது கேள்வியால் உண்டாம் உணர்வை. கேள்வியைச் செல்வம் என்றது தன்னையுடையானுக்கு ஊன்றுகோல் போலநின்று துன்பத்தை நீக்கி இன்பத்தை ஆக்கும் இயல்பு நோக்கி எனக.

செல்வங்களுள்ளே சிறந்த செல்வம் கேள்விச் செல்வமே; அச்செல்வமே எல்லாச் செல்வங்களுள்ளும் உயர்ந்தது என்பதாம்.

கேள்வி ஒன்றையே தலை சிறந்த செல்வமாக அறிவோர் கருதி ஈட்டுவர் என்பது கருத்து. இவ்வுண்மை போசன்பால் உணரப்படும்.

## கதை

போசன் அரசு புரிந்து வருங்கால் காளிதாசன், தண்டி, பாணன், மாகன், பூதி, முதலிய் புலவர்களை உடன் வைத்துக் கொண்டு கேள்வி யின்பத்தையே நாளும் துய்த்தான். கவிகளின் இயல்பையும் சுவையையுங் காணுவதில் இவன் மிகவும் வல்லவன். தான் கருதியதொன்றை ஒரு சிறு தொடரில் அமைத்துப்புலவர்க்குக் கொடுத்துப் பாடச்செய்து அவர் பண்பினை ஆய்வான். தைலம் பெய்த பொற்கிண்ணத்தைக் கையில் தாங்கிக் கொண்டு அழகிய சேடி ஒருத்தி ஒரு நாள் சோபான வழியாக மேன் மாடத்துக்குச் சென்றாள். செல்லுங்கால் அக் கிண்ணந் தவறிவிழுந்து படிக்கட்டுகள் தோறும்பட்டுக் கீழே உருண்டது. அதனைக்கண்டிருந்த போசன் அவ்வொலிக் குறிப்பையே ஒரு தொடரில் "டம் டம் ட டம் டம் டட டம்ட டம் டம்" என்று அமைத்துக் குறித்ததை வைத்துச்குறையும் பாடுகளென்று காளிதாசன் முதலிய கவிச்சிங்கங்களுக்குக் கொடுத்தான். தேவியருளால் காளிதாசனே அந் நிகழ்ச்சி முழுதையும் தன் கவியில் நிறைத்துக்காட்டி அடுத்தும் ஓர் கவி தொடுத்துப் பாடினன். அக் கவிகுலதிலகன் பாடல்களை இப்புவிகுலதிலகன் கேட்டான். பேருவகை பூத்தான், அக் கவியிலுள்ள எழுத்துக்களை எண்ணி எழுத்தொன்றுக்கு இலக்கம் பொன் வீதம் அவர்க்குக்கொடுத்துப் புகழ்ந்தான். அன்று முதல் "அக்கரத்துக்கு ஓர் இலக்கம் அள்

ளிபருள் வள்ளல்'' என்று அனைவராலும் இவன் போற்றப்பட்டான். தான் எய்தியுள்ள அரசபோகங்களினும் புலவர்கள் கூறுகின்ற பொருளுரைகளைக் கேட்டே இவன் பெருமகிழ்வு கொண்டான். செவிச் செல்வத்தின் பொருட்டுத் தன் புவிச் செல்வ முழுதையும் இவன் போகவிடுத்தான். இவனது நுணங்கிய கேள்வியையும், இணங்கிய கேண்மையையும், பிணங்காத வண்மையையும், வணங்காத திண்மையையும் புலவரெல்லாரும் புகழ்ந்து மகிழ்ந்தார். செவிச் செல்வம் செல்வத்துள் செல்வம் என்பதும், செல்வத்துள் எல்லாம் அது தலையானது என்பதும் உலகம் தெளிய இவன் உணர்த்தி நின்றான் விரிவு சரிதையில் தெளிவாம்.

கேள்வியே செல்வங்களெல்லாவற்றுள்ளும் சிறந்தது என்பது இதனால் கூறப்பட்டது.

---

412 பண்டு செவிக்குணவே பார்த்தனரேன் நைமிசத்தோர்
கொண்டபசி நீத்தும் குமரேசா—கொண்ட
செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும். (உ)

இ—ள்.

குமரேசா! நைமிசவாசிகள் உணவு உறக்கங்களை விடுத்தும் கேள்விகளையே ஏன் செவிமடுத்தார் எனின், செவிக்கு உணவு இல்லாத போழ்து வயிற்றுக்கும் சிறிது ஈயப்படும் என்க.

செவிக்கு உணவு என்றது கேள்வியை. செவியால் உட்கொள்ளப்படுவதாகிய பொருளுரையை உணவு என்றது அதன் பண்பும் பயனும் கருதி என்க. செல்வத்தினும் கேள்வி சிறந்தது என்று மேலே கூறினர்; உணவினும் அஃது உயர்ந்தது என்று இதில் உணர உணர்த்தினர்.

கேள்வி உள்ள பொழுது உணவை உள்ளற்க என்பார் இல்லாத போழ்து ஈயப்படும் என்றார். செவிக்கு உணவாகிய கேள்வி இல்லாத பொழுதுதான் வயிற்றுக்கும் சிறிது உணவு இடப்படும் என்பதாம். படும் என்றது வேண்டும் என்னும் பொருளது;

ஈயப்படும் என்றது வயிற்றின் இழிவு தோன்ற நின்றது. ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே. என்றது தொல்காப்பியம். உம்மை, உயர்வும் எச்சமும் இழிவும் உணர்த்தும்.

உணவு வாய்வழியாகப் புகுந்து வயிற்றில் கிடந்து சிறிது வலிமையை உடற்குத்தந்து உடனே ஒழியும்; கேள்வி, செவிவாயிலாகச் சென்று நெஞ்சுகளனாக நின்று நிலையான உறுதியை உயிர்க்கு என்றும் உலையாது உதவும், ஆதலால் அதனினும் இதனையே அறிவுடை மக்கள் ஆர்வத்தோடு கொள்ளவேண்டுமென்பது கருத்து. உயிர்க்கு உறுதிபயக்கத்தக்க நூற்பொருள்களைக் கேட்கும் பொருட்டே உடலுறுதிக்காகச் சிறிது உணவுகொள்ள வேண்டும் என்பது குறிப்பு. இன்றியமையாத உணவினும் கேள்வி சிறந்தது என்பதை உறுதிபெற அடிகள் உணர்த்திய ஒண்மையை இதில் ஊன்றி உணர்க.

வாயுணவினும் செவியுணவாகிய கேள்வியையே உயர்ந்தோர் விரும்பிக் கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நைமிசவாசிகள் பால் உணரப்படும்.

## கதை.

நைமிச வாசிகள் என்பவர் நைமிசம் என்னும் வனத்தில் இருந்தவர். முனிவர் பலர் முற்காலத்தில் பிரமனை அணுகித் தாம் இருந்து தவம்புரிதற்குப் பொருந்திய இடம் யாது என்று கேட்ப அவர்ஒரு தருப்பையை எடுத்துச் சக்கரம்போலவட்டமாகச் சுற்றியுருட்டி இதுபோய் நிற்குமிடமே நீவிர் இருததற்குரிய இடமாம் என்று இயம்பி யுய்த்தார். அஃது உருண்டு சென்று மேருவின் தென்பால் விழுந்தது. நேமி விழுந்த இடமாதலால் அதற்கு நைமிசம் என்று பெயர் வந்தது. சிலமுள்ளார் பலர் அங்குச் சென்று குடியேறினர். சவுனகர், கண்ணுவர், சுமந்து, கவுதமர், கற்கர், காருத்தர், காலபத்திரர், போதாயனர், உரோமசர், இடபர், முற்கலர், பத்திரர், கிரீடி, பாண்டவியர், மாண்டவியர், விசாலாக்கர் முதலாக நாற்பத்தெண்ணாயிரவர் அங்கு நண்ணியிருந்தனர். தாம் ஓதியுணரினும் நீதிநூற் கேள்விகளையே நித்தலும்

அவர் காதலித்திருந்தார். வேத முழுதுந் தெளிந்த சூதமுனிவர் ஒருநாள் அங்கு வந்தார். சவுனகாதியோர் கண்டார். உளவிலுவகைகொண்டார், அடிபணிந்து போற்றி அழைத்துச் சென்று அவரை ஓர் ஆதனத்திலிருத்தி

வந்தனை யாமமை யெல்லாம் வாழ்விக்கும் படிக்கே என்றார்
எந்தை நீ உணராச் சைவ ரகசியப் பொருளொன்றின்றால்
சிந்தனை செய்து நன்றாத் தெரியவாங்கவற்றை யின்று
நந்தமை உய்யக்கொண்டு நவிற்றுக நாத என்றார்.

மெய்யறிவு நிறைந்த சூதரும் இசைந்து வேத முதலிய நூல்களின் பொருள்களை விளக்கிக் கூறினார். அவரும் பருகுவ அன்ன ஆர்வத்தராகிச் சித்திரப்பாவையின் ஒத்திருந்தடங்கிக் கேட்டவை கேட்டவை விடாதுளத்தமைத்தார். ஊனையுந் துறந்து நாள் பலவாகக் கேள்வியே நயந்தார். அதனால் அறிவும் இன்பமும் அவர் அமையப் பெற்றார். செவிக்கு உணவு இல்லாதபொழுதே வயிற்றுக்கும் சிறிது ஈயப்படும் என்பதை அவர் இருந்து காட்டினார். விரிவைச் சிவரகசியத்தில் காண்க.

செவிக்குணவாகிய கேள்வியையே ஒருவன் தேடுதல் வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

413 தின்டோட்சனமேயன்தேர்ந்துயர்ந்தான்கேள்வியொன்று
கொண்டதனால் என்னே குமரேசா—கொண்ட
செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து. (ரு)

இ—ள்.

குமரேசா! சனமேசயன் கேள்வியினால் என்சிறந்துமேன்மையை எய்தினான் எனின், செவி உணவின் கேள்வியுடையார் அவிஉணவின் ஆன்றாரோடு நிலத்து ஒப்பர் என்க.

அவி—தேவருணவு.

அவி உணவின் ஆன்றார்—அவியாகிய உணவினையுடைய தேவர். கேள்வி யுடையார் அமரரை நிகர்வர் என்றது அறிவும் இன்பமும் அவர் அமையப்பெறுவர் என்பது கருதி என்க.

செல்வத்தினுஞ் சிறந்தது உணவினும் உயர்ந்தது என்று கேள்வியின் உயர்வைமேல் உரைப்பக்கேட்டு அங்ஙனம் உணவை யுந்தள்ளி அதனைக் கொள்வதால் வரும் பயன் யாது என்பார்க்கு இஃது உணர்த்திய தென்க. மாறாத சுவையையும் ஆறாத இன்பத்தையும் அமுதம்போலக் கேள்வி அருளும் என்றபடி.

செவி உணவாகிய கேள்வியை யுடையவர் இந்நிலவுலகத்தவ ராயினும் அவி யுணவினையுடைய தேவரோடு ஒப்பர் என்பதாம்.

மாணவரையும் கேள்வி வானவராக்கும் ஆதலால் அதனையே ஆர்வத்தோடு மக்கள் அடைய வேண்டுமென்பது குறிப்பு.

செவி உணவுடையவர் புவியினராயினும் அமரர்போல அறிவும் இன்பமும் நிறையப் பெறுவர் என்பது கருத்து. இவ்வுண்மை சனமேசயன் பால் உணரப்படும்.

## கதை.

சனமேசயன் என்பவன் பரிச்சித்து மன்னன் புதல்வன். தாய்பெயர் மாத்திரை. இவன் வபுட்டை என்னும் மங்கையை மணந்து அரசுபுரிந்து இன்பந் துய்த்து வருங்கால் தன் தந்தையைக் கார்க்கோடகன் என்னும் பாம்பு தீண்டிப் பண்டுகொன்றமையை நினைந்து கவன்று பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்று சினந்து துணிந்தான். உதங்க முனிவரைக் கொண்டு நாகங்களெல்லாம் நாசமாகும்படி ஓர் யாகஞ் செய்தான். அவ்வேள்வித் தீயில் பல்லாயிரக் கணக்கான பாம்புகள் வந்து பாய்ந்து மாய்ந்தன. அக்கொலைத் தீமையின் கொடுமையை வியாழபகவான் வந்து சொல்லக்கேட்டு இவன் உள்ளம் இரங்கி அதனை விடுத்து அதுமுதல் உயிர்களுக்கு இதம்புரிந்துவந்தான். பின்னர் வியாச முனிவர் பால் நுணங்கிய நூல்கள் பல வணங்கிக் கேட்டான். தம் முன்னோர் சரிதமாகிய பாரதக் கதையை அவர் சொல்லிவருங்கால் இவன் உள்ளம் உருகினான். அதனை முற்றுங் கேட்டபின் அறிவும் அருளும் இவன் மிக்கு விளங்கினான். உயிர்கள் இஞ்ஞாலத்தில் தோன்றித் தம் காலத்துக்குத்தக்கவாறு கன்மங்களைப் புரிந்து களித்துத் திரிகின்றன என்பதும், அவையாவும் து

ன்பத்தைத் தள்ளவும் இன்பத்தைத் கொள்ளவுமே முயல்கின்றன என்பதும், அவ் இன்பம் மெய்யுணர்வுடைய நல்வினையாளர்க்கே எய்தும் என்பதும், முனிவர் மொழியால் இவன் இனிது தெளிந்தான். அழிவில்லாத இன்பத்தையே அடைய முயன்றான். கேள்வியால் எய்திய இவனது உணர்வையும் உயர்வையும் அனைவரும் வியந்தார். அமரரும் இவனோடு அமர விழைந்தார். அரசு முதலிய உயர் நலங்களையெல்லாம் உடையனுபபோதும் அடையாத மேன்மையைப் பின் அடைந்து மகிழ்ந்தான். தன் கேள்விச் செல்வத்தால் வேள்விச் செல்வராகிய தேவரைப்போல இவன் விளங்கியிருந்தான். செவியுணவாகிய கேள்வியையுடையார் அவியுணவினையுடைய ஆன்றாரை ஒப்பர் என்பதற்கு இவன் சான்றாய் நின்றான். (விரிவைப் பாரதத்தில் காண்க).

உறுதுணையாவது உயிரும் உடம்பும்
உறுதுணையாவது உலகுறு கேள்வி
செறிதுணையாவது சிவனடிச் சிந்தை
பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லைத்தானே. (திருமந்திரம்)

கேள்வியுடையவர் தேவரை நிகர்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

414 தேர்ந்தாள்முன் கோதமியும் சித்திரகே துங்கேட்டுக்
கூர்ந்ததுனபேன் தீர்ந்தான் குமரேசா—சார்ந்துநின்று
கற்றில னாயினும் கேட்க அஃதொருவற்
கொற்கத்தின் ஊற்றாந் துணை. (ச)

இ—ள்.

குமரேசா! கல்லாத கோதமியும் கேள்வியால் தேர்ந்தாள்; சித்திரகேதுவும் என் துன்பம் தீர்ந்தான் எனின், கற்றிலன் ஆயினும் கேட்க அஃது ஒருவற்கு ஒற்கத்தின் ஊற்றாம் துணை என்க. கற்கவேண்டும் என்பதை உம்மை காட்டி நின்றது.

ஒற்கம்—குறைவு, வறுமை, தளர்வு.

ஊன்றுதல் என்னும் தொழிற்பெயர் தல் விகுதிகுன்றி ஊற்று என வலிந்து ஊன்றப்படுங்கோலை, இங்கு உணர்த்தி நின்றது.

அஃது ஒருவற்கு ஒற்கத்தின் ஊற்றாம் துணை—அக்கேள்வி ஒருவனுக்குத் தளர்ச்சி வந்தபொழுது ஊன்றுகோலாக உதவும்.

ஒருவனுள்ளத்தில் கவலை தோன்றின் கல்வியும் கேள்வியும் அதனைக்களைந்து நீக்குமென்பது குறிப்பு.

தான் நேரே நூல்களைக் கற்றிலனாயினும் கற்றறிந்தார் சொல்வதையாவது ஒருவன் கேட்கக் கடவன்; அங்ஙனம் கேட்பின் அவனுக்கு மனத்தளர்வு வந்தபொழுது அக்கேள்வி ஊன்றுகோல் போலநின்று உதவி புரியும் என்பதாம்.

முற்றப்பகலும் முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று என்றது பழமொழி.
கேள்வி முயல். ஔவை.

கவலை யுற்றழிக் கைகொடுக்கவல்ல கல்வி இல்லையாயினும் ஒருவனுக்குக் கேள்வி இருப்பின் அதனை நீக்கி அவனை அதுகாக்கும் என்பது கருத்து.

கேள்வியானது ஒருவனது மனக்கவலையை நீக்கி உணர்வையும் ஊக்கத்தையும் அவனுக்கு உளவாக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கோதமி சித்திரகேது என்னும் இவ் இருவர்பாலும் உணரப்படும்.

## கதை

கோதமி என்பவள் இற்றைக்கு இரண்டாயிர ஆண்டுகட்கு முன்னர் மகத நாட்டிலே உதகம் என்னும் ஊரிலேயிருந்த ஓர் உத்தமி. இவளுக்குக் கிருசா கௌதமி எனவும் பெயர். இவள் பரிணிதன் என்பவனை மணந்து ஒரு புதல்வனைப்பயந்து போற்றிவருங்கால் அக்குழவிக்கு ஆண்டு ஒன்று நிறையுமுன் துணைவன் மாண்டு போனான். இவள் மிக வருந்திப் புதல்வனைக்கண்டு தேறிப்போற்றி வந்தாள். அவனும் ஐந்தாம் வயதில் ஆவி துறந்தான். இவள் பெருந்துயரடைந்து அம்மகவின் உடம்பை மார்போடணைத்துக் கொண்டு எப்படியாவது பிழைப்பிக்கத் துணிந்து மகவாசையால் பல இடங்கட்குஞ் சென்று முடிவில் புத்தனை

அடைந்து பிள்ளையை எழுப்பித் தரவேண்டுமென்று தொழுது விழுந்தாள். அவர் பெரிதும் இரங்கி எழுப்பித்தருகின்றேன் எழுக என்றார். எழுந்தவளை நோக்கிக் கைப்பிடியளவு கடுகு கொண்டுவரின் குழந்தை எழுந்துவரும் என்றார். மிகமகிழ்ந்து அதனை வாங்கிவரச் சென்றாள். சென்றவளை அழைத்து ஒருவரும் இறவாத வீட்டிலிருந்து அதனை வாங்கி வா என்றார். இறந்தவரை யில்லாத இல்லமே இல்லை என்பதை ஊர்கடோறுஞ் சென்று இவள் உணர்ந்து மீண்டாள். புத்தரிடம் உற்றதை உரைத்தாள். நிலையாமையே இவ்வுலகில் நிலையாக வுள்ளதாகலால் இவ்வுலகில் ஒருவரும் நிலையாக இரார் என்று அவள் உள்ளம் நிலைபெற மொழிந்தார். அச்சொல்லைக்கேட்ட வுடனே உள்ளத்தளர்ச்சி நீங்கி உண்மை தெளிந்து தன் உயிர்க்குறுதி நாடினாள். கல்லாதிருப்பினும் கேள்வியானது ஊன்றுகோல்போல உயிர்கட்கு உதவும் என்பதை அவள் வுணர்ந்து சென்றாள். விரிவைப் புத்தர் மான்மியத்தில் காண்க.

## சித்திரகேது கதை.

சித்திரகேது என்பவன் சூரசேந தேசத்து அரசன். அழகிய பங்கையர் பலரை மணந்து இவன் இன்பம் நுகர்ந்து வருங்கால் தனது முதல் மனைவியாகிய கிருதத்துதி என்பவளிடம் ஓரழகிய புதல்வன் பிறந்தான். அதனால் அரசன் பெருமகிழ்வடைந்து அவள் பால் உயர் காதலுடையனாய் ஒழுகிவந்தான். இதனைச்சகியாத இளந்தேவியரனைவரும் இசைந்து சூழ்ந்து எவரும் அறியா வண்ணம் அக்குழந்தையைக் கொன்றார். மகன் இறந்துகிடந்தமையை மன்னன் கண்டு மனங்கலங்கி அல்லற் கடலில் ஆழ்ந்து சோர்ந்தான். அவ்வமையம் ஆங்கிரசரும், நாரதரும் அங்கு வந்தார். உலக இயல்பையும், உயிர்கள் அடையவேண்டிய உண்மை நிலையையும் அரசனுக்கு உரைத்தார். மதிநலம்வாய்ந்த அம்மாதவரது நீதி மொழிகளைக் கேட்டவுடனே அரசன் தேறி எழுந்தான். உற்ற கவலையை ஒழித்து உண்மையுணர்வுடையனாய் உள்ளந்தெளிந்தான். உயர்ந்து விளங்கினான்.

கேள்வி ஒருவனுக்கு ஒற்கத்தின் ஊற்றாந்துணை என்பதை இவன் உணர்ந்து நின்றான். (விரிவைப் பாகவதத்திற் காண்க.)

சேயரும் பொருள் செல்வம் இவையென
நேயம் வைக்கினை நிகரில் வெறுத்தரும்
ஆயுங் காலிவ் அருப்பறத் தாழிசேர்
மாயன் றாளில் மனம்வைத்தி மன்னனே. (1)

மூலமாமுதற் றேவர் கடக்கிலாக்
காலம் யாவர் கடக்கவல் லாரெனச்
சீலநன் மொழி பற்பல செப்பவும்
மாலைவெண் குடை மன்னன் மயங்கினான். (2)

இவை, உள்ளங் கலங்கிநின்ற சித்திரகேதுவுக்கு ஆங்கிரசர் கூறிய உறுதி மொழிகள். இவற்றைக் கேட்டவுடனே மன்னவன் வாட்டம் நீங்கினான்.

கேள்வி ஒருவனுக்கு உறுங்கவல் ஒழிக்கும் அருந்துணை என்பது இதனால் கூறப்பட்டது.

---

415 உள்ளந் தளரைவர் உற்றவியா தன்வாய்ச்சொல்
கொள்ளஉயர்ந் தாரேன் குமரேசா—மெள்ள
இழுக்க லுடையுழி யூற்றுக்கோல் அற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல். (௫)

இ—ள்.

குமரேசா! தளர்ந்து நின்ற ஐவர் வியாசருடைய வாய்ச் சொல்லைக் கேட்டவுடனே ஏன் தளர்வுநீங்கிச்சென்றார் எனின், இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் போல ஒழுக்கமுடையார் வாய்ச் சொல் உதவும் என்க.

உழி என்பது இடம், பக்கம், அளவு என்பவற்றை உணர்த்திவரும். இழுக்கல் உடை உழி—வழுக்கலுடைய இடம். அஃதாவது சேற்று நிலம்.

ஊற்றுக் கோல் அற்றே—ஊன்றுகோல் போல உதவும்.

மேல், கற்றிலனாயினும் கேட்க என்றார்; யாரிடம் அது கேட்கத்தக்கது என்பதை இதில் தேற உணர்த்தினார். கல்வியுடையராயினும் ஒழுக்கம் இல்லாதவர் உணர்வில்லாதவரேயாவர் ஆதலால் அவர் வாய்ச் சொல்லைக் கேட்கலாகாதென்பது குறிப்பு.

வழுக்கலுள்ள நிலத்தில் நடக்கும் ஒருவனுக்கு ஊன்றுகோல் போல ஒழுக்கமுடையாரது வாய்ச் சொல் உதவும் என்பதாம்.

மனக்கவலையால் ஒருவன் மறுகி அயருங்கால் ஒழுக்கமுடையார் வாய்ச்சொல் அவ் அயர்ச்சியை நீக்கி அவனுக்கு உயர்ச்சியை உதவும் ஆதலால் அது, ஒருவன் இடறிய வழி வீழாவண்ணம் அவனுக்கு உறுதுணையாய் நின்று உடனே தாங்கும் ஊன்றுகோலுக்கு ஒப்பாய் நின்றது.

ஊன்றுகோல் உடற்கு உறுதி தரும்; ஆன்றோர் சொல் உயிர்க்கு உறுதி தரும் என்க.

உயர்ந்தோர் வாய்ச் சொல் ஒருவனுடைய உள்ளக் கவலையை ஒழித்து உணர்வையும் ஊக்கத்தையும் அவனுக்கு உளவாக்கும் என்பது கருத்து. இவ்வுண்மை ஐவர்பால் அறியப்படும்.

## கதை

தருமர் முதலிய ஐவரும் துரியோதனனால் துயரம் எய்தி வனம் புகுந்து மனந் தளர்ந்து ஓரிடத்தில் கூடியிருந்து "காட்டில் அலையுமாறு இறைவன் நம தலையோட்டில் எழுதினனோ'' என்று தமக்குற்ற எளிய நிலைமையை எண்ணி எண்ணி ஏங்கி நொந்தார். அவ்வமையம் அங்கு வியாசர் வந்தார். அவர்களுடைய கண்கலக்கத்தைக் கண்டு கருணைமிக்கொண்டு இனிய மொழிகள் பல இதம்பெற மொழிந்தார். "இவ்வுலகில் இன்பமே துய்ப்பார் யாண்டும் இல்லை. பிறக்குந் துன்பமும் பிறந்தபின் எய்தப் பெற்றிடுந் துன்பமும் இறக்குந் துன்பமும் என்றும் உள்ளன. உடம்பெடுத்தவர்க்கெல்லாம் இடும்பைகள் இயல்பேயாகும். நீவிர் மாத்திரம் அல்லீர். தம் அரசையிழந்து அடவியிற் புகுந்து அருந்துயருழந்த அரசர் பலருளர். வினைப்பயன் ஊட்டாது கழியாது,

அன்றுங்கால் அல்லற்படுவது நும்போன்ற அறிவுடையார்க்கு அழகு அன்று. எதுவரினும் வருக என்று இசைந்திருத்தல் வேண்டும். இத்துன்பத்தின் முடிமீது இன்பம் உள்ளது. அதனை ப்பின்பு காண்பீர். இவ் அல்லல் விளைவை நல்லதென்றே கொண்டு ஆற்றி யிருமின்" என்று முனிவர் தேற்றி மொழிந்தார். அவரது மலர்வாய்ச் சொல்லைக் கேட்டவுடனே அவரனைவரும் தளர்வு நீங்கி ஊக்கமுடையராய் உவகை பூத்தார். ஒழுக்கமுடையார் வாய்ச்சொல் ஊற்றுக்கொல் அற்றே என்பதை அவர் அன்று உணர்த்தி நின்றார். விரிவை ஆரணிய பருவத்தில் காண்க.

செறிந்தவர்க்கு ஊற்றங்கோலாம் செய்தவ முனியும் முன்னே
குறிந்தன நிகழ்ந்ததெல்லாம் கூறுதல் கொடிதுபாவம்
பிறிந்தன தாயந்தன்னில் பெரும்பகை இனிதென்றன்றே
அறிந்தவர் உரைத்தாரைய அவாவினுக்கு அவதியுண்டோ (1)

நீவிரே அல்லீர் முன்னாள் நிலமுழுதாண்ட நேமி
நாவிரி கீர்த்தியாளன் நளனெனும் நாமவேந்தன்
காவிரியென்னத் தப்பாக் கருணையான் சூதிற்றோற்றுத்
தீவிரிகானஞ் சென்ற காதைநும் செவிப்படாதோ. (2)

இவை, வியாசருடைய வாய்ச்சொற்கள். தளர்ந்து நின்ற ஐவரும் இவற்றைக் கேட்டவுடனே தம் தளர்வு நீங்கிக் கிளர்வுடன் சென்றார்.

கேள்வி ஊன்றுகோல்போல நின்று உயிர்கட்கு உதவும் என்பது இதனால் கூறப்பட்டது.

416 பூத்த புகழேந்தி போதங்கேட் டேன்ஒட்டக்
கூத்தரையும் வென்றார் குமரேசா—காத்து
எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். (சு)

இ—ள்.

குமரேசா! புகழேந்தியினது வாய்ச்சொல்லைக் கேட்டிருந்தவர்கள் பிறகு பல ஒட்டக்கூத்தரையும் வென்று சிறந்தார் எனின், எனைத்தும் ஆனும் நல்லவை கேட்க; அனைத்தும் ஆனும் ஆன்ற பெருமை தரும் என்க.

வெல்லுதற்கரிய அவரது கல்வி வன்மையை உம்மை உணர்த்தி நின்றது.

எனைத்து ஆனும்—எவ்வளவு ஆனாலும்; சிறிதாயினும் என்றபடி. அனைத்து ஆனும்—அவ்வளவு ஆனாலும்.

கேட்கப்படும் பொருளும் கேட்கும் காலமும் எவ்வளவு சிறிதாயிருந்தாலும அக்கேள்வி பின்பு பெரும் பயனைத்தரும் என்பது கருத்து. உம்மைகள் இழிவைச் சிறப்பித்து நின்றன. மேல், ஒழுக்கமுடையார் வாய்ச்சொல் ஊன்றுகோல்போல் உதவும்என்றார்; அச்சொல்லைச் சிறிது கேட்டதனால் யாது பயன் என்பார்க்கு இஃதுணர்த்தியதென்க.

எவ்வளவு ஆயினும் நல்லபொருள்களை நாடிக்கேட்க; அவ்வளவு ஆனாலும் நிறைந்த பெருமையை அக் கேள்வி பயந்துவிடும் என்பதாம்.

கணப்பொழுதாயினும் நல்லதை நாளும் நாடிக்கேட்க வேண்டுமென்பது குறிப்பு.

கற்றறிந்தார் சொல்வதை ஒருவன் சிறிது சிறிதாகக் கேட்பினும் பல துள்ளி பெருவெள்ளமாவதுபோலப் பெருகின்று அக்கேள்வி அவனுக்கு ஊன்றுகோல்போல் உதவுவதல்லாமல் ஆன்ற பெருமையையும் அருளும் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை புகழேந்திப் புலவருடைய மாணவர்பால் உணரப்படும்.

## கதை

புகழேந்திப் புலவரைச் சிறையிலிட்டுப் பொறாமையால் பல இன்னல்களை ஒட்டக்கூத்தர் இயற்றிவருங்கால் அங்கிருந்த சிலர்

அவர்பால் கல்வி பயின்றார். புலவர் அல்லற்பட்டிருந்தும் அவர்கட்குச் சொல்லிக்கொடுத்தார். சிறிது சிறிதாக நாளும் நாளும் அவர் நயந்து கேட்டார். அக்கேள்வி நலத்தால் அவரனைவரும் கவிகள் பாடவல்ல சிறந்த புலவர்களாயினர். தமது ஆசிரியனை மிகவும் அவமதித்திருந்த ஒட்டக்கூத்தரை அடக்க எண்ணி அவருள் அறுவர் ஆணித்தார். அவ் அறுவரும் குயவன், அம்பட்டன், கொல்லன், வேளாளன், தச்சன், தட்டான் என ஆறு மரபினர். சேடன்; வாணன், திருவேங்கடவன, சீதரன், முத்தன், ஏகன், என முறையே அவர்கட்குப் பெயர்களாகும். கூடிவந்தார். முதலில் குயவன் போய் ஒட்டக்கூத்தர் முன் குலுக்கி நின்றான். கூத்தர் கண்டு கோபங்கொண்டு

மோனை முத்தமிழ் மும்மத முப்பொழி
யானைமுன் வந் தெதிர்த்தவனாரடா என்றார்.
கூனையும் குடமும் குண்டு சட்டியும்
பானையும் வனை அங்குசப் பையல்யான்

என்று உடனே அவன் அதிலேயே பதில் விடை தந்தான்.

கூத்தர் யானை என்றதற்கேற்ப அங்குசத்தை யுடையவன் என்று தன்னை அவன் அறிவித்தமை காண்க. அங்குசப்பையல் என்பது அழகிய குசப்பையன் எனவும் அங்குசத்தையுடையவன் எனவும் இருவகையில் பொருள்படும் அடுத்து அம்பட்டன் வந்தான். அவனுக்கு ஒருகண் குருடு. முன்னே நின்று என்னே யென்று விழித்தான்.

விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டென்ன விலவிலைக்கப்
புண்பட்டநெஞ்சொடும் இங்குநின்றாய் பொட்டையாய்
புகல்வாய், என்று கூத்தர் பொங்கி மொழிந்தார்.
கண்பொட்டையாயினும் அம்பட்டன் நான்கவி வாணர்முன்
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திகைக்கிடப் பாடுவனே, [னே

என்று வாணன் பாடற மொழிந்தான், அதன்பின் கொல்லன் வந்தான்,

செல்வன் புதல்வன் திருவேங்கடவன் செகத்குருவாம்
சொல்லன்கவியைக் குறைசொன்ன பேரைக் குறடுகொண்டு
பல்லைப்பிடுங்கிப் பருந்தாட்டமாட்டிப் பனைகவர்முன்னே
அல்லும்பகலும் அடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே.

என்று அடித்து அறைந்தான். அதன்பின் வேளாளன் வந்தான்.

நோக்கண்டு மன்னர் குறைகடற் புக்கிலர் கோகநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்ன கவியொட்டக் கூத்தநின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்களோ தமிழ்பாடிய பாவலரே என்றான்.

அதன்பின் தச்சமுத்தன் மெச்ச வந்தான்.

சொன்னசந்தக்கவி யாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்னசந்தக்கவி யேதென்ற போதில் எதிர்த்தவரை
வன்னசந்தங்கெட வாயைக் கிழித்திந்த வாச்சியினால்
கன்னசந்தங்களி னிற்கவியாப்பைக் கடாவுவனே.

என்றான். அதன்பின் தட்டார ஏகன் தனியே வந்தான்.

திகிரிவட்டக்குடைச் செங்கோலபயன் செழுஞ் சிலம்பிற்
பகுதிஒட்டக்கூத்த பட்டனைக்காணப் பணைக்கவியின்
மிகுதவொட்டத்தட்டி விட்டகையோட்டில் உருக்கிக்குத்திப்
புகுதஒட்டித்தட்டி மேலறுநாவண்ணம் போர்செய்வனே.

என்று நேருரைதந்தான். இவ்வாறு அவ்வறுவரும் அஞ்சாதுபாடி ஒட்டக்கூத்தரது கொட்டத்தையடக்கித் தமது ஆசிரியராகிய புகழேந்திப் புலவரைப் புகழ்ந்து சென்று புகழ்பெற்று வாழ்ந்தார். சிறிது என்று இகழாமல் சிறைக்கூடத்திலிருந்து பண்டுநாளும் கேட்டுவந்த கேள்வி நலத்தால் பின்பு பேரறிவுடையராய் அடங்காத கூத்தரையும் அடக்கிநின்று அளவில் சீர்த்தியையடைந்தார். எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும் ஆன்ற பெருமை தரும் என்பதற்கு இவர் சான்றென நின்றார். (விரிவைப் புலவர் மான்மியத்தில் காண்க)

அறிஞர் உரையைச் சிறிது கேட்பினும் அதனால் பெரும் பயனுண்டாகும் என்பது இதனால் கூறப்பட்டது.

417 வென்றிக் களப்வீழ்ந்தும் வீடுமரேன் சொல்லவில்லை
குன்றுமொழி ஒன்றும் குமரேசா—என்றும்
பிழைத்துணர்ந்தும்பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர். (எ)

இ—ள்.

குமரேசா! வீடுமர் மயங்கி வீழ்ந்தும் மடமைதரும் சொற்களை ஏன் சொல்லவில்லை எனின், இழைத்து உணர்ந்து ஈண்டிய கேள்வியவர், பிழைத் துணர்ந்தும் பேதைமை சொல்லார் என்க.

பிழைத்தல்— தவறுதல், உயிர்த்தல். இழைத்தல்—நுணுகுதல். ஈண்டிய கேள்வி—நிறைந்த கேள்வி.

வெகுளி முதலியவற்றால் உளங் கலங்கிப் பொருள்களை உள்ளவாறு உணர முடியாதபொழுதும் உண்மை யுணர்வுடையவர் தம் ஒண்மை குன்ற உரையார் என்பார் 'கேள்வியவர் பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார்" என்றார்.

நுண்ணிதாக ஆராய்ந்து நிறைந்த கேள்வியினையுடையவர் தவறாக உணர்ந்தபொழுதும் தமக்குப் பேதைமையை விளைக்கும் சொற்களை மொழியார் என்பதாம்.

பிழைத்து என்னும் எச்சம் முடிபு நோக்கிப் பிழைப்ப எனத்திரிந்து நின்றது.

உணர்வை மயக்குதற்குரிய நிலைகளையடையினும் நுண்ணிய நூலறிவும் திண்ணிய கேள்வியுமுடையவர் மடமையான சொற்களை உரையார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வீடுமர் பால் உணரப்படும்.

கதை.

தானைத்தலைவராய் நின்று பாரதப் போரில் வீரம்புரிந்த வீடுமர் பத்தாம்நாட் போரில் பகழிபாய வீழ்ந்தார். தருமன் முதலானவரும் துரியோதனனாதியரும் அருகே திரண்டுநின்று அவரது முடிவை நினைந்து அழுதார்.

அழுத மைந்தர் தம்மை அஞ்சலென் றென்றாற்றி
எழுதரிய போர்க்களத்தில் வினையை யாரே விலக்குகிற்பார்
உழுது வாயி யருள உங்கள் முன்னர் வீழ்ந்தேன்
பழுதொன்றில்லை இதுவே பயனென் பலத்தால் என்றான்.

சரத்தின் சயனம் பஞ்ச சயனங்களினு மினிதென்
சிரத்தின் தாழ்வு தீர்ப்பாய் திண்டோள் விசயா என்ன
வரத்தின் பயனால் உயிரை நிறுத்து மன்னன்மகிழ
உரத்தின் அம்பால் முடியை உயரும் வண்ணம் உயர்த்தான்.

அருச்சுனன் எயிய அம்பின் உளைமேல் தலையை வைத்துக்கொண்டு அம்பு அணைத்துகிடந்தும் வீடுமர் தம் முன் நின்றவரை அருளுடனோக்கி உயிர்கட்கு உறுதிபயக்கத்தக்க பலவற்றையுங் குறித்து எவரும் தெளியுமாறு இனிது மொழிந்தார். அமர்க்களத்தில் இவர் அன்று புகன்ற அறங்களை உலகம் இன்றும் போற்றி வருகின்றது. மயங்கியிருந்தும் வழுவறச் சொல்லிய இவரது பெருமையை அமரரும் புகழ்ந்தார். நுணுகிய கேள்வியுடையவர் பிழைவுணரினும் பேதைமைதரும் சொற்களைச் சொல்லாரென்பதை உலகம் இவர் சொல்லாலுணர்ந்தது. (விரிவை வியாசபாரதத்தில் காண்க.)

நுண்ணிய கேள்வியுடையவர் மடமையான சொற்களை யாண்டுஞ் சொல்லார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

418 உள்ள செவியிருந்தும் ஓட்டையென ஏனனேன்
கொள்ள இழிந்தான் குமரேசா—உள்ளவெல்லாம்
கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி. (அ)

இ.—ள்.

குமரேசா! ஏனன் இயல்பாகவே நல்ல செவிகளையுடையனாயிருந்தும் ஏன் ஓட்டைச்செவியன் என இழிக்கப்பட்டான் எனின், கேள்வியால் தோட்கப்படாத செவிகள் கேட்பினும் கேளாத்தகையவே என்க. உம்மை உயர்வு சிறப்பு.

செவி என்பது பால்பகா அஃறிணைப் பெயராதலால் துளையவே என்னும் பன்மைக்கேற்பப் பன்மையாய் நின்றது.

தோட்கப்படாத செவி—துளைக்கப்படாத செவிகள்.

கேள்வியால் துளைக்கப்படாத செவிகள் ஓசைகளைக் கேட்குமாயினும் கேளாத தகுதியை யுடையனவேயாம் என்பதாம்.

கண்ணுடையாராயினும் கல்வி யில்லாதவர் குருடரேயாவர் அதுபோல செவியுடையராயினும் கேள்வியில்லாதவர் செவிடரேயாவர் என்க. ஒருவனை செவிபடைத்ததற்குப்பயன் உறுதிப்பொருளைக் கேட்டலேயாம் என்பது குறிப்பு.

எல்லாங் கேட்கவல்ல நல்ல செவிகளையுடையனாயினும் நூற்கேள்வி கொள்ளாதவனை செவிடனாகவே எள்ளப்படுவான என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஏனன்பால உணரப்படும்.

## கதை.

ஏனன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் மலைநாட்டின் மேற்கெல்லையில் கடற்கரைக்கண் இருந்த ஏழிற்குன்றம் என்னும் நகரிலிருந்த ஒருகுறுநிலமன்னன். மிகுதியான மலைவளங்களை யுடையவன். செல்வமுற்றிருந்தும் கல்வியில்லாதவன். ஆசையும செருக்கும் அமைந்த நெஞ்சினன். பெரியாரை மதியாத சிறுமதியுடையவன். கொடிய உலோபி பாடும் புலவரைக்கண்டால் ஓடியொதுங்குவான். இவனியல்பை அறியாமல் ஔவை ஒருநாள் இவன்பால் பாடிப் பரிசில்பெற நாடிவந்தாள். நல்லிசைப் புலமை மிக்க அம்மெல்லியலார் வரவை மேன்மாடத்திலிருந்து இவன் கண்டான். விரைந்து வந்து தன் முன்கதவை அடைத்து உள்ளே மறைந்து நின்றான். இவனது வஞ்சமடமையை நினைந்துநின்று நெடிது இரங்கி அம்மையார் நெஞ்சங் கவன்றார். பின் நெடுஞ் சினங்கொண்டார்.

இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்றம்—மருடீர்ந்த
பாட்டும் உரையும் பயிலா தன இரண்டு
ஓட்டைச் செவியும் உள.

என்று இவன் பிறப்பையும் உறுப்பையும் பழித்துச் சென்றார். ஔவை வாக்குத் தெய்வ வாக்கு ஆகலால் அதுமுதல் ஓட்டைச் செவியன் என்று இவனை அனைவரும் பழித்தார். கல்வி கேள்விகளில்லாமையால் கண்ணிருந்தும் குருடனாயும் காதிருந்தும் செவிடனாயும் இவன் இழிக்கப்பட்டான். கேள்வியால் துளைக்கப்படாத செவிகள் கேட்பினும் கேளாத் தகையவே என்பதை உலகம் இவன்பால் கண்டது. விரிவைப் புலவர் மான்மியத்தில் காண்க.

கேள்வியில்லாத செவி பாழே என்பது இதனால் கூறப்பட்டது.

> புண்ணாகப் போழ்ந்து புலால்பழிப்பத் தாம்வளர்ந்து
> வண்ணப்பூண் பெய்வ செவியல்ல—நுண்ணூல்
> அறவுரை கேட்டுணர்ந் தஞ்ஞான நீக்கித்
> துறவுரை கேட்ப செவி. (அறநெறிச்சாரம்.)

---

419 கஞ்சன் சிசுபாலன் கண்ணில்லான் சேய்வணக்கம்
கொஞ்சமுங்கொள் ளாரேன் குமரேசா—நெஞ்சில்
நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயின ராதல் அரிது. (௯)

இ—ள்.

குமரேசா! கஞ்சன், சிசுபாலன், துரியோதனன், என்னும் இவர் ஏன் வணங்காதவராய்த் தம்மையே வியந்து தருக்கி இருந்தார் எனின், நுணங்கிய கேள்வியர் அல்லாதார் வணங்கிய வாயினர் ஆதல் அரிது என்க.

கண் இல்லான் சேய்—துரியோதனன்.

அல்லார் ஆகல் அரிது என்று காண்க.

நுணங்கிய கேள்வியர்—நுண்ணிய நூற் கேள்வியுடையவர். வாய் என்பது ஆகுபெயராய் அமைந்து தன்பால் தோன்றுஞ் சொல்லைச் சுட்டிநின்றது.

வணங்கிய வாயினர்—பணிவான மொழியினர். நுணங்கிய கேள்விக்கும் வணங்கிய வாய்க்கும் உள்ள உரிமையை இதில் உய்த்துணர்க.

நுணுகிய நூற்கேள்வி யில்லாதவர் பணிவான மொழியி னையுடையராதல் முடியாது என்பதாம்.

நுண்ணிய கேள்வியில்லாதவர் தமது நிலைமையையும், பிறரது நிலைமையையும், உலக நிலைமையையும், உயர்ந்தார் ஒழுகவேண்டிய விழுமிய நிலைமையையும், நுணுகி அறியார் ஆதலால் தம்மையே பெரிதாக அவர் எண்ணி வியந்து எவரையும் எண்ணாது பேசுவர் என்பது கருத்து. நுணுக்கமான கேள்வியுடையவர்க்கே வணக்கமான மொழிகள் உளவாம் என்பது குறிப்பு.

வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன்
நுணங்கிய கேள்வியன் நுவல்வதாயினுன்

என்று அனுமானது பணிவான மொழி இயல்பைக் குறித்துக் கம்பர் மொழிந்துள்ளமை ஈண்டுக் காணத்தக்கது.

நூற்கேள்வியில்லாதவர்க்குப் பணிவும் இன்சொல்லும் உளவாகா என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கஞ்சன் முதலாயினுர் பால் காணப்படும்.

## கதை.

கஞ்சன், சிசுபாலன், துரியோதனன் என்னும் இவர் நிறைந்தசெல்வமுடையராய்ச் சிறந்து விளங்கியிருந்தும், நல்ல நூற்கேள்வியில்லாமையால் தம்மையே வியந்து தகவின்றிக் களித்தார். எவரையும் மதியாமல் இழிமொழி புகன்றார். கண்ணன், விதுரன், தருமன்முதலிய பெரியோரையெல்லாம் பேணுது பழித்தார். தம்மினும் உயர்ந்தார் தரணியில் இலரென்று தருக்கித்திரிந்தார். இவரது கொடுஞ்செயலையும் கடுஞ்சொல்லையுங்கண்டு அனைவரும் கலங்கி நொந்தார். வணங்காவாயர் என்று பின் இவரை வையம் வைதது. நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய வாயினராதல் இல்லை என்னும் உண்மைக்கு இவர் இணங்கியிருந்தார். (விரிவைப் பாகவதத்தினும், மாகத்தினும், பாரதத்தினும் காண்க.

இரு விழிகள் வாண்முகத்தில் இருந்தாலும் வானிரவி
எழுந்தால் அன்றிக்
கருதுநிலப் பலபொருளுங் காண்டலரி தாமுலகிற்
கண்போல் யாரும்

பெருகியசெல் வமுமறிவும் பெற்றாலும் நூற்கேள்வி
பெறுவாராக் கன்றித்
திருவளர்புண் ணியபாசம் இம்மைமறுமையும்வீடுந் -
தெரியா தன்றே. (திருக்குற்றாலப் புராணம்.)

மறவுரையும் காமத் துரையும் பயங்கப்
பிறவுரையும் மல்கிய ஞாலத்—தறவுரை
கேட்குந் திருவுடை யாரே பிறவியை
நீட்குந் திருவுடை யார். (அறநெறிச்சாரம்.)

நூற்கேள்வி இல்லாதவர்க்குப் பணிவும் இன்சொல்லும் உளவாகா என்பது இதனால் கூறப்பட்டது.

---

420 ஒன்றாகக் காந்தாரர் உற்றழிந்தும் ஏனுலகோர்
குன்றவில்லை நெஞ்சம் குமரேசா—என்றும்
செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என். (ய)

இ—ள்.

குமரேசா! நூறு கோடி காந்தாரர் ஒருங்கே அழிந்தும் உலகம் ஏன் சிறிதும் இரங்கவில்லை எனின், செவியின்சுவை உணரா வாய் உணர்வின் மாக்கள் அவியினும் வாழினும் அவரால் உலகிற்கு என் என்க.

செவியின் சுவை—செவியால் நுகரப்படுஞ் சுவை. அஃதாவது கற்றார் சொல்லக் கேட்குங்கால் அச்சொற் பொருள்களாலெய்தும்இன்பங்கள்.

செவியின் சுவையாகிய நூற் கேள்விகளை நுகராமல் வாயின் சுவையாகிய உணவையே உண்டு களிக்கும் மாக்தர் இருந்தால் என்ன இறந்தால் என்ன என்பதாம்.

வாயுணவை ஊன உணவாகவும் செவியுணவை ஞான உணவாகவும் நாடிக்காண்க.

நூற்கேள்வி கொள்ளாத மாக்கள், இருந்தாலும் பயனில்லை; அவர் இறந்தாலும் உலகம் அது குறித்து வருந்தாது என்பது

ழிதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மருகாந்தாரர்பால் உணரப்படும்.

கதை

காந்தாரர் என்பவர் பரதகண்டத்தின் வடகீழ்த் திசையிலிருந்த மருகாந்தாரம் என்னும் தீவில் இருந்தவர். ஓரே இனத்தவர். நூறுகோடியர் என எண்ணப்பட்டவர், கண்ட காட்சியே கண்டு, கொண்ட கோலமே கொண்டு, உண்டி யின்பமே உவந்து திரிந்தார். செல்வமுற்றிருந்தும் கல்வியில்லாதவராய்க் களித்து நல்லார் சொல்லையுங் கேளாமல் எல்லாருக்கும் அல்லல் விளைத்திருந்தார். இங்ஙனம் இருக்குங்கால், இராமர் இலங்கைக்கு ஏகு நெறியில் இடையே கிடந்த கடலைக் கடக்கவிரும்பி வருணனை நோக்கி அருந்தவம் கிடந்தார். அவன் குறித்த காலத்தில் வராமையால் இவர் வெகுண்டு தமது கோதண்டத்தில் ஓர் அம்பைத் தொடுத்து அவன்மேல் விடுக்கத் துணிந்தார். அவன் அஞ்சி ஓடிவந்து அபயம் என்றான். இராமர் சீற்றந்தணிந்து தமது மாற்றரும்பகழிக்கு ஏற்ற இலக்கை இயம்புகென்றார். மருகாந்தாரரையே அவன் மருவக் கூறினான். கல்வி கேள்விகள் இல்லாதவராதலால் அப்பொல்லாதவர் இருப்பினும் இறப்பினும் ஒன்றே என்று உள்ளங்கொண்டு இராமர் தம் அம்பினைச் செல்ல விடுத்தார். அது சென்று புகுந்து அனைவரையும் சேரத்தொலைத்து இராமர்பால் வந்து சேர்ந்து நின்றது. அவர் இறப்பிற்கு ஒருவரும் இரக்கங்கொண்டிலர். செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள் அவியினும் வாழினும் ஒன்றே என்பதை உலகம் அவர்பால் கண்டது. (விரிவை இராமாயணத்தில் காண்க.)

தேடிநூல் தெரிந்துளோர்க்கும் உணர்விற்கும்கிமிரநின்றோன்
கோடிநூறுய தீய அவுணரைக் குலங்களோடும்
ஓடிநூறென்றுவிட்டான் ஓரிமையொடுங்காமுன்னம்
பாடிநூருக நூறிமீண்டதப் பகழித் தெய்வம்.

ஆய்வினை யுடையாராகி அறம்பிழை யாதார்க் கெல்லாம்
ஏய்வன நலனேயன்றி இறுதிவந் தடைவ துண்டோ

மாய்வினை யியற்றிமுற்றும் வருணன்மேல் வந்தசீற்றம்
தீவினையுடையார் மாட்டே. தீங்கினைச் செய்ததன்றே.
இவற்றால் மேற்குறித்தமை இனிது புலனும்.

கேள்வி யில்லாதவர் இருப்பதினும் இறப்பது நல்லது என்பது இதனால் கூறப்பட்டது.

வறுமையான் மடமைதன்னால் வருந்திநெஞ் சழியுங்காலை
உறுதிசெய் துணையாங் கற்றவுணர்வினை வளர்க்குமென்றும்
இறுதியில் லாதஇன்பம் ஈட்டுமால் அதனாற்கற்று
மறுவறுமொழுக்க முள்ளார் வாய்மொழி கேட்டல்வேண்டும்.
(விநாயகபுராணம்.)

தாளாண்மை இல்லாதார் வேளாண்மை செலுத்துவதும்
தரைமேல் என்றும்
வேளாண்மை இல்லாதார் மனைவாழ்க்கைசெலுத்துவதும்
விசயம் வேட்டு
வாளாண்மை இல்லாதார் மண்டுசமர்க் கேறுவதும்
வளர் புராணம்
கேளாதார் கதிவிழைவும் விழியிலார் வழிநடக்கும்
கிரமம் ஆமால். (திருக்குற்றாலப்புராணம்)

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

கேள்விச் செல்வமே எல்லாச் செல்வங்களுள்ளும் சிறந்தது. வாயுணவினும் செவியுணவையே ஒருவன் தேடுதல்வேண்டும். செவியுணவுடையவர் அவியுணவுடைய அமரரை நிகர்வர். உயர் நூற்கேள்வியே ஒருவனுக்கு உயிர்த்துணையாகும். ஒழுக்கமுடையார் வாய்ச்சொல் ஊன்றுகோல்போல உதவும். சிறிது கேட்பி னும் அதனால் பெரும்பயனுண்டாம். உயர்ந்தார் யாண்டும் இழிந்ததை உரையார். செவியுடையராயினும் கேள்வியில்லாதவர் செவிடரேயாவர். நுணுகிய கேள்வியில்லாதவர் பணிவுடையரா கார். கேள்வியில்லாதவர் வாழ்ந்தாலும் செத்தாலும் ஒன்றே.

சஉ-வது கேள்வி முற்றிற்று.

# ௪௩-ம் அதிகாரம் அறிவுடைமை.

அஃதாவது அறிவுடையாரது தன்மை. அறிவாவது நல்லது இது, தீயது இது, என எவற்றின் இயல்புகளையும் உள்ளவாறு உணர்தல். கல்வி கேள்விகளின் பயனாக இது கனிந்து தோன்றும் ஆதலால் அவற்றின் பின் இது வைக்கப்பட்டது.

421 உற்ற அறிவால் உயர்நம்பி அற்றமின்றிக்
கொற்றமுற்றான் என்னே குமரேசா—பெற்ற
அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண். (க)

இ—ள்.

குமரேசா! பாண்டியன் அறிவுடை நம்பி அறிவின் மாட்சியால் குற்றம் அற்றவனாய் ஏன் கொற்றமுற்றான் எனின், அறிவு அற்றம் காக்கும் கருவி; செறுவார்க்கும் உள் அழிக்கலாகா அரண் ஆம் என்க. உம்மை உயர்வு சிறப்பு; பிரித்தெடுத்து அரணோடு கூட்டின் இறந்தது தழுவிய எச்சவும்மையாம்.

அற்றம்என்பது கேடு, சிறுமை, அழிவு, குற்றம், மறைவு, மெலிவு, என்பவற்றை உணர்த்திவரும்.

கருவி அரண் என்னும் இரு பெயர்ச் சொற்களும் அறிவு என்னும் எழுவாய்க்குப் பயனிலைகளாய் நின்றன.

அறிவைக் கருவி எனவும் அரண் எனவும் கூறியது தன்னையுடையானைப் பாதுகாக்கும் அதன் தன்மை நோக்கி என்க.

அறிவானது உயிர்கட்கு இடையூறு உண்டாகாமல் காக்கும் கருவியாகவும், பகைவர்செய்யும் அழிவினையை நீக்கும் அரணாகவும், அமைந்துள்ளது என்பதாம்.

அகம் புறம் என்னும் ஈரிடங்களிலும் நின்று உளவாகின்ற பேரிடர்களை யெல்லாம் அறிவு நீக்கும் என்பதை இதில் கருதிக்காண்க. பழியும் கேடும் பயக்கத்தக்க இழிகுணங்களையும் பகைவர்செய்யும் அழிவினைகளையும் நீக்கித் தன்னையுடையானை அறிவு காக்கும் என்பது கருத்து.

இழிவும் பிறர்செய்யும் அழிவும் அறிவுடையானை அணுகா என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அறிவுடை நம்பிபால் உணரப்படும்.

கதை.

அறிவுடை நம்பி என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் மதுரையிலிருந்து அரசுபுரிந்த ஒரு பாண்டிய மன்னன். முறைதிறம்பாமல் இருநிலம் புரந்தவன். செம்மனத்தான், தண்ணளியான், செங்கோலன், மங்கையர்கள் தம் மனத்தை வாங்கும் தடந்தோளான் என்றபடி அழகு ஆண்மை முதலிய உயர்நலங்களெல்லாம் ஒருங்கே அமையப்பெற்றவன். கலைகள் பலவும் கசடறக் கற்றவன். உலகியலறிவில் உயரிய நிலையினன். மன்பதை இன்புற அன்புடன் ஆண்டவன். தன்னை நம்பினவரைத் தாய்போல் பேணும் தன்மையுடையவன். இவனது அறிவையும் அடுத்தாரைக் காக்கும் ஆற்றலையும் வியந்து "பாண்டியன் அறிவுடை நம்பி" என்று உலகம் இவனை வேண்டிப் புகழ்ந்தது. இவன், பிசிராந்தையார் பொத்தியார் முதலிய புலவர்களைத் தன்னுடன் பொருந்த வைத்துக்கொண்டு கல்வியின்பத்தைத் திருந்தத் துய்த்தான். மக்களால் எய்தும் இன்பமே இவ்வுலகில் மிக்கது என்று இவன் மனங்கொண்டிருந்தான்.

படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம் வாழுநாளே. என்று,

தான் கருதியிருந்ததை ஒரு கவியில் அமைத்துப் புவியில் நிறுத்தினான். எண்ணியதை எண்ணியாங் கெய்தி இசைதிசை பரப்பி இவன் இனிதுவீற்றிருக்குங்கால் பொறாமைகொண்ட அரசர்சிலர் இவனைப் பொருது வெல்லக் கருதிவந்தார். தனது மதிநலத்தால் அவரனைவரையும் இவன் மடக்கி வென்றான். அவரும் இவனது

ஆண்மையையும் அறிவையும் அஞ்சி வியந்து அழிக்கலாற்றாது அடங்கிச் சென்றார். இவன் அற்றம் யாதுமின்றி வெற்றிமுற்றும் உடையனாகித் தன் அறிவால் விளங்கியிருந்தான். அறிவு அற்றம் காக்கும் கருவி; செறுவார்க்கும் உள் அழிக்கலாகா அரண் என்பதை இவ் அறிவுடை நம்பியால் உலகம் அறிந்து தெளிந்தது. விரிவை மதிமாபில் காண்க.

சிறுமையும் தோல்வியும் அறிவுடையார்க்கு இல்லை என்பது இதனால் கூறப்பட்டது.

---

422 உள்ளந் திரியா தொடுக்கிப் பதஞ்சலிநேர்
கொள்ளவுய்த்தார் என்னே குமரேசா—துள்ளியே
சென்றவிடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு. (உ)

இ—ள்.

குமரேசா! பதஞ்சலியார் பல இடங்களிலும் செல்ல ஓட்டாமல் அடக்கித் தம் மனத்தை ஏன் ஒருநெறியே உய்த்தார் எனின், சென்ற இடத்தால் மனத்தைச் செலவிடாது தீது ஓரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு என்க.

சென்ற இடம் என்றது மனம் போதற்கு ஏதுவான புலன் வழிகளை. விடாது என்பது விடா என நின்றது. விடாது உய்ப்பது அறிவு என்றதனால் மனம் என்பது இதில் வருவிக்கப்பட்டது. மனத்தின் நிலைமையும் அறிவின் தலைமையும் அவ் இரண்டற்குமுள்ள உரிமையும் இயல்பும் இதில் உய்த்துணர்க.

சென்ற இடங்களிலெல்லாம் மனத்தைச் செல்லவிடாமல் தீமையின்நீக்கி நன்மையின்கண் செலுத்துவதே அறிவு என்பதாம்.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புலன்களினும் நல்லதன் நலனும் தீயதன் தீமையும் உள்ளவாறு உணர்ந்து நல்லதன் கண்ணேயே மனத்தை நாடிச் செலுத்தவேண்டும் என்பது கருத்து.

போனபோக்கெல்லாம் மனத்தைப் போகவிடின் பழிபாவங்கட்கு வாயிலாய இழிநிலைகளில் தெளியாது புக்குவிடும். ஆதலால் அதனை அங்ஙனம் போகவிடலாகாதென்க. மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம் என்றதுங்காண்க.

புகழ் அறங்களைப் பயக்கத்தக்க நெறி ஒன்றிலேயே அறிவுடையார் நன்றாக நின்று நிகழ்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பதஞ்சலிபால் உணரப்படும்.

## கதை.

பதஞ்சலி என்பவர் ஆதிசேடன் அமிசமாக இவ்வுலகில் அவதரித்தவர். இவர் சிறுபாம்புருவாகி அத்திரி முனிவருடைய பத்தினியாகிய அநசூயையின் கையில்விழுந்தார். காலைவேளையில் சூரியனை நோக்கிக் கைகுவித்து நின்ற அவ் அம்மை மெய்விதிர்ப்ப அவர்காலில் விழுந்து ஓர் அழகிய குழவியாயினர். பதத்தில் சலித்து விழுந்தமையால் இவர் பதஞ்சலி எனப்பட்டார். இவர் சிவபெருமானது திருநடனங்காணப் பெருங்காதல்கொண்டு அருந்தவம் புரிந்தார். அதன்பின் வியாக்கிரபாதர் என்னும் முனிவரோடு தில்லையை அடைந்து அங்கு எம்பெருமானது திருநடனங் கண்டு பெருமகிழ்வெய்தி எல்லாக் கலைகளையும் வழுவறத்தெளிந்தார். பாணினி முனிவர் அருளியுள்ள வியாகரணம் என்னும் அரிய வடமொழி இலக்கணத்துக்கு இவர் ஓர் பெரிய விரிவுரை இயற்றினர். ஒருவரும் அறியாத தனியிடத்தமர்ந்து உணர்வொளி விளங்க அவ் உரையினை இவர் அழகுற அருளினர்.

மனம் ஒருத்தன் வசப்படு மேலவன்
பினை வருத்தும் பிறப்பை அடைந்திடான்
மனம் ஒருத்தன் வசப்படா தோடுமேல்
நனி பிறப்பிடை நாளும் சுழலுமே (1)

நல்ல செய்து நரரை உயர்த்தவும்
அல்ல செய்தங் கழற்றிடை யாழ்ப்பவும்
வல்லதிந்த மனமலதையனே
இல்லையென்ன இயம்புமறையெலாம். (2)

என்றபடி மனத்தின் இயல்பை மதித்துணர்ந்து அதனை நடத்தும் முறைகளை உலகம் உணருமாறு சில நூல்களை இயற்றினர். அறிவைத் தலைவனாகவும், மனத்தைக் குதிரையாகவும், பிராணவாயுவைக் கலினமாகவும், பொறிகளை நெறிகளாகவும் உருவகம் செய்து இவர் அருளியுள்ள அருமையை அமரரும் வியந்தார். இவரது மதிநலம் இவரியற்றிய யோகசூத்திரங்களில் இனிது புலனும். மனத்தைச் சென்ற இடங்களிலெல்லாம் செலுத்தாமல் புலன்களின் திறமறிந்து செலுத்துவதே அறிவுடைமைக்குப் பயன் என்பதை உலகம் அறிய இவர் உணர்த்தினின்றார். விரிவைக்கோயிற் புராணத்தில் காண்க.

மனத்தை நெறி யறிந்து செலுத்தலே அறிவுடைமைக்குப் பயன்என்பது இதனால் கூறப்பட்டது.

---

423 உற்றவர்வாய்ச் சொல்லெல்லாம் ஓர்ந்தேன் உருத்திரர்மெய்
சுற்றமறக் கண்டார் குமரேசா—எற்றேனும்
எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. (ஈ)

இ—ள்.

குமரேசா! உருத்திரசன்மர் என்பவர் புலவர்களுடைய வாய்மொழிகளைக்கேட்டு அவற்றுள் மெய்ப்பொருளை ஏன் கண்டு கொண்டார் எனின், எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருளின் மெய்ப்பொருளைக் காண்பதே அறிவு என்க.

கேட்பினும், காண்பதே அறிவு என்று காண்க.

பெரியவர் சிறியவர் உறவினர் அயலினர் நட்டார் பகைவர் முதலாக எவர் சொல்லினும் என்பார் "யார் யார் வாய்க் கேட்பினும்" என்றார். யார் என்னும் வினாப் பெயர் உயர்திணை முப்பாலுக்கும் பொதுவாகுமாதலால் பெண்பாலாரையும் அது பேணி நின்றது.

மேல், தீது ஒரீஇ மனத்தை நன்றின்பால் உய்ப்பதே அறிவு என்றார்; தீதை நன்றாகவும் நன்றைத் தீதாகவும் பிறர் மயங்கிச் சொல்லினும் சொல்லுவராதலால் சொல்வாரது இயல்பு நோக்காது அச்சொற்பொருளின் மெய்ப் பயனை மயங்காமல் காணவல்லதே அறிவு என்று இதில் அறிவுறுத்தினார்.

யாதொரு பொருளை யாவர் யாவர் சொல்லக் கேட்பினும் அப்பொருளின் மெய்யான பயனைக் காணவல்லதே அறிவு என்பதாம்.

ஒரு பொருளைக்குறித்துப் பலர் பலவாறு சொல்லினும் அவற்றுள் மெய்யாய பொருளையே அறிவுடையார் ஆய்ந்துகொள்ளுவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உருத்திரசன்மர் பால் உணரப்படும்.

## கதை.

உருத்திரசன்மர் என்பவர் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர் மதுரையிலிருந்த உப்பூரி குடிகிழார் என்னும் தனவணிகருக்குப் புதல்வராய்த் தோன்றினார். தாய் பெயர் சாலினி. இவர் அறுமுகக் கடவுளின் அவதாரமாவர். உருத்திர மூர்த்தியின் சாபத்தால் சன்மித்தவராதலால் இவர் உருத்திர சன்மர் எனப்பட்டார். சன்மித்தல்—பிறத்தல். ஓகாது உணர்ந்த உண்மையுணர்வுடன் ஊமைப் பிள்ளையாய் இவர் அங்கு உறைந்திருந்தார். அக்காலத்தில் சங்கத்திலிருந்த நக்கீரர் முதலிய நல்லிசைப் புலவர் பலரும் தத்தமக்குத் தோன்றியவாறே நூலுரைகளைச் செய்து தம்மதே சிறந்தது என்று தனித்தனியே தருக்கித்துத் தருக்கம் புரிந்தார். இறைவனருளால் இவரது மேன்மையை அறிந்து அவரனைவரும் இவர்பால் வந்து தம் பொருள்களுள் மெய்ப் பொருளைத் தேற்றுமாறு போற்றினார். அப்பொருள்களை அவர், அவர்சொல்லக் கேட்டார். சொல்வாரது பெருமை சிறுமைகளை நோக்காமல் அப்பொருளின் பயனையும் நயனையும் நன்கு நோக்கினார். அவற்றுள் கபிலர், பரணர், நக்கீரர் என்னும் மூவருடைய பொருளை மெய்ப் பொருளென்று

கண்டு அனைவரும் ஒப்புமாறு உறுப்பின் குறிப்பானும், முகமலர்ச்சியானும் உணரக் காட்டினார். எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருளின் மெய்ப் பொருளைக் காண்பதே அறிவு என்பதை உலகம் இவர்பால் கண்டது. விரிவைத் (திருவாலவாய்க் காண்டத்தில் காண்க).

பின்பாவல ரெல்லாப்பெரு வணிகக்குல மணியை
அன்பாலழைத் தேகித்தம தவையத்திடை யிருத்தா
நன்பான்மலர் நறுஞ்சாந்துகொண் டருச்சித்தனர் நயந்தே
முன்பாலிருந் தருந்தீந்தமிழ் மொழிந்தாரவை கேளா. (1)

பல்காசொடு கடலிற்படு பவளஞ்சுடர் தரளம்
எல்லாநிறுத் தளப்பானென இயல்வாணிகக் குமரன்
சொல்லாழமும் பொருளாழமும் துலைநாவெனத் தூக்க
நல்லாறறி புலவோர்களும் நட்டாரிகல்விட்டார். (2)

இவற்றால் மேற்குறித்தவுண்மையை இனிது தெளிக.

எவர் எதைச் சொல்லினும் அதன் மெய்ம்மையை ஐயமறக் காண வல்லதே அறிவு என்பது இதனால் கூறப்பட்டது.

---

424 கண்டார படிக்காசர் காசருயர் நுண்பொருளும்
கொண்டெளிதீதன் சொன்னார் குமரேசா—கண்டதனை
எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு. (ச)

இ—ள்.

குமரேசா! படிக்காசர் சிவப்பிரகாசர் என்பவர் தம் கருத்தை எளிதாக விளக்கிப் பிறருடைய அரிய பொருள்களையும் ஏன் தெளிவாகக் கண்டார் எனின், தான் எண்பொருளவாகச்செலச் சொல்லி, பிறர்வாய் நுண்பொருள் காண்பது அறிவு என்க. தான் என்றது சொல்லுதற்கும் காணுதற்கும் உரிய ஒருவனைக்காட்டி நின்றது.

எண்பொருள—எளிய பொருளவாக; அஃதாவது தான் சொல்லுகின்ற பொருள் எளிதில் விளங்கும்படியாக.

செலச்சொல்லி—கேட்பவர் உள்ளம் உணர்ந்துகொள்ளு மாறு சொல்லி.

தான் சொல்லுகின்ற பொருள் அறிதற்கு அரியனவாயினும் கேட்பவர்க்கு எளிதில் விளங்குமாறு இனிது சொல்லி; பிறர் சொல்லுகின்ற நுண்ணிய பொருள்கள் காண்டற்கு அரியனவாயி னும் அவற்றை ஆய்ந்து காணவல்லதே அறிவு என்பதாம்.

காணுதல் சொல்லுதல் என்னும் அறிவுடையானது தொ ழில் அறிவின்மேல் நின்றது.

தான் கருதியதைப் பிறர் மனங்கொளச் சொல்லிப் பிறரு டைய அரிய கருத்தையும் எளிதில் அறியவல்லவனே உயரிய அறிவோன் என்பது கருத்து.

அறிவுடையார் எதையும் பிறர்க்கு இனிதாக விளக்கி அரிய பொருள்களையும் எளிதாக அறிந்துகொள்ளுவார்கள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை படிக்காசர் சிவப்பிர காசர் என்னும் இவ்விருவர்பாலும் உணரப்படும்.

## கதை.

படிக்காசுப்புலவர் என்பவர் சற்று ஏறக்குறைய இற்றை க்கு இருநூற்றைம்பது வருடங்களுக்குமுன் தொண்டை நாட்டி லே தென்களந்தை என்னும் நகரிலே செங்குந்தர் மரபிலே சேனை முதலியார் என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றினார். தாய் பெயர் காசினி, இவர் பல கலைகளையும் விரும்பிக்கற்றுப் பெரும் புலவராய் விளங்கியிருந்தார். பொருட்செல்வத்தைப்பெற முய லாமல் புலமைச் செல்வத்தையே இவர் பொருந்தித் துய்த்தார். அதனால் கொடிய வறுமையும் இவரைக் கூடியிருந்தது. புரவலர் பலரிடமுஞ்சென்று பரிசில்பெற்று வாழ்ந்தார். இனிய ஓசை களையுடைய சந்தக்கவிகள் பாடுவதில் இவர் சாலச்சிறந்தவர்.

"பண்பாகப் பகர்சந்தம் படிக்காசு அலாதொருவர் பகரொணாதே" என்று புலவர்களாற் பாராட்டப்பெற்றவர். ஒருநாள் இவர் சிதம்பரத்துக்குச்சென்று தில்லைப்பரமன் திருமுன் நின்று,

வேல்கொடுத்தாய் திருச் செந்தூர்க்கு அம்பியின் மீதுவைக்கக்
கால்கொடுத் தாய்நின் மணவாள னுக்குக் கவுணியர்க்குப்
பால்கொடுத்தாய்மத வேளுக்கு மூவர்பயப்படச் செங்
கோல்கொடுத்தாய் அன்னையே எனக்கேதுங் கொடுத்திலையே.

என்று சிவகாமியம்மைமீது நவமாக ஒரு கவிதை நயந்து பாடினர். அம்மை இரங்கி இவர் முன்னிருந்த வாசற்படியில் ஐந்து பொற்காசுகளை வைத்தார். கண்டார் புலவர். கொண்ட உவகைக்கு அளவே இல்லை. தெய்வத்தாயின் திருவருளை வியந்து அதனை எடுத்துச் சென்றார். அன்றுமுதல் இவரைப் படிக்காசுப்புலவர் என்று அனைவரும் இசைத்தார். இவரது இயற்பெயர் மறைந்தது. அவ்விசைப் பெயரோடு இவர் புகழ் எங்கும் பரந்தது. அரிய பொருள்களையும் எவர்க்கும் எளிதில் விளங்குமாறு தெளிவாகச் சொல்லுவர்.

பொல்லாத மூர்க்கருக் கெத்தனை தான்புத்தி போதிக்கினும்
நல்லார்க்குண்டான குணம் வருமோ குளிர்நள்ளிரவில்
சல்லாப்புடவை குளிர் தாங்குமோ நற்சந்தைதனில்
செல்லாப் பணஞ் செல்லுமோ தில்லைவாழுஞ் சிதம்பரனே.

இது, அறிஞர்கள் கூறுகின்ற அறவுரைகளைக் கேளாமல் செருக்குற்றிருந்த சில செல்வரைக் குறித்து ஒருசமயம் இவர் சொல்லியது. உள்ளீடில்லாத அற்பர்கள் ஆடம்பரமாக வெளித்தோற்றத்தில் காணப்படினும் அடக்கமுடைய நல்லார்போல உலகிற்கு அவர்கள் பயன்படார் என்பதையும், ஆன்றோர் உளத்தில் ஒரு பொருளாக அவர்கள் மதிக்கப்படாரென்பதையும், சல்லாப் புடவை செல்லாப்பணம் என எளிய உவமையால் விளக்கித்தெளியச் சொல்லிய இவரது அறிவுடைமையை அனைவரும் வியந்தார். அப்பயனில் செல்வரும் இவர் சொல்லின் குறிப்பை அறிந்து நயனுடையராயினர். பேச்சு வழக்கிலேயும் நுண்பொருளையும்

இவர் எண்பொருளவாகவே பேசுவார். தாம் கருதியதைப் பிறர் மனங்கொள்ளும்படி சொல்லுவதில் மிகவும் வல்லவரென்று இவர் மேன்மை பெற்றிருந்தார். அறிவுடையார் எண்பொருளவாகச் செலச்சொல்லிப் பிறர்வாய் நுண்பொருள் காண்பர் என்பதை இவர் எங்கும் காட்டிநின்றார். தொண்டைமண்டலசதகம், தண்டலையார் சதகம், புள்வேளூர்க் கலம்பகம் முதலிய சில நூல்களை இவர் செய்துள்ளார். (விரிவைப் புலவர் சரித்திரத்தில் காண்க.)

பட்டாரும் தென்களந்தைப் படிக்காசன் உரைத்ததமிழ்
வரைந்த ஏட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும் பரிமளிக்கும்
பரிந்தவ் வேட்டைத்
தொட்டாலும் கைமணக்கும் சொன்னாலும் வாய்மணக்கும்
துய்ய சேற்றில்
நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினது
நளினந்தானே.

இது, இவரது கவிகளின் இயல்பை வியந்து சொக்கநாதப் புலவர் சொல்லியது.

## சிவப்பிரகாசர் கதை.

சிவப்பிரகாசர் என்பவர் இற்றைக்கு இருநூற்றெண்பது வருடங்கட்குமுன் காஞ்சீபுரத்திலே தொண்டைமண்டல வேளாளர்களுக்குக் குருவாயிருந்த தேசிகர்மரபிலே குமாரசாமி தேசிகர் என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றினார். வேலாயுதம் கருணைப்பிரகாசம் என இரண்டு தம்பிமார்களும், ஞானம்பிகை என ஒரு தங்கையும் இவருக்கு உண்டு. தென்மொழி வடமொழிகளிலுள்ள பலவகை இலக்கியங்களையும் இளமையிலேயே இவர் தெளிவுறக்கற்றார். உயர் குணங்களெல்லாம் இவர்பால் இயல்பாகவே அமைந்திருந்தன. தம் இல்லின் புறத்திலிருந்த வாழைத் தோட்டத்துள் சில பசுவின் கன்றுகள் புகுந்து மேய்வதைக்கண்டிருந்த இவர் விரைந்துவந்து "அம்மா! அம்மா! நம் கொல்லையிலுள்ள வாழைக்கன்றுகளைக் கன்றுக்குட்டிகள் மென்று தின்றுவிட்டன" என்றார். இங்ஙனம் கூறும்பொழுது இவருக்கு வயது மூன்றாம். பாலப்பருவத்தே பழுதறப்பேசிய இவரது சீலத்தை வியந்து அனைவரும் மகிழ்ந்தார். கவிகள் பாடுவதில் மிகவும்

வல்லவர். இவரது கவிகள் செறிவு தெளிவு இனிமை முதலிய அழகுகளெல்லாம் இயல்புறவுடையன. எதையும் எண்பொருள வாகச்சொல்லும் நுண்புலமுடையவர். இவர் இலக்கணம் கற்க விரும்பி நெல்லையின் எல்லையிலுள்ள சிந்துபூந்துறையை அடைந்து அங்கிருந்த வெள்ளியம்பலம் என்னும தம்பிரானை வணங்கித் தம் கருத்தைத் தெரிவித்தார். அவர் இவரது புலமையை அறிய விரும்பி "கு" என்னும் எழுத்தை முதலிலும் முடிவிலும் நிறுத்தி ஊருடையான் என்பதை இடையிலே வைத்து அம்பலவாணர் மீது ஒரு வெண்பாப் பாடுக என்றார். உடனே இவர்,

குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழல்
முடக்கோடு முன்னம் அணிவாற்கு—வடக்கோடு
தேருடையான் தெவ்வுக்குத் தில்லைதோல் மேற்கொள்ளல்
ஊருடையான் என்னும் உலகு. என்றார்.

குடக்கு—மேற்கு. அங்கு ஓடுவான் என்றது சூரியனை. கேழல் முடக்கோடு—பன்றியின் வளைந்த கொம்பு. இது திருமாலின் வராக அவதாரத்தைக் குறித்தது. வடக்கோடு தேர் என்றது தென்றலை; அதனைத் தேராக உடையவன் மன்மதன். எயிறு கொண்டார், கோடு அணிவார், தெவ் என்ற மூன்றும் அம்பலவாணரைச் சுட்டி நின்றன. தில்லை, தோல், மேற்கொள்ளல், என்பவற்றோடு ஊர், உடை, ஆன், என்பவற்றை முறையேகூட்டி அவருக்குத் தில்லை ஊர், தோல் ஆடை, ஆன் வாகனம் என்று அமைத்துக்காண்க. தம்வாய் நுண்பொருளை எளிதில் கண்டு தெளிவாகக் கூறிய இவரது அறிவுடைமையை வியந்து தம்பிரான் மிகவும் மகிழ்ந்தார். எண்பொருளவாகச் செலச்சொல்லித் தான் பிறர் வாய் நுண்பொருள் காண்பது அறிவு என்பதை உலகம் இவர் பால் கண்டது. சோணசைலமாலை, நால்வர் நான்மணிமாலை, திருவெங்கைக்கோவை, திருக்கூவப் புராணம், பிரபுலிங்க லீலை, வேதாந்த சூடாமணி முதலிய நூல்கள் பல இவரால் செய்யப்பட்டுள்ளன. விரிவைத் திருவெங்கைக் கோவையில் காண்க.

அறிவுடையார் அரியபொருளையும் எளிதாகக்கண்டு தெளிவாகச் சொல்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

425 மண்டிபுகழ்ச் சீனக்கன் மாறுதேன் ஓர்நிலையாக்
கொண்டிருந்தான் நட்பைக் குமரேசா—கண்ட
உலகந் தழீஇய தொட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்ல தறிவு. (௫)

இ.—ள்.

குமரேசா! சீனக்கன் தான் கொண்டிருந்த நட்பில் என்றும் கோடாமல் ஒரு நிலையாகவே ஏன் நின்றிருந்தான் எனின், உலகம் தழீஇயது ஒட்பம்; மலர்தலும், கூம்பலும் இல்லது அறிவு என்க. தழுவுவது என்பது தழீஇயது என நின்றது.

தழீஇயது ஒட்பம்; இல்லது அறிவு; எனத் தனித்தனி இயைத்துக்காண்க. உலகம் என்றது உயர்ந்தோரை.

உலகம் தழீஇயது ஒட்பம்—உயர்ந்தோரை நட்பாக்குவது ஒருவனுக்கு ஒட்பமாம்.

ஒட்பமும், அறிவும், ஒன்றே யெனினும் நுட்பநோக்கில் அவ்விரண்டற்கும் சிறிது வேறுபாடு உண்டு என்க. முன்னது மக்களது இயற்கை அறிவையும்; பின்னது, கல்வி கேள்விகளா லுறு செயற்கை அறிவையும் குறித்து நின்றது.

உயர்ந்தோரை நட்பாக்குவது ஒருவனுக்கு ஒட்பமாம்; அங்ஙனம் நட்டபின் மலர்தலும் கூம்பலும் இன்றி என்றும் ஒருபடியாக நின்றுவிடுவதே அறிவாம் என்பதாம்.

இனி, உலகத்தைத் தழுவி நடப்பதே ஒட்பமாம்; நன்றுங்கால் மகிழ்தலும் அன்றுங்கால் வாடுதலும் இன்றி என்றும் ஒரு நிலையா இருப்பது ஒருவனுக்கு அறிவாம் எனவும் இது பொருள்படும்.

அறிவுடையார் ஒருவரோடு நட்புக்கொண்டால் எவ்வகையானும் பின் மாறுபடாமல் அவர்பால் ஒரு நிலையாகவே நின்று திகழ்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சீனக்கர்பால் உணரப்படும்.

## கதை

சேனக்கர் என்பவர் சோழ நாட்டிலே அரசூர் என்னும் நகரிலே வேளாளர் குலத்திலே விளங்கியிருந்தவர். இவரது காலம் இற்றைக்கு ஆயிரம் ஆண்டுகட்கு முன்னராகும். இவர் சோழ மன்னனுக்கு அமைச்சராயிருந்தவர். அறிவும் திருவும் அமையப்பெற்றவர். இல்லையென்னாமல் எதையுங்கொடுக்கும் வள்ளற் குணமுள்ளவர். யாவரிடத்தும் இனிய பண்பினர். எவரையும் நட்பாக்கும் தகைமையுடையவர். பொய்யாமொழிப் புலவரோடு இவர் பெருநண்புகொண்டிருந்தார். ஒருநாளிரவு இவ் இருவரும் ஒரு மஞ்சத்தில் அமர்ந்து இனிய மொழிகள் பல இயம்பியிருக்குங்கால் முதலியார் வேலையின் நிமித்தம் வெளியேசென்றார். புலவர் அதில் அயர்ந்து உறங்கினார். சிறிது பொழுது கழிந்தபின் முதலியார் மனைவியார் அங்குவந்தார். தனது நாயகன் என்றே கருதி அம்மஞ்சத்தில் சார்ந்து தாமும் துஞ்சினர். பழி சிறிதும் இல்லாத அப்படுக்கையைச் சேனக்கர் வந்துபார்த்தார். ஒருவரும் அறியாமல் அவ் இருவருக்கும் இடையே புகுந்து ஐயமும் கவலையும் அணுவும் இன்றி அருந்துயில்கொண்டார். விடியுமுன் ஒருவர்பின் ஒருவர் எழுந்தார். மனைவியாரும் புலவரும் மனம் பதைத்து நொந்தார். முதலியார் அவரைத் தேற்றிப் பழமைபோலவே புலவரோடு பொருந்தியிருந்தார். நிலைமைமாறாத அவரது நட்புரிமையைப் புலவர் நினைந்து நினைந்து நெஞ்சம் உருகினார். இது நாடெங்கும் பரவ அரசன் அறிந்து புலவரை அழைத்து நிகழ்ந்தது யாது என வினவினன்.

தேரையார் செவ்விளநீர் உண்ணப் பழிசுமப்பர்
நாரியார் தாம் அறியார் நாம் அவளை நத்தாமை
கோரைவாய்ப் பொன் சொரியுங் கொல்லிமலை நன்னாட
ஊரைவாய் மூட உலைமூடி தானில்லையே.

என்று புலவர் தமது பழுதற்ற இயல்பை உலகறிய உரைத்தார். அரசனும் பிறரும் ஐயமறத் தெளிந்தார். மாறாமல் அன்புசெய்திருந்த முதலியாரது அறிவின் பெருமையை அனைவரும் புகழ்ந்து அவர்பால் அன்புகொண்டிருந்தார். மலர்தலுங்கூம்பலும் இன்

றி ஒரு நிலையாகவே அறிவுடையார் நட்புற்றிருப்பர் என்பதை உலகம் அவர்பால் உணர்ந்தது. விரிவைப் புலவர் சரிதையிற் காண்க.

கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது
வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போல் முன்மலர்ந்து பிற்கூம்புவாரை
நயப்பாரும் நட்பாரும் இல் (நாலடியார்)

உலகத்தை நட்பாக்கி ஒரு நிலையாகவே அறிவுடையார் ஒழுகுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

426 பண்டில்குக் கொப்பவேன் பத்தினியைக் காகுத்தன்
கொண்டுவிட்டான் கானில் குமரேசா—மிண்டியே
எவ்வ துறைவ துலகம் உலகத்தோ
டவ்வ துறைவ தறிவு. (சு)

இ—ள்.

குமரேசா! உலகம் உரைத்ததற்கேற்பத் தன் மனைவியைக் கானில் விடுத்து ஏன் இராமன் உறைந்தான் எனின், உலகம் எவ்வது உறைவது உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு என்க.

எவ்வது—எவ்வாற்றான். அவ்வது—அவ்வாற்றான்.

தங்குவது, இருப்பது என்பவற்றை உணர்த்திவரும் உறைவது என்னுஞ்சொல் ஒழுகுவது என்பதை இங்கு உணர்த்தி நின்றது.

உறைவது என்பதில் முன்னது வினையாலணையும் பெயர்; பின்னது தொழிற்பெயர் என்க

உலகம் எவ்வகையில் ஒழுகுகின்றதோ அவ்வுலகத்தோடு தானும் அவ்வகையில் அமைந்து ஒழுகுவதே ஒருவனுக்கு அறிவாம் என்பதாம்.

பல்லுயிர்த் தொகுதியாகிய உலக ஒழுக்கமானது இறைவனது இயலியக்கமாகுமாதலால் அதற்கு மாறுபட்டு நடக்கலாகாது என்பது கருத்து.

உலகமுழுவதும் ஆளுந் தலைமையுடையனாயினும் தன் காலத்தில் உலகத்தவர்கள் எப்படி நடக்கின்றார்களோ தானும் அவர்களோடு இசைந்து அப்படியே நடப்பவனே அறிவினுயர்ந்தவன் என்பார் "உறைவது அறிவு" என்றார்.

எத்துணைப் பேராற்றல்களைத் தாம் எய்தியிருப்பினும் அறிவுடையார் உலகத்தோடு ஒத்தே வாழ்வர்என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமர் பால் உணரப்படும்.

கதை.

இராம மூர்த்தி இலங்கை புகுந்து இராவணனை வென்று சீதையைச் சிறைமீட்டிக்கொண்டு திருவயோத்தியை அடைந்து மணிமுடி புனைந்து அணி நிலம் புரந்துவருங்கால் தமது ஆட்சியைக் குறித்து உலகில் என்ன வதந்தி உலாவுகின்றது என்று ஒருநாள் ஒற்றரை உசாவினார். அவர்,

வங்தெறிகடலை மலைகளால் அடைத்து மதிளிலங்காபுரி
யழித்து
வெந்திறலரக்கர் குலத்தை வேரறுத்து விண்ணவர்கோன்றலை
யெடுப்ப
இந்திரசித்தைக் கொன்றிராவணனை யிமைந்து தலையறுத்
தருட்டும்
சுந்தரவில்லிக் கெதிரிலையென்று சொல்லுவார் தொல்லுல
குள்ளோர்.

என்று சொல்லித் தொழுது துவண்டு முன் நின்றார். இரகுவீரன் அப்புகழ் மொழிகளைக் கேட்டு அவ்வளவில் மகிழ்ந்துவிடாமல் உலகோர் சொல்வதையெல்லாம் ஒழியாது உரைமின் என்று உணர உரைத்தார். மன்னன் கட்டளையை மறுத்தற்கஞ்சி மனந்துணிந்து "இராவணன் கொண்டுபோய்ப் பன்னிரண்டு திங்கள் தன்னகரில் வைத்திருந்த சீதையை மறுபடியும் துணைவியாகக் கொண்டு மானபங்கத்தை மதியாமல் இராமன் வாழ்கின்றானே" எனவும் உலகில் வதந்தி நிகழுகின்றது என்று அவர் கலங்கி மொழிந்தார். இராமபிரான் கேட்டு மனங் கவன்று பரதன் முதலிய

… அதனைத்து உற்றதை உரை … விட்டுவிடும்படி செய் … யாவிருந்தாம், நாம் ஒப்புருந் தலை … உலகத்தோடு ஒழுகலே ஒழுங்காம் … அறிந்திருந்தார். உலகம் எவ்வது உறைவது … உலகத்தோடு அவ்வது உறைவதே அரசர்க்கு அறிவாம் என்பதை அன்று அவர் ஒழுகி உணர்த்தினார். விரிவை உத்தர காண்டத்தில் காண்க.

நீபவாளரக்கன் சிறையிடை யிருந்து செந்நெறித்
தீயிடைமூழ்கி
ஏயுமாதவர்க்கும் இமையவரானோர் யாவர்க்கும்
என்மனத்துக்கும்
தூயளாயிருந்தாளாயினும் உலகோர் சொல்லுறு பெரும்பழி
தனைக்கேட்
டேயுமென்னுள்ளம் உண்மையாற் பயமென் உலகுளோர்க்
கொத்திடாதாயின். (1)

ஓதநீர்வேலை உலகுளோர்இல்லை யெனத்தெளின் உள்ளதா
முள்ளது
தியாதொரு பொருளே இல்லையென் றுரைக்கின் இல்லையா
மிது வுலகியற்கை
ஆதலால் அவளை அருந்தவத்தோர்கள் ஆச்சிரமத்தயல்
விடுத்தும்
ஈதுநான் துணிந்தகாரியம் இனிவேறொன்றுவ தொரு
பொருளில்லை. (2)

இவை, தம்பியரை நோக்கி இராமர் உரைத்தன.

உலக இயலே மேவி ஒழுகிலே ஒருவன் உளமாறிவுக்குப் பயன் என்பது இதனால் கூறப்பட்டது.

427 ஆவதனை முன்னால் அறிந்துசெய்தார் எனிலங்கைக்
கோவதனைத் தேரான் குமரேசா—மேவும்
அறிவுடையார் ஆவதறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்.

இ—ள்.

குமரேசா! திருமால், பின் வருவதனை முன் அறிந்து காத்தார்; இராவணன் ஏன் அதனை அறியாமல் மயங்கினான் எனின், அறிவுடையார் ஆவதனை முன் அறிவார்; அறிவிலார் அஃது அறிகல்லாதவர் என்க.

ஆவது—ஆக்கடவது. அஃதாவது பின்னால் வர இருப்பது. அஃது என்றது ஆவதனை.

அறிகல்லாதவர்—அறியமாட்டார். இதில், கல், ஆ என்பன முறையே ஆற்றலையும் எதிர்மறையையும் உணர்த்தி நின்றன.

பின்னால் வருவதனை அறிவுடையார் முன்னரே அறிந்து கொள்வார்; அறிவில்லார் அதனை அங்ஙனம் அறியமாட்டார் என்பதாம்.

இனி, தனக்கு நன்மையாவதனை அறிவுடையார் அறிவார்; அறிவில்லார் அங்ஙனம் அறியார் எனவும் இது பொருள்படும்.

அறிவுடையார் இனி வரப்போவதை எதிரறிந்து தமக்கு ஆகவேண்டியதை முன்னதாகவே செய்துகொள்ளுவர்; என்பதும் அறிவில்லார் அங்ஙனம் அறியலாற்றாது வறிதேயிருந்து அஃதெய்தியபின் நைதலுறுவர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை திருமாலிடமும், இராவணன்பாலும் தேறப்படும்.

கதை.

இலங்கையர் வேந்தனாகிய இராவணன் வெள்ளியங்கிரியை அடைந்து அதன் தள்ளரும் பெருமையை யுணர்ந்து அரிய வீணையை விரைவிலேந்திப் பரமனை நோக்கிச் சாமகானஞ் செய்தான். வீணையின் இசையுடன் கலந்து மெய்யன்போடு பாடின அவனது வேத கீதத்தை வியந்து இறைவன் இரங்கி முன்றரைக் கோடி ஆயுளும் மூவுலக உரிமையும் பிறவும் அருளி அவனைப் பேணி விடுத்தார். அவன் பெற்றுவருங்கால் திருமால் உணர்ந்

தார். அந்நெடிய வாழ்நாளுடன் அவனை விட்டுவிடின் பின் நிகழ விருக்கும் தமது இராமாவதாரத்தில் அவனை வெல்வது அரிது என்று முன்னமே மேவி அறிந்தார். அதனைக் கெடுக்க விரும்பி ஒரு முனிவடிவங்கொண்டு அவன் முன்னே தோன்றி இன்னுரையாடினர். அவன், பெற்றதும் உற்றதும் முற்ற வுரைத்தான். "அந்தோ அரக்கர்குல திலகமே, முழுமுதற் பரமனை அணுகி அரைவரிசையாகவா ஆயுளைப் பெறுவது; இன்னம் அரை ஏறினால் நான்கு கோடி தேறுமே ஆதலால் முன்னம் தந்த மூன்றரைக் கோடியும் ஒழிய அரைக்கோடி மாத்திரம் இன்னம் ஈந்தருள்க" என்று அம்முன்னவன் பால் போய் இன்னும் மொழிக என்று மாயவன் மூட்டி விடுத்தான். ஆவதை அறியாமல் இராவணன் ஓடினன். முன்னம் அருளின மூன்றரைக்கோடியும் ஒழிய இன்னம் அரைக்கோடி ஆயுளை இனி ஈந்தருள் என்றான். மாயவன் செய்த மாயமிது என்று அத்தூயவன் நகைத்து அவ்வாறே ஆகுக என்றான். அவ் அரக்கர் தலைவன் அரையோடு மீண்டான். அம்முடிவை முடிவில் அறிந்தான். முன் அறியாது போனமைக்காக நெடிது வருந்தினான். முன் எண்ணியறிந்த மாயன் அதன் பயனைப் பின் நண்ணி மகிழ்ந்தான். அறிவுடையார் ஆவதனை முன்னமே எண்ணி அறிவார்; அறிவில்லார் அதனை அறியார் என்பதை இவ் இருவரும் அன்று உணர்த்தி நின்றார். விரிவை உத்தரகாண்டத்தில் காண்க.

மற்றவாளரக் கன்றனை மாயவன் முன்னம்
பெற்றமூன்றரைக் கோடியும் ஒழியநீ பேணி
உற்றபேரரைக் கோடிநாள் கேளென வுவந்து
பெற்றவாகன னிடத்தவன் பின்னருஞ் சென்று.

முன்னம் மூன்றரைக் கோடியும் ஒழியநீ முதல்வ
இன்னம் ஓரரைக் கோடிநாள் ஈந்தருள் என்ன
மன்னும் மாசுணப் பாயலான் மாயம் ஈதென்று
உன்னுமாமலை மகளுடன் உமாபதி நகைத்தே.

அன்னவாறரைக் கோடியே அளித்தனம் என்று
இன்னன் றுமமாம் இராவண னெனநிய மித்தும்

மின்னும் வார்சடைக் கண்ணுதல் விண்ணைவன் விடுப்பப்
போகனின் மாமுடிப் புட்பகம பொருந்திருன்போனான்.

இவற்றால் மேற்குறித்த உண்மை இனிது விளங்கும்.

ஆவதனை அறிவுடையார் முன்னதாகவே அறிந்துகொள்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

428 சூதாட அஞ்சாமற் சொனான் தருமரஞ்சிக்
கோதென்றார் என்னே குமரேசா—யாதேனும்
அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்சல் அறிவார் தொழில். (அ)

இ—ள்.

குமரேசா! சகுனி சூது ஆடுதற்கு அஞ்சாமல் சொன்னன்; தருமர் ஏன் அதனை அஞ்சி நடுங்கினர் எனின், அஞ்சுவது அஞ்சாமை பேதைமை; அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில் என்க.

அஞ்சுவது—அஞ்சப்படுவது. அஃதாவது பழி பாவங்களை விளைக்கத்தக்க இழிவினைகளை. இவை பலவாயினும் ஓரினமாதலால் அஞ்சுவது என ஒருமையாய் நின்றது. பேதைமை—அறியாமை.

அஞ்சாமை பேதைமை என்றதனால் அஞ்சுதல் அறிவாம் என்பது பெறப்படுமாயினும் அதனை யுடையாரது இயல்பை உணர உணர்த்தினர்.

மேல், ஆவதனை அறிவதே அறிவு என்றார்; இதில் அஞ்சுவதனை அஞ்சுவதே அறிவுடையாரது தொழில் என்றார்.

அஞ்சப்படுவதாய பழி பாவங்கட்கு அஞ்சாமை அறிவின்மையாகும்; அவற்றிற்கு அஞ்சுதல் அறிவார் தொழிலாம் என்பதாம்.

அறிவுடையார் பழிபாவங்களைச் செய்வதற்கு அஞ்சுவர்; அறிவில்லார் அவற்றை அஞ்சாமல் செய்துவிடுவர் என்பது கருத்து.

[illegible] என்பது [illegible] ஒன்றே [illegible] அது பற்றி [illegible] மனத்தி [illegible] வேறு பாடு காண்க.

பழி பாவங்களைப் பயக்கத்தக்க இழிவினைகளை அறிவில்லார் அஞ்சாமல் செய்யத் துணிவர் என்பதும்; அறிவுடையோர் அவற்றைச் செய்ய அஞ்சி அகலுவர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை சகுனி கதையாலும் தருமர் பாட்டமும் அறியப்படும்.

## கதை.

சகுனி, கன்னன், துரியோதனன் முதலியோர் வஞ்சமாகச் சூழ்ந்து பொன் மயமான அழகிய மாளிகை ஒன்றை அமைத்து அதன் புதுமை காணுமாறு தருமர் முதலிய ஐவரையும் பொருந்த அழைத்தார். அவரும் அருந்திய விருந்தனராய் அங்குச் சேர்ந்துவந்தார். கருதியவை எய்தலாம் என்று அவரனைவரும் பெரிதும் மகிழ்ந்து எதிர் உபசாரம் புரிந்து இசைந்து சூழ்ந்தார். வஞ்சமில்லாத ஐவரும் அவரோடு நெஞ்சங் கலந்து சென்று பெரியோரையெல்லாம் தொழுது முறைமையோடு தங்கி மறுநாள் புதிய மண்டபத்துட் புகுந்தார். அதன் அரிய நலங்களைக் கண்டார். பெருமகிழ்வு கொண்டார்.

இந்தமண்ட பஞ்சமைந்த இனிமைதன்னை என்சொல்வேன்
முந்தைமண்ட பங்களுக்கும் முதன்மையான தேவரூர்
அந்தமண்ட பத்துமில்லை அதனையன்றி மண்ணின்மேல்
எந்தமண்ட பத்துமில்லை இதனிலுள்ள எழிலரோ.

என்று வியந்துபுகழ்ந்து அங்குஅமைந்திருந்த ஆதனத்தின்மீது தம்பிமாருமதம் நயபுடைசூழத்தருமர் அமர்ந்திருந்தார். "அமுதம் போன்ற உணவை நாம் போய் அருந்தும் அளவும் பொழுது போக்காக வஞ்சமில்லாத நமது மாமனும் நீங்களும் கொஞ்சம் சூது ஆடுங்கள் பார்ப்போம்" என்று தருமரிடம் துரியோதனன் சூதோடு கூறினான். அதனைக் கேட்டவுடன் அவர் வாட்டமுற்றார். சகுனி நெருங்கினான். "நீதிநூல்கள் பலவும் ஓதி அறியினும் சூதாடல் தெரியாமை தீதேயாகும். வேந்தருக்கும் வீணருக்கும் அதுவேலைதானே. அம்முறையில் நாமிருவரும் அதனை

ஆடுதற்கு உரியவரே. ஆதலால் அஞ்சவேண்டாம்; நெஞ்சந் தேறுங்கள்; கொஞ்சம் ஆடுங்கள்; வாருங்கள் என்று அஞ்சாது கூவினான். தருமர் அஞ்சி வருந்தினார். அஞ்சப்படுவதாயபழிச் செயலுக்குப் பேதையர் அஞ்சார், அறிவுடையார் அஞ்சுவர் என்பதை உலகம் அவ்விருவர்பாலும் அன்று உணர்ந்து தெளிந்தது. விரிவைப் பாரதத்தில் காண்க.

போதுபோகுமாறிருந்து பொருதும் வருதி என்னவும்
சூதுபோரும் அஞ்சியே தொலைந்துளந் துளங்குவாய்
மோதுபோரில் எங்ஙனுய்தி இளைஞரோடு முடுகுதேர்
மீதுபோயுன் னகரிதன்னில் விரைவினெய்து கென்னவே.

இல்லெடுத்து விரகினோடும் எமையழைத்து மாயைகூர்
வல்லெடுத்து வருதலான் மறுத்தனன் மகிபனும்
சொல்லெடுத்து வைதவாய் துணிப்பனென்று கன்னன்மேல்
வில்லெடுத்தனன் பொறாமல் வீரவாளி விசயனே.

இவை, நேர்முகமாயிருந்து சூதாட அஞ்சுகின்ற நீவிர் போர் முகத்தில் எங்ஙனம் போராட வல்லீர் என்று கன்னன் சொன்ன இன்னலுரைகளைக் கேட்டு விசயன் கூறிய வீரமொழிகள். இவற்றால் மேற்குறித்த வுண்மை இனிது தெளிவாம்.

பழிச் செயல்களுக்கு அஞ்சுதலே அறிவுடைமையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

429 எள்ளாமல் காத்தன் எதிரறிந்து காத்தான்பின்
கொள்ளவில்லை நோயேன் குமரேசா—உள்ளி
எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய். (௯)

இ—ள்.

குமரேசா! தனக்கு வருவதனை முன்னதாகவே அறிந்து காத்த காந்தனை ஏன் துன்பம் அடையவில்லை எனின், எதிர

தாக்காக்கும் அறிவினார்க்கு அதிர வருவதோர் நோய் இல்லை என்க.

எதிரதா—முன்னதாகவே. அதிர—நடுங்க. இது அதிர்வு என்பதன் அடியாகப் பிறந்த வினை எச்சம்.

அதிர்வு—நடுக்கம். அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கஞ்செய்யும். தொல்காப்பியம்.

எதிர் காலத்தில் தன்னை எய்த இருக்கும் சேட்டை முன்னதாகவே மூடுகி அறிந்து அதன் மூலங்களை ஆய்ந்து அதனை விலக்கித் தன்னைக் காத்துக்கொள்ள வல்ல அறிவினையுடையார்க்கு அவர் நடுங்க வருவதொரு துன்பம் யாண்டும் இல்லை என்பதாம்.

அறிவினார்க்கு நோய் இல்லை எனவே அறிவில்லார்க்கு ஆஃது உண்டு என்பது பெறப்பட்டது.

பின்னர்த் தனக்குவரும் துன்பத்தை முன்னரே அறிந்து அதனின் நின்றும் நீங்கி அறிவுடையார் தம்மைப் பேணிக்கொள்வார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காந்தன்பால் உணரப்படும்.

கதை.

காந்தன் என்பவன் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர்க் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து அரசுபுரிந்த ஒருசோழமன்னன். கலைகேள்விகளில் வல்லுநன். உலகியலறிவோடு உயர்குணமுடையவன். அகத்தியமுனிவர்பால் பேரன்புகொண்டவன். அவரருளிய காவிரிநதியைத் தன்னிலமுழுதும் பரப்பிவளமுறச்செய்தவன். இவன் அரசுபுரிந்துவருங்கால் அரசகுலத்தை வேரறுத்துவந்த பரசுராமர் இவனையும் அழிக்கவந்தார். அவர் வரவை முன்னதாகவே இவன் உய்த்துணர்ந்தான். அவரோடு எதிர்நின்று அமர்செய்ய எவர்க்கும் இயலாது என்பதையும் அரசமரபினரையன்றிப் பிறரொருவரையும் அவர் கொல்லார் என்பதையும் இனிது தெளிந்தான். தன் காமக்கிழத்தியின் புதல்வனாகிய ககந்தன் என்பவனை அழைத்து அரசனாக்கிவைத்து உற்ற

தை உரைத்து வேறிடத்தில் ஒதுங்கியிருந்தான். மழுவாள்வீரர் மறுநாள் வந்தார். ககந்தன் அரசுக்குரிய முதன்மகன் அல்லன் என்பதை அறிந்தார். யாதுஞ் செய்யாது அகன்று சென்றார். நாட்கள் பல அழிந்தபின் காந்தன் தனது நகரை அடைந்தான். தான் முன்னறிந்து காத்ததனால் தன்னரசு இன்னலின்றியிருப்பதை இவன் எண்ணி இன்புற்றான். எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு அதிர வருவதோர் நோய் யாதும் இல்லை என்பதை அழுந்தியறிந்து அக மகிழ்ந்திருந்தான். [விரிவை மணிமேகலையில் காண்க]

மண்மரும் கறுத்த மழுவாள் நெடியோன்
தன்முன் தோன்றல் தகாதொழி நீயெனக்
கன்னி ஏவலிற் காந்த மன்னவன்
இந்நகர் காப்போர் யாரென நினைஇ
நாவலந் தண்பொழில் நண்ணார் நடுங்குறக்
காவற் கணிகை தனக்காங் காதலன்
இகழ்ந்தோர் காயினும் எஞ்சுதல் இல்லோன்
ககந்த னாமெனக் காதலிற் கூஉய்
அரசாளுரிமை நின்பால் இன்மையிற்
பரசு ராமனின் பால்வந் தணுகான்
அமர முனிவன் அகத்தியன் தனாஅது
துயர்நீங்கு கிளவியின் யான்தோன் றளவும்
ககந்தன் காத்தல் காகந்தி யென்றே
இயைந்த நாமம் இப்பதிக்கு இட்டீங்
குள்வரிக் கொண்டவ் வுரவோன் பெயர்நாள்.

[சிறைசெய்காதை.]

இவற்றால் மேற்குறித்த உண்மையை இனிது தெளிக.

முன் அறிந்து காப்பவனுக்கு இன்னல் யாதும் இல்லை என்பது இதனால் கூறப்பட்டது.

430 சொல்லியபசிர் எல்லாம் தருவனுற்றான் உத்தமனேன்
கொல்ல இழிந்தான் குமரேசா—நல்ல
அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர். (ம)

இ—ள்.

குமரேசா! ஒருபொருளும் இல்லாத தருவன் உயர் நலன்களையெல்லாம் ஒருங்கே அடைந்தான்; பெருந் திருவுடைய னுயிருந்தும் உத்தமன் ஏன் ஒன்றும்இலனுகி இழிந்தான் எனின், அறிவுடையார் எல்லாம் உடையார், அறிவிலார் என்னுடைய ரேனும் இலர் என்க.

எல்லாம் என்றதனால் மறுமையும் அடங்கும்.

இலார் என்னுடையர் ஏனும் என்றது உடையார் ஒன்றும் இலராயினும் என்பதை உள்ள நின்றது.

என் உடையர் ஏனும்—எவ்வளவு செல்வங்களை யுடையராயினும். உம்மை உயர்வு சிறப்பு.

மேல், அறிவுடையார்க்கு ஒரு தீங்கும் உண்டாகாது என்றார்; இதில் எல்லா நன்மைகளும் அவர்க்கு உளவாம் என்றார்.

பிற பொருள்கள் ஒன்றும் இலராயினும் அறிவுடையார் எல்லாமுடையவரே யாவர்; எல்லாமுடையவ ராயினும் அறிவில்லாதவர் யாதும் இலரே யாவர் என்பதாம்.

உயிர்கள் இன்புறத்தக்க உடைமைகள் யாவும் அறிவொன்றானே அடையப்படுமாதலால் அதனையுடையவர் எல்லாம் உடையர் என்றும்; அஃதில்லாதவர் எல்லா உடைமைகளையும் எய்தியிருப்பினும் தம் அறிவின்மையால் அவற்றை இழந்துவிடுவாராதலால் அவர் யாதும் இலரே யாவர் என்றும் இஃதுணர்த்தியதென்க. அறிவினது உண்மை இன்மைகளால் உண்டாம் நன்மை தீமைகளை இதில் உணர்ந்துகொள்க.

அறிவுடையவனே எல்லாச் செல்வங்களையும் பெறுவான் என்பதும், அஃதில்லாதவன் யாதும் அடையான் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை துருவன் உத்தமன் என்னும் இவ் இருவர்பாலும் உணரப்படும்.

கதை.

துருவன் உத்தமன் என்பவர் உத்தானபாதன் என்னும் மன்னனுடைய புதல்வர்கள். அவ் அரசனுக்கு மனைவியாயிருந்த சுநீதி சுருசி என்னும் இருவரிடமும் இவ் இருவரும் முறையே பிறந்தார். அரசன் இளந்தேவியால் முதிர்ந்த காதலையுடையனாயிருந்தான். ஆனதால் அவள் முதல்வியையும் புதல்வனையும் முனிந்து நீக்கினாள். அரசனும் இசைந்து யாதும் பேசாமல் அமைந்திருந்தான். மகனுடைய எளிய நிலைமையை நினைந்து சுநீதி துயர் மிகுந்து நொந்தாள். துருவன் இயல்பாகவே நிறையும் ஆண்மையும் அறிவும் உடையவன். தாயின் உளம் தெளியுமாறு இதம் பல மொழிந்தான். தனியே பிரிந்தான். அறிவே துணையாக அருந்தவம் புரிந்தான். அதில் நேர்ந்த அல்லல்களெல்லாவற்றையும் கடந்து தவத்தின் எல்லையைக் கண்டான். இறைவன் அருளைக் கொண்டான். அதனால் சிறந்த திருவையும் என்றும் அழியாத உயர்ந்த பதவியையும் இவன் எய்தி மகிழ்ந்தான். இவன் இங்ஙனம் இருக்குங்கால் தந்தை இறந்தான். தம்பியான உத்தமனே அரசுரிமையைப் பெற்றான். இவன் திண்ணிய நெஞ்சினன் ஆயினும் நூலறிவும் கேள்வியும் சாலப் பெறாதவன். அரச முறைமையை மறந்தான். மது முதலிய இழிந்தவற்றைப் பருகி எவரையும் மதியாதிருந்தான். இவன் மனைவி பெயர் பதுமினி. அவள் அழகும் குணமும் அமையப் பெற்றவள். அவளோடு பொருந்தியிருந்து இவன் அரும்போகம் துய்த்து வருங்கால் ஒரு நாள் அவளையும் கள் அருந்துக என்றான். அது கொடியதினும் கொடிது என்று அவள் கடிது மொழிந்தாள். அதனால் அவளை இவன் வெறுத்து விலக்கினான். அவள் விலகியிருக்குங்கால் சாலபோதகன் என்

னும் அரசனொருவன் அவளைக் கவர்ந்து சென்று தன் கடி நகர் புகுந்தான். தனியே வைத்தான். அவனது தீய எண்ணத்துக்குச் சிறிதும் இடங்கொடாமல் அத்தூயவள் சூழ்ந்தாள். அவன் கைவசப்பட்டிருந்தும் மதி நலத்தால் தன் கற்பைக் காத்துப் பதுமினி காலங் கருதியிருந்தாள். அவ் உத்தமி அங்ஙனம் இருப்ப உத்தமன் என்னும் இவ்வுணர்விலி வேட்டையின்பொருட்டு ஒருநாள் காட்டுக்குச் சென்று அங்கு வந்திருந்த இயக்கனொருவனால் கொல்லப்பட்டான். அரசழிந்ததென்று உலகில் அவலம் மிகுந்தது. தன் அறிவுடைமையால் உயர்பதம் எய்தியிருக்கும் துருவன் தன் குலம் அழிந்ததென்று உணர்ந்து வருந்தி விரைந்து வந்தான். பதுமினியிருக்கும் இடத்தை அடைந்து சால போதகனை வென்று அவளைச் சிறை மீட்டுக்கொண்டு தன்னகர் புகுந்து பிரமி என்னும் ஒரு கன்னியை மணந்து தம்பியின் மனைவியைத் தனிவைத்துப் பேணி மணி முடி புனைந்து அரசை அணிபெற நடத்தி கலுபன் வற்சன் என்னும் இரு புதல்வரைப் பெற்று இசை திசை பரப்பி இருபத்தாறாயிரம் ஆண்டுகள் இவ்வுலகை இன்புற ஆண்டு மீண்டும் தன் பதம் மேவியிருந்தான். இவனது பதத்துக்குத் துருவமண்டலம் என்று பெயர். இது சப்தருஷி மண்டலத்துக்கு மேல் பதின்மூன்றிலக்கம் யோசனை தூரத்தில் இருக்கின்றது என்பர். ஒன்றும் இல்லாதவனாயிருந்தும் தன் அறிவுடைமையால் அரச திருவையும் அழியாத அரிய பதவியையும் துருவன் அடைந்தான். எல்லா நலங்களையும் உடையனாயிருந்தும் உத்தமன் அரசும் இழந்து தானும் இழிந்து அழிவை யடைந்தான். அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவு இலார் என்னுடையரேனும இலர் என்னும் உண்மையை உலகம் இவ் இருவர்பாலும் முறையே உணர்ந்தது. (விரிவைக் காசி காண்டத்தில் காண்க.)

அறிவினான் மாட்சியொன் றில்லா ஒருவன்
பிறிதினான் மாண்ட தெவனும்—பொறியின்
மணிபொன்னும் சாந்தமும் மாலையுமற் றின்ன
அணியெல்லாம் ஆடையிற் பின். (பழமொழி.)

இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.

அறிவே ஒருவனுக்குக் கேடும் பழியும் அடையாவண்ணம் காக்கும் கருவியாகும். மனத்தை நெறிப்படுத்திச் செலுத்துவதே ஒருவன் அறிவுடைமைக்குப் பயனும். எவர் எதைச் சொல்லினும் அதன் உண்மையை உய்த்துணர்வதே உயர் அறிவாகும். தான் கருதியதைப் பிறர்க்குத் தெளிவாக வுணர்த்திப் பிறரது அரிய கருத்தையும் எளிதில் உணர்வோனே உயரிய அறிவோன். நல்ல அறிவுடையவர் என்றும் ஒருபடியாகவே நின்று திகழ்வர். தனக்கு ஆகவேண்டியதை அறிவுடையார் முன்னரே அறிந்து கொள்வார். அவர் பழி பாவங்கட்கு அஞ்சுவர். அறிவில்லார் அவற்றிற்கு அஞ்சார். முன் அறிந்து காப்பவனுக்கு இன்னல் யாதுமில்லை. ஒன்றும் இல்லாதவராயினும் அறிவுடையார் எல்லாம் உடையரேயாவர். அஃதில்லாதவர் எல்லாம் உடையராயினும் யாதும் இலரேயாவர்.

சங-வது அறிவுடைமை முற்றிற்று.

# சச-ம் அதிகாரம் குற்றங்கடிதல்.

அஃதாவது செருக்கு, சினம், சிறுமை, உலோபம் முதலிய குற்றங்களை அரசன் அறவே ஒழித்தல். இவற்றைக் குற்றமென்று காண்டலும் கடிதலும் அறிவுடையார்க்கே முடியுமாதலால் அறிவுடைமையின்பின் இது வைக்கப்பட்டது. குற்றங்கடிதலே அறிவுடைமைக்குப் பயன் என்று அடிகள் உணர்த்திய அரிய வுண்மையை அறிவுடையேம் என்பார் சிறிது இங்கு ஆய்தல் வேண்டும்.

431 வென்றி நெடுஞ்செழியன் மெய்த்திருவின் மேன்மையை
குன்றாத தென்னே குமரேசா—என்றும் (ன்றும்
செருக்குஞ் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து. (க)

இ—ள்.

குமரேசா! நம்பிநெடுஞ் செழியன் திருவான்து ஏன் மிகவும் பெருகிநின்று மேன்மையுற்றது எனின், செருக்கும், சின மும் சிறுமையும் இல்லார் பெருக்கம் பெருமித நீர்த்து என்க.

செருக்கு—செல்வக் களிப்பு. வடநூலார் இதனைத் தன மதம் என்பர்.

பெருக்கம்—செல்வம்; பெருகுதலுடையது என்னும் ஏது வான் வந்தது. சிறுமை என்றது வரம்பு கடந்த காமத்தை; சிறிதும் அறிவில்லாத சிறியார் செய்கை ஆகலின் அது சிறுமை எனநின்றது.

பெருமித நீர்த்து—மேன்மையான நீர்மையையுடையது.

களிப்பு, வெகுளி, காமம் ஆகிய இக்குற்றங்கள் இல்லாதா ரது செல்வம் மேன்மையான தன்மையையுடையது என்பதாம்.

செருக்கும் சினமுமுடைய சிறியாரது செல்வம் இழிவி னைகளுக்கே ஏதுவாகி இனிது பயன்படாது வறிதே கழியும் என்பது குறிப்பு.

சிறுமையில்லாதாரது செல்வமே என்றும் பெருமைபெறும் என்பது கருத்து

செருக்கு முதலிய இழிகுணங்கள் இல்லாத செல்வம் எல் லார்க்கும் இனிது பயன்பட்டு யாதும் தேய்வின்றி அப்புண்ணிய த்தின் பயனாக என்றும் நின்று நிலவி எங்கும் மேன்மை எய்தும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நம்பி நெடுஞ் செழியன் பால் உணரப்படும்.

கதை

நம்பி நெடுஞ்செழியன் என்பவன் இற்றைக்கு ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் மதுரையிலிருந்து அரசு புரிந்த ஒரு மதிகுல மன்னன். அரசர்க்கு வேண்டிய அறிவு ஊக் கம் முதலிய உயர் குணங்களெல்லாம் ஒருங்கேயுடையவன். சிறந் த போர்வீரன். நிறையும், பொறையும் முறையும் உள்ளவன்.

ஆய கலைகள் அறுபத்துநான்கினையும் ஏய உணர்ந்தவன். குற்றம் களைதலே உணர்வின் பயன் என்பதை முற்றும் உணர்ந்தவன். மிகை செய்யும் பகைவர்மாட்டன்றிப் பிறரெவர்மாட்டும் நோவன செய்யான். ஆருயிர்க்கெல்லாம் ஆவன செய்தே அன்புடன் ஆண்டான். தன்னை ஒருபோதும் வியவான். நன்மை பயவாத வினையைக் கனவிலும் நயவான். பெருந்திருவும் அருந்திறலும்பொருந்தியிருந்தும் செருக்கு முதலிய இழி குணங்கள் சிறிதும் அறியான். இவனது செல்வம் தெய்வ நதிபோல் பெருகி எல்லாவுயிரும் இன்புற நின்றது. செருக்கும், சினமும், சிறுமையும் இல்லாரது பெருக்கம் பெருமிதம் அடையும் என்பதை உலகம் இவன்பால் கண்டது. விரிவை வழுதி மரபில் காண்க.

தொடியுடைய தோள் மணந்தனன்
கடிகாவிற் பூச் சூடினன்
தண்கமழும் சாந்து நீவினன்
செற்றோரை வழி தபுத்தனன்
நட்டோரை உயர்பு கூறினன்
வலியரென வழி மொழியலன்
மெலியரென மீக் கூறலன்
பிறரைத் தான் இரப்பறியலன்
இரந்தோர்க்கு மறுப்பறியலன்
வேந்துடை அவையத்து ஓங்குபுகழ் தோற்றினன்
வருபடை எதிர்தாங்கினன்
பெயர் படை புறங்கண்டனன்
கடும் பரிய மாக்கடவினன்
நெடுந்தெருவில் தேர்வழங்கினன்
ஓங்கியல களிறூர்ந்தனன்
தீஞ்செறி தசும்பு தொலைச்சினன்,
பாணுவப்பப் பசி தீர்த்தனன்
மயக்குடைய மொழி விடுத்தனன்
செய்ப எல்லாம் செய்தனன் ஆகலின்

இடுக ஒன்றோ சுடுக ஒன்றோ
படுவழிப் படுகஇப் புகழ்வெய் யோன் தலையே.

(புறநானூறு)

இஃது இவன்பால் அமைந்திருந்த குண நலங்களை வியந்து பேரெயின் முறுவலார் என்னும் புலவர்பெருமான் பாடியது. செருக்கு முதலிய குற்றங்கள் இன்றி அரசாட்சிக்குரிய குண மாட்சிகளே இவன்பால் குடிகொண்டிருந்தன என்பது இதனால் இனிது விளங்கும்.

தன்னை வியந்து தருக்கலும் தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்—முன்னிய
பல்பொருள் வெஃகுஞ் சிறுமையும் இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை. (திரிகடுகம்.)

செருக்கு முதலிய குற்றங்கள் இல்லாதவனது செல்வம் என்றும் சிறந்து விளங்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

432 ஏனோ இளவெளிமான் ஈதலின்றி ஏதமுற்றான்
கோனா யிருந்தும் குமரேசா—ஈன
இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு. (உ)

இ—ள்.

குமரேசா! இளவெளிமான் அரசனாயிருந்தும் ஈதலின்மையால் ஏன் ஏதம் உற்றான் எனின்; இவறலும், மாண்பு இறந்த மானமும், மாணா உவகையும், இறைக்கு ஏதம் என்க.

இறைக்கு ஏதம்—அரசனுக்குக் குற்றம்.

இவறல் என்பது ஆசை, உலோபம், மறதி, என்பவற்றைக் குறித்துவரும் ஒருசொல்.

மாண்பு இறந்த மானம்—மாட்சிமையில்லாத மானம்; அஃதாவது தன்னையுடையானுக்கு மேன்மையைத் தராத இழிகுணம்.

இதனை அகங்காரம், அபிமானம் பிடிவாதம் என்னலாம். கவரிமா வைப்போல இளிவரின் வாழாத உயர் குணமே மாண்பு இறவாத மானமாய்; அது நிறையும் பணிவுமுடைய பெரியோரது நீர்மையாகும்; அது பெருந்தன்மை எனவும் மரியாதை எனவும் வழங்கப்படும்.

மாணா என்றது மாண்பு என்பதன் அடியாகப் பிறந்த எதிர்மறைப் பெயரெச்சம். வரம்பின்மையை அஃது உணர்த்தி நின்றது.

மாணா உவகை—வரம்புகடந்த உவகை; அஃதாவது பெருங்களிப்பு.

உலோபமும், அகங்காரமும், பெருங்களிப்பும், அரசனுக்குக் குற்றமாகும் என்பதாம்.

கொடையும் மானமும் நிறையும் இவற்றிற்கு எதிராய் நின்று இறைக்குக் குணமாம் என்க.

இவறல் முதலியன அரசியற்குரிய உயர் நலங்களை யெல்லாங் கெடுத்து இழிவையும் அழிவையும் கொடுத்துவிடும் ஆதலால் அவை இறைக்கு ஏதம் ஆயின.

உலோபமுதலிய இழி குணங்களை அரசன் அறவே ஒழிக்க வேண்டும் என்பதும், ஒழியானாயின் அவன் இழிவே அடைவான் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை இளவெளிமான்பால் உணரப்படும்.

## கதை

இளவெளிமான் என்பவன் பலநூற்றாண்டுகட்கு முன்னர்ச் சோழநாட்டிலேயிருந்த சிற்றரசனாகிய வெளிமான் என்பவனுடைய தம்பி. மன்னனான வெளிமான் மிக்க தண்ணளியுள்ளவன். கல்வியருமை யறிந்தவன். புலவர்கள்பால் பேரன்புடையனாய்ப் பெரும் பொருள் தந்து அரும் புகழ்கொண்டவன். அவன் இடையே கடிதின் மாண்டான். அதனால் பின்னவனாகிய இளவெளிமானே மன்னவனானான். இவன் பேராசையுள்ளவன். பணிவு இல்லாதவன். அரசர்க்குரிய துணிவும் இல்லாதவன். ஆயினும்

தன்னையே வியந்து தருக்கியிருந்தான். தனக்குக் கிடைத்த பதவியை யெண்ணிப் பெருங்களிப்புற்றுப் பொருந்திய போகங்களையே பருகித் துய்த்தான். இவன் இங்ஙனம் இருந்துவருங்கால் பெருஞ் சித்திரனார் என்னும் புலவர்பெருமான் அங்கு வந்தார். வெளிமான் இறந்தமைக்கு மிகவும் இரங்கினார். அவன் இறக்கு முன்னமே ஒரு பெருந்தொகைப் பொருளை இவருக்குக்கொடுக்கும்படி தம்பியிடம் கூறியிருந்தான். அப்படியிருந்தும் புலவரைக்கண்டு இவன் போற்றவில்லை. உள்ளிருந்தபடியே ஒருவனிடம் சிறிது கொடுத்துப் புலவருக்கு அனுப்பினான். தனது அருமையை அறியாத இவனது சிறுமையைப் புலவர் அறிந்து சினந்து ஒன்றுங்கொள்ளாது உடனே மீண்டார். குமணனைப் போய்க் கண்டார். அப்புண்ணியவேந்தன் புலவரைப்போற்றி மகிழ்ந்து பெரும்பொருளோடு யானையும் பிறவும் அன்புடன்கொடுத்தான். புலவர் அவனைப் புகழ்ந்து மகிழ்ந்து யானைமேலேறி ஆரவாரத்துடன் இளவெளிமான் ஊரையணுகி அவனது காவல் மரத்தில் யானையைக்கட்டிவிட்டு அவன்பால் வந்தார். காவல் மரம் என்பது அரசர் தமது ஆட்சியின் மாட்சிக்கு அறிகுறியாக தம் நகர்ப்புறத்தில் ஒரு பொழிலமைத்து அதனடுவே வைத்துப் போற்றப்படுவது. அஃது இதுபொழுதுள்ள கொடிபோல்வதாம். பகைவர் வந்து அதனைத் தீண்டினும் அதனையுடைய அரசர்க்குத் தோல்வியும் அழிவும் வந்ததாகக் கருதப்படும். அத்தகைய கடிமரத்தில் தமது கரியைப் பூட்டிவிட்டுக் கடிதின் வந்து அவனை வெளியே வரும்படி அழைத்தார். அவனும் வந்தான் "இழவெளிமானே! என்று சிறப்புழகரத்தோடு அவனை யிருத்தி விளித்தார். அறிவுடையாரை மதித்தலே அரசர்க்கு அழகாம்; இல்லை என்பதைவிட இவ்வுலகில் மிக இழிந்தது இல்லவேவ இல்லை; அவ் இழிவை நீ மேற்கொண்டாய்; அஃது இறைமைக்கு ஏதமாம் என்பதை நீ எண்ணலை; எப்போல்வாரை மதித்துப் போற்றுவார் இவ்வுலகில் பலருளர் என்பதற்கு உன் காவல் மரத்தில் உள்ள கரியே கரியாம்; அதனை நீ இப்பொழுதே போய்க் காண்; உன் குற்றம் நீங்குமாறே இங்கு வந்து யான் உற்றதை உணர்த்தினேன்; உணர்விருந்தால் உணர்" என்று அப்புலவர் பெருமான் உரைத்துவிட்டு உவா

வுடன் உவந்து சென்றார். அதுமுதல் அவன் அனைவராலும் இழிக்கப்பட்டான். இவறலும், மாண்பு இறந்த மானமும், மாணா உவகையும் இறைக்கு ஏதம் என்பதை இளவெளிமான் எண்ணி யெண்ணி நொந்தான். விரிவைப்புறநானூற்றில் காண்க.

இரவலர் புரவலை நீயும் அல்லை
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்ல
இரவலர் உண்மையும் காணினி இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானை எம் பரிசில்
கடுமான் தோன்றல் செல்வல் யானே.

இஃது, இளவெளிமானை நோக்கிப் பெருஞ்சித்திரனார் இசைத்தது. மேற்குறித்த உண்மை இதனால் இனிது புலனாம்.

உலோபமும் வீண் பெருமையும் அரசனுக்குப் பெருங் குற்றமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

433 பண்டுசிறு குற்றமுறப் பார்த்தாள் மருதிதுயர்
கொண்டு நொந்தாள் என்னே குமரேசா — கண்ட
தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். (௩.)

இ—ள்.

குமரேசா! மருதி என்பவள் தன்னிடம் வந்த சிறிய குற்றத்தையும் பெரிதாகக் கருதி ஏன் வருந்தி நொந்தாள் எனின், பழி நாணுவார் தினைத்துணையாங் குற்றம் வரினும் அதனைப் பனைத்துணையாக் கொள்வர் என்க.

நாணுவார் கொள்வர் என்றதனால் நாணார் அங்ஙனம் கொள்ளார் என்பதாம்.

தினை பனை என்பன குற்றத்தின் சிறுமை பெருமைகளைக் குறித்து நின்றன. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணை

யாங்கொள்வர் பயன் தெரிவார் என்று மேலுரைத்ததையும் ஈண்டு மேவி யுணர்க.

தம்பால் தினை அளவாம் குற்றம் வரினும் பழியை அஞ்சுகின்றவர் அதனைப் பனையளவாகக் கருதி வருந்துவர் என்பதாம்.

சிறிய குற்றமானாலும் அதனைப் பெரிதாகக் கருதிப் பெரியோர் வருந்தி வாடுவர்; பெரிய குற்றமானாலும் சிறியோர் அதனைச் சிறிதும் கவனியாமல் திமிர்ந்து திரிவர் என்பது கருத்து.

தினை அளவாம் குற்றம்வரினும் குலமக்கள் அதனைப் பொறுக்கலாற்றாது பதைத்து நீங்குவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மருதிபால் உணரப்படும்.

## கதை.

மருதி என்பவள் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்த தருமசீலன் என்னும் ஒரு வேதியன் மனைவி. இவளது காலம் அரசமரபினரை வேரறுத்து வந்த பரசுராமரது காலமாம். இவள் பேரழகுடையவள். திருந்திய பண்பும் சீலமும் வாய்ந்தவள் ஒருநாள் காவிரி நதியில் நீராடிவிட்டுத் தன் இல்லை நோக்கி இவள் வந்தாள். வருங்கால், அந்நகரை அதுபொழுது ஆண்டுவந்த ககந்தன் என்னும் காவலன் மகன் இவளைக் கண்டான். அவன் பெயர் காமந்தன் என்பர். அவன் இவளது உருவிலும் அழகிலும் ஈடுபட்டுத் தன் உள்ளம் உருகினான். உறுவதை விரைந்தான். இங்கேவா! என்று இவளை எதிருற அழைத்தான். அதனைக் கேட்டவுடனே அகம் கலங்கி இவள் அங்கம் பதைத்தாள். புகன்றதை நினைந்து பொங்கி அழுதாள். என் கணவனையன்றிப் பிறிதெவரையும் யான் கனவிலும் கருதிலேன். இத் தீயவன் என்னை இன்று திங்குக்கு அழைத்தான். இக்குற்றம் என்பால் வர யான் என்ன குற்றம் செய்தேன். அந்தோ! இனி இவ்வுடலோடு இருத்தல் ஒல்லேன் என்று பூத சதுக்கம் புகுந்து தன் ஆவியைப் போக்க வேண்டினாள். பூத சதுக்கம் என்பது அந்நகரின் நடுவீதியிலுள்ள ஒரு பலிபீடம். தீமை செய்தவர் தாமே

யிழுக்கப்பட்டு அங்கு வந்து அடிபடுவார். அத்தகைய தரும பூதம் ஒன்று சோழராது வரபலத்தால் அங்கு நிலைபெற்றிருந்தது. அப்பூதம் மருதியை நோக்கி பாவையே! நீ நெறி திறம்பாத நீர்மையளாயினும் கணிகையர் ஆடல்களையும், யாழின் பாடல்களையும், விநோதக் கூத்துகளையும், நீ விழைந்திருந்தாய். அப்பிழைகள் நின்பால் இலையேல் நின்னை விழைந்தவன் உடனே உன் கற்புத் தீயால் இறந்திருப்பான். இதுவேயன்றி யான் கொல்லும்படியான குற்றம் ஒன்றும் உன்பால் இல்லை. ஆதலால் யான் கொல்லேன் போ எனப் பூதம் இவளைப் புறத்தே போக்கியது. இவள் மீண்டாள். அதுமுதல் அக்குற்றங்களை நீக்கித் தன்னை முற்றுங் காத்தாள். தன்மேல் வந்த சிறு குற்றத்தையும் பெரிதாகக்கொண்டு உயிர்விடத் துணிந்த இவளது குண நலத்தையும் உணர்வையும் அனைவரும் வியந்தார். தினையளவாம் குற்றம் வரினும் பழியை நாணுவார் அதனைப் பனை அளவாகக் கொண்டு கவல்வர் என்பதை உலகம் இவள்பால் கண்டு தெளிந்தது. விரிவை மணிமேகலையில் காண்க.)

தெள்ளுநீர்க் காவிரி யாடினள் வரூஉம்
பார்ப்பனி மருதியைப் பாங்கோர் இன்மையின்
யாப்பறை என்றே எண்ணின னாகிக்
காவிரி வாயிலில் ககந்தன் சிறுவன்
நீவா என்ன நேரிழை கலங்கி
மண்டிணி ஞாலத்து மழைவளம் தரூஉம்
பெண்டிர் ஆயிற் பிறர்நெஞ்சு புகாஅர்
புக்கேன் பிறனுளம் புரிநூல் மார்பன்
முத்தீப் பேணும் முறையெனக் கில்லென
மாதுயர் எவ்வமொடு மனையறம் புகாஅள்
பூத சதுக்கம் புக்கனள் மயங்கிக்
கொண்டோற் பிழைத்த குற்றம் தானிலேன்
கண்டோர் நெஞ்சிற் கரப்பெளி தாயினேன்
வான்தரு கற்பின் மனையறம் பட்டேன்
யான்செய் குற்றம் யானறி கில்லேன்

பொய்யினை சொல்லோ பூத சதுக்கத்துத்
தெய்வம் நீயெனச் சேயிழை அரற்றலும்
மாபெரும் பூதம் தோன்றி மடக்கொடி
நீகேள் என்றே நேரிழைக்கு உரைக்கும்
தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழு வாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றஅப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்
பிசியும் நொடியும் பிறர்வாய்க் கேட்டு
விசிபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
கடவுட் பேணல் கடவியை ஆகலின்
மடவரல் ஏவ மழையும் பெய்யாது
நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப்
பிறர்நெஞ்சு சுடூஉம் பெற்றியும் இல்லை
ஆங்கவை ஒழிகுவை ஆயின் ஆயிழை
ஓங்கிரு வானத்து மழையும்நின் மொழியது
பெட்டாங்கு ஒழுகும் பெண்டிரைப் போலக்
கட்டாதுன்னையென் கடுந்தொழிற் பாசம்
(சிறைசெய் காதை.)

இது, தனது நிலைமையைக் குறித்துக் கவன்று மொழிந்த மருதியை நோக்கிப் பூதம் புகன்றது. இதனால் மேற்குறித்த உண்மை இனிது விளங்கும்.

சிறிய குற்றத்தையும் பொறுக்கலாற்றாது அறிவுடையார் வருந்தி நீக்குவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

434. அன்றேன் வருணன் அயன்முன்செய் குற்றமொன்றால்
குன்றி யிழிந்தான் குமரேசா—என்றுமே
குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றந் தரூஉம் பகை. (ச)

இ—ள்.

குமரேசா! தான் செய்த சிறு குற்றத்தால் வருணன் ஏன் பின்பு பெருந்துயர் எய்தினன் எனின், அற்றம் தரூஉம்

பகை குற்றமே ஆதலின் குற்றமே பொருளாகக் காக்கவேண்டும் என்க.

குற்றமே அற்றம் தரூஉம் பகை—குற்றமே கேட்டை உண்டாக்கும் பகை. குற்றம் இன்மையையே குணமுடைமையாகக் கருதிப் போற்றுக என்பார் "குற்றமே பொருளாகக் காக்க" என்றார்.

ஒருவனுக்குத் தீங்கு விளைத்தற்கு உரியவர் பகைவரே யாவர்; அவர் அவன்கண் நிகழும் குற்றத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டே அதனை விளைப்பர்; அஃது அவன் கண் இன்றேல் அவர் வினை வீணும்; ஆதலால் "குற்றமே அற்றம் தரூஉம் பகை" என்றார். ஏகாரங்கள் ஈரிடத்தும் பிரிநிலைகளாய் நின்றன.

மேல், சிறிய குற்றத்தையும் பெரிதாகக் கருதி மேலோர் வருந்தி நீக்குவர் என்றார்; குற்றத்தை அங்ஙனம் அஞ்சி நீக்காவிடின் என்னை என்பார்க்கு அது தீங்கை விளைக்கும் பகையாம் என்று இதில் தெளிய உணர்த்தினர்.

குற்றமே கேட்டை விளைக்கும் பகையாகும்; ஆதலால் தன்பால் வராதபடி அதனை ஒருவன் குறிக்கொண்டு காக்கவேண்டும் என்பதாம். காத்தல் அதனைத் தடுத்து நீக்கல்.

புறப்பகைவரினும் அகப்பகையாகிய குற்றத்தையே ஒருவன் அஞ்சிக்காக்கவேண்டும்என்பது கருத்து. குற்றம் அற்றவர்க்கே அற்றம் இல்லை என்பது குறிப்பு.

குற்றத்தைக் கொண்டவர் எத்துணையராயினும் அவர், அற்றத்தைக் கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வருணன் பால் உணரப்படும்.

## கதை.

வருணன் என்பவன் திக்கு பாலகரில் ஒருவன். இந்திரன் அக்கினி இயமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் என்னும் இவ் எண்மரும் கிழக்கு முதலிய திக்குகளில் நிரலே நின்று

முறையே காப்பர். அதனால் அவரை அட்ட திக்குப் பாலகர் என்பர். அவருள் இவன் மேற்குத் திசைக்குத் தலைவன். சிவந்த திருமேனியும் பாசம் ஏந்திய கையுமே உடையனாய் மகராசனத்தில் வீற்றிருந்து தனது திசை காவலை இசைபுறச் செய்வான். நன்னீர் தர இவ்வுலகில் குளங்களையும் கூவங்களையும் தோண்டினவரும், தண்ணீர்ப் பந்தல்வைத்து உண்ணீர் உதவினவரும், மறுமையில் இவன் பதமாகிய வருண பதத்தை அடைந்து மகிழ்வுற்றிருப்பர். இவனது நகரத்துக்குச் சித்திராவதி என்று பெயர். மனைவி பெயர் சேட்டை. தருமன் என ஒரு புதல்வனும் சுநந்தை வாருணி என இரு புதல்விகளும் இவனுக்கு உண்டு. இவன் ஒருநாள் பிரமனைக் காணச் சென்றிருந்தான். அங்கு நிகழ்ந்த வேள்வியின் பொருட்டு தேவரும் தேவ கன்னிகைகளும் திரண்டு வந்தார். முறையே சென்று பிரமனை வணங்கி அவர்முன் கூடியிருந்தார். வருணன் முதலிய அமரர்யாவரும் அமர்ந்திருக்கும்பொழுது கங்காதேவி வந்து அயனைப் பணிந்தாள். தாழ்ந்து எழுங்கால் அவளது திருமேனியில் புனைந்திருந்த அழகிய ஆடை சிறிது அகன்றுபோமாறு வாயு குறும்பு செய்தான். உத்தரீயம் ஒதுங்கவே முத்தாரந் தவழ்கின்ற அவள் மோக உறுப்பு முழுதும் வெளியே தோன்றியது. அமரர்யாவரும் நாணிக் கவிழ்ந்தார். வருணன் மாத்திரம் நாணாது நோக்கி நசைமீக்கூர்ந்தான். மோக வெள்ளத்தில் மூழ்கித் தியங்கும் இவனது குறிப்பை அயன் குறித்து நோக்கினான். புனிதமான பெரிய எண்ணங்களையே எண்ணுதற்குரிய இப்பேரவையில் சிறிய எண்ணத்தை எண்ணினையே என்று அயன் கறுத்து வெறுத்தான். புல்லிய மக்கள் செயலை இன்று புல்லினாய் ஆதலால் உன்பதம் இழந்து நீ மண்பதம் இழிக என்று சபித்தான். தன் குற்றத்தை நினைந்து வருணன் குலைந்தான். அதனால் வந்த அற்றத்தை அடைய அஞ்சி நடுங்கினான். தன் குற்றமே தனக்குக் கேடு தந்தது என்று அதனைக் குறித்து நொந்து அயன் குறித்தபடியே வருணன் மண்ணுலகை யடைந்தான். அச்சாப வருணனே பின் சந்தனுவாயினான். பகைவர் இல்லாதிருந்தும் தன் காமச்சிறுமையால் வருணன் பூமியிலிழிந்தான் என்று அவன் உறவினர் பொருமிச் சென்

ரர். குற்றமே அற்றம் தரும் பகை என்பதை அமரர் அனைவரும் அன்று இவன்பால் கண்டார். விரிவைப் பாரதத்தில் காண்க.

குற்றமே ஒருவனுக்குக் கேடு தருகின்ற கொடும்பகை என்பது இதனால் கூறப்பட்டது.

---

435 கண்டு திரிபுரர்முன் காவாமை யாலழிவு
கொண்டுநொந்தார் என்னே குமரேசா—மண்டி
வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். (ரு)

இ—ள்.

குமரேசா! திரிபுரரது பெருவாழ்வும் அறிந்த முன் காவாமையால் ஏன் எரிந்து தொலைந்தது எனின், வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர் வைத்தூறுபோலக் கெடும் என்க.

வருமுன்னர்—குற்றம் வருதற்கு முன்னதாகவே: குற்றம் என்பது இதில் வருவிக்கப்பட்டது.

வை என்றது வைக்கோலை. தூறு என்றது குவியல் கூட்டங்களைக் குறித்துவரும் ஒருசொல். வைத்தூறு—வைக்கோற் குவியல். போர் எனவும் இது புகலப்படும்.

எரி குற்றத்திற்கும்; வைத்தூறு வாழ்க்கைக்கும் ஒப்பாய் நின்றன. தன் குற்றம் சிறியதெனினும் அதனால் ஒருவனது பெரியசெல்வம் அழிந்தேவிடும் என்பதை உவமை உணர்த்திநின்றது.

குற்றம் வருதற்கு முன்னதாகவே அதனைக் குறிக்கொண்டு காவாதவனது வாழ்க்கை எரிமுன் நின்ற வைக்கோற் குவைபோல அழிந்துபோம் என்பதாம்.

மேல், குற்றமே ஒருவனுக்குக் கொடும் பகை என்றார்; அதனை விரைந்து நீக்காவிடில் அதனால் பெருங் கேடு விளைந்துவிடும் என்பதை இதில் விளங்க உணர்த்தினர்.

செருக்கு சினமுதலிய குற்றங்கள் சிறிதும் தன்னை அணுகாதபடி ஒருவன் முன்னறிந்து காக்கவேண்டும் என்பது கருத்து. இனி, புறப்பகைவர் மிகைத்துவரு முன்னரே ஆக்கமுறத் தன்னைக் காக்கவேண்டும்; இல்லையேல் அழிவுண்டாம் எனவும் இது பொருள்படும்.

எரி வைத்தூற்றை எரிப்பதுபோல் குற்றம் வாழ்க்கையை அழித்துவிடும் என்று கருதித் தன் கண் நிகழவொட்டாதபடி அரசன் அதனைக் கடியவேண்டும் என்பது குறிப்பு.

எத்துணை வாழ்க்கையை எய்தியிருப்பினும் ஒருவன் குற்றமுறின் அது முற்றும்அழியும்என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திரிபுரர்பால் உணரப்படும்.

## கதை

திரிபுரர் என்பவர் தாரகாக்கன், கமலாக்கன், வித்யுன்மாலி என்னும் மூவர். இவர் தாருகாசுரனுடைய புதல்வர்கள். தாம் புரிந்த அருந் தவத்தின் பயனாக இம்மூவரும் பல உயர் நலங்களையடைந்து பொன் வெள்ளி இரும்பு என்னும் மூவகை உலோகங்களால் செய்யப்பட்ட மூன்று நகரங்களையும் பெற்றார். அவை எண்ணிய இடங்கட்கெல்லாம் ஏகி மீளும் இயல்பினையுடையன. கனகபுரி, இரசிதபுரி, அயபுரி, என அவை முறையே கூறப்படும். தாரகாக்கன் முதலிய மூவரும் அவற்றுள் முறையே யிருந்து அரசு செலுத்தினர். விரைந்து சுழன்று திரிந்து வருகின்ற அம்முப்புரங்களினுமிருந்து முறை புரிந்தமையால் இவர் திரிபுரர் எனப்பட்டார். இவர் முதலில் அறிவும் ஆற்றலுமுடையராய் இறைவன் பால் நிறைந்த அன்புற்றிருந்தார். பின்பு செல்வக் களிப்பால் தம் உள்ளந் திரிந்து தேவர் எல்லார்க்கும் தீங்கினை இழைத்தார். திருமாலும் இவர்க்கு ஒரு குருவாகிச் சென்று இவருள்ளம் பெருமால் கொள்ளும்படி போதித்துவைத்தார். அதனால் மேலும் மேலும் செருக்கும் சினமும் மிக்குச் சிறுமையிழைத்துச் சிவனையும் பழித்தார். இவர்பால் தீங்கு மிகுந்தமையைத் தேவர் தெளிந்து சிவன்பால் வந்து திரிபுரர் வாழ்க்கை

யைத் தீர்க்க மொழிந்தார். அரிஅயன் முதலா அகிலமுந் துணைவர அவரும் எழுந்தார். பிரிந்தகன்றிருந்த அம்மூன்று புரங்களும் ஓருங்கேயமைந்து ஒன்றி நின்றன. கொடுமையின் மிகுதியால் தமது நிலைமையை அழிக்க முதல்வன் வந்துள்ளான் என்பதை அம் மூவரும் முன்னறிந்து சாவாமல் பின்னெதிர்ந்து முனிந்தார். அதுபொழுது உடனின்றோர்களுடைய தன்மையையும் உடன்ற மூவர்களுடைய புன்மையையும் முன்னவன் உன்னிச் சிறிது புன்னகை செய்தார். அதனால் மூன்றும் எரிந்தழிந்தது. அம்மூவர் மாத்திரம் இறைவனருளால் ஓடி உய்ந்தார். குற்றம் தம் பால் வருமுன்னரே காவாமையால் தாம் பெற்றிருந்த பெரு வாழ்க்கையை அம்மூவரும் முற்றும் இழந்தார். வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர் வைத்தூறுபோலக் கெடும் என்பதை உலகம் அவர்பால் உணர்ந்தது. (விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.)

குற்றத்தை முன்னறிந்து நீக்காதவனது குடி அடியோடு கெடும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

436 கற்ற வழுதி கதவுதொட்ட கையை யேன்
குற்றமென நீத்தான் குமரேசா—உற்றறிந்து
தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு. (௬)

இ—ள்.

குமரேசா! தான் குற்றம் செய்ததாகக் கருதிக் குலசேகர பாண்டியன் ஏன் தன் கையை முன்னர்க் கொய்து நீக்கினான் எனின், தன் குற்றம் நீக்கி பிறர் குற்றம் காண்கிற் பின் இறைக்கு ஆகும் குற்றம் என் என்க.

காண்கிற் பின்—காண வல்லனாயின். கில் என்னும் ஆற்றல் உணர்த்தும் இடைநிலை காண்டலின் அருமையை இதில் காட்டி நின்றது.

தனது குற்றத்தை முதலில் தெரிந்து கடிந்து அதன் பின்னர்ப்பிறருடைய குற்றத்தைக் காண வல்ல அரசனுக்கு யாதொரு குற்றமும் யாண்டும் உண்டாகாது என்பதாம்.

அருந்திறலும் பெருந் திருவும் உடையனாயினும் குற்றம் கடிந்த அரசனே உற்ற முறை செய்தற்கு உரியவனாவன் என்பது கருத்து.

தன் குற்றத்தை முந்தி நீக்கும் அரசனே என்றும் நீங்காத புகழுடையனாய் உலகில் நின்று விளங்குவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குலசேகர பாண்டியன் பால் உரைப்படும்.

## கதை.

குலசேகர பாண்டியன் என்பவன் மதுரையிலிருந்து அரசு புரிந்த பாண்டிய மன்னருள் ஒருவன். கொற்கையிலும் சிலகாலம் இவன் இருந்தனன் என்பர். இவனது காலம் இரண்டாயிரம் வருடங்கட்கு முன்னராகும். இவன் தன்னுயிர்போலவே மன்னுயிரினத்தையும் எண்ணியொழுகிய புண்ணிய வேந்தன். வஞ்சனை தீவினை மறந்த நெஞ்சினன். மெய்யே புகலும் தூய நாவினன். ஒருநாளிரவு இவன் மாறுவேடந் தரித்து நகரின் இயல்பை அறியுமாறு நாடிச் சென்றான். அங்குக் காசி யாத்திரை போக விரும்பிய கீரந்தை என்னும் வேதியன் ஒருவன் தன்னைப் பிரிந்து தனியிருத்தற்கு அஞ்சி வருந்துகின்ற தன் மனைவியை யணைத்து "உயிரை உடல்காப்பது போலவும் கண்ணை இமைகாப்பது போலவும் உலக முழுவதையும் இனிது காக்கும் நமது குலசேகரன் இருக்கும்பொழுது நீ ஏன் கவல்கின்றாய்" என்று சொல்லியிருத்திவிட்டு நல்ல ஓரை என்று அன்றே மெல்லப் போயினான். அவ்வேதியன் சொன்னதை இவ்வேந்தன் கேட்டான். அன்றுமுதல் அவளைப் புதல்வியாகக் கருதிப் போற்றிவந்தான். அவளை மாத்திரம் தனியே பேணின் உலகம் மாறுபடக் கருதிவிடும் என்று கருதி அவ்வீதியிலுள்ள வேதியர்க்கெல்லாம் ஒருபடி

யாகப் படியளவு செய்தான். திங்கள் பன்னிரண்டு சேரக் கழிந் தன. சென்றிருந்தவன் திரும்ப வந்தான். மனைவி கண்டாள், மகிழ்வுகொண்டாள். அன்றிரவு மனைவியோடு தனியேயிருந்து போனதும் வந்ததும் அவன் புகன்றுகொண்டிருந்தான். பார்ப் பான் வந்ததை அரசன் பாராதவனுதலால் வழக்கம்போல அன் றும் பார்க்கவந்தான். உள்ளரவங் கேட்டான். தன் உள்ளம் கொதித்தான். கள்வனே என்று கனன்று தன் கையால் அக் கதவைத் தட்டினான். வேதியன் வெருண்டு யாரென வினவி னன். உள்ளிருப்பவன் உடையவன்தான் என்று அரசன் உணர் ந்தான். அவன் ஐயுறாதவாறு அவ்வரிசையிலிருந்த இல்லங்கள் தோறும் அவ்வகையே செய்து சென்றான். அந்தணரெல்லா ரும் திரண்டு மறுநாள் அரசன் முன் வந்து இரவு நிகழ்ந்ததை இயம்பி நின்றார். அரியணையமர்ந்திருந்த அரசன் அருகு நின்ற அமைச்சரை நோக்கி இது செய்தவனை என் செய்யலாம் என் ருன். கதவு தொட்ட கையை வெட்டவேண்டும் என்று அவரனை வரும் ஒட்டி மொழிந்தார். உடனே அரசன் உடைவாளுருவி தொட்ட கை இதுதான் என்று வெட்டி வீழ்த்தினன். நிகழ்ந்த தைத் தெளிந்து பின் யாவரும் நெஞ்சம் உருகினர். இ றைவன் அருளால் அவ் அரசனது முறக்கை பொற்கை யாகிப் பொருந்தி நின்றது. அன்றுமுதல் பொற்கைப் பாண்டியன் என் று இவன் போற்றப்பட்டான். குற்றம் யாதும் இன்றிக் கொற்ற முற்று நின்ற இவனது குண நலத்தை அமரரும் கொண்டாடி மகிழ்ந்தார். தன்குற்றத்தை முன்னர் நீக்கும் மன்னனுக்கு ஒரு குற்றமும் பின்னர் உண்டாகாதென்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. (விரிவை வழுதி மரபில் காண்க.)

எனக்குத் தகவன்றால் என்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் தானய்த் தவற்றை
நினைத்துத்தன் கைகுறைத்தான் தென்னவனும்காணர்
எனச்செய்பார் மாணவினை. பழமொழி.

கொற்கையான் மாறன் குலசேகரப்பெருமான்
பொற்கையான் ஆனகதை போதாதோ—நற்கலை

மன்றலை வாரி மணிவாசலை யடைத்த
தென்றலே என்வந்தாய் செப்பு. (கம்பர்)

தீமை செய்தாய்போல் செங்கை குறைத்தாய் முறையேயோ.
(பரஞ்சோதி முனிவர்.)

உதவா வாழ்க்கைக் கீரந்தை மனைவி
புதவக் கதவம் புடைத்தனன் ஓர்நாள்
அரசவேலி அல்லது யாவதும்
புரைதீர் வேலி இல்லென மொழிந்து
மன்றத் திருத்திச் சென்றீர் அவ்வழி
இன்றவ் வேலி காவா தோவெனச்
செவிச் சூட்டாணியிற் புகையழல் பொத்தி
நெஞ்சஞ் சுடுதலின் அஞ்சிநடுக் குற்று
வச்சிரத் தடக்கை அமரர் கோமான்
உச்சிப் பொன்முடி ஒளிவளை யுடைத்தகை
குறைத்த செங்கோற் குறையாக் கொற்றத்து
இறைக்குடிப் பிறந்தோர்க்கு இழுக்கம் இன்மை.
(இளங்கோவடிகள்.)

மேற்குறித்த சரிதம் இவ்வாறு பலராலும் போற்றப்பட்டுள்ளது.

தன் குற்றத்தை முன் அறிந்து நீக்கினவனுக்குப் பின்னர் ஒரு குற்றமும் உண்டாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

437 கூடிநின்ற மூவன் குலச்செல்வம் பின்குலைந்து
கோடிநைந்த தென்னே குமரேசா—நாடிச்
செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும். (எ)

இ—ள்.

உலோபமுற்ற மூவனது செல்வம் பின்னர் ஏன் குலைந்து தொலைந்தது எனின், செயற்பால செய்யாது இவறியானது செல்வம், உயற்பாலதுஅன்றிக் கெடும் என்க.

செல்வம், கெடும் என்று சேர்த்துக்காண்க.

செயற்பால—செய்தற் குரியவை; அவையாவன புகழும் அறமும் பொருளும் பயக்கத்தக்க காரியங்கள்.

இவறியான் என்றது உலோபியை. பொருள்மேல் மேலும் மேலும் இவறுதலைச் செய்வோன் என்னும் ஏதுவான் வந்தது. இவறுதல்—ஆசை மிகுதல்.

உய்தல் என்பது உயல் என நின்றது. அது வாழ்தல் ஈடேறுதல் தவறுதல் என்பவற்றை உணர்த்திவரும்.

பாலது—பான்மையை யுடையது: பான்மை—இயல்பு குணம், தகுதி, தன்மை.

உயற்பாலது—உய்யும் பான்மையது: அஃதாவது ஊறு ஒன்றுமின்றி உண்டாகி வளர்வது.

செய்யத் தக்க காரியங்களைச் செய்யாமல் உலோபஞ்செய்கின்றவனுடைய செல்வம் தப்பாமல் ஒழிந்துபோம் என்பதாம்.

செய்தற்பாலவற்றைச் செய்தவன் செல்வமே உய்தற்பாலதாகி உயரும் என்பது குறிப்பு.

உண்ணல், உடுத்தல், உற்றார்க்கு உதவல், அற்றார்க்கு அருளல், தன் பொருள் பெருகத் தகும் வழி விடுத்தல், என இவை முதலாக இன்றியமையாத செய்தற்பாலனவாகிய நெறிகளிலேயும் செலவிடாமல் பொருளை ஒருவன் பொத்திக் கிடப்பின் உண்ணீர்போல் அஃது ஒரு பயனுமின்றி வறிதே கழியும் ஆதலால் "இவறியான் செல்வம் உயற்பாலதன்றிக் கெடும்" என்றார்.

ஒருவிதத்தினும் செலவிடாத உலோபியினது செல்வம் எவ்விதத்தினும் ஈடேறாமல் இழிந்து கெடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மூவன்பால் உணரப்படும்.

## கதை.

மூவன் என்பவன் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்க் கொங்கு நாட்டிலிருந்த ஒரு குறுநிலமன்னன். நில வளமும்

நீர்வளமும் இவன் நாட்டில் நிரம்பியிருந்தன. எல்லாச் செல்வங்களும் எய்தியிருந்தும் பொல்லாத ஆசையும் இவன் உள்ளம் புகுந்திருந்தது. அதனால் பொருள்மேல் இவன் பெரும் பற்றுள்ளமுடையினன். ஆயினும், வெளித் தோற்றத்தில் எவரோடும் இவன் உவகையோடு பேசுவான். தன்பால் ஒன்று பெற விரும்புகின்றான் என்று ஒருவனை இவன் குறிப்பால் உணர்ந்துவிட்டால் அதன்பின் இவனை அவன் காண்பதரிது. கோழை நெஞ்சினன். தான் கொண்டதை முதலை வாய்ப்பிடிலும் தன் முதலை இவன் கைவிடான். இவனது இயல்பினையுணராமல் பெருந்தலைச்சாத்தனார் என்னும் புலவர் பெருமான் இவன்பால் பரிசில் பெறவந்தார். அவரைக்கண்டு உரையாடுதற்கும் அஞ்சி இவன் உள்ளே ஒதுங்கியிருந்தான். அப்பொழுதைச் செயலைப் புலவர் அறிந்தார். உள்ளந் திரிந்தார். "மூவனே! பழம்பெற விரும்பிப் பறந்துவந்த ஒரு பறவை தான் விரும்பிய மரத்தில் பழமில்லையானால் அஃது எங்ஙனம் தளர்ந்து மீளுமோ அங்ஙனமே நான் இன்று வருந்தி மீள்கின்றேன்" என்று புலவர் கரைந்துமீண்டார். பெரியோர்கள் உள்ளம் பேதித்தால் எப்பொருளும் பேதிக்கும் ஆதலால் அன்றுமுதல் இவன் செல்வம் குன்றி அழிந்தது. இவறியான் செல்வம் உயற்பாலது இன்றிக்கெடும் என்பதை உலகம் இவன்பால் கண்டு தெளிந்தது. விரிவைப்புறநானூற்றில் காண்க.

உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ் செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
இழந்தானென் றெண்ணப் படும். (நாலடியார்)

உலோபியினது செல்வம் ஒருபயனும் இன்றிக்கெடும் என்பது இதனால் கூறப்பட்டது.

438 உற்ற சுவேதன் உலோபமொன்றால் என்கொடிய
குற்றமுற்று நொந்தான் குமரேசா—முற்றிழிந்த
பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று. (அ)

இ—ள்.

குமரேசா! சுவேதன் என்பவன் உலோபம் ஒன்றால் ஏன் பெரும்பழியும் கொடுந்தீமையும் அடைந்தான் எனின், பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும் எண்ணப்படுவது ஒன்று அன்று என்க.

பற்றுள்ளம்—பற்றுதலைச் செய்யும் உள்ளம்; அஃதாவது பொருளை எவ்விதத்தும் செலவிடாது இறுகப்பிடித்து நிற்கும் கொடுமனம். இது காரணப் பெயராய் நின்று உலோபத்தைக் குறித்தது. பற்றுதல் என்னும் வினைக்கு ஏற்ற செயப்படு பொருள் இதில் வருவிக்கப்பட்டது. உலோபத்துக்குப் பற்றுள்ளம் என்று ஒரு பெயருண்மை பண்டேயிருந்தமை தோன்ற என்னும் என்பது இடையே நின்றது. மேல், உலோபம் செல்வத்தை இழப்பிக்கும் என்றார்; இதில், எல்லாத் தீமைகளினும் அது பெருந்தீமை என்றார்.

பற்றுள்ளம் என்று சொல்லப்படுகின்ற உலோபத்தினது தன்மை, குற்றங்கள் எவற்றுள்ளும் வைத்து எண்ணப்படுவது ஒன்று அன்று என்பதாம்.

காமம், வெகுளி முதலிய குற்றங்களோடு சமமாக வைத்து உலோபத்தையும் ஒன்றாக மதிக்கலாகாது என்பார் "இவறன்மை எற்றுள்ளும் எண்ணப்படுவது ஒன்று அன்று" என்றார். அன்று என்றது ஆம் என்பதன் எதிர்மறை.

இழிகுணங்கள் எல்லாவற்றுள்ளும் உலோபம் கழிபேரிழிவாம் என்பது கருத்து. எல்லா நல்ல குணங்களையும் ஈடற அழித்துத்தன்னை யுடையானை உலோபம் மிக இழிந்தவனாக ஆக்கிவிடுமாதலால் அதனை உளத்தில் பற்றாது ஒருவன் ஒழித்துவிடவேண்டும் என்பது குறிப்பு. உத்தம குணங்களெல்லாம் உலோபத்தால் ஒழிந்துபோமே என்றார் பிறரும்.

தான் கொண்டிருந்த குணநலங்களையெல்லாம் இழந்து உலோபத்தால் ஒருவன் இழிந்தவனாய் விடுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுவேதன்பால் உணரப்படும்.

## கதை

சுவேதன் என்பவன் பலநூற்றாண்டுகட்கு முன்னர் விதர்ப்பதேசத்தை ஆண்டிருந்த சுதேவன் என்னும் வேந்தன் புதல்வன். இவன் காமினி என்னும் ஓர் அழகியமங்கையை மணந்து காதலின்பம் துய்த்தான். தந்தை மாண்டபின் பூமியை இவனே பொருந்தி ஆண்டான். பணிவு இன்சொல் முதலிய நல்ல குணங்களெல்லாம் இயல்பாகவே இவன்பால் இசைந்திருந்தன. ஆயினும் பொருள்மேல் பெரும்பற்றுள்ளவன். பெருந்திருவுடையனாயிருந்தும் பிறர்க்கு உதவி செய்வதில் சிறிதும் மனமில்லாதவன். ஈந்து இன்புறாமல் எல்லா இன்பங்களையும் தானே மாந்தி மகிழ்ந்தான். தன்பால் இயல்பாக அமைந்திருந்த குணமாட்சிகளைத் தன் பற்றுள்ளத்தால் இவன் பற்றுதிழந்தான். தன்னையே கருதிப் பிறர் நலம் பேணாத கடுஉலோபியாயிருந்தும் முதிர் பருவத்தில் அரசாட்சியைத் தன் மகன்பால் வைத்துவிட்டுச் சிறிது காலம் அருந்தவம் புரிந்தான். அதன் பயனாக மறுமையில் இவன் அயன் பதியடைந்தான். இன்ப வுலகமாகிய தெய்வபதவியை அடைந்தும் பசிநோயால் இவன் துன்பமே அடைந்தான். இதற்குக் காரணம் யாது என்று இவன் கலங்கி அழுதான். பிரமன் தோன்றி "நீ முன் அரசனாயிருக்கையில் ஒருவருக்கும் உதவாமல் நீயே உண்டு வந்தாய்; அப்பாபத்தின் பயனே பசிநோயாய்வந்து இங்கு உன்னைப்பற்றியுள்ளது; இது தீரவேண்டுமாயின் நீமுன் தவம் புரிந்த இடத்திலுள்ள வாவியில் உன் கொழுத்த பிணவுடல் மிதக்கும்; அதனை நீ தின்று தீர்ப்பையேல் அப்பசி நின்றுபோம்" என்றார். அவ்வாறே இவன் அங்கு வந்தான். தன்னுடல் மிதக்கக் கண்டான். பசிநோய்க்கஞ்சி அதனைப்பற்றி மிசைந்தான். நாளும் நாளும் வந்துமிசைந்தும் அவ்வுடல் மீளமீள வளர்ந்து நிறைந்தது. தெய்வ பதவியை எய்தியும் இப்பெருந் துன்பத்தை எய்தி வருந்துகின்ற இவன் ஒருநாள் தின்றுகொண்டிருக்குங்கால் அங்குவந்த அகத்திய முனிவரைக் கண்டான். பிணமும் தொலைந்தது. பசியும் அகன்றது. முனிவரது காட்சியால் எய்திய மாட்சியென்று தெளிந்து விரைந்துசென்று அவரது திரு

வடிவைப் பணிந்து நின்று ஒரு மணி அணியைத் தந்தான். தெய்வ வுருவுடனிற்கும் இவனது வரலாற்றை அவர் தெளிந்தார். பிற குற்றங்கள் எல்லாவற்றினும் அரசர்க்கு உலோபத்தால் உளவாம் தீமையை உணர்த்தினர். முற்றிய திருவுடனிருந்தும் பற்றுள் ளத்தால்தான் உற்ற துயரையும் பெற்ற பழியையும் எண்ணி இரங்கிப் பின் எழுந்து சென்றான். பற்றுள்ளம் என்னும் உலோபம் ஏற்றினும் எண்ணப் படுவது ஒன்று அன்று என்பதை உலகம் இவன்பால் அன்று தெளிந்தது. (விரிவைக் காந்தத்தில் காண்க.)

உளப்பரும் பிணிப்புறு உலோபம் ஒன்றுமே
அளப்பருங் குணங்களை அழிக்கு மாறுபோல்
கிளப்பருங் கொடுமன அரக்கி கேடிலா
வளப்பரும் மருதவைப்பு அழித்து மாற்றினள். (இராமாயணம்.)

தாடகை ஒருத்தி நின்று அழகிய மரங்கள் பலவற்றையும் அழித்துத் தொலைத்தாள் என்பதை உணர்த்து சற்று உலோபத் தையே கம்பர் உவமையாக உரைத்தார். உலோபத்துக்கும் தாட கைக்கும் உள்ள ஒப்புமை நயத்தை இதில் ஊன்றி உணர்க.

குற்றங்கள் எல்லாவற்றினும் உலோபமே மிகவும் கொடியது என்பது இதனால் கூறப்பட்டது.

---

439 வென்றிச் சடாசுரன்முன் வெம்பிப் பழிநயந்தான்
குன்றினன் பின்பேன் குமரேசா—கன்றி
வியவற்க எஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை. (க)

இ—ள்.

குமரேசா! தன்னை வியந்து தருக்கித் தீவினையை நயந்த சடா சுரன் ஏன் அதனால் பின் அழிந்தான் எனின், எஞ்ஞான்றும் தன்னை வியவற்க; நன்றி பயவா வினையை நயவற்க; என்க.

வியவற்க; நயவற்க; என்பன வியங்கோள் ஏவல்.

வியத்தல் தன்னை மீப்பட மதித்தல். நயத்தல்—விரும்பல்.

வியத்தற்கு ஏதுவாகிய நலங்களெல்லாம் ஒருங்கே எய்திய காலத்தும் என்பார் எஞ்ஞான்றும் என்றார், உம்மை முற்றும்மை.

ஒரு காலத்திலும் தன்னை வியந்து ஒருவன் தருக்கலாகாது; நன்மை பயவாத செயல்களை நயத்தலாகாது என்பதாம்.

தற்பெருமையும் வீணான செயல்களில் விருப்பும் அறவே அரசன் ஒழிக்கவேண்டும் என்பது கருத்து.

மதமிகுந்து தீவினையை நயந்தவன் பழிமிகுந்து அழிவுறுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சடாசுரன் பால் உணரப்படும்.

## கதை.

சடாசுரன் என்பவன் இற்றைக்கு ஐயாயிர வருடங்கட்கு முன்னர்க் காமிகம் என்னும் புரியிலிருந்த ஓர் அசுரவேந்தன். இவன் பிரமனை நினைந்து பெருந் தவஞ்செய்து அதன் பயனாகத் திருவும் வன்மையுஞ் சேரப்பெற்றான். வேண்டியபொழுது வேண்டிய உருவத்தை விரைந்தெடுக்க வல்லவன். மன்னவர் பலரை வென்றடக்கி வென்று தன்னையே வியந்து தருக்கித்திரிந்தான். சிறந்த வரபலங்களை யடைந்திருந்தும் இழிந்த வினைகளையே இவன் நயந்து புரிந்தான். அழகிய மங்கையர் பலரை நலிந்துகொண்டு போய் வலிந்து துய்த்தான். நன்றி பயவா வினையை நயந்து புரிகின்ற இவன், பாண்டவர் பத்தினியாகிய பாஞ்சாலியை வனத்திற் கண்டான். பழிபடு வினையை மனத்திற்கொண்டான். விசையன் முதலிய வீரர்கள் ஆற்றலை இவன் அறிந்திருந்தும் தான் கொண்ட எண்ணத்தை முடித்துவிடவேண்டுமென்று குறித்துத் துணிந்தான். ஓர் அந்தண முனிவன்போல் அமைந்துசென்று அந்த அம்மை முன்னின்றான். வஞ்சம் யாதும் அறியாமல் வணங்கி நின்ற அவ்வஞ்சியை இவ்வஞ்சன் வலிந்து எடுத்துக்கொண்டு வான்வழி யேகினான். வீமன் அறிந்து வெகுண்டு ஓடி ஒரு விலங்கலை வீசி இவனை வீழ்த்தினான். மாதினை மேலே வீசி இவன் கீழே

விழுந்தான். தன் அடலுறு கதையால் வீமன் இவன் உடலினைச் சிதைத்தான். அரவம் உமிழ்ந்த முழுமதிபோலத் துரோபதை அருளுடன் விளங்கினாள். தான் நயந்த இழிவினையால் சடாசுரன் பழியும் கேடும் அடைந்து அழிவுறலானான். தன்னை வியந்தவனும் நன்றி பயவா வினையை நயந்தவனும் எத்துணைச் சிறந்தவனாயினும் பழியுற்று அழிவான் என்பதை இவன் அழிந்து உணர்த்தினான். விரிவைப் பாரதத்தில் காண்க.

நன்றி பயவாத வினையை நயந்தவன் குன்றி அழிவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

440 அன்றேனே காதல் அயலறியா துய்த்துவன்னி
குன்றாமல் துய்த்தான் குமரேசா—என்றுமே
காதல காதல் அறியாமை யுய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல். (0)

இ—ள்.

குமரேசா! வள்ளி தன் காதலைப் பிறர் அறியாவண்ணம் காத்து ஏன் உய்த்தான் எனின், காதல காதல் அறியாமல் உய்க்கிற்பின் ஏதிலார் நூல் ஏதில என்க.

காதல் அறியாமை உய்க்கிற் பின்—தன் விருப்பத்தைப் பகைவர் அறியாமல் உய்க்கவல்லனாயின். உய்த்தல்—செலுத்தல், வைத்தல்; அஃது ஈண்டு அனுபவித்தலைக் குறித்து நின்றது. கில் என்பது உய்த்தலின் அருமையை உணர்த்தி நின்றது.

காதல என்றது காதலித்த பொருள்களை; அஃதாவது விருப்பிய விடயங்களை இது குறிப்பு வினையாலணையும் பெயர்.

ஏதிலார் என்றது பகைவரை. ஏதும் உறவிலார் என்றபடி. ஏதிலார் நூல் ஏதில—பகைவர் எண்ணம் பயன் இலதாம். கல்வி நூல் பஞ்சு நூல் முதலியவற்றைக் குறித்துவரும்

நூல் என்னும் சொல் இங்கு எண்ணத்தின்மேல் நின்றது. வட மொழியில் இது தந்திரம் என வழங்கப்படும்.

மேல், நன்றிபயவா வினையை நயவற்க என்றார்; இதில் நன்றி பயக்கும் வினையை நயக்குங்கால் அந்நயத்தை அயலறியாவண்ணம் அடக்கமாக நடத்தவேண்டும் என்றார்.

தன் காதலைப் பிறர் அறியாவண்ணம் காத்து தான் காதலித்த பொருள்களைக் கருத்துற ஒருவன் துய்க்கவல்லனாயின் தன்னை வஞ்சிக்குமாறு அவன் பகைவர் சூழும் சூழ்ச்சி பழுதாம் என்பதாம்.

தன் விருப்பத்தை அடக்கமாக நடத்தவல்லவனைப் பகைவர் வெல்லமுடியாது என்பது கருத்து. இவ்வுண்மை அக்கினியால் அறியப்படும்.

## கதை.

அங்கினி என்பவன் திக்கு பாலகருள் ஒருவன். வன்னி, தகனன், வசு, பாவகன், எனப் பல ஏதுப்பெயர்களையுடையவன் தென்கிழக்குத்திசைக்குத் தலைவன். மனைவி பெயர் சுவாகாதேவி. இவன் சிவந்த உருவமும் மிகுந்த ஒளியும் உள்ளவன். வேள்வி முதலிய கருமங்களில் முதன்மையாகப் போற்றப்படுபவன். பாண்டவர் காலத்தில் யமுனை நதிக்கரையில் காண்டவம் என்னும் வனம் ஒன்று இருந்தது. இனிய கனிகளாலும் அரிய ஓடதிகளாலும் அது பெருகி விளங்கியது. அஃது இந்திரனுக்கு உரியது. அதன் நலங்களையுண்டு மகிழ இவன் காதல் கொண்டான். தன் காதலைப் பிறர் அறியின் தன் கருத்து முற்றுவண்ணம் தன்னை இந்திரன் கெடுத்துவிடுவான் என்பதை இவன் பலமுறையும் நுனித்தறிந்தான். ஆதலால் அதனை ஒருவரும் அறியாவண்ணம் நெடுநாள் உய்த்தான். கண்ணனும் அருச்சுனனும் கலந்து உரையாடியிருக்கும்பொழுது ஓர் அந்தண முனிவன்போல் இவன் அவர்பால் அடைந்தான். அவ் இருவரும் இவனையறியாது உபசரித்து யாது வேண்டும் என்றார். பெரும் பசியால் வருந்துகின்றேன் யான்.

அருந்துதற்குச் சிறிது உணவு உதவவேண்டும் என்று இவன் ஒடுங்கியுரைத்தான். அவர் தந்தோம் என்றார். உடனே இவன் உண்மையையுரைத்துக் காண்டவ வனமே எனக்கு வேண்டும் என்றான். ஆகுக என்று அவரும் இசைந்தார். அக்கினி அங்குப் புகுந்து தான் விரும்பிய வண்ணமே யருந்தி மகிழ்ந்தான். தான் உண்ணுங்கால் இந்திரன் முதலாயினோர் வந்து பல வஞ்சங்கள் இழைத்தார். அவை யாவும் முன் குறித்த இருவரால் விலக்கப் பட்டன. இவன் யாதொரு நோவும் இன்றி விரும்பியதை விரும்பியவாறே துய்த்து மகிழ்ந்தான். தன் காதலைப் பிறர் அறியாமல் ஒருவன் உய்க்கின், பகைவர் செய்யும் வஞ்சம் அவன்பால் பலியாதென்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. விரிவைப் பிரமகை வர்த்தத்தில் காண்க.

தன் விருப்பத்தைப் பிறரறியாவண்ணம் நடத்த வல்லவனுக்குப் பகைவரால் ஒரு கேடும் உண்டாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

குற்றம் புரியா திருந்து பிறர்குற்றங்களைச் சிறிதேனும்
குற்றம்புரியிற் சிற்றெறிவைக் குவையையழிக்குமாறே போல்
பற்றும்பெருவாழ்வினையழிக்கும்பகைவர்க்காக்கும்மிகப்பெருக்கும்
முற்றும்பெருநோ யுழப்பிக்கும் முனியாரானும் முனிவிக்கும் (1)

நன்றுமினிய பொருள்பலவும் காதல்பகைவர் அறியாமே
நன்றுநுகர்க நினையென்றும நன்குமதித்து வியவற்க
நன்றிபயவா வினைபினையும் நண்ணுமதத்தால் முடியற்க
வென்றிவிளங்கப்புகழ்விளங்கவிழுப்பம்விளங்கவேண்டிடினே (2)

(விநாயகபுராணம்.)

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

செருக்கு முதலிய இழிகுணங்கள் இல்லாததுசெல்வமே என்றும் சிறந்து விளங்கும். உலோபமும் அகங்காரமும் வீண் களிப்பும் அரசனுக்குப் பெருங்குற்றங்களாம். தினையளவான சிறிய குற்றத்தையும் அறிவுடையார் பனையளவாகக் கருதிவருந்துவார். குற்றமே

சேர்ந்திருந்தும் பகையாதலால் அதனை அரசன் குறிக்கொண்டு நீக்க வேண்டும். குற்றம் வருதற்குமுன்னரே காவாதவனது வாழ்க்கை எரி முன்னின்ற வைக்கோற்பொதிபோல் எரிந்து தொலையும். தன் குற்றத்தை முன்னறிந்து நீக்கினவன் பின்னர் ஒருகுற்றமுமின்றி உயர்ந்து விளங்குவான். செய்யத்தக்கவற்றையும் செய்யாமல் உலோபஞ் செய்கின்றவனது செல்வம் விரைவில் சிதைந்து கெடும். குற்றங்களெல்லாவற்றினும் உலோபமே மிகவும் கொடியது. தன்னை வியத்தலும் வீணான வினைகளை நயத்தலும் ஒருவனது இழிவுக்கும் அழிவுக்கும் ஏதுக்களாம். தான் உள்ளியிருப்பதை அடக்கமாக வைத்து ஒருவன் ஒழுகுவானாயின், பகைவர் செய்யும் வஞ்சம் அவனைப் பற்றாது ஒழியும்.

சச-வது குற்றங்கடிதல் முற்றிற்று.

---

# சரு-ம் அதிகாரம்

# பெரியாரைத் துணைக் கோடல்.

---

அஃதாவது அறிவு ஒழுக்கம் பருவ முதலியவற்றாற் சிறந்த பெரியாரைத் தனக்குத் துணையாக அரசன் பேணிக்கொள்ளுதல். குணமுடையாரை நாடி அறிதலும் கூடி மகிழ்தலும் குற்றங் கடிந்தார்க்கே கூடுமாதலால் குற்றங் கடிதலின்பின் இது வைக்கப்பட்டது.

441 மண்புகழ் அத்திபதி வண்பிரம தன்மரையேன்
கொண்டுவந்தான் கேண்மை குமரேசா—கொண்ட
அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்துகொளல். (க)

இ—ள்.

குமரேசா! அத்திபதி என்பவன் பிரம தருமரது கேண்மையை ஏன் பேணிக்கொண்டான் எனின், அறன் அறிந்து மூத்த

அறிவுடையாரது கேண்மையைத் திறன் அறிந்து அரசன் தேர்ந்துகொளல்வேண்டும் என்க.

கொளல் என்பது உடன்பாட்டு வியங்கோள்; அல்விகுதி இன்றிக் கொள் என நின்றால் முன்னிலை ஏவலாம்.

கேண்மை கொளல்—கேண்மையைக் கொள்க. கேண்மை கேளாந்தன்மை: ஈண்டு அஃது உற்றது கேட்டு உய்க்கும் உரிமையால் துணைமைமேல் நின்றது.

அறிதலும் மூத்தலும் அறிவுடைமைக்கு அடைகளாய் நின்று அதன் இயல்பை விளக்கின. அறிந்திருப்பினும் மூப்பு இன்றேல் அநுபவம் இராதாகலால் ஆன்ற அறிவுக்கு என்ற மூப்பும் வேண்டுவதாயிற்று. அறியாது மூத்தவர்களும் உளராதலால் அறிந்து மூத்த என்றார். மூத்தல அறிவு ஒழுக்கம் பருவம் என்பவற்றால்முதிர்தல். இவரை ஞானவிருத்தர், சீலவிருத்தர், வயோவிருத்தர் என்பர் வடநூலார். திறன் அறிதலும் தேர்தலும் கொள்வோன் உட்கோள். அவர் அறனை அறிந்த திறனையும் அநுபவத்தையும் அறிந்து தேர்ந்து என முறையே அமைந்துக் காண்க.

அறத்தின் கூறுபாடுகளை நுணுகி அறிந்து தன்னினும் மூத்த அறிவுடையாரது கேண்மையைக் கொள்ளும் திறமறிந்து அரசன் கொள்ளவேண்டும் என்பதாம்.

அறிவொழுக்கங்களாற் சிறந்த பெரியாரைத் தனக்கு அருமைத் துணையாக அரசன் தழுவிக்கொள்ளவேண்டும் என்பதாம் அதனால் அரிய நலங்கள் பல உளவாம் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை அத்திபதியால் அறியப்படும்.

## கதை.

அத்திபதி என்பவன் காந்தார நாட்டிலுள்ள பூருவ தேசத்து வேந்தன். செருக்கு முதலிய இழி குணங்கள் சிறிதுமில்லாதவன். அமைதியும் பொறுமையும் அன்பும் உடையவன். இவனது காலம் ஆயிரத்துஎண்ணூறு வருடங்கட்கு முன்னர் என்ப

இவனுடைய மனைவி பெயர் நீலபதி. மகன் பெயர் இராகுலன். சீலமுள்ளவர்களை இவன் தெய்வமென்று கொண்டவன். இடவயம் என்னும் நகரிலிருந்து இவன் இனிது அரசாண்டான்.

நுண்மைஅறனு மிகத் தெளிந்து நூலினியல்பும் உலகியல்பும்
வன்மையுறத் தேற்றிடுமாற்றல் வல்லராகி வளர் சீலம்
திண்மை அறிவாயுளின் முதிர்ந்தோர் சேர நன்கு மதித்திடுக
வெண்மை புரியா துயர்ந்திடுக வியம்பும் வழியே நின்றிடுக.

என்ற வண்ணமே இவன் என்றுநின்றவன். இவனுக்குஇனிய உறவினராயிருந்து பின்பு துறவியாகிய பிரமதருமர் என்னும் முனிவரொருவரை இவன் நாளும் பேணினான். அவர் அருந்தவக்கொள்கையில் திருந்திய பண்பினர். அறநூல்களை வழுவறத்தெளிந்தவர். வருங்கால நிகழ்ச்சிகளையும் ஐயமறக் காணும் மெய்யுணர்வுடையவர். அறிவும் சீலமும் அமைந்துநின்ற அவரதுகேண்மையை இவன் அமையப் பெற்று அவரை ஆதரித்து வந்தான். வருங்கால் ஒருநாள் அவர் இவனைநோக்கி "அரசே! இற்றைக்கு ஏழாம் நாளில் இங்குப் பூகம்பம் உண்டாம்; இந்நகரும் நாடும் நானூறு யோசனை அளவு பாதலத்தில் பதிந்து பாழாம்; இதனை விடுத்து நின் குடியோடு வேற்றிடம் செல்க" என்று வேண்டி மொழிந்தார். அவ்வாறே இவன் சென்று அவர் குறித்த ஓர் இடத்தில் இருந்தான். குறித்த நாளில் அவருரைத்தது நிகழ்ந்தது. முனிவரது மேன்மையை அனைவரும் போற்றினர். அவரைத் துணையாகக்கொண்டமையால் அரசன் பெரும் புகழ்கொண்டு பின்பு பேரின்பம் கொண்டான். அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மையைத் திறன் அறிந்து கொண்டவனுக்கு எல்லா நலங்களும் உளவாம் என்பதை உலகம் இவன்பால் கண்டது. விரிவை மணிமேகலையில் காண்க.

அறனறிந்த பெரியாரைத் திறனறிந்து அரசன் தழுவிக்கொள்ளவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

442 கண்டான் உயர்சோம காந்தன் பிருகுவையென்
கொண்டான்பின் பேணிக் குமரேசா—தண்டாமல்
உற்றநோய் நீக்கி உறுஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். (உ)

இ—ள்.

குமரேசா! சோமகாந்தன் பிருகு முனிவரை என் பேணிக்கொண்டான் எனின், உற்ற நோயை நீக்கி உறுஅமை முற்காக்கும் பெற்றியாரைப் பேணிக்கொளல் என்க.

நீக்கிக்காக்கும் பெற்றியாரைப் பேணிக்கொளல் என்று இயைக்க. உற்ற என்பது உறுதல் என்னும் வினை அடியாகப் பிறந்த பெயரெச்சம்.

உறுதல்—பொருந்தல், கூடல், வருதல், உண்டாதல், அடைதல்.

உறுஅமை—உறுவண்ணம்; இதில் அளபெடைசெய்யுளோசையை நிறைத்து நின்றது. பெற்றி என்பது குணம் தன்மைகளை உணர்த்திவரும்,

தன்னைப்பற்றிய துன்பத்தைப் பற்றற நீக்கி மீண்டும் வந்து அது பற்றுவண்ணம் முற்சூழ்ந்து காக்கும் பெற்றியார் என்ற இதனால் பெரியார் இயல்பு தெளிய நின்றது.

மேல், அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மையைத் தெரிந்துகொள்க என்றார், அவர் என் செய்வார் என்பார்க்கு இஃது உணர்த்தியதென்க.

தனக்கு வந்த துன்பங்களை நீக்கி அவைபின் வாராவண்ணம் முன்னறிந்து காக்க வல்ல தன்மையுடைய பெரியாரை அரசன் பேணிக்கொள்க என்பதாம்.

பேணிக்கொளல் என்றது அப்பெரியார் தன்பால் பேரன்பு கொள்ளுமாறு குறிப்பறிந்து நடந்து அவர் உவப்பன செய்து உவந்து கொள்க என்றபடி.

உற்ற நோயை நீக்கித் தன்னை முற்றும் காக்கும் வெற்றியுடையாரை உற்ற துணையாகப் பற்றிக்கொள்ளும் அரசன் எல்லா நலங்களையும் பெற்று இருமையினும் இன்பமுறுவான் என்பது கருத்து. இவ்வுண்மை சோமகாந்தன்பால் உணரப்படும்.

கதை

சோமகாந்தன் என்பவன் பல நூற்றாண்டுகட்கு முன்னர்ச் சவுராட்டிரம் என்னும் தேசத்தை ஆண்ட ஓர் வேந்தன். பேரழகுடையவன். நிறையும் நீதியும் நிலைத்த நெஞ்சினன்.

தக்கஅறி வாலமரர் தங்குருவை வென்றான்
மிக்கபொறை யால்நெடியமேதினியை வென்றான்
தொக்கவொளி யாலிலகு சூரியனை வென்றான்
நக்கபுகழால் உலவு நாண்மதியை வென்றான். (1)

கைந்தொடையி னுல்எழு கரும் புயலை வென்றான்
மெய்ந்நண் அழகால் உருவ வேண்மதனை வென்றான்
வைக்கும் நிதியால் அளகை மன்னவனை வென்றான்
எக்கமிகு போகமதில் இந்திரனை வென்றான். (2)

என்று புலவர்களால் இவன் புகழப்பட்டவன். இத்தகைய நலங்களையுடைய இவன் சுதன்மை என்னும் ஓர் மங்கையை மணந்து ஏமகண்டன் என்னும் புதல்வனைப் பெற்று இன்புற்றிருந்தான். இங்ஙனமிருக்குங்கால் பழவினைப்பயனால் இவனைத் தொழுநோய் பற்றியது. அதனால் உளமிக வருந்தி அரசைப் புதல்வன்பால் வைத்துவிட்டுத் தனியே யிருந்தான். ஒருநாள் பிருகு முனிவரைக் கண்டான். அவரடிமேல் விழுந்து அகங்குழைந்து நின்றான். அவர் இவனது அன்புடைமையை நோக்கி அருள்மீக்கூர்ந்தார். முன்னைவினையால் உற்ற இவன் இன்னல் நோயை நோக்கி அவர் முன்னியிரங்கி அது நீங்குமாறு இறைவனை எண்ணி யிறைஞ்சினார். அத் தொழுநோய் முழுதும் உடனே ஒழிந்தது. அரவுமிழ்ந்த மதிபோல் அரசன் விளங்கினான். உற்ற நோயை நீக்கிய அவரது வெற்றியை வியந்து பெரிதும் போற்றித் தன் அரசில்

வைத்து அவரருள் வழி ஒழுகினான். அதன் பின் துன்பம் யாதுமின்றி இன்பமுற்று விளங்குகின்றான். உற்றநோயை நீக்கி உறுமைமுற்காக்கும் பெற்றியாரைப் பேணிக்கொள்ள வேண்டும் என்பதை இவன் உலகம் காணக் காட்டினான். (விரிவை விநாயகபுராணத்தில் காண்க.)

பெரியாரைப் பேணுவாரை ஒருநோயும் அணுகாது என்பது இதனால் கூறப்பட்டது.

---

443 திண்டோள் உயர்தக்கன் தேர்ந்தேனே முற்கலைக்
கொண்டான் தமராக் குமரேசா—கண்ட
அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். (௩)

இ—ள்.

குமரேசா! . . தக்கன் என்பவன் முற்கலையை ஏன் தனக்கு அருமைத் துணைவராகப் பேணிக்கொண்டான் எனின், பெரியாரைப் பேணித் தமராக்கொளல், அரியவற்றுள் எல்லாம் அரிதேயாம் என்க.

அரியவற்றுள்—அரியபேறுகளுள்; அஃதாவது அருமையாக அடையத்தக்க செல்வங்களுள்.

அரிது என்றது ஈண்டுச் சிறந்தது என்னும் பொருள்மேல் நின்றது.

பெறுதற்கரிய பேறுகள் எல்லாவற்றுள்ளும் பெரியாரைத் தனக்குச் சிறந்த துணைவராகப் பேணிக்கொள்ளுதலே அரசனுக்குப் பெரும்பேறு என்பதாம்.

உலகத்து அரிய பொருள்களை யெல்லாம் தனக்கு உரிமையாகப் பெறுதற்குரிய அரசனுக்கு மிகவும் அருமையான பொருள் பெரியார் கேண்மையேயாம் என்றது எல்லா நலங்களும் அதனால் எளிதில் எய்துமென்பது கருதி என்க.

இனி, அருமையாக அடையத்தக்க பொருள்களுள் பெரியார் துணைமையை அடைதலே ஒருவனுக்கு மிகவும் அருமையாம் எனவும் இது பொருள்படும்.

பெரியார் கேண்மையே தனக்கு அருமையினும் அருமை என்று கருதி அரசன் பேணிக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

பெரியாரைத் தமராகப் பேணிக்கொண்டவனுக்கு எல்லாப் பேறுகளும் எளிதில் உளவாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தக்கன்பால் உணரப்படும்.

## கதை.

தக்கன் என்பவன் பலநூற்றாண்டுகட்கு முன்னர் பானு நகரிலிருந்து அரசுபுரிந்த வல்லவன் என்னும் வேந்தன் புதல்வன். தாய் பெயர் கமலை. குட்டநோயால் தளர்ந்து அழகிழந்திருந்தமையால் இவனைத் தந்தை வெறுத்து அகற்றினன். இவனும் அகன்று தனியே ஒருவனத்துட் புகுந்தான். அங்கு முற்கல முனிவரைக் கண்டான். அவர் அருள்புரியுமாறு பல பணிமொழிகள் புகன்றான். அவர் இரங்கி அருள் புரிந்தார். இவன், அவர் அருள் வழி ஒழுகி அவரோடு அமர்ந்திருந்தான். அக்காலத்தில் கவுண்டின்னியம் என்னும் நகரிலிருந்த சந்திரசேனன் என்னும் அரசன் இறந்துபோயினன். அவனுக்குச் சந்ததி இல்லை. முற்கல முனிவர் ஆங்குச்சென்று அவ் அரசபதவி தக்கனுக்கு உரிமையாகுமாறு ஓர் அற்புதச் சூழ்ச்சியைச் செய்தார். அதனால் அனைவரும் இவனையே அரசனாகக்கொண்டு மணிமுடி புனைந்தார். தக்கனும் முனிவரது கேண்மையால் வந்த மேன்மையென்று மதித்து அவரது அடிபணிந்து நின்று அகங்குழைந்து போற்றினன். அவரைத் துணையாகக்கொண்டே இனிது அரசு செய்தான். பெரியாரைப் பேணித் தமராக்கொளல் அரியவற்றுள் எல்லாம் அரிதே என்பதும் அங்ஙனம் கொண்டவர்க்கு எல்லாப் பேறுகளும் எளிதில் உளவாம் என்பதும் உலகம் உணர இவன் உணர்த்தி நின்றான். விரிவை விநாயக புராணத்தில் காண்க.

பெரியாரைத் துணைக்கொள்ளுதலே ஒருவனுக்குப் பெரும் பேறாகும் என்பது இதனால் கூறப்பட்டது.

444 மண்டியசீர் நந்தர்கோன் மாயன் வழியொழுகிக்
கொண்டானேன் வன்மை குமரேசா—கொண்டாடும்
தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாந் தலை. (ச)

இ—ள்.

குமரேசா! நந்தர்கோன் கண்ணன் சொல்வழி ஒழுகி ஏன் பெருவன்மையை அடைந்தான் எனின், தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல், வன்மையுள் எல்லாம் தலையாம் என்க.

ஒழுகுதல் தலை என்று ஒட்டிக் காண்க.

தம்மின் பெரியார்—தம்மினும் உயர்ந்தார்; இன் உருபு இதில் எல்லைப்பொருளது.

தமர் ஆ—தம்மவராக; தம் பால் அன்புள்ளவராகுமாறு என்க.

தனக்குச் சிறந்த துணைவராகப் பெரியார் அமையுமாறு ஒருவன் அமைந்து ஒழுகுவனாயின் அதனால் அவனுக்கு உயர்ந்த வன்மைகள் உளவாம் என்பார் “பெரியார் தமரா ஒழுகுதல் வன்மையுள் எல்லாம் தலை” என்றார்.

மேல், பெரியாரைப் பேணித் தமராகக் கொளலே அரசனுக்குப் பெருமை என்றார்; இதில், அவர் சொல்வழி ஒழுகுவோனே எவரினும் வல்லவன் என்றார்,

பொருள்வன்மை குடிவன்மை படைவன்மை அரண்வன்மை தேகவன்மை மனவன்மை மதிவன்மை முதலாகப் பலவன்மைகள் ஒருவனுக்கு உளவாயிருப்பினும், பெரியார் துணைவன்மையின்றேல் அவற்றால் பயனில்லை என்பது குறிப்பு.

அறிவு முதலியவற்றால் தம்மினும் சிறந்த பெரியார் தமக்குத் துணையாகுமாறு ஒழுகுதல் எல்லா வலிமைகளினும் அரசர்க்கு உயர்வாம் என்பதாம்.

பிறவலியுடைமைகளால் அடைதற்கரிய மேன்மை பெரியார் துணைவலியால் அடையலாமாதலால் அதனையே அரசன் தலைமையாகப் பேணிக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

சிறந்த பெரியார் தம்பால் நண்புகொள்ளுமாறு அன்புசெய்து அவர் சொல்வழி ஒருவன் ஒழுகின் அவன் உயர்ந்தவன்மையை அடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நந்தர்கோன்பால் உணரப்படும்.

கதை.

நந்தர்கோன் என்பவன் ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர் யமுனை நதியின் அருகிலுள்ள கோகுலம் என்னும் நகரிலிருந்த ஒரு குறுநில மன்னன். இடையர்கட்குத் தலைவன். வசுதேவருக்கு நண்பன். மனைவி பெயர் யசோதை. கஞ்சனுக்கு மறைந்து வந்து தன் இல்லில் வளர்ந்த கண்ணனைக் கண்ணினும் அருமையாக எண்ணிப் போற்றினான். உத்தவர் முதலிய பெரியோர்களது உறவையே இவன் பெரிதும் உவந்து பேணினான். இனநலத்தால் பெருவலியுடையனாய் இவன் எவரினும் மேன்மை பெற்றிருந்தான். தை மாதந்தோறும் கோவர்த்தனம் என்னும் மலையில் வைத்து இந்திரனுக்குத் திருவிழா நடத்தினான். ஒருமுறை கண்ணன் கூறிய உறுதிமொழியின்படி இவன் கருதி ஒழுகினான். அதனால் இந்திரன் வெகுண்டு கல்மழை பொழிவித்தான். கண்ணன் அதனைத் தடுத்துக் காத்தான். அமரர் கோனும் இவனது தமர் நலத்தை அஞ்சி அகன்று சென்றான். துணை வன்மையால் நந்தர்கோன் எய்திய மேன்மையை அனைவரும் வியந்தார். பெரியாரைத் தமராக்கொண்டு ஒழுகின் அரிய வன்மைகளெல்லாம் ஒருவனுக்கு எளிதில் உளவாம் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. விரிவைப் பாகவதத்தில் காண்க.

ஒண்கதிர் வாண்மதியம் சேர்தலால் ஓங்கிய
அங்கண் விசும்பின் முயலுந் தொழப்படூஉம்
குன்றிய சீர்மையராயினுஞ் சீர்பெறுவர்
குன்றன்னார் கேண்மை கொளின். (நாலடியார்.)

பெரியார் வழிநின்றொழுகுவார்க்குப் பெருவன்மைகள் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

445 வெள்ளி வெறுத்தும் விடபன்மன் எக்குழ்க்க
கொள்ளலுற்றான் கேண்மை குமரேசா—உள்ளவெல்லாம்
சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். (ரு)

இ—ள்.

குமரேசா! தன்னை வெறுத்தகன்ற வெள்ளியைத் தனக்குத் துணையாக விடபன்மன் விரும்பிக்கொண்டான் எனின், சூழ்வார் கண்ணாக ஒழுகலால் மன்னவன் சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் வேண்டும் என்க.

சூழ்வார் என்றது அமைச்சரை; ஆட்சிக்குவேண்டிய சூழ்வுகளையுடையவர் என்னும் ஏதுவான வந்தது, சூழ்வு—ஆலோசனை, உபாயம்.

சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்—அமைச்சரை ஆராய்ந்து கொள்க. சூழ்தல்—ஆராய்தல், வினாதல்.

உயிர்கள் கண்களைக்கொண்டே பொருள்களைக்கண்டு உலாவும் அதுபோல் அரசன் அமைச்சரைக்கொண்டே யாவும் அறிந்து ஆவன செய்பவன் ஆதலால் "சூழ்வார் கண்ணாக ஒழுகலான்" என்றார். அமைச்சில்லாத அரசு கண் இல்லாத உடம்புபோல் ஒண்மைகுன்றும் ஆதலால் அஃது உறுவண்ணம் அவரைச் சூழ்ந்து கொள்ளவேண்டும் என்க.

அமைச்சரைக் கண்ணாகக்கொண்டு அரசன் நடத்தலான் அந்தகைய அமைச்சரை ஆராய்ந்து தனக்குத் துணையாக அவன் கொள்ளவேண்டும் என்பதாம்.

சூழ்ச்சிவல்ல பெரியாரைக் கண்போல் கருதி அரசன் தழுவிக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

எவ்வகையானும் அகலவிடாமல் பெரியாரை அறிவுடையார் பேணிக்கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விடப்பன்மன்பால் உணரப்படும்.

## கதை.

விடப்பன்மன் என்பவன் பல நூற்றாண்டுகட்கு முன்னர் இப் பரதகண்டத்தின் வடபாலிருந்து அரசுபுரிந்த ஓர் அசுரகுல வேந்தன். ஆட்சிக்குரிய சூழ்ச்சித் துறைகளில் மிகத் தேர்ச்சிபெற்றவன். ஆற்றல் மிக்கவன். அமைதியும் உடையவன். எடுத்த காரியத்தைக் குறித்த காலத்தில் திருந்தமாகச்செய்து முடிக்கும் இயல்பினன். இவன் மனைவி பெயர் கனகமாலை. இவனுக்குச் சன்மிட்டை என்று ஒரு புதல்வியுண்டு. அவளுக்கும் தனது குலகுருவாகிய சுக்கிரன் மகளுக்கும் இடையே சிறிது கலகம் நிகழ்ந்தது. அதனால் வருந்தி அவர் அரசைவிட்டகன்றார். அரசன் அறிந்தான், விரைந்துபோய்க்கண்டு அவரை வணங்கித் தொழுதான். புதல்விசெய்த பிழையைப் பொறுக்கவேண்டுமென்று அரசன் போற்றி வேண்டினான். என் மகளுக்கு நின் மகள் ஈராறு திங்கள் ஏவல்புரியுமாறு இசைந்துவிடுவையேல் நின்பால் வந்து யான் இசைந்திருப்பன் என்று அவர் இரைந்து மொழிந்தார். அதற்கு அரசனும் இசைந்து அவரை அழைத்துவந்தான். தன் அருமைப் புதல்வியை அவர் புதல்விக்கு ஏவல்புரியுமாறு அரசன் ஏவிவிடுத்தான். அரசனது ஒள்ளிய குணத்தையும் தம்மை உவந்து பேணிய திறத்தையும் வெள்ளிவியந்து தம் உள்ளம் உருகினார். சூழ்வாரைக் கண்ணாகக் கருதி அரசன் சூழ்ந்துகொளல்வேண்டும் என்பதை இவன் சூழ்ந்து காட்டினான். விரிவைப் பாரதத்தில் காண்க.

சமயம்வரின் இடித்துரைப்பார் தக்கவழிச் செலச்செய்வார்
இமையவர்தம் உலகுறவும் இருநிலகம் வகையுமாய்
அமையஅறி வுறுத்துவார் அந்தோநூல் கற்றுணர்ந்த
கமையுடையார் நட்பெவர்க்குக் காண்கிடைக்கும் அரிதரிது.

(குசேலோபாக்கியானம்)

பெரியாரைக் கண்ணாகக் கருதி அரசன் பேணிக்கொள்ள வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

446 செற்றார் திரண்டுவந்தும் செய்யவில்லை பாண்டியன்பால்
குற்றமொன்றும் என்னே குமரேசா—முற்றறிந்த
தக்கார் இனத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில். (சு)

இ—ள்.

குமரேசா! பகைவர் திரண்டுவந்தும் பாண்டியன்பால் ஒன்றும் செய்யமுடியாமல் ஏன் குன்றி மீண்டார் எனின், தக்கார் இனத்தனாய்த் தான் ஒழுக வல்லானைச் செற்றார் செயக்கிடந்தது இல்லை என்க.

தக்கார் இனத்தன் ஆய்—தகுதியுடையராய பெரியார்க்கு உறவினனாய்.

செற்றார்—பகைவர். செறுத்தல் என்பதன் அடியாகப் பிறந்தது. செறுத்தல்—சினத்தல், பகைத்தல், கொல்லல்.

பெரியார் கேண்மையும், அறிவும் உடைய அரசனால் பகைவர்செய்யும் வஞ்சகங்கள் யாதும் பலியாதென்பார் "வல்லானைச் செற்றார் செயக்கிடந்தது இல்" என்றார்.

மேல், சூழ்வாரைத் துணையாகச் சூழ்ந்துகொள்க என்றார்; அதனால் வரும் பயனை இதில் விளங்க உணர்த்தினார்.

அறிவொழுக்கங்களால் தகுதியுடைய பெரியார்க்கு உறவினனாகித் தானும் நெறியறிந்து ஒழுகவல்லானைப் பகைவர் சிறிதும் வெல்லமுடியாது என்பதாம்.

பெரியாரைத் துணைக்கொண்ட அறிவுடையானுக்குப் பகைவரால் ஒருகேடும் உண்டாகாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராசேந்திர பாண்டியன்பால் உணரப்படும்.

கதை.

இராசேந்திரபாண்டியன் என்பவன் பல நூற்றாண்டுகட்கு முன்னர் மதுரையிலிருந்து அரசுபுரிந்த குலபூடண பாண்டியனுடைய புதல்வன். இறைவன்பால் நிறைவான அன்பினன். ஆண்டினில் இளையவனாயினும் அறிவினில் பெரியவன். மநுநெறியுடைய முதியோரையே தனக்கு உறுதுணையாகக்கொண்டு இவன் உலகினை ஆண்டுவந்தான். வருங்கால் காஞ்சிபுரத்தில் அரசுபுரிந்திருந்த சோழவேந்தன் இவன்பால் பகைகொண்டிருந்தான். பின்பு நண்புடையான்போல் நடித்துத் தன் மகளை இவனுக்கு மணம் புரிந்து தருவதாக இசைந்தான். அவ்வமையம் இவன் தம்பியாகிய இராசசிங்கன் என்பவன் அங்குச்சென்று அவளை மணந்துகொண்டான். ஆண்டே மருவியிருந்தான். காமச்சுவையின் களிப்பால் மாமனைக் கண்போல் கருதிக் கருத்தொன்றி நின்றான். அவ்வளவில் அமையாமல் அவன் உள்ளம் உவக்கும் என்று எண்ணித் தன் முன்னவனுக்கு இன்னல் விளைக்கவும் முயன்றான். இப்புதிய மருகனைக்கொண்டே தனது பழைய பகைவனை வென்றுவிட வேண்டுமென்று அவ்வளவும் துணிந்தான். பெரும்படையுடனே மதுரையை அணுகினான். அதனைப் பாண்டியன் அறிந்தான். தக்கார் சிலருடன் ஆய்ந்தான். அதன்பின் கோயிலுட்புகுந்து சோமசுந்தரப் பெருமான் திருமுன் நின்று வினை முடிவு கருதி மனமுருகித் துதித்தான். இறைவன் அருளால் அதுபொழுது ஆகாயத்தின்மேலோர் தனி மொழி எழுந்தது. அரசன் மகிழ்ந்தான். அதனை வியந்தான். அம்மொழி வழி ஒழுகி மறுநாள் தமருடன் பொருந்தி அமர்முனை புகுந்தான். அடலுடன் பொருதான். அதில் வந்த படைகள் எல்லாம் சிந்தியோடின. சோழனையும் துணைவனையும் தொடர்ந்து பிடித்து அரசன் முன் தொடுத்து விடுத்தார். பாண்டியன் இரங்கிப் பகைவனுக்கு இதம் பலகூறி அரியன உதவி அவன் பதிபுகவிடுத்தான். தன் தம்பியாகிய இராசசிங்கத்துக்கு உரியன சில கொடுத்து வேறே ஒதுக்கிவைத்தான். பகையுடையாரும் இவனது துணை வலிக்கஞ்சி இவன்பால் பணிவுகொண்டிருந்தார். தக்கார் இனத்

தனுயர் தான் ஒழுக வல்லானைச் செற்றார் ஒன்றும் செய்திடலாற்றார் என்பதை அனைவரும் இவன்பால் அறிந்து தெளிந்தார். விரிவைத் திருவிளையாடலில் காண்க.

தொல்லை இரும்புனத்துக் குற்றி அடைந்தபுல்
ஒல்காவே யாகும் உழவர் உழுபடைக்கு
மெல்லியரே யாயினும் நற்சார்வு சார்ந்தார்மேல்
செல்லாவாம் செற்றார் சினம். (நாலடியார்)

பெரியாரைத் துணை கொண்டவரை ஒருவரும் வெல்ல முடியாது என்பது இதனால் கூறப்பட்டது.

---

447 அன்பிடித்தார் தம்மையுவந் தாதரித்த கிள்ளிநலங்
குன்றாத தென்னே குமரேசா—நன்றாக
இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர். (எ)

இ—ள்.

குமரேசா! அரிய நீதிகளைத் தனக்கு இடித்துக் கூறியவரைக் கடிந்து அகற்றாது அடுத்த துணையாக அணைந்துக்கொண்ட நலங்கிள்ளி ஏன் என்றும் கேடின்றி நின்றார் எனின், இடிக்கும் துணையாரை ஆள்வாரைக் கெடுக்குந் தகைமையவர் யார் என்க. யார் என்னும் வினாக் குறிப்பு எவரும் இல்லை என்பதை விளக்கிநின்றது.

இடிக்கும் துணையார் என்றது அமைச்சர் முதலிய பெரியாரை; உறுதிமொழிகளை வற்புறுத்திக் கூறுவார் என்றபடி.

கெடுக்கும் தகைமையவர் என்றது பகைவரை.

அறநீதிகளை இடித்துக் கூறும் பெரியாரைத் தனக்குத் துணைவராகத் தழுவிக்கொள்ளும் அரசரைக் கெடுக்கும் தகுதியுடையவர் ஒருவரும் இல்லை என்பதாம்.

நீதி முறையினை நெருக்கிக் கூறும் அறிவுடையாரைத் துணையாகக் கொண்டவர் யாதொரு கேடும் இன்றி என்றும் வென்றியோடு நின்று திகழ்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை நலங்கிள்ளியால் அறியப்படும்.

## கதை.

நலங்கிள்ளி என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்க் கருவூரிலிருந்து அரசுபுரிந்த ஒரு சோழ மன்னன். சிறந்த போர்வீரன். பெருங்கொடையாளி. பலநூல்களிலும் நல்லபயிற்சியுள்ளவன். கவிசெய்யுந்திறனும் கவினப்பெற்றவன். கோவூர்க்கிழார் ஆலத்தூர்க்கிழார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார் முதலிய புலவர் பெருமக்களையே தனக்குப் பொருந்திய துணைவராகக்கொண்டு புலமையின்பத்தை நுகர்ந்தான். ஆயினும் பலபோர்முனைகளிலும் சென்று வென்று தன் கீர்த்தியை எங்கும் பரப்பினான். குன்றுவென்றியனாய் நின்று நிலவுவதைக் கண்டு அரசர் பலரும் இவன்பால் பகைமை கொண்டனர். அவரனைவரையும் அடங்க வென்று ஆங்காங்குத் தனது புலிக்கொடியைப் பொருந்த நாட்டினான். போர் புரிந்து வெற்றிகொள்ளுதலையே பெரும பேறாகக் கருதி இவன் பெரிதும் விழைந்தான். கண்ணனாரும் கோவூர்க்கிழாரும் இவனது போக்கைக் கடிந்து மொழிந்தார். தன்னுயிர்தான் பரிந்தோம்புமாறுபோல் மன்னுயிர் ஓம்பலே மதிநலம் எனவும், பகை என்னும் பண்பில் அதனை நகையேயும் வேண்டற்க எனவும், தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும் மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும் அறியாதோரையும் அறியக்காட்டித் திங்கட்புத்தேள் திரிதரும் உலகத்து வல்லாராயினும் வல்லுநராயினும் அருளவல்லை எனவும் அவர் இடித்துக்கூறினார். அவரது உறுதிமொழிகளைக் கேட்டு இவன் உவகை மீக்கூர்ந்து பகைமை என்பதைப் பற்றற ஒழித்தான். அவரையே தனக்கு அருமைத் துணைவராக ஆதரித்துவந்தான். அதனால் இவன் புகழ்மிகவுடையனாய் யாதொரு கேடும் இன்றி இன்புற்றிருந்தான். இடிக்கும் துணையாரை ஆள்வாரை கெடுக்குந் தகைமையவர் இல்லை என்ப

தந்து இவன் இனிதாய் இருந்தான். (விரிவைப் புறநானூற்றில் காண்க).

மெல்ல வந்து என் நல்லடி பொருந்தி
ஈயென இரக்குவர் ஆயின் சீருடை
முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்
இன்னுயிர் ஆயினும் கொடுக்குவென் இந்நிலத்து
ஆற்றல் உடையோர் ஆற்றல் போற்றாது என்
உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்
துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
வருந்தப் பொரேஎன் ஆயின் பொருந்திய
தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே.

இது, தனது இயல்பினைக் குறித்து நலங்கிள்ளி சொன்னது. இதனால் இவனது கொடையும், வீரமும், பிறர் மனை நயவா உயர் குண மாண்பும் பிறவும் தெளியப்படும்.

இடித்து அறிவுரைக்கும் பெரியாரை அரசன் அணைத்துஆள வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

448 கோதில் அறிவோரைக் கொள்ளாக் கயமுகனேன்
கோதுகொண்டு மாண்டான் குமரேசா—ஏதும்
இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானுங் கெடும். (அ)

இ—ள்.

குமரேசா! அறிவோரைத் துணைக்கொள்ளாத கயமுகன் ஏன் தானே அழிவுற்றான் எனின், இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பார் இலானும் கெடும் என்க.

இல்லாத மன்னன் இலானும் கெடும் என்று இயைத்துக் காண்க.

ஏமரா—காவலுறாத; இஃது ஏமரல் என்னும் தொழிலடியாகப் பிறந்த எதிர் மறைப் பெயரெச்சம். ஏமரல்—கலக்குதல் நினைத்தல், காவலுறல். இல்லாத, ஏமரா என்னும் இரண்டு எச்சங்களும் இணைந்து வந்து மன்னன் என்பதை மருவிநின்றன. இல்லாத மன்னன், ஏமரா மன்னன், எனத் தனித்தனி இயைத்துக் காண்க. கெடுப்பார் இலானும் என்றது அவர் உளராவர் என்பதை உணர்த்தி நின்றது.

மேல், இடிப்பாரை உடையாரைக் கெடுப்பார் இல்லை என்றார்; இதில், அவரை இல்லாதவர் தாமாகவே கெடுவார் என்றார்.

உறுதி மொழிகளை இடித்துக்கூறும் பெரியாரைத் தனக்குத் துணையாக இல்லாத காவலற்ற அரசன் கெடுப்பார் இல்லாமலே தானே கெடுவான் என்பதாம்.

பெரியாரைத் துணைக்கொள்ளாதவனுக்குப் பெருங் கேடுகள் உளவாகும் என்பது கருத்து.

உறுதியை உழையிருந்து கூறும் அறிவுடையாரைத் துணையாகக்கொள்ளாத அரசனுக்குப் பகைவர் பலர் உளராவர் என்பதும், அவர் யாதும் செய்யாவிடினும் தாமாகவே அவன் கெடுவான் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை கயமுகன்பால் உணரப்படும்.

## கதை.

கயமுகன் என்பவன் ஓர் அசுரகுலவேந்தன். விபுதை என்னும் அழகிய அசுர மங்கைக்கும் மாகதர் என்னும் முனிவருக்கும் இவன் புதல்வனாய்த் தோன்றினான். பருத்த உடம்பும், சிறுத்த கண்களும், செறித்த சிகையும், தழைத்த செவிகளும் உடையவன். அதனால்இவன் கயமுகன் எனப்பெற்றான். கயம்—யானை. திண்மையும் புன்மையும் சேர்ந்த நெஞ்சினன். பருவ மெய்திய

பின் இறைவனை நோக்கி அருந்தவம் புரிந்து உயர்நலங்களையடைந்தான்.

வரந்தரு கடவுளர் முனிவர் மற்றையோர்
இருந்திடும் உலகெலாம் என்ன தானையிற்
றிரிந்திடும் ஆழியும் கோலும் சென்றிடப்
புரிந்திடும் அரசியல் புரிதல் வேண்டுமால். (1)

மிக்கதோர் அமரரால் வியப்பின் மானுட
மக்களால் அவுணரால் மற்றையோர்களால்
தொக்குறு விலங்கினால் துஞ்சிடா வகை
இக்கணம் தமியனேற் கிதல் வேண்டுமால். (2)

என்று இவை முதலாகச் சிறந்த வரபலங்கள் பல சேரப்பெற்றான். பின்பு காவலந்தீவின் தென்பால் மதங்கபுரி என்னும் ஊர் அழகிய நகரை அமைத்து அதிலிருந்து அரசுபுரிந்தான். வி[illegible]காந்தி என்னும் மங்கையை மணந்து விளங்கிய போகங்களை நுகர்ந்தான். மேல் கீழ் எங்கும் தன் கோலும் குடையும் சென்று குலவச்செய்தான். அறிவுடையாரைத் தனக்குத் துணையாகக் கொள்ளாமல் தன் ஆற்றலொன்றையே போற்றி மகிழ்ந்தான். எங்குஞ்சென்று எவரோடாயினும் போராடி வெல்லுதலையே இவன் பொருளாகக்கொண்டான். இவனது கொடுமையை நினைந்து அமரர் முதல் அனைவரும் அஞ்சி நடுங்கினர். தேவர்களை வருத்தும்பொருட்டு ஒருநாள் இவன் வானுலகம் புகுந்தான். இடைவழியுளால் அங்கு எதிரே வந்த விநாயகமூர்த்தி இவனைக் கண்டார். அவரையும் மதியாது துணிவோடெதிர்த்தான். அவர் நீதி கூறியும் யாதுங் கேளாமல் இவன் வாது மீறினான். அவர் வெகுண்டார். அதனால் இவன் உருவங்குலைந்து உடனே தொலைந்தான். மத மீறிய யானை போல நெறி யல்லாத நெறிகளில் மிதமீறிச் சென்றதால் தன் பதவியை இழந்து இவன் பழியோடு இழிந்தான். இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பார் இல்லாமலே கெடுவான் என்பதை இவன் கெட்டு விளக்கினான். விரிவைக்கந்த புராணத்தில் காண்க.

கடிக்கும்வல் லரவுங் கேட்கும் மந்திரம் களிக்கின் றோயை
அடுக்கும் ஈ தடாதென் றன்ற வதுவோ டறிவுகாட்டி
இடிக்குநர் இல்லை உள்ளார் எண்ணிய தெண்ணியுன்னை
முடிக்குநர் என்றபோது முடிவன்றி முடிவதுண்டோ.

(இராமாயணம்.)

இது, தன்பால் வந்து நகாதன உரைத்த இராவணனை நோக்கிச் சீதை உரைத்தது. களிக்கின்ற உன்னை அறிவுகாட்டி இடிக்குநர் இல்லை; ஆதலால், முடிவாக உனக்கு முடிவேயுண்டாம் என்ற இந்த அடிகள் கருத்தை அடியொற்றி நிற்றல் காண்க. அடையாம் உண்மையுங் கொடுத்து அரசை எடுத்து அரக்கர் வேந்தன் முன்னிருத்தி, மந்திரத்தின் பயனை முற்றுறவிரித்து, மந்திரிகள் இன்மையால் மன்னர்க்கு உண்டாம் கேட்டை அவன் மனங் கொள்ள அம்மை வாக்கில் வைத்துக் காட்டிய கம்பரது அருமை பெரியோர்கள் நன்கு ஆய்ந்தறிதற்குரியன.

அறிவுடையாரைத் துணைக்கொள்ளாத அரசன் அவமே கெடுவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

449 சார்பில்லாச் சந்தனுயர் தன்னிலையை யேயிழந்து
கூர்துயரங் கொண்டான் குமரேசா—நேரும்
முதலிலார்க் கூதியம் இல்லை மதலையாம்
சார்பிலார்க் கில்லை நிலை. (௯)

இ—ள்.

குமரேசா! சந்தனு நல்ல சார்பு இல்லாமையால் தனது நிலையை இழந்தானெனின், முதல் இல்லார்க்கு ஊதியம் இல்லை; மதலையாம் சார்பு இல்லார்க்கு நிலை இல்லை என்க.

முன் வாக்கியம் பின் வாக்கியத்திற்கு இதில் உவமையாய் நின்றது. இஃது எடுத்துக்காட்டுவமையணி.

ஊதியம்—இலாபம். சார்பு—துணை.

முதல் என்றது கைப்பொருளை. வாணிகம் முதலிய தொழில் களை நடாத்துதற்கு உறுதிப் பொருளாக முதலில் வைக்கப்படுவ தாதலின் இது முதல் என நின்றது. மூலதனம் எனவும் இது வழங்கப்படும். வட்டிக்குக் கொடுக்கும் பொருளையும் இக்காலத் தில் இது சுட்டி நிற்கின்றது.

மதலை என்பது மகன், தூண், கொன்றை மரம், மரக்கலம் மழலைச்சொல் முதலியவற்றை உணர்த்திவரும். ஈண்டு அது தூ ணின் தன்மையாகிய தாங்குவதைக் குறித்து நின்றது.

மதலையாம் சார்பு—தாங்குவதாந் துணை. 'வானத் தூன்றிய மதலைபோல ஏணி சாத்திய ஏற்றருஞ்சென்னி விண்பொர நிவந்த வேயா மாடம்' என்று பெரும் பாணாற்றுப் படையிலும்; 'சிதலை தினப்பட்ட ஆலமரத்தை மதலையாய் மற்றதன் வேரூன்றி யாங்கு' என்று நாலடியாரிலும் மதலை உணர்த்திநிற்கும் பொருளை யுணர்க.

முதல் இல்லாத வணிகர்க்கு அதனால் வரும் இலாபம் இல்லை அதுபோலத் தம்மைத் தாங்குவதாந் துணையில்லாத அரசர்க்கு நிலை இல்லை என்பதாம்.

அரசர்க்கும் வணிகர்க்கும் ஆவதொரு உறுதியை ஒருசேர அமைத்துக்கூறிய அருமையை இதில் ஆய்ந்து காண்க. முதல் இலாத வணிகனும் துணையில்லாத அரசனும் நிலைகுலைவர் என் பது குறிப்பு. அவ் இன்மையை இன்மையாக்கிக்கொண்டே தம் துறையில் அவர் இறங்கவேண்டும் என்பதாம். உலகத்தைத் தாங்கி நிற்கும் அரசனது உயர்நிலைக்குப் பெரியாரது துணைவலி ஒருதலையாக வேண்டும் என்பது கருத்து. அறிவுடையாரைத் துணையாகக்கொள்ளாத அரசனது நிலைமை இழிவுறும் என்பது இதில் உணர்த்தப்பட்டது, இவ்வுண்மை சுந்தன்பால் உணரப் படும்.

## கதை

சுந்தன் என்பவன் ஓர்இயக்கர் தலைவன். பல்லாயிர வருட ங்கட்கு முன்னிருந்தவன். திண்மையும் அழகும் சினமும் உடை

யவன். விந்தமலைக்குத் தென்பால் வசுமதி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தான். இவனுக்கு மாமன் ஒருவன் இருந்தான். வன்பெயர் சுகேது. அவனுடைய அருமை மகளை இவன் திருமணம்செய்துகொண்டான். அவள்பெயர் அனங்கலீலை என்பர்.

காமனும் இரதியும் கலந்த காட்சியி
தாமென இயக்கனும் அணங்க னாரும்வே
றியாமமும் பகலுமோர் ஈறின்றென்னலாய்த்
தாமுறு பெருங்களிச் சலதி மூழ்கினார்.

இங்ஙனம் மூழ்கிய இவன் அரசமுறைகள் அனைத்தையும் துறந்தான். வேறுபோகங்களையும் மறந்தான். அவளோடு இளமைச் செவ்வியையே இனிது நுகர்ந்திருந்தான். நாள்பலகழிந்தன.

பற்பல நாட்செலீஇப் பதுமை போலிய
பொற்பினுள் வயிற்றிடைப் புவனம் எஞ்சிட
வெற்பணி புயத்துமா ரீசனும் விறல்
மற்பொரு சுவாகுவும் வந்து தோன்றினார்.

சுந்தன் கண்டான். தனது பெரிய நிலைமையும் அழகிய மனைவியையும் இனிய புதல்வர்களையும் எண்ணி யெண்ணி இவன் இறுமாந்தான். அரசநிலை குலைவதை இவன் அறியாது திரிந்தான். அறிவுடையாரொருவரும் இவனை அணுகாது அகன்றார். தினமும் வேட்டைமேல் சென்று திரிந்தான். மான் முயல் மரைகளைக் கொன்று மகிழ்ந்தான். இவன்போக்கைத் தடுப்பாரும் இல்லை. இடிப்பாரும் இல்லை. ஒருநாள், ஓசநீர் முழுதையும் ஒருங்கு கொண்டிடும் மாதவனாகிய அகத்தியமுனிவர் வந்து அமர்ந்திருக்கும் இடத்தையும் இவன் அடங்காது அடைந்தான். பெரியவர் என்று மதியாமல் அங்கும் தன் சிறுமையைக் காட்டினன். முனிவர் முனிந்தார். இவனும் அவர் முன்னின்று எதிர்ந்தான். மாதவன் தழல் எழவிழித்தனன். உடனே இவன் சாம்பராயினன். அதன்பின் புதல்வரும் மனைவியும் பொங்கி வந்தார். அவரனைவரும் அரக்கராகும்படி அருந்தவன் நினைந்தான். அவ்வாறே அவரனைவரும் ஆயினர். தாடகை என்னும் பெயரை அவள்தாங்கித்

திரிந்தான். முன்னைய பெயரையே புதல்வர் மன்னிப்போயினர். தாங்குதற்குரிய நல்ல துணையில்லாமையால் சுந்தன் தாழ்ந்து தொலைந்தான் என்று அனைவரும் தயங்கி மொழிந்தார். மதலையாம் சார்பு இல்லார்க்கு நிலை இல்லை என்பதை இவன் நிலையா யுணர்த்தினான். இஃது இராமாயணத்திலுள்ளது.

துணையில்லாதவர்க்கு நிலையில்லை என்பது இதனால் கூறப் பட்டது.

---

450 கற்றறிந்த நற்குருவைக் கைவிட்டான் இந்திரன்பின்
குற்றமுற்றான் என்னே குமரேசா—சுற்றி நின்று
பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல் (ய)

இ—ள்.

குமரேசா! தன் குருவின் தொடர்பைக் கைவிட்ட இந்திரன் பின்பு ஏன் அதனால் பெருந்தீமையை அடைந்தான் எனின், நல்லார் தொடர்கைவிடல், பல்லார் பகைகொளலினும் பத்தடுத்த தீமைத்தேயாம் என்க. உண்மை அறிவும் கூடாது என்பதை உணர்த்தி நின்றது.

பத்து அடுத்த தீமைத்து—பதின்மடங்கு தீமையினையுடையது. ஏகாரம் தேற்றம் குறித்தது. பத்து என்றது மிகுதியை யுணர்த்துதற்கு.

கொளலின் விடல் தீமைத்து என்றார் அதனினும் இதனால் வருங்கேடு பெரிதாம் என்பது கருதி.

நல்லார் தொடர்கை விடல்—பெரியாரது நட்பினைக் கொள்ளாது விடுதல்.

நல்லாரோடு நட்பினைக்கொள்ளாது விடுதல் பல்லாரோடு பகை கொள்ளுதலினும் பத்துமடங்கு தீமையாம் என்பதாம்.

பல்லாரோடு பகை கொள்ளினு கொள்ளலாம் நல்லாரது நட்பினைத் தள்ளிவிடலாகாது என்பது கருத்து.

பெரியாரது துணைவன்மையின் உயர்நன்மையை உணர்ந்து தற்குப பகைவரது படுதீமையைக் காட்டி விளக்கிய நயம் நாடிக் காணத்தக்கது.

பெரியாரது கேண்மையை ஒருவன் கைவிடின் அதனால் அவனுக்குப் பெருங்கேடுகள் உளவாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இந்திரன்பால் உணரப்படும்.

## கதை

முன்னொரு காலத்தில் இந்திரன் தனது பெரியபதவியில் அமர்ந்து அரியபோகங்களைத் துய்த்துவருங்கால் அசுரர்பலர் இவன்பால் பகைமைகொண்டிருந்தார். இவனது துணை வலிமையையும், மனவலிமையையும், அறிந்து யாதும் செய்யலாற்றாது அவர் அடங்கியிருந்தார். அல்லல் யாதுமின்றி அகமகிழ்வுகொண்டிருந்த இந்திரன் ஒருநாள் அமரர்புடைசூழ, அரம்பையர்நடம்புரிய, தெய்வ நலங்களெல்லாம் இருமருங்கினும் எய்தி விளங்க அரியணையில் அமர்ந்து அழகுற வீற்றிருந்தான். அவ்வமையம் தன் குருவாகிய வியாழபகவான் அங்குவந்தார். தன்பதவியின் களிப்பால் அவரை இவன் மதியாதிருந்தான். உளமிக வருந்தி அவர் உடனே நீங்கினார். அதனால் இவன் திருவும் பெருமையும் சோரஇழந்தான். அற்றம் நோக்கியிருந்த பகைவரும் இவன்பால் செற்றம் மீக்கூர்ந்தார். அதன்பின் அல்லல் பலவும் இவன் அடைந்து வருந்தினான். பழியுந்தொடர்ந்தது. தன்பதவியும் இழந்தான். இறைவன் அருளால் முடிவில் அவ் இழிவெல்லாம் நீங்கினான். குருவைத்தேடியடைந்தான். தன்பிழை பொறுக்கும்படி அவரைத் தொழுது வேண்டித் துணைக்கொண்டு மீண்டு துறக்கம் புரந்தான். பல்லாரோடு பகை கொளினும் நல்லார் நட்பினைக் கைவிடலாகாதென்பதை இந்திரன் கண்டு தெளிந்தான். விரிவைத் திருவிளையாடலில் காண்க.

பையரா வணிந்தவேணிப் பகவனே யனைய நல்லான்
ஐயனும் வியாழப் புத்தேள் ஆயிடை அடைந்தானாகச்
செய்யதான் வழிபாடின்றித் தேவர்கோன் இருந்தான் அந்தோ
தையலார் மயலிற் பட்டார் தமக்கொரு மதியும் உண்டோ. (1)

ஒல்லெனக் குரவன் ஏக உம்பர்கோன் திருவின் ஆக்கம்
புல்லெனச் சிறிது குன்றப் புரந்தரன் அறிந்திக்கேடு
நல்லதொல் குரவற்பேணா நவையினால் விளைந்ததென்னா
அல்லலுற் றறிவன் றனைத் தேடுவா னாயினானே. (2)

இவற்றால் மேற்குறித்த உண்மை இனிது தெளியப்படும்.

பெரியாரது கேண்மையை அரசன் ஒருபோதும் கைவிடலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

பொன்னுள்ளான் பூமியுள்ளான் புந்தியுள்ளான் ஆயிடினும்
என்னுள்ளான் ஆவனவன் இருந்தவர்தம் நட்பிலனேல்
பொன்னில்லான் பூமியில்லான் புந்தியில்லான் ஆயிடினும்
என்னில்லான் ஆவனவன் இருந்தவர்தம் நட்புளனேல்.

(குசேலோபாக்கியானம்.)

அறக்குறைவை நிறைவாக்கும் சம்பத்தாக்கும் ஆபத்தைச்
சுபமாக்கும் அசுபந்தன்னைச்
சிறக்குமுயர்ந்தவர் கூட்டம் என்னுங் கங்கைச் சீதநீர்
ஆடினர்க்குச் செந்தீ வேள்வி
இறக்கரியதவந்தானந் தீர்த்தம் வேண்டா இடர்பந்தம்
அறுத்தெவர்க்கும் இனியோராகிப்
பிறப்பெனும் வேலைப்புணையாம் உணர்வு சான்ற பெரியோரை
எவ்வகையும் பேணல் வேண்டும். (வாசிட்டம்)

இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.

அறன் அறிந்த பெரியாரைத்தனக்குத் துணையாக அரசன் தழுவிக்கொள்ளவேண்டும். பெரியாரைப் பேணுவாரை ஒருநோயும் அணுகாது. பெரியாரைத் துணைக்கொள்ளுதலே ஒருவனுக்குப் பெரும் பேறாகும். பெரியார் சொல்வழி ஒழுகுவார்க்குப் பெருவன் மைகள் உளவாம். அவரைக் கண்ணாகக் கருதி அரசன் கைக் கொள்ளவேண்டும். அவரைத் துணைக் கொண்டு ஒழுகவல்லானைப் பகைவர் வெல்லமுடியாது. இடித்து அறி

வுரைக்கும் பெரியாரை அரசன் அணைத்து ஆளவேண்டும். இடிப்பாரை இல்லாத அரசன் கெடுப்பார் இல்லாமலே கெடுவான். முதல் இல்லாதவர்க்கு ஊதியம் இல்லாததுபோலத் துணை இல்லாதவர்க்கு நிலையில்லையாகும். ஆதலால், பெரியாரது கேண்மையை அரசன் ஒருபோதும் கைவிடலாகாது.

சடு-வது பெரியாரைத் துணைக்கோடல் முற்றிற்று.

---

# சகூ-ம் அதிகாரம் சிற்றினஞ் சேராமை.

அஃதாவது சிறிய இனத்தைச் சேராமை. சிறிய இனம் என்றது நெறி திறம்பிய அறிவிலிகள் கூட்டத்தை. அவர், நல்லதைத் தீயதாகவும், தீயதை நல்லதாகவும், மாற்றியுரைத்துத் தம் மனம்போனபடி மதத்துத்திரிவராதலால் அவரது சேர்க்கை அறிவைத் திரித்து இருமையினும் சிறுமையைச் சேர்த்துவிடும். ஆதலால் அதனை அஞ்சி அகலவேண்டும் என்பதாம். மேல் பெரியாரைப்பேணிக்கொள்க என்று விதித்தார். இதில் சிறியாரைச் சேராதே என்று விலக்குகின்றார். ஆதலின் இஃது ஈண்டுவைக்கப்பட்டது. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

451 வீடணனேன் அஞ்சி வெளிவந்தான் சிற்றினத்தைக்
கூடினனேன் முன்னோன் குமரேசா—மூடமுறு
சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும். (க)

இ—ள்.

குமரேசா! வச்சிரதந்தன் முதலிய சிறியாரை அஞ்சி வீடணன் வெளியே போனான்; இராவணன் ஏன் அவரைச் சுற்றமாகச் சூழ்ந்துகொண்டான்எனின், பெருமை சிற்றினம் அஞ்சும்; சிறுமைதான் அதனைச் சுற்றமாச் சூழ்ந்துவிடும் என்க. சிற்றினம் என்பதைச் சிறுமை இனம் எனப் பிரித்துக் காண்க.

பெருமைக்கு மாறுகிநிற்பது சிறுமை என்க.

ஈறுபோதல் இடையுகரம் இய்யாதல்
ஆதிநீடல் அடியகரம் ஐயாதல்
தன்ஒற்று இரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனம் மிகல் இனையவும் பண்பிற்கு இயல்பே. என்றபடி பண்புச்சொற்கள் பல விகாரங்களை அடையுமாதலால் சிறுமை என்பது ஈறுபோய்த் தன் ஒற்று இரட்டி வருமொழியோடு இயைந்து சிற்றினம் என நின்றது.

அஞ்சுதல், சூழ்தல் என்னும் குணியின் தொழில்கள் குணத்தின்மேல் நின்றன.

பெரியார் சிறியார் இனத்தைச் சேர அஞ்சுவர்; மற்றைச் சிறியார் அவரைத் தனக்குத் துணையாக எண்ணித்துணிவர் என்பதாம்.

ஒளியும் இருளும்போல் பெருமையும் சிறுமையும் மாறுகி நிற்குமாதலால் அவை ஒருங்கு இயைந்து நில்லா என்க. கேட்டையும் பழியையும் சிற்றினம் கூட்டிவிடும் என்று உணர்வாதலால் பெரியார் அதனை அஞ்சுவர் என்றும், உணர்வொற்றுமையால் சிறியார் அதனை உணரார் ஆதலால் அதனை உறவாகச்சூழ்ந்துகொள்வர் எனறும் இஃதுணர்த்தி நின்றது.

சிறியாரைப் பெரியார் சேர அஞ்சுவர் என்பதும், சிறியார் அவரைச்சேர்ந்து மகிழ்வர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை வீடணன் கண்ணும் இராவணன் பாலும் உணரப்படும்.

## கதை.

வீடணன் ஒருநாள இராவணன் பேரவைக்குட்சென்றான். வச்சிரதந்தன், துன்முகன், பெரும்பக்கன், தூமிரன், மகரக்கண்ணன், மாபக்கன், தூமாக்கன் முதலாகப் பல சேனைத் தலைவரும் பிறரும் அங்குநிறைந்திருந்தனர். அண்ணன் திருமுன் வீடணன் அணுகியிருந்தான். அவ்வமயம் தனக்கு ஆவன அறிந்து கூறுமாறு அவரை நோக்கி இராவணன் ஏவினன். இருந்தவரனைவ

ரும் எழுந்து தம் மனம்போனவாறு மொழிந்தார். சிறையில் வைத்த சீதையை வெளியே விடுதல் முறையல்ல என்றார் சிலர் வேறு சிலர் இராம இலக்குவரையும் வானரங்களையும் இருவா. கக் கொன்றுவிடலாமென்றார். மற்றுஞ் சிலர் தண்டம் ஒன்றே அரசர்க்குரிய தனி அறம் என்றார். பின்னுஞ் சிலர் அதனாலே தான் அண்டமனைத்தையும் ஆளவேண்டும் என்றார். இங்ஙனமே இன்னுஞ் சிலர் எடுத்து உரைத்தார். பழியும் கேடும் பயக்கத் தக்க அக்கொடு மொழிகளை வீடணன் கேட்டான். இயல்பாக வே களித்து நிற்கின்ற இராசனது உளத்தைக் கலைத்து அரசைக் குலைக்கின்றீர்களே! என்று வருந்தி இரங்கினான். அவர் உரைத் தனவற்றை மறுத்துச் சில உறுதிகள் உரைத்தான். ஒன்றும் பலிக் கவில்லை. இனி அவரோடு இருந்தால் இருமையினும் சிறுமையு ண்டாம் என்று அறிந்தான். அவரை அஞ்சி அகன்றான். இராக வனன் அவரையே தஞ்சமாகக்கொண்டான். பெருமை சிற்றி னத்தை அஞ்சும்; சிறுமை அதனைச் சுற்றமாகச் சூழ்ந்துகொள் ளும் என்பதை உலகம் காண இவர் அன்று உணர்த்தி நின்றார் விரிவை இராமாயணத்தில் காண்க.

அறந்துணை யாவதல்லால் அருநரகமைய நல்கும்
மறந்துணையாக மாயாப்பழியொடு வாழமாட்டேன்
துறந்திலேன் மெய்ம்மை மெய்ந்நும்பொய்ம்மையே துறப்பதல்லால்
பிறந்திலேன் இலங்கைவேந்தன் பின்னவன் பிழைத்தபோதே.

இது, ஏன் எங்களோடு இசைந்து வாழவில்லை என்று இந் திரசித்து கேட்டபோது வீடணன் இசைத்தது. சிற்றினம் சேரா இவன் அஞ்சினான் என்பது இதனாலும் தெளியப்படும்.

ஆயிரம் சொன்னாலும் அறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடுகூடிப் பிழைகாண் பராபரமே (தாயுமானவர்)

சிறியார் சேர்க்கையைப் பெரியார் அஞ்சுவர் என்பது இத னால் கூறப்பட்டது.

452 கோடாத கைகேசி கோடினளே கூனியுடன்
கூடியதால் என்னே குமரேசா—கூடும்
நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு. (உ)

இ—ள்.

குமரேசா! கூனியுடன் கூடியதால் கைகேசியினது கோடாத உள்ளமும் ஏன் கோடியது எனின், நிலத்து இயல்பால் நீர் திரிந்து அற்று ஆகும்; அதுபோல மாந்தர்க்கு இனத்து இயல்பு அறிவு திரிந்து அது ஆகும் என்க.

அற்று ஆகும்—அத்தன்மைத்தாகும். அத்தன்மை என்றது அந்நிலத்தினது தன்மையை.

மேல், சிற்றினத்தைப் பெரியார் அஞ்சுவர் என்றார்; அங்ஙனம் அதற்கு அஞ்சுவானேன் என்று ஐயுறுவார்க்கு அதனால் உண்டாம் விளைவினை இதில் விளக்கி அருளினார்.

சிற்றினத்தைச் சேரின் சிறுமையும் பழியும் தப்பாது தன்னைச் சேர்ந்துவிடும் ஆகலால் சிறிதும் அதனை ஒருவன் சேரலாகாது என்பது கருத்து.

தான் சேர்ந்த நிலத்தினது இயல்பால் நீர் திரிந்து அந்நிலத்தின் தன்மைத் தாம்; அதுபோல மாந்தர்க்குத் தாம் சேர்ந்த இனத்தினது இயல்பு எவ்வாறோ அவ்வாறே அறிவு திரியும் என்பதாம்.

மக்களது அறிவு தாம் சேர்ந்த இனத்துக்குத் தக்கபடியே மாறுதல் அடையும் என்பதை உணர்த்துதற்கு நீரை நேர் எடுத்துக்காட்டினார் அறிவோடு அதற்குள்ள தகுதி நோக்கி.

செந்நீர் வெண்ணீர் நன்னீர் உவர்நீர் என நிறத்தாலும் சுவையாலும் நிலத்தின் இயல்பின்படி நீர்நிலை திரியும்; அங்ஙனமே மனிதரும் இனத்தியல்பின்படி இசைந்து திரிவர் என்க.

தூய மனமுடையவரும் தீய இனத்தைச் சேரின் தமது இயல்பு திரிந்து இழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கைகேசிபால் உணரப்படும்.

## கதை.

கைகேசி தன் கணவனைக் கண்ணினும் சிறந்தவளுக எண்ணிக் காதலித்திருந்தாள். தசரதனும் அருமைக் காதலியாக இவளை ஆதரித்து வந்தான். இயல்பாகவே இராமன்பால் இவள் பேரன்புடையவள், தன் மகனுகிய பரதனைவிட இராமனையே இவள் நாளும் பேணிவந்தாள். வருங்கால் இராமனுக்கு அரசன் முடிசூட்டத் துணிந்தான். அதனைக் கூனி அறிந்தாள். குலைக்க நினைந்தாள். அவள் வஞ்சமும் தீமையும் மருவிய நெஞ்சினள். கைகேசியிடம் விரைந்துவந்தாள். அவ்வமையம் பாற்கடற் படிநிரைப் பவளவல்லியேபோல் பொங்கணைமேற் கிடந்து அரசிமென்துயில் புரிந்தாள். கூனி அணுகினுள். உனக்கு ஓர் இடர்வந்துள்ளதே நீ என் மடிகொண்டுள்ளாய் என்று எழுப்பினுள். அதனைக் கைகேசி கேட்டாள்.

விராவரும் புவிக்கெல்லாம் வேதமேயன்ன இராமனைப் பயந்த எனக்கும் இடருண்டோ என்று'' இயம்பி எழுந்தாள். இதனுல் இவளது மனப்பண்பும் இராமன் பால்வைத்துள்ள நண்பும் இனிது புலனும். இத்தகைய உயர் குணமுடையவளைச் சிறிது பொழுது தன்னுடன் சேர்த்துவைத்துக்கொண்டு கூனி பல வஞ்ச மொழிகளைக் கூறினுள். அவளுடன் கொஞ்சம் சேர்ந்திருந்து அவள் மாய மொழிகளைக் கேட்டவுடனே இவள் தூய சிந்தையும் திரிந்தது. அதன்பின் வஞ்ச வேடங்கொண்டு தன் நாயகனை வஞ்சித்தாள். இராமனை முடிசூடாதபடி தடுத்து வனம்போக விடுத்தாள். அதனுல் தசரதன் கொந்துயிர் நீத்தான். படர் எல்லாம் படைத்தாள் எனவும் பழி வளர்க்கும் செவிலி எனவும் பாழ்த்த பாவி எனவும் இவளை அனைவரும் பழித்தார். அழகும் குணமும் அறிவும் அன்பும் நிறையும் முறையும் நெறியும் உடையளாயிருந்தும் கூனியின் சேர்க்கையால் இவள் உள்ளந் திரிந்து பொல்லாதவளாயினுள். அதனுல் தள்ளாரும் பழியைத் தாங்கினுள். எள்ளாரும் புகழை இழந்தாள். இப்பழிவினைவுக்குத் தான் சேர்ந்த இனமே காரணம் என்று பின்பு இவள் எண்ணி இரங்கினுள். நிலத்தியல்பால் நீர் திரிவதுபோல்

மாந்தர்க்கு இனத்தியல்பால் அறிவு திரியுமென்பதை உலகம் இவன்பால் தெளிந்தது. விரிவை இராமாயணத்தில் காண்க.

சிப்பி முளரிசரம் ஆறு திரைவீழ்நீர்
ஒப்பத் தரளமஃதொப்பழிவுண் ணீருவராம்
அப்படியே மாந்தர் அறிவும் இனத்தியல்பால்
பற்பல மாறு படும். (இன்னிசை இருநூறு)

சிப்பி வீழ்நீர் தரளமாம்; முளரி (தாமரை) வீழ்நீர் அஃது ஒப்பாம்; சரம் வீழ்நீர் அழிவாம; ஆறுவீழ்நீர் உண்ணீராம்; திரை (கடல்) வீழ்நீர் உவராம்; என்று ஒட்டிக்காண்க.

மனத்தால் மறுவில ரேனும்தான் சேர்ந்த
இனத்தால் இகழப்படுவர்—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனம் தீப்பட்டக் கால். (நாலடியார்)

சிற்றினத்தைச் சேர்ந்தவர் அறிவு திரிந்து சிறுமையுறுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

453 உற்ற இனத்தால் உயர்தரும சாமியுமேன்
குற்றமிக வுற்றான் குமரேசா—பெற்ற
மனத்தானும் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானும்
இன்னான் எனப்படுஞ் சொல். (௩)

இ—ள்.

குமரேசா! நல்ல அறிவுடையனாயிருந்தும் தருமசாமி சிற்றினத்தைச் சேர்ந்ததால் ஏன் நீசன் என இழிக்கப்பட்டான் எனின், மாந்தர்க்கு உணர்ச்சி மனத்தான் ஆம் இன்னான் எனப் படும் சொல் இனத்தான் ஆம் என்க.

உணர்ச்சி—உணர்வு. இன்னான் எனப்படும் சொல்—இன்ன இயல்பினன் என்று உலகத்தாரால், தூக்கிச்சொல்லப்படும் சொல்.

மனத்தானும் இனத்தானும் உணர்ச்சி உண்டாம் எனினும் மனம், பொதுவான இயற்கை உணர்வையும்; இனம் சிறப்பான செயற்கை உணர்வையும் பயக்கும் என்க.

ஒருவன் சேர்ந்த இனம் நல்லினமாயின் அவன் நல்லவனாவான்; தீயினமாயின் தீயவனாவான்; அவன் ஆனபடியை நோக்கி நல்லவன் என்றும்; தீயன் என்றும்; உலகம் அவனைச் சொல்லிவிடும்; அச்சொல்லுக்குக் காரணம் இனமே ஆகும் ஆதலால் "இன்னான் எனப்படும் சொல் இனத்தான்" ஆம் என்றார்.

மாந்தர்க்கு இயற்கையுணர்வு தம் மனத்தான் உண்டாம் இன்ன இயல்பினன் என்று உலகத்தாரால் விதந்து சொல்லப்படும் சொல் இனக்காரணமாக உண்டாம் என்பதாம்.

மேல், ஒருவன் அறிவு இனத்தியல்பாகத் திரியும் என்றார் இதில், இனத்தின்படியே அவன் உருக்கொள்வான் என்றார்.

இயல்பாகவே நல்லவனாயினும் சிற்றினத்தைச் சேரின் தீயவனாகி அவன் இழிக்கப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தரும சாமிபால் அறியப்படும்.

## கதை.

தரும சாமி என்பவன் பலநூற்றாண்டுகட்கு முன்னர் பாண்டி நாட்டிலிருந்த சிவசாமி என்னும் ஒரு வேதியன் புதல்வன் தாய்பேர் புனிதவதி. இவன் அழகின் மிக்கவன். அறிவிலும் சிறந்தவன், கலை பயின்று பருவமெய்தியபின்னர் ஆவதொரு கன்னியை ஆய்ந்து தந்தையார் இவனுக்கு மணம் புரிவித்தார். அவர் புலமையும் சீலமும் பொருந்திய பண்பினர். ஒரு பெருந்தொகைப்பொருளைக்கொடுத்துத் தனியேயிருந்து இல்லறம்புரிந்துவருமாறு இவனைப் பணித்தார். இவனும் அவ்வாறே அமைந்திருந்தான். இயற்கையாகவே அடக்கமும் நல்லகுணமும் இவன் அமையப் பெற்றவன். இவனது உருவும் திருவும் நோக்கி வஞ்சர்பலர் இவன்பால் வந்து மருவினர். நாள் சில கழியுமுன் இவன் அவர் வயமாயினன். தையலார் மய்யலால் தன்னுளந் திரிந்தான்.

அழகினன் உயர்குலத்தா னானாலும் பெருங்காமக்
குழகினால் சிறுணத்தின் குடப்பால்போல் குணந்திரிந்து
பழகிடா மூர்க்கரொடும் பழகினன் கல்வியெனும்
கழகமாம் பெரும்பயிர்க்கு மூடமெனும் களைமூட.

முதியமறை நூல்விடுத்து மோகமறை நூல்பயிற்றி
அதரமுதற் பதினொன்றும் அமுதநிலை பதினைந்தும்
இதமுறுமா லிங்கனமும் எண்ணில் கரணமுந் தெரிப்பான்
பதுமினி சித்தினி முதலாம் பாவையாரைத் துருவுவான்.

இங்ஙனம் தன் இயல்பு முழுவதையும் இழந்து சிற்றினத்தாரையே இவன் சேர்ந்து திரிந்தான். அனங்கமோகினி என்னும் அழகிய கணிகை ஒருத்தியை இவன் அணுகியிருந்தான். அவளுடைய மருள் வெள்ளத்தில் வீழ்ந்தான். அதனால் தன் பொருள் வெள்ளம் முழுதும் போக்கினன். பின்பு தீமைகள் பலவும் செய்யத் துணிந்தான். சீலமுள்ள தன் தந்தையாரைச் சேர்ந்திருக்கும்பொழுது நல்லவனாயிருந்த இவன் சிறியார்இனத்தைச் சேர்ந்தபின் தீயவனாயினன். அதனால் பொல்லாதவன் என எல்லாரும் இவனை இகழ்ந்து சொல்லினர். மாந்தர்க்கு உணர்ச்சி மனத்ததேயாயினும்; இன்னான் எனப்படும் சொல் இனத்தான் ஆம் என்பதற்கு இவன் இனமாகி நின்றான். விரிவைக் குற்றாலமான்மியத்தில் காண்க

தீயாரைச் சேர்ந்தவரும் தீயவரேயாவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

454 தோடகரும் பாணினியும் சூழ்ந்தஇனத் தாலறிவு
கூடினார் என்னே குமரேசா—நாடும்
மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகும் அறிவு. (ச)

இ—ள்.

குமரேசா! தோடகரும் பாணினியும் தாம்சேர்ந்த இனத்தால் என் தம் மனத்துள் அறிவு சேரப் பெற்றாரெனின்; அ

றிவு ஒருவற்கு மனத்து உளதுபோலக் காட்டி இனத்து உளதா கும் என்க. ஒருவற்கு—ஒருவனுக்கு

அறிவு என்றது விசேடவுணர்வை, மனம் இனம் என்பன அத்துச்சாரியை பெற்று இடப்பொருளுருபை ஏலாது நின்றன. உண்மையை உய்த்துணர்வார்க்கே அஃது உளதாய உண்மை உணரப்படும், ஆகலால் "உளதுபோலக் காட்டி அறிவு உளதாகும்" என்றார். ஒருவன்பால் சிறந்த அறிவு தோன்றின் தான் சேர்ந்த இனத்தின் மூலமாகவே அஃது அவன்பால் எய்தி யுள்ளதென்று எண்ணவேண்டும் என்க.

அறிவு ஒருவனுக்கு மனத்தின்கண் உளதாவதுபோலத் தோன்றினும் உண்மையில் அவன் சேர்ந்த இனத்தின்கண்ணேயே அஃது உளதாகும் என்பதாம்.

சிறந்த அறிவுடையனாக ஒருவன் விளங்குவனாயின்; அஃது அவன் சேர்ந்த இனத்தின் பயனாக எய்தியதாகும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தோடகர்பாலும், பாணினியிடமும் உணரப்படும்.

## கதை.

தோடகர் என்பவர் ஆதிசங்கராசிரியருடைய சீடருள் ஒருவர். அடக்கமுடையவர், எவர்க்கும் இனிய பண்பினர், ஆசிரியர்பால் பேரன்புடையவர். ஆயினும் மந்த மதியினர், ஆதலால் நூல்களை நுணுகிப் பயிலுதற்கு இயலாதவராய் குருவின் பணிகளையே செய்திருந்தார். சுரேசனர் சனந்தனர் முதலிய பேரறிவாளர்கள் ஆசிரியரையணுகியிருந்து பாடங்கேட்குங்கால் இவரும் ஓர் புறம் அடங்கியிருப்பர். பொருள்கள் விளங்காமைக்காக மிகவும் வருந்துவர். நாள் பல கழிந்தன. ஒருநாள் ஆசிரியரது ஆடையைத் தோய்த்தற்காக நதிக்குச் சென்றிருந்தார். அவ்வமையம் பாடங்கேட்கும் காலம் ஆதலால் அறிஞரனைவரும் வந்தார். பணிந்து முன் இருந்தார். தோடகர் வரட்டும் என்று ஆசிரியர் தொடங்காதிருந்தார். குன்றிய அறிவினராய அவருக்

காகவா இங்ஙனம் நின்றிருக்கவேண்டும் என்று அவர் தம்முள் நினைந்து அங்கு நின்ற ஒரு மண்மதிலைப் பார்த்தார். அதனை ஆசிரியர் உணர்ந்தார். தோடகர்பால் அருள் மீக்கூர்ந்தார். சிறிய இனத்தைச் சார்ந்திருந்தும் தனக்குங் கூரிய அறிவு வாவில்லையேயென்று நெடிதாளாக வருந்திக்கொண்டுவந்த தோடகர் அன்று வடமொழியில் சில கவிகளைப்பாடிவந்தார். ஆசிரியரும் பிறரும் அவற்றைக்கேட்டார். அவை எளிதாகவும் தெளிவாகவும் உயிர்களடையவேண்டிய இன்ப நிலையை உணர்த்தி நின்றன. அதனால் அவரது அறிவை அனைவரும்வியந்து மகிழ்ந்தார் அவர் அன்று பாடியது தோடகம் என்னும் ஒருவகை விருத்தமாதலால் அதுமுதல் அவர் தோடகர் எனும் பெயர் சூடப்பெற்றார். இயல்பானபெயர் மாதவர் என்பர். பின்னர் இவர் பேரறிவுடையராய் விளங்கி யிருந்தனர். அவ் அறிவு தான் சேர்ந்திருந்த இனத்தின் மூலமாகவே இவர் எய்தப்பெற்றார். மனத்தின்கண் உளதாவது போலக்காட்டினும் ஒருவனுக்கு இனத்தின்கண்ணேயே அறிவு உளதாகும் என்பதை உலகம் இவர்பால் கண்டது. விரிவைச்சங்கர விசயத்தில் காண்க.

கதை 2.

பாணினி என்பவர் ஒரு வேதியன் புதல்வர். பருவம் எய்துமுன் தன் இரு முதுகுரவரையும் இழந்தார். வறுமை மிகுந்தார். பாடலிபுரத்தை யடைந்தார். அருங்கலைகளை யெல்லாம் ஒருங்கே கற்றுப் பெரும்புலவரான வர்சர் என்பவரையும் அவரைச் சூழ்ந்து பயிலும் மாணவர்களையும் இவர் அங்குக் கண்டார். தாமும் அவரிடம் பயில விரும்பினார். பணிந்து வேண்டினார். வர்சர் இசைந்தார். இவரும் பயின்றார். இவரது மந்த அறிவில் ஒன்றும் ஏறவில்லை. அதனால் இவரைப் பிறர் மதியாதிருந்தார். மாரிபோல் கொடுப்பினும் மந்தனைவிட்டுக் கூரியனுடனே கொடுத்தும் பழகுக என்று இவர்முன் கூறி நகைத்தார். பாணினி நாணினார். வெளியே போயினார். தனியே யிருந்து பரமனை நினைந்தார். உருகியழுதார். இவர் எண்ணியதை எய்த இறைவன் அருளினார். நுண்ணிய அறிவெல்லாம் இவருள்ளம் நுழையப்பெற்றார். உடனே

வடமொழியில் அருமையான ஓர் இலக்கணம் செய்தார். குருவினையடைந்து திருவடி பணிந்து தான் குறித்ததைக் கூறினார். இவரது அறிவினை வியந்து அனைவரும் துதித்தார். அவ் அறிவை எய்துதற்கு அவ் இனமே காரணம் என்று இவர் எண்ணி நின்றார். அன்றுசெய்த நூல் பாணினீயம் என்று வடமொழியில் இவர் பெயரால் நின்று நிலவுகின்றது. அதன் பெருமை அளவிடலரியது. மனத்துளதுபோலக் காட்டினும் அறிவு ஒருவனுக்கு இனத்து உளதாகும் என்பதை இவர் உணர்த்தி நின்றார். விரிவைப் பாணினீயத்தில் காண்க.

சேர்ந்த இனமே ஒருவனது சிறந்த அறிவுக்கு மூலம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

455 சார்ந்த இனத்தால் சசிவர்ணன் தூய்மையுற்றுக்
கூர்ந்தான் புகழேன் குமரேசா—ஆர்ந்த
மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும்
இனந் தூய்மை தூவா வரும். (ரு)

இ—ள்.

குமரேசா! நந்திபாராயணரைச் சேர்ந்ததனால் சசிவர்ணன் மனம் மொழி மெய்கள் ஏன் தூய்மை எய்தினான் எனின், மனம் தூய்மை செய்வினை தூய்மை ஆகிய இரண்டும் ஒருவனுக்கு இனம் தூய்மை தூவாவரும் என்க.

இரண்டும் வரும் என்று இயைத்துக் காண்க. பெயர்ச்செவ்வெண்ணாதலால் தொகையும் உம்மையும் இறுதியில் தொடர்ந்து நின்றன.

தூ என்னும் ஓரெழுத்தே ஒரு மொழியாய் நின்று சுத்தம் தசை பகை பற்றுக்கோடு வெண்மை என்பவற்றை உணர்த்திவரும். அஃது ஈண்டு பற்றுக்கோடு என்பதைக் குறித்து நின்றது. பற்றுக்கோடு என்றது கொடி செடி முதலியன பற்றிப் படர்வ

தற்கு உற்ற துணையாக இட்ட கோலை. கொளு கொம்பு எனவும் ஆதாரம் எனவும் இது கூறப்படும்.

இனம் தூய்மை தூ ஆ வரும்—இனத்தின் தூய்மையைப் பற்றுக்கோடாகக் கொண்டு உளவாம்.

மேல், இனத்தால் சிறந்த அறிவு உண்டாம் என்றார்; இதில் அதனால் மனத் தூய்மையும் வினைத்தூய்மையும் மருவிவரும் என்றார்.

மனம் தூயனாதலும் செய்வினை தூயனாதலும் தான் சேர்ந்த இனத்தூய்மை ஏதுவாக ஒருவனுக்கு எய்தும் என்பதாம்.

ஒருவனது மனத்தூய்மைக்கும் வினைத் தூய்மைக்கும் அவன் சேர்ந்த இனத்தின் தூய்மையே காரணமாகும் என்பது கருத்து.

சிற்றினம் குற்றத்தை விளைக்கும் ஆகலான் அதனை முற்றிலும் நீக்கவேண்டும் என்பதும் மனம் மொழி மெய்களைப் புனிதமாக்கி இருமையிலும் நல்லினம் இனிமையைப் பயக்குமாதலால் அதனையே ஒருவன் அடையவேண்டும் என்பதும், இதன் கருத்தாம்.

தூயவரைச் சார்ந்தால் தீயவரும் தூயவராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சசிவர்ணன்பால் உணரப்படும்.

## கதை.

சசிவர்ணன் என்பவன் பாகஎக்கியன் என்னும் ஒரு வேதியன் புதல்வன். இவனது காலம் பலநூற்றாண்டுகட்கு முன்னராகும். இவன் அழகில் உயர்ந்தவன், அறிவில் இழிந்தவன், பொது மாதர்கள்பால் மதமோடு திரிந்தான். மங்கையர் பலரை மருவிக் களித்தான், அவர் ஏவின பணியெலாம் இவன் மேவிச்செய்தான், பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால் என்ற கம்பர் இன்னுரைக்கு இவன்காட்டாய் நின்றான், காமக்கொடுமையால் பல தீமைகளை இவன் கருதாது

செய்தான். அப்பாப மிகுதியால் பல நோய்களும் இவனைப் பற்றி முற்றின. அவற்றால் இவன் வருந்தி நொந்து அருந்துயர் மிகுந்தான். மகனது பரிபவ நிலைமையைத் தந்தையார் கண்டு சிந்தை கவன்றார். இவனை அழைத்துக்கொண்டு போய் நந்திபாராயணர் என்னும் மாதவரிடம் சேர்த்தார். அவர் தண்ணளி நிறைந்த புண்ணியராதலால் இவனைத் தன் பால் வைத்து அன்பு செய்துவந்தார். இவனும் அவரது அருள் வழி ஒழுகினான். அதனால் தனது தீமைகள் யாவும் தீரப்பெற்றான். தூயனாகித் துறவினையடைந்தான். அதன்பின் மனம்மொழி மெய்கள் மாசற்று விளங்கினான். தான் சேர்ந்த இனம் ஒருவனுக்குத் தூய்மையாக அமையுமாயின் அவன் மனந்தூயனாகி மதிநலம் பெறுவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. விரிவை விருத்தாசல புராணத்தில் காண்க.

பாலோ டளாயநீர் பாலாகும் அல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம்—தேரின்
சிறியார் சிறுமையும் தோன்றாதாம் நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து (நாலடியார்.)

இனந் தூயனுக்கு மனந் தூய்மையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

456 வெற்றி வசுதேவர் மேலான நன்மகவும்
கொற்றமுமேன் பெற்றார் குமரேசா—உற்ற
மனந்தூயார்க் கெச்சநன் றாகும் இனந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை. (௬)

இ—ள்.

குமரேசா! வசுதேவர்க்குச் சிறந்த மகவும் உயர்ந்த நலங்களும் ஏன் ஒருங்கே உளவாயின எனின், மனம் தூயார்க்கு எச்சம் நன்று ஆகும்; இனம் தூயார்க்கு நன்று ஆகா வினை இல்லை என்க.

எச்சம் என்றது மக்களை; தந்தை தாயர் இறந்த பின்னரும் எஞ்சி நிற்பவராதலால் அவர் எச்சம் என நின்றார். எச்சமே குறை சேய் யாகம் என்பது நிகண்டு.

மேல், தூய இனத்தால் ஒருவனுக்கு மனமொழி மெய்கள் தூய்மையாம என்றார்; இதில், எல்லா நலங்களும் அதனால் உள வாம் என்றார்.

மனம் தூயாராயினார்க்கு நல்ல மக்கட்பேறு உண்டாம்; இனம் தூயாராயினார்க்கு நன்று ஆகாத வினை யாதும இல்லை என்பதாம்.

இனத்தோடு மனத்தையும் இசைத்து அவற்றால் உளவாம் நலத்தையுணர்த்தினார் அவ் இருவகைத் தூய்மையும் ஒருவன் எய்தவேண்டுமென்பது கருதி. இன நலம், மன நலத்துக்கும்; மன நலம், மக்கள் நலத்துக்கும் காரணமாம் என்க. நலங்களெல்லாம் நிறைந்த சிறந்த மக்கள் மனந் தூயார்க்கே உளராவர் என்றார், ஒரு காரியம் அதன்காரணத்தின்படியே உண்டாம் என்பது கருதி.

மனமும் இனமும் தூய்மையுடையார்க்கு நல்ல மக்களோடு எல்லா நலங்களும ஒருங்கே உளவாம் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை வசுதேவர்பால் உணரப்படும்.

## கதை.

வசுதேவர் என்பவர் சூரசேனனுடைய புதல்வர். யமுனைநதியை அடுத்திருந்த ஒரு சிறிய நிலப்பகுதிக்கு உரியவர். அடக்கமுடையவர். மனத்தில் தூய்மையும், வாக்கில் வாய்மையும் என்றும் மருவப் பெற்றவர். இவர், தேவகன் குமரியாகிய தேவகியை மணந்து இன்புற்று வந்தார். வருங்கால் வடமதுரையிலிருந்து அரசு புரிகின்ற உக்கிரசேனன் இவரைத் தன்பால் அழைத்துவைத்து அன்புசெய்து வந்தான். அவ் அரசன் தேவகனுக்கு அண்ணனும் கம்சனுக்குத் தந்தையுமாவன். இவர் அங்கு மனைவியோடமர்ந்து இனிதமர்ந்திருந்தார். ஒருநாள் மனைவியும், தானும், மைத்துனனாகிய கம்சனும், ஓர் இரதத்திலேறி உலாவப்போனார். அப்பொழுது

தேவகி கருப்பவதியாயிருந்தாள். அவள் வயிற்றில் தோன்றும் பிள்ளையால் தனக்கு நாசம் தோன்றும் என்று வானில் ஒரு தனி ஒலி எழுந்து கஞ்சன் காதில் பட்டது. அக்கொடியவன் உடனே அவளைக் கொல்லத் துணிந்தான். வசுதேவர் கலங்கி எழுந்து அவன் கையைப் பிடித்து இதம்பலகூறித் தன் தேவியைக் காத்தார். ஆயினும், இவரை வெளியே போகவிடின் தனக்கு அழிவுண்டாம் என்று கருதிக் காலிலும் கையிலும் கடுவிலங்கிட்டு இவ்விருவரையும் அவன் சிறையிலடைத்தான். அங்கு அல்லல் பல விளைத்தான். பலமுறை கொல்லவும் அமைந்தான். அவ் எல்லாவற்றிலும் இவர் யாதுங்கூறாது அமைதியோடிருந்தார். இவரது மனநலத்தையும் குணமாண்மையையும் வியந்து திருமாலே இவர்க்கு ஒரு புதல்வனாகத் தோன்றினார். அதனால் அவர் வாசுதேவர் என்று ஒரு பெயரும் பெற்றார். அதன்பின் அல்லல் யாதுமின்றி அப்பிள்ளையின் நலத்தால் இவர் எல்லா மேன்மைகளையும் எய்தினார். நாரதர், மரீசி கபிலர் முதலிய தெளிந்த முனிவர் இனத்தையே இவர் சேர்ந்திருந்தார். அதனால் சிறந்த நலங்களையடைந்தார். மனமும் இனமும் தூய்மையுடையவர் இனிய மக்களையும் அரிய பேறுகளையும் எய்தி மகிழ்வர் என்பதை இவர் இசைந்து காட்டினார். விரிவைப் பாகவதத்தில் காண்க.

அல்லியங் கமலம் பூத்த அஞ்சனப் புயலிற் றோன்றும்
மல்லலைத் தெழுந்ததிண்டோள் மாயனைக் கண்ணிற்கண்டும்
புல்லியும் மோந்தும் அன்புபூத்துளங் களிப்பப் பெற்றாய்
சொல்லரும் நெறிசேர்தல் சொல்வதென்சுடர்செய்வேலோய்.

இஃது, இவரது மகப்பேற்றின் நலத்தைவியந்து இவர்பால் நாரதர் இசைத்தது. இதனால் இவரது எச்ச நன்மையும், எண்ணியவற்றை எண்ணியாங்கு எய்தி இவர் இன்புற்ற உண்மையும் இனிது விளங்கும்.

இனந்தூயார்க்கு எல்லா நலங்களும் எளிதில் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

457 திண்டோள் அனுமான் செயகீர்த்தி நேதினத்தால்
கொண்டார் புகழேன் குமரேசா—கண்ட
மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழுந் தரும். (எ)

இ—ள்.

குமரேசா! மன நல மிக்க அனுமானும், கீர்த்திநேதும், ஏன் இன நலத்தால் பெரும் புகழ் கொண்டார் எனின், மன நலம் மன் உயிர்க்கு ஆக்கம் தரும், இன நலம் அதனோடு எல்லாப் புகழுந் தரும் என்க.

மன் உயிர்—நிலைபெற்ற உயிர். மன்னுதல்—நிலைத்தல்.

புகழும் என்றதில் உம்மை இறந்ததைத் தழுவியதெனின் எச்சமாம்; எஞ்சாமையை உணர்த்திநின்றதெனின் முற்றும்.

ஆக்கம் அறத்தான் உண்டாம், அவ் அறம் மனத்துக்கண் மாசின்மையேயாகும்; ஆதலால் அதுவே ஈண்டு ஆக்கம் என நின்றது. மனம்போல வாழ்வு என்பது உலக வழக்கு.

மேல், மன நலமுடையார்க்கு நல்ல மக்களும், எண்ணிய நலங்களும் எளிதின் எய்தும் என்றார்; இதில், செல்வமும் புகழும் அதனால் சேரவரும் என்றார்.

நிலைபெற்ற உயிர்கட்கு மனநலம் ஆக்கத்தைத் தரும்; இன நலம் அதனோடு எல்லாப் புகழையும் தரும் என்பதாம்.

மன நலமும் இன நலமும் மருவப் பெற்றவர் செல்வமும், புகழும் சேரப் பெறுவர் என்பது கருத்து.

மனத்திலும், இனத்திலும் நலம் இல்லையானால் வறுமையும், பழியும் வந்துவிடும் ஆதலால் அவை வாராவண்ணம் அவ் இரு வகை நலங்களையும் அறிவுடைய மக்கள் அடையவேண்டும் என்பது குறிப்பு.

இயல்பாகவே ஒருவன் நல்லவனாயினும் இனநலத்தானேயே அவன் சிறந்து விளங்குவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அனுமான் பாலும் கீர்த்திகேதுகண்ணும் அறியப்படும்.

## கதை.

அனுமான் பெருமை அளவிடலரியது. மனநலம் மதிநலம் சீலம் வீரம் செம்மை முதலிய உயர்நலங்களெல்லாம் அவரிடம் ஒருங்கே குடிகொண்டிருந்தன. ஆயினும் வானரர்களோடு கூடியிருக்கும்பொழுது இவரது பெருமை வெளியே ஒன்றும் தோன்றாதிருந்தது. வானரர்களும் தம்மில் ஒருவராகவே இவரை மதித்திருந்தனர். இவர் இராமமூர்த்தியைச் சேர்ந்தார். அதன் பின்னரே இவர் புகழ் உலகெங்கும் பரவியது. இசை சுமந்து எழுந்த தோளான் எனவும், இராகவன் கழல் எனப் புகழோன் எனவும், சொல்லின் செல்வன் எனவும், பேரறிவன் எனவும், ஆண்டகை எனவும் இவரைக் கம்பர் இசைப்பர்.

அறந்தலை எடுத்த புவி வானவர்களானவர்கள் ஆடினர்கள் தி
மறந்தலை இறங்கியது வாலிமுத லானவர்கள் வாமநடனம்
சிறந்ததிரள் தோள்புருவம் மார்பிவைதுடித்தன சிறந்தபுகழான்
நிறைந்த குண மாருதி நினைத்திருவடித்தொழுது நின்றபொழுதே

இது, அனுமான் இராமனைச் சேர்ந்தபொழுது நிகழ்ந்த நலங்களைக் குறித்து அவரிடம் அகத்தியர் கூறியது. இங்ஙனம் முனிவரும் அமரரும் வியந்து போற்றத்தக்க பெரும் புகழ்களை அனுமார் இனநலத்தானே எய்தி விளங்கினார். ஆதலால் இனநலம் எல்லாப் புகழும் தரும் என்பதற்கு இவர் இனமாய் நின்றார்

## கதை 2.

கீர்த்திகேது என்பவன் மகததேசத்து வேந்தன். மாகதம். என்னும் நகரிலிருந்தவன். இவன் காலம் எண்ணாயிர வருடங்கட்கு முன்னராகும். தந்தை பெயர் சுதர்மன். மனைவி பெயர் அனங்கமாலை. இவன் அறிவறிந்த பெரியோர்களையே தனக்கு உறங்

துணையாகக்கொண்டு அரசுபுரிந்தான். இவனது ஆட்சியில் எல்லாவுயிர்களும் இன்பமெய்தி நின்றன. இவன் மிக்க மனநலமுடையவன். அதனால் ஆக்கமெல்லாம் அமையப்பெற்றான். உள்ளந்தூய நல்லோரினத்தையே இவன் உறவுகொண்டிருந்தான். அவருள் கபிபர் இவன்பால் நேசமிக்கிருந்தார். அம் முனிவரால் இவன் அரிய மேன்மைகளை அடைந்தான். இவன் புகழ்மணம் எங்கும் வீசியது. அதனால் கீர்த்திநேது என்று இவன் போற்றப்பட்டான். மனநலம் ஆக்கத்தையும் இனநலம் அதனோடு எல்லாப் புகழையும் தரும் என்பதை இவன் எய்திவிளக்கினான். விரிவைச் சிவ ரகசியத்தில் காண்க.

இம்மை அடக்கத்தைச் செய்து புகழாக்கி
உம்மை உயர்கதிக்கு உய்த்தலால்—மெய்ம்மையே
பட்டாங்கு அறமுரைக்கும் பண்புடையாளரே
நட்டார் எனப்படுவார். (அறநெறிச்சாரம்)

இன நலத்தால் ஒருவனுக்கு எல்லாப் புகழும் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

458 தேசார் உடையவரும் தேடி இனநலத்தைக்
கூசாதே கொண்டார் குமரேச—மாசில்
மனநலம் நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநலம் ஏமாப் புடைத்து. (அ)

இ—ள்.

குமரேசா! மனநலம் நிறைந்த உடையவரும் ஏன் இனநலத்தைத் தேடி அடைந்தார் எனின், மனநலம் நன்கு உடையராயினும் சான்றோர்க்கு இனநலம் ஏமாப்பு உடைத்து என்க.

சான்றோர்—அறிவொழுக்கங்களால் நிறைந்தோர்.

நன்கு என்பது இலாபம், நன்மை, அழகு, மிகுதி, சிறப்பு என்பவற்றை உணர்த்திவரும். ஏமாப்பு—உறுதி, வன்மை, உதவி.

மனநலத்துக்கு இனநலம் உயர்ந்த உறுதியை உதவும் த லால் "மனநலம் நன்கு உடையராயினும் இனநலம் ஏமாப்பு உடைத்து" என்றார்.

இயல்பாகவே மனநலத்தை யெய்தியுள்ள மேலோர்க்கும் இனநலம் வேண்டுமோ? என்பாரைநோக்கி இஃது இசைத்ததென்க.

மனநலத்தைச் சிறப்பாகத் தாம் உடையராயினும், அறிவால் நிறைந்தோர்க்கு இனநலம் அதற்கு உதவியாதலால் உடைத்து என்பதாம்.

இன நன்மை மனநன்மைக்கு ஊன்று கோலாய் நின்று மக்கட்கு மாண்பினை விளைக்கும் என்பது கருத்து.

எத்துணைச் சிறந்தவராயினும் அவர்க்கும் இனநலம் வேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உடையவர் பால் உணரப்படும்.

## கதை.

உடையவர் என்பவர் தொளாயிரம் ஆண்டுகட்குமுன்னர்த் திருப்பெரும்புதூர் என்னும் நகரிலே வேதியர் குலத்திலே கேசவப் பெருமாள் என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றினர். தாய் பெயர் பூமி நங்கை. கலியுகம் சதூ0ிஅ-ல் பிங்கள வருடம் சித்திரை மாதம் வெள்ளிக் கிழமையில் இவர் பிறந்தனர். இவரை ஆதிசேடனது அமிசம் என்பர். இவர் நுண்ணறிவும், நுண்ணியமுள்ளவர். வேத முதலிய நூல்கள் பலவும் ஓதித் தெளிந்தார். யாதவப் பிரகாசர் என்னும் பெரியார் ஒருவரை முதலில் இவர் குருவாகக்கொண்டிருந்தார். உண்மைப் பொருளை நுண்மையாக உணர்ந்து எண்மையாகக் கூறும் இவரது திண்மையையுணர்ந்து அவரும் பொறாமைகொண்டார். அதனால் அவரைப் பிரிந்தார். மனநலமுடையராய் இறையருளை நாடித் தனியேயிருந்தார். இங்ஙனம் இருந்து வருங்கால் திருக்கோட்டியூர் நம்பி, திருமலைநம்பி, திருமோகூரப்பன், தெய்வப்பெருமாள், திரு

க்குருகூர் தாசர், மாறனேறி நம்பி, திருக்கச்சி நம்பி, பெரியநம்பி திருமோகூர் ஆழ்வார் முதலிய பெரியார்களைக் கண்டார். அவர்களுடைய குண நலங்களை மகிழ்ந்தார். அவருள் பெரியநம்பி என்னும் பெரியாரையே இவர் குருவாக நம்பிப் பேணி நின்றார். அவர் விரிந்த நோக்கமும் பரந்த அறிவும் சிறந்த குணங்கள் பலவும் ஒருங்கு நிறைந்தவர். அவரும் இவரது மதிநலத்தையும் மன நலத்தையும் வியந்து சில மந்திரங்களை உபதேசித்துத் தன் குருவாகிய ஆளவந்தாரிடம் இவரை அழைத்துக்கொண்டு சென்றார். இவர் சென்று சேருமுன் அவர் திருவுடலை விட்டுப் பரனருள் சேர்ந்தார். இவர் பெரிதும் இரங்கினார். அவரது குணநலங்களைக் கூறக்கேட்டுத் தம் உளத்தில் பேரருள் கூர்ந்தார். அவர் குறித்திருந்தபடியே வியாச சூத்திரத்துக்கு இவர் வியாக்கியானஞ்செய்தார். திருமாலின் அருள் இயல்களையும், அவரை அடைந்தின்புறும் நெறிமுறைகளையும் உயிர்கள் எளிதில் உணருமாறு பல முறைகளை அருளினார். திருமாலுக்கு அடிமை செய் என்னும் உறுதிமொழியை இவர்தான் உலகமெங்கும் பரவச்செய்தார். நாதமுனி உய்யக்கொண்டான் மணக்கால்நம்பி முதலிய வைணவ ஆசாரியர்க்கெல்லாம், முதன்மையாய் உதவி வைணவமதத்துக்கு இவர் உயிரென நின்றார். அதனால், எம்பெருமானார், இளையாழ்வார், இராமாநுசர், பாஷியகாரர் என்று இவர் போற்றப்பட்டார். பெரிய நம்பி முதலிய பெரியாரைச் சேர்ந்த பின்னரே இவர் உயர் நலம் அடைந்தார். மனநலம் நன்கு உடையராயினும் சான்றோர்க்கு இனநலம் ஏமாப்பு உடைத்து என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைத் திவ்விய சூரியில் காண்க.

இனநலமே மக்கட்கு உயர் நலமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

459 உள்ளநல முற்றிருந்தும் உத்தவரேன் நல்லினத்தால்
கொள்ளகின்றார் இன்பம் குமரேசா — துன்னும்
மனநலத்தி னாகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தி னேமாப் புடைத்து. (௯)

இ—ள்.

குமரேசா! உத்தவர் மனநலமுடையராயிருந்தும் என் இனநலத்தால் இன்பம் எய்தினர் எனின், மனநலத்தின் மறுமை ஆகும்; மற்று அஃதும் இன நலத்தின் ஏமாப்பு உடைத்து என்க.

மனநலத்தின்—மனநலத்தினால்; இன் உருபு இதில் ஏதுப் பொருளில் நின்றது. மறுமை ஆகும்—மறுமை இன்பம் உண்டாம். அஃதும்—அம்மனநலமும்.

மேல், இனநலம் எல்லாப்புகழையும் தரும், எவர்க்கும் அஃது இன்றியமையாதது என்றார். இதில், மறுமை இன்பத்தையும் அஃது உதவ வல்லது என்றார்.

மனநலத்தினால் ஒருவனுக்கு மறுமை இன்பம் உண்டாகும், அம்மன நலமும் இன நலத்தாலே உறுதியையடையும் என்பதாம்.

மறுமை இன்பத்தைத் தருவதற்குரிய அருமையான மனநலத்தை ஒருவன் அடைந்திருப்பினும் அவன் இனநலம் இலனேல் அஃது இழிவுறும் என்பது கருத்து.

இம்மை மறுமை என்னும் இருமையினும் ஒருவன் உயர்நலமடையவேண்டின் அவன் இனநலம் உடையனாக வேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உத்தவர்பால் உணரப்படும்.

கதை.

உத்தவர் என்பவர் வசுதேவன் தம்பியாகிய தேவபாகன் புதல்வர். வடமதுரையில் இருந்தவர். அகத்தில் அருளும் புறத்தில் அழகும் பொருந்தப்பெற்றவர். பெருந்திருவுடையவர். ஆயினும் உலக இன்பங்களை விரும்பாமல் உண்மை இன்பத்தையே இவர் உவந்திருந்தார். இவரது மனநலத்தையும் மதிமாண்பையும் விதுரர் தெரிந்தார். இவரை வந்து கண்டு மெய்யன்புசெய்தார். அவ் உத்தமருக்கும் இவர் தத்துவ உபதேசஞ்செய்தார். மனத்தின் இயல்பையும், சுகம் துக்கம் முதலிய எவற்றிற்கும் அதுவே காரணமாகும் என்பதையும், அது நலமுறின் எல்லா நலங்

களும் ஒருவனுக்கு ஒருங்கே உளவாம்என்பதையும், அவர்உணர உணர்த்தினார். புலகர் வற்சர் முதலிய பெரியோரினத்தையே இவர் மருவியிருந்தார். துவாபரயுகத்தின்முடிவில்கண்ணன் தன்னைவிட்டுப் பிரிந்துவிடுவார் என்று தெரிந்து வருந்தி மயங்கினார். அதனை உணர்ந்த கண்ணன் இவரைத்தனியே அழைத்துவைத்து பிறப்பின் இயல்பையும் உயிர்களின் நிகழ்ச்சியையும் இவர் உணர உணர்த்தினார். அதன்பின் உண்மையை உணர்ந்து உயர் நிலையையடைந்தார். இயல்பாகவே மனநலமுடையராயிருந்தும் இனநலத்தாலேயே அது வலியுறப் பெற்றார். அதனால் உயர்பதம் அடைந்தார். மறுமை இன்பத்தைத் தருதற்குரிய மனநலமும் இனநலத்தால் மாண்புறும் என்பதை உலகம் இவரால் உணர்ந்தது. விரிவைப் பாகவதத்திற் காண்க.

இனநலத்தால் ஒருவன் மனநலம் வலியுறும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

460 பண்டல்லற் பட்டகூன் பாண்டியன்பின் நல்லினத்தாற்
கொண்டானேன் இன்பம் குமரேசா—உண்டாகும்
நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல். (௰)

இ—ள்.

குமரேசா! தீயினத்தால் அல்லற்பட்ட கூன் பாண்டியன் பின்பு ஏன் நல் இனத்தால் இன்பம் உற்றான் எனின், நல் இனத்தின் ஊங்கு துணையும் இல்லை; தீயினத்தின் ஊங்கு அல்லற்படுப்பதும் இல்லை என்க.

ஊங்கு என்பது உயர்ச்சி, மிகுதி, முன்னிலையிடம் முதலியவற்றை உணர்த்திவரும். நல் இனத்தின் ஊங்கு—நல்ல இனத்தின் மிக்க. இன் உருபுகள் இதில் எல்லைப்பொருளன.

அல்லற்படுப்பது என்றது பகையினை. அல்லல் விளைத்தற்கு உரியது அதுவே யாகலான் அஃது இங்ஙனம் கூற நின்றது. இஃது ஏதுக்குறிப்பு. அல்லல்—துன்பம்.

தீயவரைப்போலத் துயரங்களை உண்டாக்கத்தக்க பொருள் இவ்வுலகில் ஒன்றும் இல்லை என்பார் "தீயினத்தின் அல்லற் படுப்பதூஉம் இல்" என்றார். இதில் அளபெடை இனிய ஓசையை இசைத்து நின்றது.

ஒருவனுக்கு நல்ல இனத்தின் மிக்க துணையும் இல்லை; தீய இனத்தின் மிக்க பகையும் இல்லை என்பதாம்.

தூய இனம், ஒருவனது மனத்தைத் தூய்மையாக்கி இம்மையிலும் மறுமையிலும் எல்லா நலன்களையும் எய்துவிக்கும் ஆதலால் அதனைத் துணை என்றும், தீய இனம் நல்ல அறிவையும் குலைத்து அல்லற்படுத்தும் ஆதலால் அதனைப் பகை என்றும் இஃது உணர்த்தியதென்க.

தீய இனம் அல்லலையே தனக்கு விளைக்கும் ஆதலால் அதனைக் கனவினும் ஒருவன் அணுகலாகாதென்பது கருத்து.

சிற்றினச் சேர்க்கையால் ஒருவனுக்கு அல்லல் வரும் என்பதும், நல்லினத்தால் எல்லா நலங்களும் எய்தும் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை கூன்பாண்டியன்பால் உணரப்படும்.

## கதை.

கூன் பாண்டியன் என்பவன் மதுரையிலிருந்து அரசுபுரிந்த சத்துரு சாதனபாண்டியனுடைய மைந்தன். இவனது காலம் ஆயிரத்து முந்நூறு வருடங்கட்கு முன்னதாகும். அழகு மிகுந்திருந்தும் முதுகில் ஒரு கூன் இருந்தமையால் இவன் பெயர் முன்னும் அது கூடி நின்றது. இவன் சிறந்த போர்வீரன். மணம் புரியுமுன்னரே அரசுபுரிந்துவந்த இவன் சேரன் சோழன் என்னும் இருபெரு வேந்தரையும் ஒரு சேரவென்றான். போராற்றலில் இவனது போராற்றலை வியந்து தனது அருமைத்திருமகளாகிய மங்கையர்க்கரசியைச் சோழன் இவனுக்கு மணஞ்செய்துதந்து பெருநண்புகொண்டான். இவனும் அக்கற்புக்கரசியோடு கலந்தினிதிருந்தான். இருக்குங்கால் சமணர் சிலர் வந்து இவனைத் தம் வயப்படுத்தினர். அவர் அருளையே தெய்வமாகக்கொண்ட

விழுமிய சமணமதத்தைத் தழுவியிருந்தும், பழிவினைகளை அஞ் சாது புரியும் இழிவினையுடையவர், தவவொழுக்கமுள்ள தம் மதமுதல்வர் அருளியுள்ள அரிய உண்மைகளை அறியலாற்றாது அம்மதத்தினரென்று தம்மை வெளிப்படுத்தி ஆரவாரஞ்செய்து அவமே புரிந்தார். அவராலேதான் அன்றுமுதல் அம்மதம் இழிக்கப்பட்டது. அமைதியும் பெருந்தன்மையும் அமையப் பெறாமல் சமையச் சார்பினர்போல நடித்து பொதுவாக உள்ள ஓர் உயர்மதத்தை தம் உள மதப்படி திரித்துப் பொறாமையும் வஞ்சமும் புன்மையும் பொருந்தி அழி மதியுடையராய்ச் சிலர் ஒழுகுவராயின் அவர் நிலைமை மிகவும் பரிதபிக்கத்தக்கதேயாகும். ஒரு குடியில் மடியுடைமக்கள் தோன்றின் அஃது அடியோடு கெடும்; அதுபோல் ஒரு மதத்தில் செம்மையும் சீலமும் இல்லா தவர்கள் செறியப்பெறின் தன் உண்மைச் சீர்மையை அஃது உ றாமல் ஒழியும். இச் சிறுமையை அச் சமணமதமும் அன்று சா ரப்பெற்றது. சார்ந்தவர் தன்மையால் அது தாழ்ந்து நின்றது. அரசனும் அவரால் அறிவு திரிந்தான். தனது அரிய ஒழுக் கங்களைத் துறந்தான். அதனை நோக்கி அரசியார் வருந்தினர். அவ்வமையம் அங்கு வந்திருந்த திருஞானசம்பந்த சுவாமிகளால் நாயகனுக்கு நன்மதிகூற நயந்திருந்தார். அதனைச் சமணர்கள் அறிந்தார். அரசனிடஞ்சென்று சம்பந்தரைச் சதிசெய்ய வே ண்டுமென்று துணிந்தார். அரசனும் இசைந்தான். அவர் இரு ந்த மடத்தில் அத்தீயோர் வந்து இரவு தீயினை வைத்தார். பிள் ளையார் அறிந்தார். உள்ளங் கவன்றார். இத் தீ பையவே சென் று பாண்டியற்காகவே என்று ஒரு பாடலைப் பரிந்து பாடினர். அவ்வாறே அஃது இதமுடன் சென்று அரசன் மேனியில் சுரமா கி நின்றது. அவன் ஆற்றாது அலறினன். சமணர்கள் வந்து அதனைத் தீர்க்க முயன்றார். முடியவில்லை. சம்பந்தர் வந்தார். வெண்ணீறு எடுத்து அவன் மேனியில் பூசினர். உடனே உள்ள கூனோடு வெப்புநோய் ஒழிந்து மீனுயர்த்த வள்ளல் மாசறக்க டைந்த விண்மணியெனப் பொலிந்தான். அரசன் அதனைக்கண் டான். அளவிலுவகைகொண்டான். தீயினத்தவரால் தான் முன் அடைந்த அல்லலை நினைந்தான். அகமிக வருந்தினன்.

அவரை அகற்றி ஒழித்தான். சுபபந்தரை அடைந்து வணங்கினான். முன்னர் இழிவும் துன்பமும் எய்தியிருந்த மன்னவன் சுபபந்தரைச்சேர்ந்தபின் உயர்வும் இன்பமும் ஒருங்கே கொண்டான். தீயினம் அல்லற்படுத்தும் என்பதும், நல்லினம் அல்லல்தீர்த்து அருளுடன் காக்கும் என்பதும் உலகம் காண இவன் உணர்த்தினான். விரிவைத் திருவிளையாடலில் காண்க.

சிற்றினம் அல்லலை விளைக்கும் ஆதலால் அதனைச் சேரலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

நல்லிணக்கம் அல்லது அல்லற்படுத்தும். ஔவை.

நல்லவினைக்கு நற்பயனும் தீயவினைக்குத் தீப்பயனும்
இல்லையெனும்வல் இழுதையரும் கள்ளருஞ் விடரும் தூர்த்தர்களும்
சொல்லுநடரு முதலாகத் தொக்ககுழுவைச் சேர்ந்தொழுகின்
புல்லும் அறிவைத் திரித்திருமைப் பொருளுங்கெடுக்கும் புகழோ
டே. (விநாயகபுராணம்.)

சீலமுற் றுயர்ந்தவர்ச் சேரின் வீடுறும்
மாலையுற் றறிவிலார் மருங்கடைந் திடின்
வேலையுற் றலைதுரும் பென்ன வெம்பவக்
கோலமுற் றிறந்திறந் துழலல் கூடுமால். (பாகவதம்)

பொன்னே யெனினும் புருமிடை நுந்தழல்
மன்னர் முடிபோன் மதிப்புறல் இல்லையால்
என்ன பெருமை இருப்பினும் சிற்றினம்
மன்னிற் கெடுமே மதிப்பு. (இன்னிசையிருநூறு)

தொன்றொட்டவம் முயன்றோர்களும் தொழில்வெய்யவ ருறையும்
அன்றொட்டிடை புக்கார்குணம் அம்மூர்க்கரொ டொப்பார்
முன்றொட்டிய மதுரக்கனி முதிருப்பளம் உற்றால்
பின்றொட்டன துருவத்தொடு பெயரும் பிறிதாமால்.

மெய்ஞ்ஞான விளக்கம்.

### இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

சிறியார் இனத்தைச் சேரப் பெரியார் அஞ்சுவர். சிறியார் அதனைச் சேர்ந்து மகிழ்வர். நிலத்தின் இயல்பால நீர் திரிவது போல் இனத்தின் இயல்பால் மனிதர் அறிவு திரிவர். தான் சேர்ந்த இனத்தின்படியே ஒருவன் இந்நிலத்தில் விளங்குவான். சிறந்த அறிவு ஒருவனுக்கு இனத்தாலே உண்டாம். இனம் தூய்மையால் ஒருவனுக்கு மனந்தூய்மையாகும். மனம் தூயராயினார்க்கு மக்கட்பேறும் தக்க நலங்களும் ஒக்க உளவாம். மனநலமே மன்னுயிர்க்கு ஆக்கமாகும். இனநலம் எல்லாப்புகழையும் தரும். மனநலம்பெற்றும் மக்கட்கு இனநலம் வேண்டும். இனநலத்தாலே ஒருவர் மனநலம் மாண்புறுவர். நல்லினம் இன்பத்தை விளைவிக்கும். தீயினம் துன்பத்தை உறுவிக்கும். ஆதலால் தீய இனத்தை என்றும் சேரலாகாது.

சகூ-வது சிற்றினஞ்சேராமை முற்றிற்று.

---

## சஎ-ம் அதிகாரம் தெரிந்து செயல்வகை.

அஃதாவது தான்செய்யுங்காரியங்களை அரசன் ஆராய்ந்து செய்யுந்திறம். பெரியாரைத் துணைக்கொண்டு சிறியார் இனத்தைச் சேராது நிற்கும் அறிவுடையார்க்கே இச்செயல்வகை இனிது அமையுமாதலால் அவற்றின்பின் இது வைக்கப்பட்டது.

461 உற்றவாவுடனே ஊதியமும் சூழ்ந்துபிட்டங்
கொற்றனைச் செய்தான் குபேரசா—முற்று
அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல். (க)

இ—ள்.

குபேரசா! பிட்டங்கொற்றன் வரவையும் இலாபத்தையும் நன்றாக ஆராய்ந்து வன் அதன்பின் தன் காரியத்தைச் செய்தான் எனின், அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழி பயக்கும் ஊதியமும் சூழ்ந்து செயல்என்க.

அழிவது என்றது செலவினை. ஆவது என்றது வரவினை. அளபெடைகள் இனிய ஓசையை இசைத்து நின்றன.

வழி என்றது காரணம், பழமை, முறைமை, மகன், பின்பு என்பவற்றை உணர்த்திவரும். வழி பயக்கும் ஊதியம்—பின்பு உண்டாகும் இலாபம். சூழ்ந்துசெயல்—ஆராய்ந்து செய்க.

அழிவது ஆவது ஊதியம் என்றமையால் பொருள் என்பது புலன் கொள நின்றது. ஒரு தொழிலைச் செய்யுங்கால் அதற்கு ஏற்படும் செலவுக்கு ஈடாகி அப்பொழுது வருவதை ஆவது எனவும், அவ்வினைவேறொன்றி யாதொரு செலவில்லாமல் அதிலிருந்து பிற்பொழுது விளைவதை ஊதியம் எனவும் உணர்ந்து கொள்க. தான் ஒருவினையைச் செய்யுங்கால் அப்பொழுது அதனால் உளவாம் பொருள் அழிவையும், அழிந்தால் பின் ஆவதனையும், ஆகி நின்று பின்புதரும் இலாபத்தையும் ஆராய்ந்து அமைவதாயின் அரசன் செய்க என்பதாம்.

அரசன் தெரிந்து செயல் வகையில் பொருள் செயல்வகையை முதலில் பொருந்த வைத்தது அதனால் யாவும் மேவும் என்பது கருதி என்க.

தற்காலத்தில் செலவும் வரவும் சமமாயிருப்பினும் பிற்காலத்தில் பயன் தருமாயின் அவ்வினையையும் பேணிச் செய்யலாம் என்க. நிகழ்காலத்தில் எய்தும் செலவு வரவுகளையும் எதிர்காலத்தில் அது தரும் பயனையும் ஆராய்ந்து தெளிந்தே ஒரு வினையை அரசன் தொடங்கவேண்டும் என்பது கருத்து.

ஒரு தொழிலைச் செய்யுங்கால் அதற்கு ஏற்படும் செலவையும் அப்பொழுது அதனால் வரும் வரவையும், பின்னால் விளையும் இலாபத்தையும் ஆராய்ந்தறிந்தே அறிவுடையார் செய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிட்டங்கொற்றன் பால் உணரப்படும்.

## கதை.

பிட்டங் கொற்றன் என்பவன் சற்றேறக் குறைய இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்குமுன்னர்ச் சேரநாட்டிலிரு

ந்த ஒரு குறுநிலமன்னன். அறிவு நூல்களையும் கருவி நூல்களையும் அமையக்கற்றவன். படைக்கலப்பயிற்சியில் மிக்க மகிழ்ச்சியுள்ளவன். நல்ல போர்வீரன். எவர் வரினும் இல்லையென்னுமல் கொடுக்கும் வள்ளன்மையுள்ளவன். இவன் சேரன் பெரும் பொறையென்பவனுக்கு உறுந்துணையாய் நின்றவன். பலபோர்முனைகளிலும் சென்று பொருதுவென்று அவனுக்குப் பெருமை தந்தவன். ஆழ்ந்த அறிவுடையவனுய் இவன் வாழ்ந்துவருங்கால் நிலவளமுடைய மலைப்பகுதி ஒன்றை அரசனிடமிருந்து தனக்கு உரிமையாக இவன் பெற்றான். அதனைப் பண்படுத்த முயன்றான். எதையும் தெளிவாக உணர்ந்த பின்னரே துணிவாக இவன் செய்வனுதலால் முதலில் அதற்கு ஏற்படும்செலவையும், அதில் களையப்படும் மரங்களால் அது பொழுது உளவாம் வரவையும், பின்பு விளையும் பெருக்கையும் சீர்தூக்கி நன்கு நோக்கினான். பலனுறுமென்று தெளிந்து நலனுறச்செய்தான். பெரிய நீர் நிலைகளாலும் இனிய கனி மரங்களாலும் விரிந்த வயல்களாலும் அதுபின் சிறந்து நின்றது. அதனால் இவன் பெருவளமுடையனுய் எல்லார்க்கும் அருள் சுரந்து ஈந்து அமைந்து வாழ்ந்தான். ஒரு வினையைச் செய்யுங்கால் அப்பொழுது அதனால் எய்தும் செலவுவரவுகளையும், பிற்பொழுது அது தரும் ஊதியத்தையும் ஆராய்ந்தே அறிவுடையார் செய்வர் என்பதை இவன் அறிய உணர்த்தினான். அம்மலைக்குக் குதிரை மலை என்று பெயர் ஆதலால் குதிரைமலைத்தலைவன் என்று அதன் பெயரால் பின்பு இவன் பெயர் பெற்று விளங்கினான். விரிவைப்புறநானூற்றில் காண்க.

இன்று செலினும் தருமே சிறுவரை
நின்று செலினும் தருமே பின்னும்
முன்னே தந்தனன் என்னது துன்னி
வைகலும் செலினும் பொய்யலனாகி
யாம்வேண்டி யாங்குஎம் வறுங்கலம் நிறைப்போன்
தான்வேண்டி யாங்குத் தன்இறை உவப்ப
அருந்தொழில் முடியரோ திருந்துவேற் கொற்றன்
இனமலி கதச்சேக் களனொடு வேண்டினும்
களமலி நெல்லின் குப்பை வேண்டினும்

அருங்கலம் களிற்றொடு வேண்டினும் பெருந்தகை
பிறர்க்கும் அன்ன அறத்தகையன்னே
அன்னன் ஆகலின் எந்தை உள்ளடி
முள்ளும் நோவ உறாற்க தில்ல
ஈவோர் அரிய இவ்வுலகத்து
வாழ்வோர் வாழ அவன் தாள்வாழியவே. புறநானூறு.

இது, காரிக்கண்ணனார் என்னும் கவிஞர் பெருமான் இவனை நோக்கிப்பாடியது. இதனால், இவனது வள்ளற்றன்மையும், தெள்ளிய அறிவும், தேர்ந்து செய்யும் திறமும், பிறவும் புலனாம்.

தெளிவாக ஆராய்ந்தே அறிவுடையார் ஒரு வினையைச் செய்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

462 சார்ந்தெண்ணிச் செய்தேன் தசரதனும் ஆசவனும்
கூர்ந்தார் அருஞ்சீர் குமரேசா—ஓர்ந்து
தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்றும் இல். (உ)

இ—ள்.

குமரேசா! தசரதனும், குவலயாசுவனும், வசிட்டரோடும் காலவரோடும் ஆராய்ந்தெண்ணிச்செய்து என் அருஞ்சீர் அடைந்தார் எனின், தெரிந்த இனத்தொடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு அரும்பொருள் யாதொன்றும் இல்லை என்க. எல்லாம் எளிதின் எய்தும் என்பதாம்.

தேர்ந்து எண்ணி—இனத்தோடு தெளிந்து தானும் ஆராய்ந்து.

தெரிந்த இனம் என்றது அறநீதிகளை வழுவறத்தெளிந்த அறிஞர் கூட்டத்தை. தனக்குத் துணையாக அரசன் தெரிந்தெடுத்த இனம் எனினுமாம். இனி, தான் செய்தற்குரிய வினையின் இயல்பை இனிது தெளிந்த இனம் எனினும் அமையும்.

மேல், ஊதியம் தரும் செயலை ஓர்ந்து செய்க என்றார்; இதில் அறிந்த பெரியாரோடு அதனை ஆய்ந்து செய்க என்கிறார்.

அறிவறிந்த பெரியாருடன் அரசன் ஆராய்ந்து செய்வதால் எவ்வகை வினைகளும் இனிது நிறைவேறி எல்லாப் பொருள்களும் அவனுக்கு எளிதில் உளவாம் என்பார். "எண்ணிச் செய்வார்க்கு அரும்பொருள் யாதொன்றும் இல்லை" என்றார்.

செயல் வகைகளை முழுவறத்தெரிந்த அறிவுடையாரோடு ஆராய்ந்து அறிந்து வினைசெய்யும் அரசர்க்கு அடைதற்கு அரிய பொருள் இவ்வுலகில் யாதொன்றும் இல்லை என்பதாம்.

அறிந்தவருடன் ஆராய்ந்து செய்யும் அறிவுடையார் அரிய பொருள்களையும் எளிதில் எய்துவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தசரதன் பாலும் குவலயாசுவன் கண்ணும் உணரப்படும்.

கதை.

தசரதன் பெருந்திருவுடையனாய் அறுபதினாயிரம் ஆண்டுகளாக இவ்வுலகை ஆண்டிருந்தும் மகப்பேறு இலாதவனாயினான். அதனை நினைந்து ஒருநாள் மிகவும் வருந்தினான். தனது பெரும் பருவத்தில் அவ் அரும் பொருளை அடைதல் அமையாதெனவும் கலங்கினான். ஆயினும் குலகுருவாகிய வசிட்டரிடம் ஒரு முறை தன் உறு குறையை உரைக்கத் துணிந்தான்.

அறுபதி னாயிரம் ஆண்டும் மாண்டுற
உறுபகை ஒடுக்கி இவ்உலகை ஓம்பினேன்
பிறிதொரு குறையிலை எற்பின் வையகம்
மறுகுறும் என்பதோர் மறுக்கம் உண்டரோ. (1)

அருந்தவ முனிவரும் அந்தணாளரும்
வருந்துதல் இன்றியே வாழ்வின் வைகினார்
இருந்துயர் உழக்குநர் எற்பின் என்பதோர்
அருந்துயர் வருத்தும்என் அகத்தை என்றனன். (2)

மன்னன் சொன்ன இந் நன்னய மொழிகளால் அவனது மனப் பண்பும், உலகம் காத்த ஒண்மையும், உயிர்கள் மாட்டுள்ள தண்மையும், உறு பகை நீக்கிய உண்மையும், எண்ணுதற்கரிய வன்மையும், தன்னயங் கருதாத் தன்மையும் பிறவும் புலனாகின்றன. எனக்கு ஒரு புதல்வன் இல்லையே என்னாது என்பின் வையகம் மறுகுறுமே என்றதில் பல பொருள் நயங்கள் புகுந்து நிற்கின்றன. ஆயுந்தோறும் அறிஞர் அறிவுக்கு அஃதோர் பெருவிருந்தாகும். இதனைக் கேட்டவுடனே பரமபத நாதன் மனிதவுருக்கொண்டு இங்குவருவதாக அமரர்குழாத்துள்முன் அருளியிருந்த தனிமொழியை முனிவர் மனமுற உணர்ந்தார், மன்னனுக்கு உணர்த்தினார். அம்முதல்வனே தனக்குப் புதல்வனாக வருதற்குரிய சில உபாயங்களை அவரோடு ஆராய்ந்து உடனே செய்தான். அதனால், அவ் அரும்பொருளைத் தனக்கே உறும் பொருளாக இவன் அடைந்து மகிழ்ந்தான். உன்னையே புகல்புக்கேனுக்கு ஒரு பொருள் அரியதுண்டோ என்று முனிவனை உவந்து புகழ்ந்தான். அறிந்தவர்களோடு ஆராய்ந்து வினை செய்வார்க்கு அரிய பொருள்களெல்லாம் எளிதில் உளவாம் என்பதை இவன் எய்தி உணர்த்தினான்.

கதை.

குவலயாசுவன் என்பவன் சூரிய குலத்தில் தோன்றியிருந்த சத்துருசித்தன் என்னும் வேந்தன் புதல்வன். சிறந்த அறிவும் மிகுந்த துணிவும் உடையவன். குதிரை ஏற்றத்தில் எவரும் தனக்கு நிகரில்லாதவன். இவன் இளவரசனாயிருக்கும்பொழுது பாதாளகேது என்னும் அரக்கனொருவன் அரசர்கட்கும் முனிவர்கட்கும் பெருந்துயர் விளைத்துவந்தான். அமரரும் அவனைவெல்ல முடியாமல் வெள்கி அகன்றார். அருந்திறலோடு அனைவரையும் அடக்கியாண்ட அவன் மதாலசை என்னும் ஒரு காந்தருவ மங்கையைக் கவர்ந்துகொண்டு போய்ப் பாதலத்திலுள்ள தனது நகரில் வைத்து அவள்பால் இன்பம் நுகர விரும்பினான். அவள் மதியும் மானமும் உடையவளாதலால் தனக்கு ஒரு விரதம் இருப்பதாகவும் அது முடிந்தபின் இசைந்துவிடுவதாகவும் குழைந்து மொழிந்தாள். அவனும் இசைந்திருந்தான். அங்ஙனம் இருக்

குங்கால் அவனை வெல்ல வல்லவன் இவனே என்று தெரிந்து முனிவர் பலர்வந்து தளர்ந்து மொழிந்தார். இவன் இரங்கி எழுந்து காலவர் என்னும் முனிவரை அடைந்து நலமுறும் உபாயங்களை நன்கு ஆராய்ந்தான். தெய்வ அருளால் தன்பால் வந்த அசுவத்தை அவர் இவனுக்குத் தந்தார். அதன்மேல் ஏறிச்சென்று அரக்கன் நகருட் புகுந்தான். அவ்வமையம் அவன் அங்கு இல்லை. தனியான ஓர் அரண்மனையில் அழுகொழுக வீற்றிருக்கும் மதாலசையைக் கண்டான். அவளும் நோக்கினள். இருவரும் பொருவருங்காதலுடையராயினர். அவள் வாயிலாக அவனது நிலைமை முழுதையும் தெளிந்து முனிவர் மொழிப்படியே அவளைத் தனியே மணந்து வெளியே வந்தான். அரக்கன் அறிந்தான். ஆர்த்து வந்தான். வெல்லும் உபாயங்களை அரசன்முன்னமே தெரிந்துகொண்டானாதலால் அவனைக்கொன்று சென்று அவனது உரிமை முழுதும் கொண்டு மீண்டு முனிவரைக் கண்டான். அவரது அருள் வழி ஒழுகி அவளை மணந்து அருந்திருவுடையனாய்ப் பெரும் புகழ் பெற்றான். பெற்றோர் இட்ட பெயர் இவனுக்கு இருதத்துவசன் என்பதேயாம். முனிவர் அருளிய அசுவ உதவியால் குவலயத்தை வலம் வந்ததால் குவலயாசுவன் என இவன் பின்பு கூறப்பெற்றான். குவலயம்—உலகம். அசுவம்—குதிரை. விக்கிராந்தன், சத்துருமர்த்தன், சுபாகு, அலர்க்கன் என்னும் புதல்வர்களைப் பெற்றுப் பெருமகிழ்வுற்றான். காலவமுனிவரோடு இவன் கலந்து எண்ணி வினைசெய்ததால் அமரராலும் அடைதற் கரியவெற்றியையும் அரிய செல்வங்களையும் பெற்றான். தெரிந்த இனத்தோடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு அரும் பொருள் யாதொன்றும் இல்லை என்பதற்கு இவன் இலக்காயிருந்தான். [விரிவை மார்க்கண்டேயத்தில் காண்க.)

அறிந்தவரோடு ஆராய்ந்து வினை செய்வார் அரிய பொருள்களையும் எளிதிலடைவார் என்பது இதனால் கூறப்பட்டது.

463 அன்றுதமன் ஊக்கா தடங்கியிருந்தான் ஏனோங்கிக்
குன்றினான் மந்தன் குமரேசா—என்றும்
ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கார் அறிவுடை யார். (௩)

இ—ள்.

குமரேசா! தமன் ஊக்காமல் உணர்ந்து நின்றான்; வபுமந்தன் ஆக்கம் கருதி ஊக்கி ஏன் அழிவுற்றான் எனின், ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய்வினையை அறிவுடையார் ஊக்கார் என்க. ஊக்கின் அவரை அறிவிலர் என்றே கருதவேண்டும் என்பதாம்.

தன் கருத்து முதலை இழத்தற்கு ஏதுவாய் முடிதலின் கருதி இழக்கும் என்றார்.

ஆக்கம் கருதி—ஊதியத்தை எதிர் நோக்கி. முதல்—கைப்பொருள். ஊக்கார்—செய்யத் துணியார். பாண்டவர்களைக் கலைத்துவிடுத்து மச்சநாட்டைக் கைக்கொண்டு வளம்பெறலாமென்று கருதி வலியும் இடனும் அறியாது சென்று படையும் பொருளும், இழந்து பழியோடு மீண்ட துரியோதனனைப்போல ஆக்கத்தைக் கருதி முதலை இழப்பவர் அறிவிலிகளேயாவராதலால் "அறிவுடையார் ஊக்கார்" என்றார்.

மேல், அறிவுடையாரோடு ஆராய்ந்து அறிந்து வினைசெய்வார்க்கு அரிய பொருள்களெல்லாம் எளிதில் எய்தும் என்றார்; இதில், அங்ஙனம் செய்யார்க்கு இருக்கும் முதலும் இழக்கப்படும் என்றார்.

ஊதியத்தை எதிர் நோக்கித் தன் முதலை இழத்தற்கு ஏதுவாகிய செய்வினையை அறிவுடையார் தொடங்கார் என்பதாம்.

ஆராய்ந்து தெளியாமல் அறிவுடையார் ஒரு தொழிலைச் செய்யத்துணியார் என்பது கருத்து. முதலை இழத்தற்கு ஏதுவாகிய காரியங்களை அறிவுடையார் செய்யார் என்பதும், அறிவில்லாதவர் ஊதியங்கருதி ஒன்றைச்செய்து அதனால் உள்ளபொரு

ளையும் இழந்து உளவர் என்பதூஉம், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை தமன்பாலும் வபுமந்தன் கண்ணும் உணரப்படும்.

தமன் என்பவன் சூரிய குலத்து வேந்தனாகிய நரசியந்தனுடைய புதல்வன். தாய் பெயர் இந்திரசேனை. இவன் நுண்ணறிவோடு நூலறிவுஞ் சாலப்பெற்றவன். இளவரசனாயிருக்கும் பொழுதே அரசியல் முறைகளை இவன் முழுவதுந் தெரிந்தான். தான் செய்தற்குரிய வினையைக் குறித்து நெடுநேரம் இவன் சிந்தித்திருப்பான். சிறிய கருமமாயினும் நன்கு அறிந்த பின்னரே அதன்மேல் துணிவுகொள்வான். அழகிலும், குணத்திலும் அக்காலத்தில் எவரும் தனக்கு இணையில்லாதவளும், தாருணதேசத்து அரசன் புதல்வியும் ஆகிய சுமனை என்பவளை மணந்து இவன் இனிது வாழ்ந்துவந்தான். வருங்கால் வபுமந்தன் என்னும் பெயரினையுடைய மறுபுலத்து மன்னன் இவன்மேல் பகைகொண்டிருந்தான். இவனைக் கெடுக்க முயன்று பல இடுக்கண் விளைத்தான். அவ்வெல்லாவற்றையும் முன்னறிந்து காத்து இவன் இன்னலுறாதிருந்தான். மாயங்கள் பல வல்ல இரசவாதி ஒருவனை அவன் இவன்பால் ஏவினான். வந்தவாதி "பொருள் சிறிது தரின் அதனை மிகப்பெரிதாக்கி அளகை வேந்தன்போல் உன்னை ஆக்கிவிடுகின்றேன்" என்று இவன்முன் தூங்கி மொழிந்தான். இவன், அவனை நோக்கி நகைத்து வறிய பேழையொன்றைத் தூக்கிக்கொடுத்து நீ ஆக்கும் பொருளை இதில் அடக்கி வைத்து அவன்போல் நீயே ஆகியிரு என்று போக விடுத்தான். ஆக்கத்தைக் கருதித் தம்முதலை இழத்தற்கு ஏதுவாகிய வினையை அறிவுடையார் செய்யார் என்பதை இவன்பால் அவன் தேர்ந்து போய் வபுமந்தன்பால் சேர்ந்ததையுரைத்தான். அவன் இவனது அரசைக் கவர்ந்துகொள்ளக்கருதி இறுதியில் ஒருநாள் படையோடு திரண்டு இவன் நகர்மேல் வந்தான். தனியே தங்கித்தவங்கொண்டிருந்த இவன் தந்தையை அவன் கொன்றான். அதனை அறிந்ததமன் வஞ்சினங்கூறி வாளோடெழுந்து படையை அறவென்று முடிவில் அவனையுங்கொன்று அவன் உதிரத்தைக்கொண்

டே தன் பிதிரர்க்கு உரிய கருமத்தைச்செய்து அவன் அரசைத் தனக்கு உரிமையாக்கிக்கொண்டான். இவனது அரசைக் கருதி வந்த அவன் தானும் அழிந்து தன் அரசையும் இழந்தான். ஆக்கம் கருதி முதலை இழக்கும் வினையை அறிவுடையார் ஊக்கார் என்பதையும் அறிவிலிகள் ஊக்கி அழிவர் என்பதையும் உலகம் அறிய முறையே இவ் இருவரும் உணர்த்தினர். விரிவை மார்க்கண்டேயத்தில் காண்க.

வாணிகம் ஒன்றுந் தேற்றாய் முதலொடுங் கேடுவந்தால்
ஊணிகந் தீட்டப்பட்ட வூதிய வொழுக்கி னெஞ்சத்
தேணிகந் திலேசநோக்கி யிருமுதல் கெடாமை கொள்வார்
சேணிகந் துய்யப்போதி னெறிதொடி யொழிய வென்றார்.
(சிந்தாமணி.)

இது, காந்தருவதத்தையைக் கைகொண்டு நின்ற சீவகனை வணிகன் என்று மாறுபடக் கருதி அவன்மேல் போர்செய்யவந்த அரசர் கூறியது. ஒரு பெண்ணை எய்தக் கருதி உன் உயிரை இழக்கும் வினையை நீ ஊக்குகின்றாய் என்று தம் உயிரை இழக்க நிற்கும் அவ் உரனிலார் உரைத்த இது ஈண்டு உணரத்தக்கது.

ஊதியம் கருதி முதலிழக்கும் வினையை அறிவுடையார் செய்யார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

464 பண்டு தெளியாமல் பாண்டியனே னவ் வேட்டனிடம்
கொண்டிலனோ தண்டம் குமரேசா—கண்டு
தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர். (௪)

இ—ள்.

குமரேசா! தெளிவு இல்லாத வினையைப் பாண்டியன் ஏன் முன் செய்யத் தொடங்கவில்லை எனின், இளிவு என்னும் ஏதப்பாடு அஞ்சுபவர், தெளிவு இலதனைத் தொடங்கார் என்க.

அஞ்சுபவர் தொடங்கார் என்று அமைத்துக் காண்க.

தெளிவு இலதனை—தெளிதல் இல்லாத காரியத்தை. ஏதப் பாடு—குற்றம் உண்டாதலை. பாடு என்றது இதில் படுதல் என்னும் தொழிலுற நின்றது.

மேல், ஆக்கம் கருதி முதல் இழக்கும் வினையை அறிவுடையார் செய்யார் என்றார்; இதில், தெளியாமல் ஒன்றையும் அவர் செய்யத் துணியார் என்றார்.

இளிவு என்னும் குற்றம் உண்டாதலை அஞ்சுகின்றவர் தெளிதல் இல்லாத காரியத்தைச் செய்யத் துணியார் என்பதாம்.

நன்றாக ஆராய்ந்து தெளிந்த பின்னரே ஒரு தொழிலைச்செய்ய அறிவுடையார் தொடங்குவர் என்பது கருத்து.

ஆராய்ந்து தெளியாமல் ஒரு தொழிலையும் குலமக்கள் செய்யத் துணியார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குலோத்துங்க பாண்டியன்பால் உணரப்படும்.

## கதை

குலோத்துங்க பாண்டியன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் மதுரையிலிருந்து அரசுபுரிந்த இராசசேகரபாண்டியனுடைய புதல்வன். அழகினால் மதனை வென்ற ஆடவர் திலகன் என்று இவனை அனைவரும் சொல்வர். ஆண்மையோடு அறிவும் அமைதியும் இவன் அமையப்பெற்றவன். தன் குலமகளிர் பலரை முறையே மணந்து நிறையின்பந் துய்த்தான். அம்மங்கையர் அனைவரும் மகப்பேறுடையராய் மகிழ்ந்து விளங்கினர். இவனுடைய முதல் மனைவிக்கு மாணிக்கமாலை என்று பெயர். இவன் புதல்வர் பலருள்ளும் அனந்தகுணன் என்பவனே சிறந்து நின்றான். மனைவியர் அமைவும், மக்கள் மாண்பும், இவனுக்கு மிக்க மகிழ்ச்சியையூட்டின. அரிய நலங்களை யெல்லாம் ஒருங்கே எய்தி இவன் அரசுபுரிந்துவருங்கால் மதுரையை நோக்கி வந்த மறையவனொருவன் தன் மனைவியை நீலன் என்னும் வேடன் கொன்றுவிட்டதாக இவன்முன் அவனைக் கொண்டுவந்து நிறுத்தினான். உண்மையில் வழியிடை இருந்த ஓர் ஆலமரத்தில் தொங்கிக் கிடந்த அம்பு அலைந்து விழுந்ததால் அவள் ஆவிதுறந்தாள். அத

லை அறியாமல் வேதியன் இழுத்துவந்தான். அவ்வேடனை இவ்வேந்தன் பார்த்தான். அவன் வாய்மொழிகளைக் கேட்டான். கொலைக்குரிய குறிப்பு ஒன்றும் அவன் முகத்தில் இல்லையே என்று அமைச்சரை அரசன் குறித்து நோக்கினான். இவனே கொன்றான், இவனே கொன்றான் என்று மறையவன் மாரடித்து நின்றான். தெளிவில்லாமையால் தண்டமொன்றும் செய்யாமல் வேடனை ஓரிடத்தில் வைத்துவிட்டுத் தன் குலதெய்வமாகிய சோமசுந்தரப் பெருமான் முன் தனியே போய் நின்று உண்மை தெரியுமாறு உருகித் துதித்தான். அப்பெருமான் அருளால் ஒரு மொழி வானில் எழுந்தது. அம்மொழி வழியே சென்று உண்மையை உணர்ந்து மறையவனுக்கும் உணர்த்தினான். அவன் உணர்ந்து நாணித் தன் ஊருக்குப் போனான். வேடனைத் தேற்றி வேண்டுவ கொடுத்து அரசன் வெளியே விடுத்தான். இளிவினை அஞ்சுபவர் தெளிவில்லாத வினையைத் தொடங்கார் என்பதும் ஆராய்ந்து தெளிந்தே அறிவுடையார் ஒரு காரியத்தைச் செய்யத் துணிவர் என்பதும் உலகம் இவன்பால் உணர்ந்து நிற்கிறது. விரிவைத் திருவிளையாடலில் காண்க.

மன்றுநிம் மணியேயிம் மறவன்றான் பார்ப்பனியைக்
கொன்றானோ பிறர்பிறிதாற் கொன்றதோ இதுஅறநூல்
ஒன்றாலும் அளப்பரிதாக் கிடந்ததால் உன்னருளால்
என்றாழ்வு கெடத்தேற்றாய் என்றியந்தான் அவ்வேலை (1)

திருநகரின் புறம்பொருசார் குலவணிகத் தெருவின்கண்
ஒருமனையின் மணமுளதங்கு அந்தணனோ டொருங்குநீ
வருதியென துளந்தேற மாற்றமெலாம் தேற்றுதுமென்
றிருவிசும்பின் அகடுகிழித் தெழுந்ததால் ஒருவாக்கு. (2)

பாண்டியன் வேண்டியதும், ஆண்டவன் அருளியதும், ஈண்டியைந்த கதையும், இவற்றுள் காண்க.

ஆராய்ந்தறிந்தே அறிவுடையார் ஒரு வினையைச் செய்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

465 வாலிந்நம் எண்ணுமல் வந்தேனே தந்துபிதன்
கோலடை இழந்தான குமரேசா—சால
வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு. (ரு)

இ—ள்.

குமரேசா! வாலியினது வலிமையை எண்ணாது வந்து ஏன் துந்துபி மாய்ந்தான் எனின், வகை அறச் சூழாது எழுதல் பகைவரைப் பாத்திப்படுப்பது ஓர் ஆறு என்க.

எழுதல் ஆறு என்று இயைத்துக் காண்க. வகை என்றது தொழில் செய்யப் புகுந்த காலத்தில் அதில் உளவாகின்ற விதங்களை. அறச்சூழாது—குறைவற எண்ணாது. பாத்தி—பயிர்கள் வளரும் பணி நிலம். உணவுப் பொருள்கள் நீரையுண்டு இனிது வளர்வதற்கு ஏதுவாகப் பகுக்கப்படுதலின் அது பாத்தி என நின்றது.

மேல், இளிவினை அஞ்சுகின்றவர் தெளிவில்லாத வினையைச் செய்யத் துணியார் என்றார்; அங்ஙனம் ஒருவன் துணியின் அவன் பகைவர்க்கு உயர்வும் அவனுக்கு இழிவும் உளவாம் என்பதை இதில் உணர்த்தியருளினார்.

தான் செய்யத் துணிந்த வினையில் நிகழுகின்ற விதங்களையெல்லாம் குறைவற எண்ணாமல் ஒருவன் அதனைச் செய்யச் செல்லுதல், தன் பகைவரை நன்றாக வளரவிடுதற்குரியதோர் வழியாம் என்பதாம்.

தன் பகைவனை வெல்லுதற்குரிய உபாயங்களை முழுதும் ஆராயாமல் ஒருவன் முனைந்து செல்லின் இனிது முடியாது அது பழுதுபடும்; அதனால் அப்பகைவர் தெளிந்து வளர்ந்துகொள்வர்; அவ்வளர்ச்சிக்கு இவனது எழுச்சியே காரணமாகுமாதலால் "எழுதல் பகைவரைப் பாத்திப்படுப்பதோர் ஆறு" என்றார். தனியே கிடப்பதினும் பாத்தியுள் அமைந்த பயிர் பணைத்து வளருமாதலால், அது, வறிதே இருந்த பகைவரை வளர்த்துவிட்டதற்கு எடுத்துக்காட்டாண்டு இசைந்து நின்றது.

நன்றாக ஆராயாமல் ஒருவன் போர்மேற் செல்லின், தன் பகைவனுக்கு வெற்றியை விளைத்து அவன் குன்றி அழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துந்துபியால் உணரப்படும்.

கதை.

துந்துபி என்பவன் அசுர தச்சனாகிய மயனுடைய புதல்வன். மாயாவிக்கு முன் பிறந்தவன். அறிவிற் சிறந்தவனில்லையாயினும் ஆண்மையில் உயர்ந்தவன். அச்சம் என்பதை அணுவும் அறியாதவன். இவன் சினந்து முழங்கின் பேரிகைபோலப் பேரொலியுண்டாகும் ஆதலால் இவனுக்குத் துந்துபி என்று பெயரிடப்பட்டது. துந்துபி—பேரிகை. இவன் பிரமனை நோக்கி அருந்தவஞ் செய்து பெரு வரங்களை அடைந்தான். அதன்பின் அனைவரையும் வென்று அரசுரிமைகொண்டு மந்திமுகி என்னும் அசுர கன்னியை மணந்து அரும்போகந் துய்த்து மனக்களிப்போடு மயங்கியிருந்தான். தேவரையெல்லாம் சேரவென்றுவிட்டதாகச் செருக்கியிருந்த இவன்பால் ஒருநாள் நாரதர் வந்தார். என் வன்மையைக் குறித்து உலகம் என்னசொல்லுகின்றது என்று இவன் அவரை எதிர்ந்து கேட்டான். அனைவரும் புகழ்கின்றார்; வாலிமாத்திரம் உன்னைக் கேலிபண்ணுகின்றான் என்று அவர் தமது வேலையை முடித்துச் சென்றார். அன்றுமுதல் அவனை வென்றுவிடவேண்டுமென்று இவன் கன்றியிருந்தான். மாலயன் முதலாயினாரோடு வாதுபுரிந்து முடிவில் வாலிமேல் வந்தான். அவன் வன்மையையறியாது வலிந்தறைகூவினான். வலியவந்தானே என்று அவ்வல்லவன் எழுந்தான். இவனோடுமல்லமர்புரிந்து இவன் வல்லுயிர்குடித்தான். இவன் மாய்ந்துதொலைந்தான். இவன் வழியினர் இன்னும்வருவரென்றெண்ணி அஞ்சினங்கொண்டு வாலி தன்னை வலிசெய்துகொண்டான். வகைஅறச்சூழாது எழுதல் பகைவரைப்பாத்திப்படுப்பதோர் ஆறு என்பதைத் துந்துபி எழுந்துகாட்டினான். விரிவை இராமாயணத்தில் காண்க.

முற்ற ஆராயாமல் வினைமேல் செல்வார் பகைவரால் இற்று முடிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

466 செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.

சென்றுதுந்து செய்துகெட்டான் செய்யாதேன் அங்கிமுனி
குன்றி இழிந்தார் குமரேசா—என்றுமே
செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும். (சு)

இ—ள்.

குமரேசா! செய்யத்தகாத வினையைத் துந்துசெய்து கெட்டான்; செய்யும் வினையைச் செய்யாமல் ஏன் சமதக்கினி முனிவர் சீர்கெட்டார் எனின்; செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க செய்யாமையானும் கெடும் என்க.

உம்மை செய்யினும் என்பதைத் தழுவி நின்றது.

செய்தக்க அல்ல—செய்யத்தக்கன அல்லாதவற்றை: என்றது தனது தகுதியோடு பொருந்தாத செயல்களை.

செயக்கெடும்—செய்தால் கெடுவான். எச்சம் இதில் வினைப்பொருளாய் நின்றது. கெடும் என்னும் பயனிலைக்கு ஏற்ற எழுவாயை இதில் வருவித்துக்கொள்க. அரசன் கெடும் என அமைத்து செய்யும் என்னும் வினைமுற்று, படர்க்கை ஒருமையில் வந்ததாக உணர்க.

தனது நிலைமைக்குத் தகாத செயல்களைச் செய்தாலும்; தக்க செயல்களைச் செய்யாது விட்டாலும்; ஒருவன் கெடுவான் என்பதாம்.

தனக்குப் பொருந்ாதவற்றுட் புகுந்து வருந்தாமல் பொருந்திய காரியங்களையே ஒருவன் திருந்தச் செய்யவேண்டும் என்பது கருத்து.

தான் செய்யத் தகாத காரியங்களைச் செய்தவனும், செய்யத்தக்க காரியங்களைச் செய்யாதுவிட்டவனும் கெடுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துந்துவின் கண்ணும், சமதக்கினி முனிவரிடமும் உணரப்படும்.

## கதை 1.

துந்து என்பவன் அசுர வீரகிைய மதுவின் புதல்வன். தாய்பெயர் தாருணி. துணிவும் திண்மையும் திருவும் உடையவன். இவன் பருவமெய்தினான். தன் தாதையையும் சிறிய தந்தையாகிய கயிடவனையும் திருமால் காந்துகொன்றார் என்று இவன் கருதிச் சினந்தான். அழிவில்லாத அவரை இவன் அழிக்க எண்ணினான். கடற்கரையடைந்து கடும் வேள்வியொன்று செய்தான். அதனை முறை பிறழ்ந்து செய்ததால் இவன் மனநிலை பிறழ்ந்தது. அதனால் மதியிலனாகி மயங்கித்திரிந்து நெடுநாளாக ஓரிடம் துயில் கொண்டுகிடந்தான். அறிதுயில்கொண்டவனை அழிக்க முயன்ற இவன் அழிதுயில்கொண்டான். பின்பு அடங்காதெழுந்து பல உயிர்களை அடக்கத் தின்றான். முடிவில் குவலயாசுவனுடைய புதல்வர் பலரையும் கொன்றான். அம்மன்னன் சினந்தெழுந்து தன் வில் வலியால் இவனை மாய்த்தான். அன்றுமுதல் துந்துமாரன் என்று அவன் பெயர் பெற்றுநின்றான்.

"துந்துஎனும் தானவனைச் சுடுசரத்தால் துணித்தானும்

வந்தகுலத் திடைவந்த ரகு என்பான்" என்று இராமபிரானுடைய குலமுறையைக் கூறுங்கால் கம்பரும் இதனைக் குறித்துள்ளார். தன் நிலைமைக்குத் தகாத செயல்களைச் செய்ததால் துந்து செத்துத் தொலைந்தான் என்று அனைவரும் அன்று செப்பிநின்றார். ஆதலால் செய்தக்க அல்ல செயக்கெடும் என்பதற்கு இவன் இங்குச் சேர நின்றான். விரிவைமனு மரபில் காண்க.

## கதை 2

சமதக்கினி என்பவர் இருசிக முனிவருடைய புதல்வர். தாய்பெயர் சத்தியவதி. தவவொழுக்கத்தில் இவர் மிகச் சிறந்தவர். இவர் இரேணுகையை மணந்து அனு, விசுவாவசு, பரசுராமர் திரணதூமாக்கினி என்னும் புதல்வர் நால்வரைப் பெற்றார். அவருள், தமிழ்க் கடவுள் இனிதாக உலாவுதற்கு அருங்கலமாக அமைந்துள்ள தொல்காப்பியம் என்னும் சிறந்த நூலைத் திரணதூமாக்கினி யாரே ஆக்கி அருளினார். தொன்மையான காப்பியக்

குடியில் தோன்றினவராதலால், இவர் பின்புதொல்காப்பியரென ப்பெற்றார். இங்ஙனம் அறிவறிந்த மக்களும் அழகமைந்த மனைவியும் இனிதமையப்பெற்று நெறி வழுவாமல் இவர் இல்லறம்புரிந்து வருங்கால் ஒருநாள் பிதிர்க்கடன் ஆற்றும்பொருட்டுப் பால்கறந்து ஒரு கலத்தில் வைத்திருந்தார். அதனை ஒரு காக்கை வந்து கரந்து குடித்தது. இவர் கண்டார். அதுவும் ஒரு உயிர் தானே குடித்துச் செல்லட்டும் என்று இவர் ஒன்றுஞ்செய்யாமலிருந்தார். எங்களுக்கு வைத்திருந்த பாலை ஒரு பறவை பருகி மிச்சிலாக்குவதை பார்த்திருந்தும் ஓட்டாதிருந்தாய் ஆதலால் நீ கிரி ஆகக் கடவாய் என்று பிதிரர் சீறி மொழிந்தார். உடனே இவர் கிரியாகினார். பாரில் அலைந்து சத்துப்பிரத்தன் விருந்தோம்பிய மிச்சிலில் புரண்டு ஒருபாதி பொன்னிறமாகப்பெற்று தருமராஜ அசுவமேதத்தில் புகுந்து அங்குப் புரண்டு ஒன்றுந்தோன்றாமை கண்டு அதனையிகழ்ந்து பின்பு அவர் போற்றப்புகழ்ந்து முழுதும் பொன்னிறமாகிப் பிதிரரைமுன்னினார். அவர் அருளுடன் தோன்றி நீ அன்று செய்யவேண்டிய கடமையைச் செய்யாது தாழ்த்தமையால் இத்தாழ்வுபற்றதென்று வாழ்வுறக்கூறிச் சாபத்தை நீக்கினர். முனிவர் முன்னைய உருவமடைந்து அறநூல்களையும், பருவமறிந்து கருமஞ் செய்யாமையால் தான் எய்திய சிறுமையையும், உறிந்து தெளிந்தார். செய்தக்க செய்யாமையானும் கெடும் என்பதை உலகறிய இவர் உணர்த்திநின்றார். விரிவை முனிவர் சரிதையில் காண்க.

தகாதவற்றை ஒழித்துத் தக்கவினைகளை அரசன் தவறாமல் செய்யவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

467 நின்றான் சிரகாரி நேராமல் கிரியையேன்
கொன்றாள்பின் நொந்தாள் குமரேசா—என்றுமே
எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவம் என்ப திழுக்கு. (எ)

இ—ள்.

குமரேசா! சிரகாரி தன் காரியத்தை எண்ணி நின்றான்; யாகசேனை என் கிரியை எண்ணாமல் கொன்று பின் இழிந்தான் எனின், கருமம் எண்ணித் துணிக; துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு என்க.

கருமம் எண்ணித் துணிக—காரியத்தை ஆராய்ந்து தொடங்குக. துணிக என்றது முன்னிலை வியங்கோள். எண்ணுவம் என்றது தனித்தின்று இயலும் தன்மைப் பன்மை. தன்னைக் குறித்து எண்ணுங்கால் ஒவ்வொருவரும் இப்பன்மையை உள்ளே பற்றிக்கொள்வர். தன் கருமத்தை எண்ணாது தொடங்கிப் பின்பு இழுக்கு எய்த நிற்கும் ஒருவனது இறுமாப்பை எள்ளி இஃது இங்கு இசைந்து நின்றது. மேல், ஒருவன் செய்யத் தக்க காரியங்களை உரிய பருவத்தில் தவறாது செய்யவேண்டும் என்றார்; இதில், அவை வழுவின்றி முடியுமாறு முன்னதாகவே முழுதுணர்ந்து தொடங்குக என்றார்.

தான் செய்யத்தக்க காரியம் இனிது நிறைவேறுமாறு முன்னதாகவே நன்றாக ஆராய்ந்து அதனைத் தொடங்கவேண்டும்; தொடங்கி வைத்துக்கொண்டு பின்பு ஆராய்வோம் என்று நின்றுவிடுதல் பெருங் குற்றம் என்பதாம்.

ஒரு காரியத்தைத் தெளிவாக ஆராய்ந்து செய்வோர் அறிவுடையராகி உயர் புகழடைவர் என்பதும், ஆராயாது துணிவோர் பழியும் கேடும்பற்றி இழிவர் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை சிரகாரிகண்ணும் யாகசேனையிடமும் அறியப்படும்.

கதை.

சிரகாரி என்பவர் கௌதமருடைய புதல்வர்களுள் ஒருவர். சதானந்தருக்கு இளையவர். நிறைந்த அறிவோடு விழுமிய குணங்கள் பலவும் நிறைந்தவர். ஒருநாள் தன் தாயாகிய அகலிகைமேல் தந்தையார் சிறு சினங்கொண்டார். அதனால் பண்டு நிகழ்ந்த பெரும் பிழையையும் அன்று அவர் கருத்துட்கொண்டு கடுஞ்

சினங்கூர்ந்தார். மூன்று தினங்களுக்குள் அவளைக் கொன்றுவிட வேண்டும் என்று சிரகாரிக்கு ஆணை கொடுத்துத் தனியிடத்தி லமர்ந்து அவர் மனமடங்கியிருந்தார். தந்தை பணித்தபடி இதுவரையும் தவறாது செய்துவந்த இவர் அக்கொடு வினையை நினைந்து நின்று நெடிது கவன்றார். தந்தை சொல்லின்படி நடப்பதே தருமம் என்று ஒருமுறை எண்ணித் துணிவார். தாயினும் சிறந்த பொருள் யாதும் இல்லையே! என்று தயங்கித் தளர்வார். தாமாது செய்யுமாறு தனக்குத் தந்தையார் தந்த கருமத்தின் வினைவை இவர் கருதி ஆராய்ந்தார். அது முடிவுறாமையால் இவர் அதில் அடியுறாது நின்றார். யாதுஞ்செய்யாது எண்ணி எண்ணி நின்றதால் குறித்த எல்லை கழிந்தது. கோதமர் விழித்தார். கோபந் தணிந்தார். தனது மனைவியை நினைந்தார். அவளது பேரழகையும் பேதைமை இடல்பையும் எண்ணி யிரங்கிப் பெரிதுங் கவன்றார். தான் கூறியபடியே மைந்தன் கொன்றிருப்பானோ என்று குலைந்து எழுந்தார். விரைந்துவந்தார். துணிந்துசெய்யாமல் வினையின் விளைவை ஆராய்ந்துகொண்டேநிற்கும் புதல்வனைக் கண்டார். பெருமகிழ்வுகொண்டு அயவைப்பேணியணைத்து சினத்தால் மனந்திரிந்து சொன்னதைத் துணிந்து செய்திடாமல் நினைந்து நின்று நின் பெயரியல்பை விளக்கினாய் என்று புகழ்ந்து போற்றினார். சிரகாரி என்பதற்குக் காரியங்களை ஆராய்ந்து செய்வோன் என்பது பொருளாம். தாயின் அழிவையும், தந்தைக்கும், தனக்கும், வரக்கூடிய பழியையும் ஆராய்ந்துசெய்பவல்ல தமது நுணுகிய அறிவினால் அகற்றியருளினார். முனிவரும் பிறரும் இவரது தெரிந்துசெய்யும் திறத்தை வியந்து புகழ்ந்தார். அறிவுடையார் எக்கருமத்தையும் எண்ணியே துணிவர் என்பதை உலகம் இவர்பால் கண்டது. விரிவைச் சாந்தி பருவத்தில் காண்க.

## கதை 2.

யாகசேனை என்பவள் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த தேவசன்மா என்னும் ஒரு வேதியன் மனைவி. தெரிவைப் பருவங்கடந்தும் இவள் பிள்ளைப்பேறு இல்லாதவளாயிருந்தாள். மகவாசைக்காகத் தன் காதலன் ஒரு கீரிப்பிள்ளையை வளர்த்தான். இவளும்

அதனை அன்போடு போற்றினாள். அதன் பயனாக இவளிடம் ஒரு புதல்வன் தோன்றினான். காதலரிருவரும் களிபெருவகைகொண்டு அப்பிள்ளைகளிரண்டையும் பேணிவந்தார். வருங்கால் ஒருநாள் பிள்ளையைத் தொட்டிலில் கிடத்திவிட்டு நீர் மொண்டுவர இவள் வெளியே போயினாள். தேவசன்மாவும் இல்லை. கீரியாத்திரம் அங்கு விளையாடிக்கொண்டிருந்தது. அவ்வமையம் நல்ல பாம்பொன்று தொட்டில் கயிற்றின் வழியாகப் பிள்ளையை நோக்கி மெல்ல வந்தது. கீரிப்பிள்ளை கண்டது. உடனே பாய்ந்து அதனைக் கடித்தெரிந்தது. உதிரந்தோய்ந்த வாயோடு வெளியே வந்து வளர்த்த தாயை வழிபார்த்து நின்றது. நீர் கொண்டுவந்த பார்ப்பனி அதன் நிலைமையைப்பார்த்தாள். தன் பிள்ளையையே அது கொன்றிருப்பதாகப் பிழைபடக் கருதி உள்ளம் பதைத்தாள். ஒன்றையும் பாராமல் ஒரு தடியால் அதனை ஓங்கி அடித்தாள். பாவம்! அஃது உடனே மாண்டது. இவள் உள்ளே புகுந்து பிள்ளையைப் பார்த்து உற்றதை உணர்ந்தாள். தான் என்னுமற் செய்ததைப் பின்பு எண்ணியழுதாள். கொண்டானும் வந்தான். அக்கொடுமையைப் பார்த்துத் தன் குலை நடுங்கக்கொண்டு இவளை வெறுத்துவிட்டுத் துறவியாகி வெளியே போனான். பழியும் இழிவும் இவள்பற்றி அலைந்தாள். ஒரு கருமத்தை எண்ணுமற் செய்யின் அதனால் இழுக்கே வரும் என்பதற்கு இவள் இனமாகி நின்றாள். விரிவைச் சிலப்பதிகாரத்தில் காண்க. இக்கதையைச் சிறிது திரித்துப் பஞ்சதந்திரம் விரித்துக் கூறுகின்றது.

அரசனார் குமரர்கேட்க அவன்ஒரு கருமமேனும்
திரமொடு விசாரியாமல் செய்யவொண்ணாது செய்தால்
வரமிகுகீரிதன்னை வளர்த்ததைக் கொன்று பின்னர்த்
தரணியில் மறையோன்வீழ்ந்து தவித்ததுபோலாமென்றான்.
(பஞ்சதந்திரம்.)

நுண்ணிய கருமமும் எண்ணித் துணி. (ஔவை.)

முடிக்கும் உபாயத்தை எண்ணித் தெளிந்தே அரசன் ஒரு காரியத்தில் இறங்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

468 பண்டு பலர்நின்று பார்த்தும் மதன்முயன்று
கொண்டான் அழிவேன் குமரேசா—கண்டாய்ந்து
ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

இ—ள்.

குமரேசா! பலர் நின்று பாதுகாத்தும் மன்மதன் ஏன் வருந்தி அழிந்தான் எனின், ஆற்றின் வருந்தா வருத்தம், பலர் நின்று போற்றினும் பொத்துப் படும் என்க.

நதியையும் வழியையும் உணர்த்திவரும் ஆறு என்னும் சொல் ஈண்டு வினையை முடித்தற்குரிய விதத்தின்மேல் நின்றது. ஆற்றின் வருந்தாவருத்தம்—முறையான வழியில் முயலாத முயற்சி.

வருத்தம் என்பது அயர்வு, வேதனை, துன்பம், என்பவற்றை உணர்த்திவரும். அஃது ஈண்டு முயற்சிமேல் நின்றது. முயற்சியால் ஒருவன் உடல் வருத்த முறினும் ஊதியம் கருதி அவன் உள்ளம் வருந்தாது ஆதலால் அது "வருந்தா வருத்தம்" என நின்றது. பொத்தல் என்பது அவ்விகுதிகுன்றிப் பொத்து என நின்றது பொத்தல்—துளை, பிழை, பழுது, தவறு.

பொத்துப்படும்—பழுதுபடும்.

மேல், ஒரு காரியத்தை எண்ணுமல் செய்தால் இழுக்கே வரும் என்ருர்; இதில், அவ் இழுக்கைப் பலர் நின்று போக்கினும் பின்பு போகாதென்ருர்.

நிறைவேறுதற்குரிய உபாயங்களால் ஒரு கருமத்தை முயலாத முயற்சி பின்பு துணைவர் பலர் நின்று காத்தாலும் பழுதுபடும் என்பதாம்.

ஒரு கருமத்தை முடித்தற்குச் சரியான முறையில் ஒருவன் முயலவில்லையானல் பின்பு பலர் நின்று முயன்ருலும் அஃது உருக்கொள்ளாது ஒட்டைவிழும் என்பார் "ஆற்றின் வருந்தா வருத்தம் போற்றினும் பொத்துப்படும்" என்ருர்.

குறியான உபாயங்களைக்கொண்டு செய்பவன் காரியமே சரியாக நிறைவேறும் என்பது கருத்து.

முடித்தற்குரிய முறையினையறியாமல் ஒரு கருமத்தைச் செய்யத்தொடங்கினால் அவனுக்குத் துணைவர் பலர் நின்றாலும் கேடு வரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மன்மதன்பால் உணரப்படும்.

## கதை

மன்மதன் என்பவன் திருமாலினுடைய அருமைத்திருமகன். அழகுக்கு இவன் அதிதேவதை. உலகில் அழகு அமைந்தவர்களைக் கவிகள் புகழ விரும்பின் இவனை உவமையாக்கியே புகலுவார். உள்ளத்தில் களிப்பூட்டி உயிர்களுக்குக் காம இச்சையை விளைத்து இவன் உலகை விருத்திசெய்வான். இவன் தேவி பெயர் இரதி. கரும்பு வில்லாகவும், சுரும்பு நாணாகவும், தாமரை அசோகம், சூதம், முல்லை, நீலம் என்னும் ஐவகை மலர்களும் அம்புகளாகவும், தென்றல் தேராகவும், பெண்கள் படைகளாகவும் தனக்கு அமையப்பெற்றவன். இவற்றால் சுந்தர ஞானியர், வீரசூரர்களை எல்லாம் இவன் இமைப்பில் குறும்புசெய்வான். மிக்க துடுக்குள்ளவன். பொறிகளை அடக்கி ஒருவன் அருந்தவம்செய்யப்புகின் உடனே இவன் அவனுளம் புகுந்து தன் குறும்பினைச்செய்வான்.

தாதவிழ்பூங் குழற்கனிவாய்த் தத்தைமொழி முத்துநகைத்
தையலார்மேல்
காதலுறப் புரிசெயலே என்வடிவாய் அவரவர்தங்
கருத்துட்டோன்றி
ஏதம்விளைக்குமென்றால் இரதிபால் எனதுசின்னத்
தியல்பால் என்றும்
ஆதரவுற் றின்பமென்னும் அவ்வலையில் எவ்வுலகோர்
அகப்படாரோ. (1)

ஓத்தேறும் உருவம்இல்லாப் பிரமம்ஒன்று மேயொழிய
உருவமுள்ளார்
எத்தேவ ராயினுமோர் பூங்கணையால் தம்போதம்
எல்லாம் நீக்கி
மதந்தேறி உடைதயிர்போல் மனஞ்சுழன்று செயன்மறந்து
மடவார் ஆசைப்
பித்தேறி இதமுரைத்துப் பேதையர்க்கும் பேதையராய்ப்
பின்செல்வாரால். (2)

செங்குமுத வாய் அதரச் சேயிழையார் நேயம்எவர்
இறம்ப வல்லார்
அங்கவர்தம் பார்வையினால் யார்க்குமனங் கரைந்துருகா
ததுவும் அன்றி
இங்கெனது பேர்ஞாலத் தெவ்வளவுண் டவ்வளவும்
எவரேமாயக்
கங்குல்விடிந் திருள்கழித்துக் கண்ணும்விழித் துணர்விதென்று
காணவல்லார். (மெய்ஞ்ஞானவிளக்கம்) (3)

இங்ஙனம் தன் திறமையைக் குறித்துப் பெருமை பாராட்டி எவரிடமும் காட்டும் இயல்பினையுடையவன். சனகாதி முனிவர்கட்கு உபதேசம்செய்துவிட்டுத் தனியாக யோகத்திலிருக்கும் பரமனை உலக விருத்தியின் பொருட்டு அமரரனைவரும் எழுப்ப விரும்பினர். அதற்கு இவனே உரியவன் என்று இசைத்து விடுத்தார். இவனும் இசைந்து சென்று இறைவனை அணுகினன். அனைவரும் புடைநின்று இவனைக் காத்தார். எழுந்தருளும்படி இவன் குழைந்து வேண்டாமல் தன் கணையை முதல்வன்மேல் இழுத்து எவினன். அது விரைந்துபாய அவர் விழித்து நோக்கினர். உடனே இவன் வெந்து மாய்ந்தான். கருதிய நன்மை தொலைந்து கருதாத தீமை உளதாயதைக்கண்டு இவன் தேவி கலங்கி நொந்தாள். முறையான உபாயத்தால் முயலாமையால் அயன் முதலாகப் பலர் நின்று போற்றியும் அம்முயற்சி பிழைபட்டழிந்தது. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர் நின்று போற்றினும் பொத்துப்

படும் என்பதை அன்று எல்லாரும் ஒத்துணர்ந்துகொண்டார். பின்பு முறையோடு போற்றி இறைவனருள் பெற்றார். இரதியும் முயன்றதால் மதனும் எழுந்தான். அதுமுதல் உருவிலி எனவும் அநங்கன் எனவும் மதன் உரைக்கப்பெற்றான். விரிவைக்கந்த புராணத்தில் காண்க.

முறையில்லாத முயற்சி வறிதே கெடும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

469 அன்று தனதனன்றே ஆற்றினான் பின்னதனால்
குன்றினான் என்னே குமரேசா—குன்றாது
நன்றாற்ற லுள்ளும் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை. (கூ)

இ—ள்.

குமரேசா! இராவணன்பால் நன்றான உபாயத்தைச் செய்திருந்தும் குபேரன் ஏன் அதனால் குன்றினான் எனின், அவரவர் பண்பு அறிந்து ஆற்றாக்கடை, நன்று ஆற்றல் உள்ளும் தவறு உண்டு என்க.

நன்று ஆற்றல் உள்ளும்—நல்ல உபாயங்களைச் செய்வதன் கண்ணும். உம்மை சிறப்பை உணர்த்திற்று. தவறு—குற்றம், பிழை. ஆற்றாக்கடை—செய்யாதவிடத்து.

அவரவர் என்றது பலவகை நிலையினர் உளராதல் கருதி.

மேல், முறையோடு முயலாத முயற்சி வறிதே கெடும் என்றார்; இதில், இனிபதாயினும் இனம் அறிந்தே அதனைச்செய்ய வேண்டும் என்றார்.

பிறரிடத்து நல்ல உபாயங்களைச் செய்வதன்கண்ணும் தனக்குக் குற்றமுண்டாம் அவரவர்களுடைய குணங்களை ஆராய்ந்தறிந்து அவற்றிற்கு இயைய அரசன் செய்யாவிடின் என்பதாம்.

இனியன உதவல், இன்சொல் இசைத்தல் முதலிய நலங்களேயாயினும் பெறுவாரது இயல்பினை அறியாது செய்யின் அத

ஞல் பிழையே விளையும் என்பார் "நன்று ஆற்றல் உள்ளும் தவறு உண்டு என்றார்".

அல்லாத மாந்தர்க்கு அறமும் கூற்றமாகும் ஆதலால் தான் செய்வது நல்லதேயாயினும் படுவாதது பண்பினை அறிந்தே அதனை ஆற்றவேண்டும் என்பதும், அல்லாவிடின் அதனால் ஒருவனுக்கு அல்லலே மிகும் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை குபேரன்பால் உணரப்படும்.

கதை.

குபேரன் என்பவன் விச்சிரவசு என்னும் முனிவருடைய புதல்வன். தாய் பெயர் எழிலினை. இவன் வடதிசைக்கு உரியவன். பருவம் நிரம்பு முன்னரே அரிய தவத்தைச் செய்தான். அதனால் இயக்கர் குலத்துக்குந் தலைவனுயினன். இவன் சித்திரரேகை என்னும் உத்தமியை மணந்து அளகையிலிருந்து அரசுபுரிந்து நளகூபரன் என்னும் புதல்வனைப் பெற்றான். சங்கநிதி, பதுமநிதி, முதலிய உயர்நிதிகளுக்கெல்லாம் இவன் அதிபதியாவன். தனதன், மாநகதன், இருநிதிக் கிழவன் அளகையாளி முதலிய பல ஏதுப் பெயர்களை இவன் எய்தியுள்ளான். பசிய உருவினன். இனிய மொழியினன். நிறையும் நீதியும் இறை வழுவாதவன். அதனால் இறைவனுக்கும் இவன் இசைந்த தோழனுய் இசைபெற்றிருந்தான். இவன் இங்ஙனம் இருக்குங்கால் இராவணன் அமரர் பலரையும் வென்று இவனது அளகைக்கும் வந்தான். அழகிய சோலைகளை அழித்தான். அதனையும் அழிக்க முயன்றான். தனக்கு ஒரு வகையில் அவன் தம்பியாதலால் அமர் புரியாது அகலுமாறு பல அரிய பொருள்களையுதவி இனிய மொழிகளை இசைத்துத்தனது உரிமையையும் ஓதிவரும்படி அவன்பால் ஒரு தூதுவனை விடுத்தான். அவன் சென்றான். அவனைக்கண்டு பணிந்தான். கையுறைவைத்துக் கனிந்து முன் நின்றான்.

மூத்துளோர்கள்சொல் முன்பின்னு பின்பினி தென்னும்
வார்த்தை யுண்டது மனத்தினிற்கொண்டு யானுரைப்ப
வார்த்தையாகுமீ தென் றுகொண் டறம்வழுவாமல்
பார்த்துச் செய்வசெய் பழிபடுகாரியம் செய்யேல்.

உம்பர்வானவர் ஆதியர் உனக்கிடைத் தலகில்
நம்பமின்றியே தளர்ந்திடுந் தன்மையுங்கேட்டேன்
வம்புசேர் பொழில் வந்ததும் மடித்ததுங்கண்டேன்
தம்பியாகில் இத்தன்மை செய்யாதொழி தக்கோய்.

என்று குபேரன் ஓதிவிடுத்த இந்நீதி மொழிகளைத் தூதுவன் அவன்பால் ஓதினான். இவற்றை அவன் கேட்டான். அறிவிற் சிறந்த தனக்கும் ஒருவன் அறிவுறுத்த வந்தானே என்று அழன்று சினந்தான். தன் இடையிலிருந்த வடி வாளை உருவினான்.

ஆசில்லாதரன் ஒப்பவன் அளகையிலவனும்
ஈசன் தோளனும் அவையெலாம் என்முனஞ்சார்ந்து
பேசும் தூதனார் பெறுகென இவையென வாளால்
வீசினான் அவன் இருதுணியாக மண்வீழ.

இவ்வனம் துணிபட வீசிய அக்கொடியவன் முன்னையினுஞ் சினந்து தனது பொருபடைகளை அளகைக்குள் ஏவினான். அழித்துக்கொள்ளைசெய்து அகன்று போயினான். நல்ல உபாயங்களைக் குபேரன் நயந்து செய்தும், அவற்றால் பொல்லாங்கே மிகுந்து அல்லல் அடைந்தான். அவரவர் பண்பினை அறிந்து ஆற்றுக்கடை, நன்று ஆற்றலுள்ளும் தவறு உண்டு என்பதை உலகம் இவன்பால் அன்று உணர்ந்தது. விரிவை உத்தரகாண்டத்தில் காண்க.

முன்னொரு காலத்தில் தூக்கணாங்குருவி ஒன்று தன் குஞ்சுகளோடு தான் கட்டிய ஒரு மரக்கூட்டில் இனிதாக வாழ்ந்திருந்தது. ஒருநாள் பெருமழை பெய்தது. அதனால் நனைந்து மெலிந்த வானரம் ஒன்று அம்மரத்தின் அடியில்வந்து ஒடுங்கிநின்றது. அதனை மேலிருந்த அப்பறவை கண்டது. பரிவுகொண்டது. கூடொன்று கட்டி வசிக்கும்படி அக்குரங்குக்கு நீதி கூறியது. குருவியுரை குரங்குக்கு ஏற்காமல் உடனே தாவி அக் கூட்டைப் பிடுங்கி எறிந்தது. பண்பு அறிந்து ஆற்றாமையால் குருவி நன்று ஆற்றியும் அது குன்றநேர்ந்தது.

வானரம் மழைதனில் நனையக் தூக்கணாம்
தானொரு நெறிசொல்லத் தாண்டிப் பிய்த்ததே
ஞானமும் கல்வியும் நவின்ற நூல்களும்
ஈனருக்குரைத்திடில் இடராகுமே. (விவேகசிந்தாமணி)

இது, மேற்குறித்த கதையை விளக்கி நிற்கின்றது. தெரிந்து செயல் வகைக்குப் பொருந்தியுள்ளதாதலால் இதுவும் ஈண்டுப் பொருத்தப்பட்டது.

நல்லதாயினும் பிறரது பண்பினை அறிந்து செய்யாவிடின் அது பாழாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

[வைக்
470 தெள்ளுபுகழ்ச் சாத்தகியேன் செய்யகண்ணன் செய்வகை
கொள்ளா திகழ்ந்தான் குமரேசா—தள்ளியென்றும்
எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு. (ம)

இ—ள்.

குமரேசா! கண்ணன் எண்ணிச் செய்த உபாயத்தைச் சாத்தகி ஏன் எள்ளி உரைத்தான் எனின், தம்மொடு கொள்ளாதன உலகு கொள்ளாது; ஆகலான் எள்ளாதன எண்ணிச் செயல் வேண்டும் என்க.

எள்ளாத—இகழப்படாத காரியங்களை; இஃது எள்ளுதல் என்பதன் எதிர்மறையான வினையால் இயைந்த பெயர்.

எள்ளுதல்—இகழ்தல், தள்ளுதல். தம் என்றது ஆகுபெயராய் நின்று அவரது நிலைமையைக் குறித்தது.

தம் ஒடு கொள்ளாத—தமது நிலைமையோடு பொருந்தாத வகைகளை.

இடம் பொருள் ஏவல் முதலியவற்றில் வலியராயிருப்போர் அவற்றில் மெலியார்க்குரிய வகைகளைச் செய்தலும், மெலியவராகி

ஞோர் வலியார்போலச் செய்யமுயலுதலும், அரசர்க்கு இழிவாகு மாதலால் தமது நிலைமையோடு பொருந்திய செயல்களையே அவர் தெரிந்து செய்யவேண்டுமெனக.

தம் நிலைமையோடு பொருந்தாத செயல்களை அரசர் செய்வாராயின், உலகம் அவரை மதியாது; ஆகலால் அஃது இகழாத வகைகளை அவர் எண்ணிச் செய்யவேண்டும் என்பதாம்.

தனது நிலைமைக்குப் பொருந்தாத செயல்களை ஒருவன் செய்வனாயின் உலகத்தாரால் அவன் பழிக்கப்படுவான் என்பது கருத்து.

அரசர்க்கு இசையுமாறு இதனை அமைத்து நிற்பினும் பிறரும் தத்தம் நிலைமைக்கு இயைபுமாற்றை இதில் நேர்ந்துகொள்க. தாம் வலியராயிருந்தும் மெலியார்போல எளிய உபாயங்களைப் பிறர்மாட்டுச் செய்ய விரும்பின் உலகம் அரசரை அறிவேர் வைது வெறுப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாத்தகிபால் உணரப்படும்.

## கதை.

சாத்தகி என்பவன் யதுகுல திலகனுர் வசுதேவருக்கு ஒருவகையில தம்பியுமான சத்திபகனுடைய புதல்வன். அருந்திறனும் பெருங்குணங்களும் இவன் அமையப்பெற்றவன. இராமனுக்கு இலக்குவன்போலக் கண்ணனுக்கு இவன் அமைந்திருந்தான். விசயனிடத்தில் வில்வித்தையை இவன் இசையுறக் கற்றன். அதனுல் அவன்பால் பேரன்புகொண்டான். இவனது உண்மையையும், திண்மையையும், ஒண்மையையும் நினைந்து அவனும் இவன்பால் உவகைகொண்டிருந்தான். பாண்டவர்கள், வனவாசம் முடித்து வந்தபின்பு துரியோதனனிடம் போய் நாடு வேண்டிவரும்படி கண்ணனைத் தூதுவிடுக்கத்துணிந்தார். கண்ணனும் இசைந்தான். உடன்பிறந்தவன்போல் உடனிருந்த சாத்தகி அன்று உடன்று எழுந்தான். வன்மையும் மேன்மையும் வாய்ந்திருந்தும் அப்புன்மையாளன்பால் இரவலர்போல் இழிந்துசென்று உங்க

ளுரிமையைப்பெற விரும்புகின்றீர்களோ என்று அவரை எதிர்ந்து நினைந்தான். நும் நிலைமையோடு பொருந்தாத செயலினை நீவிர் செய்யத் துணிந்தீர், இதனை உலகம் கொள்ளாது என்று தன் உள்ளங்கனன்றான். திண்மையும் வீரமும் இல்லாத கண்ணன் செய்த சூழ்ச்சியோ! இது என்று தன் அண்ணனையும் வைதான். அரசன் தெரிந்து செய்யவேண்டியவகைகளை இவன் அறிந்து சொன்னதை மகிழ்ந்து கண்ணன் இவனை அணைத்துப் போற்றி மேல் நிகழ இருக்கும் உண்மையை உணர்த்தி ஆற்றினான். ஆயினும், எள்ளாதன அரசர் எண்ணிச் செய்யவேண்டும்; தம்மோடு கொள்ளாதன உலகம் கொள்ளாது என்பதை இவன் கொண்டு உணர்த்தினான். இதனைப் பாரதத்தில் காண்க.

தண்டிருந்த திவன்கரத்தில் தனுவிருந்த தவன்கரத்தில்
வண்டிருந்த பூங்குழன்மேல் மாசிருந்ததென இருந்தாள்
கண்டிருந்தீர் எல்லீரும் கருதலர்பால் ஊர்வேண்டி
உண்டிருந்து வாழ்வதற்கே உரைக்கின்றீர் உரையீரே. (1)

சண்டமுகில் உருமனைய சராசந்தன் தனக்கஞ்சி
கண்டவரை அரணாக வடமதுரை கைவிட்ட
திண்டிறன்மா தவன்மதியோ திகழ்தருமன் தன்மதியோ
பண்டுமவர் கருத்தறிந்து பார்போய் வேண்டுவதென்றான். (2)

இவை சாத்தகி சாற்றியன. இவற்றால் மேற்குறித்த உண்மை இனிது புலனும்.

தனது நிலைமையோடு பொருந்திய செயல்களையே ஒருவன் தெரிந்து செய்யவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

வலியாரான காலத்து வழங்கலாதி மூன்றனையும்
மெலியாரிடத்துச் செய்திடலும் மெலியாரான காலத்து
வலியாரிடத்தில் ஒருத்தலையும் வகுக்கின் வேந்தர்க் கவையமைந்தா
கலிவாம் அதனால் அவரவர்பால் நடத்துமுறைதேர்ந்தியற்றிடுக. (1)

வலியேகாலம் வினையிவற்றால் மாற்றான் தனக்கு முனக்குமுள
பலவாநிலையும் வினைதொடங்கும் பண்பும்அதற்காம இடையூறும்
விலகாதநனை விலக்குவதும் வெல்லுமாறும் வென்றதனுல்
உலவாப்பயனும் முதலனைத்தும் ஓர்ந்துதெளிந்தே வினைசெய்க(2)
(விநாயக புராணம்)

இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.

செலவு வரவுகளையும் ஊதியத்தையும் முதலில் ஆராய்ந்தே ஒருவன் முயலவேண்டும். தாம் செய்யத்தக்க காரியத்தை அறிந்தவரோடு ஆராய்ந்துசெய்வார்க்கு அரிய பொருள்களெல்லாம் எளிதில் உளவாம். எய்தும் ஊதியத்தைக்கருதித் தன் கைமுதலை இழக்கின்ற செயலை அறிவுடையார் செய்யார். ஆராய்ந்து தெளியாத காரியத்தை அறிவுடையார் செய்யத் துணியார். தெளியாது துணியின் அவர் அவமே கெடுவார். தாம் செய்யத்தகாத வினைகளைச் செய்வோரும், செய்தற்குரியவற்றைச் செய்யாதுவிடுவோரும், கெடுவார். முடிக்கும் உபாயங்களை எண்ணுமல் ஒரு கருமத்தைச் செய்யத்துணிவோர் பின்பு இழுக்கே அடைவார். முறையான உபாயங்களைத் தெரியாது முயல்பவன் வறிதே கெடுவான். நல்லது ஆயினும் பிறர் பண்பு அறிந்து செய்யாவிடின் அதனுல் தீமையே உண்டாம். தன் நிலைமையோடு பொருந்திய செயலையே ஒருவன் தெரிந்துசெய்யவேண்டும். அங்ஙனம் செய்யாவிடின் அவனை உலகம் இகழும்.

47–வது தெரிந்து செயல் வகை முற்றிற்று.

---

## சஅ-ம் அதிகாரம் வலியறிதல்.

அஃதாவது தான் செய்யக்கருதிய வினையின் வலியையும் தன் வலியையும் துணை வலியையும் அரசன் ஆராய்ந்தறிதல். அறிவுடையாரோடு ஆராய்ந்து தெளிந்து வினைகளைச்செய்யும் திறமுடையார்க்கே இவ் அறிவமைதி இனிது அமையுமாதலால் அதன் பின் இது வைக்கப்பட்டது.

471 அன்றிலங்கைக் கோன்வலியை ஆய்ந் தனுமான் இன்றுபோர்
குன்றுமென்றேன் போனான் குமரேசா—நின்ற
வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல். (க)

இ—ள்.

குமரேசா! இராவணனுடைய வலியினைச் சீர் தூக்கி அறிந்து ஏன் போர் செய்யாமல் அனுமான் போனான் எனின், வினை வலியும், தன் வலியும், மாற்றான் வலியும், துணை வலியும், தூக்கிச் செயல் வேண்டும் என்க.

வினை, கருமம், காரியம், தொழில், என்பன இங்கு ஒரு பொருட் சொற்கள். துணை என்றது உதவியாய் நிற்கும் துணைவரை. மாற்றான்—பகைவன். தூக்கிச் செயல்—ஆராய்ந்து செய்க. தூக்கு என்னும் வினைப் பெயர் நிறுத்து அறிதலையும், ஆராய்தலையும் உணர்த்திவரும். தூக்கென்ப பாட்டும் கூத்தும் துலாமும் ஆராய்வும் ஆகும் என்பது நிகண்டு. ஆராயாது செய்யின் இழிவும் அழிவும் எய்திவிடும் ஆதலால் "தூக்கிச் செயல்" என்றார். புலவர் புலக் கோலால் தூக்க என்ற பரிபாடலையும் நோக்குக.

தற்றூக்கித் தன்துணையும் தூக்கிப் பயன்தூக்கி
அற்றது கொள்க மதிவல்லார்—அற்றதன்றி
யாதானும் ஒன்றுகொண் டியாதானும் செய்தக்கால்
யாதானும் ஆகி விடும். என்றது பழமொழி.

இதனை ஈண்டு உளங்கொள்ளவேண்டும்.

தான் செய்யக் கருதிய வினையினது வலியையும் அதனைச் செய்துமுடிக்கும் தனது வலியையும், அதற்கு மாறெண்ணும் பகைவனது வலியையும், இருவர்க்கும் துணையாவார் வலியையும்

ஆராய்ந் தறிந்தே அரசன் அவ் வினையைச் செய்யவேண்டும் என்பதாம்.

வினைவலி முதலியவற்றை அளந்தறிந்தே அரசன் ஒரு காரியத்தைச் செய்யவேண்டும் என்பது கருத்து.

தன்வலியையும், மாற்றான் வலியையுஞ் சீர்தூக்கி அறிந்தே அறிவுடையார் வினைபுரிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அனுமானால் உணரப்படும்.

## கதை.

அனுமான் இராம தூதனாய் இலங்கையுட் புகுந்து சீதையை அரிதிற் கண்டு சம்புமாலி பஞ்ச சேனாதிபதி முதலிய அரக்கர் பலரையும் வென்று, அக்கனைக் கொன்று, முடிவில் இந்திரசித்தின் பாசத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு இராவணனைக் கண்டான். பெருஞ் சினங் கொண்டான். உடனே அவன்மேற் பாய்ந்து இவன் அமர் செய்யத் துணிந்தான். துணை வலி முதலிய அவனது நிலைமைகளையும் தனது தனிமையையும் சீர்தூக்கி நோக்கினான். போர்செயல் தீதென்று தெளிந்தான். அதனை ஒழித்துப் பின் ஆவன செய்தான். அறிவுடன் மீண்டான். வினைவலியும், தன் வலியும், மாற்றான் வலியும், துணை வலியும் தூக்கி நோக்கியே அறிவுடையார் தமது வினையைச் செய்வர் என்பதை அனுமான் அன்று விளக்கிக் காட்டினான். விரிவைச் சுந்தர காண்டத்தில் காண்க.

கொல்லலாம் வலத்தனும் அல்லன் கொற்றமும்
வெல்லலாந் தரத்தனும் அல்லன் மேலைநாள்
அல்லெலாந் திரண்டன நிறத்தன் ஆற்றலை
வெல்லலாம் இராமனால் பிறரும் வெல்வரோ. (1)

என்னையும் வெலற்கரி திவனுக் கீண்டிவன்
தன்னையும் வெலற்கரி தெனக்குந் தாக்கினால்
அன்னவே காலங்கள் கழியும் ஆதலால்
துன்னருஞ் செருத்தொழில் தொடங்கல் தூயதோ. (2)

என்றாங்கி எயிறாகடித் திருசரனும் பிசைந்தெழுந்து
நின்றாங்கி உணர்ந்துரைப்பான் நேமியோன் பணியன்றால்
ஒன்றாங்கி ஒன்றிழைத்தல் உணர்வுடைமைக் குரித்தன்றால்
பின்றாங்கின் இதுசாலப் பிழையாகும் மனப் பெயர்ந்தான்.
(சுந்தரகாண்டம்) (3)

இவற்றால் மேற்குறித்த வுண்மை இனிது தெளியப்படும்.

தனது வலி முதலியவற்றை ஆராய்ந் தறிந்தே அரசன் வினை செய்ய வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

472 சென்றான் இராமனுடன் சீர் அறிந்தான் பானுமகன்
குன்றாதேன் வென்றான் குமரேசா—நன்றாக
ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில். (உ)

இ—ள்.

குமரேசா! சீர் அறிந்து இராமனுடன் சென்ற சுக்கிரீவன் ஏன் போர் அமைந்து வென்றான் எனின், ஒல்வது அறிவது அறிந்து, அதன்கண் தங்கிச் செல்வார்க்குச் செல்லாதது இல்லை என்க.

ஒல்வதையும் அறிவதையும் அறிந்து என ஒட்டுக. ஒல்வது என்றது பொருந்தும் வினையை: இஃது ஒல்லுதல் என்பதன் அடியாகப் பிறந்து இங்கு உற்ற பொருளை உணர்த்திநின்றது ஒல்லுதல்—பொருந்துதல், இணங்குதல், இயலுதல். அறிவது என்றது ஒல்லும் வினைக்கு உரியதாக அறியவேண்டிய துணையின் வலிமை.

அதன்கண் தங்கி—அவ் அறிவின் கண்ணேயே நிலையாய் நின்று; என்றது உள்ளியதையே வழுவாமல் உள்ளி என்றபடி. மேல், வினைவலிமுதலியவற்றை ஆராய்ந்தறிந்தே அரசன் வினைசெய்ய வேண்டும் என்றார்; இதில், அங்ஙனம் அறிந்துசெய்வார்க்கு முடியாத காரியம் யாதும் இல்லை என்றார்.

தமது நிலைமைக்குப் பொருந்தும் வினையையும் அதற்கு உரிமையாக அறியவேண்டியவைதையும் அறிந்து அதன்கண் வழுவாமல் அமர்ந்து செல்லும் அரசர்க்கு முடியாத பொருள் ஒன்றும் இல்லை என்பதாம்.

தனக்கு உதவிசெய்ய நிற்கும் துணையின் வலிமைத் தூக்கியறிந்து ஒல்லும் வினைமேல் ஊக்கிச்செல்லும் அரசனுக்கு எல்லாம் இனிது முடியும் என்பது கருத்து. இவ்வுண்மை சுக்கிரீவன்பால் உணரப்படும்.

## கதை.

சுக்கிரீவன் நெடுங்காலமாக வாலிக்குப் பயந்து ஒதுங்கியிருந்தான். இருக்குங்கால் இடையே இராமனைக்கண்டு நட்புக்கொண்டான். அவர் உதவியால் தனது பகைவனைவென்றுவிடலாம் என்று துணிந்தான். அனுமான் முதலானவரோடு ஒல்வதை அறிந்து உடனே சென்றான். செல்லுங்கால் தனக்குத் துணையாய் வருகின்ற இரகுவீரன் வலியைச் சுக்கிரீவன் அறிய விரும்பினான். ஆயினும் அதனை வெளிப்படையாக உரைக்க அஞ்சினான். அக்குறிப்பை அனுமான் உணர்ந்து இடைவழியில் நிற்கின்ற பெரிய மாராமரங்கள் ஏழையும் ஒருகணையால் அவ்வீரன் எய்யக்காண்டி என்று இவனைச் செய்யத் தூண்டினான். இவனும் தன் உள்ளக் கருத்தை அவ்வள்ளல்பால் வணங்கி உரைத்தான். அவர் புன்னகைசெய்து இவன் எண்ணிபபடியே ஒரு கணையை எய்து காட்டினார். அது,

> ஏழுமாமரம் உருவிக்கீழுலகமென் றிசைக்கும்
> ஏழுமுடிபுக் குருவிப்பின் னுடனடுத் தியன்ற
> ஏழிலாமையால் மீண்டது இராகவன் பகழி
> ஏழுகண்டபின் உருவுமால் ஒழிவதன் றின்னும்.

என்றபடி ஏகின்றது. இவன் கண்டான். தனக்கு வாய்த்த துணையின் வலியை நினைந்து பெருமகிழ்வுகொண்டு துணிவோடு போர்மேற்சென்று வாலியை வென்று பேரரசை அடைந்தான். ஒல்வதையும் அறிவதையும் உணர்ந்து அதன்கண் உறைந்து செ

ல்வார்க்குச் செல்லாதது ஒன்றும் இல்லை என்பதை உலகம் இவ
ன்பால் உணர்ந்தது. விரிவைக் கிட்கிந்தா காண்டத்தில் காண்க.

பிறிதுமன்னவன் பெருவலி யாற்றலைப் பெரியோய்
அறிதிஎன்னினும் பொயமும் அலைதரு மரங்கள்
நெறியினின்றன ஏழினொன் றுருவ இக்கொடியோன்
பொறிகொள் வெஞ்சரம் போவதுகாணெனப் புகன்றான். (1)

நன்றுநன்றென நன்னெடுங் குன்றமும் நாளும்
தன்றுணைத்தனி மாருதித் தோளிணை தழுவிச்
சென்றுசெம்மலைக் குறுகியான் செப்புவ துளதால்
ஒன்றுனக்கென இராமனும் உரைத்தி யஃதென்றான். (2)

ஏகவேண்டும் இந்நெறியென இனிதுகொண்டேகி
மாகநீண்டன குறுகிட நிமிர்ந்தன மரங்கள்
ஆகவைந்தினோ டிரண்டினொன் றுருவநின் அம்பு
போகவேஎனதன் மனத்திடர் போமெனப் புகன்றான். (3)

துணைவலியைச் சுக்கிரீவன் நிலையறிந்த உண்மை இவற்றாற் புலனாதல் காண்க.

உறுதுணையோடு ஒல்லும் வினைமேற்செல்வார்க்கு எல்லாம் இனிதுமுடியும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

473 திண்டோட் சலந்தரனும் தென்னிலங்கை மன்னவனும்
கொண்டிடைவேன் கொந்தார குமரேசா—கொண்ட
உடைத்தம் வலியறியார் ஊக்கத்தி னூக்கி
இடைக்கண் முரிந்தார் பலர். (ந)

இ—ள்.

குமரேசா! சலந்தரனும், இராவணனும் மனத் துணிவோடு வினைகளைத் தொடங்கி ஏன் இடையே மடிந்து உடைந்தார் எனின், உடைத்தம் வலி அறியார் ஊக்கத்தின் ஊக்கி இடைக்கண் முரிந்தார் பலர் என்க.

உடைத்தம் வலி—வினை செய்தற்கு உரிமையுடைய தமது வலியை. ஊருள் என்பது உள்ளூர் என நின்றாற்போல தமமுடை என்பது உடைத்தம் என உற்றுநின்றதெனினும் அமையும். ஊக்கத்தின் ஊக்கி—மனத்துணிவால் தொடங்கி. இடைக்கண் முரிந்தார்—இடையே கெட்டார். முரிதல் என்பது ஒடிதல், கெடுதல், தோற்றல்களை உணர்த்திவரும்.

மேல், வலியறிந்து செல்வார்க்கு எல்லாம் இனிதுமுடியும் என்றார்; இதில், அங்ஙனம் அறியாது செல்வார் எதையும் முடியாமல் இடையே கெடுவார் என்றார்.

தம் வலியறியாமல் சென்று வினை முடியாமல் இடையே யழிந்தவர் எவரேனும் இவ் உலகில் உளரா? என்பாரை நோக்கி இயம்பியதாக இது அமைந்துள்ளமை காண்க.

வினைகளைச் செய்தற்குரிய தமது வலியின் அளவை அறியாமல் உள்ளக் கிளர்ச்சியால ஒரு காரியத்தைத் தொடங்கிப் பின் புமுடிக்கலாற்றாது இடையே முரிந்து ஒழிந்த அரசர் பலர் இவ் வுலகில் உளர் என்பதாம்.

வலிமுதலிய தமது நிலைமைகளையறியாமல் உற்சாகத்தினால் வினைகளைச் செய்ய ஒருவன் துணியலாகாதென்பது கருத்து.

தமக்கு உள்ள வலிமையை உணராமல் வினை செய்யத் துணிவோர் இடையே கெடுவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சலந்தரன்கண்ணும் இராவணன் பாலும் உணரப்படும்.

## கதை

சலந்தரன் என்பவன் ஓர் அசுர வீரன். இந்திரன் ஒரு முறை இறுமாப்போடு கைலைக்குச் சென்றான். அதனால் உருத்திரமூர்த்தி பூதவடிவினராய் அவனெதிரே தோன்றிச் சிறிது சினந்தார். அமரர் கோமான் அதனை அஞ்சி வணங்கினான். அச் சினம், அவனை அருள்செய்து விடுத்து ஒருருவாய்த் திரண்டுபோய்க் கடலில் விழுந்தது. உடனே ஓர் அழகிய குழந்தையாய் அது

துமைந்தெழுந்தது. கடலிறைவன் கண்டு காத்துவந்தான். பிரம ன்வந்து ஒருநாள் அக்குழவியை எடுத்தார். அவரது தழைத்த தாடியை அக்கொழுந்த பிள்ளை வளைத்துப் பிடித்தது. அவர் அசைத்து அலறினர். அது நகைத்து விடுத்தது. சலம் தரித்து இருந்ததினாலும், பிரமனுக்குச் சலத்தைத் தந்ததனாலும் சலந்த ரன என்று இவன் பெயர் கொண்டெழுந்தான் சலம்—சினம், நீர், துயரம். இவன் பின்பு பெருந்தவஞ்செய்து அசுரகுலத்துக் கெல்லாம் அரசனாகிப் பிருந்தை என்னும் கன்னியை மணந்து திருந்திய போகங்களைத் துய்த்துப் பெரும் புகழோடு சிறந்து வி ளங்கினன். அமரர்முதல் அனைவரையும் வென்றான். எவரும் தனக்கு நிகரில்லை என்று இறுமாப்புக்கொண்டான். கைலைநாய கனையும் கலக்கி வென்றுவிடவேண்டுமென்று கலங்காதெழுந்தா ன். கற்புக்கரசியாகிய தன் மனைவி தடுத்தும் இவன் கருதாமற் சென்றான். கைலையை அணுகினன். அம்முன்னவன் ஒரு மு னிவன்போல் இவன் முன்னே தோன்றி "நீ முன்னிவந்தது என் னே!" என்றார். உன்னிவந்ததை இவன் உரைத்து நின்றான். அவர் ஒரு துரும்பை வளைத்து நிலத்தில் அழுத்தி இதனை நீ எடு க்கவல்லையேல் அவரோடு அமர்தொடுக்க வல்லை என்றார். இவன் அதனைச் சிரித்து ஊதினன். அது சிறிதும் அசையவில்லை. இவ ன்சினந்து அசைத்தான். அவர்கனந்தானோ?வென்று நகைத்தார். தன ஊக்க மிகுதியால் உளைந்து தூக்கிக் கழுத்துவரையும் அத னை இழுத்துவந்தான். அதன் கனத்தை ஆற்றாது இடையே கை தளர்ந்தான். அதனால் இவன் கண்டம் துண்டுபட அது மண்டி வி ழுந்தது. இவனும் மாய்ந்து விழுந்தான். தன் வலியறியாது ஊக்கினன் இடையே அழிவடைவான் என்பதை உலகம் அன்று இவனால் உணர்ந்தது. விரிவை உருத்திர சங்கிதையில் காண்க.

## கதை 2.

இராவணன் திசைகள்தோறும் சென்று அனைவரையும் வென் று பெருங் களிப்போடு முடிவில் கைலையை அடைந்தான். தன் ஊக்க மிகுதியால் அதனையும் தூக்க உன்னினன். தான் உள்ளி

யன எல்லாம் கொள்ளென அருளிய அவ் வள்ளலையும் மதியாமல் அவ்வெள்ளிமலையை இவன் அள்ளியெடுத்தான். அவர் எள்ளியிதித்தார். இவன் இடையே சிக்கி உடல் நெரிந்தான். பின் இறங்கி யழுது அவரை ஏத்திக் துதித்தான். அவர் இரங்கியருள இவன் எழுந்து சென்றான். வலியறியாது ஊக்கியதால் இடையே இவன் மெலிவடைந்து நொந்தான். உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி இடைக்கண் முரிந்தார் பலர் என்பதற்கு இவனும், சலந்தரனும், இசைந்து நின்றார். விரிவை வரையெடுத்த படலத்தில் காண்க.

வலியறியாமற் செல்வோர் இடையே மெலிவடைந்து கெடுவார் எனபது இதனால் கூறப்பட்டது.

474 வென்றிவலன் தன்னை வியந்தெழுந்தான் ஏனுடனே
குன்றி அழிந்தான் குமரேசா—என்றும்
அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும். (௪)

இ—ள்.

குமரேசா! தன்னை வியந்து அளவறியாமல் எழுந்ததால் ஏன் வலன் உடனே அழிந்தான் எனின், அமைந்து ஆங்கு ஒழுகான் அளவு அறியான், தன்னை வியந்தான், விரைந்து கெடும் என்க.

அமைந்தாங்கு—தன் நிலைமைக்குத் தகுந்தபடி. ஒழுகான், அறியான், வியந்தான் கெடும் என்று விதந்து காண்க. மூன்றும் முனைந்துநின்றமையால் விரைந்து என்றார். வைப்பு முறையால் அவற்றின் வரன்முறையை யுணர்க. படர்க்கை யொருமையாதலால் வியந்தான் என்பதனோடு கெடும் என்னும் வினைமுற்று இயைந்து நின்றது. பலர்பாற் படர்க்கையிலும் முன்னிலை தன்மைகளிலும் அது நில்லாதென்க.

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில்
செல்லா தாகும் செய்யுமென் முற்றே. (நன்னூல்.)

தனது நிலைமைக்குத் தகுந்தபடி அமைந்து ஒழுகாதவனும், தன் வலி அளவை அறியாதவனும், தன்னையே வியந்து செருக்கும் அரசன், விரைவில் அழிவான் என்பதாம்.

எல்லாரினும் தன்னைச் சிறந்தவனாக மதித்துச் செருக்கித் திரியும் ஒருவனை அனைவரும் வெறுத்துப்பகைப்பர் ஆதலால் "வியந்தான் விரைந்து கெடும்" என்றார்.

அடக்கமுடையனாய் வலியறிந்து அமைந்தொழுகும் அரசனே நலிவின்றி வாழ்வான் என்பது கருத்து.

தன் வலியளவை அறியாமல் செருக்கித் திரிவோன் சீரிழந்து கெடுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது வலன் பால் உணரப்படும்.

கதை.

வலன் என்பவன் ஓர் அசுரவீரன். இவனது காலம் பல நூற்றாண்டுகட்கு முன்னராகும். இவன் உமாபதியை நோக்கி உயர்தவஞ்செய்து அரிய நலங்கள் பல அமையப்பெற்றான். பின்பு விசயசித்தி என்னும் அழகிய மங்கையை மணந்து வேண்டிய போகங்களை நுகர்ந்து இசையுடன் வாழ்ந்தான். நேரில் வந்து நின்றால் எவரும் இவனைப் போரில் வென்றுகொள்ளார். அளவிடலரிய தனது உடல் வலி முதலியவற்றை வியந்து எவரையும் இவன் மதியாதிருந்தான். அமரரனைவரையும் அடங்க வென்று எவரோடும் இவன் அமைவின்றி ஒழுகினான். இவனை வஞ்சனையால் வெல்லக்கருதி இந்திரன் ஒருநாள் இவன்பால் வந்தான். உன் தோள்வலியை வியந்தேன் ஆதலால் நீ விரும்பிய பரிசிலை மகிழ்ந்து தர விழைந்தேன் என்றான். அதனைக் கேட்டு இவன் மிகவும் நகைத்தான்.

ஈறிலான் அளித்தநல்ல வரமெனக் கிருக்கஇன்பால்
வேறுநான் பெறுவதுண்டோ வேண்டுவ துனக்கியாதென்பால்
கூறுநீ அதனையின்னே கொடுக்கலனாகில் உன்போல்
பாறுவீழ் களத்தில்தோற்ற பழிப்புகழ் பெறுவனென்றான்

இங்ஙனம் தன்னை வியந்து இவன் கூறியதை அவ்விந்திரன் கேட்டான். அமையாதவன் இன்று அடைந்தான் என்று அகமகிழ்ந்து யாகப்பசுவாக இவனை ஆக்கிக்கொண்டுபோய் அடக்கிக் கொன்றான். அமைந்து ஒழுகாமல் தன்னை வியந்தவன் விரைந்து கெடுவான் என்பதற்கு இவன் இடைந்து நின்றான். விரிவைத் திருவிளையாடலில் காண்க.

வலியறியாது வியந்து திரிபவன் விரைவில் அழிவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

475 பூசுரர்பெய் கைநீர்க்கும் போர்வலஞ்சேர் மந்தேகர்
கூசிநின்றார் என்னே குமரேசா — தூசனைய
பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின். (ரு)

இ—ள்.

குமரேசா! போர்வலி மிக்க மந்தேகரும் பூசுரர் பெய்த கைநீர் ஏற என் அஞ்சி உடைந்தார் எனின், பீலிபெய் சாகாடும் அச்சு இறும் அப்பண்டம் சால மிகுத்துப்பெயின் என்க.

பீலி — மயிலின் தோகை. சாகாடு — சகடம், வண்டி என இதுபொழுது இது வழங்கப்படுகின்றது. உவமை அதன் வன்மையை உணர்த்தியதோடு அதில் பெய்த பண்டத்தின் மென்மையையும் குறித்து நின்றது.

அச்சு — சகடத்தைத் தாங்க அடியிலமைத்திருக்கும் ஒரு தடி. இறும் என்னும் அச்சின் வினை அதன் முதலாகிய சகடத்தின்மேல் நின்றது.

சினைவினை சினையொடும் முதலொடும் செறியும். நன்னூல்.

மேல், தன்னை வியந்துகொண்டு பிறரெவரையும் மெலியரென்று கருதிப் பகைமைகொண்டவன் விரைவில் கெடுவான் என்றார்; அவன் மிக வலியனாயிருப்பின் எங்ஙனம் கெடுவான் என்பார்க்கு இஃது இயம்பியதென்க.

மயிலின் தோகைகளை ஏற்றிய வண்டியும் அச்சு ஒடியும் அப்பண்டத்தை அளவுக்கு மிஞ்சி அதிகமாக அதில் ஏற்றுவாரா யின் என்பதாம்.

தன்னை மிக்கவும் வலியன் என்று கருதிப் பலரோடும் ஒரு வன் பகைகொள்ளலாகாதென்பது கருத்து.

மெலியராயினும் பலர் கூடினால் வலியாரையும் அவர் வலி தொலைப்பர் என்பதை உணர்த்துதற்குப் பீலிபெய் சகடத்தை இங்குப் பெய்துரைத்தார். இங்ஙனம் வருவது அலங்காரவகை யில் ஒட்டணியாம். அஃதாவது தான் கருதியதொன்றைப் பிறி தொன்றினால் கவி புலப்படவைப்பது. இதனைப் பிறிது மொழி தல எனவும், உள்ளுறை உவமம் எனவும், நுவலா நுவற்சி என வும் புலவர் புகலுவர்.

கருதிய பொருடொகுத்து அதுபுலப் படுத்தற்
கொத்ததொன் றுரைப்பின் அஃதொட்டென மொழிப.
(தண்டியலங்காரம்.)

மிக வலியராயினும் பலரோடு பகைகொள்வார் கெடுவார் என்பது இதனால் கூறப்பட்டது. இவ்வுண்மை மந்தேகர்பால் உணரப்படும்.

கதை.

மந்தேகர் என்பவர் ஒருவகை அசுர கூட்டத்தார். தென் கிழக்குத்திசையில் மந்தேகம் என்னும் நகரில் இருப்போர். இவர் மிக்க கொடுஞ்செயலுடையவர். தம் வன்செயலுக்கு இரவொ ன்றே உரியதென்று கருதியிருந்தார். இவர் பிரமனை நோக்கி அருந்தவஞ்செய்து பெருந்திறலடைந்தார். இரவில் எங்குஞ் சென்று எண்ணியவண்ணம் இயற்றித் திரிந்தார். அதனால் நிசி சரர் என்னும் பெயரினை யெய்தினர். தமது வஞ்சச் செயலுக்குச் சூரியன் இடையூறாக இருக்கின்றான் என்று கருதி உதயகாலத் தில் அவன்மேல் போர்செய்ய எழுந்தார். அவ்வமையம் வேதியர் காயத்திரி மந்திரத்தை ஓதி ஆதவனை நோக்கி நீரை அள்ளித்

தாவினர். பல இடங்களில் இருந்தும் பல்லாயிரவர் வீசியதால் அதன் நிறைவலிக்கு அஞ்சி அவர் நீங்கிச்சென்றார். நீராயிருப்பினும் முறையோடு மறையவர் பலர் திரண்டு பெய்ததால் அவர் வலிபடங்கி நின்றார். மெலியராயினும் பலர் ஒருங்கு திரண்டால் வலியவரையும் அவர் வலியழிப்பர் என்பதை மந்தேகர் அறிந்து மறைந்தார். விரிவைப் பார்க்கவ புராணத்தில் காண்க.

மறையவர்பெய் கைநீரால் மந்தேகர் வலிதொலைந்தார்
முறையுடைய வானரங்கள் முன் பெய்த மலை நிரையால்
நிறைகடலும் மேடாகி நின்றதால் பலர் திரண்டால்
குறைவறு போர்வலியினரும் குன்றுவர்தம் பெருவலியே.

மெலியராயினும் பலர் திரண்டால் அவர் மிகவலியராவர்என்பது இதனால் கூறப்பட்டது.

---

476 நன்றறிந்த சம்பாதி நக்கீரர் ஊக்கியன்று
குன்றினர் என்னே குமரேசா — சென்று
நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். (௬)

இ—ள்.

குமரேசா! சம்பாதியும், நக்கீரரும், அளவிறந்து ஊக்கியதால் என் நிலை குலைந்து வீழ்ந்தார் எனின், நுனிக்கொம்பர் ஏறினார் அஃது இறந்து ஊக்கின் உயிர்க்கு இறுதியாகிவிடும் என்க.

ஊக்கின் ஆகிவிடும் என்று ஒட்டுக விடும்என்றது துணிவுணர்த்தி நின்றது.

நுனிக்கொம்பர்—மரக்கிளையின் நுனி. அஃது என்றது அவன் ஏறி நின்ற நுனியின் எல்லை. அஃது இறந்து ஊக்கின் —அவ் அளவைக்கடந்து செல்லத் துணியின். மேல், தான் வலியனாயினும் பலரோடும் ஒருவன் பகைக்கலாகாது என்றார். இதில், எல்லை கடந்து எதிலும் அவன்செல்லலாகாது என்றார்.

மரக்கிளையின் நுனியிலேறி நின்ற ஒருவன் அவ்வளவில் நில்லாமல் தன் ஊக்க மிகுதியால் மேலும் ஏறத்துணிவனாயின் அவன் உயிருக்கு அதனால் முடிவு உண்டாம் என்பதாம்.

தன் உள்ளக் கிளர்ச்சியால் எல்லைகடந்து வினைமேற் செல்லுவோன் இழிவடைந்து அழிவான் என்பதுகருத்து. இதுவும் மேற்குறித்த ஒட்டணியை ஒட்டி நிற்றல் காண்க.

தன் நிலையறியாது அளவு கடந்து ஒரு காரியத்தில் ஒருவன் செல்லுவானாயின் அதனால் அவனுக்கு அழிவுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சம்பாதியாலும், நக்கீரராலும் உணரப்படும்.

### கதை

சம்பாதி என்பவன் அருணன் புதல்வன். தாய் பெயர் சேதி. இவன் கழுகுகளுக்குத் தலைவன். பறவையின் உருவும், பல நூலறிவும், நன்குறப் பெற்றவன். நெடுந் தூரத்திலுள்ளதையும் திட்பமாகக் காணும் நுட்ப நோக்கினன். சுத்தவீரனாகிய சடாயுவுக்கு மூத்தவன். இவன் ஒருநாள் இந்திரபட்டினியைக் கண்டுவரவேண்டும் என்று காதல் கொண்டான். தன் தம்பியையும் உடனழைத்துக்கொண்டு பறந்தெழுந்தான். மேக மண்டலத்தை அடைந்தான். இவ்வுலகவாசிகள் அவ்வெல்லைக்குமேல் செல்லலாகாதென்பதை இவன் தெளிந்திருந்தும் தன் ஊக்கமிகுதியால் மேலுஞ்சென்றான். உடன்வந்த தம்பி உடல் தளர்ந்தான். அவனைத் தேற்றித் தன் நிழல் வழி வருமாறு செய்து இவன் மேலெழுந்து சென்றான். எல்லை கடந்து ஏறிவரும் இவனது வல்லூக்கத்தை எல்லோன் அறிந்து எதிர்ந்துநோக்கினான். அதனால் தன் சிறகுமுழுதும் எரிந்துகழிய மகேந்திரச் சாரலில் இவன் இழிந்து வீழ்ந்தான். தம்பி மறைந்துபோனான். வகையறியாது வரம்புகடந்து சென்றமையால் தன் உயிர்க்கு முடிவு வந்தது என்று இவன் அறிவுவந்து நொந்தான். ஒருவன் அளவிறந்து ஊக்கின் அஃது அவனுயிர்க்கு இறுதியாய் முடியும் என்பதை அனைவரும் இவன்பால் கண்டார். பின்பு சூரி

யனும், உலோக சாரங்கன் என்னும் முனிவருர், இவன்பால் இரங்கிச் சின்னுளில் அங்கு வந்து வானரர்கள் கூறும் இராமநாமத்தால் சிறைவளரும் என்று அருளியகன்றார். விரிவை இராமாயணத்தில் காண்க.

கற்றிலர் போலவுள்ளக் களிப்பினுல் அமரர்காப்பூ
டுற்றிடக் கருதிமீப்போய் ஆதபத் தனதுமேனி
முற்றழல் முருங்க மண்ணை முயங்கினே யினியென்சின்னுள்
மற்றுநின் உயிரையோம்பா திகழ்வது மாலேத்தன்றால்.

களித்தவர் கெடுதல்திண்ணம் சனகியைக் கபடன்வெளவி
ஒளித்தவாய் அருவியுற்ற வானரர் இராமநாமம்
விளித்திடச் சிறைவந்தோங்கும் வெவ்வுயிர்த் துயரலென்றான்
றளித்தனன் அதனுல்ஆவி ஆற்றினேன் ஆற்றல்மெய்ம்பீர்.

இவை, சீதையைத் தேடிவந்த வானரர்களிடம் சம்பாதி உரைத்தன. அளவறியாது சென்றதால் தான் நிலைகுலேந்து வீழ்ந்ததும், தன் உயிரை மாய்க்கத் துணிந்ததும், அவ்வமையம் உலோக சாரங்கன் என்னும் முனிவர் வந்து மேல்வருவதை உரைத்ததும், அதனுல் ஆவி தாங்கியிருந்ததும், அளவிறந்து ஊக்கின் உயிர்க்கு இறுதியாய் விடும் என்பதைச் சம்பாதி உணர்ந்து தெளிந்ததும் பிறவும் இவற்றால் தெளிவாம்.

## கதை 2.

மதுரையிலிருந்த வங்கிய சூடாமணிப்பாண்டியன் என்னும் அரசன் ஒருநாள் தனது மனைவியின் கூந்தலிலிருந்தெழுந்த புது மணத்தை இனிது நுகர்ந்தான். அந்நறுமணம் அதற்கு இயற்கையா? அல்லது செயற்கையா? என்று ஐயுற்றான். தன் ஐயம் தெளியுமாறு அதனை அறிந்து கவிசொல்வார்க்கு ஆயிரம்பொன் பரிசு தருவதாக உறுதிசெய்து வெளியில் உரைசெய்தான். அப்பொற்கிழியைப் பெற விரும்பிப் புலவர் பலர் கவிகள் புனைந்துவந்தார். புரவலனுக்கு ஒன்றும் பொருந்தவில்லை. தருமி என்னும் மறையவனெருவன் அதனைப்பெற விழைந்து இறைவனை நினைந்

து தொழுதான். அரசன் கருதியதைப் பரமன் ஒரு கவியில் அமைத்து அவன்முன் அருளினார். அதுவே இதனடியில் வருவது.

கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமஞ்செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ யறியும் பூவே. (குறுந்தொகை)

இறைவனருளிய இதனை அவன் எடுத்துச்சென்று சங்கம் புகுந்தான். புலவர் புலங்கொண்டு நோக்கினார். தன் கருத்து அதில் அமைந்துள்ளமையை அரசன கருதி மகிழ்ந்தான். தருமி பொன்பொதியை எடுக்கப் பொங்கி எழுந்தான். கவியில் குற்றமுள்ளது அதனைத் தொடாதே என்று கீரர் தடுத்தார். பாவம்! பார்ப்பான் வந்த வழியைப்பார்த்து மீண்டான். உடனே சோமசுந்தரப்பெருமான் ஒரு புலவன்போல் வடிவங்கொண்டு அங்கு வந்து என் கவிக்குக் குற்றம் கூறியவர் யார் என்று குணமுறக்கேட்டார் யானே கூறினேனென்று கீரர் நேரேவந்தார். அவர், என்ன குற்றம் என்றார். மகளிர் கூந்தலுக்குச் செயற்கை மணமேயன்றி இயற்கை மணம் இல்லை என்றார் புலவர். முதல்வர், பதுமினி என்னும் உத்தம சாதிப் பெண்ணுக்கு எப்படி என்றார். புலவர் அப்படித்தான் என்றார். தெய்வப் பெண்களுக்கோ? என்றார். இவர் அதுவும் அங்ஙனமே யாம் என்றார். நீ வழிபடுகின்ற உலகமாதாவாகிய உமாதேவியார் கூந்தல் எப்படி என்றார். எல்லாம் அப்படித்தானே என்று புலவர் வல்லுரையாடினார். பிடிவாதத்தை இவர் விடுமாறு கருதித் தமது நெற்றிக்கண்ணைச் சிறிது அவர் தெரித்துக் காட்டினார். அதற்கும் அஞ்சாமல் "ஐயா! உமது உடம்பெல்லாம் கண்ணாகக் காட்டினும் நும் கவியில் குற்றம் குற்றமே" என்று இவர் கூறி முன் நின்றார். இவரது மீறிய மனத்துணிவை நோக்கி அவர் சிறிது சீறினார். அதனால் கீரர் நிலைகுலைந்து வீழ்ந்தார். இறைவனருளால் பின்பு எழுந்துவந்தார். ஒருவன் அளவிறந்து ஊக்கின் அஃது அவன் உயிர் முடிவுக்கே ஏதுவாகும் என்பதை இவரும் அன்று உணர்த்தி நின்றார். விரிவைத் திருவிளையாடலில் காண்க.

வலியறியாது வரம்பு கடந்து செல்வோர்க்கு அழிவுண்டா கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

477 ஏனோ அளவறிந்தே யீந்தான் இளஞ்சென்னி
கோனா யிருந்தும் குமரேசா—தானாக
ஆற்றின் அளவறிந் தீக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி.

இ—ள். (எ)

குமரேசா! இளஞ்சென்னி பெருஞ்செல்வம் உடையனா யிருந்தும் ஏன் அளவறிந்தே ஈந்து வந்தான் எனின், ஆற்றின் அளவை அறிந்து ஈக; அது பொருள்போற்றி வழங்கும் நெறி என்க. இனி, ஆற்றின் ஈக என்று கொண்டு தனக்கு இயன்ற நெறியால் ஈக எனினுமாம்.

பொருளைப் போற்றி வாழும் வழி யாது! என்பாரை நோக்கி இயம்பியதாக இஃது அமைந்துள்ளமை காண்க.

மேல், தன் வலியளவறிந்தே வினைமேல் ஒருவன் செல்லவேண்டும் என்றார்; இதில், பொருளளவறிந்தே செலவிடவேண்டும் என்றார்.

தன் பொருளின் அளவையறிந்து ஒருவன் நெறியோடு ஈக; அதுவே அவன் பொருளைப் பேணி ஒழுகும் நெறியாகும் என்பதாம்.

வளங்குன்றாமல் மானமொடு வாழ்தற்கு ஆன உபாயத்தை அருளி உணர்த்திய அடிகளது பொருள் நயத்தை இதில் ஆய்ந்து காண்க.

அளவறிந்து செலவுசெய்யும் அறிவுடையாரே என்றும் திருவுடன் விளங்குவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இளஞ் சென்னிபால் உணரப்படும்.

கதை.

இளஞ்சென்னி என்பவன் உறையூரிலிருந்து அரசுபுரிந்த ஒரு சோழ மன்னன். அறிவினும் உருவினும் இவன் பெருமை

பெற்றவன். சிறந்த குணங்கள் பல நிறைந்து நின்றவன். அரசி யல் முறைகளை முழுதுந்தெரிந்தவன். எதையும் முன் எண்ணிச் செய்யும் நுண்ணுணர்வுடையவன். எவரையும் குறிப்பாலுணர்ந்து அவரது தகுதிக்குத்தக்கவாறே இவன் உதவிசெய்துவந்தான். வருங்கால் ஊன் பொதி பசுங்குடையார் என்னும் புலவரொருவர் வந்து இவன்பால் பெரும்பொருள் வேண்டினர். பலர்க்கும் உதவவேண்டி யிருத்தலின் சிறிதே கொடுத்தலமையும் என்று இவன் இயன்றதை இயம்பி அவர்பால் ஈந்தான். மணங்கமழ் உணவை எவர்க்கும் உவந்து உதவிவந்தான். பொருளையும் காத்து அருளையும் போற்றிவந்த இவனது அறிவின் திறத்தை அனைவரும் போற்றினர். வளவனாயினும் அளவறிந்து அளித்து உண் என்று ஔவை அருளிய அருமை மொழிக்கு இவன் முன் உரிமையாயிருந்தான். அதனால் நீங்காத திருவுடையனாய் இவன் நிலைத்து விளங்கினன். விரிவை மனு மரபில் காண்க.

வழிபடு வோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே
நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக வொறுத்தி
வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்
தண்டமும் தணிதிநீ பண்டையிற் பெரிதே
அமிழ்தட் டானாக் கமழ்குய் யடிசில்
வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை
மகளிர் மலைத்த லல்லது மள்ளர்
மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப
செய்திரங் காவினைச் சேண்விளங் கும்புகழ்
நெய்தலங் கானல் நெடியோய்
எய்தவந் தனம்யாம் ஏத்துகம் பலவே. புறநானூறு.

இஃது, இவனது குணஞ்செயல்களை வியந்து ஊன் பொதி பசுங்குடையார் உவந்து பாடியது. இதனால் இவன் அளவறிந்து ஈந்ததும், அறிவறிந்து தேர்ந்ததும், முறைபுரிந்து வாழ்ந்ததும், பிறவும் புலனும்.

பொருளின் அளவறிந்தே ஒருவன் வழங்கி வாழவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

478 கொண்ட வருவாய் குறுகியும் பூங்குன்றனார்
கொண்டிருந்தார் இன்பம் குமரேசா — மண்டிமேல்
ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை
போகா றகலாக் கடை. (அ)

இ — ள்.

குமரேசா! பொருள் வருவாய் சிறிதாயிருந்தும் பூங்குன்றனார் ஒரு கேடும் இன்றி என்றும் பெருமகிழ்வோடு வாழ்ந்தார் எனின், போகு ஆறு அகலாக்கடை, ஆகு ஆறு அளவு இட்டிது ஆயினும் கேடு இல்லை என்க.

ஆகு ஆறு — ஆகிவருகின்ற நெறி; என்றது பொருள் வருகின்றவழியை. ஆகு ஆறு போகு ஆறு என்றதனால் பொருள் என்பது தெளிய நின்றது. போகு ஆறு — பொருள் போகின்ற நெறி.

இட்டிது — சிறியது. இட்டு என்னும் சொல் சிறுமையையும் நுண்மையையும் உணர்த்திவரும்.

இட்டிடைப் பவளச்செவ்வாய்த் தத்தையும் இதனைக் கேட்டாள் எனவும், இனிச் சிறிதெழுந்து வீங்கியிட்டிடைகோறுநங்கள் எனக்கொறு கொறுப்பபோலும் இளமுலை எனவும், வருவனவற்றுள் இட்டு உணர்த்திநிற்கும் பொருளை உணர்க. இட்டிதென்றிசைத்து மன்னன் எழுந்தனன் என்பதுங் காண்க.

பொருள் வரும்நெறி சிறியதேயாயினும், செலவாகும் நெறிவிரியாதாயின் அதனால் கேடு இல்லை என்பதாம்.

மேல், வரவின் அளவறிந்தே செலவு செய்க என்றார்; இதில், அதனைச் சுருக்கிச் செய்தலே என்றும் நலமாம் என்றார்.

வரவறிந்து செலவு செய்தவனுக்கு ஒருகாலத்தும் வறுமையில்லை என்பது கருத்து.

செல்வத்தைச் சுருக்கிக்கொண்டவன் வரவு சுருங்கியிருந்தாலும் வருந்தாமல் வாழ்வான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பூங்குன்றனார் பால் உணரப்படும்.

## கதை

பூங்குன்றனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிய நாட்டிலே விளங்கியிருந்த ஒரு சிறந்த புலவர். இவரது தந்தையார் பெயர் கணியனார் என்பர். இவர் கூரிய அறிவும் சீரிய பண்பும் சேரப்பெற்றவர். சுமதி என்னும் அழகிய மனைவியோடமர்ந்து இவர் இனிது வாழ்ந்து வந்தார். அரிய கவிகளை விரைவில் பாடும் பெரிய புலமையைத் தாம் எய்தி இருந்தும் பரிசில் கருதி இவர் மனிதரைப்பாடார். வறியராயிருந்தும் எவரிடமும் போய் ஏற்காமல் வாழும் இவரது மன அமைதியை அறிஞர் பலரும் வியந்து போற்றினர். தமக்கு அமைந்திருந்த சிறிய நிலவருவாயைக்கொண்டே பெருமகிழ்வோடு வாழ்ந்தார். ஊழின்படியே எல்லாம் உளவாம் என்று உணர்ந்த இவரது மனை வாழ்க்கை எளிமையுடையதாயிருப்பினும் இழிவு சிறிதும் இல்லாதிருந்தது. செல்வம் என்பது சிந்தையின் நிறைவே என்பதை எவர்க்கும் இவர் தெளிய உணர்த்தினார். மிகச்சிறிய வருவாயையுடைய இவர் செலவைச் சுருக்கிக்கொண்டதால் மிக்க மகிழ்ச்சியோடு வாழ்ந்தார். ஆகு ஆறு அளவு இட்டிது ஆயினும் போகாறு அகலாக்கடை அந்நிலை ஒரு கேடும் உண்டாகாது என்பதை உலகம் இவர்பால் கண்டது.

யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோரன்ன
சாதலும் புதுவதன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்
இன்னாதென்றலும் இலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று

நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தனம் ஆகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே. (புறநானூறு)

இஃது இவர் பாடியது. இதனால் இவரது திருந்திய பண்பும் சீர்த்த நாகரிகமும், பொருந்திய தூய்மையும், இருந்த இயல்பும் இனிது விளங்கும்.

வந்தபொருளிற் காற்கூறு வருமேவிடர்நீக் குதற்கமைத்து
மைந்தஇருகால் நினக்காக்கி மற்றைக்காலே வழங்கிடுக
சிந்துநெறிகள் அகலாமல் சேருநேறிகள் சுருங்கிடினும்
நந்தவிலதாம் ஒப்பினுமாம் நாடின் அதிகச்செலவிழுக்காம்.

வருவாயுட் கால்வழங்கி வாழ்தல் செருவாய்ப்பச்
செய்தவை நாடாச் சிறப்புடைமை—எய்தப்
பலநாடி நல்லவை கற்றலிம் மூன்றும்
நலமாட்சி நல்லவர் கோள். (திரிகடுகம்)

வரவறிந்து செலவு செய்வோனுக்கு ஒருபோதும் வறுமை யுண்டாகாது என்பது இதனால கூறப்பட்டது.

---

479 குன்றாத் தனபாலன் கோவலன்பேர் வாழ்க்கையும்பின்
குன்றிநின்ற தென்னே குமரேசா—நினைற
அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். (கூ)

இ—ள்.

குமரேசா! தனபாலன், கோவலன், என்னும் இவரது பெரிய செல்வங்கள் பின்பு ஒன்றும் இல்லாமல் ஏன் ஒழிந்துபோயின எனின், அளவுஅறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோலத் தோன்றி இல்லாகித் தோன்றாக்கெடும் என்க.

அளவு அறிந்து—தனக்குள்ள பொருளின் அளவையறிந்து.

அளவறியாத வாழ்க்கையில் கேடு உள்ளே வளருமாதலாலும் தொடக்கத்தில் அது வெளியே தோன்றாதாதலாலும், "உளபோல இல்லாகிக்கெடும்" என்றார்.

இல் ஆகி—இல்லையாகி. தோன்றாக்கெடும்—பின்பு அத் தோற்றமும் இல்லாமல் கெட்டுவிடும்.

மேல், வரவு செலவுகளை அளந்தறிந்தே ஒருவன் வாழவேண்டும் என்றார்; அங்ஙனம் வாழாதவன் வாழ்வு பாழாம் என்று இதில் வலியுறுத்தினார்.

தனக்கு அமைந்துள்ள பொருளின் அளவை அறிந்து வாழாதவனது வாழ்க்கைகள் இருப்பன போலத்தோன்றிப் பின்பு அத் தோற்றமும் இல்லாமல் தொலைந்து போம என்பதாம்.

வரவுக்குமிஞ்சிச் செலவுசெய்பவனது வாழ்க்கை இருப்பது போலத் தோன்றிப் பின்பு இருந்த இடமும் தெரியாமல் போம் என்பது கருத்து.

அளவறிந்து செலவு செய்பவன் வாழ்க்கையே நெடிது நின்று நிலைபெறும் என்பது குறிப்பு.

அளவறிந்து வாழாதவன் செல்வம் அடியோடு அழிந்துபோம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தனபாலன் கண்ணும் கோவலன் பாலும் உணரப்படும்.

## கதை.

தனபாலன் என்பவன் இயக்கர் குலத்தில்தோன்றிப்பெரும் புகழுடன் விளங்கியிருந்த ஒரு சிறந்த செல்வன். அரசியல் முறைகளில் இவன் மிகவும் தேர்ந்தவன். பதுமினி என்னும் மனைவியோடமர்ந்து இவன் இனிது வாழ்ந்துவந்தான். இவனது நுண்ணிய அறிவையும், எண்ணியதை முடிக்கும் திண்ணிய நலத்

தையும் குபேரன் வியந்து இவனைத் தனக்கு அமைச்சனாக்கிக் கொண்டான். அளகை மன்னனுக்குத் தலைமையமைச்சனாய் இவன் அமர்ந்து சிறந்தான். உயர்ந்த புகழும் நிறைந்த திருவும் பொருந்தி மகிழ்ந்து இவன் விளங்கிவருங்கால் திருதாசி என்னும் தேவதாசியைக் கண்டான். அவள், கண்டவருள்ளங்களைக் கொள்ளைகொள்ளுகின்ற கட்டழகுடையவள். அவள் மோகவெள்ளத்தில் இவன் முழுதும் ஆழ்ந்தான். அவளது போகக்கடலில் திளைக்கும் பொருட்டுத் தன் பொருள் முழுதையும் போக்கவிடுத்தான். தனது அமைச் சுரிமையையும் மறந்து அளகை மன்னன்பால் போவதையும் துறந்து அப்போக மாதையே இவன் பொருந்தியிருந்தான். அதனால் செல்வமும் பதவியும் சேர இழந்தான். வேந்தனும் இவனைவெறுத் தகற்றினான். இவன் வாழ்க்கைமுழுதும் வறிதே இழந்தான். பல இடங்களிலும் அலைந்து திரிந்து நொந்தான். அளவறிந்து வாழாதான் வாழ்க்கை அயயோடு கெடும் என்பதை உலகம் அன்று இவன்பால் கண்டது. விரிவை வேதாரணிய புராணத்தில் காண்க.

## கதை 2

அரசரும் விழைதரும் பெருந்திருவுடையனாய்க் கோவலன் முதலில் விளங்கியிருந்தான்.

> விரைமலர் வாளியொடு வேனில்வீற் றிருக்கும்
> நிரை நிலை மாடத் தரமியமேறி
> சுரும்புணக்கிடந்த நறும்பூஞ்சேக்கை
> கரும்பும் வல்லியும் பெருந்தோள் எழுதி
> முதிர்கடல் ஞாலம் முழுவதும் விளக்கும்
> கதிரொருங் கிருந்த காட்சி போலத்

தன் மனைவியோடமர்ந்து இனிது வாழ்ந்திருந்த இவன் பின்பு மாதவியை மருவினான். அவளால் தன் வளமெலாம் தொலைத்து வறியனாகி மனைவியோடு மதுரையை அடைந்து ஓர் இடைக்குடியில் இவன் இழிந்திருந்தான். அவ்வமையம் தன்னுடைய முன்னைய நிலைமையை முன்னினான்.

வறுமொழியாளரொடு வம்பப் பரத்தரொடு
குறுமொழிக் கோட்டி நெடுநகை புக்குப்
பொச்சாப் புணாடு பொருளுரை யாளர்
நச்சுக்கொண் டேற்கு நன்னெறி யுண்டோ. என்று தான்

அளவறிந்து வாழாமையால் தன்பெரு வாழ்வு முழுதும் அறவே அழிந்தபின்பு இவன் எண்ணி இரங்கினான். அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோலத் தோன்றி இலவாகி அழியும் என்பதை மேற்குறித்த இவ் இருவரும் இருந்து காட்டினர்.

ஆன முதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு. (ஔவை)

மடைத்தலை ஏரி வருவாயின் மிக்க
கொடுத்தலைச் செய்யிற் கொடாது பின்வற்றும்
அடுத்தள வராய்ந் தளிதறுண்ணா லன்றே
வடித்தநூல் தேர்ந்தார் வழக்கு. (இன்னிசை யிருநூறு.)

அளவறிந்து வாழாதான் வாழ்வு அடியோடு அழியும் என்பது இதனால் கூறப்பட்டது.



480 வென்றி விரோசனனும் மெய்மன்னும் ஒப்புரவால்
குன்றினர்வாழ் வென்னே குமரேசா—என்றும்
உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும். (ய)

இ—ள்.

குமரேசா! விரோசனனும் அரிச்சந்திரனும் செய்த ஒப்புரவினால் ஏன் அவர் செல்வம் விரைவில் அழிந்தது எனின், உளவரை தூக்காத ஒப்புரவு ஆண்மை வளவரை வல்லைக் கெடும் என்க.

வரை என்பது மலை, மூங்கில், அளவு முதலியவற்றை உணர்த்திவரும். உளவரை தூக்காத—தனக்கு உள்ள பொருளின் அளவை ஆராயாத. வளவரை—செல்வத்தின் எல்லை.

ஒப்புரவு ஆண்மை—உபகரித்தலை ஆளுதலால். ஆண்மை என்பதில் ஆல் உருபு தொகையாய் நின்றது.

தனக்கு உள்ள பொருளின் அளவைச் சீர்தூக்கி நோக்காத ஒப்புரவாண்மையால் ஒருவனது செல்வத்தின் எல்லை விரைந்து கெடும் என்பதாம்.

உணர்வில்லாத உதாரதையால் ஒருவன் பொருள் ஒழிந்து போம் என்றார் ஒப்புரவாயினும் அளவறிந்தே அவன் ஆற்றவேண்டும் என்பது கருதி

ஒப்புரவினால் வரும் கேடெனின் அஃது ஒருவன் விற்றுக் கோட்டக்கதுடைத்து என்று மேல் அருளி, இதில் அடிகள் இங்ஙனம் இசைத்தது அமையுமோ எனின், ஆண்டுப்புகழை நோக்கியும், ஈண்டுப் பொருளை நோக்கியும் அருளியதாதலால் அமையும் என்க.

அறமே ஆயினும், புகழேயாயினும், தன் நிலைகுலையுமாறு பொருளைச் செலவிடலாகாது என்பது கருத்து.

தன் அளவுக்கு மிஞ்சிய உதவியைப் பிறர்க்கு ஒருவன் செய்யத்துணியின் அதனால் அவனது செல்வம் கெடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விரோசனன் கண்ணும் அரிச்சந்திரனிடமும் அறியப்படும்.

## கதை.

விரோசனன் என்பவன் பிரகலாதன் புதல்வன். இவன் சிறந்த வீரன். அருந்தவங்களைச்செய்து அவற்றால் பெரும் பதங்களை அடைந்து இவன் விளங்கியிருந்தான். சுதேவி என்னும் ஓரழகிய மங்கையை மணந்து இவன் இன்பம் நுகர்ந்து வருங்கால் ஒரு புதல்வன் தோன்றினன். அவனுக்குப் பலி என்று பெய

ரிட்டான். பின்போர் புதல்வி தோன்றினள். அவளுக்கு வச்சிர சுவாலை என்று பெயர். உலக போகங்களை உவந்து துய்த்தலையே முத்தியின்பமாக இவன் உணர்ந்திருந்தான். இவனது உணர் வொழுக்கின்படியே அனைவரும் உணர்ந்து ஒழுகினர். உலகாயு தம் என்னும் மதத்துக்கு இவனே முதல்வனாயிருந்தான். அசுரே சனாகிய இவன் மீது அமரர் அனைவரும் பொறாமைகொண்டிருந் தார். தற்புகழ்ச்சியில் இவன் மிக்க மகிழ்ச்சியுள்ளவனாதலால் அவருட் பலர் முனிவர்போல் இவன்பால் வந்து புகழ்ந்து புகழ் ந்து பொருளைக் கொள்ளைகொண்டுபோயினர். பின்பு இந்திரன் முதலிய அமரர் சிலர் அந்தணர்போல் வந்து விந்தைமொழிகள் பலபுகன்று இவன் பொருள் முழுவதையும் தத்தங்கொண்டு சென்றார். அதனால் இவன் அரசிழந்து வறியனாகிச் சுனகர் என் னும் முனிவரையடுத்துத் தனியேயிருந்தான். உளவரை தூக் காத ஒப்புரவாண்மை ஒருவன் வளவரை அழியும் என்பதற்கு இவன் அளவுரையாய் நின்றான். விரிவைப் ப. விமான்மியத்தில் காண்க.

கதை 2

சத்தியம் என்னும் உத்தம குணத்துக்கு உறைவிடமாகிய அரிச்சந்திரன் திருவயோத்தியிலிருந்து பெருந் திருவோடு அர சுபுரிந்துவருங்கால் செற்றங்கொண்ட விசுவாமித்திரர் தாம் செய் யப்போகும் வேள்விக்குச் செல்லும் பொருளை வேண்டிவரும்படி முனிவர் சிலரை இவன்பால் செல்ல ஏவினர். அவர் வந்து வே ண்டினர். அரசன் எவ்வளவு வேண்டும் என்றான். அளவு தெரியாது; முனிவர் விரும்பிய அளவே அளவாம் என்றார். அர சன் ஆம் என இசைந்தான். வந்தவர் மீண்டுபோய் இருந்தவ ரிடம் அமைந்ததை மொழிந்தார். நாடியது கூடியதென்று தம் தாடியை உருவி ஆறாவது நாள் அவரே அங்கு ஓடிவந்தார். அரசன் வணங்கி உபசரித்தான். அவர், அன்று நீ தருவல் என்ற தை இன்று தருக என்றார். வேண்டியது எவ்வளவு என்று வேந் தன் கேட்டான்.

மாணவன் சொல மாமுனி நோக்கியே
யானைமேல் நின்றெறிந்த கவண் சிலை

போனதூரம் பொருள் குவிப்பா யெனின்
மோன வேள்வி முடித்திட லாமென்றார்.

ஐயர் அருளியதைக் கொண்மின் என்று அரசன் அமைச்சருக்கு அருளினன். முன்பு தூக்காமல் உரைத்ததைப் பின்பு தூக்கி நோக்கியும் மன்னன் மாறுமல் ஊக்கியதை நோக்கி இதுபொழுது வேண்டாம் பின்னர் வந்து பெறுவல் என்று முனிவர் பெயர்ந்துபோனார். சின்னாட் கழித்து மீண்டும் வந்தார். வஞ்ச மொழியால் அரசுமுழுவதையும் வலிந்து கவர்ந்து பழையபொருளும் அளிக்கவேண்டும் என்று முனிவர் பழிக்கு நின்றார். தனது உபகாரச் செயலால் அரசன அரசிழந்துபோய் அடையாத அல்லலெல்லாம அடைந்தான. உளவளவை தூக்காத ஒப்புரவாண்மையால் ஒருவன் வளவளை வல்லைக்கெடும் எனபதை இவன் வாய்ந்து காட்டினன். விரிவை இவன் சரிதையில் காண்க.

வண்டலங்கல் கொள் மார்பரிச் சந்திரன்
அண்டுமோர்முனிக் காத்தரும் வண்மையால்
பெண்டுபிள்ளை பெருந்திருப் போய்விடக்
கொண்ட துன்பங் குறிக்கவுங் கூடுமோ. (குமணசரித்திரம்)

இஃது இளங்குமணன் குமணனிடங்கூறியது. அளவு கடந்த உதாரதையால் ஒருவன் செலவம் கெடும என்பதற்கு உதாரணமாக இவ் வந்தலையே எளிதாக அவன் எடுத்துக்காட்டினன்

அளவறியாமல் உதவுவோன் செல்வம் விரைவில் அழியும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

தனது வலி முதலியவற்றை ஆராய்ந்து தெளிந்தே அரசன் வினைசெயல்வேண்டும். வலியறிந்து வினைமேற்செல்லும் அறிவுடையானுக்கு முடியாத காரியம் ஒன்றும் இல்லை. வலியறியாமற் செல்வோர் இடையே மெலிவடைந்து கெடுவார். வலி முதலியவற்றை அளந்தறியாமல் தன்னை வியந்தவன் விரைந்து அழிவான், மெலியராயினும் பலர் கூடினல் வலியரும் அவர்முன் வலிதொலைந்

து அழிவர். வலியறியாமல் துணிவுகொண்டவர்க்கு உயிர்முடிவுண்டாம். வரவறிந்து வாழ்கலே பொருள் அழியாமைக்கு வழியாம். அதிகமான வரவு இல்லையானாலும், அமைதியானசெலவினையுடையவன் அழிவினையடையான். அளவறிந்து வாழாதவன் நிலையழிந்து தொலைவான். தனக்கு உள்ளதை உணராமல் பிறர்க்கு உபகரிக்கத்துணிவோன் எல்லாப் பொருளையும் இழந்து ஒல்லையில் கெடுவான்.

சஅவது வலியறிதல் முற்றிற்று.

---

## சகூம் அதிகாரம் காலமறிதல்.

அஃதாவது தான் செய்யத்துணிந்த வினைக்கு ஏற்றகாலத்தை அரசன் எதிர் நோக்கியறிதல். தன் வலிமுதலியவற்றை அளந்தறிந்து வினைமேற்செல்லும் அறிவுடையானுக்கே இவ்அறிவு இனிது பயன்படுமாதலால் இஃது ஈண்டு வைக்கப்பட்டது. அதிகார முறைமையும் இதனானே புலனாம்.

481 திண்டோட் செழியனுமேன் தேர்ந்து பொழுதறிந்து
கொண்டுசென்றான் போர்மேல் குமரேசா—கண்ட
பகல்வெல்லும் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும்பொழுது. (க)

இ—ள்,

குமரேசா! வலிமிகுந்த செழியனும் ஏன் பொழுதறிந்து போர்மேல் சென்றான் எனின், கூகையைக் காக்கை பகல்வெல்லும் ஆகலால், இகல் வெல்லும் வேந்தர்க்குப் பொழுதுவேண்டும் என்க.

உம்மை அவனது வலிமிகுதியை உணர்த்திநின்றது.

இகல் வெல்லும் வேந்தர்க்கு—பகையை வெல்லக்கருதும் அரசர்க்கு. இகல் என்னும் சொல் பகையையும் வலியையும் போரையும் உணர்த்திவரும். இகல் பகை வலி போர் முப்பேர் என்பது நிகண்டு.

வெற்றியை விரும்பும் கொற்றவன் தனக்கு உறுதியை வினைத்தற்குரிய இனிய காலத்தைப் புரையற அறிந்தே போர்மேல் செல்லவேண்டும் என்பார் "வெல்லும் வேந்தர்க்குப் பொழுது வேண்டும்" என்றார்.

கூகையைக் காக்கை பகலிலேதான் வெல்லும்; ஆதலால் பகைவரது வலியை வெல்லக் கருதிய அரசர்க்கு அதற்கேற்ற காலம் வேண்டும் என்பதாம்.

துணைவலி, மனவலி, மதிவலி முதலிய வலிகளெல்லாம் உடையராயினும் காலம் வலி இலதேல் அவற்றால் பயனில்லை என்பது கருத்து.

காக்கையினும் கூகை மிக்க வலியுடையது; ஆனால் அதற்குப்பகலில் கண்தெரியாது; இரவில்தான் தெரியும்; பகலெல்லாம் ஒடுங்கியிருக்கும்; அவ்வமயம் காக்கைக்குக் கண்கள் நன்குதெரியுமாதலால் துணிந்துசென்று அதனைக் கொத்தித் துன்புறுத்தித் தம் பகைமையைத் தீர்த்துக்கொள்ளும். இதனை ஈண்டு எடுத்துக்காட்டிக் காலத்தின் சிறப்பையுணர்த்தினார் பகைவரை வெல்லக்கருதும் அரசன் தனக்கு ஏற்ற காலத்தை இனிதறிந்தே செல்லவேண்டும் என்பது கருதி.

மெலியவராயினும் காலம் வாய்ப்பின் வலியவரையும் அவர் வென்றுவிடுவர் என்பது குறிப்பு.

எவ்வளவு வலியுடையராயினும் காலம் கருதியே அறிவுடையார் வினைமேற் செல்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை செழியன்பால் உணரப்படும்.

## கதை

செழியன் என்பவன் மதுரையிலிருந்து அரசுபுரிந்த பாண்டியமன்னருள் ஒருவன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னராகும். இவன் பெரிய வீரன். அரிய குணங்கள் பல அமையப்பெற்றவன். பல நூல்களையும் பயின்று தெளிந்தவன். எதையும் நேருறக்காணும் கூரியவுணர்வி

ணன். மாங்குடி மருதனார் முதலிய புலவர் பலரையும் தம் புடைசூழவைத்துக் கொண்டு புலமை யின்பத்தையே நாளும் இவன் பொருந்தத் துய்த்தான். வீரத்திலும், கொடையிலும், அழகிலும், அறிவிலும் எவரும் நிகரில்லை என்ன இவன் பெரும் புகழ்கொண்டிருந்தான். அதனைக்கண்டு சேரனும் சோழனும் இவனமேல் பொறாமைகொண்டார். அவர், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும் ஐந்து குறுநில மன்னரையும் தமக்கு உதவியாகச் சேர்த்துக்கொண்டு இவன்மேல் பகைமையைப் பெருக்கினர். தம்மோடு செருச்செய்யவருமாறு சிறுமொழிகள் பல கூறி அவர் பலமுறை மீறினர். மனவலியும் துணைவலியும் மிக வுடையவனாயினும் காலம் அறிந்தே இவன் காத்திருந்தான். பின்பொருநாள் பொழுதோடமைந்தே இவன் போர்மேல் எழுந்தான்.

இளையன் இவனென உளையக் கூறிப்
படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையயாம் என்
றுறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்ககப் படேஎன் ஆயிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழல் காணாது
கொடியனெம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலேன் ஆகுக;
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர்பா டாது வரைகவென் நிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மையான் உறவே.

என்று தன் வன்மைதோன்ற வஞ்சினங்கூறிப் போர்மேற் சென்று பகைவரனைவரையும் ஒருசேர வென்றான். இவன்

சென்று நின்று வென்ற இடத்துக்குத் தலையாலங்கானம் என்று பெயர். ஆதலால் அன்றுமுதல் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் என்று இவன் பெரும்பெயர்பெற்றான். கோவலன் காலத்திலிருந்தவனை ஆரியப்படைகடந்த நெடுஞ்செழியன் என்பர். இருபெரு வேந்தரையும் ஐந்து குறுநில மன்னரையும் பல்வகைச் சேனைகளையும் பொழுதறிந்து சென்றதால் இவன் ஒருவனே வென்று உயர்புகழ் கொண்டான். இகல் வெல்லும் வேந்தர்க்குப் பொழுதுவேண்டும் என்பதை உலகம் உணர இவன் உணர்த்தி நின்றான். விரிவை வழுதி மரபில் காண்க.

இடத்தொடு பொழுது நாடி யெவ்வினைக் கண்ணும் அஞ்சார்
மடப்படல் இன்றிச் சூழும் மதிவல்லார்க் கரிய துண்டே
கடத்திடைக் காகமொன்றே ஆயிரகோடி கூகை
இடத்திடை யழுங்கச் சென்றாங் கின்னுயிர் செகுத்த தன்றே.
(சீவகசிந்தாமணி).

இது, தன்மகனாகிய சீவகனுக்கு அறிவு கூறும்பொழுது விசையை கூறியது. அடிகள் கருத்து இதில் அமைந்திருத்தல் காண்க.

பாரதம்முடிந்த பதினெட்டாம்நாளிரவில் அசுவத்தாமன் கிருதவன்மன் முதலிய வீரர் சிலர் ஓரிடத்திலிருந்துகொண்டு தமக்குற்ற தோல்வியையும், சிறுமையையும் நினைந்து வருந்தினார். அவ்வமயம் அருகிருந்த ஓர் ஆலமரத்தில் அடைந்திருந்த காகங்களைப் பகலில் அவற்றால் துன்பமடைந்த கூகை ஒன்று வந்து சிதற அடித்துப் பெருந்துயர் விளைத்தது. பகைவர் பலராயினும் காலம் அறிந்து சென்றால் ஒருவனுக்கு வெற்றியுண்டாம் என்பதை அக் கூகையால் தேர்ந்து வாகையோடு அவர்கூடி எழுந்து பாண்டவரிருந்த பாசறைமேல் சென்றார். அதனை இதனடியில் வருகின்ற வில்லிகவி விளக்கி நிற்கின்றது.

வேலமர் தடக்கை வீரரிப்பாடி வீடுசென்றணைதலும் புறத்தோ
ராலமர் சினையிற் பல்பெருங்காகம் அரும்பகலழிந்த கூகையினால்
சாலவும் இடருற்றலமரக்கண்டு தம்மிலே முகமுக நோக்கி
காலமும் இடனும் அறிந்தமர் செகுத்தல் கடனெனக் கருதின
ரன்றே.

இகல்வெல்லும் வேந்தர்க்குக் காலம் வேண்டும் என்று மேல் அருளியுள்ளதை இதுவும் தழுவியுள்ளமை காண்க.

காலத்தை இனிதறிந்தே அரசர் வினைமேற் செல்லவேண்டு மென்பது இதனால் கூறப்பட்டது.

---

482 பண்டு பருவதனைப் பார்த்துக் களப்பலிமுன்
கொண்டானேன் கண்ணன் குமரேசா—கொண்ட
பருவத்தோ டொட்ட வொழுகல் திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு. (உ)

இ—ள்.

குமரேசா? பருவம்பார்த்துக் களப்பலியை ஏன் கண்ணன் முன்னதாகவே செய்தான் எனின், பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத் தீராமை ஆர்க்கும் கயிறு என்க.

ஒழுகல் கயிறு என ஒட்டிக்காண்க.

தீராமை—நீங்காமை. இது, தீர்தல் என்பதன் அடியாகப் பிறந்த எதிர்மறை வினையெச்சம். தீர்தல்—முடிதல், விடுதல், நீங்குதல். ஆர்க்கும் என்பது ஆர்த்தல் என்பதன் அடியாகப் பிறந்த பெயரெச்சம். ஆர்த்தல்—பிணித்தல், கட்டல், பொருத்தல். திருவினைத் தீராமை ஆர்க்கும கயிறு—செல்வத்தை நீங்காமல் கட்டி வைக்கும் கயிறு. தப்பி ஓடும் ஒருவனைத் தப்பாமல் பிணித்தற்குக் கயிறே நல்ல கருவியாம்; அதுபோல் நீங்கும் இயல்பினையுடைய செல்வத்தை நீங்காமல் பிணித்தற்குப் பருவமறிந்து தொழில் செய்தலே உரிமையாகும் என்பதாம்.

மேல், காலத்தோடு பொருந்த வினை செய்தால் வெற்றியுண்டாம் என்றார்; இதில், செலவத்தை நீங்காமல் அது செய்துவைக்கும் என்றார்.

பருவத்தோடு பொருந்த வினைசெய்து ஒழுகுதல் செல்வத்தை நீங்காமல் பிணித்துவைக்கும் கயிறும் என்பதாம்.

பருவத்தோடு வினை செய்து ஒழுகுதல் செல்வம் வளர்ந்து வருதற்குக் காரணமாகுமாதலால் அவ்வொழுக்கத்தைத் திருவினை ஆர்க்கும் கயிறு என்றார். இனி, ஒழுகல் என்பதை உடன்பாட்டு வியங்கோளாகக்கொண்டு அது என ஒன்றை வருவித்துப் பொருள் காணினும் அமையும்.

எவரிடமும் நிலையாமல் நீங்கிவரும் செல்வம் தன்கண் நிலைத்திருக்க ஒருவன் விரும்புவனாயின் அவன் பருவமறிந்து தொழில் செய்யவேண்டும் என்பதாம். உரித்தான வினையைக் குறித்த காலத்தில் திருத்தமுறச் செய்யவேண்டும் என்பது குறிப்பு.

பருவத்தே பயிர்செய் என்றார் பாட்டியாரும்.

காலத்தோடு பொருந்த ஒருவன் தொழில்செய்து ஒழுகுவானாயின் அவன் செல்வம் எக்காலத்தும் அவனைவிட்டு நீங்காதென்பது கருத்து. பருவம் அறிந்து வினை செய்வான் திருவினை அடைந்து சீர்பெறுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கண்ணன்பால் உணரப்படும்.

## கதை

பாண்டவர்கட்குப் போரில் வெற்றியுண்டாகுமாறு முதலில் களப்பலியூட்டக் கண்ணன் குறிக்கு முன்னரே துரியோதனன் சகாதேவனிடம் வந்து நாள் நலந்தெரிந்துகொண்டு அரவானிடம் புகுந்து அவனைப்பலிக்கு அமைய வேண்டினான். "நீ குறித்த நாள்வரையும் என் உடம்பு இருக்குமேல் உன் கருத்தின்படி அதனை முடித்துக்கொள்" என்று அவன் எடுத்து மொழிந்தான். மார்கழிமாதம் அமாவாசை இரவே களப்பலிக்கு ஏற்ற நாள் என்று இருதிறத்தாரும் உறுதி செய்திருந்தனர். அரவக் கொடியோன் அதனை எதிர் பார்த்திருந்தான். தான்கருதிய கருமத்தை எப்படியும் அப்பருவத்தில் முன்னுற முடித்துவிட வேண்டுமென்று கண்ணன் கண்ணூன்றி நின்றான். குறித்த அமையின் முதனாளாகிய சதுர்த்தசியில் தருப்பணம் செய்யும்படி வேதியர் சிலரைக் கண்ணன் விரகுடன் ஏவினான். அங்ஙனமே அவர் செய்தனர். நாளைச்

செய்யவேண்டியதை இன்று செய்தது என்னை! என்று சூரியனும் சந்திரனும் ஒன்றாகூடி ஒருவரை ஒருவர் வினவினர். அவ் இருவரும ஒன்றுகூடும் தினமே அமாவாசையாகுமாதலால் தான் கருதிய வினையைச் செய்தற்கு அதுவே பருவம் என்று தருமரிடம் கூறி முறைவழுவாமல் கண்ணன் அன்றே கருமத்தைமுடித்தான். அதன்பயனாகத் திருவும் வென்றியும் இவரும் தீராமல் கொண்டார். பருவம பொருந்த வினைசெய்து ஒழுகுவார் திருவை என்றும் தீராமல்கொள்வர் என்பதை கண்ணன் ஒழுகி உணர்த்தினுன். விரிவைப் பாரதத்தில் காண்க.

கொடுத்தனன் பலிக்குத் தன்னைக் குமரனென் றறிந்து குன்றம்
எடுத்தவன் திதிபன்னுன்கி னிடைஉவா இன்றுகென்று
தொடுத்த நூன் முனிவரோடும் சொல்லினன் சுடர்க டம்மில்
அடுத்திது வென்னை யென்ன அன்றது வாயதன்றே. 1

ஆயபின் தருமற்குற்ற வாறெலாம் விளம்பி யின்று
நீயவன் தனக்கு முன்னே களங்கொள நேரினல்லால்
போயவன் தன்னை வேறல் அரிதெனப் புகன்று செங்கண்
மாயவன் என்னை வல்லே வன்பலி யூட்டு கென்ருன். 2

கண்ணன், பருவத்தோடு ஒட்ட ஒழுகிய உண்மையும், அங்ஙனம் பிறரையும்ஒழுக்கிய ஒண்மையும் இவற்றுள் உணரப்படும்.

பருவம் தப்பாமல் வினைசெய்வார்பால் திருவும் தப்பாமல் நிலைபெறும் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

483 சென்றரியதெவ்வெயிலைச்செம்பியன்முன்வென்றுநின்ருன்
குன்ருமல் என்னே குமரேசா—என்றும்
அருவினை யென்ப வுளவோ கருவியாற்
காலம் அறிந்து செயின். (௩)

இ—ள்.

குமரேசா! அமரரும் செய்தற்கு அரிய வினையைச் செம்பியன் ஏன் சென்று செய்து வென்றி கொண்டான் எனின்,

கருவியால் காலம் அறிந்து செயின், அருவினை என்ப உளவோ என்க. செம்பியன் என்றது விசயசோழனை.

இல்லை என்பதை ஓகாரம் உணர்த்திநின்றது.

அருவினை என்றது செய்து முடித்தற்கு அருமையான வினைகள் என்றவாறு. கருவி என்றது காரியங்களை முடித்தற்கு ஏற்ற உபகரணங்களை.

மேல், பருவம் அறிந்து வினை செய்யின் திரு நீங்காது நிலைபெறும் என்றார்; இதில், அங்ஙனம் செய்யின் முடியாத காரியம் யாதும் இல்லை என்றார்.

செய்து முடித்தற்கு அரியன என்று சொல்லப்படுகின்ற வினைகளும் உளவோ? அவற்றை முடித்தற்குரிய கருவிகளுடனே காலத்தையும் ஆராய்ந்து ஒருவன் வினை செய்வானாயின் என்பதாம்.

கருவி காலங்களைக் கருதாது செய்யின் ஒரு காரியமும் நிறைவேறாது, ஆதலால் அவற்றைக் குறிக்கொண்டே அரசன் வினைசெய்யவேண்டும் என்பது குறிப்பு.

குறித்த வினைகளை நிறைவேற்றுதற்குரிய சாதனங்களைக் கைக்கொண்டு, அவை இனிது முடிதற்கு ஏற்ற காலத்தையும் அறிந்து, ஒருவன் தொழில் செய்வனாயின எவ்வகை வினைகளும் அவனுக்கு எளிதில் முடியும் என்பது கருத்து.

அரிய வினைகளாயினும் காலம் அறிந்து செய்வோர் அவற்றை எளிதில் முடிப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை செம்பியன்பால் உணரப்படும்.

கதை.

செம்பியன் என்பவன் சோழ மன்னருள் ஒருவன். சிபி மரபில் வந்தோன் என்னும் ஏதுவான இவனுக்கு இப்பெயர் வந்ததென்பர். விசயசோழன் எனவும் இவனைக் கூறுவர். இவன் காவிரிப் பூம் பட்டினத்திலிருந்து அரசுபுரிந்தான். பேராண்மையுடையவன். கொடை, வீரம், நியாயம் முதலிய உயர் குணங்களை யெல்லாம் இவன் உடைமையாகக்கொண்டிருந்தான்

அகத்திய முனிவர்பால் பெரு நண்புடையவன். இவனது காலம் இற்றைக்கு இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னராகும். இவன் அரசு செய்துவருங்கால் தாம் அருந்தவஞ் செய்துபெற்ற நகரிலிருந்து அசுரர் சிலர் அமரர்கட்குப் பெருந்துயர் செய்துவந்தார். அவர் எண்ணிய இடங்கட்கு அது எழுந்து செல்லவும் வல்லது. அதன் மதில்கள் அசைந்து தொங்கும் இயல்பினையுடையன. அதன் வலி மிகுதியால் அனைவரையும் வென்று அவர் அடங்காதிருந்தார். அமரரும் அதனை அழிக்கலாற்றாது அடங்கி நொந்தார். இவன்பால் வந்து தங்குறையிரந்து நின்றார். விரைவில் வந்து பொருது வெல்வல் என்று இம்மானவன் அவ்வானவருக்கு வாக்களித்து விடுத்தான். அந்நகரின் இயல்பினை முனிவர் சிலருடன் வினவியறிந்தான். அதனை அழித்தற்கு ஏற்ற கருவிகளைக் கைக்கொண்டான். காலத்தோடு பொருந்திக் கதித்தெழுந்தான். முறையறியாமல் அவ் அசுரர் திரண்டார். பருவம் அறிந்து நின்ற இவன் உரியமந்திரத்தோடு அம்மதிலைஎங்கி எறிந்தான். தூங்கி நின்ற அது துகள்பட்டழிந்தது. உடனே அசுரரும் அழிந்தார். வென்றியுடையனாய் இவன் விளங்கினான். அமரரனைவரும் இவனை வியந்து புகழ்ந்தார். அமரராலும் செய்தற்கு அரிதாய வினையைக் காலங்கருதிச் செய்ததால் இவன் எளிதில் முடித்தான். கருவிகளோடு காலம் அறிந்து செய்வார்க்கு அரிய வினைகளெல்லாம் எளிதில் முடியும் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது.

வீங்குநீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணங் காத்த உரவோன்யார் அம்மானை
ஓங்கரணங் காத்த உரவோன் உயர்விசும்பில்
தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்காண் அம்மானை
சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை

என்று சிலப்பதிகாரத்தும்,

ஓங்குயர் மலயத் தருந்தவன் உரைப்பத்
தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன்.

என்று மணிமேகலையினும்,

ஒன்னார் உட்கும் துன்னருங் கடுந்திறற்
றூங்கெயில் எறிந்தநின் னூங்கணோர்.

என்று புறநானூற்றினும்,

ஓங்கெயிற் கதவம் உருமுச்சுவல் சொறியும்
தூங்கெயில் எறிந்த தொடிவிளங்கு தடக்கை
நாடாநல்லிசை நற்றேர்ச் செம்பியன்.

என்று சிறுபாணாற்றுப்படையினும்,

வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல் விசும்பில்
தூங்கு மெயிலுந் தொலைத்தலால்—ஆங்கு
முடியுந் திறத்தான் முயல்வாம் கூரம்
படியிழைப்பின் இல்லை அரண்.

என்று பழமொழியினும் ஈண்டுக் குறித்த கதை குறிக்கப் பட்டுள்ளது.

கருவிகளுடனே காலம் அறிந்து வினைசெய்வார்க்கு எல்லாம் எளிதில் முடியுமென்பது இதனால் கூறப்பட்டது.

---

484 வாடியிருந் தஞ்சாலி வாகனனேன் ஞாலத்தைக்
கூடினன் பின்பு குமரேசா—நீடியசீர்
ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

இ—ள்.

குமரேசா! சாலிவாகனன் வாடியிருந்தும் காலம் அறிந்து வினைசெய்ததால் ஏன் பின்பு ஞாலத்தைக் கூடினன் எனின், காலம் கருதி இடத்தால் செயின், ஞாலம் கருதினும் கைகூடும் என்க. ஞாலம்—உலகம். கைகூடும்—கைவசமாம். எய்தும் என்றபடி.

செயின் கூடும் என்று சேர்த்துக்காண்க. கைகூடவில்லை யானால் அறிவோடு அதனைச் செய்யவில்லை என்று தேர்ந்துகொள்க.

ஒருவனுள்ளத்தில் அக்கருத்து கருக்கொண்டெழுதலின் அருமையையும், ஞாலத்தின் பெருமையையும், உம்மை உணர்த்தி நின்றது.

மேல், காலம் அறிந்து வினைசெய்யின எவ்வகை வினைகளும் எளிதில் முடியும் என்றார்; இதில், உலக முழுவதையும் அதனால் ஒருவன் பெறலாம் என்றார்.

காலமும் இடனும் அறிந்து வினைசெய்வதனால் வினையும் பயனை உறுதிபெறவுணர்த்திய இவ்வுண்மையை உள்ளுநர்தோறும் உணர்ந்தோர் உள்ளமுருகுவர்.

உலகமுழுவதையும் தானே ஆள ஒருவன் விரும்பினானாயினும் அது தன் கைவசமாம் அதற்கு ஏற்ற வினையைக் காலம் அறிந்து இடத்தோடு பொருந்த அவன் செய்வானாயின் என்பதாம்.

அடுத்து வருகின்ற இடனறிதலுக்கு இங்கு இடங்கொடுத்தது காலத்தோடு இயைந்துள்ள அதன உரிமை கருதி என்க.

தான் கருதிய வினை இனிது முடிதற்கு ஏற்ற காலத்தையும் இசைந்த இடத்தையும் நுணுகி அறிந்து ஒருவன் வினைசெய்யின் அவனுக்குக் கைகூடாத பொருள் ஒன்றும் இல்லை என்பது கருத்து. எண்ணியனவெல்லாம் எய்தும் என்பதாம்.

காலமறிந்து வினைசெய்வான் ஞாலமுழுதும் கைக்கொள்வான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாலிவாகனன்பால் உணரப்படும்.

கதை

சாலிவாகனன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் நருமதை நதியின் தென்பாலிருந்த பைடணபுரி என்னும் நகரிலே சுமித்திரை என்னும் பார்ப்பனிபால் தோன்றினான். அவள் கணவனோடு கலவாமல் கனகதேகன் என்னும் ஒரு நாகவேந்தனைக் கலந்து கருவுற்றாள் என்று இனத்தவர் கறுத்து அவளை அந்நகரைவிட்டகற்றினார். அவள் இனம் பிரிந்தகன்று போய் அயலூரையணுகி அங்கோர் குயவனில்லில் தங்கி

தான் தாங்கியிருந்த கருவைத் தயங்கி உயிர்த்தாள். அக்குயவனு க்கு இராமவேளான் என்றும், அவன் மனைவிக்கு அன்னபூரணி என்றும், பெயராம். அவ் இருவரும் இவ்விருவரையும் மிக்க ஆத ரவோடு போற்றிவந்தனர். குயக்குடியில் வளர்ந்து வந்தாலும் இக்குழந்தையிடம் வியக்கத்தக்க குணங்கள் விஞ்சியிருந்தன. பருவமெய்தினன். இவனிடம் அறிவும் உருவும் ஆண்மையும் அமைதியும் எவரையும் தன் வயமாக்குந் தகுதியுடையனவாய்மை ந்திருந்தன. உலக முழுவதையும் தான் ஆளவேண்டும் என்னும் எண்ணம் இளமையிலேயே இவன் உளத்தில் முதிர்வுகொண்டிரு ந்தது. ஒத்த இளைஞர்களோடு விளையாடும்பொழுதும் தன்னை அரசனாக மதித்துவைத்து அவர்களைக் குடிகளாகவும் படைஞராக வும் அமைச்சர்களாகவும் பகுத்துக்கொண்டு அமர்ந்திருந்தான். வருங்கால் சோதிடத்தில் வல்லுநரான வேதியரொருவர் அவ்வ ழியேவந்தார். இவன் அவரை நோக்கி "ஐயரே, நமது ஆட்சியி ன் மாட்சி எப்படியிருக்கின்றது" என்றான். அவர் அழகாகவே யிருக்கின்றதென்றார். இவன் மிக மகிழ்ந்து ஒரு சாலை எடுத்து அவருக்குத் தானமாகக் கொடுத்தான். சால் என்பது நெல்லும் நீரும் இடுதற்கு ஏற்றதாக மண்ணால்செய்த ஒருவகைப் பெருங் கலம். பின்பு இவன் சாலிவாகனன் என்னும் பெயருடன் விளங் கிவருவதை விக்கிரமார்க்கன் அறிந்து இவனைத் தன்பால் அழை த்துவரும்படி ஓர் அந்தணனை அனுப்பினான் அவன் வந்து அ ழைத்தான். அவனை என்னிடம் வரச்சொல்லு என்று இவன் அவ னிடம் அறைந்தான். இங்கு நிகழ்ந்ததை அவன்போய் அங்கு மொழிந்தான். விக்கிரமார்க்கன் இவன்மேல் மிகச் சினங்கொண் டான். இவனும் அவனது அரசை எய்தி ஆளவேண்டுமென்று ஆர் வங்கொண்டு தான் கற்றிருந்த மந்திர முறையோடு சிலபடைகளை ஆயத்தஞ்செய்தான். ஆயினும் அவன் வரத்தால் எய்தியுள்ள காலமுடிவைக் கருதியிருந்தான். அவன் முடிவறியாது இவன் மேல் ஒருநாள் படையோடுவந்தான். தனக்கு ஏற்ற காலத்தை யும் இசைந்த இடத்தையும் இவன் முன் அறிந்துவைத்து அவ னோடு முனைந்தமர் புரிந்தான். அதில் அவன் படையோடு முரிந்த கன்றான். இவன் சிறந்த வெற்றியுடையனாய் நினைந்தபடியே அ

ரசையடைந்து மகிழ்ந்தான். அதுமுதல் நருமதை நதிக்குத் தென்பாலிருந்து சாலிவாகன சகாப்தம் என இவன் பெயரால் வருடஅளவை வழங்கிவருகின்றனர். சாலிவாகன சகாப்தம் 1850 இப்போது நடைபெறுகின்றது. ஆப்தம்—ஆண்டு. மைசூர் அரசு இவன்வழி வந்ததென்பர்.

காலம்கருதி இடத்தோடு பொருந்த ஒருவன் வினைசெய்யின் ஞாலம்கருதினும அவனுக்குக் கைகூடும் என்பதை உலகம் இவன் பால்கண்டது. விரிவை அக்கினிபுராணத்தில் காண்க.

ஆருநர் யாரையும் துணைவ ராக்கிப்பின்
ஏருறு நாளிடை எய்தி எண்ணுவ
சேகறப் பன்முறை தெருட்டிச் செய்தபின்
வாகையென் றொருபொருள் வழுவற் பாலதோ.

(இராமாயணம்.)

காலம் கருதி வினைசெய்வான் ஞாலமுழுதும் எய்துவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

485 காலங் கருதியேன் காத்திருந்தான் சீவகன்றன்
கோலங் கரந்து குமரேசா—ஏலுகின்ற
காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர். (ரு)

இ—ள்.

குமரேசா! தன்ஞாலத்தை ஆளக்கருதிய சீவகன் ஏன் காலத்தைக் கருதியிருந்தான் எனின், கலங்காது ஞாலம் கருதுபவர், காலம் கருதி இருப்பர் என்க.

கலங்காது—தப்பாமல். இது கலங்கல் என்பதன் அடியாகப்பிறந்த எதிர்மறைவினையெச்சம். கலங்கல் என்பது குழம்பல், துன்புறல், அசைதல், அஞ்சுதல், தவறல் என்பவற்றை உணர்த்திவரும்.

ஞாலம் கருதுபவர்—உலகத்தைக் கைக்கொள்ளக் கருதுகின்றவர். இருத்தல் கருதல் என்னும் இரண்டற்கும் அடையாகக்கருதுமாறு கலங்காது என்பது இடையே இலங்கி நின்றது.

மேல், காலங்கருதி வினைசெய்யின் ஞாலமுழுதும் கைவரும் என்றார்; இதில், அஃதெய்துமளவும் அதனை எதிர்பார்த்திரு என்றார்.

உலகமுழுவதையும் தப்பாமல் தனக்கு உரிமையாக்கிக்கொள்ளக் கருதுகின்றவர் அதற்கேற்ற காலம் வருந்துணையும் பகைவர் மேற் செல்லாமல் காத்திருப்பர் என்பதாம்.

வலிமிகவுடையராயினும் தனக்கு உறுதியான காலம் வரும் வரையும் அறிவுடையார் பகைவர்மேற் செல்லாமல் அடங்கியிருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சீவகன் பால் உணரப்படும்.

## கதை.

சீவகன் தந்தையாகிய சச்சந்தனைக் கொன்று அரசைக் கட்டியங்காரன் கவர்ந்துகொண்டு களித்துவருங்கால் இளமையிலேயே தன்தை தாயரை இழந்து பிரிந்த சீவகன் யாதும் அறியானாய்க் கந்துக்கடன் என்னும் வணிகன் இல்லில் வளர்ந்துவந்தான். பின்பு அச்சணந்தி என்னும் பெரியவரொருவர்பால் பலகலைகளையும் பயின்று தெளிந்தான். இவனது மதிநலத்தையும் குணநலங்களையும் அவர் மதித்து மகிழ்ந்து தனது உண்மை நிலையை இவனுக்கு உணர்த்த விழைந்தார். ஒருநாள் இவனை அழைத்துப் போய்த் தனியான இடத்தில் வைத்துக்கொண்டு குழந்தாய்! ஒரு கதை சொல்லுகின்றேன் கேட்கின்றாயா? என்றார். ஐயனே அருளுக என்று இவன் அன்புடன் கேட்டான். அவர் தொடங்கினார்; "ஏமாங்கத நாட்டில் சச்சந்தன் என்னும் ஒரு அரசன் இருந்தான். அவன் விசையை என்னும் தனது அழகிய மனைவியோடு இனிது வாழ்ந்தான். அவ் அரசனைக் கட்டியங்காரன் என்னும் அமைச்சன் கொன்று அரசைக்கைக்கொண்டான். அரசி பிழைத்துப்போய்த் தனியான இடத்தில் ஒரு தனயனை

என்று மனமுருகி நின்றாள். அப்பிள்ளையை ஒரு வணிகன் கொண்டுபோய் வளர்த்தான். அவன் இப்பொழுது பலகலைகளையும் பயின்று தெளிந்து உருவமெய்தி அழகிலும் அறிவிலும் ஆண்மையிலும் ஒருவரும் நிகரில்லை என்னும்படி ஓங்கிநிற்கின்றான்" என்று அவர் உரைத்து நின்றார். அவனைக் காண விரும்புகின்றேன். அவன் எங்குள்ளான் என்று இவன் கனிந்து மொழிந்தான். நீ தான் என்று அவர் இவனை நேரே காட்டினார். தன் உண்மையை உணர்ந்து இவன் உள்ளங்கலங்கினான். தன் குலப்பகைவனைக் கொன்று இப்பொழுதே கோல் கைக்கொள்வன் என்று இவன் கொதித்தெழுந்தான். இன்னும் ஓராண்டுவரையும் நின்னை வெளிப்படுத்தாதே என்று அவர் இயம்பி அகன்றார். படையும் துணையும் பின்பு இவன் அடையப்பெற்றான் வலிமுதலியன மிகுந்திருந்தும் காலம் கருதியே இவன் காத்திருந்தான். கலங்காமல் உலகத்தைக் கைக்கொள்ள விழைந்தான். காலம் வந்தவுடனே கருதியதைச்செய்தான். அதனால் அரசினையடைந்தான். கலங்காது ஞாலங்கருதுபவர் காலங்கருதி இருப்பர் என்பதை இவன் காட்டிநின்றான். விரிவை நாமகளிலம்பகத்தில் காண்க.

வலி மிகுந்திருப்பினும் நலமுறுங் காலத்தையே அறிவுடையார் நாடியிருப்பர் என்பது இதனால் கூறப்பட்டது.

486 திண்டோள் நெடுமான் திறன்மிகுந்தும் ஏனொடுக்கம்
கொண்டிருந்தான் முன்னாட்குமரேசா—மண்டிநின்ற
ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து. (கூ)

இ—ள்.

குமரேசா! திறல்மிகுந்திருந்தும் நெடுமான் ஏன்மிக ஒடுங்கி யிருந்தான் எனின், ஊக்க முடையான் ஒடுக்கம், பொருதகர் தாக்கற்குப்பேரும் தகைத்தாம் என்க.

தகர்—ஆட்டுக்கடா. பொரு என்னும் அடை, வினைமேல் மூண்டு நிற்கும் அதன் வீறுதோன்ற நின்றது.

மேல், ஞாலம் கருதுபவர் காலம் கருதி இருப்பர் என்றார்; அவ்இருப்பு இன்னதன்மைத்தாம் என்பதை இதில் இயைய உணர்த்தினர்.

வலிமிகவுடையவன் பகைமேற் செல்லாமல் காலம் பார்த்து ஒடுங்கியிருக்கும் இருப்பு, பொருகின்ற தகர் தன்பகைபடப் பாய்தற்பொருட்டுப் பின்னே கால்வாங்கும் தன்மைத்தாம் என்பதாம்.

அமராடுகின்ற தகர் பின்னே செல்லுதல் அதன்வென்றிக்கே ஏதுவாதல் போல் ஊக்கமுடையான் ஒடுக்கமும் வெற்றியையே விளைக்கும் என்பார் "ஒடுக்கம் பொருந்தகைத்து" என்றார்.

ஆட்டுக்கடாக்கள் ஒன்றோடு ஒன்று சண்டையிடுங்கால் பின் வாங்கிப் பொருதல் இயல்பு, அங்ஙனம் வாங்குதலால் வலிமிகுந்து அதுபகையினை வெல்லும்; ஆகலால், காலம்பார்த்து ஒடுங்கியிருந்து அதனால் வலிமை மிகுத்துக்கொண்டு பருவம் வந்துழி முனைந்தெழுந்து பகைகெட வெல்லும் உரனுடையானுக்கு அஃது இங்கு ஒப்பாய் நின்றது.

துணைவலிமுதலியன மிகவுடையராயினும் உரிய காலம் வரும் வரையும் பகைமேற் செல்லாமல் அறிவுடையார் ஒடுங்கியிருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நெடுமான்பால் உணரப்படும்.

## கதை

நெடுமான் என்பவன் மலைநாட்டிலே தகடூர் என்னும் நகரிலிருந்த குறுநில மன்னன். அமிழ்துவிளை தீங்கனியை ஔவைக்கு அருளிய ஐயனும் இவனே. இவன் நெடுமான் எனவும், அஞ்சி எனவும், அதிகன் எனவும், அதிகமான் எனவும், அதியமான் நெடுமானஞ்சி எனவும், அழைக்கப்பெறுவான். வண்மையும் வலிமையும் ஒண்மையும் உடையனாய் உவந்துவாழ்ந்ததால் இவன் புகழ் மணம் உலகெங்கும் பரந்தது. அதனால் மறுபுலமன்னர் சிலர் இவன்பால் உறுபகை கொண்டார். ஒரு

வரை பொருவர்தழுவி யிறுதியில் அவர் எழுவராயினர். வளவன், வழுதி, சேரன், திதியன், எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என்னும் அவ் எழுவரும் ஒருநாள் இவன்மேல் உடன்றெழுந்து வந்தார். உற்றதை உணர்ந்த இவன் உள்ளங் கொதித்தான். வலிமிகுந்திருந்தும் உடனே எதிர்ந்து செல்லாமல் காலம் நோக்கி ஒடுங்கியிருந்தான். பகைஎச்சம் தீயெச்சம் போலத்தெறும் ஆதலால் அதனைத்தேயச் செய்யவே ணடுமென்று தெளிந்தான். அமையம் நோக்கி எழுந்து அனைவ ரையும் அடங்க வென்று திருக்கோவலூரையும் சென்றுகைக் கொண்டான். ஒடுங்கிவிட்டான் என்று உவந்திருந்த அவர் இவன் உடன்றுபொருத பின் உடைந்து நொந்தார். இவன் வென்றி யோடு மீண்டு தன் வியனகரடைந்த பொழுது தனது அருமை மனைவி ஓர் இனிய புதல்வனைக் கருவுயிர்த் திருந்தாள். போர்க் கோலத்தோடே அங்குப்புகுந்துநோக்கி வெற்றிக்களிப்போடு விளங்கியிருந்தான். ஊக்கமுடையான் ஒடுக்கம் தகரின்பெயர்ச்சி போல் அவன் வெற்றிக்கே ஏதுவாகும் என்பதை இவன் விளக் கினின்றான்.

கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்
வட்கர் போகிய வளரிளம் போந்தை
உசிக் கொண்ட ஊசிவெண் தோட்டு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரியிரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னும் மாறாது சினனே அன்றே
உய்ந்தன ரல்லரிவன் உடற்றியோரே
செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பா னாவே. புறநானூறு

இது, நெடுமானஞ்சி பகைவரை வென்று புகழுடன் மீண்டு வந்து புதல்வனைக் கண்டபோது அவனது நிலையினை வியந்து ஔவை இசைத்தது. இதனால் இவன் காலமறிந்து ஒடுங்கி நின்ற

தும், பின் கடிது சென்று பகைவரை வென்றதும், பிறவும் புலனும்.

ஊக்கமுடையான் ஒடுக்கம் வெற்றிக்கே ஏதுவாகும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

487 பண்டு மனைவியின்மேல் பாய்ந்தபொழு துந்தருமர்
கொண்டிலரேன் கோபம் குமரேசா—கண்டவுடன்
பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்பர் ஒள்ளி யவர். (எ)

இ—ள்.

குமரேசா! தனது அருமைத் துணைவியைப் பிறர் சிறுமைப்படுத்த விரைந்தபொழுதும் தருமர் சினந்தெழாமல்; ஏன் அடங்கியிருந்தார் எனின், ஒள்ளியவர், பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து உள்வேர்ப்பர் என்க.

ஒள்ளியவர்—அறிவுடையவர். இஃது ஒண்மை என்பதன் அடியாகப் பிறந்தது. ஒண்மை—அறிவு. பொள் என என்றது விரைவை உணர்த்துகின்ற ஒரு குறிப்புமொழி.

புறம்வேரார்—வெளியே வெகுளார். உள்ளத்தில் வெகுளி தோன்றினால் உடம்பில் வேர்வை தோன்றும் ஆதலால் வேர்த்தல் வெகுளியின் காரியமாகும்; அக்காரியமே காரணமாக ஈண்டு உபசரிக்கப்பட்டது தன் அகலமெல்லாம் பொள்ளென வியர்த்துப் பொங்கி எனவும், நுண்முத்தம் ஏற்றியாங்கு மெய்யெலாம் வியர்த்து எனவும், வருவனவற்றுள் அடிகளது மொழிகளும், வெகுளியின் இயல்பும் விளங்கி நிற்றல் காண்க.

அறிவுடையார் பிறர் துயர்செய்தபொழுதே அவரறிய வெளியே வெகுளார்; அவரை வெல்லுதற்கேற்ற காலத்தைக் கருதி உள்ளேயே வெகுள்வர் என்பதாம்.

மேல், ஊக்கமுடையார் ஒடுக்கம் வெற்றிக்கே ஏதுவாயிருக்கும் என்றார்; காலங்கருதி அவர் ஒடுங்கியிருப்பினும் அவருள்ளத்தில் வெகுளி ஒடுங்காது நிற்கும் என்று இதில் உணர்த்தியருளினர்.

வலியுடையராயினும் தமக்கு ஏற்ற காலம் வரும்வரையும் அறிவுடையார் தம் சீற்றத்தை வெளியே காட்டார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தருமர்பால் உணரப்படும்.

## கதை.

தருமரை வலிந்தழைத்து அரசைக்கவர்ந்து துரியோதனன் நலிந்தபொழுதும், துணைவியைப்பற்றித் துகிலுரியத் துணிந்தபொழுதும், தருமர் பொன்னெனவெகுளாது பொறுத்திருந்தார். வெகுண்டதுணைவரையும் வெகுளாதடக்கினர். தாம் உள்வேர்த்திருந்தும் தம்பியரை அடங்கியிருக்கவேண்டுமென்று இவர் தகவுற மொழிந்தார். பின்புஉருவங்கரந்து விராடநகரத்தில்ஒதுங்கியிருந்தபொழுது துரோபதையைக்காதலால் கீசகன் கைப்பற்றவந்தான். அவள் ஓடிவந்து அரசவை முன் ஒல்கி விழுந்தாள். அவனும தொடர்ந்து வந்தான். அதனைத் தருமர் கண்டார். உள்ளே வெகுளிகொண்டார். கொண்டும், அவ்வமயம் யாதும் செய்யலாகாதென்று கால இயல்பை நோக்கி அடங்கியிருந்தார். வீமன் சினந்து அவனை அழிக்கக் கருதி அயல் நின்ற ஒரு மரத்தை அசைத்தான். இப்பொழுது வெளிப்படலாகாதென்று தருமர் குறிப்பால் அவனுக்கு உணர்த்தினர். அவனும் உணர்ந்து ஒதுங்கினன். பின்பு இவர் காலம் பார்த்துத் தன் பகைவரனைவரையும் வகையற வென்றார்.

அடுதொழிற் பலாயனன் அழுத பின்னையும்
கடுமையிற் பின்தொடர் காளை தன்னையும்
படருறக் கண்டுதன் பாங்கர் நின்றதோர்
விடவியைப் பிடுங்குவான் வெகுண்டுநோக்கினன்.

கனிட்டன தெண்ணம் அக்கங்க ளாகிய
முனித்தனை உணர்ந்தவன முகத்தை நோக்கியித்
தனிப்பெரு மராமரம தழல் கொழுந்திடா
துனக்கடும் இந்தனம் அன்றென் றோதினன்.

தருமரது உள்ளடக்கம் இவற்றால் உணரப்படும். ஒள்ளியவர் பொள்ளென ஆங்கே புறம் வேரார்; காலம்பார்த்து உள்வேர்ப்பர் என்னும் உண்மையை இவர் உணர்த்திநின்றார்.

காலம் பார்த்தே அறிவுடையார் வெகுள்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

488 வென்றிமிகு இந்திரனும் வெய்ய கவசரைமுன்
குன்றிநின்றேன் வென்றான் குமரேசா—என்றும்
செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை. (அ)

இ—ள்.

குமரேசா! நிவாதகவசரைக்கண்டு அடங்கியிருந்த இந்திரன் பின்பு காலம்வந்தவுடனே ஏன் அவரை அடங்கவென்றான் எனின், செறுநரைக் காணின் சுமக்க; இறுவரை காணின் தலை கிழக்கு ஆம் என்க.

செறுநர்—பகைவர். இறுதல் என்பதன் அடியாகப்பிறந்த இறு என்னும் எச்சம் வரை எனபதை மருவிநின்றது.

இறுதல்—ஒடிதல், கெடுதல், முடிதல், முரிதல். இறுவரை காணின்—கெடுகாலம் தோன்றினால்.

கிழக்கு என்னும் திசைப்பெயர் இங்குக்கீழ் என்னும் இடத்தை உணர்த்திநின்றது.

மேல், ஒள்ளியவர் காலம் வருந்துணையும் பகைவரை உள்ளே வெகுள்வர் என்றார்; இதில், அவ்வெகுளியை அவர் காணுவகை கரந்து வைத்துக்கொள்க என்றார்.

ஒருவன் பகைமை தோன்றாவண்ணம் மிகவும் பணிந்தால் அவனைப்பகைவர் தம்மைத்தாம் பாதுகாத்தலொழிவர்; அதனால் அவர்க்கு அழிவு தானே உண்டாம் என்பதாம். தன்சுமையே அவர் தலையழிவுக்குக் காரணமாகுமாதலால் "சுமக்க தலைகிழக் காம்" என்றார்.

தனக்கு வெற்றிக்கு ஏற்றகாலம் வரும் வரையும் பகைவரைக்கண்டால் அரசன் பணிந்திருக்கவேண்டும்; அக்காலம் வந்தால் அவர் தலைகிழாக வீழ்ந்து அழிவர் என்பதாம்.

பகைவரது நிலையழிதற்கு உரியகாலம் வரும்வரையும் அவரைக்கண்டால் மிகவும் தாழ்ந்திரு என்பார் "செறுநரைக்காணின் சுமக்க" என்றார். சுமத்தல் ஈண்டுப் பணிதல் மேல் நின்றது அவரை உயர்த்திவைத்து ஒடுங்கி இரு என்றபடி.

கவிழ்க்க தலை யென்று பாடங்கொண்டால் இறுவரைகாணும்வரை செறுநரைச் சுமக்க; கண்டால் தலையைக் கவிழ்க்க என்று கொள்க. கவிழ்த்தல்—தலைகீழாகத் தள்ளுதல்.

காலம் வருந்துணையும் அடங்கியிருந்து, அதுவந்தால் உடனே பகைவரை அடக்கிவிடவேண்டும் என்பது கருத்து.

இசைந்த காலம் வரும்வரையும் தம் பகைவர்க்கு அறிவுடையார் அடங்கியிருப்பர் என்பதும், அவ் அடக்கத்தின் உண்மையை உணராமல் உளங்களித்திருப்போர் ஒழிவர் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை இந்திரன் கண்ணும் நிவாத கவசர்பாலும் உணரப்படும்.

## கதை

நிவாதகவசர் என்பவர் பிரகலாதன் மரபில் வந்தவர். இவர்கள் மூன்றுகோடி அசுரவீரர்கள். எப்பொழுதும் நீங்காத கவசத்தையுடையவர். அதனால் இவர்கட்கு நிவாதகவசர் என்றபெயர். இயமனை நோக்கி அருந்தவம்புரிந்து பெருந்திறலடைந்தவர். மேல் கடலின் அருகிலிருந்த தோயமாபுரம் என்னும் நக

ரில் இருந்தவர். கொடிய செயலினர். நெடிய ஆயுளையுடையவர். இராவணன் திக்கு விசயஞ்செய்துவந்த காலத்தில் விருந்தினனாகி ஈராறு திங்கள் காறும் இவர்கள் நகரில் தங்கியிருந்தனன் என்பர். இவர்கள் இந்திரனிடம் பகைமைகொண்டு அமரரனைவருக்கும் துயர்விளைத்துவந்தார். இவர்களது ஆற்றலுக்கு அஞ்சி இந்திரன் அடங்கிநின்றான். அவன் அடங்கியதை நினைந்து யாதுஞ் செய்யாது அவனை இவர்கள் அவமதித்திருந்தார். அவனும் காலவலியை நோக்கி இவர்களைக் கண்டால் மிகவும் பணிவுடையனாய்ப்பதுங்கிவந்தான். திரேதாயுகத்தின் இறுதியில் இவர்கள் முடிவர் என்று அவன் குறிபார்த்திருந்தான். அருச்சுனன் பரமனை நோக்கித் தவம்புரிந்து படைநலம் பெற்றதை உணர்ந்து அவனைத் தனது நகரில் அழைத்துவைத்துப் பெருவிருந்து செய்தான். ஓர் ஆசனத்தில் உடனிருத்திக்கொண்டு தன் உறுகுறையை உணர்த்தினான்.

தவாதபோர் வலியின்மிக்க தவத்தினர் சாபம் வல்லோர்
சுவாதமே வீசியெல்லா உலகையுந் துளக்குகிற்போர்
விவாதமே விளைக்குஞ் சொல்லர் வெருளியே விளையுநெஞ்சர்
நிவாதக வசத்தரென்னும் பெயருடைக் கொடிய நீசர்.
மற்றவ ரெனக்குநாளும் வழிப்பகை யாகிநிற்போர்
சுற்றவர் வணங்கினாற்கும் கடக்கரும் வலியின்மிக்கோர்
செற்றிட நின்னையன்றிச் செகத்தினில் சிலர் வேறுண்டோ
வெற்றிவெஞ் சிலைகொள்வீர இவ்வரம் வேண்டிற்றென்றான்.

இவ்வகையாக அருச்சுனனிடம் இந்திரன்இசைத்துத் தன்பகைவரை ஈடழிக்கவேண்டினான். சிவனருள்பெற்ற அவன் சினந்தெழுந்துதேர் மேற்சென்று தெவ்வர் ஊரைவளைந்தான். தமக்கு எவரும் நிகரில்லை என்று செருக்கியிருந்த அவ்வசுரர் திகைத்தெழுந்து திரண்டார். நிலையறியாது பொருது தலைதடுமாறி அழிந்தார். காலத்தைக் காணும் வரையும் தன்பகைமையைக் காட்டாமலிருந்த இந்திரன் அதனைக்கண்டவுடனே தன்பகைவர் அழியக் கண்டான். செறுநரைக்காணிற் சுமக்க இறுவரை காணின் அவர் தலைகிழக்காம் என்பதற்கு இவர் இலக்காய் நின்றார். விரிவை.

ப்பாரதத்திலும் நாரதீயத்திலும் காண்க.

காலம் வரும்வரையும் பகைவரைக்கண்டால் பணிந்திருக்க வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

489 குன்றினன் சேடனெனக் கூர்ந்தறிந்த வாயுவன்றேன்
குன்றுமடல் செய்தான் குமரேசா—என்றுமே
எய்தற் கரிய தியைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல். (௯)

இ—ள்.

குமரேசா! ஆதிசேடனோடு வாதுகொண்டிருந்த வாயு தனக்கு அமைந்த காலம் இயைந்தவுடனே தன் காரியத்தை வன் விரைந்து செய்தான் எனின், எய்தற்கு அரியது இயைந்தக்கால், அந்நிலையே செய்தற்கு அரிய செயல் என்க.

எய்தற்கு அரியது என்றது காலத்தை. இங்ஙனங்கொண்டது அதிகாரம நோக்கி என்க. தானே வந்து இயையினல்லது வேறெவற்றானும் எவரும் அதனை எய்தலரிதாதலான் அஃது அரியது என நின்றது. எய்தல்—அடைதல், பெறுதல், சேருதல். இயைதல்—இணங்கல், பொருந்தல், கூடல்.

அந்நிலையே—அது நிலைத்திருக்கும் அப்பொழுதே. உடனே என்றபடி. ஏகாரம விரைவு தோன்ற நின்றது. காலம் இயைதலின் அருமையைக் கால் என்பது காட்டி நின்றது.

மேல், காலம் வரும்வரையும் காத்திரு என்றார்; இதில் அது வந்து கிடைத்தால் வாய்த்ததை உடனே செய்துகொள் என்றார்.

எய்தற்கரிய காலம்வந்து ஒருவனுக்கு இயையுமானால் செய்தற்கரிய காரியங்களை அப்பொழுதே அவன் செய்துகொள்ளவேண்டும் என்பதாம்.

இயைந்த காலம் விரைந்து நீங்குமாதலானும், பின்னும் வந்து இயைதலரிதாதலானும், அஃது இயையாவழியாதும் முடியாது ஆதலானும், அந்நிலையே செய்க என்றார்.

எய்தற்கு அரிய இராமன் இயைந்தவுடனே செய்தற்கு அரிய வாலிவதத்தை அனுமான் செய்துகொண்டதுபோல், காலம் அறிந்து அரசர் தொழில் செய்யவேண்டும் என்பது கருத்து. அரசரை நோக்கி இஃது இங்ஙனம் அமைந்து நிற்பினும் தத்தமக்கு இயன்றதை இதில் உய்த்துணர்ந்து கொள்க.

கிடைத்தற்கு அரிய நல்ல சமயம் கிடைக்கப்பெற்றால் முடித்தற்கு அரிய காரியங்களை அப்பொழுதே அறிவுடையார் முடித்துக்கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வாயுவின்பால் உணரப்படும்.

## கதை.

வாயு என்பவன் திசை காப்பாளருள் ஒருவன். இவன் முதலில் காசிப முனிவருக்குப் புதல்வனாய் அநிலன் என்னும் பெயருடன் விளங்கியிருந்தான். பின்பு அரிய தவங்களைச் செய்தான். அதன் பயனாக வாயுபதத்தை அடைந்தான். இவன் அஞ்சனை என்பவளை மணந்து தன் மண்டலத்திலிருந்து இன்பம் நுகர்ந்து எங்கும் இயங்கி இசைந்து நிற்பான். இவன் உவந்து வீற்றிருக்கும் திருநகருக்குக் கந்தவதி என்று பெயர். வாதம், கால், வளி, மருத்து, வாடை, பவனம், சூதிர், மாருதன், மால், கோதை அரி, சலனன், கந்தவாகனன், முதலிய பல ஏதுப் பெயர்களையுடையவன். வடமேற்றிசைக்குத் தலைவன். வேகத்திலும், வன்மையிலும் இவன் மிகச் சிறந்தவன். நாரதர் மூட்டிய கலகத்தால் ஆதிசேடனுக்கும் இவனுக்கும் வன்மை குறித்து வாதம் நிகழ்ந்தது. அதனால் பகைமை மூண்டது. ஒருநாள் இருவரும் அமர் செய்ய எழுந்தார். அதனை அமரர் தடுத்தார். அமர் புரிதலை ஒழித்து இவரது வலியினை அளந்து அறியுமாறு அவர் அளந்து மொழிந்தார். இருவரும் அமர்ந்து மேருவையடைந்தார். தனது தலைகளால் அம்மேருவின் முடிகளைச்சேடன் அமிழ்த்திக்கொள்ளவும், அவற்றை வாயு பெயர்த்துத் தள்ளவும், வேண்டுமென்று இருவரும் குறித்துக்கொண்டார். அதன்பின் முனைந்து முயன்றார். நெடுநாளாகியும் வாயுவால் முடியவில்லை. செய்தற்கு அரிபது என்று தன் சிந்தை தளர்ந்தான். சேடன் உள்ளே செருக்கி

மகிழ்ந்தான். அவ்வமையம் வானில் ஈது என்ன! புதுமை என்று வானவரோடு நாரதர் ஒரு வஞ்சஞ் செய்தார். கவித்த முடியைச் சேடன் சிறிதுமேல் எடுத்து நோக்கினான். அப்பொழுது வாயு விரைந்து பாய்ந்து மூன்று சிகரங்களை முறித்து வீசினான். சேடன் கலங்கி நாணினான். வாயுவே வென்றான் என்று அமரரும் புகழ்ந்தார். தன் வலி முதலியவற்றால் செய்துகொள்ள முடியாத காரியத்தையும் காலம் அறிந்து விரைந்து செய்ததால் வாயு முடித்துச் சிறந்தான். எய்தற்கு அரியது எய்தினால் அந்நிலையே செய்தற்கு அரியதைச் செய்துகொள்வோரே சிறந்தவராவர் என்பதை அனைவரும் இவன்பால் தெளிந்து மகிழ்ந்தார். விரிவை இலிங்க புராணத்தில் காண்க.

எய்தற்கரிய யாக்கைதனக் கெய்திற்றென்றால் அதுகொண்டு
செய்தற்கரிய அறங்கள்பல செய்துதுயர்கூர் பிறவியினின் (றில்
றுய்தற்கொருமை பெறவொண்ணு துழல்வோ ருடம்பு பொற்கலத்துப்
பெய்தற்குரிய பால்கமரிற் பெய்ததொக்கும் என்பரால்.
(பிரபுலிங்கலீலை)

அடிகள் திருமொழிகளைப் பொன்போலெடுத்துத் தம் கருத்தைப் பொதிந்து சிவப்பிரகாசர் மறுமை நோக்கில் காட்டியுள்ள இந்த ஈண்டுக் காணத்தக்கது.

காலம் வாய்த்தபொழுதே தனக்குரிய காரியத்தை ஒருவன் செய்துகொள்ள வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

490 கீசகன்கைக் கெட்டியபின் கேளாமல் வீமனுடன்
கூசாதேன் கொன்றான் குமரேசா—பேசாமல்
கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து. (௰)

இ—ள்.

குமரேசா! காலங்கருதி ஒடுங்கியிருந்த வீமன் அது வாய்த்தவுடனே தப்பாமல் கைக்கொண்டு கீசகனை ஏன் மாய்த்தான்

எனின், கூம்பும் பருவத்து கொக்கு ஒக்க; மற்று சீர்த்த இடத்து அதன் குத்து ஒக்க என்க.

ஒடுங்கல், சுருங்கல், குவிதல் என்பவற்றை உணர்த்திவருகின்ற கூம்பல் என்னுஞ் சொல் விகுதி குன்றி இங்குப் பருவத்துக்கு அடையாய் நின்றது.

கூம்பும் பருவத்து— ஒடுங்கியிருக்கவேண்டிய காலத்தில். சீர்த்த என்பது சீர்த்தல் என்பதன் அடியாகப் பிறந்த பெயரெச்சம். சீர்த்தல்—சிறப்புக்கொள்ளுதல். சீர்த்த இடத்து—சிறந்த இடத்தில். அஃதாவது தான் செய்யும் வினை இனிது முடிதற்கு ஏற்றகாலம் வாய்த்தபொழுது.

மேல், எய்தற்கரிய காலம் எய்தினல் உடனே செய்தற்கரியதைச் செய்க என்றார்; இதில், அஃது எய்துவரையும் இருக்கும் விதத்தையும், எய்திய விடத்துச் செய்யும் திறத்தையும் தெளிய உணர்த்தினார்.

ஒருவன் ஒடுங்கியிருக்கவேண்டிய காலத்தில் கொக்கைப்போல அடங்கியிருக்கவேண்டும்; உரிய காலம் வாய்த்த பொழுது அது விரைந்து குத்துவதுபோல உடனே தன் காரியத்தை அவன் துணிந்து செய்துகொள்ளவேண்டும் என்பதாம்.

தான் எண்ணிய வினையை இனிது முடித்தற்கு ஏற்றகாலம் எய்தும்வரையும் எதிர்பார்த்திருந்து அஃதெய்தியவுடனே அதனை அரசன விரைந்து செய்துகொள்ளவேண்டும் என்பதை உணர்த்துதற்குக்கொக்கை உவமைகாட்டியது, தனக்குஇசைந்த மீன் எய்தும் வரையும் அசையாதிருந்து எய்திய உடனே அதனை இரைந்து குத்தி எழுந்து செல்லும் அதன் இயல்பு நோக்கி என்க.

அடக்க முடையார் அறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத் தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாங் கொக்கு.

எனவரும் ஔவை மொழியும் ஈண்டு அறியத்தக்கது.

கூகையையும் காக்கையையும் முதலில் இருத்தித், தகரை இடையே வைத்து, கொக்கை இறுதியில் நிறுத்தி அவற்றின் இயல்புகளை எடுத்துக்காட்டிக் காலம் அறிந்து ஒருவன் வினைசெய்ய வேண்டும் என்பதை உணர்த்தியருளிய அடிகளது காலத்தின் காட்சியும், உயிர் வருக்கங்களின் இயல்புகளை உணர்ந்துள்ள மாட்சியும், அவற்றை ஒப்புற உணர்த்தும் ஒண்மையும், ஆயுந்தொறுந் தொறும் இன்பம் சுரக்கின்ற அமிழ்த ஊற்றுக்களாமென்க.

காலம் வருந்துணையும் அடங்கி இருந்து அது வந்தால் அறிவுடையார் உடனே தன் கருத்தை முடித்துக்கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை வீமன்பால் உணரப்படும்.

## கதை

வீமன் விராட நகரத்திலிருக்கும்பொழுது கீசகன் பலவகை இன்னல்களை இழைத்தான். ஆற்றல் மிகுந்திருந்தும் யாதும் செய்யாமல் காலம் நோக்கி இவன் அடங்கியிருந்தான். இவனை மடையன் என்றே கருதி அவன் மதியாது திரிந்தான். சொல்லாலும் செயலாலும் அவன் புரிந்துவந்த பொல்லாதவற்றையெல்லாம் இவன் பொறுத்துவந்தான். எவ்விதத்திலும் அவனைக் காலனுக்கு இரையாக்கிவிடவேண்டும் என்று இவன் பின் கருதித் துணிந்தான். துரோபதை வாயிலாகத் தனியான இடத்துக்கு அவனை வருமாறு செய்தான். வருவதையறியாமல் அவனும் வந்தான். தனக்கு இசைவாக அவன் அமையும்வரையும் இவன அசையாதிருந்தான். அவன் வேறுவித நசையோடு வந்தவனாதலால்

பைங்குலைக் குரும்பையைப் பழித்த கொங்கையாய்
மங்குலைப் புழுகளை வைத்த கூந்தலாய்
கங்குலிற் கால்வழி காட்ட வந்தநின்
றிங்குலப் புறமென தாவி யீயவோ.

கிஞ்சுக மலர்ந்தநின் கிள்ளை வாய்மையால்
அஞ்சலென் றோருரை அளித்தல் காண்கிலேன்
நஞ்சண விழிக்கடை நயந்த பார்வைகொண்
டெஞ்சுமென் உயிரினை எடுப்ப தென்றுகொ,

என்று அடுத்து வந்தான். அமையும்வரையும் அடங்கியிருந்த இவன் உடனே விரைந்தடர்ந்து தன் வேலையை முடித்தான். கூம்பும் பருவத்துக் கொக்கு ஒக்க; சீர்த்த இடத்து அதன் குத்து ஒக்க; என்பதை இவன் குத்தி உணர்த்தினான். விரிவைக் கீசக வதையில் காண்க.

காலம் வாய்த்தவுடனே தன் கருத்தை ஒருவன் விரைந்து முடித்துக்கொள்ளவேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

> சீலமல்லன நீக்கிச் செம்பொற்றுலைத்
> தாலமன்ன தனிநிலை தாங்கிய
> ஞாலமன்னற்கு நல்லவர் நோக்கிய
> காலமல்லது கண்ணும் உண்டாகுமோ. (இராமாயணம்)

> மிகைமிக் கியற்றித் திரிந்திடினும் வெல்லுங்காலம் வருமளவும்
> பகைமை புறத்தில் தோற்றமல் பகைவர்தம்மைப் பண்போடு
> நகைசெய் தமர்போல் சுமந்திடுக நாடுங்காலம் வந்துவிடின்
> தகைசெய் வினையை அவ்வளவில் தப்பாவண்ணம் முடித்திடுக.
> (விநாயகபுராணம்.)

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

பகைவரை வெல்லக்கருதிய அரசர், தமக்கு ஏற்ற காலத்தை இனிதறிந்தே வினைமேல் செல்லவேண்டும். பருவமறிந்து வினைசெய்தொழுகுவார் திருவினையடைந்து சீர்பெற்றுயர்வார். பருவங்குன்றாமல் அறிவோடு வினைசெய்வார்க்கு எவ்வகை வினைகளும் எளிதில் முடியும். காலங்கருதிக் காரியம் செய்யின் ஞாலமுழுதும் கைவசமாகும். படைவலிமுதலியன உடையராயினும் காலங் கருதியே அறிவுடையார் காத்திருப்பார். வலியுடையான் ஒடுங்கியிருப்பின் அஃது அவன் வென்றியடைதற்கே ஏதுவாகும். பகைவர் மிகைசெய்தாலும் பருவம் இல்லையானால் அறிவுடையார் வெகுளார். காலம் வரும்வரையும் பகைவர்க்கு அறிவுடையார் பணிந்தேயிருப்பர். எய்தற்கரியது எய்தினால் உடனே செய்தற்கரியதைச் செய்துகொள்ளவேண்டும். காலம் வருந்துணையும் கொக்கைப்போல் அடங்கியிருக்கவேண்டும். அது வந்து வாய்த்தால்

அது குத்தவருமேபோலக் காரியங்களை விரைந்து செய்துகொள்ள வேண்டும்.

சகூ-வது காலமறிதல் முற்றிற்று.

---

# 50-ம் அதிகாரம் இடனறிதல்

அஃதாவது தன் வினை இனிது முடிதற்கு ஏற்ற இடத்தை அரசன் எதிருற அறிதல். வலியும் காலமும் அறிந்து வினைமேற் செல்லும் ஒருவனுக்கு இவ் அறிவு உறுதியாக வேண்டுமாதலால் இஃது ஈண்டு வைக்கப்பட்டது.

491 அன்று தொடங்கா தடங்கிநின்றான் காரிபின்பு
குன்றுமேன் வென்றான் குமரேசா—என்றும்
தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது. (க)

இ—ள்.

குமரேசா! முன்பு தொடங்காமல் நின்ற காரி இடங்கண்ட பின் ஏன் தன் போரைத் தொடங்கினான் எனின், முற்றும் இடம் கண்டபின் அல்லது எவ்வினையும் தொடங்கற்க; எவரையும் எள்ளற்க என்க.

முற்றும் இடம்—வினை இனிது முடிதற்கு ஏற்ற இடம். முற்றும் கண்டபின என்று கொண்டு முழுதும் அறிந்தபின் எனவுங் கொள்ளலாம். முற்றும் என்பது இதில் வினை எச்சமாகும். இனி, முற்றும இடம் என்பதை முற்றுதற்கு ஆன இடம் என்று கொண்டு, பகைவரை என்னும் செயப்படுபொருள் வருவித்துங் காணலாம்.

எவ்வினையும்—எவ்வகையான காரியத்தையும். உம்மையும் வினவும் ஒருங்கியைந்து எஞ்சாமையை இதில் உணர்த்திநின்றன.

தன்காரியம் இனிது முடிதற்குத் தகுதியான இடத்தைக் காணும்வரையும் யாதொரு வினையையும் தொடங்கலாகாது; எவரையும் இகழலாகாது என்பதாம்.

வலியும் காலமும் அமைந்திருந்தாலும் இடம் அமையவில்லையானல் வினை செய்ய முடியிடலாகாது என்பது கருத்து. பகைவரை வெல்லக்கருதிய அரசன் அதற்கேற்ற இடத்தை முதலில் அறிந்துகொள்ளாமல் அவரை இகழ்ந்து முனைந்து செல்லின் அஃது இனிது முடியாது பழுதுபடும்; அதனல் இழிவும் அழிவும் தனக்கே எய்திவிடும் ஆதலால் "தொடங்கற்க; எள்ளற்க" என்ருர். இடங்காணுமளவையும் செயலாலுமேயன்றிச்சொல்லாலுங்கூடத் தன் வினையை ஒருவன் வெளிப்படுத்தலாகாது என்பது குறிப்பு.

எண்ணிய வினை இனிது முடிதற்கு ஏற்ற இடத்தைக் கண்டபின்னரே அறிவுடையார் அதனைத் தொடங்குவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காரிபால் உணரப்படும்.

## கதை.

காரி என்பவன் திருக்கோவலூரிலிருந்து அரசுபுரிந்த ஒரு குறுநில மன்னன். பெண்ணையாற்றை அடுத்திருந்த பெரியநிலப் பகுதி இவனுக்கு உரிமையாயிருந்தது. அதற்கு மலையநாடு என்று பெயர். அதனல் மலையமான் திருமுடிக்காரி என்று இவன் பேர்பெற்று விளங்கினன். கடைவள்ளல்கள் எழுவருள் ஒருவன். வறியவர் வந்து இவன் திருமுகத்தை ஒரு முறை கண்டால் அதன்பின்பு அவர் வறுமையைக்காணுர். எவ்வமையம் எவர் வந்து இவன்பால் எதை வேண்டினும் அதனை அவர் தவருமல் அடைவார். இராகு காலத்தில் தீய ஓரையில் எழுந்தும், காக்கை இடம் பாய்தல் முதலிய சகுனத் தடைகள் வாய்ந்தும், வழிக் கொண்டுவந்த ஒருவன், இவன் சமயமறியாமல் புகுந்து முறைமையறியாமல் முன்னின்று தன் குறையினை நீக்குமாறு கூறினன். அவனது அறியாமைக்கு இரங்கி அரிய பொருள்கள்பல உதவி அவனை அன்புடன் உய்த்தான். இதனை உடனிருந்து கண்ட புலவர் திலகராகிய கபிலர் இவனது உயர்ந்த வண்மையை உவந்து புகழ்ந்தார்.

நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்

வறிது பெயர்குவர் அல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கும் அருவிப்
பீடுகெழு மலையற் பாடியோரே. கபிலர்.

இதனால் இவனது வண்மையும், உயர்குண உண்மையும், பிறவும் புலனும். இவ்வள்ளல் எடுத்த வினையைப் பழுதுபடாமல் முடித்தேவிடுவன். தன்னோடு பகைத்தவரனைவரையும் இடங்கண்டு சென்றே இவன் அடங்கவென்றான். இடங் காணும் வரையும் ஒன்றையும் தொடங்கான். எவரையும் இகழான். இவன்பால் தோல்வியுற்றவரும் இவன் சால்பினை வியந்து மகிழ்வர். போரில் வெற்றிபெறவேண்டுமாயின் காரி வரவேண்டுமென்று வீரர் புகல்வார். பெருநற்கிள்ளி என்னும் சோழனொருவன் சேரனோடு பலமுறையும் பொருது தோற்று இறுதியில் இவன்பால் வந்து குறையிரந்துநின்றான். இயல்பாகவே இவன்பாலும் அவன் பகைமைகொண்டிருந்தான். ஆயினும் அதுபொழுது அவனை வெல்ல இயலாது என்று இவன் அடங்கியிருந்தான். அவனை வெல்லுதற்கு ஏற்ற இடத்தை இவன் நன்கு அறிந்து சென்று அவனை வென்று விளங்கினான். வெல்லப்பட்ட அவனும் இவனது வினைமாட்சியையும் மனமாட்சியையும் வியந்து போற்றிப் பின்பு நயந்திருந்தான். இடங்காணின் அல்லது அறிவுடையார் எவ்வினையும் தொடங்கார் என்பதை இவன் தொடங்கி உணர்த்தினான்.

குன்றத்தன்ன களிறு பெயரக்
கடந்தட்டு வென்றோனும் நிற்கூறும்மே
வெலீஇயோன் இவன் என
கழலணிப் பொலிந்த சேவடி நிலங்கவர்பு
விரைந்து வந்து சமரந் தாங்கிய
வல்வேல் மலையன் அல்லனாயின்
நல்லமர் கடத்தல் எளிதுமன் நமக்கெனத்
தோற்றோன் தானும் நிற்கூறும்மே
தொலைஇயோன் இவன் என
ஒருநீ ஆயினை பெரும பெருமழைக்

இருக்கை சான்ற உயர்மலைத்
திருந்தகு சேஎய்நிற் பெற்றிசி னோர்க்கே. (புறநானூறு.)

இதனால் இவன், வினை தொடங்கும் திறனும், இடன் அறியும் இயல்பும், பகை வெல்லும் உரனும், விளங்குதல் காண்க.

இடனறிந்த பின்பே ஒருவன் வினை தொடங்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

492 இண்டோன் வலிமிகுந்தும் செய்பவரண் சேர்ந்துயர்வு
கொண்டான் மதுவேன் குமரேசா—கொண்ட
முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவுந் தரும். (உ)

இ—ள்.

குமரேசா! இயல்பாகவே வலிமிகுந்திருந்தும் அரண்வலியைச் சேர்ந்து ஏன் மது உயர்வடைந்தான் எனின், முரண் சேர்ந்த மொய்ம்பினவர்க்கும், அரண் சேர்ந்து ஆம் ஆக்கம் பலவும் தரும் என்க. உம்மை இரண்டனுள் முன்னது உயர்வு சிறப்பையும் பின்னது முற்றையும் உணர்த்தி நின்றது.

முரண் என்னுஞ் சொல் வலி, மாறுபாடு, போர் முதலியவற்றை உணர்த்திவரும். மொய்ம்பு—தோள், வலி.

முரண்சேர்ந்த மொய்ம்பினவர்—வலிபொருந்திய தோள்களையுடையவர். வீரரை வியந்து கூறுங்கால் அவரது மேன்மை முழுதையும் தோள்மேல் ஏற்றித் தோள்வலியர் என அவரை வியந்து கூறுதல் மரபு.

நீடிய அரக்கர் சேனை நீறுபட்டழிய வாகை
சூடிய சிலையிராமன் தோள்வலி கூறுவோர்க்கே.

என்றதும் காண்க. இனி, போர் அமைந்த வலியினர் எனவும் மாறுபாட்டோடுகூடிய வலியினர் எனவும் இது பொருள்படும்.

அரண் என்றது பகைவர் நலியாதபடி தன்னைப் பாதுகாத்துக்கொள்ளத்தக்க இடத்தை. மேல், தனக்கு இனிய இடத்தைக் காணும் வரையும் ஒருவன் வினையைத் தொடங்கலாகாது என்றார்; வலியுடையாரும் அதனைக்கருதி நிற்கவேண்டுமோ என்பார்க்கு இஃது அருளிய தென்க. சிறந்த தோள்வலி யுடையவர்க்கும் அரணைச் சேர்ந்து ஆகின்ற ஆக்கம் பல நலங்களையும் பயக்கும் என்பதாம்.

தக்க வலியுடையார்க்கும் இடவலி மிக்கமேன்மையை அடைவிக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மதுவின்பால் உணரப்படும்.

கதை.

மது என்பவன் ஓர் அசுர வீரன். அருந்தவங்களைச் செய்து பெரு நலங்களை அடைந்தவன். உமாபதி அருளிய முத்தலைச்சூலம் ஒன்றை எப்பொழுதும் கைத்தலத்திலுடையவன். ஆண்மையோடு அமைதியும் அமையப்பெற்றவன்.

மன்னவர் மன்னு முன்னாள் மதுவெனுந் தான வேந்தன்
தன்னெறி திரிவிலாத வீரன் தருமமுந் தயாவு மிக்கோன்
பிஞ்ஞகன் அருளால் பெற்ற பெருவலித் திரிசூலத்தை
அனையது கையதாக விளிவிலா ஆயுப்பெற்றான்.

என்று இராமன் திருமுன் முனிவர்களும் இவனைப் புகழ்ந்து கூறினர். தன தகுதிக்கேற்ப யமுனை நதிக்கரையில் ஓர் அழகிய நகரை அமைத்தான். இவன் பெயரால் அது மதுபுரம் என்று அழைக்கப்பட்டது. மிக்க அரண்வலியுடையது. அதிலிருந்து இவன் அரசு புரிந்தான். ஆற்றலுடையேம் என்று அகங்கரிப்போரிடத்தே தான தன் ஆற்றலை இவன் காட்டினன். செருக்கி நின்ற அரக்கர் பலரையும் இவன் நெருக்கிவென்றான். சென்ற இடந்தோறும் அரண் சேர்ந்து நின்றே இவன் பகைவரை அடக்கி வென்றான். பேரழகமைந்தவளும் இராவணனுக்குச் சிறியதாயுமாகிய கும்பீநசி என்பவளை இவன் குறிக்கொண்டிருந்தான். அவளும் இவன்பால் கண்சாய்த்திருந்தாள். ஒருநாள் கறங்குகால்

புகாத இலங்கையிலும் புகுந்து அவளைக் கவர்ந்து கொண்டுவந்து தன் கடி நகரில் வைத்துக் கலந்து மகிழ்ந்தான். இதனைப் பின்பு வீடணன் அறிந்து இராவணனிடம் கூறினான். அவன் கொதித்தான்.

பூனை செவியை எலிமோந்து புலியைப் புல்வாய் தொடர்ந்ததெனத்
தானைக் கடலைக் கலக்கினனை தாயர்க்கிளையாள் தனைக்கொண்டென்
மானக்குலத்தை வரம்பழித்தான் மதுவே கேட்டும் வாழ்ந்தோநம்
சேனைக் கடலை மதுபுரத்திற் செல்க என்றான் சினமிக்கான்.

பின்பு படைகள் புடைசூழ எழுந்து இராவணன் மதுபுரத்தை அடைந்தான். அரண்வலியின் திண்மையை அறிந்து திகைத்தான். இதுவரையும் எவராலும் நலிவின்றி யிருந்த மது இவனது வரவை யறிந்தும் துயில்கொண்டவன்போல் நகை கொண்டிருந்தான். கும்பீநசி வெளியே வந்து இராவணனையடைந்து தனது இன்ப நாயகன்பால் அன்புகொள்ளும்படி பணிந்து வேண்டினாள். அவனும் மதுவினது மனவலி முதலியவற்றை வியந்து அமைந்த உறவோடு உவந்து புகுந்தான். பகையோடுவந்த இராவணன் மதுவோடு பின் உறவாகி நின்றான். இடவலியாலும் உடல் வலியாலும் எவரினும் இவன் உயர்ந்து விளங்கினான். இவனது அரண்வலியை அஞ்சி அமரரும் இவனோடு தமராகி நின்றார். முரண்சேர்ந்த மொய்ம்பினவர்க்கும் அரண் சேர்ந்தாம் ஆக்கம் பலவும் தரும் என்பதை உலகம் இவன் பால் அமைய உணர்ந்தது. விரிவை உத்தரகாண்டத்தில் காண்க.

இடவலியால் ஒருவனுக்குப் பல நலங்களும் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

493 ஆற்றாச் சிகண்டியுமுன் ஆற்றிவென்றான் வீடுமனேர்
கூற்றெனநின் றென்னே குமரேசா—ஊற்றமொடு
ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின். (௩)

இ—ள்.

குமரேசா! ஆற்றமாட்டாத சிகண்டியும் வீடுமனை வென் அட்டு நின்றான் எனின், இடன் அறிந்து போற்றார் கண் போற்றிச் செயின், ஆற்றாரும் ஆற்றி அடுப என்க.

ஆற்றாரும்—வலியரல்லாரும். இஃது ஆற்று என்பதன் அடியாகத்தோன்றிய எதிர்மறைப் பெயர். ஆற்றுவார் என்பது இதன் நேர்மொழி. உம்மை இழிவை உணர்த்தி நின்றது.

ஆற்றி அடுப—வலியராய் வெல்வர். பன்மைப்பாலையும் எதிர்காலத்தையும் பகர விகுதி காட்டி நின்றது.

அடுதல்— வெல்லல், கொல்லல்.

போற்றார்—பகைவர். போற்றுதல் செய்யார் என்னும் ஏதுவான் வந்தது. போற்றுதல்—பேணுதல், புகழ்தல்.

மேல், வலியுடையார்க்கும் இடனமைவு பல நலங்களைத் தரும் என்றார்; இதில் மெலியார்க்கும் அது வலிமையை உதவி மேன்மையைப் பயக்கும் என்றார்.

இடனறிந்து நின்று தம்மைப் பாதுகாத்துக்கொண்டு பகைவர் மாட்டு வினைசெய்வாராயின் வலியரல்லாதாரும் வலியராய் வெல்வர் என்பதாம்.

உடல்வன்மை படைவன்மைகளினும் இடவன்மையே பகைவரை அடுதற்கு முதலில் வேண்டும் என்பது குறிப்பு. தானத்தின் பலமேயன்றித் தன் பலம் இல்லையம்மா என்றதுங் காண்க.

ஆற்றமாட்டாதவரும் இடனமைந்தால் பகைவரை வென்று புகழடைவர் என்பது கருத்து.

மெலியராயினும் இடனறிந்து வினை செய்வார்க்கு வென்றியுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சிகண்டியால் உணரப்படும்.

கதை.

சிகண்டி என்பவன் பாஞ்சாலதேசத்து அரசனாகிய யாகசேனனிடம் தோன்றினான். அலிவடிவினன். தன் அலிவடிவத்

ணைத் தூலகர்ணன் என்னும் கந்தருவனால் மாற்றி ஆண்வடிவு
கொண்டவன். இவன் முற்பிறப்பில் காசிதேசத்து மன்னனுக்குப்
புதல்வியாயிருந்து வீடுமர் மீது செற்றங்கொண்டு இப் பிறப்பை
அடைந்தான். வில்வித்தையில் இவன் மிகத்தேர்ச்சி பெற்றவன்.
ஆயினும் உள்ளத்தில் ஊக்கமில்லாதவன். திட்டத்துய்மனோடு
எப்பொழுதும் இவன் சேர்ந்து திரிவான் பாரதப்போரில் பாண்
டவர்கட்கு இவன உதவியாய் நின்று வேண்டுவனசெய்தான். எவ்
வகையிலாவது வீடுமரை வென்றுவிட வேண்டுமென்று இவன்
கன்றி யிருந்தான். அதற்கு வேண்டிய காலமும் இடமுங் கருதிப்
பல கடுஞ் சூழ்ச்சிகளைச் செய்தான். சேனைத் தலைவராய் நின்ற
வீடுமர் பத்தாம் நாட் போரில் படைகள் புடைசூழ எழுந்தார்.

சுற்றறுக வில்லினன் தொடைமிடைந்த தூணியன்
கொற்றவாகை வாளினன் கூரவீர வேலினன்
மற்றுமாயு தங்களோடு மன்னரோடும் வார்முரா
செற்றுமாரவத்தினோடும் அடுகளத்தி னெய்தினான்.

என்றபடி முனைமுகத்தில் எய்தினார். இருதிறச் சேனை
கட்கும் பெரும் போர் மூண்டது. அரிய வீராகிய அவர்
படைகளை முரியவென்று முன்னேறிவந்தார். விசையன் போய்
எதிர்நின்று தன் வன்மையைக் காட்டினான். அவ்வமையம் சிக
ண்டி இடனறிந்து புகுந்தான். தனக்கு யாதும் நலிவில்லாதபடி
அருச்சுனனுக்குப் பின்னே அமைந்து நின்றுகொண்டு பலகணை
களை இடையே தொடுத்தான். முன் இசைந்திருந்த இசைவினாலும்
அரணமைந்து நின்று பின் இவன் வினைசெய்ததாலும் அவர் இட
ருற்று நொந்தார். போராற்றலுடைய அவரை ஓராற்றலுமில்லாத
இவன் இடவலியால் உடன்று வென்றான். இடனறிந்து செயின்
ஆற்றாரும் ஆற்றி அடுவர் என்பதை இவன் ஆற்றி உணர்த்தினா
ன். விரிவை வியாசபாரதத்தில் காண்க.

இடனறிந்து வினைசெய்தால் எவரும் வெல்வர் என்பது
இதனால் கூறப்பட்டது.

494 சென்றுநின்று சத்துருக்கன் செய்தான் இலவணனேன்
குன்றி அழிந்தான் குயமேசா—என்றுமே
எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். (ச)

இ—ள்.

குயமேசா! இடனறிந்து சென்று சத்துருக்கன் வினை செய்தான்; இலவணன் ஏன் தான் எண்ணியதை இழந்து இழிந்து அழிந்தானெனின், இடன் அறிந்து துன்னியார் துன்னிச் செயின், எண்ணியார் எண்ணம் இழப்பர் என்க.

எண்ணியார்—எண்ணியிருந்தவர். எண்ணுதல் வினைக்கு இயைந்த பொருளை எண்டு இயைதலுக்கொள்க.
இடனறிந்து துன்னியார்—வினைசெய்தற்கு ஏற்ற இடத்தினை அறிந்து சென்றவர். துன்னல் என்பது தைத்தல் நெருங்கல் அடுத்தல்களை உணர்த்திவரும்.

துன்னிச்செயின்—நெருங்கிச் செய்வாராயின்.

மேல், வலியரல்லாதாரும் இடனறிந்து வினைசெய்யின் வலியராய் வெல்வர் என்றார்; இதில், அவரால் பகைவர் எண்ணம் யாதும் பலியாதென்றார். தம்பகைவரை வேரறவெல்ல வேண்டுமென்று நெடுங்காலமாக எண்ணியிருந்த திண்ணியரும் இடனறிந்து நெருங்கி வினைசெய்வார் முன் படையுடைந்து தொலைவர் எனபார் "துன்னியார் துன்னிச் செயின், எண்ணியார் எண்ணம் இழப்பர்" என்றார்.

தாம் வினைசெய்தற்கு இசைந்த இடத்தை அறிந்து சென்ற அரசர் நெருங்கிச் செய்வாராயின், அவரை வெல்வதாக எண்ணியிருந்த பகைவர் தம் எண்ணத்தை இழப்பர் என்பதாம்.

வெள்ளமோரேழு பத்துக் கணித்தவன் சேனையோடும் விரைவினோடி வடதிசைவாயில் முற்றிக் கள்ளனை வரவு நோக்கி நின்ற வள்ளல் போல இடனறிந்து நின்று நெருங்கி வினைசெயின் எவரையும் வென்றுவிடலாம் என்பது கருத்து.

இடனறிந்து வினைசெய்வார் முன் பகைவர் எண்ணம் பலி யாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இலவணன்பால் உணரப்படும்.

கதை.

இலவணன் என்பவன் அசுரவீரனாகிய மதுவின் புதல்வன். சிறந்த வரபலங்களையுடையவன். விற்போரிலும் மற்போரிலும் இவன் மிகவும் வல்லவன். மன்னர் பலரை வென்று இன்னிசை கொண்டவன். பெரு வீரனாகிய மாந்தாதாவும் இவனோடு அமர் செய்து மாண்டான். அமர் செய்வதில் எவரும் தனக்கு நிகரில்லை என்று இவன் எண்ணியிருந்தான். இவனது கொடுந்தன்மையை இராமர் அறிந்து தன் தம்பியாகிய சத்துருக்கனை இவன் மேல் ஏவினர். அவ் இளையவன் சில படையோடெழுந்து முனிவர் சிலருடன் இவனது நிலைமையை உணர்ந்து முடிவில்வந்து மதுபுரத்தை வளைந்தான். இலவணன் அறிந்து வெளியே வந்தான். படைகளைப் புடைசூழ வைத்து இடனறிந்து மிடலோடு நிற்கும் அவ் இளங்குமரனைக் கண்டான். இகழ்ந்து சிரித்து 'நீ யார்' என வினவினான். வரன் முறையை அவன் உரனோடுரைத்தான்.

என்னுடைய தமையனும் இராவணனை இருங்கிளையோ
டேன்றுகொன்ற
உன்னுடைய தமையனும் இராகவனென் றிருந்தவனை
உணர்ந்திலாதேன்
என்னுடைய பழம் பகைவன் தம்பிநீ என்னிடைவந்
தகப்பட்டாயின்
றுன்னுடைய உயிர்கொள்வல் எனஉரைத்துப்பின்னும்
ஈதுரைக்க லுற்றான். [1]

தெவ்வழிக்கும் நிலைதரித்த திறலுடைய மாந்தாதா
சேனை யோடென்
கைவழிவந் தகப்பட்டுக் கனலாகி ஒழிந்தமைநீ
கழறக் கேட்டும்
உய்வழிபோன் நிலையின்றன் உயர்சேனை யதனொடுமென்
உழைவந் துற்றாய்
அவ்வழியிற் பிறந்தோருக் கறியாமல் வாவந்த
அழகே தென்றான். [2]

இங்ஙனம் செருக்கோடு கூறிய இவனுடைய சிறுமொழிகளைச் சத்துருக்கன் கேட்டான். "நீ சொல்லிய எவற்றிற்கும் என் வில்வாயிலாகவே பதில்வரும்" என்று தன் வில்லை வளைத்தான். இவனும் வெகுண்டு அமர் புரிந்தான். முன் பின் இவன் எண்ணியொன்றுஞ் செய்யாவகை தன்னைக் காத்துப் படையோடு துன்னி நின்று சத்துருக்கன் துணிந்து செய்தான். பகைவரை எளிதில் வென்றுவிடலாம் என்று இவன் எண்ணியிருந்தும் அவன் துன்னிச்செய்ததால் இவன் தொலைந்து மாய்ந்தான். இடன் அறிந்து துன்னியார் துன்னிச் செயின், எண்ணியார் எண்ணம் இழப்பர் என்பதை இவன் இழந்து காட்டினுன். விரிவை இராமாயணத்தில் காண்க.

இடனறிந்து நின்று வினை செய்வாரை எவரும் வெல்லமுடியாது என்பது இதனால் கூறப்பட்டது.

---

495 கண்ட முதலை கசேந்திரனை நீள்புனலுட்
கொண்டுவென்ற தென்னே குமரேசா—மண்டு
நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற.

இ—ள்.

குமரேசா! வலிமிகுந்த கசேந்திரனையும் அன்று ஏன் ஒரு முதலை வென்றது எனின், முதலை நெடும் புனலுள் வெல்லும்; புனலின் நீங்கின் அதனைப் பிற அடும் என்க.

முதலை வெல்லும்; பிற அடும்; எனப் பிறித்து நோக்குக. அடும் என்னும் வினைக்கு எழுவாயாய் இறுதியில் நின்ற பிற என்னும் பன்மைப் பெயர் செயப்படுபொருளாகவும் முன்சேரநின்றது.

நெடும்புனல்—நெடிய நீர். என்றது ஆழ்ந்து அகன்றநீர்நிலையை. முதலை—நீர்வாழுயிர்களுள் ஒன்று. வன்மீன் எனவும், கராம் எனவும், இடங்கர் எனவும் அது வழங்கப்படும்.

தனக்கு ஏற்ற இடத்தினை இனிதறிந்து நின்றே ஒருவன் வினைசெய்யவேண்டும் என்று மேல் அருளிவந்த அடிகள் அவ்வுண்மையைக் காட்சி வாயிலாக உறுதிபெற உணருமாறு இதில் உணர்த்தியருளினர்.

நெடிய நீர்நிலையின் பிறவுயிர்களை எல்லாம் முதலை வெல்லும்; அப்புனலைவிட்டு நீங்குமாயின், பிறஎல்லாம் அதனைக் கொல்லும் என்பதாம்.

தனக்கு வலி மிகுதியான நீரில் வந்து அகப்பட்டால் எத்துணை வலிய உயிர்களையும் முதலை எளிதில் இழுத்துக்கொல்லும்; அது நிலத்தில் வந்துவிட்டால், எளிய பிராணியும் அதனை விரைவில் ஈர்த்துச்செல்லும்; இவ்வுண்மையை ஈண்டு எடுத்துக்காட்டியது, தமக்கு நிலைபரன இடத்தில் நின்றே அரசர் வினைசெய்ய வேண்டும் என்பதை உணர்த்துதற்கெனக. இது பிறிது மொழிதல் என்னும் அலங்காரமாம்.

வலியராயினும் தனக்கு நிலையில்லாத இடத்தில் புகுந்தால் மெலிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கசேந்திரன்பால் உணரப்படும்.

## கதை

கசேந்திரன் என்பது தெய்வத்தன்மை வாய்ந்த ஒரு மதயானை. முதலில் இது இந்திரத்துய்மன் என்னும் அரசனாக இருந்தது. குறுமுனிவர் சாபத்தால் பின்பு பெரியயானையாக மாறியது. சொல்லாடல் ஒன்றுதவிர மற்றெல்லாவுணர்ச்சியும் இஃது எய்தி இருந்தது. அமரர்கட்கு இந்திரன்போல யானைகட்கு இது தலைமை பூண்டிருந்தது. அதனால் இது கசேந்திரன் எனப்பெற்றது. கசம்—யானை. வலியாலும் உணர்வாலும் தன் இனத்துக்கெல்லாம் முதன்மையாகி இது விளங்கிவருங்கால் ஒருநாள் ஆழ்ந்தகன்ற நீர் நிலை ஒன்றிற்புகுந்து நீர் பருகிநின்றது. சாபத்தால் அங்கு வந்து கிடந்த முதலை ஒன்று இதன் காலைப்பற்றிக்கொண்டது. இது வெருண்டு விரைந்து வெளியேற முயன்றது. அஃது இறுகக் கௌவிக்கொண்டு உள்ளே ஈர்த்தது. நெடிது முயன்றும் அதனை

வெல்ல இதனால் முடியவில்லை. மெலிந்து தளர்ந்தது. முடிவில் திருமாலை நினைந்து பெருவீரிட்டது. அவ்வொலிக்குறிப்பு ஆதி மூலமே! என்று அமைந்தெழுந்தது. அதனால் அவர் விரைந்தோடி வந்து அதனை அழித்து இதனை ஆதரித்தருளினர். பெருவலியுடையதாயிருந்தும் தனக்கு நிலையில்லாத இடத்தில் புகுந்ததால் இது நிலைகுலைந்து நொந்தது என்று அனைவரும் இனிதுணர்ந்து சென்றார். நெடும்புனலுள் எதையும் முதலை வெல்லும் என்பதற்கு இஃது இலக்காய் நின்றது. இடனறிந்தே அரசர் வினை செய்ய வேண்டுமெனபதை வடநூலாரும் இதனிடமாகவே உணர்த்தினர். விரிவைக் கசேந்திரமான்மியத்தில் காண்க.

மாடுபறறி இடங்கர் வலித்திடக்
கோடுபற்றிய கொற்றவற் கூப்பதோர்
பாடுபெற்ற உணர்வின் பயத்தினால்
வீடுபெற்ற விலங்கும் விலங்கரோ. (இராமாயணம்)

இச் சரிதம் இராமபிரானாலும் இங்ஙனம் குறிக்கப்பட்டுள்ளது.

தனக்கு வலியான இடத்தில் நின்றே ஒருவன் வினைசெய்ய வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

496 வானுலகை வென்றுவந்தும் மண்ணுலகில் கட்டுண்டான்
கோனிலங்கை மன்னனேன் குமரேசா—ஆன
கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து. (கூ)

இ—ள்.

குமரேசா! வானுலகையெல்லாம் ஓட வென்ற இராவணன் மண்ணுலகில் வந்து வாலி வாலிலும், கார்த்தவீரியன் கையிலும் ஏன் கட்டுண்டான் எனின், கால்வல் நெடுந்தேர் கடலில் ஓடா; கடல் ஓடும் நாவாயும் நிலத்து ஓடா என்க.

ஓடா என்னும் பன்மை வினைகட்கேற்ப எழுவாய்களையும் கொள்க.

கால்வல் நெடுந்தேர்—கால்கள்வலிய நெடியதேர். கால்கள் என்றது தேருருளைகளை. மக்கட்குக் கால்கள்போல் அஃதியங்குதற்கு அமைவாயிருத்தலினால் அவை கால் என நின்றது. சகடக் கால்என்றதுங் காண்க. வன்மையும் நெடுமையும் தேர்க்கு அடையாய் நின்று அதன் தன்மையை உணர்த்தின.

நாவாய்—மரக்கலம்; கப்பல் என்று இப்பொழுது இது வழங்கப்படுகின்றது. உம்மை எச்சமும் சிறப்பும் இசைய நின்றது.

மேல், நீர்வாழுயிர்களுள் ஒன்றை எடுத்துக் காட்டி இடவலியா லெய்தும் பெருமையை விளக்கினர்; இதில், நீரிலும் நிலத்திலும் இயங்குகின்ற இரண்டு உயிரில்பொருள்களை விளக்கி இடவலியின் சிறப்பை உறுதிபெற உணர்த்தினர்.

கால்வலிய நெடிய தேர்களும் கடலில் ஓடமாட்டா; கடலில் ஓடும் நாவாய்களும் நிலத்தின்கண் ஓடமாட்டா என்பதாம்.

படை வலியும் உடல்வலியும் உடையராயினும் இடமறியாது புகுந்தால் யாதும் முடியாதென்பார் "கால்வல் நெடுந்தேர் கடல் ஓடா"என்றார். மேற்குறித்த அலங்காரத்தையே இதுவும் மேவி நிற்றல் காண்க.

சிறந்தவலியுடையராயினும் இடமறியாது செல்லின் இழிவே அடைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராவணன்பால் உணரப்படும்.

கதை.

இராவணன் எழுந்தருளியிருக்கின்ற அரசமண்டபத்துள் ஒருநாள் நாரதர் வந்தார். அவரை உவந்து உபசரியாமல் அங்கோர் ஆதனத்தை இடக்கரத்தால் சுட்டிக்காட்டி 'இருக்க' என்று செருக்கோடு பணித்தான். இருந்தவர் இருந்தார். இவனது அகந்தையை அகழ்ந்தெடுக்க விழைந்தார். அரக்கர் பதியே! நும் இசை திசையெங்கும் பரந்து நின்றும், ஒரு குரங்கினிடத்துமாத்திரம்; என்று தொடங்கிவிட்டு உள்ளம் சொல்ல அஞ்சுகின்றதே! என்று மெல்ல இழுத்துநின்றார். இருமார்ந்து இருந்த அவன் என்

னை? அது என்று ஏமாந்து கேட்டான். தன் வால் செல்லாத இடமே நும் கோல்செல்லும் என்று வாலி உய்மை வகைசொல்லுகின்றான் என அவர் விசை முறுகவிட்டார். மூவுலகங்களையும் அடக்கவென்ற எனக்கு ஒரு குரங்கை வெல்வது அரிதா என்று வெகுண்டெழுந்து தனியாகவே கிட்கிந்தையை அடைந்தான். அவ்வமையம் வாலி கீழ் கடலையடைந்து இறைவனை நினைந்து பூசை செய்திருந்தான். முனிவர் கூறியபடியே அங்குச் சென்று பின்புறமாக ஒதுங்கி நின்று அவனது வாலின் நுனியைத் தன் வலக்கரமொன்றால் பிடித்தான். அது பாசம்போல் இயல்பாகவே அதனைச் சுற்றிக்கொண்டது. மற்றொரு கரத்தால் அதனை வலிந்து தள்ளினான். அதனையும் அவ்வாறே சுற்றி நின்றது. அவ்வகையே மற்றைக் கரங்களும் கால்களும் பற்றப்பட்டன. அப்படியிருந்த உமக்கு இப்படியும் வந்ததே! என்று ஆவது செய்வார்போன்று முனிவர் அகன்று போயினர். வாலி வான் வழி எழுந்து போய் நாற்றிசைகளிலும் நின்று வழக்கம்போலவே பூசையை முடித்துத் தன் வள நகரடைந்தான். அக்குரக்கு வேந்தன்பால் இவ் அரக்க வேந்தன் அன்றுபட்டபாட்டை யார்சொல்ல வல்லார். அடைந்தவன் தன் வாலில் கிடந்தவனைக் கண்டான். உற்றதை வினவி அவனால் உண்மையை உணர்ந்தான்.

பின்னொளிர் முடியாய் வென்றவர் தோற்பர்
தோற்றவர் வெல்வர்வெஞ் செருவில்
என்றெனும் பொருவான் இச்சையுண்டாயின்
இராவண பொருதிகண் டென்னக்
கன்னெடுந் தோளாய் கலங்கினேன் வாலால்
கட்டுண்டு பட்டது கிடக்க
இன்னமும் பொரவோ இனிச்செருவமையும்
இன்றுநின் தோழன்நான் என்றான்.

இங்ஙனம் தோழமை கொண்டு இராவணன் தன் தொன்னகரடைந்தான். வாசவன் முதலிய அனைவரும் ஒதுங்க இருநான்கு திசைகளையும் ஒருசேர வென்ற பெரு வீரனாயிருந்தும், இடனறியாது புகுந்ததால் யாதும் பலியாமல் இழிவடைந்து மீண்டா

ன். நிலத்தில் ஓடும் நெடுந்தேர் கடலில் ஓடாததுபோல் இடனறியாது புகுவார் வலியடங்கி மெலிவார் என்பதை இவன் இனிதறிந்து நின்றான். விரிவை உத்தர இராமாயணத்திற் காண்க.

கதை 2.

கார்த்தவீரியார்ச்சுனனையும் பொருது வெல்லக் கருதி இராவணன் அவனது நகரையடைந்தான். அவ்வமையம் தன் தேவியரோடு நருமதையில் அவன் நீராடி நின்றான். இவன் அங்குப்புகுந்து அவனோடு போராடினான். தன்னிலத்தில்வந்து இவ்வாறு இன்னலைச் செய்தானே என்று பொங்கி எழுந்து அவன் புகுந்து பொருதான். நிலனறியாமையால் அரக்கர் நிலைகுலைந்தோடினர். திகைத்து நின்ற இவனைப்பிடித்துப்போய் அவன் சிறைப்படுத்தினான். பின்பு புலத்திய முனிவர் வந்து அவனை நயந்து வேண்டி இவனைச் சிறை மீட்டிச்சென்றார். கடல் ஓடும் நாவாயும் நிலத்து ஓடாது என்பதுபோல் உலக முழுவதையும் வென்ற இவன் இடபேதத்தால் வலியழிந்து நொந்தான். பெருவலியுடையராயினும் இடனறியாது புகுந்து வினைசெய்வாராயின் அவர் இழிவே அடைவர் என்பதை அனைவரும் இவன்பால் தெளிந்தார்.

கொட்டவா ளரக்கர் கிளர்பெரும் பயத்தார்
கேடில்சீர் இராவணன் அமரில்
பட்டபாடெல்லாம் வீடணற் குரைப்பப்
பரிவுறு மனத்தினன் அவண்போய்ச்
சிட்டருள்ள பிதாமகற் குரைப்பச் சிந்தை
நொந்தச் சிறை விடுப்பான்
வட்டமா மதில்சூழ் அருச்சுனன் வாழும்
வளநகர் மாமுனி வந்தான். (1)

அந்தமா முனிவன் அடியிணை வணங்கி
அருச்சுனன் அருச்சனை செய்திங்
கெந்தை நீ வந்த காரணம் என்கொல்
இயம்புதி என்றவன் இசைப்ப
இந்திராதியரை வென்றுற நெடுநாள்
ஈட்டிய விறலெலாம் உனக்குத்

தந்திரா ணையின் தலைக்கடைச் சிறையான்
தராபதி யாருளைத் தடுப்பார். (2)

எறியவலியே இனியுனக் கடையும்
இறைவகேள் இராவணன் தன்மேல்
சீறியசீற்றந் தவிர்ந்துநீ அவனைச்
சிறைவிடு கெனமுனி செப்ப
ஆறிய மனத்த னாய்அவன் விடுப்ப
அரக்கனை இலங்கையில் விடுத்துத்
தேறியசிந்தைச் செழுமறை முனியாம்
திசைமுகன் தன்னுலகடைந்தான். (3)

இவற்றால் மேற்குறித்த உண்மை இனிது தெளியப்படும்.

இடனறிந்து செய்யாவழி வலியிருந்தாலும் பயனில்லை என்பது இதனால் கூறப்பட்டது.

---

497 ஓர்துணையும் இல்லாமல் ஒன்னலரை வென்றசனேனன்
கூர்புகழ்மைக் கொண்டான குமரேசா—சீரமைந்த
அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா எஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின். (எ)

இ—ள்.

குமரேசா! வேறொரு துணையும் வேண்டாமல் சென்று அசுனன் என் அன்று அனைவரையும் வென்றான் எனின், எஞ்சாமை எண்ணி இடத்தால் செயின், அஞ்சாமை அல்லால் துணை வேண்டா என்க.

சீர் அமையாத அஞ்சாமை பேதைமையாகுமாதலால் சீர் அமைந்த என்றாம்.

அஞ்சாமை என்றது மனத்திண்மையை.

எஞ்சாமை எண்ணி— குறையாமல் நினைந்து. அஃதாவது பகைப்புலத்துச் செய்யும் வகைகளையெல்லாம் வழுவற ஆராய்ந்து

என்றபடி. பகைப்புலம் என்றது அஞ்சாமை என்றதனால் பெற்றாம்.

இடம்பொருந்த வினைசெய்தால் எவரும் வெல்வர் என்று மேல் அருளியதை நோக்கி, அவர்க்கு வேறு துணை வேண்டாவோ? என்று ஐயுறுவார்க்கு இஃதருளிய தென்க.

முனைமுகத்து வினை செய்யுந் திறங்களை முன்னதாக முழுதும் எண்ணிப் பின்பு இடத்தோடு பொருந்த அரசர் அவற்றைச் செய்வாராயின் தம் திண்மை அல்லது அவர்க்கு வேறு துணைவர் வேண்டா வென்பதாம்.

இடம் வாய்த்தாலும் அஞ்சாமை இல்லையானால் பேடிகை ஒள்வாள்போல் அது யாதும் பயனின்றி ஒழியுமாதலால் அஞ்சாமையும் வேண்டுவதாயிற்று. நெடும்புனலுள் ளும் முதலை வெல்லுமேயன்றி அஞ்சுதலுடைய ஆமை முதலியன வெல்லாவென்க. ஈகை, அறிவு, ஊக்கம, முதலிய எவற்றினும் முதன்மையாக அஞ்சாமையே அரசர்க்கு எஞ்சாமல் வேண்டுமென்று மேல் அருளியுள்ளதுங் காண்க. அகத்தில் அஞ்சாமையும் புறத்தில் இடமும் ஒருவன் பொருந்தப் பெற்றால் தனியே நின்று அவன் பகைவரனைவரையு முடிய வெல்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை அசன்பால் உணரப்படும்.

## கதை.

அசன் என்பவன் சூரியகுல திலகனாகிய இரகுவின் புதல்வன். தசரத மன்னனுடைய இன்னுயிர்த் தந்தை. செம்மையும் சீலமும் திண்மையும் வாய்ந்தவன். உயிர்களினுடைய பலவகை இயல்புகளையும் முழுதும் உணர்ந்தவன். இவன் திருவயோத்தியிலிருந்து சிறந்து வருங்கால் விதர்ப்பதேயத்து வேந்தன் மகளாகிய இந்துமதியின் சுயம்வரம் நிகழ்ந்தது. அவள் குமரிருக்கும் சசிபோன்ற அமைவினையுடையவள். அவளை அடைய விரும்பி அரசர் பலரும் அங்குக் குழுமியடைந்தார். இவனும் அவளை எண்ணிச் சென்றான். செல்லும் வழியில் மதயானை ஒன்று இவன் மேல் சீறிவந்தது. அதனை இவன் வில்வலியால் வென்றான்.

அது, முன் பிரியம்பதன் என்னும் காந்தருவனாயிருந்து சாப வயப்பட்டதாதலால் இவனது உண்மையையும் திண்மையையும் வியந்து வேண்டிய வரங்களை உதவி அகன்றது. இவன் பின்பு விதர்ப்ப தேயத்தை யடைந்தான். கலைகள் நிறைந்த மதிகள் போல் அங்கு நிலவியிருக்கும் அரசர்களோடு இவனும் கலந்திருந்தான். வந்தவரனைவரினும் இவன் மீது இந்துமதி தன் சிந்தையைச் செலுத்தினாள். மனக் கடுங்காதல் விம்ம மாலை தாழ் புயங்கள் வாட, எனக்குளனக்கு என்றென்றேமாந்திருந்த காவலரையெல்லாம் நீக்கிவிட்டு இவனுக்கே அவள் மாலையிட்டாள். மாமனும் இவனை மகிழ்ந்துட் கொண்டான். மாமன் மனையுள் இவன் மருவியிருந்தான். அங்கு மறுகியிருந்த அரசரனைவரும் மனம்பொறாதெழுந்து இவன்மேல் அமர்செய்யவந்தார். இவன் அஞ்சாது புகுந்தான். அவரனைவரையும் ஒரு சேரவென்றான். உரிய இடம் வாய்த்ததால் ஒருவனே நின்று நம்மனைவரையும் தொலைத்தான் என்று அரசர் பல பிதற்றிச் சென்றார். எண்ணி இடத்தால் செயின் அஞ்சாமை அல்லால் வேறு துணை வேண்டா என்பதை இவன் அனறு விளக்கினான். விரிவை மனுமரபில் காண்க.

வில்லென்னும் நெடுவரையால் வேந்தென்னும் கடல்கலக்கி
எல்லென்னும் மணிமுறுவல் இந்துமதி எனுந்திருவை
அல்லென்னும் திருநிறத்த அரியென்ன அயனென்பான்
மல்லென்னும் திரள்புயத்துக்கு அணியென்ன வைத்தானே.

அசன் என்பது அயன் என நின்றது. தேசம் தேயம் என்பதுபோல. இராமருடைய குலமுறையைச் சனகனிடம் கோசிகர் கூறும்பொழுது இது கூறப்பட்டது. இதனால் மேற்குறித்த உண்மை இனிது தெளிவாம்.

வான்சேரிற் புள்ளஞ்சா வவ்வலரில் சுற்றிய
கான்சேரின் ஆயானின் கண்ணஞ்சா—வான்சேர்
சிகர வரைசேர்ற் றேனஞ்சா அஞ்சா
மிகுநீர்க் கயஞ்சேரின் மீன். (பாரதவெண்பா.)

இடம் பொருந்தி வினைசெய்வார்க்கு வேறு துணைவர் வேண்டாவென்பது இதனால் கூறப்பட்டது.

498 சென்றான் சராசந்தன் சேனையுடன் பின்பேனே
ஒன்றி யழிந்தான் குமரேசா — என்றும்
சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும். (அ)

இ—ள்.

குமரேசா! மிகுந்த படையுடைய சராசந்தன் வடமதுரையை அடைந்து பொருது ஏன் அழிந்து போனான் எனின், சிறுபடையான் செல் இடம், உறுபடையான் சேரின் தன் ஊக்கம் அழிந்துவிடும் என்க.

படை என்னும் சொல்—வேல் வாள், முதலிய ஆயுத வகைகளையும், தேர் யானை முதலிய சேனைவகைகளையும் உணர்த்தி வரும். சிறுபடையான்—சிறிய சேனையையுடையவன். சிறுமை அளவின்மேல் நின்றது. செல் இடம் என்றது தன் அதிகாரம் தடையின்றி நடைபெறுகின்ற இடம் என்றபடி.

ஒருவனது காரியம் இடையூறின்றி இனிது நடைபெறின் அக்காலத்தை அவனுக்குச் செல்காலம் என்பர் அதுபோல் இங்கு இஃது அமைந்து நின்றது.

உறு என்னும் உரிச்சொல் மிகுதியை உணர்த்திவரும்.

சால உறுதவ நனிகூர் கழிமிகல். என்பது நன்னூல்.

விடும் என்பது துணிவுணர்த்திநின்றது.

மேல், இடம் வாய்த்தால் வேறு துணைவர் வேண்டாமலே வந்த பகைவரனைவரையும் வென்றுவிடலாம் என்றார்; வந்தவர் பெரும்படையுடையராயின் இருந்தவரால் என்னும் என்பார்க்கு இஃதியம்பியதென்க.

சிறு சேனையுடையவனை வெல்லக்கருதி அவனுக்குச் செல்லும் இடமாகிய வல்லிடத்தைப் பெருஞ் சேனையுடையவன் சேர்வானாயின் அவனால் தன் பெருமை முழுதும் அழிந்துபோம் என்பதாம்.

உறுபடையுடைமையால் தான் அழியாதொழியினும் தன் எண்ணம் பாழாம் என்பார் ஊக்கம் அழிந்துவிடும் என்றார்.

எத்துணைப் பெரும்படையையெய்தியிருப்பினும் தன் பகைவனுக்கு உறுதியான இடத்தில் சென்று அவன்மேல் ஒருநாளும் அமர்செய்யலாகாது என்பது கருத்து.

வலியும் படையும், மிகவுடையனாயினும் இடம் அறியாமல் வினைசெய்யச்சென்றால் அவன் இழிவே அடைவான். என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சராசந்தன் பால் உணரப படும்.

## கதை.

சராசந்தன் என்பவன் மகதநாட்டு வேந்தனாகிய பிருகத்ரதனுடைய புதல்வன். இவனது காலம் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்குமுன்னராகும். இவன்பிறப்புவியக்கத்தக்கதாக விளங்கியுள்ளது. மன்னன் நெடுநாளாகப் புத்திரப்பேறின்றி வருந்தி இறுதியில் சண்ட கௌசிகன் என்னும் முனிவரை அடுத்துப் பணிகள் புரிந்து அருள் வர ஒழுகினான். முனிவர் இவனது மன நிலையை உணர்ந்து அரிய மாங்கனி ஒன்றை அருளுடன் உதவி தேவிக்குத் தரும்படி பணித்து ஏவினான். அரசனை சென்றான். அரசி பூத்துநீராடிய பின் பத்தாவது நாளில் முனிவர் குறித்தபடியே அதனை அவளுக்குக்கொடுத்தான். அதனை அவள் இருகூறாக்கி ஒன்றைத்தானுண்டு மற்றொரு கூறைத் தன் தங்கைக்குத் தந்தாள். அவளும உண்டாள். பருவம் முதிர்ந்தபின் இரு கூறாகவே கருவும் உதித்தது. ஒருடல் இருபிளவாக அவ் இருவரும் ஈன்றதை அரசன் கண்டு சினமும் நாணமும் கொண்டு அவற்றை யெடுத்து ஊர்ப்புறத்தே வீசிவிடுத்தான். தனித்தனியே பிரிந்துகிடந்த அவ்இரண்டுருக்களையும் சரையென்னும் அரக்கி இரவில்வந்து இன்னுமாறுசேரஎடுத்தாள். உடனே இரண்டுமொன்றாய்இணைந்தெழுந்தது. அரக்கிவியந்து அதனை அரசன்பால்தந்து அகன்றுசென்றாள். சரை சந்து செய்ததால் அவனுக்குச் சராசந்தன் என்று பெயரிட்டழைத்தார். சந்துசெய்தல்—பொருத்தல். இவன் பருவமெய்திய பின் கிரிவிரசம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தான். மல்லமரினும் வில்லமரினும் இவன் மிகவும் வல்லவன். தன் மருகனாகிய கஞ்சனைக் கண்ணன் கொன்றுவிட்டதையறிந்து இவன் கடு

ஞ்சினங்கொண்டான். படையோடெழுந்து வடமதுரையை வளைந்தான். பலராமர் அறிந்து சினந்து யாதவர்கள் சிலரோடு எழுந்து எதிர்ந்தார். வந்த பெரும்படைக்கும் நின்ற சிறு படைக்கும் சண்டை நிகழ்ந்தது. இடத்தின் ஊற்றத்தால் பலராமரும் புகுந்து பல பகழிகள் ஏவினர். இயங்கி நின்ற பகைவன் தியங்கி விழித்தான். அவ்வமையம் வருணபாசத்தால் இவனைக் கட்டிப் பிடித்துப் பலராமர் கடிநகர் புகுந்தார். கட்டவிழ்த்துவிடும்படி கண்ணன் கட்டளையிட்டான். அவ்வாறே விட்டனர். நாணி நொந்து பின்பு இவன் நடந்து சென்றான்.

வாளினை நோக்கும் நாஞ்சில் வலத்தினன் சிக்கயாத்த
தோளினை நோக்கும் இற்ற சுற்றமை வரவை நோக்கும்
கேளினை நோக்கல் செய்யான் சினைவரால் கெளிறுபாயப்
பாளைவாய் விரியும் பூகப் படப்பைசூழ் மகதவேந்தே. (1)

அற்றதன் புகழை நோக்கும் அற்றதன் புகழேபோலக்
கற்றைவெண் நிலவுகான்ற கவிகையுங் கவரிக்காடும்
ஒற்றைவெள் வளையுஞ் சிந்தி ஓழுகொளி ஓடைநெற்றிக்
கொற்றமால் களிறுமாய்க்கும் குருதியாறொழுகல் நோக்கும். (2)

இன்னன பலவும்நோக்கி எள்ளினன் அரசின் வாழ்க்கை
மன்னிய சிறப்புவாய்ந்த மாதவம் புரிதல் நன்றென்
றுன்னினன் மற்றென்செய்வான் ஒளிறுவெள்ளருவிமாலைப்
பொன்னெடுங் குன்றநோக்கிப் போவதுபுரிந்தானமன்னோ.
(பாகவதம்) (3)

என்றபடி புழுங்கிப்போனான். சிறிய படையையுடைய பலராமரோடு இடனறியாமல் புகுந்து பொருததால் சராசந்தன் இழிவடைந்து நொந்தான். உறுபடையானாயினும், சிறுபடையான் செல் இடம் சேரின் தன் ஊக்கம் அழிந்துவிடுவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. விரிவைப் பாகவதத்தில் காண்க.

படையுடையனாயினும் இடனறியாது புகுந்தால் இழிவே அடைவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

499 நின்ற விராடன் நிலத்தில் சுயோதனன்போய்க்
குன்றியேன் மீண்டான் குமரேசா—ஒன்றும
சிறைநலனும் சீரும இலரெனினும் மாந்தர்
உறைநிலத்தோ டொட்டல் அரிது. (கூ)

இ—ள்.

குமரேசா! அரண்வலியில்லாதிருந்தும் விராட வேந்தனைத் துரியோதனன் ஏன் வெல்லமாட்டாமல் மீண்டான்எனின், சிறைநலனும் சீரும் இலர் எனினும், மாந்தர் உறைநிலத்தோடு ஒட்டல் அரிது என்க.

இலர் எனினும் மாந்தரை ஒட்டல் அரிது என்று ஒட்டிக் காண்க. உம்மை இழிவு சிறப்பு. உடையர் எனின் ஒட்டவந்தார் பாடு உணர்த்த வேண்டாவாயிற்று.

சிறை என்னும் சொல் இடம் காவல் மதில் முதலியவற்றை உணர்த்திவரும். அஃது இங்குப் பாதுகாப்புக்குரிய அரண்நிலைகளைச் சுட்டிநின்றது.

புகழ், பெருமை, செல்வம், ஒழுங்கு முதலியவற்றைக் குறித்துவருகின்ற சீர் என்னும் சொல், அறிவு ஊக்கம் முதலிய அரசர்க்குரிய சீர்மைகளை இங்கு உணர்த்திநின்றது.

உறைநிலத்தோடு ஒட்டல் அரிது—தங்கியுள்ள இடத்திற்சென்று தாக்குதல் அரிது. ஓடு என்னும் மூன்றனுருபு ஏழனுருபாக இதில் இயைந்து நின்றது. பொருத்தல் சேர்த்தல்களைக் குறித்துவரும் ஒட்டல் என்னும் சொல் பொருதுவேறலை இங்குப் பொருந்திநின்றது.

மேல், தனக்கு உரிமையான இடத்தில் நின்ற ஒருவன் எவரையும் வென்றுவிடுவன் என்றார்; இதில், இடம் பொருள் வலிகள் இல்லாதவனாயினும் எவரும் வந்து அவனை வெல்லமுடியாது என்றார்.

அரண்வலியும், அறிவு ஆற்றல் முதலிய உயர் நலங்களும், இல்லாதவராயினும் அரசர் நிலைத்திருக்கின்ற இடத்தின்கட்சென்று எவரும் அவரை வெல்லமுடியாதென்பதாம்.

இருப்பிடத்திற்சென்று நெருக்கத்துணிந்தால் எழுந்துசெல்ல இசையாமல் இறுதிவரையும் அவர் உறுதிசெய்வாராதலால் உறைநிலத்தோடு மாந்தரை ஓட்டல் அரிது என்றார்.

உற்ற இருப்பில் உறைந்திருக்கும் பன்றியொன்றை வெற்றிமிகு வேடர் பலர் வெல்லல் அரிதன்றோ. என்றதுங்காண்க.

தான் நிலையாயிருக்கும் இடத்திற்சென்று ஒருவனை வெல்லப்புகுந்தவன் தானே நிலைகுலைந்து இழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துரியோதனன்பால் உணரப்படும்.

கதை.

தன் பகைவராகிய பாண்டவர்கட்கு இடங்கொடுத்து உதவினன் என்று விராடன்மீது துரியோதனன் வீண் பகை கொண்டான், அவனை அலைத்து வென்று அவனைக் களைந்துவிடவேண்டுமென்று இவன் சலத்தோடெழுந்தான். சகுனி கன்னன் முதலிய தன் சார்பினரைத் தழுவிப் படைகளை எழுப்பினன். விதுரன் முதலிய பெரியோர்கள் இவன வெறிப்போக்கைத் தடுத்தார்.

தன்னிலத்தினில் குறுமுயல் தந்தியின் வலிதென்
றிந்நிலத்தினில பழமொழி அறிதிநீ இறைவ
எந்நிலத்தினும் உனக்கெளி தாயினும் இவர்நம்
நந்நிலத்தினில் வர அமர் தொடங்குதல் நன்றால். (பாரதம்)

என்று நயந்து மொழிந்தார். இவன் மறுத்துசென்றான். நச்சும் படையோடு தன் இச்சைப்படியே மச்சநாட்டை அடைந்தான். படைவலியும் இடவலியும் திடமுற இல்லை என்றே துரியோதனன் துள்ளிவந்தான் என்று விராடன் எள்ளி எழுந்தான். உருவங் கரந்து உள்ளிருந்த வீரரும் உடன்றுடன் வந்தார். இருதிறத்

தார்க்கும் பெருஞ் சமர் மூண்டது. அதில் படை முதலிய யாவும் இழந்து துரியோதனன மகுட பங்கமும் அடைந்தான். உடன் வந்த தானையும் உள்ளிருந்த மானமும் ஒருங்கிழந்து மண்டான். எளிதில் வென்றுவிடலாம் என்று கருதி வந்தவன் இழிவடைந்து போனான். விராடன் மகிழ்வு கொண்டிருந்தான். இறை நலனும் சீரும் இலர் எனினும் உறைநிலத்தில் மாந்தரை ஓட்டல் அரிது என்பதைத் துரியோதனன் அன்று ஓட்டி உணர்த்தினான். அனைவரும் இதனை உணர்ந்து தெளிந்தார். விரிவை விராடபருவத்தில் காண்க.

மெலியராயினும் இடவலியுடையாரை வேறலரிது என்பது இதனால் கூறப்பட்டது.

---

500 கண்டோடும் உத்தரனும் காவலர்மேற் பாய்ந்தணிகள்
கொண்டோங்கி னானேன் குமரேசா—கொண்டாடும்
காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாழ் முகத்த களிறு. (ய)

இ—ள்.

குமரேசா! அஞ்சி ஓடின உத்தரனும் தன்னிலத்தில் வந்த அரசரை ஏன் வென்று ஓங்கினான் எனின், கண் அஞ்சா வேல் ஆழ் முகத்த களிறையும் கால் ஆழ் களரில் நரி அடும் என்க.

நரி, களிறைக் களரில் அடும் என இயைத்துக்காண்க.

களர்—சேற்று நிலம். களிறு—ஆண்யானை. வேழக் குறித்தே விதந்து களிறெனல். என்பது தொல்காப்பியம்.

உம்மை அவனது உரனின்மையை உணர்த்திநின்றது.

கண் அஞ்சா—அஞ்சாத. கண் என்பது இதில் ஒரு பொருளையும் குறியாமல் அடையுருபாய்நின்றது. ஆரியத்தில் இதனை உபசர்க்கமென்பர். காட்சி வாயிலாகவே பெரும்பாலும் அச்சம் நிகழுமாதலால் அது கண்மேல் ஏறிக் கண்ணஞ்சா என நின்றது.

தையும் கண்டு அஞ்சாதது என்றபடி. எவர்க்கும் அடங்காமல் பேசுகின்றவனை வாய்க்கூசாத வம்பன் என்பதுபோல் இங்கிது வந்தமை தெளிக.

வேல் ஆழ் முகத்த—வேற்படை பாய்ந்த முகத்தையுடைய. அஞ்சாத ஆண்மையை அகத்திலும், எஞ்சாத போர்ப் பொலிவை முகத்திலும் எய்தியுள்ள ஆண்யானை எனபார் அஞ்சா முகத்த களிறு என்றார். அஞ்சாதகளிறு; முகத்தகளிறு; எனத் தனித் தனி இயைத்துக்காண்க.

அஞ்சாமையும் வேல் பாய்ந்த புண்களை முகத்திலுடையதுமாகிய யானையேயாயினும் கால் அழுந்துகின்ற சேற்றுநிலத்தில் அகப்படுமாயின் அதனை நரி கொல்லும் என்பதாம்.

வேல் ஆள் முகத்த என்று பாடங்கொண்டு முகத்தை ஆகுபெயராகத் திருப்பி வேல் ஆட்களைக் கோத்த கோட்ட என்று பரிமேலழகர் பொருள் கொண்டது போர்ப்புலம் நோக்கிப் போலும்.

மண்ணும் நீரும் கலந்து குழம்புபட்ட சேற்றுநிலத்தில் யானைசெல்லின் அதில் அதன் கால் ஆழ்ந்துவிடும்; அதனால் சிறிதும் அசையலாற்றாது அது தாழ்ந்து தயங்கும், அந்நிலையில் நரி கண்டால் அஞ்சாமல் சென்று அதனைக்கொன்று தின்னும். ஆதலால் களரில் நரி களிறை அடும் என்றார்.

போராற்றலிற் சிறந்த மதயானையும் இடமல்லாத இடத்தில் அகப்பட்டால் ஒரு நரியால் கொல்லப்படும் என்பது கருத்து. இதனை கண்டு எடுத்துக்காட்டியது, நிலைத்தவலிகளை யுடையராயினும் தமக்கு நிலையில்லாத இடத்தில் புகுந்தால் மிக மெலியவராலும் அவர் நலிவுபட்டு அழிவரென்பதை உணர்த்துதற்கென்க. கருதியதொன்றைப் பிறிதொரு மொழியால் புலப்படுத்தியதனால் இதுவும் பிறிது மொழிதல் எனனும் அலங்காரம் என்க.

தமக்கு இனிய இடத்தில் நின்றே அரசர் வினைசெய்ய வேண்டுமென்பது குறிப்பு.

இடம் வாய்த்தால் வலியவரையும் மெலியவர் வென்றுவிடுவ ரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உத்தரன்பால் உணரப்படும்.

கதை.

உத்தரன் என்பவன் மச்சநாட்டு வேந்தனாகிய விராடனு டைய புதல்வன். இவன் தமையன் பெயர் சுவேதன், தங்கை உத்தரை. இவன் உருவும் திருவும் உடையவனாயினும் உள்ளத் தில ஊக்கம் இல்லாதவன். இளவரசனாயிருக்கும்பொழுது துரி யோதனன் படையோடுவந்து இவனது பசுக்கூட்டங்களைக் கவர்ந் துகொண்டான். அவற்றை மீட்கும்பொருட்டுத் தென்திசையில் சென்று அரசன் அமராடிநின்றான். பகைவர் வடதிசை வழி யாக வந்து நகரையும் வளைத்துக்கொண்டார். அந்தப்புரத்திலிரு ந்த அரசன் தேவி அகம் கலங்கினாள். உருவங்கரந்து அங்கு உ டனுறைந்திருக்கும் துரோபதை அரசியைத் தேற்றிப் பேடிவடி வோடு அங்குக் கூடியிருக்கும் விசயனைத் தேர்விடும்படி தூண்டி உத்தரனைப் போர்மேல் ஏவினாள். உத்தரனும் சித்திரத்தேரிலேறி உத்தரதிசையில் சென்றான். சிறிது தூரம் சென்றபின்பு ப டைகளைக் கண்டான். உள்ளங் குலைந்து உடல் நடுக்கங்கொண் டான். தேரைத்திருப்புக என்றான். விசையப்பேடி இசையுமா? தேர்தான் நேரே விரைந்துசென்றது. தான் அழிந்துவிடுவதாக நினைந்து உத்தரன் இழிந்து ஓடினான். வீரன் நகைத்து விரைந் துபோய்ப் பிடித்தான், விடு விடு என்று கூவியும் விடாமல் கொ ண்டுவந்து தேரில் பிணித்தான். இவன் தேறுமாறு பல வீர மொழிகளை விளம்பித் தேரினைச்செலுத்திப் போர்க்களம் புகுந் தான். பெரும் போர் மூண்டது. பேடிபோரால் ஒரு நொடியி ல் கோடிவீரர் விடிவீழ்வதை ஓடின வீரன் கண்டான். உள்ளந் துணிந்தான், பின்பு உறுதியாய் நின்றான். வாகனவீரன் ஒரு மோகனக் கணையை ஏவினான். பொருதவரனைவரும் அதனால் புலன் மயங்கி வீழ்ந்தார். அவ்வமையம் உத்தரன் புகுந்தான். அவருடைய அணிகளையும் மணிமுடிகளையும் கவர்ந்து துணிவோ டு நின்று சில கணைகளையும் ஏவி அவரைச் சிரழித்துவந்தான்

பலை கலங்கினும், மாதிரங்கலங்கினும், தன் நிலைகலங்காத கன்னனையும், கிருதவன்மன் முதலிய அரசர் பலரையும் நிலவலியால் உத்தரன் நிலைகுலையச்செய்தான். கண்ணஞ்சா வேலாழ் முகத்த களிறேயாயினும் கால் ஆழ் களரில் படின் அதனை நரியும் அடும் என்பதை இவன் அன்று நன்கு காட்டினான். விரிவை விராட பருவத்தில் காண்க.

ஊக்கமிலனாயினுமிடத்தோ டுற்றவினைசெய் குவனாயின்
ஊக்கமுடையார்க் கிடனின்றியொழியும் ஊக்கம் இலாதவனுக்
கூக்கமுடையா னாயிடினும் உற்றபடையும் பலவேனும்
ஊக்கமழிவ னிடத்தோடு முற்றுவினைசெய் யாவிடினே.

(விநாயகபுராணம்.)

வலியராயினும் இடமறியாது செல்லின் அழிவே அடைவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

இனிது முடிதற்கு ஏற்ற இடத்தைக் கண்ட பின்னரே தன் காரியத்தை ஒருவன் தொடங்கவேண்டும். இட நலம், பல நலங்களையும் பயக்கும். குன்றிய நிலையாரும் இடவலியால் வென்றியை அடைவர். இடனறிந்து வினைசெய்வார் எதிரியை வெல்வார். தமக்கு வலிமிகும் இடத்தில் நின்று வினைசெய்வார்க்கே வெற்றி உண்டாம். நிலத்தில் ஓடுந்தேர் நீரில் ஓடாததுபோல் இடத்தின் திரிபால் சிலர் இயல்பு திரிவார். இடனறிந்து வினைசெய்வார்க்கு வேறு துணைவர் வேண்டாம். படைமிக உடையனாயினும் இடமறியாது செல்லின் அவன் இழிவே அடைவான். மெலியராயினும் இடவலியுடையாரை வலியரும் வெல்லார். களிறும் களரில் வீழ்ந்தால் நரியால் அழியும்; அதுபோல வலியராயினும் இடமல்லாத இடத்திலகப்பட்டால் அவரை மெலியரும் வெல்வர்.

௫௰-வது இடனறிதல் முற்றிற்று.

# 51ம்-அதிகாரம் தெரிந்து தெளிதல்.

அஃதாவது தனக்குத் துணையாவாரை ஒருவன் ஆராய்ந்து தெளிதல். வலியும் காலமும் இடனும் அறிந்து வினைமேற் செலலும் அரசன் தனக்கு உதவியாகத் தழுவுதற்குரிய மந்திரியர், தந்திரியர் முதலாயினோரை வடித்தறிந்து தெளிந்த வழியே, மேல் அறிந்த அறிவுக்குப் பயனுளதாகும் ஆதலால் அவற்றின்பின் இது வைக்கப்பட்டது.

---

501 குன்று நிமித்திகனைக் குந்தியினை ஏன் தெரிந்து
குன்றுமல் தேர்ந்தார் குமரேசா—நன்றும்
அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும். (க)

இ—ள்.

குமரேசா! நிமித்தகனும், குந்தியும், ஏன் மிகத்தெரிந்த பின்பே தெளியப்பட்டார் எனின், அறம் பொருள் இன்பம் உயிரச்சம் என்னும் நான்கின் திறம் தெரிந்தே தேறப்படும் என்க.

தேறப்படும் என்னும் செயப்பாட்டு வினைக்கு ஏற்ற எழுவாயை இதில் வருவித்துக்கொள்க.

பிடியச்சம், மடியச்சம், குடியச்சம், அடியச்சம் முதலாக அச்சங்கள் பல உள ஆதலால் இங்கு உயிரச்சம் என்றார். உயிரச்சம் என்றது உயிர்க்கு இறுதி வந்துவிடுமோ என்று படுகின்ற பயத்தை

நான்கின் திறம் தெரிந்து—நான்கின் திறத்தையும் ஆராய்ந்து. திறம் என்னும் சொல் உறுதி, தகுதி, வலி, வகை முதலியவற்றை உணர்த்திவரும். திறந் தெரிந்து என்பதை அற முதலிய நான்கனோடும் தனித்தனி இயைத்துக் காண்க.

அறத்தின் திறத்தைத் தெரிதலாவது:—நிதி விலக்குகளை வழுவற அறிந்து நெறிதிறம்பாமல் ஒழுகும் நீர்மையனோ? அவ்

லனோ? என்று தன்னால் தெளியப்படுவான் ஒருவனை அரசன் ஆராய்தல்.

பொருளின் திறத்தைத் தெரிதலாவது:—பொருளை முறை கெடவிழைந்து அதனால் தனது நிலை திரியும் புன்மையனோ? அல்லது நன்மையனோ? என்று ஆராய்தல்.

இன்பத்தின் திறந் தெரிதலாவது:—அருந்தல் பொருந்தல்களில் மிகுந்த காதலுடையனாய்ப் பிறருடைய நுகர்வுகளையும் மகளிரையும் முறை பிறழ்ந்து விழையும் மயலினனோ? அல்லது நல்ல இயல்பினனோ? என்று ஆராய்தல்.

உயிரச்சத்தின் திறம் தெரிதலாவது:—தான் செய்தற்குரிய காரியங்களைச் செய்யப் புகுங்கால் தன் உயிர்க்கு இறுதியை விளைப்பதாகப் பிறர் வந்து அச்சுறுத்தின் அதற்கு அஞ்சித் தன் உறுதியை நெகிழவிடுபவனோ? அல்லது நிலைத்து நிற்பவனோ? என்று ஆராய்தல்.

இந் நான்கு வகைகளிலும் குன்றாது நலமுடையனாய் அவன் நின்று விளங்குவனாயின் அவனைத் தனக்குத் துணையாக நம்பிக் கொள்ளலாம் என்பார் நான்கின் திறம் தெரிந்து தேறப்படும் என்றார்.

இனி, அவனது நான்கின் திறத்தையும் தெரிந்து என்று கொள்ளாமல், நான்கின் திறத்தாலும் அவனைத் தெரிந்து என்று கொண்டால், தன்னுடைய அரசன் அறம்செய்யாதவன் எனவும் பொருள் ஈயாதவன் எனவும், பிறரால் பேதித்தும், அரசக்குரிய இன்பத்தை நுகருமாறு புகுவித்தும், அரசன் ஐயுற்று இறுதியை விளைக்கக்கருதியுள்ளான் என அறைவித்தும், அவனது இயல்பினை ஆராய்தல் என்று கொள்க. மேற்குறித்த மித்திர பேதங்களால்மயங்கி அரசன்பால் மாறுகொள்வானாயின் அவனைத் தேறலாகாதென்பது குறிப்பு.

மக்களடைதற்கு உரியனவாகக் கருதப்பட்டுள்ள உறுதிப் பொருள்கள் நான்கனுள் இறுதியிலுள்ளதற்குப் பதிலாக அச்சத்தை இசைத்து அவற்றால் ஒருவனது மன இயல்பை இனிதாராய்ந்து அதன்பின்பே அரசன் அவனை நம்பவேண்டும் என்ற

து அச்சோதனைகளில் நீ நிலனாகி நின்றால் அவன் என்றும் திரிபிலனாகியிருப்பான் என்பது கருதி என்க.

அறமும் பொருளும் இன்பமும் அச்சமும் என்னும் நான்கின் திறத்தாலும் ஆராய்ந்தறிந்தபின்பே ஒருவனை அரசன் தெளியவேண்டும் என்பதாம்.

உண்மையும் உறுதியுமுடையவர்கள் எவ்வகையாலும் அரசனோடு மாறுபடார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நிமித்திகன் கண்ணும், குந்திபாலும் உணரப்படும்.

கதை.

நிமித்திகன் என்பவன் ஏமாங்கத நாட்டிலேயிருந்தவன், சிறந்த அறிவும் திருந்திய பண்பும் பொருந்தப்பெற்றவன். கணிதநூலில் இவன் மிகவும் வல்லவன். அடக்கத்தோடு எல்லாவுயிர்களிடத்தும் இயல்பாகவே இரக்கமுள்ளவன். அரசியல் முறைகளை நுணுகித் தெளிந்தவன். மனத்தூய்மையோடு வினைத்திட்பமும் வாய்ந்தவன். இவனைத் தனக்கு அமைச்சனாக்கிக்கொள்ள வேண்டுமென்று அந்நாட்டு வேந்தனாகிய சச்சந்தன் விழைந்தான். பலவகையாலும் இவனது மன இயல்பினை ஆராய்ந்தான். அவற்றிலெல்லாம் இவன் நெறிதிறம்பாமல் நின்று தன்பால் உரிமை பூண்டிருப்பதை அரசன் உணர்ந்து தெளிந்து இவனை அமைச்சனாக்கிக் கொண்டான். இவன் தெளியப்பட்ட பின்னையில் மன்னன் அழிமதியுடையனாய்ப் பொருந்த வின்பத்தையே விரும்பி உடனிருந்த ஒருவன்பால் அரசைப் பொருந்தவைத்தான். அவ்வமையம் இவன் அரசன்பால் அன்புகொண்டு "உலந்தருதோளினாய் நீ ஒருவன் மேல் கொற்றம் வைப்பின், நிலந்திரு நீங்கும் அந்தோ" என்று இவன் நெஞ்சுருகி உரைத்தான். மன்னன் கேளாதிருந்தான். பின்னரும் வலிந்து

காவல குறிப்பன்றேனும் கருமமீ தருளிக் கேண்மோ
நாவலர் சொற்கொண்டார்க்கு நன்கலாற் றீங்குவாரா
பூவலர் கொடியனார்கட் போகமே கழுமி மேலும்
பாவமும் பழியுமுற்றார் பற்பலர் கேளி தென்றான்.

இங்ஙனம் தனது மாறா உரிமையை இறுதிவரையும் மறவாமல் செய்தான். இவனது திரிபின்மையை அனைவரும் புகழ்ந்தார். அறமுதலியவற்றால் தெளியப்பட்டவர் பின்பு என்றும் திரிபின்றி யிருப்பர் என்பதை உலகம் இவன்பால் கண்டது. இதனைச் சச்சந்தன் சரிதையில் காண்க.

கதை 2.

பெற்றோரை அறியாது பிரிந்துபோய் வளர்ந்து துரியோதனனுக்கு நண்பனாய்ப் பின்பு அங்க தேசத்து அரசனாகிக் கன்னன் விளங்கிவருங்கால் பெண்கள் சிலர் அம்மன்னனுக்குத் தாமே அன்னையர் என்று கூறி முன்னர்வந்து நின்றார். அவர் வாய்மொழிகளைக்கொண்டே தாயர் அல்லரென்று தேறி அவரை அவன் போகவிடுத்தான். ஆயினும் அவனுக்குத் தாயாகிவிட்டால் சிறந்த புகழோடு இருந்து தின்னலாமே என்னும் நிரம்பிய ஆசையால் நாளும் நாளும் வந்து தாயென நவின்றார். அவன் மனமெலிந்து உண்மை தெளியுமாறு மந்திரமுறை நிறைந்த ஓர் அற்புத ஆடையைத் தெய்வ அருளால் பெற்றான். பொய்யராயின் அதனை உடுத்தவுடனே உடலெரிந்து மாய்வர். அதன்பின் தாயரெனவந்தவர் சிலர் அம்மாய ஆடையால் மாண்டுதொலைந்தார், உயர்ந்து வாழலாம் என்று போய் எரிந்துபோனதை யறிந்து பலர் ஒழிந்துபோயினர். கண்ணன் ஏவலால் கடைமுறையில் குந்தியே வந்தாள். நானே உன்னை ஈன்ற தாய் என்று கன்னன் முன் தானே போய் நின்றாள். இந்தவாறு பலர் முந்து வந்து இவண் இறந்து போயினர் என்று ஆடையின் இயல்பைக் கூறிக் கன்னன் அச்சுறுத்தினன். உண்மையுடையவளாதலால் உயிரின் பொருட்டு அஞ்சாமல் குந்தி உடனே அதனைத் தன் உடலில் போர்த்தாள் ஊறு ஒன்றும் இன்றி உவந்தினிதிருந்தாள். கன்னன் வியந்து அன்னையே என்று அவளடியில் வீழ்ந்தான். அதன்பின் தாயெனத் தெளிந்து சேயென அமைந்தான். அறம் பொருள் இன்பமோடு உயிரச்சத்தின் திறத்தாலும் ஆராய்ந்த பின்பே அடைதற்குரியார் தெளியப்படுவார் என்பதைக் குந்தி அன்று தெளிய உணர்த்தினள். இதனைப் பாரதத்தில் காண்க.

மாயனார்விர கிருஷ்ண மனத்தினில் மதித்துவரதளித்திடும்
வள்ளல்
நீயனாள் எனைப் பயந்தவள் என்னினு நினைமொழி நெஞ்சுறத்
தந்தேன்
பேயனார் சிலர் பேசறி வின்மையால் பெற்றதாய் எனக்கென
வந்து
தூய நாகரின் அமைந்ததோர் துகிலால் துன்பமுற்றென்புகு
வானார் (1)

அடாதுசெய்தவர் படாதுபட்டனரெனும் அங்கர்கோன் தன்மொ
ழி கேட்டுத்
தடாத அன்புடைக் கெடாததூ மொழிபகர் தையலும் மையலிற்
றவிர்ந்து
படாமதென்கையில் தருகெனவருதலும் பயந்திலேன் எனிலெனை
முனியென்
றெடா விரித்தலைத் துடற்படப் போர்த்தெதிரீன்ற தாயாமென
இருந்தாள். (பாரதம்) (2)

இவற்றால் மேற்குறித்த தேர்தலின் திறம் இனிது தெளியப்படும்.

பொருள்போகம் அஞ்சாமை பொன்றுங்கால் போந்த
அருள்போகா ஆரறமென் றைந்தும் —இருள்தீரக்
கூறப் படுங்குணத்தான் கூர்வேல்வல் வேந்தனால்
தேறப் படுங்குணத்தி னான். (சிறுபஞ்சமூலம்.)

அறம்முதலிய திறத்தான் ஆராய்ந்த பின்பே ஒருவனைத் தேறவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

502 பண்டு கபிலரைநேர் பார்த்தவுடன் பாரியேன்
கொண்டு தெளிந்தான் குமரேசா—கொண்ட
குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு. (உ)

இ—ள்.

குமரேசா! கபிலரைக் கண்டவுடன் பாரி ஏன் தனக்குத் துணையாக அவரைத் தெளிந்துகொண்டான் எனின், குடிப்பிறந்

து, குற்றத்தின் நீங்கி வடுப்பரியும் நாண் உடையான் கட்டே தெளிவு என்க. பிறரைப் பிரித்து நிற்றலால் ஏகாரம் பிரிநிலையாம்.

வடுப்பரியும்—பழிக்கு அஞ்சுகின்ற. வடு—பழி, வசை. பரியும் என்பது பரிதல் என்பதன் அடியாகப்பிறந்த பெயரெச்சம். அஃது இரங்குதல், நடுங்குதல், கலங்குதல், அஞ்சுதல்களை உணர்த்திவரும். நாணுவது தீயனசெய்யக்கூசுதல். கட்டே என்றது கண் என்னும் இடப்பெயரடியாகப் பிறந்த குறிப்பு முற்று. கண்ணது என விரியும். பொருள் உடையது பொருட்டு என வருதல்போல் இது, டுவ் விகுதி பெற்று வந்தது.

துறுடுக் குற்றிய லுகர ஈற்ற
ஒன்றன் படர்க்கை டுக் குறிப்பிணைும். என்பது நன்னூல்.

மேல், அறமுதலிய நான்கு வகையானும் ஒருவனைத்தெளிய வேண்டும் என்றார்; அங்ஙனம் தெளிதற்கு உரியானை இதில் தெளிய உணர்த்தினர்.

நல்லகுடியிற்பிறந்து, குற்றங்களில்நின்றும் நீங்கிப் பழிவினைவுகளுக்கு அஞ்சுகின்ற நாணமுடையவனிடத்தேதான் அரசன் தெளிவுகொள்ள வேண்டும் என்பதாம்.

குடி என்றது ஒழுக்கம் வாய்மை ஈகை இன்சொல் முதலிய நலங்கள் யாவும் இயல்பாகவே அமைந்துள்ள நல்ல மரபினை இது நால்வகைச்சாதியுள்ளும் மிகவும் அருமையாகக் காணப்படும். குற்றம் என்றது செருக்கு சினம் காமம் உலோபம் முதலிய தீமைகளை. நாணுடைமை வடுப்பரிவுக்கும்; வடுப்பரிவு குற்ற நீக்கத்திற்கும்; அது குடிப்பிறப்பிற்கும் அடிப்படையாகுமாதலால் அம்முறைமைதோன்ற அவை நிரலே நின்றன.

குடிப்பிறப்பும் குற்றநீக்கமும் வடுப்பரிவும் நாணும் என்னும் இந்நான்கு முடையவனையே அரசன் நம்பவேண்டும் என்றார், யாதொரு கேடுமின்றித் தனது கருமம் அவனால் இனிது முடிந்து வரும் என்பது கருதி. இங்குக் குறித்த நான்கும் கூடப்பெறாதவனை முன்தெரிந்த நான்கின் திறத்தால் தேறவேண்டாம் என்பது குறிப்பு.

பழிவினைகளுக்கு நாணும் தெளிவுடையாரையே தமக்குத் துணையாக அறிவுடையார் தெளிந்துகொள்ளுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கபிலர்பால் உணரப்படும்.

## கதை.

கபிலர் என்பவர் பாண்டிநாட்டிலுள்ள திருவாதவூரிலே அந்தணர் குலத்திலே பிறந்தவர். இவரது காலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னராகும். சிறந்த புலமையோடு உயர்ந்த குணங்கள் பலவும இவர்பால் நிறைந்திருந்தன. இவர் சங்கப்புலவருள் ஒருவர். தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட பனையளவு காட்டும் படித்தால் என்றுகமது வள்ளுவப்பெருமான் அருள்நூலை வியந்து இவரும் ஒரு கவி அருளியுள்ளார்.

குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பொருள் ஒழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையில்
காதலின் பத்துட் டங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை அவாவின்மை யென்றாங்
கிருபெரு நிதியமும் ஒருதா மீட்டும்
தோலா நாவின் மேலோர்

என்று நூலோர் போற்றும் சால்பினையுடையவர். கவிபாடுவதில் இவர் மிகவும் வல்லவர். இவரது கவிகள் செறிவும் தெளிவும் இனிமையும் உடையன. வாழியாதன் என்னும் சேரன்மீது பத்துப்பாடல்கள் பாடினார். அதற்காக அம்மன்னன் நூறாயிரம் பொற்காசும் உதவி ஒரு மலைமேல் ஏறி நின்று நோக்கித் தன் கண்கொள்ளக்கிடந்த நாடு முழுவதையும் இவர்க்கு நயந்து கொடுத்தான். அப்பாடல்கள் பதிற்றுப்பத்து என்னும் நூலில் உள்ளன. தமது புலமை நலத்தை அரசர் முதல் அனைவரும் ஒருபடியாக நுகரும்படி உலகமெங்கும் இவர் உலாவித்திரிந்தார். ஒருநாள் பாரிவள்ளலது ஊரையடைந்தார். நெடுநாளாக இவருடைய குணநலங்களைக் கேள்வியுற்றிருந்த அவன் இவரைக் கண்டவுட

னே களிமிக்கூர்ந்து உடனழைத்துக் கொண்டுபோய் உவந்து உபசரித்தான். இவரது குற்றமற்ற தன்மையையும் மற்ற நலங்களையும் உற்றறிந்து தனக்கு உற்ற துணையாக இவரை அவன் முறையுறத் தெளிந்தான். என்றுந் தன் உடனிருந்து வாழுமாறு இவரை அவன் உளமுருகி வேண்டினன். அவனது அறிவையும் அன்பையும் வியந்து பெருநண்புகொண்டு இவர் அவனோடு தங்கியிருந்தார். தனக்குத் துணையாக உடனே இவரைத் தெளிந்துகொண்ட அவனது தெளிவினை அனைவரும் புகழ்ந்தார். குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும் நாணுடையான் கண்ணே தான் தெளிவு கொள்ளவேண்டும் என்னும் உண்மை இவர்பால் அன்று தெளிய நின்றது. இவரது பிறப்பும் சிறப்பும் வாய்மையும் தூய்மையும் அரசுமுறை செய்த வரிசையும், பிறவும் புற நானூறு முதலிய பழையநூல்கள் பலவினும் புலனும்.

நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்
புல்லிலை எருக்க மாயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா ஆங்கு
மடவர் மெல்லியர் செல்லினும
கடவன் பாரி கைவண் மையே. (1)

பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டீண்டு உலகுபுரப்பதுவே. (கபிலர்) (2)

உரிமைத் துணையாகத் தம்மை உள்ளன்போடு தழுவிக்கொண்ட பாரியினது வள்ளன்மையை வியந்து இவைபோல்வன பல இவர் பாடியுள்ளார். பின்னதில் பழித்ததுபோலப் புகழ்ந்து பாரியை மாரியோடு நேர்வைத்து இவர் மகிழ்ந்துள்ளமை காண்க. இவரைத் தெளிந்துகொண்ட பின் பாரி கண்ட நலங்கள் பல.

பழிவினைகட்கு அஞ்சும் குலமகனிடத்தே தான் அரசன் தெளிவுகொள்ள வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

503 கற்றுயர்க்க வேதாவின் கண்ணுமொரு வெண்மைகண்டு
குற்றமென்றாய் என்னே குமரேசா—முற்றும்
அரியகற் றாசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு. (௩)

இ—ள்.

குமரேசா! வேதங்களை எல்லாம் ஓதி உணர்ந்த பிரமாவின் கண்ணும் ஒரு வெண்மையைக்கண்டு ஏன் வேண்டியதைச் செய்தாய்? எனின், அரிய கற்று ஆசு அற்றார் கண்ணும் தெரியுங்கால் வெளிறு இன்மை அரிது என்க. ஏகாரம் தேற்றம்.

உம்மை அவனது ஒண்மையை உணர்த்தி நின்றது. அரிய என்றது அறிதற்கு அரிய நூல்களை: இது குறிப்பு வினையாலணையும் பெயர். ஆசு—குற்றம். வெளிறு—அறியாமை.

அரியன கற்றல் ஆசு அறுதற்கு ஏதுவாகும் என்பது தோன்ற கற்று அற்றார் என்றார். ஆராயாவழி அவர் வயின் வெளிறு காண்டல் அரிதாம ஆதலால் தெரியுங்கால் என்றார்.

மேல், குடிப்பிறப்புண்மையும் குற்றமின்மையும் உடையவரே ஆராய்ந்து கொள்ளுதற்கு உரியவராவர் என்றார்; இதில், குற்றம் இல்லாதவர் இவ்வுலகில் மிக அரியர் ஆதலால் அவரைக் கூர்ந்துணர்ந்து கொள்க என்றார்.

அரிய நூல்களைக் கற்றுக் குற்றங்களற்றாரிடத்தும் ஆராயுங்காலத்து அறியாமை இல்லாமை அரிதாம் என்பதாம்.

கற்று அற்றார் கண்ணும் வெளிறு இன்மை அரிதே என்றதனால் கல்லாது களிப்பவர் மாட்டு அதன் உண்மை சொல்லவேண்டாவாயிற்று. வெண்மை இல்லைபல் கேள்வி மேவலால் என்றார் கம்பர். கல்வி உண்மையால் வெண்மை இன்மையாம் என்பது உண்மையாயினும் சிறிதேனும் இல்லாமல் ஊறவே அஃது ஒழியாது என்பது கருத்து.

அறியாமை சிறிதும் இல்லாதபெருமையுடையவர் இவ்வுலகில் மிகவும் அரியர் ஆதலால் நன்கு ஆராய்ந்து ஒருவரைத் துணையாகத் தெளிந்துகொள்ளவேண்டுமென்பது குறிப்பு.

சிறந்த நூல்களைக்கற்று நிறைந்த குணமுடையராய் விளங்கியிருப்பவரிடத்தும் அறியாமை உள்ளே நுழைந்து கிடக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிரமன் கண் உணரப்படும்.

## கதை.

பிரமன் என்பவர் அகிலமனைத்தையும் ஆக்குதற்குக் காரணராகி அமைந்திருப்பவர். சிவன் மால் என்னும் இருவரிடமும் கற்பங்கள்தோறும் தோன்றி அவரோடு கூடி மூவராகி நிற்பவர். அமரரனைவர்க்கும் முதல்வர். அறிவின் தெய்வமாகிய கலைமகளைத் தனக்குத் தலைமகளாகக்கொண்டவர். பிரமன் விரிஞ்சன் பிதாமகன் பிதா வரன் அயன் மலரோன் வேதா போதன் எனப் பல ஏதுப்பெயர்களையுடையவர். பொன்னிற மேனியர். இவர் எழுந்தருளியிருக்கும் தலத்துக்குச் சத்திய உலகம் என்று பெயர். பதினாறுகோடி யோசனை அளவில் அஃது அமைந்துள்ளதென்பர். அதனடுவில் அகமகிழ்ந்து குணநிதியாகிய தேவியோடு இவர் அமர்ந்திருப்பர். வேதமுதலிய கலைகள் யாவும் இவரைச் சூழ்ந்து நயந்து நிற்கும். இத்தகைய பேரறிவாளர் ஒரு நாள் கைலையை அடைந்து மீளுங்கால் இடையே குமாரதெய்வத்தைக்கண்டார். குழந்தை என்று கணித்து அவரை இவர் கணியாது சென்றார். அப்பிள்ளைப் பெருமான் இவரது பெருமிதத்தை உணர்ந்து "இங்கு வருக" என்று மெள்ள அழைத்தார். இவர் வந்தார். வினவி உவந்து வீற்றிருக்கப் பணித்து வேதம் வருமெனின் ஓதுக என்றார். இவர் ஓம் எனத் தொடங்கி ஓதப் புகுந்தார். ஓம் என்றதற்கு அவர் பொருள் என்னே? என்றார். இவர் உள்ளங்கலங்கினர். அதன் உண்மைப்பொருளை உணராது விழித்தார். ஒரு மொழிக்குப் பொருள் அறியாத நீர் உலகைப் படைப்பது எப்படி? என்று இவரை அவர் ஓங்கிக் குட்டினர். உண்மையறிவோர

டு உயர்ந்திருந்த தன்னுள்ளும் இவ்வெண்மை உறைந்திருந்ததே என்று இவர் வெள்கி நொந்தார். "நாலுமுகன் ஆதி அரி ஓம்! எனும் அதாரமுறை யாக பிரமாவை விழ மோதி பொருள் ஓது கென, நாலுசிரமோடு சிகை துளிபட தாளமிடும் இளையோனே" என்று அருணகிரியாரும் இக்கதைக் குறிப்பைத் தம்புகழ்க் குறிப்பில் குறித்துவைத்துள்ளார். அரியகற்று ஆசு அற்றார் கண்ணும் தெரியுங்கால் வெளிறு இன்மை அரிதே என்னும் உண்மையை அனைவரும் இவர்பால் அன்று அறிந்து தெளிந்தார். விரிவைக் கந்த புராணத்தில் காண்க.

தூமறைக் கெலாம் ஆதியும் அந்தமும் சொல்லும்
ஓமெனப்படும் ஓரெழுத் துண்மையை உணரான்
மாமலர்ப்பெரும் கடவுளும் மயங்கினன் என்றால்
நாமினிச் சிலஅறிந்தனம் என்பது நகையே. (கந்தபுராணம்)

அனைத்தையும் அறிந்துள்ளேம் என்று நினைத்துத் தம்மை மெச்சியிருப்பாரை நோக்கிக் கச்சியப்பர் அறைந்துள்ள இதனைக் கருத்தில் அப்பிவைத்தால் எவர்க்கும் சிறிது திருத்தமுண்டாம்.

நல்ல குடியிற் பிறந்தாறு நவையும் பறப்பும் மடிபிழைப்பென்
றல்லலுறக்கும் இவை முதலாமனைத்து நீக்கிப் பழிக்கஞ்சி
யொல்லலுறு நாணுடையானை யோர்ந்து தெளியப்படுமைந்தா
வல்லகலைதேர்ந் தாசற்றார் மாட்டும் வெளிறு மருவிடுமே.

விநாயக புராணம்.

அறிவின்மை அறவே இல்லாதவர் இங்கு ஒருவரும் இல்லை என்பது இதனால் கூறப்பட்டது.

504 குற்றஞ்சேர் கள்ளுண் குரங்கரசை என்கொண்டான்
கொற்ற இராமன் குமரேசா—உற்ற
குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல். (௪)

இ—ள்.

குமரேசா! உடன் பிறந்தவனோடு பகைத்துக் கள்ளையும் உண்ட சுக்கிரீவனை ஏன் இராமன் கூடிக்கொண்டான் எனின், குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடி மிக்க கொளல் என்க.

உம்மை குணமும் என்பதைக் கொள்ள நின்றது.

அவற்றுள்—குணம் குற்றம் என்னும் அவ் இரண்டனுள். மிகை என்றது மிகுதியாயுள்ளவற்றை. நாடி—ஆராய்ந்து. நாடுதல் செயல் முதலியவற்றால் ஒருவனது இயல்பினைப் பலவகையானும் உய்த்து நோக்குதல்.

குற்றமற்றவரையே உற்ற துணையாக அரசன் பற்றிக்கொள்ளவேண்டுமென்றார்; பின்னர்க் குற்றம் சிறிதேனுமில்லாதவர் இவ்வுலகில் ஒருவரேனும் இல்லையென்று அருளினார்; அப்படியாயின குற்றமில்லாதவரைக் கூடிக்கொள்ளுதல் எப்படிமுடியும் என்பதை நோக்கி இஃது இயம்பியதென்க. இருப்பவருள்ளே குற்றம் குறைந்து குணம் மிகுந்தவரையே தெரிந்து கொள்ளவேண்டும் என்பார் மிகை நாடி மிக்க கொளல் என்றார்.

குற்றம் குறைந்து குணம் மேவிடும் அன்பர் கூட்டத்தையே முற்றும் துணையென நம்பு கண்டாய் சுத்தமூட நெஞ்சே என்றார் பெரியாரும். மூட நெஞ்சே என்றது குற்றமில்லாதவரையே கூடிக்கொள்ளவேண்டுமென்று மனம் நாடித் திரிய அங்ஙனம் இல்லாதவர் இங்கு ஒருவரும் இல்லையே என்று இயம்பியும் கேளாமல் மேலும் மேலும் அலைந்து தேடி மெலிந்துபோகின்ற அதன் மடமைக்கு வருந்தி என்க.

ஒருவனுடைய குணங்களை ஆராய்ந்து மற்றைக் குற்றங்களையும் ஆராய்ந்து பின் அவ் இரண்டனுள் மிகுதியாயுள்ளவற்றை ஆராய்ந்து அம்மிக்கவற்றான் அவனைத் தெளிந்துகொள்க என்பதாம்.

குற்றம் இல்லாதவரைக் காண்டல் அரிதாதலால் சிறு சிறிதுடையாராயினும் குணம் மிகுந்திருப்பின் அவரைத் தேர்ந்துகொள்ளலாம் என்பது கருத்து.

குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை என்றார் ஔவையாரும். குணம் குறைந்து குற்றம் நிறைந்திருப்பாரைக் கொள்ளலாகாது என்பது குறிப்பு.

குற்றம் இருந்தாலும் ஒருவன்பால் குணங்கள் மிகுந்திருந்தால் தெளிவுடையோரால் அவன் தழுவிக்கொள்ளப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுக்கிரீவன் பால் உணரப்படும்

கதை.

சுக்கிரீவனை இராமர் கண்டபொழுது அவனைத் தனக்கு உதவியாகத் தழுவிக்கொள்ள விழைந்து முதலில் அவனது இயல்பினை ஆராய்ந்தார். ஆண்மை அன்பு நேர்மை முதலிய பெருங் குணங்கள் பல அவன்பால் நிறைந்திருந்தன. ஆயினும் உடன்பிறந்தானோடு பகைத்தல் வன்மம் கூர்தல் முதலிய குற்றங்களும் கூடியிருந்தன. அவ்விரு பகுதிகளையும் சீர்தூக்கி நோக்கினார். அவற்றுள் குணமிகுதி கண்டார். உடனே அவனைத் துணைவனாகத் தெளிந்துகொண்டார். அதன்பின் இவன் ஆணை செப்புதலுந் தான் வருங்கால், வாலியோடு மல்லமர் தொடங்கினான். அதனை இலக்குவன் கண்டான். அவன் அண்ணனையே தெய்வமென்று எண்ணியிருக்கும் புண்ணியனாதலால் இவனை இகழ்ந்து வெறுத்து வினைக்குரியனாக இவனைத் தெளிந்துகொண்ட தன் முன்னோனையும் முனிந்தான். குற்றம் சிறிதுமில்லாதவர் இவ்வுலகில் மிக அரியராதலால் உற்றவருக்குள்ளே குணமுண்மையை நாடியே நாம் கூடிக்கொள்ளவேண்டுமென்று அவர் நேடி மொழிந்தார். தம்பி வாடி அமைந்தான. ஆயினும்

ஆற்றாது பின்னும் பகர்வான் அறத்தா றழுங்கத்
தேற்றாது செய்வார்களைத் தேறுதல் செவ்விதன்றால்
மாற்றானெனத் தம்முனைக் கொல்லிய வந்துநின்றான்
வேற்றார்கள் திறத்திவன் தஞ்சமென் வீர என்றான்.

கலக்கமில்லாமல் இலக்குவனுரைக்க இவ் இலக்கு மொழிகளை இராமர் கேட்டார். அரச முறைகளையும் பிறரைத் தெரிந்து தெளியும் இயல்பையும்மொழிந்து குற்றமிருந்தாலும் குணமிகுந்திருந்தால் அவனை வினைக்குரியனாகத் தெளிந்துகொள்ளலாம் என்று தெளியவுணர்த்திக் தம்பியைத்தழுவி நின்றார். குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள், மிகை நாடி அம்மிக்கவற்றால் ஒருவனைத் தெளிந்துகொள்ளவேண்டும் என்பது சுக்கிரீவன்பால் அன்று தெளிய நின்றது. விரிவை இராமாயணத்தில் காண்க.

விற்றூங்கு வெற்பன்ன விலங்கெழிற் றோளமெய்ம்மை
யுற்றார்சிலர் அல்லவரே பலர் என்பதுண்மை
பெற்றாருழைப் பெற்றபயன் பெறும்பெற்றியல்லால்
அற்றார் நவையென்றலுக்கு ஆகுநர் ஆர்கொல் என்றான்.
(இராமன்)

இதனால் மேற்குறித்தவுண்மை இஃது தெளிவாதல் காண்க.

குற்றமுற்றிருந்தாலும் குணமிக்கிருந்தால் அவரைத்துணைக் கொள்ளலாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

505 சார்ந்த தருமந்தன் சானகனேன் தஞ்செயலால்
கூர்ந்தறிய நின்றார் குமரேசா — ஆர்ந்த
பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். (௫)

இ—ள்.

குமரேசா! தருமந்தன் சானகன் என்னும் இவரது சிறுமை பெருமைகளும் என் அவரது செயல்களால் தெளியநின்றனஎனின், பெருமைக்கும் ஏனைச்சிறுமைக்கும் கட்டளைக்கல் தம்தம் கருமமேயாம் என்க.

கருமம் என்றது செயலை. ஏகாரம் தேற்றத்தோடு பிரிநிலையும் தோற்ற நின்றது.

கட்டளைக்கல் என்றது உரைகல்லை: அஃதாவது பொன்னை உரைத்து அதன் தன்மையை அறிதற்கு உரிமையாக அமை

ந்துள்ளதொரு கருவி. இனி, கட்டளைக்கல் என்பதற்கு அளவு கல் என்று பொருள் கொண்டால் நிலங்களை வரையறுத்துக்காட்டுதற்கு எல்லைக்கற்கள் ஏதுவாதல்போல மக்களது நிலைகளைத் தெளிவதற்கு அவர் தம் செயல்களே அமையும் என்று கொள்க.

மேல், குணங் குற்றங்களை ஆராய்ந்தறிந்தே ஒருவனைத் துணைக் கொள்ளவேண்டும் என்றார்; அங்ஙனம் ஆராய்தற்குரிய கருவியை இதில் அறிவித்தருளினார்.

மக்களுடைய பெருமைக்கும் மற்றைச் சிறுமைக்கும் உரைகல்லாயிருப்பது அவர் அவர் செயலே அல்லது வேறு இல்லை எனபதாம்.

பொன்னினது ஏற்றத்தாழ்வுகளை இன்னபடி என்று உரைகல்லால் உணர்ந்துகொள்ளுவதுபோல், ஒருவனுடைய உண்மை இயல்பினை அவனது செயலால் இனிது தெளியலாம் என்பார் "கருமமே கட்டளைக் கல்" என்றார். இஃது எச்ச உருவகம்.

உருவகமாவது, உவமானமும் உபமேயமும் வேறுபாடு தோன்றுவண்ணம் அமைந்து நிற்பதோர் அலங்காரம்.

உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து
ஒன்றென மாட்டின் அஃதுருவகமாகும். தண்டியலங்காரம்.

இறுதிவரையும் திரிபிலராகி உறுதி தருதற்குரிய குணமுடையாரையே நாடிக்கொள்க என்றதை நயந்துகொண்டவன் ஒத்த உருவினராய மக்களுள் பெரியர் இவர்; சிறியர் இவர்; என வரையறை செய்து அறிவதெப்படி என்று மறுகுங்கால் அவனை நோக்கி இஃதருளியுள்ளதாக அமைந்துள்ளமை காண்க.

பெரியவர் சிறியவர் என்பதை அவரவர் செயலால் அறிய வேண்டும் என்பது கருத்து. செயல் உயர்வுடையதாயின் அவரைப் பெரியவர் என்றும், இழிவுடையதாயின் சிறியவர் என்றும், தெளியவேண்டுமேயன்றிப் பிறப்பு முதலியவற்றால் எவரையும் பெரியர் சிறியர் எனக் கருதலாகாது என்பது குறிப்பு.

தன் செயலிலிருந்தே ஒருவனது பெருமையையும் சிறுமையையும் அறியலாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தருமந்தன் கண்ணும் சானகன்பாலும் உணரப்படும்.

கதை.

தருமந்தன் என்பவன் சந்திரகுலத்து வேந்தனாகிய நந்தனுடைய மைந்தன். அரசமரபில் பிறந்திருந்தும் இவன்பால் நயவஞ்சகமே மிகுந்திருந்தது. மிக்க கெடுமதியுடையவன். பிறர், பெருங்கேடு அடைவதாயிருந்தாலும், தனக்குச் சிறிய ஊதியம் வருவதாயிருந்தால் அவ்வினையில் இவன் புகுந்துவிடுவான். தன் புல்லிய இயல்பினைப் பிறர் அறியாவண்ணம் சொல்லாலும் நடிப்பாலும் இவன் மறைத்துவந்தான். வருங்கால் துணைவர் சிலருடன் ஒருநாள் இவன் வேட்டைக்குச் சென்றான். அடர்ந்த வனமொன்றில் வழியறியாது புகுந்து உடன் வந்தவரைப் பிரிந்தான். பின்பு உளம் நொந்து திரிந்தான். இரவு நெருங்கியது. புலி முதலிய கொடு விலங்குகளுக்கஞ்சி அங்கோர் பழுமரத்தில் ஏறிப் பதுங்கியிருந்தான். கரடி முகமும் மனித உருவுமுடைய சானகன் என்னும் வனசரன் ஒருவன் அங்கோர் சிங்கத்தை அஞ்சி ஓடிவந்து இவன் இருந்த மரத்திலேயே விரைந்து ஏறினான். இவன் முதலில் சிந்தை கலங்கினான் அவன் தேற்றத் தேறிப்பின் இருவரும் சேர்ந்தினிதிருந்தனர். அச்சிங்கமும் அம்மரத்தின் அடியில் வந்து தங்கிநின்றது. தனது மனைவியோடு ஆடையின்றி நருமதை நதியில் நீராடிநின்ற பத்திரன் என்னும் கந்தருவனே கௌதமரது சாபத்தால் இப்பிறப்பையடைந்துள்ளான் ஆதலால் பேசுதல் முதலிய பெருநலங்கள் யாவும் அசன்பால் பொருந்தியிருந்தன. கொண்ட வடிவின் கொடுமைக்குத் தக்கபடி அவரைக் கொன்று தின்றுவிடவேண்டுமென்றே அடியில் அது குறிக்கொண்டிருந்தது. மேலிருந்த இருவரும் ஒருவர் தூங்கும்பொழுது மற்றொருவர் விழித்திருக்கவேண்டுமென்று உறுதிசெய்துகொண்டார். அம்முறைப்படி அரசன் முதலில் உறங்கினான். சானகன் காவலாக விழித்திருந்தான். "தருமந்தன் மிகக்கொடியவன்; அ

வனைக் கீழே தள்ளிவிடுவன், உன்னோடு உறவாகி இவ் அடவியில் உனக்கு உதவிபுரிவேன்" என்று சிங்கம் உரைத்தது. யான் கெடினும் என்னை நம்பினவனுக்குக் கேடுசெய்யேன் என்று சானகன் இசைத்தான். சிங்கம் அசைந்துகொண்டு பேசாதடங்கியிருந்தது. பின்பு சானகன் உறங்கத் தருமதத்தன் விழித்திருந்தான். இரவு நாழிகை இருபதுக்குமேல் அயர்ந்து தூங்கும்பொழுது சானகனைத் தள்ளிவிடும்படி தருமதத்தனிடம் சிங்கம் மெல்லக் குறித்தது. அக்கொடியவன் உடனே அவ்வாறே செய்துவிட்டான். சானகன் கீழே விழுந்தான். விழுந்தவனுடைய ஞானகலத்தால் சிங்கமும் உணர்வுடையதாய் ஒதுங்கிநின்றது. தான் செய்த ஈனச்செயலால் தருமதத்தன் கீழ்நிலையிழிந்தான். சானகன் உயர்ந்த பெருமையையடைந்து பின்பு சிறந்து விளங்கினான். தருமதத்தனது இழிவும், சானகனது உயர்வும், அவர்தம் செயல்களாலே தெரியலாயின. மக்கள் எய்தும் பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தம் தம் கருமமே கட்டளைக்கல் என்பதை இவர் அன்று காட்டினார். விரிவைச் சேது கதையில் காண்க.

பெருமையும் சிறுமையும் தான்தர வருமே. (நறுந்தொகை)

மனிதரது பெருமை சிறுமைகளை அவர் செய்யுங் கருமங்களே காட்டிவிடும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

506 சென்றுநின்ற நீலியைமுன் தேர்ந்தார் பழியடைந்து
குன்றிநொந்தார் பின்பேன் குமரேசா—ஒன்றியகேள்
அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி. (௬)

இ—ள்.

குமரேசா! உறவற்ற நீலியைத் தேர்ந்தவர் பின்பு ஏன் அதனால் பழியுற்றழிந்தார் எனின், அற்றாரைத் தேறுதல் ஓம்புக; மற்று அவர் பற்று இலர்; பழி நாணார் என்க.

அற்றார் என்னும் வினைக்கு எழுவாயாக அவா, பொருள், அன்பு சுற்றம் குணம் என்பவற்றுள் ஏதேனும் ஒன்றை இசைத்துக்கொணலாம் ஆயினும் அவர், பற்று இலர், பழிநாணார் என்னும் குறிப்பால் சுற்றமொன்றே சூழநின்றது. பற்று—உலகத்தொடர்பு, அன்பு, பசை, சம்பந்த முதலியவற்றை உணர்த்திவரும்.

அற்றாரைத் தேறுதல் ஓம்புக=சுற்றம் அற்றவரைத் தெளிதலை ஒழிக. ஓம்புக என்றது இங்கு ஒழிக என்னும் பொருளில் வந்தது. தேறுதலின் நின்றும் தன்னைப் பாதுகாத்துக்கொள்க என்பதாம்.

மேல், சிறுமையுடையாரைத் தெளியற்க என்றார்; இதில் சுற்றமில்லாதவரைத் தேறற்க என்கிறார்.

சுற்றமில்லாதவரைத் தனக்குத் துணையாக அரசன் தெளியலாகாது என்னெனின், அவர் பிறர் மாட்டுப் பற்று இல்லாதவர் ஆதலால் பழிக்கு அஞ்சார் என்பதாம்.

சுற்றத்தாற் சூழப்பட்டவரே உயிர்கள் மாட்டுப் பற்றுடையராய்ப் பழிக்கு நாணுவாராதலால் அவரையே அரசன் துணையாகத் தெளிந்துகொள்ளவேண்டுமென்பது கருத்து.

சுற்றம் இல்லாதவரை ஆராயாமல் தெளிந்துகொண்டால் அதனால் குற்றம் உண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நீலியால் உணரப்படும்.

## கதை.

நீலி என்பவள் திருவாலங்காட்டிலே வேளாளர் குலத்திலே புரிசைக்கிழான் என்பவனுக்கு ஒரு புதல்வியாய்ப் பிறந்தவள். இவள் பருவமெய்தியபின் பழ வினை வயத்தால் அறிவுதிரிந்து அனைவரையும் இழந்து தனியாக அலைந்து தன் இயல்பினை எவரும் அறியாதபடி வேண்டியபொழுது வேண்டும் உருவங்களை எடுத்துப் பல்லுயிர்க்கும் அல்லலை விளைத்துவந்தாள். வருங்கால், காஞ்சிபுரத்திலிருந்த தரிசனன் என்னும் வணிகனொருவன் வாணிகத்தின்பொருட்டு அவ்வழியே வந்தான். இவள் அவனுடைய மனை

விபோல் வடிவங்கொண்டு அவனைத் தொடர்ந்து சென்றாள். அவன் திரும்பி நோக்கி முதலின் மயங்கினான். பின்பு உண்மை தெரிந்து தன் உள்ளங் கலங்கினான். ஆயினும் அவன் மந்திரமுறை தெரிந்தவனாதலால் இவளை நெருங்கவொட்டாது விரைந்துசென்று திருவாலங்காட்டை யடுத்திருந்த பழையனூர் என்னும் பதியினை யடைந்தான். இவளும் தொடர்ந்து புகுந்தாள். சேனன், கிழான், வாணன் என்னும் அவ்வூர் வேளாளத் தலைவர்களிடஞ்சென்று "ஐயன்மாரே! என் கணவன் என்னைத் தனியே விலக்கிவிட்டு வேறொருத்தியை மணந்துகொள்ளவேண்டுமென்று இப்படி வெருண்டு போகின்றார்" என்று விம்மியழுதாள். அனைவரும் திரண்டு தரிசன செட்டியை அழைத்து இளமை மங்காத இவ் அழகியை விடுத்து வேறொருத்தியை நீர் கொள்ள விழைவது நல்லதாகுமா? என்று சொல்லியுணர்த்தினார். "ஐயன்மீர்! இது மாறுபாடுடையதோர் பேய்; இவள் மொழியை நீவிர் தேறலாகாது என்று அவன் கூறிநின்றான். அண்ணைமாரே! நான் உண்மை சொல்லுகிறேன்; இந்தத் தாலியைக் கட்டிவிட்டு இப்படிக் கேலிபண்ணலாமா என்று தாரை தாரையாக நீலி கண்ணீர் சொரிந்தாள். வேளாளர் நம்பி தரிசனனை அவளோடு தனியே இரவிலொரு இல்லில் இருக்குமாறு செய்தார். அவனும், பாவம்! இசைந்து போயிருந்தான். நடுநிசியில் அவனைக்கொன்றுவிட்டு நீலி வெளியே போனாள். விடிந்தபின் பார்த்தார். செட்டி இறந்து கிடப்பதைக் கண்டார். ஆராயாமல் தெளிந்ததால் இப் பேரிழவு வந்ததே யென்று அனைவரும் பேதுற்று நொந்தார். அன்று தேறி நின்றவர் எழுபதுபேரும் தம் தெளியாமையால் வந்த பழியென நாணி அனலில் விழுந்து அழிவுறலானார். சுற்றம் அற்றார், பற்று இலராகிப் பழிக்கு நாணார் ஆதலால் அவரைத் தேறலாகாது என்பதும், ஆராயாமல் தேர்ந்தால் அவரால் தீராத கேடு உண்டாம் என்பதும் நீலிபால் அன்று உலகம் தேறி நின்றது. விரிவைத் தொண்டை மண்டல சதகத்தில் காண்க.

மாறுகொடு பழையனூர் நீலிசெய்த
வஞ்சனையால் வணிகனுயிர் இழப்பத்தாங்கள்

கூறியசொற் பிழையாது துணிந்துசெந்தீக்
குழியிலெழு பதுபேரும் மூழ்கிக்கங்கை
ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட்டப்பர்
அண்டமுற நிமிர்ந்தாடும் அடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மால்
பிரித்தளவிட் டிவளவெனப் பேசலாமோ.
(சேக்கிழார் புராணம்.)

இதனால் மேற்குறித்த உண்மை இனிது தெளிவாம்.

சுற்றம் அற்றவரைத் துணையாகத் தேறலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

507 வென்றி மிகுசகனேன் விந்தமனைத் தேர்ந்ததனால்
குன்றி இழிந்தான் குமரேசா—நின்றபொரு
காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாம் தரும். (எ)

இ—ள்.

குமரேசா! அறியாத விந்தமனைத் தெளிந்துகொண்டதனால் மித்திரசகன் ஏன் அறிவிழந்து நொந்தான் எனின், காதன்மை கந்தா அறிவு அறியார்த் தேறுதல் பேதைமை யெல்லாம் தரும் என்க.

காதன்மை—காதலுடைமை. கந்து என்னுஞ் சொல் தூண், கட்டுத்தறி, பற்றுக்கோடு முதலியவற்றை உணர்த்திவரும்.

அறிவு என்றது அறியவேண்டுவனவற்றை; அஃதாவது அரசர்க்குரிய வினைத்துறைகளை.

அறியார்த் தேறுதல்—அறியாதவரைத் தெளிதல். ஐயுருபு இதில் அடங்கிநின்றது.

குடிப்பிறப்பும், குணச்சிறப்பும், பெருந்தன்மையும், சுற்றத் தொடர்பும், தொழிலுயரறிவும், ஆகிய இந்நலங்களையுடையவ

ரையே அரசன் ஆராய்ந்து தனக்குத் துணையாகத் தெளிந்து கொள்ளவேண்டும் என்று இதுவரை அருளினார்; அங்ஙனம் தெளிந்துகொள்ளா வழி உளதாம் இழிவு இனி அடுத்து உரைக்கப்படுகின்றது.

மேல், அற்றாரைத் தேறற்க என்றார்; இதில், அறியாரைத் தேறுதே என்கிறார்.

அன்புடைமையைப் பற்றுக்கோடாகக்கொண்டு, அறிய வேண்டுவனவற்றை அறியாதவரை ஒருவன் துணையாகத் தெளிந்தால் அதனால் பல இழிவுகள் அவனுக்கு உளவாம் என்பதாம்.

தொழில் முறைகளை அறியாதவனைத் தனக்கு நேசமானவன் என்னும் பாசத்தால் அரசன் சேர்த்துக்கொண்டு காரியங்களில் ஏவின் அவனது அறியாமையால் அவை பிழைபட்டழியும்; அறியவே கையறியாப் பேதையைக் கருத்தறியாமல் தெளிந்தானே! என்று தன்னை வையம் இகழும், அதனால் பலவசைகள் வந்து சேருமாதலால் "அறியாரைத் தேறுதல் பேதைமையெல்லாம் தரும்" என்றார்.

தகுதியில்லாதவர்களைக் காதல் காரணமாக அரசன் வினைகளில் ஏவலாகாது என்பது கருத்து.

தொழிலறியாதவரைத் துணையாகக் கொண்டால் பழி பல வரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மித்திரசகன்பால் உணரப்படும்

## கதை.

மித்திரசகன் என்பவன் சூரியகுலத்து வேந்தனாகிய சுதாசன் என்பவனுடைய புதல்வன். இவன் பாட்டன் பெயர் சருவகாமன். இவன் போரில் வல்லவன். சிறந்த வீரமும் நிறைந்த தவவொழுக்கமும் இவன்பால் செறிந்திருந்தன.

சுதாசன் என்பவன் அஸ்பிணி மைந்தனாத் தோன்றல்
பதாரவிந்தத்தவத் திறைஞ்சலெம் பகையெனும் இருளுக்கு
உதாசனன்தனை நிகர்தரு மாணவே ஞாழவன்
மதாசலத்தினன் மித்ரசகன் எனும் மன்னன். (1)

உரைத்த மன்னவன் உவரிசூழ் உலகொரு புயத்தில்
பரித்து வண்டினங் காமரம் பாடிமட் டருந்த
விரித்த கிங்கிணி வாய்மலர் வேரியந்தொடையல்
தரித்த நல்லெழில் மதயந்தி தனைமணந் துவந்தான். (2)

என்று சுகமுனிவரும இவனுயர் நலங்களைச் சொல்லியுவந்துளார். உழுகிலும் அறிவிலும சிறந்த தன் அருமைத் துணைவியோ டமர்ந்து இன்பக் கடலில் திளைத்து எல்லா உயிர்களையும் அன்போடு இவன் காத்து வந்தான். வருங்கால் விந்தமன் எனனும் ஒருவன் இவனபால் வந்து உணவு முதலியன இனியனவாகச் செய்து உதவுதல் வல்லேன் என்று ஒதுங்கி உரைத்தான். அவன அவ்வினையை இனிதறியாமையோடு காவும உடையவன். அவனை நுனுகியறியாமல் அவனது பணிமொழிகளால் அரசன் மனம இளகினுன். நாளும் பணிந்து அவன் நயந்து ஒழுகியதால் ஏதும அறியாமலே மனனன் அவனமேல் காதலமிக்கூர்ந்தான். அதனால் வினைக்குரியனாக அவனை அமைத்துக் கொண்டான். அவனும் அமர்ந்து வந்தான். வருங்கால் தென்புலத்தார்க்கு அன்புசெய்துாட்டும திதிநாள் ஒன்றில் அங்கு வசிட்டர் வந்தார். அவரை உபசரித்து அரசன் விருந்துசெய்தான. அதில் ஊனைச் செய்துகொண்டுவந்து உணர்விலலாமல் விந்தமன் உண்ணவைத்தான். முனிவர் உணர்ந்து கொதித்து அரசனைச் சபிக்கத் துணிந்தார். அரசனும் வெகுண்டு அவரைச் சபிக்குமாறு மந்திரித்துக் கையில் நீரை எடுத்தான். மனைவி தடுத்தாள். அதன்பின அந்நீரைத் தன் காலில் விடுத்தான். அவை கருகினறன. அதனால் கனமாட பாதன் என்று பின்பு இவன் பெயரடைந்தான். அறிவில்லாதவனை வினைக்குரியவனாகத் தெளிந்துவைத்ததனால் அல்லவா? இவ் அல்லல் வந்தது என்று அரசன் அறிந்து நொந்தான். காதலமை கந்தாக அறிவு அறியாரைத் தேறுதல் பேதைமையெல்லாம் தரும் என்பதை உலகம் இவன்பால் பேணிக் கண்டது. விரிவை மனுமரபில் காண்க.

அறியாதவரை வினைக்குரியராகத் தெளியலாகாது என்பது இதனால் கூறப்பட்டது.

508 கேதமனைத் தேர்ந்ததனால் கேமதரன் பின்பிழிந்து
கோதடைந்தான் என்னே குமரேசா—ஆதலினால்
தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும். (அ)

இ—ள்.

குமரேசா! கேமதரன் என்பவன் கேதமனைத் தேர்ந்ததனால் வன் தீராத துன்பத்தை அடைந்தான் எனின், பிறனைத் தேரான் தெளிந்தான் தெளிவு வழிமுறையளவும் தீரா இடும்பை தரும் என்க.

தரும் என்னும் வினைக்கு எழுவாயாகத் தெளிவு என்பது வருவிக்கப்பட்டது. தெளிந்தான் என்பதிலிருந்து இது தெளிய நின்றது.

பிறனைத் தேரான் தெளிந்தான்—பிறனை ஆராயாமல் தெளிந்தவன். தேரான் என்னும் எதிர்மறை முற்று எச்சமாகித் தெளிந்தான் என்பதோடு இணைந்து நின்றது. வினைமுற்றுக்கள் அடுக்கிவந்தால் ஒன்றொழிய மற்றவையெல்லாம் எச்சமாம்என்க.

வழிமுறை என்றது பின்வரும சந்ததி வரிசையை. முன் சந்ததியைத் தலைமுறையென்பர். தீரா இடும்பை—நீங்காத துன்பம்.

மேல், வினைத் திறங்களை அறியாதவரை அரசன் தெளிந்தால் அறிவில்லாதவன் என்னும் பழி அவனுக்கு வரும் என்றார்; இதில், ஒருவகையானும் அறிமுகமில்லாதவனை உரியவனாகத் தெளிந்துகொண்டால் அவன்வழிமுறைக்கும் அழிவுண்டாம்என்றார்.

பிறனொருவனைப் பலவகையானும் ஆராயாமல் அரசன் தெளிந்துகொள்வானாயின் அத்தெளிவு அவன்வழி வருகின்ற சந்ததிகட்கும் தீராத துன்பத்தைக் கொடுக்கும் என்பதாம்.

புதிதாக வந்த ஒருவனை ஆராயாது துணைக்கொண்டால் அவனது இழிவினையால் தன் மரபுக்கெல்லாம் தொலையாத துன்பம்விளையும் என்பார் "வழிமுறை தீராஇடும்பை தரும்" என்றார். தீர ஆராயாமல் ஒருவரையும் தேறலாகாது என்பது குறிப்பு.

ஆராய்ந்து தெளியாமல் ஒருவனைத் துணையாகக் கொண்டால் அதனால் நீங்காத துன்பமுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சேமதரன்பால் உணரப்படும்.

கதை.

சேமதரன் என்பவன் சனகரன் என்னும் சூரியகுலத்து மன்னனுடைய புதல்வன். நல்ல அறிவுடையவன். இவனது காலம் இற்றைக்கு எண்ணாயிர ஆண்டுகட்கு முன்னராகும். இவனுடைய மனைவி பெயர் மதன்முகி. அவ்வழகியோடு அமர்ந்து மகிழ்ந்து இவன் அரசுபுரிந்துவருங்கால் சேதயன் என்னும் ஒருவன் வந்தான். அவன் பொல்லாதவனாயினும் கல்வியறிவோடு நல்லசொல்வன்மையுமுடையவன். ஒன்றையும் ஆராயாமல் அவன்பால் அரசன் பெருநண்பு கொண்டான். அவனும் வினைக்குரியனாகி இவன்பால் அமைச்சுரிமை பூண்டான். அரசனிடமாத்திரம் அமைதியுடையனாய் நடித்துப் பிறர்க்கெல்லாம் அவன் பெருந்துயர் விளைத்தான். அதனால் கொடும்பகை வளர்ந்தது. குடிகளும் வருந்தினர். முடிவில் விதர்ப்ப தேசத்து வேந்தனாகிய உக்கிரசேனன் என்பவன் இவ்வரசன்மேல் படையெடுத்து வந்து பெரும்போர்புரிந்து முடிவில் அரசு முழுவதையும் கவர்ந்துகொண்டான். இவன் அகன்று சென்று வருந்தியிருந்தான். இவன் வழியில் வந்தவரும் அவ் அழிதுயர் அடைந்தார். இயல்பாகவே தான் நல்லவனாயிருந்தும் சேதயனை ஆராய்ந்து தெளியாமல் சேர்த்துக்கொண்டதனால் இத்தீதுறலாந்ததென்று பின் இவன் தெளிவுற்று நொந்தான். பிறனைத் தேராமல் ஒருவன் தெளிந்தால் அவன் வழிமுறையினும் அதனால் தீராத இடும்பையுண்டாம் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து தெளிந்தது. விரிவை மனுமரபில் காண்க.

பெருமை சிறுமை யளந்து கொளப் பேணுங் கருவி தத்தமது
கருமம் அதுபோல் பிறர்கருவி கழியச் சிறந்த வல அறிக
மருவு காதலாலறியார் மாட்டு வினையை வையற்க
ஒருவர் தமையுந் தேராமே யொருகாலத்துந் தெளியற்க.
(விநாயகபுராணம்.)

ஆராயாமல் ஒருவனைத் தெளிந்துகொண்டால் அதனால் தீராத துன்பமுண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

509 தேர்ந்த பிரமதத்தன் சேர்ந்தவர்பின் செய் வினையைக்
கூர்ந்துணர்ந்தான் என்னே குமரேசா—சார்ந்தென்றும்
தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள். (௯)

இ—ள்.

குமரேசா! பிரமதத்தன் கண்டரீகனையும் சவாலனையும் தனக்கு அமைச்சராகத் தேர்ந்துகொண்ட பின் உரிய வினைகளை ஏன் அவர்பால் ஒப்படைத்தான் எனின், யாரையும் தேராது தேறற்க; தேர்ந்தபின் தேறும் பொருள் தேறுக என்க.

தேறற்க என்றது எதிர்மறைவியங்கோள். எத்திறத்தாராயினும் ஆராயாமல் சிறிதும் தெளியலாகாது என்பார் யாரையும் தேராது தேறற்க என்றார். உம்மை எச்சமின்மையை உணர்த்தி நின்றது.

மேல், தேராது தேர்ந்தால் தீரா இடும்பைவரும் என்றார்; தேர்ந்து தெளிந்தபின் வேறு தேறவேண்டியதும் உண்டோ? எனின் ஒன்று உண்டென இதில் உணர்த்துகின்றார்.

செயல் முதலியவற்றால் ஒருவனது இயல்பினை ஆராய்ந்து தெளிந்துகொண்டபின் அவன் செய்பவல்ல வினைகளை அறிந்து தந்து ஐயம் கொள்ளாமல் அவனை ஆளுக என்பார் "தேர்ந்தபின் தேறும் பொருள் தேறுக" என்றார்.

எவரையும் ஆராயாது தெளியாதே; தெளிந்தபின் அவர்க்கு உரியனவாகத் தெளியும் பொருட்களைத்தெளிந்து கொள்க என்பதாம்.

ஒருவனைத் தேர்ந்துகொண்டபின் அவன் தேர்ந்த வினையை அவன்பால் நம்பிவிடுக என்பது கருத்து.

அறிவுடையார் ஆராயாமல் எவரையும் துணைக்கொள்ளார்

என்பதும் கொண்டபின் அவர்பால் ஐயங்கொள்ளார் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை பிரமதத்தன்பால் உணரப்படும்.

## கதை.

பிரமதத்தன் என்பவன் பாஞ்சாலதேசத்து வேந்தனாகிய விப்பரனுடைய புதல்வன். இவனதுகாலம் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னராம். இவன் அதிமதிநுட்பமோடு அதிகலை கற்றவன். புழுக்கள் பறவைகள் விலங்குகள் முதலிய எல்லா உயிர்வருக்கங்களும் தத்தமக்குள்ளே வழங்கிக்கொள்ளும் சொல்லாடல்களை இவன் இனிதுணர்ந்தவன். சந்திரிஎன்னும் ஓர் அழகிய கன்னியை மணந்து அமைந்த போகங்களை இவன் அனுபவித்திருந்தான். ஒருநாள் அந்தப்புரத்தில் தனது இனிய மனைவியோடு தனியாக அமர்ந்திருக்கும்பொழுது இரண்டு எறும்புகள் ஒன்றோடொன்று வாதாடிக்கொண்டிருப்பதைக் கண்டு உற்று நோக்கினான். அவற்றுள் பெண்எறும்பு ஆண் எறும்பைநோக்கி "நீ அயலோர் எறும்பை நெருநல் மருவி நின்றாய்; ஆதலால் இன்று என்னை நெருங்காதே; இதுவரையும் உன்னோடு கூடி வாழ்ந்தது போதும்; இனிக்கூடேன்" என்று ஊடி நின்றது. ஆண் எறும்பு அலமந்து "இனி அதை என்றும்செய்யேன்; இன்று பொறுத்தருள்க" என்று அதன் முன்காலை முகர்ந்துகொண்டு குழைந்துநின்றது. அதன்பின் அஃது இணங்கி உவந்தது. இதனை உய்த்துணர்ந்த பிரமதத்தன் இவ் எறும்பின் கண்ணும் காமன்குறும்பு கலந்திருக்கின்றதே! என்றுவியந்து நகைத்தான். நகைத்தது என் என மனைவி அணைத்துக்கேட்டாள். இவன் நயந்துமொழிந்தான். இங்ஙனம் பேரறிவுடையனாய் உவந்துவீற்றிருந்த இவன் பருவமெய்திய பின் அரசுரிமையையேற்று முறை செய்து வருங்கால் கண்டரீகன் சுவாலன் என்னும் இருவர் வந்துகண்டார். அவரது அறிவு இச்சைசெயல்களைப் பலவகையானும் அகலவைத்து ஆராய்ந்து வந்தான். முன்னர் வந்த எவரையும் நம்பாமல் ஐயுற்றகற்றிய இவன், அவரைத் துணைவராகத் தெளிந்தான். அதன்பின் சிறிதும் ஐயுறாமல் அவரை உரிமை

யோடு நடத்தினுன். அவரும் இவனுக்கு இருகண்கள் போலி ருந்து இன்புறநடந்து அன்புசெய்து வந்தார். அதனுல் அரசன் உயர்ந்த புகழோடு சிறந்தஇன்பத்தையும் அடைந்தான். யாரை யும் தேராது தேறற்க; தேர்ந்தபின் தேறும் பொருளைத்தேறுக; என்பதை இவன் தேர்ந்து காட்டினுன். விரிவை மச்சபுராணத் தில் காண்க.

ஆராய்ந்து தெளியாமல் எவரையும் நம்பலாகாது என்பது இதனுல் கூறப்பட்டது.

---

510 அன்றசுவத் தாமன்மேல் ஐயுற்ற வேந்தனேன்
குன்றிடும்பை யுற்ருன் குமரேசா—நன்ருகத்
தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும். (ய)

இ-ள்.

குமரேசா! அசுவத்தாமன் மேல் ஐயமுற்றதால் துரி யோதனன் ஏன் துன்பம் உற்ருன் எனின், தேரான் தெளிவும், தெளிந்தான்கண் ஐயுறவும் தீரா இடும்பை தரும் என்க.

தேரான் தெளிவும்—ஆராயாது தெளிதலும். தேரான் என்னும் எதிர்மறைமுற்று இங்கு எச்சமாய் நின்றது. தெளிந் தான் என்றது தெளியப்பட்டவனை.

ஐயுறவு—சந்தேகம். தெளிவில்லாதது என்க.

தெளிதல் ஐயுறுதல் என்னும் வினைகட்குரிய எழுவாயை வருவித்துக்கொள்க.

மேல், தேராமல் யாரையும் தெளியற்க; தெளிந்தபின் அவ ரை ஐயுறற்க; என்ருர்; அங்ஙனம் தெளியினும் ஐயுறினும் அவற் ருல் என்ன வந்துவிடும் என்பார்க்கு இஃது இயம்பியதென்க.

அரசன் ஒருவனை ஆராயாது தெளிதலும்; ஆராய்ந்து தெ ளிந்தவனிடத்தே ஐயப்படுதலும்; ஆகிய இவ் இரண்டும் அவனுக் குத் தீராத துன்பத்தைக்கொடுக்கும் என்பதாம்.

நன்றாக ஆராய்ந்து தெளியாமல் ஒருவனை வினைக்கு உரியவனாகத் துணைக்கொண்டால் அவன், வினையை இனிது நடத்தும் முறைமையை அறியானாய்ப் பற்று இன்றிப்பழிக்கும் அஞ்சானாய் அழிதுயரையே விளைத்துவிடுவனாதலால் தேரான் தெளிவும்; ஐயமுறும் ஒருவன்பால் அமைந்தொழுகல் உடைகலத்தில், நெய்யை விடல் நிகர்க்குமென நினைந்து மனங் கவர்படுவர்; என்றபடி தெளிந்துகொண்டவன்பால் பின் ஐயங்கொண்டால் அவன் உள உறுதிகுலைந்து விடும்; அதன்பின் வினைபழுதுபடும்; அதனால் அரசனுக்குப் பெருங்கேடுகள் உண்டாம் ஆதலால் தெளிந்தான்கண் ஐயுறவும்; இடும்பை தருதற்கு ஏதுவாகும் என்க.

முதலிலேயே வழுவற ஒருவனை ஆராய்ந்து தெளிந்துகொள்ளவேண்டும்; தெளிந்துகொண்டபின் அவன்பால் ஐயுறலாகாது என்பது கருத்து.

தெளியப்பட்டவன்பால் ஒருவன் ஐயப்பட்டால் அதனால் அவன் அல்லற்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அசுவத்தாமன்பால் உணரப்படும்.

## கதை.

அசுவத்தாமன் என்பவன் தொல்லாசிரியர் எல்லாராலும் வில்லாசிரியன் என்று புகழப்பட்ட நல்லாசிரியராகிய துரோணருடைய புதல்வன். தாய் பெயர் கிருபி. இவன் சிவனருளால் பிறந்தவன். சிரஞ்சீவியர் எழுவருள் ஒருவன். மற்றவர் வியாசன் அனுமான், வீடணன், மாபலி, கிருபன், பரசுராமன், என்பர். இவன் அந்தணனாயினும் அரசரும் அஞ்சத்தக்க பெருவீர முடையவன். வில்லாடலோடு சொல்லாடலிலும் வல்லவன். கரவேகத்திலும், சரவேகத்திலும், விசயனினும் விஞ்சியவன் என்று இவன் இசை பெற்றிருந்தான். இவனது வினைத் திறத்தை வியந்து துரியோதனன் இவன்பால் பெரு நண்பு கொண்டான். வழுவில்லாத துணைவன் என்று இவனை முழுவதும் நம்பினான். பாரதப் போரில் இவனையே தன் சேனைக்கு அதிபதியாக்கிக்கொள்ள வேண்டுமென்று அவன் தெளிவுற்றிருந்தான். படைத் தலை

னாக இவன் நின்றால் பாண்டவர் வெற்றியடைதல் அரிது என்று கண்ணன் கருதியிருந்தாராதலால் தூது சென்றபொழுது ஒரு சூழ்ச்சியைச் செய்தார். அரசவையிற் புகுந்து உரைசெய்து மீளுங்கால் அசுவத்தாமனைத் துரியோதனன் காணுமாறு கண்ணமைத்து அழைத்தார். இவன் வெளியே வந்து அவர் அருகே நின்றான். நும் அரசன் உரைத்தபடியே ஐவரும் வனம் புகுந்து திரிந்து விரதம் தப்பாமல் வந்து தம் உரிமையைக் கேட்டால் இல்லையென்று மறுத்துவிட்டான். இனி நிகழ்வதைக் குறித்து நீ வருத்தங்கொள்ளற்க என்று உரைத்துக்கொண்டே தம் விரலணியைக் கழற்றி நழுவவிட்டார். அது கீழே விழுந்தது. விழுந்த அதனைக் குனிந்து எடுத்து இவன் கண்ணனிடம் கொடுத்தான். அவர் அதை உடனே கொள்ளாமல் சூரியனை ஊர் கோள் சுற்றியிருக்கின்றதே! என்று மேலே நோக்கினார். இவனும் அண்ணாந்து நோக்கினான். அதன் பின் அதனை அவர் வாங்கிக்கொண்டார். பூமியைக் குனிந்து தொட்டுப் பின்பு வானை நிமிர்ந்து நோக்கிக் கண்ணன் கையில் தன் கைபட இவன் நின்ற நிலைமையைக் கண்டுகொண்டிருந்த துரியோதனன் வேறுவகையாகக் கருதிக்கொண்டான். பூமிதேவி அறிய ஆகாயவாணி சாட்சியாக ஐவர்க்கே யான் உதவியாகி நிற்பேன் என்று அசுவத்தாமன் கண்ணனிடத்தில் உறுதிசெய்து தந்ததாகத் துரியோதனன் முடிவுசெய்துகொண்டான். ஆதலால், அன்றுமுதல் இவன்பால் ஐயங்கொண்டான். இவன் பின்பு வந்து யாது கூறியும் அவன் நம்பவில்லை. அவனது ஐயுறவை நோக்கி இவனுந் தன் மெய்யுறவை நீக்கினான். அதனால் அவன் பெருந் துன்பங்களையடைந்தான். தெளிந்தான்கண் ஐயுறவு தீரா இடும்பை தரும் என்பது இவன்பால் அன்று தெளியநின்றது. விரிவை பாரதத்தில் காண்க.

வரித்தாமரைக்கட் டிருநெடுமால் வான்வாய்நோக்க வரிவிற்கைப்
பரித்தாமாவும் ஆழியுடன் பரிதிவடிவந்தனைப்பார்த்தான் (யும்
இரித்தாழ் கவிகைக் கருங்குழல்வன் கிளர்நூல் முனிவன் மைந்தனை
பிரித்தான் அவனும் சூளுற்றான் என்றார் இருந்தபேரவையோர்.(1)

தனிவந்தகலும் தூதனைப்போய்த் தானேயனுகித் தடஞ்சாப
முனிவன்புதல்வன்மோ திரந்தொட்டருஞ்சூள் முன்னர்மொழிகின்
இனிவந்துறவாய்நின்றலுப் எங்ஙன் தெளிவதினையெனத் [றான்
துனிவந்தரசர்முகநோக்கிச்சொன்னான் இடியேறன்னானே. (2)

[யதும்
துளியார்மதுவின் வலைப்புரித்தார்த் துரியோதனன்றான் சொல்லி
ஒளியாரவையில் வாள்வேந்தர் ஒருவர்க்கொருவ ருரைத்தனவும்
களியானையனன் செவிப்படலும் கலங்கிச்சிந்தம் இவனைத்
தெளியாவண்ணம்பேதித்தான் திருமாலனநேசிந்தித்தான். (5)

இவற்றால் மேற்குறித்த ஐயுறவின் உண்மை இனிது தெளிவாம்.

தெளிந்துகொண்டவன்பால் பின்பு ஐயங்கொண்டால் தீதே உண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

அறம் பொருள் இன்பம் அச்சம் என்னும் நான்கு வகையாலும் அரசன் ஒருவனைத்தெளிதல்வேண்டும். குடிப்பிறப்பும் குற்றமின்மையும் வடுப்பரிவும் நாணும் உடையவனையே அரசன் தெளிந்துகொள்ளவேண்டும். குற்றம் சிறிதும் இல்லாதவர் இங்கு ஒருவருமிலர். ஆதலால் குற்றம் குறைந்து குணமிகுந்தவரையே கூட்டிக்கொள்ளவேண்டும். பணிதர்களுடைய பெருமை சிறுமைகளை அறிதற்கு அவர்களது செயல்களே நல்ல கருவியாம். சுற்றமற்றவரைத் துணையாகச் சூழ்ந்துகொள்ளலாகாது. தொழிலறியாதவரைத் துணைக்கொள்ளலாகாது. ஆராயாது ஒருவனைத் தெளிந்தால் அதனால் தீராத துன்பமுண்டாம். தேர்ந்து தெளியாமல் எவரையும் சேர்த்துகொள்ளாதே. தேராதவனிடத்துத் தெளிவும், தெளிந்தவனிடத்து ஐயமும், சிறிதும் கொள்ளற்க, கொண்டால் இடும்பையுண்டாம்.

ருக-வது தெரிந்து தெளிதல் முற்றிற்று.

# 52ம் அதிகாரம் தெரிந்து வினையாடல்

அஃதாவது தனக்குத் துணைவராகத் தெளிந்துகொண்டவரது தகுதிக்கு இயைந்த வினைகளை அறிந்து அவற்றின்கண்ணே வைத்து அவரை அரசன் ஆளுந்திறம். வினைக்குரியாரைத் தெரிந்து தெளிந்த பின்னரே இவ் வினைநலம் விளங்கிநிற்கும் ஆதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

511 அன்றரிசி லாரை அமைச்சாக வனரசன்
குன்றுமல் ஆண்டான் குமரேசா—குன்றாத
நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும். (க)

இ—ள்.

குமரேசா! சேரவிரும் பொறை என்னும் சேர மன்னன் அரிசிற் கிழாரை ஏன் தனக்கு அமைச்சராக உடனே ஆண்டு கொண்டான் எனின், நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த தன்மையான் ஆளப்படும் என்க.

நாடிப்புரிந்த தன்மையான் ஆளப்படும் என்று காண்க.

நன்மையும் தீமையும் நாடி—நல்லனவற்றையும் தீயனவற்றையும் ஆராய்ந்து; அஃதாவது தன்னை ஆதரித்து ஆளும் அரசனுக்கு ஆவனவற்றையும், ஆகாதனவற்றையும் ஆராய்ந்து தெளிந்து என்றபடி.

நல்லவும் தீயவும் நாடி நாயகற்கு
எல்லையின் மருத்துவ னியல்பி னெண்ணுவார்
ஒல்லவந் துறுவன உற்ற பெற்றியின்
தொல்லைநல் வினையென உதவும் சூழ்ச்சியார்,

என்று கம்பர் அருளியுள்ள அயோத்தி மன்னரது அமைச்சர் தன்மை இங்கு அறியத்தக்கது. புரிந்த என்றது புரி என்னும் வினையடியாகப்பிறந்த பெயரெச்சம்; அது தல்விகுதிபெற்றுப் புரிதல்என நின்றுல தொழிற்பெயராம். புரிதல—விருபபல், செய்தல்

புரியும் தன்மை யான் எனறது புரிந்த என்று இறந்த காலத்தால் கூறியது, நலந் தீங்குகளை அறிந்து செய்யும் இயல்பினைத்

தெளிவாகத் தெரிந்த பின்பே வினைகளில் வைத்து ஒருவனை ஆள வேண்டும் என்பது விளங்குதற்கு என்க.

நல்லனவற்றையும் அல்லனவற்றையும் ஆராய்ந்தறிந்து அவற்றுள் நலமானவற்றைச் செய்யும் இயல்புடையவனே அரசனால் வினைகளில் வைத்து ஆளுதற்கு உரியவனாவன் என்பதாம்.

வினையாளன்பால் முதன்மையாக வேண்டப்படுவது தன் ஆண்டவனுக்கு ஆவனவற்றை அறிந்துசெய்யும் குணமுடைமையேயாம் என்பது குறிப்பு,

இதமானவற்றை அறிந்து செய்யும் தெளிவுடையவனையே தனக்குத் துணையாக அரசன் தழுவிக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

தன்னையாள்பவனது நலத்தை விரும்பும் வினையாளனே யாவராலும் மதிக்கப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அரிசிற்கிழார்பால் அறியப்படும்.

## கதை

அரிசிற்கிழார் என்பவர் சோழநாட்டிலே அரிசிற்கரை என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே பிறந்தவர். சிறந்த புலவராய்ப் பெரும் புகழ்படைத்து இவர் விளங்கியிருந்தனர். எவரிடத்தும் மிக்க இரக்கமுடையவர். பேகன் என்னும் வள்ளலைப் பிரிந்து வருந்தியிருந்த கண்ணகி என்னும் காதற்கிழத்தியை அவன் கைக்கொண்டு வாழுமாறு இவர் போய்க் கனிந்து மொழிந்தார். எவர் கூறியும் கேளாதிருந்த அவன் இவரது மொழி வழியொழுகி அவ்வழகியைப் பின் ஆதரித்து வாழ்ந்தான். நிலந்தரு திருவினரும் வலந்தரு திருவினரும் இவரது நலந்தரு பாடலால் சலந்தவிர்ந்துயர்ந்தனர். இவரது நுண்ணிய அறிவையும் எண்ணியதை இனிதுமுடிக்கும் திண்ணிய நலத்தையும் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை என்னும் சேரமன்னன் கேள்வியுற்று இவரைத் தன்பாலழைத்து வைத்து அன்புசெய்து போற்றிவந்தான். இவரும் அவனது வள்ளற்குணம் முதலியவற்றை வியந்து அவன் மேல் சில பாடல்கள் பாடினார். அவற்றைக் கேட்டு அம்மன்னன்,

மகிழ்ந்து ஒன்பது நூறு பிரம் பொற் காசுகளையுதவி தான் அமர்ந்திருந்து அரசுபுரிந்த அரியணையையும் இவருக்கு உரிமையாகத் தந்தான். அப்பொலந் தவிசு அரசுக்கே பொருந்துமென்று இவர் இரந்து தந்து அதில் அவனை எழுந்தருளச்செய்தார். ஆவதை அறிந்து அன்புசெய்த இவரது அறிவினைவியந்து தனக்கு அமைச்சராக இவரை அவன் அமைத்துக்கொண்டான். இவரும் அரசு முறையை வழுவறப் புரிந்து அவனது இசையைத் திசைதோறும் விளக்கி இனிதமர்ந்திருந்தார் நன்மையும் தீமையும் நாடி நலம் புரிந்த தன்மையானே பின் அரசனால் வினைகளில் வைத்து ஆளப் படுவான் என்பதை இவர்பால் உலகம் அன்று அறிந்துநின்றது. விரிவைப் பதிற்றுப்பத்தில் காண்க.

ஆவதை அறிந்தசெய்யும் அறிவுடையானே அரச வினைக்கு உரியவனாவன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

512 தெள்ளுபுகழ் அக்குரூரன் தேர்ந்தேன் பெருவளங்கள்
கொள்ளவினை செய்தான் குமரேசா—கொள்ளநிறை
வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
ஆராய்வான் செய்க வினை. (உ)

இ—ள்.

குமரேசா! வளங்களை வளர்த்து உறந்திறங்களை நாடோறும் ஆராய்ந்து அக்குரூரன் ஏன விழைந்து வினைசெய்தான் எனின், வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை ஆராய்வான் வினைசெய்க என்க.

வாரி என்றது வருதலுடையது என்னும் ஏதுவொன்றந்தது. அது பொருள் வருதற்குரிய நெறிகளை ஈண்டு உணர்த்திநின்றது.

வளம்படுத்து என்றது அரசனுக்கு வேண்டிய செல்வங்கள் யாவும் செழிப்புற வளர்த்து என்றபடி. வளம்—செல்வம், அழகு, செழிப்பு.

உற்றவைஎன்றது தன்வினைக்குமாறாக உற்றஇடையூறுகளை.

நன்மை தீமைகளை நாடியறிந்து நலம்புரியும் தன்மையுடையவனே வினைக்குரியனாவன் என்று மேல் விளக்கியருளினார்; இதில்,

வருவாயைப் பெருக்கி வளத்தை வளர்த்து வருவதை ஆராயும் வன்மையும் அவன்பால் மருவியிருக்கவேண்டும் என்றார்.

பொருள் வருதற்குரிய வழிகளை விரியச்செய்து பல்வகைச் செல்வங்களையும் பண்புற வளர்த்துப் பொருந்தும் இடையூறுகளை நடோறும் அறிந்துவிலக்குபவனே அரசனுக்கு வினைசெய்ய உரியவனாவன் என்பதாம்.

பகைவர் கள்வர் முதலானவரால் தோன்றும் இடையூறுகளை நீக்கிவன்ற வருவாயைப் பெருக்கி ஆன்ற வளங்களை வளர்க்கும் அறிவுடையாரே அரச வினைக்கு உரியவராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அக்குரூரர்பால் அறியப்படும்.

கதை.

அக்குரூரர் என்பவர் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர் வடமதுரையிலே யதுகுலத்திலே சுவபலகன் என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றினர். தாய் பெயர் காந்தினி. இவர் நல்ல சீலமுள்ளவர். எல்லாவுயிர்களிடத்தும் இயல்பாகவே இரக்கங்கொண்டவர். இளமைப் பருவத்தில் எளிய பிராணிகளுக்குப் பிறர் துயர்புரிந்தபொழுது அவரைத் தடுத்து அவற்றை இவர் ஆதரித்தார். குரூரம் என்பது சிறிதும் இவரிடமில்லாதிருந்ததினுல் அக்குரூரர் என்று இவர் அழைக்கப்பட்டார். குரூரம்—கொடுமை. இவர் சித்திர ரதை என்னும் உத்தமியை மணந்து சிறந்து வாழ்ந்து வருங்கால் வடமதுரை மன்னனுகிய உக்கிரசேனன் இவரைத் தனக்கு அமைச்சனுக்கிக்கொண்டான். இவர் அமைச்சராயிருந்து பலவகையிலும் அரசுக்குப் பெருநலங்களைச் செய்துவந்தார். இவரது வினைநலத்தால் குடிகள் பெருவளங்களையடைந்து மிக மகிழ்ந்திருந்தன. இளவரசனுயிருந்த கஞ்சன் வலியனுகித் தந்தையையும் மதியாமல் தன்னரசு புரிந்தகாலத்தும் மன்னனுக்கு இயன்றவரையும் இவர் இதம்புரிந்துவந்தார். பாண்டுமன்னன் இறந்தபின்பு திருதராட்டிரன் பாண்டவர்களை எப்படிக் கொண்டுவருகின்றுன் என்பதைக் கண்டுவரும்படி கஞ்சனுல் இவர் அத்தினபுரிக்கு ஏவப்பட்டார். அங்குச் சென்று அவ்வரசனுக்கு நீதிகள் பல ஓதி உணர்த்தினர்.

பெற்ற புதல்வர்போலப் பிள்ளைச் சுரும்பர் பாடும்
பொற்றார் ஐவர் தம்மைப் போற்றிக் கொள்ளல் வேண்டும்

எனவும்

பொதுநின்றுலகம் புரத்தி பொங்கு புகழே அல்லால்

எதுநின்றது மற்றென்று எனவும் உன்னியவற்றை உறுதி பெற உணர்த்திமீண்டார். சாலுவன், தந்தவக்கிரன், சகதன் வா முதலியோரியற்றிய அல்லல் பலவற்றையும் அறிந்து விலக்கி எல்லாவுயிர்கட்கும் இவர் இதத்தை விளைத்தார். உற்ற இடையூறுகளை உய்த்துணர்ந்து நீக்கி வினையை இனிதுறச் செய்துவருகின்ற இவரது மன நலத்தை வியந்து கண்ணனும் இவர்பால் பெருநண்பு கொண்டு பேணிவந்தார். வாரி பெருக்கி வளம்படுத்து உற்ற இடையூறுகளை நாடோறும் உய்த்துணர்ந்து நீக்க வல்லவனே அரசனுக்கு வினைசெய்தற்கு உரியவனுவன் என்பதை உலகம் இவர் பால் உணர்ந்து தெளிந்தது. விரிவைப் பாகவதத்தில் காண்க.

செல்வத்தை வளர்த்து அல்லல்களைய வல்லவனே அரச வினைக்குத் தக்கவன் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

513 மோசியனை ஆய்முதலோர் முற்றுந் தெளிந்தேனே
கூசாமல் கொண்டார் குமரேசா—மாசகன்ற
அன்பறிவு தேற்றம் அவாவின்மை யிந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. (ங)

இ-ள்.

குமரேசா! ஆய்முதலிய மன்னவரனைவரும் மோசியாரை என் தமக்குத் துணையாகத் தெளிந்துகொண்டார் எனின், அன்பு அறிவு தேற்றம் அவா இன்மை இந்நான்கும் நன்கு உடையான் கட்டே தெளிவு என்க.

தேற்றம் என்பது தெளிவு நிச்சயம் திடன் முதலியவற்றைக்குறித்துவரும். ஈண்டு வினைசெய்தற்கட் கலங்காமையை அஃது உணர்த்திநின்றது. உடையான் கட்டே தெளிவு—உடையவன்

கண்ணே தான் தெளிவு. நாண் உடையான் கட்டே தெளிவு என்றதில் மேல் எழுதியுள்ளதை எண்ணி மேவிக்கொள்க.

தன்னைத் துணையாக நம்பினவன்மேல் வினையாளனுக்கு அன்பு இல்லையானால் விச்சுவவுருவன்போல் தன் இச்சைப்படியே ஏதேனும் விளைக்கத் துணிவனாதலால் அதனை ஒழித்தற்கு அன்புவேண்டும் என்று கருதி அதனை முன்பு வைத்தார். அன்பு இருந்தாலும் ஆவன புரியும் அறிவு இல்லையானால் ஊணரில்லான் செய்யும் உதாரதைபோல் வீணே புரைபடுமாதலால் அறிவும்; அறிவிருந்தாலும் அறிந்ததைத் துணிந்து செய்யும் தெளிவு இல்லையானால் யாவும் வழுவுறும் ஆகலால் தேற்றமும்; இம்மூன்றும் இருந்தாலும் அவா இருப்பின் கட்டியங்காரன்போல் அனைத்தையும் கவர்ந்துகொள்ள நினைப்பனாதலால் அவாவின்மையும் அதன் பின் முறையே அமைய வைத்தார்.

தன்பால் அன்பும் தொழிலறிவும் தெளிந்ததைச் செய்யும் திறமும் ஆசையின்மையும் ஆகிய இந்நான்கு குணங்களையும் நன்றாகவுடையவனையே அரசன் நம்பவேண்டும் என்பதாம்.

விண்டுழி ஒருநிலையும், மெய் முகம் கண்டுழி ஒரு நிலையும் கைப்பொருள் கொண்டுழி ஒரு நிலையும், கூழுடன உண்டுழி ஒருநிலையும், சிலர் உற்று நிற்றல்போல் உலைந்து நிலைமல், அன்பு அறிவு தெளிவு முதலியபவிழுமிய குணங்களோடு என்றும் ஒருபடியாகவே நின்று விளங்குபவனையே நம்பவேண்டும் என்பார் "நான்கும் நன்குடையான் கட்டே தெளிவு" என்றார்.

நிலை திரியாத அறிவாளரிடத்தேதான் அறிவுடையரசர் தெளிவுகொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மோசியார்பால் உணரப்படும்.

## கதை.

மோசியார் என்பவர் சோழநாட்டிலே வணிச் சேறி என்னும் ஊரிலே வேதியர் குலத்திலே பிறந்தவர். இவரது காலம் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னதாகும். பெரும் புலமையோடு அருங்குணங்கள் யாவும் இவர் அமையப் பெற்றவர்.

யாவர் மாட்டும் பேரன்பு மிக்கவர். உண்மையை எவர் முன்னின்றும் உறுதி பெறக்கூறும் திண்மையுடையவர். உலகியல் முழுவதும் மனையறத் தெளிந்தவர். இவரது மதித்திறத்தையும் கவிச்சிறப்பையும் அறிந்து முடியுடைமன்னர் மூவரும் இவரைத் தனித்தனியழைத்துத் தம்பால் இருக்குமாறு அன்புசெய்து வேண்டினர். அங்ஙனம் இருந்துவருங்கால் கருவூரிலிருந்து அரசுபுரிந்த பெருஞ்சேரலிரும்பொறை என்னும் சேரமன்னனோடு அழகிய மேன்மாடத்தில் ஒருநாள் இவர் உடனமர்ந்திருந்தார். அவ்வமயம் உறையூரிலிருந்த பெருநற்கிள்ளி என்னும் சோழமன்னனது யானை மிகுமதங்கொண்டு வேல்வீரர் பலர் திரண்டு விரைந்து தடுப்பவும் அடங்காததாய் அரசனோடு கருவூரை அடைந்தது. நமது கவிச்சிங்கத்தோடு மாடத்தும்பர் மருவியிருந்த சேரன் படைகளோடு பகைவன் வருகின்றான் என்று மிகவும் வெகுண்டான். அவ்வமையம் அவனைக் கையமர்த்தி மதம்பற்றிய ஓர் யானையின் புடைபெயர்ச்சியேயன்றி இது படையெழுச்சியன்று என அறிவுறுத்தி, நிலைகுலைந்து வந்த சோழனை மனமுவந்து வாழ்த்தி இருவரும் மகிழ்ந்து உறவுகொள்ளுமாறு இவர் நயந்து வினைசெய்தார்.

இவன்யார் என்குவை யாயின் இவனே
புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
எய்கணை கிழித்த பகட்டெழில் மார்பின்
மறலியன்ன களிற்றுமிசை யோனே
களிறே, முந்நீர் வழங்கும் நாவாய் போலவும்
பன்மீன் நாப்பண் திங்கள் போலவும்
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோர் அறியாது மைந்துபட் டன்றே
நோயில னாகிப் பெயர்கதில் அம்ம
பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழவோனே.

(புறநானூறு.)

என்று இதை அவ்வமயம் இவர் பாடியுணர்த்தினர். இதில் இவரது அன்பும் தேற்றமும் பண்பும் புலனும். பின்பு, பொதிய மலைக்குத்தலைவனுகி ஆய்குடி என்னும் நகரிலிருந்த ஆய் என்னும் அருமை வள்ளலை இவர் கண்டார். உடனே தனக்கு உயிர்த்துணைவராக இவரை அவன் தெளிந்துகொண்டு எந்நாளும் தன்னுடன் இருக்குமாறு குழைந்து வேண்டினன். இவரும் அங்கு இசைந்து தங்கி அவனது குணநலங்களை உடனிருந்து கண்டு மிகவும் மகிழ்ந்தார்.

முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளி னேனே
ஆழ்கஎன் உள்ளம் போழ்கஎன் நாவே
பாழூர்க் கிணற்றிற் றூர்கஎன் செவியே.

என்று முன்னரே அவனைக் காணப்பெறுமைக்காக இவர் நாணி இரங்கினர். அரசியல் முழுதும் இவரது செயல்வழி விடுத்து அவன் தேறியிருந்தான். அன்பு அறிவு தேற்றம் அவா இன்மை என்னும் இந்நான்கு குணங்களையும் நன்குடையவனையே நம்பவேண்டுமென்பதை அவர்பால் அவன் நன்று தெளிந்தான். விரிவைப் புலவர் மான்மியத்தில் காண்க.

அன்பு முதலியன நன்குடையவனையே அரசன் நம்பவேண்டும் என்பது இதனல் கூறப்பட்டது.

---

514 கற்றுயர்ந்த சந்திரனைக் கட்டியனைத் தேர்ந்துவைத்தும்
குற்றமேன் செய்தார் குமரேசா—முற்றும்
எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறுகும் மாந்தர்பலர்.) (௪)

இ—ள்.

குமரேசா! நன்முகத் தெளிந்துவைத்திருந்தும் சந்திரனும் கட்டியங்காரனும் ஏன் பின்பு வேறுபட்டார் எனின், எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையான் வேறுகும் மாந்தர் பலர் என்க.

எனைவகையால்—எத்தனைவிதங்களால், தேறியக்கண்ணும்—தெளிந்துகொண்டபின்னும்.

மேல், அன்பு அறிவுமுதலியன நன்குடையவரையே நம்ப வேண்டும் என்றார்; அங்ஙனம் நம்பிக்கொண்டாலும் என்றும் ஒருபடியாக நின்று விளங்குவார் சிலரே என்று இதில் எய்த உணர்த்தினார்.

பலவகையானும் ஆராய்ந்து வினைக்குரியராகத் தெளிந்து வைத்தபின்பும் அவ்வினையினியல்பால் வேறுபடும் மக்கள் பலர் இவ்வுலகில் உளர் என்பதாம்.

காரியத்தில் ஏற்படுத்தும்வரையும் செம்மையுடையவராயிருந்து பின்பு அதிகாரம் அவாமுதலியவற்றால் சிந்தை திரிந்து தம்மை நம்பினவர்க்கு மோசஞ் செய்பவர் பலருளர் ஆதலால் வினையில் வைத்தே எவரையும் சிலகாலம் ஆராய்ந்து வரவேண்டும் என்பது கருத்து.

எல்லாவகையானும் ஆராய்ந்துநல்லவராகத் தெளிந்து கொண்டாலும் பின்பு பொல்லாதவராகி அல்லல் விளைப்பவர் பலர்இவ்வுலகில் உளர்என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சந்திரன்பாலும் கட்டியங்காரன் கண்ணும் உணரப்படும்.

கதை

சந்திரன் தன்பால் மாறாத அன்புடையவன் என்று வியாழ பகவான் மிகவும் தேறியிருந்தார். அங்ஙனமிருந்தும் அவருடைய மனைவியையே இவன் அமைய மறிந்து கவர்ந்து சென்றான். பேரறிவுடைய இவனும் இச்சிறுமையைச் செய்தானே என்று அவர் பின்பு சிந்தை கலங்கினார். தான் நம்பி மோசம் போனதை நினைந்து நினைந்து அவர் நெடுங்கவல் கொண்டார். கலை நிறைந்த மதியும் தன்நிலை திரிந்தான் என்று இவ்வுலகிலும் ஒருபழி நிலவி நின்றது. எனைவகையால் தேறினும் வினைவகையால் வேறுபடும் மாந்தர் பலர் என்னும் உண்மை புத்தேளுலகத்தும் முன் பொருந்தி யிருந்ததேயென்று அறிஞர் பலரும் அறிந்து வியந்தனர்.

கதை 2

கட்டியங்காரன் என்பவன் ஏமாங்கத நாட்டு மன்னனாகிய சச்சந்தனை முதலில் அணுகியபொழுது இவனது இயல்பினைப்

பலவகையாலும் அவன் ஆராய்ந்தான். பின்பு பண்புடையவனா கத் தெளிந்து இவனைத் தனக்கு அமைச்சனாக்கிக்கொண்டான். இவனும் அவன்பால் பேரன்புடையவனாய் அமைந்து வினைசெய் து வந்தான். நிமித்திகன், உருத்திரதத்தன் முதலிய தன் உரிமை யாளர் எவரினும் இவன்மீதே அரசன் பெருநண்புகொண்டான். மனைவியோடு அமர்ந்து இன்பத்திலாழ்ந்து அரசன் அந்தப்புரத் தில் தங்கியகாலத்து அரசை நடத்திவருமாறு இவன்பால் தருங் கால் உடனிருந்தவர் தடுத்தார். அவ்வமையம் அரசன் அவரை நோக்கி

எனக்குயி ரென்னப்பட்டான் என்னலாற் பிறரையில்லான்
முனைத்திற முருக்கிமுன்னே மொய்யமர் பலவும் வென்றான்
தனக்கியான் செய்வசெய்தேன் தான்செய்வ செய்க வொன்றும்
மனக்கிடர் மொழியவேண்டா வாழியர் ஒழிக என்றான்.

இங்ஙனம் தேறிவைத்தும் பின்பு இவன் மாறுபட்டு அம் மன்னனுக்கே இன்னல் விளைத்தான். பலவகையால தேறியுங் கண்டும் வினைவகையில் வேறுபடும் மாந்தர் பலர் என்னும் உண் மைக்கு இவனும் ஒருவனாயிணங்கி நின்றான்.

காட்டிக் கருமங் கயவர்மேல் வைத்தவர்
ஆக்குவர் ஆற்ற வமைகென நோந்திருத்தல்
மாயப்புணர் மென்தோகை மயிலனாய் பூசைக்குக்
காப்பிடுதல புன்மீன் தலை. (பழமொழி.)

பலவகையாக ஆராய்ந்து தெரிந்தாலும் தம் நிலைதிரிந்திழி பவர் பலருளாரென்பது இதனால் அறியப்பட்டது.

---

515 பெண்டிரையேன் எலிப் பெருமுனியை மன்னவன்முன்
கொண்டுயரச் செய்தான் குமரேசா — மண்டி
அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று. (ரு)

இ—ள்.

குசபரோசா! உரோமபாதன் வேறு ஒருவரையும் ஏவாமல் பெண்களை ஏக வினைமேல் ஏவினான் எனின், அறிந்து ஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான் சிறந்தான் என்று ஏவற்பாற்று அன்று என்க.

ஏவல்பாற்று அன்று—ஏவுதல் பான்மையுடையது அன்று: கூடாது என்றபடி. ஆற்றி—பொறுத்து. செய்கிற்பாற்கு—செய்ய வல்லவனை. கில் என்னும் இடை நிலை இதில் ஆற்றலை உணர்த்தி நின்றது. பொருந்திநின்ற உருபு பொருளுக்குப் பொருந்தவில்லையானால் அதற்கு இசையுமாறு அதனை இசைத்துக் கொள்ளவேண்டும். குவ்வுருபுக்குரிய கோடற்பொருள் இங்குக் கொள்ள இடம் இல்லையாதலால் செயப்படுபொருளாக அது திரிக்கப்பட்டது. பொருள் செல்மருங்கே வேற்றுமை சாரும் என்க.

எவ்வளவு தெளிந்துகொண்டாலும் பின்பு மாறுபடுபவர் இவ்வுலகில் பலராவர் என்று மேல் அருளினார்; ஆயின் மாறுபாடின்றித் தம்பால் அன்புடைய நண்பனையே வினைகளில் ஏவிக்கொள்வோம் எனின், வினை இனிது முடியாது பழுதுபடுமாதலால் அது கூடாதென்று இதில் அறிவுறுத்தினார்.

செய்யும் உபாயங்களை அறிந்து எய்தும் இடையூறுகளைப் பொறுத்து முடிவுறச் செய்ய வல்லவனை அல்லது சிறந்தவன் என்று பிறனொருவனை ஏவும் பான்மையை வினைதான் உடையதன்று என்பதாம்.

தன்மேல் அன்புடையவன் என்பதை மாத்திரம் கருதி வினைத்திறம் இல்லாதவனை அதன்மேல் ஏவின் அவனது அறியாமையால் அது கெடும்; ஆதலால் "சிறந்தான் என்று வினைதான் ஏவற்பாற்று அன்று" என்றார். வேறு வகையில் எவ்வளவு சிறந்தவனாயினும் வினையை முடித்து வருதற்குரிய ஆற்றல் இல்லையானால் அவனை அதில் ஏவலாகாதென்பது குறிப்பு.

ஆற்றலுடையவரையே அறிவுடையார் வினைமேல் விடுவர் எ

ன்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உரோமபதன் பால் உணரப்படும்.

கதை.

அங்கதேசத்து அரசனாகிய உரோமபதன் என்பவன் கலைக்கோட்டு முனிவரைத் தன் நகர்க்குக் கொண்டுவரவேண்டும் என்று கருதினான். அவ் அரிய காரியத்தை முடித்து வருதற்குரிய சதுரர் யார்? என அரசன் பெரிதும் ஆராய்ந்தான். வீரவர்மன், சுகேது, சுதர்மன் முதலிய வீரர் பலர் தன்னைப் புடைசூழ்ந்திருந்தும் அவருள் ஒருவரையும் ஏவாமல் அவ்வினைத்திறத்தையே அரசன் நினைத்து நின்றான். அவ்வமையம் கமலை சுலோசனை என்னும் மகளிருவரும் அதனைச் செய்துவருவதாகச் செப்பி நின்றார். அவ்விருவருடைய செயல்களையும் இயல்களையும் அறிந்து தெளிந்து அவரையே அவ்வினைமேல் அரசன் ஏவினான். அவரால் வினை முடிவுற்றது. இவனும் மனமகிழ்வுற்றான். அறிந்து ஆற்றிச் செய்ய வல்லவரையல்லது சிறந்தான் என்று வினைதான் ஏவற்பாற்று அன்று என்பதை இவன் அன்று ஏவி உணர்த்தினான்.

ஆங்கவரம் மொழியுரைப்ப அரசன்மகிழ்ந் தவர்க்கணிதூ
சாதி யாய
பாங்குளமற்றவையருளிப் பணிப்பிறையைப் பழித்தநுதற்
பணைத்தலைய்த்தோள்
ஏங்குமிடை தடித்தமுலை இருண்டகுழல் மருண்டவிழி
இலவச்செவ்வாய்ப்
பூங்கொடியீர் ஏகும்எனத் தொழுதிறைஞ்சி இரதமிசைப்
போயினாரே. (இராமாயணம்.)

இது, தான் ஏவிய வினைமேல் அவ்விருவரும் செல்லுங்கால் உரோமபதன் செய்ததைக் கூறியது. வினையாளரை இவன் தெரிந்து ஆண்ட திறம் இதனால் தெளிய நின்றது.

முடித்தற்குரியவரையே வினைமேல் விடுத்தல் வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

516 விண்டலத்து வேந்தால் வினைநாடிக் கண்ணனேன்
குண்டலத்தைக் கொண்டான் குமரேசா—மண்டலத்தில்
செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல். (கூ)

இ—ள்

குமரேசா! முந்துறநாடி இந்திரனைவவிக் கண்ணன் குண்டலத்தை ஏன் கண்ணன் கொண்டான் எனின், செய்வானை நாடி வினைநாடி காலத்தோடு எய்த உணர்ந்து செயல் என்க.

செய்வானை என்றது வினையாளனை.

எய்த உணர்ந்து—பொருந்த அறிந்து. செயல்—செய்க.

மேல், வினைக்கு உரிமையில்லாதவனைத் தனக்கு உரியவன் என்று கருதி அதில் ஏவலாகாது என்றார்; இதில், வினையியல்போடு காலஇயல்பையும் ஆராய்ந்தே வினையாளனை அதில் ஏவுதல் வேண்டும் என்கின்றார்.

இன்னகாலத்தில் இன்னவன் சென்றால் இக்காரியம் இனிதுமுடியும் என்று முன்னதாக ஆராய்ந்தறிந்தே வினையாட்களை மன்னவன் ஆளவேண்டும் என்பது கருத்து.

செய்பவனது இயல்பையும் செய்யப்படும் வினையினது இயல்பையும முதலில் ஆராய்ந்து, அதன்பின் அதனைக் காலத்தோடு பொருந்தவைத்து அறிந்து செய்க என்பதாம்.

குறித்த காரியத்தைத் திருத்தமாகச் செய்தற்குரியவனைத் தெரிந்தெடுத்தாலும், காலம் அறிந்து அவனை அதில் செலுத்தவில்லையாயின் அவ்வினை சிறந்துமுடியாது ஆதலால் "காலத்தோடு எய்த உணர்ந்து செயல்" என்றார்.

கருதியவினையினை வழுவறமுடித்து வருதற்குரிய திறமையுடையவனையே அறிவுடையார் பருவமறிந்து விடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது, இவ்வுண்மை கண்ணன்பால் உணரப்படும்.

## கதை.

கன்னனது பிறப்புண்மையைக் கண்ணன் உணர்த்தி ஐவரோடு வந்து அணைந்துகொள்ளுமாறு அவனைக் குழைந்துவேண்டினான். நடுவுநிலைமையோடு அறிவும் உடையவனாதலால் அவன் அதற்கு இசையவில்லை. கண்ணன் பிரிந்துபோய்க்கருதி யுழைந்தான். மார்பணியாகிய கவசமும் காதணியாகிய குண்டலமும் ஆகிய இரண்டும் தெய்வ அருளால் கன்னன் உடன்பிறந்துள்ளன. அவற்றை அணிந்துகொண்டு அவன் போர்க்களம்புகுந்தால் தேவர்முதல் யாவரும் அவனை வெல்லமுடியாது. பகைவர் ஏவுகின்ற படைகள் யாவும் அவனுடலினுறாதபடி அவை அடல்புரிந்தருளும். அவனைவிட்டு அவை பிரிந்தாலன்றி ஐவருக்கும்பிழைப்பில்லை யென்று சிந்தனைசெய்து கண்ணன் இந்திரனை எண்ணினான். அவனும் வந்தான். கருதியதை உணர்த்திப் பருவத்தோடுசென்று அதனை முடித்து வரும்படி பணித்தான்.

கவசங் கனக குண்டல மென்றிரண்டு புனையிற் கற்பாந்த
திவசம்பொரினுங்கன்ன னுயிர் செகுப்பார்மண்ணிற்சிலருண்டோ
அவசம் கிளைஞருற்றுணைவர் அரற்றக்களத்தில் அடுநாக்குத்
துவசம்படைத்தோன் படும்பயந்த துணைவா இன்னேசொன்னேனே. (1)

கன்னன்விசயன்றனைக்கொல்லிற் கடற்பார்முழுதுங் கண்ணில்லா
மன்னன்புதல்வன் தனக்கேயாம் ஒழிந்தோர்தாமும் மடிந்திடுவார்
முன்னஞ்சூதின் மொழிந்தபகை முடியாதிருக்கில்அவர்க்கல்ல
நின்னெஞ்சறிய யானறிய நினக்கேவசையும் இலையாமே. (2)

என்று இசைவோடு கண்ணன் விசைமுறுக்கினான். அந்தணவடிவங்கொண்டு இந்திரன் சென்று கன்னனைக் கண்டு தந்திரமொழிகள்பல முந்துற மொழிந்தான். உள்ளிவந்தவை யாவையோ அவற்றையுரைத்தால் யான் உவந்து தருவல் என்று அவ்வள்ளல் மொழிந்தான். எண்ணியதை அருளல் விண்ணவர்க்கும்அரிதே நீஎங்ஙனம் தந்துவிடுவாய்என்று வந்தவன்முழங்கினான். வள்ளல்நகைத்து நீ சொல்லுக என்றான். கவசமும் குண்டலமுமே வேண்டும் என்று சொல்லி அவன் வாங்கிச்சென்றான். எண்ணிய வினையை

அவன் இனிதுமுடித்து வந்தமையைக் கண்ணன் அறிந்து மகிழ்ந்து கொண்டான். வினையினது நிலைமையும் அதனைச் செய்பவனது இயல்பையும் மன்னர் முதல்வன் நாடிவைத்த மைதக் கண்ணன் நாடியுணர்ந்தினன். செய்வானை நாடி, வினைநாடிக் காலத்தோடு எய்தவுணர்ந்து செய்ததால் அவ்வினை இனிது முடிந்தது என்று உலகம் அன்று மிகவும் வியந்தது. விரிவைப் பாரதத்தில் காண்க.

செய்பவனது இயல்பினை யறிந்தே வினையிலேவவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

517 வெற்றிமிகும் அங்கதனை வேந்தவைக்குள் செல்லென்
றேன்கொற்றவன்முன விட்டான் குமரேசா—உற்ற
இதனை இதனால் இவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை அவன்கண் விடல். (எ)

இ-ள்.

குமரேசா! எல்லாரும் இருக்கவும் அங்கதனைமாத்திரம் இலங்கைக்குள் போய்வரும்படி ஏன் இராமன விடுத்தான எனின், இதனை இதனால இவன முடிக்கும என்று ஆய்ந்து அதனை அவன்கண் விடல் என்க.

ஆய்ந்துவிடல் என்று அமைத்துக் காண்க.

இதனை—இவ்வினையை. தாம் செய்தற்கு மேற்கொண்ட வினையை ஒவ்வொருவரும் தம்முன் இருப்பதாகவே கருதுவராதலால் இதனைஎன அதனை அண்மையில் சுட்டினார்.

இது என்னும் சுட்டுப்பெயர் அன்சாரியை பெற்று ஐயுருபை ஏற்றுவந்தது. அதனை என்றது முன் சுட்டிய வினையை. அவன் கண் விடல்—அவனிடத்தே விடுக.

மேல், செய்வானது நிலையினையும், வினையினது இயல்பினையும் உணர்ந்து செய்க என்றார்: இதில், அவன் முடித்தற்குரிய

முறைகளையும் நுனித்தறிந்து பின் அதில் அவனைச் செலுத்துக என்றார்.

இவ் வினையை இவ் உபாயங்களால் இவன் முடிக்கவல்லன் என்று உருத்தறிந்து அவ் வினையை அவன் கண்ணே விடுக என்பதாம்.

செய்கின்றவனையும் செய்யப்படுகின்ற காரியத்தையும் செய்தற்காக அவன் எய்தியுள்ள கருவிகளையும் ஆராய்ந்தறிந்து அக் காரியத்திற்கு அவனை உரியவனாக்கிவிட்டால் அது வழுவற முடியும் என்பது கருத்து. அவற்றை அறியாது ஆக்கிவிட்டால் வறிதே கெடும் ஆதலால் "ஆய்ந்துவிடல்" என்றார்.

பலர் புடைசூழ இருந்தாலும் முடித்துவருதற்குரிய ஒருவனே வினைமேல் விடுக்கப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அங்கதன்பால் உணரப்படும்.

## கதை.

அங்கதன் என்பவன் வானர வீரனாகிய வாலியின் புதல்வன். செம்மையும், தூய்மையும் திண்மையுமுடையவன். நல்ல போர்வீரன் எல்லா நலங்களிலும் அனுமானுக்கு அடுத்த படியில் வைத்து எண்ணத்தக்கவன். "நெய்யடை நெடுவேல் தானை நீல் நிறத்திருந்தார் என்னும் துய்படைக்கு அனலியன்ன தோற்றத் தன் தொழிலும் தூயன" என்று தந்தையால் இராமன் முன்னிலையில் போற்றப்பட்டவன். தந்தை இறந்தபின்பு இராமபிரானுக்குச் சேனைத் தலைவனாகி இவன் சிறந்திருந்தான். பின்பு இராமனோடு சேர்ந்து இலங்கையையடைந்து வடதிசை வாயிலை மேவிப் படையோடு நின்றான். அவ்வமையம் இராவணனுடைய மன நிலையை அறிந்துவரும்படி தூதுவனொருவனை ஏவ இராமன் விரும்பினான். அவ் அரிய வினையைச் செய்துவருதற்கு உரியவன் யாவன் என்று இராமன் பெரிதும் ஆராய்ந்தான். அனுமான் தகுதியுடையவனாயினும் முன்னரே சென்றுள்ளானாதலால் இன்னுஞ் செலுத்தலாகாது என்று விடுத்தார். அதன்பின் அவ்வினையை முடித்துவர வல்லவன் அங்கதனொருவனே என்று தெளிந்தார். அவனை

அழைத்து அதற்கு உரியனாக்கி அன்புடன் விடுத்தார். அவனும் மகிழ்ந்து சென்று இராமன் மதித்தபடியே முடித்துவந்தான். அவனது வினைத் திட்பத்தையும், மனத் திட்பத்தையும் அனைவரும் அன்று வியந்து மகிழ்ந்தார். இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து அதனை அவன் கண்ணே விடுக என்ற அரிய உண்மை இராமன்பால் அன்று தெரியநின்றது. விரிவை உயுத்த காண்டத்தில் காண்க.

மாருதி இன்னுஞ் செல்லின் மற்றிவன் அன்றி வந்து
சாருதல் வலியார் இல்லை என்பது சாலும் அன்றே
யாரினி ஏகத் தக்கார் அங்கதன் அமையும் ஒன்றோர்
வீரமே விளைப்ப ரேனும் தீதின்றி மீடல் வல்லான். (1)

நன்றெனா அவனைக் கூவி நம்பிநீ நண்ணா லார்பால்
சென்றிரண் டுரையி னொன்றைச் செப்பினை திரிதியென்றான்
அன்றவ னருளப்பெற்ற ஆண்டகை அலங்கற் பொற்றோள்
குன்றினும் உயர்ந்த தென்றால் மனநிலை கூற லாமே. (2)

இவற்றால் மேற்குறித்த உண்மை இனிது தெளிவாம்.

வினை இயல்புக்குத் தகுந்தபடியே வினையாளனை விடுத்தல் வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

518 அன்றுசுபன் ஏகன் அரிமுகர்க்கேன் ஆளுரிமை
குன்றாமல் செய்தார் குமரேசா—என்றும்
வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
அதற்குரிய னாகச் செயல். (அ)

இ—ள்

குமரேசா! சுபன், ஏகன், அரிமுகர், என்னும் இவரை வினைக்குரியராகத் தெளிந்துகொண்டபின் சோழனும் வாணனும் வழுதியும ஏன் அவர்களுக்குச் சிறப்புச்செய்தார் எனின், வினைக்கு உரிமைநாடிய பின்றை அவனை அதற்கு உரியனாகச் செயல் என்க.

வினைக்கு உரிமை—காரியத்தைச் செய்தற்கு உரியவனாக. நாடிய பின்றை—ஆராய்ந்து கொண்டபின்பு. பின் என்னும் இடைச்சொல் து, ஐ என்னும் இருசாரியைகள் புணர்ந்து பின்றை என நின்றது.

மேல், வினையியல்புக்குத் தகுந்தவினையாளனையே அதில் தெரிந்து ஏவவேண்டும் என்றார்; இதில் தனக்கு உரியவனாக ஒருவனைத் தெளிந்து கொண்ட பின் வினைக்கு உரியவனாக அவனை உயர்த்திவைக்க வேண்டும் என்றார்.

தன் காரியத்தைச் செய்தற்கு உரியவனாக ஒருவனை ஆராய்ந்து கொண்ட பின்பு அவனை அதற்கு உரியவனுமாறு உயரச்செய்க என்பதாம்.

ஒருவனை வினையாளனாகத் தெளிந்து கொண்டபின் அவ்வினையை இனிதுமுடித்தற்குரிய தகுதியை அவனுக்கு உதவி அரசன் அவனை மேன்மைப்படுத்த வேண்டும் என்பார் "உரிமைநாடிய பின்றை உரியனாகச் செயல்" என்றார். அங்ஙனம் செய்யாவழி தன் காரியங்களுக்குக் கேடுஉண்டாம் என்பது கருத்து.

தம்வினையாளரை அறிவுடையார் மேன்மைப்படுத்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுபன் ஏகன் அரிமுகர் என்னும் இவர்பால் உணரப்படும்.

கதை.

சுபன் என்பவன் பாண்டி நாட்டிலே திருச்செந்தூரிலே செங்குந்தர் மரபிலே பிறந்தவன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தைம்பது ஆண்டுகட்கு முன்னராகும். இவன் சிறந்த போர்வீரன். எண்ணியதை எண்ணியவாறே இனிது முடிக்குந் திண்ணியன். இவனது இயல்பினைக் கேள்வியுற்று உறையூரிலிருந்த ஆதித்தன் என்னும் சோழமன்னன் தன் வினைக்குரியனாக இவனை அழைத்துக்கொண்டான். அதன் பின் வேண்டிய சிறப்புக்களைச் செய்து தன்பகைவனாகிய ஈழநாட்டரசனை வென்றுவரும்படி இவனை வியந்து விடுத்தான். இவனும் அவன் ஆக்ஞை

வைத்த மேன்மையோடு அங்குச் சென்று அப்பகைவனை வென்று உவகையுடன் மீண்டான். வினைமுடிவை நினைந்து மன்னனும் மிக மகிழ்வுகொண்டான். வினைக்கு உரிமை நாடிய பின்னை ஒருவனை அதற்குஉரியனாகச்செயின் அவ்வினை இனிது முடியும் என்பதை அன்று இவன் எய்த உணர்த்தினான். விரிவைவளவர் குலமுறையில் காண்க.

ஆழநீள் கடற்கு மாங்கோர் அம்பிமேற் சென்றே யப்பால்
சூழ்திருச் செந்தூர் உற்ற சுபன் என்பான் துணையாக்கொண்டு
வாழ்திராசாதிராச மன்னவன் மருவலான்றன்
ஈழநா டொருநாள் தன்னில் திறைகொண்டுண் டேற்றகுந்தம்
(சுட்டியெழுபது)

இதுவும் மேற்குறித்த கதையை இனிது விளக்குதல்காண்க.

## கதை. 2

ஏகன்என்பவன் சோழநாட்டிலே ஆற்றூர் என்னும் நகரிலே பறையர் குலத்திலே பிறந்தவன். வஞ்சம் என்பது கொஞ்சமும் இல்லாத நெஞ்சமுடையவன். உரிய காரியங்களைப் பருவமறிந்து நலமுறச் செய்வதில் இவன் மிகவும் பெரியவன். இவனது சீர்மையையறிந்து அவ்வூரிலிருந்த வாணமுதலியார் தன் காரியங்களைச் செய்து வருதற்கு உரியவனாக இவனைத்தேர்ந்து கொண்டார். பின்பு எல்லாவினைகளையும் இனிது முடித்தற்கு ஏற்ற ஆற்றலை இவன் எய்துமாறு அவர் செய்துவைத்தார். இவனும் அவரது உரிமையை நினைந்து வினைகளை வழுவறச் செய்து வந்தான். வருங்கால் முதலியார் இறந்து போயினார். பூபதி என்னும் புதல்வன் மாத்திரம் இருந்தான். அவனைத்தகுதியானவர்களிடம் ஒப்புவித்துப் பேரன்போடு இவன் போற்றி வந்தான். பருவமெய்திய பின் கம்பரிடம் உய்த்துக் கல்வி கற்பித்து எல்லாச்செல்வங்களையும் அவன் எய்தி விளங்குமாறு இவன் செய்து நின்றான். இவனது மனநலத்தையும் வினைத்திறத்தையும் வியந்து மாறாத அன்புரிமையை இவன்பால் அவன் மகிழ்ந்து செய்தான். தந்தையினும் ஆசிரியனினும் இவன்பால் அவன்

மிக்க நன்றியுடையனும் நயந்திருந்தான். ஏகன், கம்பன், வாணன் என அம்மூவர் பெயரையும் தன் பெயருக்கு முன்பு வைக்க விரும்பினான். அவற்றுள் இவன் பெயரையே முதலில் வைத்தான். அதனால் ஏகம்ப வாண பூபதி என்று இசைபெறுமாறு இவன்பெயரைத் தலையில்வைத்து அவன் தாங்கி நின்றான். வினைக்கு உரிமைநாடிய பின் ஏகனை அதற்கு உரியனாகச் செய்ததால் வாணரது வினைகள் இனிது நிறைவேறி வழிமுறைக்கும் பெருமை தந்தது என்று இவனை அவர் தெரிந்து ஆண்ட திறத்தை அனைவரும் வியந்து புகழ்ந்தார்.

## கதை 3

அரிமுகர் என்பவர் பாண்டி நாட்டிலே மதுரையின்மேல்பாலுள்ள பன்றி மலையிலே யிருந்தவர். இவர் ஒரு தொகையாகப் பன்னிருவராவர். ஒரு சாப வயத்தால் பன்றிக்குட்டிகளாய் இவர் பருவாலுற்றார். அவ்வமயம் இறைவனே ஒரு பன்றியாய் வந்து இப் பன்னிருவருக்கும் பாலூட்டி யருளினார். அதனால் அறிவு மிகுந்து அரிய நலங்கள் பலவும் அடைந்து பன்றி முகமும் மனித உருவும் உடையராய் இவர் நின்று விளங்கினர். இவரது இயல்பினை இராச ராசன் என்னும் பாண்டிய அரசன் இறைவனருளால் தெரிந்து தன்பால் அழைத்து நோக்கி வினைக்குரியராக இவரை அணைத்துக்கொண்டான். அதன் பின் அனைவரும் இவரைப் புகழ்ந்து கொண்டாடும்படி சிறந்த உரிமைகளை உதவி அரசன் உவந்து பேணினான். தனது பழைய மந்திரிகளுடைய அழகியபுதல்விகளையே முறையோடு மணஞ்செய்வித்தான். அதனால் அன்பும் ஆற்றலும் மிகுந்து அரச காரியங்களை இவர் இன்புறச் செய்துவந்தார். வினை செய்தற்கு உரியனாக ஒருவனை அரசன் தெளிந்து கொண்டால் அதனை எளிதில் முடித்தற்குரிய பெருமையை அவனுக்கு உதவவேண்டுமென்பதும், அங்ஙனம் உதவினால் வினை முதல்வனுக்கும் வினையாளனுக்கும் உயர் நலங்கள் உளவாம் என்பதும், இவர்பால் அன்று தெளிய நின்றன. விரிவைத் திருவிளையாடலில் காண்க.

வந்திறைஞ்சிய வராகமா னமைந்தரை நேர்கண்
டந்த மில்களிப் படைந்துபோந் தமைச்சியற் கிழமை
தந்து வேறுபல் வரிசையும் தக்கவா நல்கிக்
கந்து சீறிய கடகரிக் கைதவன் பின்னர். (1)

பழைய மந்திரக் கிழார்மடப் பாவைபோல் வாரை
விழவு சால்கடி மங்கலம் விதியினாற் புணர்த்தி
அழகி தாமென நடத்தினன் அனையரும் வீரக்
கழலி னாற்கொரு கவயமும் கண்ணுமாய் நடப்பார். (2)

உடம்பா திரண்டிற் குயிரொன்றென ஒன்றி யைவாய்
விடம்பா யரவம் விழுங்கும்இறை யொத்து நெஞ்சம்
திடம்பாடு கொள்ள வினைவாங்கிச் செழியன் கல்வி
இடம்பாடு நல்கும் பயன்போன்மகிழ் வெய்த நின்றார். (3)

(கூடற் காண்டம்)

இவற்றால் மேற்குறித்த உண்மை தெளிவாதல் காண்க.

வினையாளரை ஊக்கப்படுத்த வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

519 நின்றதிரு நீங்கியதே நீடுகுபன் கேண்மையன்று
குன்றியதால் என்னே குமரேசா—என்றும்
வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு. (கூ)

இ-ள்.

குமரேசா! ததீசி முனிவருடைய கேண்மையைக் குன்ற நினைத்ததனால் குபன் திரு ஏன் குன்றியகன்றது எனின், வினைக்கண் வினையுடையான் கேண்மையை வேறாக நினைப்பானைத் திரு நீங்கும் என்க.

வினைக்கண் வினையுடையான் என்றது தன் காரியத்திலேயே எப்பொழுதும் கண்ணாயிருப்பவன் என்றபடி. உடையான் கேண்மையை வேறாக நினைத்தால் இல்லாமையுண்டாம் என்னும் நயத்தை இதில் நயந்து காண்க.

மேல், வினையாளனை வினைக்குரியனுமாறு உயர்த்திவைக்க வேண்டும் என்றார்; இதில் அவனை அவமதித்தால் அதனால் பெருங்கேடுகள் வரும் என்னுர்.

எப்பொழுதும் தனது தொழிலின் கண்ணேயே முயலுதலையுடையானது நட்புரிமையை ஒருவன் மாறுபடக் கருதுவனுயின் அவனைவிட்டுத் திருமகள் நீங்கிவிடுவாள் என்பதாம்.

உரிமையான வினையாளனை உவந்து பேணுமல் ஒருவன் மாறுபடக் கருதுவனுயின் அவன் செல்வம் தொலைந்துபோம் என்பது கருத்து. தன் செல்வம் நீங்காமல் நிலைத்திருக்கவேண்டுமாயின் வினையாளன்பால் அன்பு நீங்காமல் அரசன் அவனை அணைத்திருக்க வேண்டும் என்பது குறிப்பு.

தன் உரிமையாளர்பால் அரசன் மாறுபடின் அதனால் கேடு வரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குபன்பால் உணரப்படும்.

## கதை.

குபன் என்பவன் சூரியகுலத்து மன்னன். சுபன் எனவும் இவன் கூறப்படுவன். இவன் பிரமனை நோக்கி அருந்தவம் செய்து பெருநலங்களையடைந்தவன். அறிவிலும், ஆற்றலிலும், கொடையிலும் இவன் மிகச் சிறந்தவன். இந்திரனும் இவன்பால் பெருநண்புகொண்டிருந்தான். சிறந்த புகழோடு இவன் உயர்ந்து வாழ்ந்துவருங்கால் ததீசி முனிவரைத் தன்னுடனிருந்து அரசூழமாறு பணிந்து வேண்டினன். அவரும் இணங்கியிருந்தார். மன்னனது நன்மையையே அவர் மனங்கொண்டு நின்றார். அரசன் அவர்பால் பேரன்புகொண்டிருப்பதைக் கண்டு சிலர் பொறாமைகொண்டார். "எல்லாமுடைய நீ ஒன்றும் இல்லாத ஒருவன்பால் இங்ஙனம் உறவுகொண்டிருக்கலாமா"? என்று மன்னன் மாறுபடுமாறு பல வஞ்சம் புரிந்தார். அதுகாரணமாக இவன், முனிவர் பெரியரா? மன்னர் பெரியரா? என்று ஒருநாள் அவரோடு வாதாடிநின்றன். அவர் முனிவரே பெரியர் என்

றார். அதனால் இவன் மிக முனிந்து ஒரு வலிய தண்டால் அவரை மோதியடித்தான். அவர், இவனது மடமைக்கு இரங்கி வருந்தியகன்றார். எப்பொழுதும் இவனது நலத்தையே நாடி நின்ற முனிவரிடத்தும் இவன் இங்ஙனம் மாறுபட்டானே என்று அறிஞர் சிலரும் அகன்றுபோயினர். அதனால் இவனது அரசதிருவும் குறைய நேர்ந்தது. முனிவரது இனியஉரிமையை அறியாதிகழ்ந்ததால் இம் முடிவு வந்ததென்று பின் இவன் அறிந்து நொந்தான். வினைக்கண் வினையுடையான் கேண்மையை வேறாக நினைப்பானைத் திரு நீங்கும் என்பதை உலகம் இவன்பால் கண்டது. விரிவை இலிங்க புராணத்தில் காண்க.

நல்ல வினையாளனை நயவாதிகழ்ந்தால் செல்வம் கெடும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

520 வாடாமல் நாடிஇக்கு வாகுநிற்ப ஞாலமெல்லாம்
கோடாத தென்னே குமரேசா—வீடாமல்
நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு. (ய)

இ—ள்

குமரேசா! இக்குவாகுமன்னன் அமைச்சர் முதலிய காரியத் தலைவரையே நாடி நின்றான்; உலகம் ஏன் அதனால் கோடாமல் நின்றது எனின், வினை செய்வான் கோடாமை உலகு கோடாது; ஆதலான் மன்னன் நாள்தோறும் அவனை நாடுக என்க.

தோறும் என்பது பன்மையோடு தொடர்பையும் உணர்த்தி வரும் ஓர் இடைச் சொல். வினை செய்வான் என்றது அரச காரியம் ஆற்றுபவனை. இடைவிட்டிருப்பின் தம்மை மேல் நோக்குவார் இல்லையென்று கருதி வினை செய்வார் மடியுறுவராதலால் அஃது உறாதபடி இடையறாது நோக்குக என்பார் "நாள்தோறும் நாடுக" என்றார். நாடுதல் அவரது செயல் இயல்புகளை ஆராய்தல்.

மேல், உரிமையோடு தன் காரியங்களைச் செய்துவருகின்றவர்களை அரசன் மாறுபடக் கருதலாகாது என்றார்; இதில், அவர் வினைசெய்யும் திறத்தை நாளும் அவன் ஆராய்ந்து வரவேண்டும் என்றார்.

வினையாளர் தம் காரியங்களைச் செவ்வையாகச் செய்வாராயின் தன் உலகமுழுதும் செம்மையாயிருக்கும் ஆதலால் அரசன அவரை நாள்தோறும் நன்றாக ஆராயவேண்டும் எனபதாம்.

விரிந்து பரந்த உலகமுழுவதையும் தானொருவனே போய் எப்படி ஆராயமுடியும் என்று கவலுகின்ற அரசனை நோக்கி இஃதருளியதாகக் காண்க.

அமைச்சர் முதலிய தன் காரியத் தலைவர்கள், தம் கருமங்களில் கோடாதபடி அரசன் நாடிவரின், உலகத்தாரெல்லாரும் செம்மையான நிலையில சிறநதிருபப ரென்பது கருத்து.

ஒரு இயந்திரததை ஒழுங்குபெறச் செலுத்தின் அதன் வழிப்பட்டயாவும் செறிபபட்டுச் செல்லுப; ஆதலால் கரும நிகழ்ச்சிக்குரிய கருவிகளையே அரசன் கருதிககொள்ள வேண்டும என்பது கருதது.

கணக்கனை நாடி ஒரு ஊரையும், காருகனை நாடி ஒரு குறுநிலத்தையும், மண்டலீகனை நாடி ஒரு மணடலத்தையும, படடவர்த்தனனை நாடி ஒரு இராசதானியையும், மகுட வர்த்தனனை நாடி ஒரு தேசததையும இஙஙனமே வினைக்குரியாரை நாடி அனைத்தையும் கோடாமல் கொணடு வருகின்ற தற்காலத்து நம் மன்னரது ஆட்சியும் ஈண்டு மனங்கொள்ளத்தக்கது.

தன் வினையாளரை அரசன் நாளும் நாடிவரின அவன் நாடு கோடாதிருக்கு மென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இக்குவாகுவின்பால் உணரப்படும்.

## கதை.

இக்குவாகு என்பவன் சூரியகுல முதல்வனாகிய மநுவின் பேரன். இச்சுவின் புதல்வன். இவன் பிரமனை நோக்கி அருந்தவங்களைச் செய்து பெரும் பதங்களை யடைந்தவன். வாகுவலயம் என்னும் அற்புதமான தோளணியை வரபலத்தால் பெற்றவன்.

அதனால் இக்ஷ்வாகு என்று இவன் இசைக்கப்பெற்றான்; கம்பர் இவனைக் கனைகழல் தோளான் என்பர். விழுமிய உயிரை அழகிய உடல் தாங்கி நிற்றல்போல் உலகமுழுதையும் இவனே இனிதோம்பினான். இவனது ஆட்சியின் மாட்சியை யாவரும் போற்றினர். இவன் அலகபுரை என்னும் அழகியளை மணந்து பெரும் போகங்களை நுகர்ந்து விசாலன், திருச்சிமி, முதலிய பல புதல்வர்களைப் பெற்றான். சூரியனது முன்னிலையில் உலகம் தொழிற்படுவது போல் தன் அரசியல் முழுதும் இவனது மன்னிய நோக்கில் மருவி நடந்தது. சுமுகன், நயபாகன், சுசீலன், முதலிய அமைச்சர் பலரும் இவனது அரச பாரத்தை உடனிருந்து ஆற்றினர். தன் காரியத் தலைவர்களை நாடோறும் இவன் நுணுகி ஆராய்ந்து வந்ததனால் அவரனைவரும் தம் கடமைகளை வழுவறச் செய்துவந்தனர். அதனால் இருநில முழுவதும் இவன் ஒரு குடைநீழலில் ஒழுங்குடனமைந்து உவந்தினி திருந்தது. வினையாளர்களைத் தெளிந்தெடுத்து வினைகளில் வைத்து அவரை இவன் ஆளுந் திறத்தை வசிட்டர் போதாயனர் முதலிய முனிவர்களும் வியந்து புகழ்ந்தனர். பரந்தாமனைத் திருவரங்கன் என்னும் பெயருடன் இந்நிலவுலகில் எழுந்தருளும்படி செய்த பெருந்தகையாளனும் இவனே. வினை செய்பவர் கோடாதிருந்தால் இவ்வுலகு கேடடாது ஆதலால் அவரையே அரசன் நாடோறும் நாடிவரவேண்டும் என்னும் உண்மை இவன்பால் நாடநின்றது. விரிவை மனுமரபில் காண்க.

பிணியரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி
மணியரங்க நெடுமுடியாய் மலரயனை வழிபட்டுப்
பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாங்காண
அணியரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார்.

(இராமாயணம்)

இராமனது குலமுறையைக் கோசிகர் சனகனிடம் கூறுங்கால் இக்குவாகுமன்னன் இங்ஙனம் குறிக்கப்பட்டுள்ளான். இதனால் இவனது மனநலமும், வினைநலமும், மதிநலமும் இனிது புலனும்.

வினைக்கண் முயற்சி [illegible] வினையன் கேண்மை வேறாக
நினைக்கு மவன்மற் றவ்வினையி னீக்கும்; பிற[illegible] அதிகாரர்
முனைக்கும் வினைஞரை வாடாதே முதிர் [illegible]
தனைப்பின் வைகல் தொறுநாடிச் சாரும் வினையும் நாமகவே.
(விநாயக புராணம்)

வினையாளரை அரசன் நாள்தோறும் ஆராய்ந்து வரவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்

நன்மை தீமைகளைப் பகுத்துணர்ந்து நன்மையைவிரும்புந் தன்மையுடையானையே அரசன் நாடிக்கொள்ளவேண்டும். வருவாயைப்பெருக்கி வளம்பெறச்செய்பவனே அரசனுக்குவினை செய்யத்தக்கவன். அன்பு அறிவு துணிவு அவாவின்மை ஆகிய இந்நான்கும் நன்குடையவனையே அரசன் நம்பவேண்டும். பலவகையால் ஆராய்ந்து தெளிந்தாலும் தம்நிலைதிரிபவர் இவ்வுலகில் பலருளர். அறிவும் ஆற்றலும் இல்லாதவனை உரிமைகருதி வினையில் ஏவுதலாகாது. வினையியல்போடு வருவமறிந்து வினையாளனை ஆளவேண்டும். ஏற்றவினையை முடித்துவரவல்ல ஆற்றலுடையவனையே அதில் செலுத்தவேண்டும். வினைக்கு உரியவனாக ஒருவனை ஆராய்ந்து கொண்டால் பின்பு அதற்குரியவனாமாறு அவனை உயர்த்திவிடவேண்டும். நல்லவினையாளனை நயவாதிகழ்ந்தவன் செல்வம் இழந்து சிறுமையடைவான். வினை செய்பவர் கோடாதிருப்பின் உலகம் கோடாதிருக்குமாதலால் நாளும் அவரையே அரசன் நாடுதல் வேண்டும்.

௫௨-வது தெரிந்து வினையாடல் முற்றிற்று.

---

# ௫௩-ம் அதிகாரம் சுற்றந்தழால்.

அஃதாவது தன் சுற்றத்தாரை அரசன் தழுவிக்கொள்ளுதல். தழுவுதல் என்பது தழால் என நின்றது. அறிவுடையாரைத் தெரிந்தெடுத்துத் தகுதி நோக்கி வினைகளில் வைத்து இனைத்

தாளூதல் போல், உறவினரை உரிமை நோக்கி அணைத்து ஆளுதலும் அரசு நிலைத்துவாழ்தற்கு ஏதுவாகும் ஆதலால் அதன் பின் இது வைக்கப்பட்டது.

521 பற்றற்ற காலத்தும் பாண்டவர்பின் சோமகரோன்
றற்றமறப் போனார் குமரேசா—முற்றுமே
பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. (க)

இ—ள்

குமரேசா! செல்வம் நீங்கிய காலத்தும் பாண்டவர்பால் அன்பு நீங்காமல் சோமகர் ஏன் பின்பு சென்றார் எனின், பற்று அற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல் சுற்றத்தார் கண்ணே உள என்க.

பாராட்டுதல் பலவகைப்படுமாதலால் உள என்னும் பன்மைப்பயனிலைக்கு அஃது எழுவாயாய் நின்றது. பழைமை என்றது பற்று அறுங்காலத்துச் செய்திருந்த பழைய நட்புரிமையை.

அன்பு, தொடர்ச்சி, ஆசைமுதலியவற்றை உணர்த்திவரும் பற்று என்னும் சொல் ஈண்டுச் செல்வத்தைக் குறித்து நின்றது. மக்களால் மிக்க ஆர்வத்தோடு பற்றப்படுவது என்பதாம்.

கண் இரண்டனுள் முன்னது பெயராய் நின்று பொழுதையும், பின்னது உருபாய் நின்று இடத்தையும் உணர்த்தின. உம்மை இழிவு சிறப்பு. பிறர் மாட்டு இல்லை என்று பிரித்துநிற்றலால் ஏகாரம் பிரிநிலையோடு தேற்றமும் தோற்ற நின்றது.

பற்று அற்ற காலத்தும் ஒருவன்பால் பழைமை பாராட்டுகின்றவனே அவனுக்கு உண்மையான சுற்றத்தான் ஆவான் என்பது குறிப்பு.

செல்வம் அற்று ஒருவன் வறுமையுற்ற பொழுதும் அவனோடு பழைமையைக் கொண்டாடும் பண்புகள் அவை சுற்றத்தார்மாட்டே உளவாம் என்பதாம்.

ஒரு குளத்தில் நீர் நிறைந்தபொழுது தவளைகள் பலவந்து சேர்ந்து பின்பு அது வற்றியவுடனே அதனைவிட்டு அவை அகன்று போதல்போல், செல்வம் உள்ளபொழுது இல்லாத உரிமைகளையும் எடுத்துக்கொண்டாடி எல்லாரும் வந்து ஒருவனை அடுத்து நின்று, அது தொலைந்தவுடனே அனைவரும் அவனைப் பிரிந்து அகல்வர்; கிளைஞர் மாத்திரம் பரிவோடு பழைய உரிமையை அப்பொழுதும் அவன்பால் பாராட்டி நிற்பர்: இவ் வுண்மையை ஈண்டு எடுத்துக்காட்டியது, அத்தகைய சுற்றத்தாரைத் தன்னின் நீங்காவண்ணம் அரசன் என்றும் அணைத்துப் போற்றவேண்டும் என்பதை உணர்த்துதற்கென்க.

துன்புற்ற பொழுதும் ஒருவன்பால் அன்புற்றிருப்பவர் அவனுடைய உறவினரே யாவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சோமகர்பால் உணரப்படும்.

கதை.

சோமகர் என்பவர் பாஞ்சால தேசத்தில் இருந்தவர். குந்தி தேவிக்கு மிகச் சொந்தமானவர். திண்மையும் செல்வமும் செம்மையும் வாய்ந்தவர். தருமர் முதலிய ஐவரிடத்தும் இவர் மிக்க உரிமையுடையவர். அரசிழந்து அவர் அடவியிற் புகுந்ததை யறிந்த உடனே இவர் உளமிக வருந்தி அவர்பின் தொடர்ந்தார். அவரைக் கானிற்கண்டு கண்ணீர் சொரிந்தார். அவரது குணநலன்களையும் தம்பால் வைத்திருந்த பழைய உரிமையையும் நினைந்து நின்று அவரது நிலைமைக்கு இரங்கினார். இரும் என்று இயம்பியும் அவரைப் பிரியாது இவர் பின் சென்றார். தௌமியர் ஏகனும் முனிவரும் இவரும் அவரைத் தொடர்ந்து புகுந்து பழைமையைக் கொண்டாடி அவருடனே உறைந்திருந்தார். செல்வம் நீங்கிய காலத்தும் தம்பால் அன்பு நீங்காமல் வந்து நண்பு செய்வதைக் கண்டு ஐவரும் இன்பங்கொண்டார். பற்று அற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல் சுற்றத்தார் கண்ணே உள என்பது அங்ஙனம் இவர்பால் உணர நின்றது. விரிவை வியாசபாரதத்தில் காண்க.

அற்றகுளத்தில் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு. (மூதுரை)

பற்றும் வெறுக்கை யொழிந்தழியும்
பழைமை யெடுத்துப் பாராட்டும்
சுற்ற மதனைப் பெருங்கொடையால்
தூய மொழியால் தழுவலுறின்
அற்றம் அவனுக் கொருகாலும் அணுகா
தாக்கம் மிகப்பெருகும்
முற்ற நினைக்கும் பகைவர் தொழில்
முற்றுந் தேம கண்டனே. (விநாயகபுராணம்)

ஒருவனுக்கு உற்ற துணை அவன் சுற்றமேயாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

522 திண்டோள் இராசவர்மன் சேர்ந்தசுற்றத் தாற்பெருஞ்சீர்
கொண்டான்முன் என்னே குமரேசா—கொண்ட
விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவுந் தரும். (உ)

இ—ள்

குமரேசா! சுற்றநலத்தால் இராசவர்மன் என் எல்லா நலங்களையும் பெற்று மகிழ்ந்தான் எனின், விருப்பு அறாச் சுற்றம் இயையின் அருப்பு அறா ஆக்கம் பலவும் தரும் என்க.

இயையின் தரும் என்று இயைத்துக் காண்க.

விருப்பு அறாச் சுற்றம்—அன்புநீங்காத உறவினர். விரும்புதல் என்னும் தொழிற் பெயர் தல் விகுதி குன்றி விருப்பு எனத் திரிந்து நின்றது. விருப்பு—ஆசை, பிரியம், அன்பு. உள்ளே விருப்பமிலாதிருந்து வெளியில் சுற்றத்தவர்போல் உற்றிருப்பவரும் உளராதலால் அவரை விலக்குதற்கு விருப்பறாச் சுற்றம் என்றார்.

இயையின் என்னும் எதிர்காலவினையெச்சம் அஃது இயைதலின் அருமையை உணர்த்திநின்றது.

அரும்புதல் என்னும் தொழிற் பெயர் விகுதி குன்றி அரும்பு என வலித்து நின்றது. அரும்புதல்—முளைத்தல், கிளைத்தல் வளர்தல். அருப்பு அறு ஆக்கம்—வளர்ச்சி அறாத செல்வம்: அஃதாவது மேன்மேலும் செழித்து வளரும் செல்வம் என்றபடி.

பற்று அற்ற கண்ணும் சுற்றத்தார் பழைமை அறார் என்று மேல் அருளியதை நோக்கி அங்ஙனம் அறாச் சுற்றத்தால் ஒருவனுக்கு என்னவரும் என்பார்க்கு இஃது இயம்பிய தென்க.

அன்பு நீங்காத சுற்றம் ஒருவனுக்கு அமையுமாயின் வளர்ச்சி குன்றாத செல்வங்கள் பல அவனுக்கு உளவாம் என்பதாம்.

மேல், செல்வம் தொலைந்தகாலத்தும் சுற்றத்தார் அன்பு குலையார் என்றார்; இதில் அவரை அன்புறப் பெற்றவன் எல்லாச் செல்வங்களையும் இன்புறப் பெறுவன் என்றார்.

ஆக்கம் பலவும் என்றது படை குடி கூழ் முதலிய பல்வகைச் செல்வங்களையும் கருதி. உம்மை எஞ்சாமையை உணர்த்தி நின்றது.

சிறந்த உறுப்புக்களையுடைய உடல் நிறைந்த வலிமையை அடைதல்போல் நல்ல சுற்றத்தை அடைந்தவன் எல்லாச் செல்வங்களையும் அடைவான் என்பது கருத்து.

உள்ளன்புடைய சுற்றத்தால ஒருவனுக்கு எல்லா நலங்களும் உளவாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை இராசவர்மன்பால் உணரப்படும்.

## கதை.

இராசவர்மன் என்பவன் சூரியகுல மன்னனாகிய தமன் என்பவனுடைய புதல்வன். இவனது காலம் இற்றைக்கு எண்ணாயிர ஆண்டுகட்கு முன்னராகும். அறிவிலும் ஆற்றலிலும் இவன் மிகச் சிறந்தவன். அழகிலும் குணத்திலும் அக்காலத்தில் எவ

ளும் தனக்கு இணை இல்லையென்று விளங்கியிருந்த மாணினி என்னும் மங்கையை மணந்து இவன் மாநிலம்புரந்தான். இவனது குணநலன்களையும் வினைவலங்களையும் அறிந்த பலர் இவன் குடைநிழலடைந்து குடிகளாயமர்ந்தனர். தாய்வழியினும் தந்தைவழியினும் மனைவிவந்த வழியினும் சொந்தமானவரெல்லாரும் இங்ஙை மகிழ்ந்து இவனைச் சூழ்ந்திருந்தனர். தனது இனிய மனைவியோடமர்ந்து விழுமிய போகங்களை நுகர்ந்து அனைவரும் இன்புறப் பண்ணெடுங்காலம் இவன் அரசுபுரிந்தான். ஒருநாள் தைலமிடுங்கால் இவன் தலையில் நரைமயிர் ஒன்றைக் கண்டு கணவனுக்குப் பருவமுதிர்ந்துவிட்டதே எனமனைவி மறுகி அழுதாள். அவள் கண்ணீர் தன் தலையில்விழ இவன் அணைந்து நோக்கினன். அவள் உண்மையை உணர்த்தினள். இனி, தவமே செய்யத் தக்கதென்று மனைவியைத்தேற்றித் தன்மகனுக்கு முடிசூட்டத் துணிந்தான். அதனை அறிந்த இவனதுஉறவினர் இவனைப்பிரியலாற்றாது வருந்தி இரவியை நோக்கி அருந்தவஞ்செய்து பதினாயிரமாண்டு இளமைமங்காமல் இவன் உயிருடனிருக்குமாறு வரம்பெற்றுவந்தார். இதனை அரசி மகிழ்ந்து அரசனுக்கு உணர்த்தினள். அனைவரும் நீங்கத்தான் மாத்திரம் இந்நெடுவயதோடு தனியாயிருக்கும்படி நேர்ந்ததேயென்று இவன் மிகவும் வருந்தி மனைவியோடு சென்று மீண்டும் ஆதவனை நோக்கி மாதவம் புரிந்து தனது கிளைஞரும் குடிகளும் தான் இருக்கும் வரையும் தன்னுடனிருந்து வாழுமாறு உயர் வரம்பெற்று நகரினையடைந்தான். பின்பு யாவரும் புகழ இவன் அரசுபுரிந்தான். கண்ணை இமைகாத்து நிற்பதுபோல் உறவினரெல்லாரும் இவனை உண்ணோக்கிநின்றார். அதனால் படை குடி கூழ்முதலிய பெருநலங்கள்யாவும் உயர்வுறப்பெற்று இவன் உவந்திருந்தான். சுற்றத்தால் எல்லாச்செல்வங்களையும் இவன் முற்றும் பெற்றுக் கொற்றமுற்றுயர்ந்ததை அனைவரும் கொண்டாடி மகிழ்ந்தார். விருப்பு அறாச்சுற்றம் இயையின் அருப்பு அறா ஆக்கம் பலவும் தரும் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து தெளிந்தது. விரிவை மார்க்கண்டேய புராணத்தில் காண்க.

நல்ல உறவினரையுடையவன் எல்லாச் செல்வங்களையும் அடைவான் என்பது இதனால் கூறப்பட்டது.

523 சுற்றங் கலவாச் சுயோதனனும் சிம்மகனும்
கொற்றமற்றார் என்னே குமரேசா—பற்றி
அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. (௩)

இ-ள்.

குமரேசா! சுற்றத்தாரோடு உளங்கலந்திராத துரியோதனனும், சிம்மகனும் பெற்ற செல்வத்தையெல்லாம் பின்பு ஏன் முற்றும் இழந்தார் எனின், அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக் கோடு இன்றி நீர் நிறைந்தற்று என்க.

அளவளாவு இல்லாதான்—கிளைஞரோடு உள்ளங்கலந்து வாழாதான். அளவளாவுதல் என்பது தல்விகுதி குன்றி அளவளாவு என நின்றது. அஃதாவது உற்றதை ஒருவரோடொருவர் உசாவி அறிதல். இனி, அளவு அளாவு எனப்பிரித்துப் பொருள் காணினும் பொருத்தமாம். அளவு—நிலைமை. அளாவு—கலந்து விசாரித்தல். அளாவுதல்—கலத்தல். உறவினரோடு என்பதை இதில் வருவித்துக் கொள்க. வாழ்க்கை யென்னும் தொழிற் பெயர் வாழ்தலுக்கு ஏதுவாய செல்வங்களைக் குறித்து நின்றது. குளம் வளா என்பது குளவளா என நின்றது. வளா என்னுஞ் சொல் வளைவான இடத்தையுடையது என்னும் ஏதுவால் குளத்தின் உட்பரப்பை ஈண்டு உணர்த்தி நின்றது. கொம்பு, சங்கு வரம்பு, வரிமுதலியவற்றை உணர்த்திவரும் கோடு என்னும் சொல் இங்கு நீர்க்கரையைக் குறித்து நின்றது. கரை நீரைத் தாங்கி நிற்றல் போல் ஒருவன் கிளை அவன வாழ்வைப் பேணி நிற்கும் ஆதலால் அந்நயத்தை நோக்கியேனும் அதனை அவன் நயந்துகொள்ளவேண்டும் என்பதாம்.

மேல், அன்புள்ள சுற்றத்தால் ஒருவனுக்கு அழிவில்லாத செல்வமுண்டாம் என்றார்; இதில், அத்தகைய சுற்றத்தாரோடு ஒருவன் கலந்து வாழவில்லையானால் அவன் பெற்ற செல்வமெல்லாம் ஒழிந்து போம் என்றார்.

சுற்றத்தாரோடு உளங்கலந்து வாழாதவனது வாழ்க்கை கரையில்லாத குளத்தில் நீர் நிறைந்தாற் போலும் என்பதாம்.

ஒருவனைக் குளமாகவும், அவன் வாழ்க்கையை அதில் நிறைந்துள்ள நீராகவும், அவன் உறவினரை அந்நீர்க்குக் கரையாகவும், கருதுமாறு இதில் உவமை கூறியது, உறவினரது இன்றியமையாத உரிமையை உணர்த்தற்கு என்க.

கரையில்லாத குளம் நீரை இழந்து பாழ்படுவதுபோல், கிளைஞரை உறாதவன் செல்வத்தை இழந்து சீரழிவான் என்பது கருத்து. குளத்தை உவமை காட்டியது அதன் வளத்தை நோக்கி என்க.

ஒருவன் செல்வம் குலையாமல் நிறைந்திருக்கவேண்டின், தன் கிளைஞரோடு உளங்கலந்து அவன் உறைந்திருக்கவேண்டும் என்பது குறிப்பு.

சுற்றத்தாரைத் தழுவி வாழாதவன் செல்வம் அழிவுபடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துரியோதனன் கண்ணும், சிம்மகன்பாலும் உணரப்படும்.

## கதை.

துரியோதனன் பெருந்திருவுடையனாயிருந்தும் தன் கிளைஞரோடு உளக்கலந்து வாழாமையால் முடிவுவரை அதனை இனிதாகப் பொருந்தாதவனாயினான். சுற்றத்தைப் பேணாத அவன் குற்றத்தை நோக்கி மற்றவரும் அவனை மதியாதிகழ்ந்தார். தனக்கு நலந்துணையாயிருந்த வில்வீரனாகிய விதுரனும் அவனை வெகுண்டு பிரிந்தான். அல்லலோடு பல்வகைப் பிரிவுகளும் அதனால் விளைந்தன. உள்ளன்போடு உடனிருந்து தன் செல்வத்தைப் பேணுவாரில்லாமையால் அதுவும் பிழைபட்டகன்றது. கரையில்லாத குளத்தில் நீர் நிறையாததுபோல் உறவினரைத்தழுவாதவன் வாழ்க்கை உறுதிபெற நிலையாது என்பதற்கு இவன் நிலையாய் நின்றான்.

செல்வம்வந் துற்றகாலைத் தெய்வமும் சிறிதுபேணார்
சொல்வன அறிந்துசொல்லார் சுற்றமும் துணையுநோக்கார்

வெல்வதே நினைவதல்லால் வெம்பகை வலிதென்றெண்ணார்
வல்வினை விளைவும்ஓரார் மண்ணின்மேல் வாழுமாந்தர். (1)

ஆவதுகருதானாகில் அமைச்சர்சொற் கேளானாகில்
ஈவதுகுறியானாகில் விளைவதும் உணரானாகில்
நாவது காவானாகில் அவனுக்கா நடந்துபோரில்
சாவது பழுதென் றன்றோ சகத்துள்ளோர் சாற்றுகின்றார் (2)

பாரதம்.

இவை, துரியோதனனைப் பிரிந்துவந்தபொழுது விதுரன் கண்ணனிடம் கூறியன. உறவினரோடு அளவளாமல் இழிவுறுவார்க்கு அறிவூட்டுங்கால், இவனையே முதலில் எடுத்துக்காட்டி உலகம் இன்றும் தெளிவூட்டுகின்றது.

## கதை. 2

சிம்மகன் என்பவன் சூரியகுலத்து மன்னனாகியசிம்மசேனனுடைய புதல்வன். தாய் பெயர் இராமதத்தை. சிம்மசந்திரன் எனவும் இவன் கூறப்படுவான். இவனது காலம் இரண்டாயிர ஆண்டுகட்குமுன்னராகும். இவன் அழகும் ஆண்மையும் அமையப்பெற்றவன். பருவமெய்தி இவன் அரசுபுரிந்து வருங்கால் சத்திகோடன் என்னும் ஒருவனை நட்பாக்கொண்டான். அவன் மிகத்தீயவன், மாயமங்கையர் பலர்பால் நேயங்கொண்டவன். அவன் சொல்வழி நடந்து இவன் அல்வழி புகுந்தான். தனது நல்லினருரெல்லாரையும் நயவாதிகழ்ந்தான். அவ்வளவோடு அமையாமல் அல்லலும் விளைத்தான். அதனால் அவர் மனந்திரிந்தார். இவனை மதியாதிருந்தார். உறவினர் உடைந்து நீங்கவே உரிமையோடு நின்று தாங்குவாரின்மையால் இவன் செல்வங்களெல்லாம் சிதைந்து தொலைந்தன. இவனும் பின் இழிந்து தொலைந்தான். அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக் கோடு இன்றி நீர் நிறைந்தற்று என்பதை உலகம் இவன்பால் கண்டது. விரிவை மேருமந்தரபுராணத்தில் காண்க.

இனருநோடு உளங்கலந்து வாழாதவன் வாழ்வு பாழாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

524 சுற்றமெல்லாம் வந்துதன்னைச் சூழஎன் மாவியவான்
கொற்றவனுய் நின்றான் குமரேசா—பற்றுடைய
சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். (௪)

இ-ள்.

குமரேசா! தான் வரம்பெற்றுவந்தவுடன் மாவியவான் ஏன் தன் சுற்றத்தைச் சூழவைத்து வாழ்ந்தான் எனின், செல்வம் பெற்றத்தால் பெற்றபயன் சுற்றத்தால் தான் சுற்றப்பட ஒழுகலேயாம் என்க.

ஒழுகல் பயன் என ஓட்டிக் காண்க.

பெற்றதால் என்பது பெற்றத்தால் என எதுகை நோக்கி விரிந்துநின்றது. பெற்ற அதனால் என்பதே இவ்வனம் தொக்கு நின்றது எனினுமாம்.

சுற்றத்தோடு ஒத்துவாழாதவன் செல்வம் மேல் ஒழிந்துபோம் என்றார்; இதில் சுற்றத்தார் தன்னைச் சூழும்படி வாழ்தலே ஒருவன் செல்வம் பெற்றதற்குப் பயனும் என்றார். சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல் எனவும், கப்போல் வலோ எனவும் ஔவை அருளியன ஈண்டு அறியத்தக்கன.

செல்வம் பெற்றதனால் ஒருவன் பெற்ற பயனாவது தன் சுற்றத்தாரால் தான் சூழப்படும் வகை அவரைத் தழுவி ஒழுகுதலே யாம் என்பதாம்.

கற்றபடி ஒழுகலே ஒருவன் கற்ற கல்விக்குப் பயனாதல்போல் சுற்றத்தைத் தழுவலே ஒருவன் பெற்ற செல்வத்திற்குப் பயனும்; ஒழுக்கமில்லாதவன் கல்வி பழிக்கப்படுதல்போல் சுற்றத்தைத் தழுவாதவன் செல்வம் இழிக்கப்படும் என்க.

உண்டு புணர்ந்து உறங்கி மயங்கி உலாவித் தொலைவதே தம் செல்வப் பயன் என்று செல்வர் கொண்டு களிக்கலாகாது என்பது குறிப்பு. தம் உறவினரைத் தழுவியொழுகும் செல்வரே உண்மையான செல்வப் பயனை உற்றவராவர் என்பது கருத்து.

அறிவுடையார் செல்வம் பெற்றால் தம் சுற்றத்தைச் சூழ வைத்து வாழ்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண

மை மாலியவான் பால் உணரப்படும்.

## கதை.

மாலியவான் என்பவன் அரக்கர் குல முதல்வனாகிய சுகேசனுடைய புதல்வன், தாய் பெயர் தெய்வவதி. சுமாலி, மாலி என்னும் இருவரும் இவனுக்குத் தம்பியராவர். பருவமெய்துமுன்னரே அரிய பதவிகளை அடையவேண்டுமென்று இவன் ஆர்வங் கொண்டான். பிரமாவை நோக்கிப் பெருந் தவஞ்செய்து நீண்ட ஆயுளோடு வேண்டிய யாவும் ஈண்டப்பெற்றான். அதன்பின் தெய்வத் தச்சனையழைத்து தன் பெருமைக்கேற்ப அரிய நகரமொன்று தனியாக ஆக்குமாறு பணித்தான். அவன் திரிகூடம் என்னும் மலைச் சாரலில் தேவரும் ஆவலுறுமாறு சிறந்த நகரமொன்றை விரைந்து செய்தான். தம்பியரோடு போய் அதில் இனிதமர்ந்திருந்து இவன் தனியரசு செய்தான். சவுந்தரி என்னும் அழகிய கந்தருவ மங்கையை மணந்து விழுமிய இன்பங்களை நுகர்ந்து வச்சிரமுட்டி, பெரும்பாக்கன், துன்முகன், சுதகத்தன், நியாயகோபன், மத்தன், உன்மத்தன், என்னும் ஏழு புதல்வர்களையும் அனலை என்னும ஒரு புதல்வியையும் பெற்றான். கேதுமதி சவுகந்தி என்னும் இருவரையும் முறையே தம்பியிருவருக்கும் மணம் புரிவித்துத் தன் மரபினரெவரையும் இவன் உயர்வுற வைத்தான். கிளைஞரெல்லாரும் தன் வள நகரில் வந்து உடனிருந்து வாழுமாறு உவந்து செய்தான். உறவினரைத் தழுவியொழுகும் இவனது உரிமையை வியந்து அனைவரும் புகழ்ந்தார். அதனால் பெரு நலங்களெய்தி இவன் இரு நிலம் புரந்தான். செல்வம் பெற்றதால் ஒருவன் பெற்ற பயன் தன் சுற்றத்தார் தன்னைச் சூழும் வகை ஒழுகலே யாம் என்பதை இவன் ஒழுகி உணர்த்தினன். இராவணனுக்கு இவன் பாட்டனுயான். விரிவை உத்தர ராமாயணத்தில் காண்க

அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழல்மரம்போல் நேரொப்பத் தாங்கி—பழுமரம்போல்
பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன். (நாலடியார்)

செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல். நறுந்தொகை.

தன் சுற்றத்தைப் பேணலே ஒருவன் பெற்ற செல்வத்திற்குப் பயனும் என்பது இதனால் கூறப்பட்டது.

525 இண்டோட் சகரனேன் சேர்ந்து பலகிளைஞர்
கொண்டணைய நின்றான் குமரேசா—கண்டு
கொடுத்தலும் இன்சொல்லும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும். (ரு)

இ—ள்

குமரேசா! முதல் வள்ளலாகிய சகரன் என் கிளைஞர் பலரால் சூழப்பட்டிருந்தான் எனின், கொடுத்தலும் இன்சொல்லும் ஆற்றின் அடுக்கிய சுற்றத்தால் சுற்றப்படும் என்க.

ஆற்றின் என்றது அருமைதோன்ற நின்றது. ஆற்றுதல்—செய்தல். அடுக்கிய சுற்றம்என்றது தந்தைவழியிலும தாய்வழியிலும் ஒன்றோடு ஒன்று பிணைந்துநிற்கும் கிளைகளை.

தன்சுற்றத்தார் தன்னைச்சூழ்ந்து மகிழுமாறு ஒருவன் ஒழுகல்வேண்டும் என்று மேல் உணர்த்தினார்; தானே வந்து அவர் சூழும் வகைக்கு ஆனஉபாயம் அவன் அறிய இதில் அருளினார். சுற்றத்தைச் சுற்றச்செய்வதில் இன்சொல்லினும் கொடையே சிறந்து நிற்குமாதலால் அந் நயம் தோன்ற அதனை முன் வைத்தார்.

கொடுத்தலையும் இன்சொல்லையும் தகுதியாக ஒருவன் உடையனாயின், தொடர்ந்து பிணைந்துள்ள சுற்றத்தாரால் அவன் சூழப்படுவான் என்பதாம்.

பல்வகைச் சுற்றத்தாரும் வந்து தன்னைச் சூழ்ந்திருக்க ஒருவன் விரும்புவனாயின், ஈகையும் இன்சொல்லும் அவன்பால் இருத்தல்வேண்டும் என்பது கருத்து.

கொடையும் இன்சொல்லும் உடையானுக்குப் பெருங்கிளை

கள் உளவாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சகரன்பால் உணரப்படும்.

## கதை.

சகரன் என்பவன் சூரிய குலத்து மன்னன். இவனுடைய தந்தை பெயர் வாகுகன். அசிதன் எனவும் கூறுவர். தாய்வயிற்றில் இவன் கருவுற்றிருக்கையில் தந்தை இறந்துபோயினன். அதனை ஆற்றாது தாயும் தீயில் விழுந்து மாயத் துணிந்தாள். உடனே ஊருவன்னும் முனிவரொருவர் அடுத்துநின்று தடுத்து "உலகம் புரக்கும் ஓர் அரிய புதல்வன் உன் வயிற்றிலிருக்கின்றான்; அவன் பொருட்டு நீ உயிர்தரித்திருக்கவேண்டும்" என்று அருள் புரிந்தகன்றார். அதன் பின் அவள் ஆற்றியிருந்தாள். மலடிற்று உடனிருந்த மாற்றவள் அவள் பேற்றைப்பொறாமல் கரவாக ஒருநாள் அவளுணவில் நஞ்சைக் கலந்துவைத்தாள். அவள் அறியாமல் உண்டாள். இறைவனருளால் ஒரு கேடும் இன்றிக் கருவை அன்றே இனிதாக உயிர்த்தாள். கரம் கலந்து பிறந்ததால் அக்குழந்தையைச் சகரன் என்று கூறினர். கரம்—நஞ்சு. இவன் பல கலைகளையும் பயின்று பருவம் எய்தினன். கேசினி சுமதி என்னும் அழகிய கன்னியரிருவரை மணந்து முன்னிய போகங்களை நுகர்ந்து மன்னவர் மன்னனாய் இந்நிலவுலக முழுவதும் மகிழ்வுற ஆண்டான். பல போர்முனைகளிலும் புகுந்து பகைவரைப் பொருது வென்றான். இவனது அருந்திறலைக் கண்டு அமரரும் அஞ்சினர். அமரர் கோனும் இவனெதிர் நின்று அமர்புரியலாற்றாது அழுக்காறுற்றான். கொடையிலும் வீரத்திலும் இவன் மிகப் புகழ்பெற்றான். முதல் வள்ளலென இன்றும் இவனை உலகம் புகழ்கின்றது. இவனுடைய இளைய மனைவிபால் இறைவனருளால் அறுபதினாயிரம் புதல்வர் தோன்றினர். அவரனைவர்க்கும் சகரர் என்று பெயர். முதல் மனைவி ஒரு குமரனைப் பெற்றாள். அவனுக்கு அசமஞ்சதன் என்று பெயர். மக்களையும் ஒக்கலையும் இனம் பக்கம் சூழவைத்து மன்னுயிரனைத்தையும் தன் உயிர்போல் பேணினன். இவனது கொடையையும் இனிய மொழியையும் வரிசையறிந்து செய்யும் அருமையையும் வியந்து அனை

வரும் இவன்பால் உறவாகி நின்றார். தாய் தந்தை என்னும் இரு வகை மரபிலுமுள்ள கிளைஞர் எல்லாரும் இவனது குணநலங்களை மகிழ்ந்து சூழ்ந்து மிக உரிமை கொண்டிருந்தார். கொடுத்தலையும் இன் சொலலையும் ஒருவன் ஆற்றின, அடுக்கிய சுற்றத்தால் அவன் சுற்றப்படுவான் என்பதற்கு இவன் உற்றசுளாய் நின்றான். விரிவைப் பாகவதத்திலும, அயோத்தி மான்மியத்திலும் காண்க.

கொடையும் இன் சொல்லு முடையானுக்குக் கிளைஞர் மிகுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

526 வள்ளல் வரகுணன்போல் மாநிலத்தில் ஏன் கிளையைக்
கொள்ளவில்லை மற்றோர் குமரேசா- உள்ளும்
பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில். (சு)

இ—ள்

குமரேசா! வரகுண பாண்டியன்போல் பிறரேன் இவ்வுலகில் பெருகிய கிளையைப் பெறவில்லை எனின், பெருங்கொடையான் வெகுளி பேணான் அவனின் மருங்கு உடையார் மாநிலத்து இல் என்க.

மருங்கு என்னுஞ் சொல் சுற்றத்தைக் குறித்து நின்றது. மருங்கில் சூழ்ந்திருப்பவராதலால் சுற்றத்தாரை மருங்கு என்றார். மருங்கு—பக்கம்.

அவனின் மருங்கு உடையார்—அவனைப்போலச் சுற்றத்தையுடையவர். இன் உருபு இங்கு ஒப்புப்பொருளது. கொடையிருந்தாலும் வெகுளியைப் பேணின் சுற்றம் சூழாது ஆகலால் அதனைப்பேணலாகாது என்க. பேணல்—மிகுதியாகப் பாராட்டல். மருங்கு அடைதற்குப் பெருங்கொடையே சிறந்த காரணமாகுமாதலால் அவ்வுரிமை தோன்ற அது முதலில் நின்றது.

மேல், கொடுத்தலும் இன்சொல்லும் சுற்றத்தை வளர்க்கும் என்றார்; அவற்றோடு வெகுளியின்மையும் இதில் வேண்டுமென்றார்.

மிக்க கொடையையுடையவனும், வெகுளியை விரும்பாதவனுமாய் ஒருவன் இருப்பின் அவன்போல உறவினரையுடையவர் இவ்வுலகில் ஒருவரும் இல்லை என்பதாம்.

உலோபமும், கோபமும், சுற்றத்தை அகற்றிவிடும்; ஆதலால் அவற்றை ஒழித்துவிட்டு அதனை அணைத்தற்கு ஏதுவாகிய கொடையையும் பொறையையும் அரசன் உடையனாதல்வேண்டும் என்பது கருத்து.

ஈகையும், அமைதியும் ஒருவன் உடையனாயின் அளவில்லாத சுற்றங்களை அவன் அடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வரகுணபாண்டியன்பால் உணரப்படும்.

கதை.

வரகுண பாண்டியன் என்பவன் மதுரையிலிருந்து அரசு புரிந்த சுந்தரேச பாதசேகர பாண்டியனுடைய புதல்வன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னராகும். இவன் நல்ல சீலமுள்ளவன். குதிரை யேற்றத்தில் மிகவும் வல்லவன். அருள், கொடை, ஆண்மை முதலிய உயர் குணங்களை யெல்லாம் தன் பெயருக்கேற்ப இவன் ஒருங்கே எய்தியிருந்தான். மேலான குணங்களை யுடையவனாதலால் வரகுணன் என்பதற்கு இவன் உரியவனாயினான். வரம்—மேன்மை.

இயமானன் இந்துரவி எரிவான் நிலம் சலிலம் எறிகால் எனும் பகுதி இருநான், மயமான சுந்தரனை மனவாய் மெய் அன்பினிறைவழிபாட்டைந்தவர குணனைச், சயவேலை வென்றவடிவினன் ஈறில் வெளறிபெறு சகவேள்வி இந்திரனை நிகர்வோன், இயன்மேனி கொண்ட ஒளியினி லேழ் பசும் புரவி யினதேசு வென்றவர குணனே.

மறையாதி கலை பலவும் மகமாதி பலவினையும் வழுவாதுநிறுவுதலின் மலர்மேல், இறையாகி மலர்வனிதை பிறிவான திருமகளிர் இகபோகம விளையமுறை செயலால், கறையாழி வளைகளணிகரனுக இகல்செய்பொதி கரனுதி டகைகளையும் நெறியால, அறைவாய்மை யுரையின் முழு துணர்வால் எவ்வுயிரு நிறை அரனுகி உலகுமுறை செய்யும் நாள்.

என முத்தேவரோடு ஒத்தவனுகப் பரஞ்சோதிமுனிவர் இவனை வைத்து மகிழ்ந்துள்ளார். உயிர்களின்புற இவன அரசுபுரிந்தான்.

உலகமுழுவதும் இவன் புகழ்மணம் கமழ்ந்தது. இவன் தலைமையை வியந்து யாவரும் பணிந்தனர். இவனது வள்ளற்குணத்தையும் உள்ளப் பெருமையையும் உணர்ந்து மகிழ்ந்து அனைவரும் இவனுக்கு உறவினராயினர். இறைவன்பால் இவன் பேரன்புடையவன். கருவிடை மருவாமையைக்கருதித் திருவிடைமருதூரை யடைந்தான். அரியபணிகள்பல யாவரும் இன்புறத் தன்பொருளால் அங்கு இவன் அணிபெறச்செய்தான். வேம்பின் கனிகளைச் சிவலிங்கங்களாகஎண்ணி வெயில்படாவண்ணம் அவற்றிற்கு விதானங்கள் இட்டான். கள்ளனொருவனைத் தன் காவலர் ஒருநாள் பிடித்துவந்தார். அவன் மெய்யிலிருந்த உவரைத் திருநீறு என்றுகருதி அவனை இவன் மேன்மைப்படுத்தி விடுத்தான். நரிகள் ஊளையிட்டதைக் கேட்டு ஆடையின்றி வாடுகின்றன எனமதித்து அவற்றிற்கு ஆடைகளை வீசினான். இழிந்து கிடந்த கழிதலை ஒன்றை ஒருநாள் இவன் வெளியிடத்தில் கண்டான். மணிமுடி புனைந்த தன் உயர்தலையும் இவ்இழிநிலையை ஒருநாள் அடையுமே என்று நிலையாமையை நினைந்து இவன் மனமுருகி நின்றான். சிவமூர்த்திக்கே உரியள்என உரைத்துத்தனது அழகிய மனைவியை அவர்க்குப் பணிபுரியச் செய்தான. இங்ஙனம் பெருங்கொடையுடையனாய் வரம்புகடந்து இவன் அறம்பல புரிந்தான். மதிகண்டு கிளரும் கடல்போல் அளவில்லாத கிளைஞர்கள் இவன் மருங்கடைந்து மகிழ்ந்தார். பெருங்கொடையான் பேறான் வெருளினின் அவனின் மருங்குடையார் மாநிலத்து இல்லை என்பதற்கு இவன் இலக்காயிருந்தான். இம்மையிலேயே இறைவனருளால் அரியநலங்களை இவன் எய்தி மகிழ்ந்தான். விரிவைத் திருவிளையாடலில் காண்க.

வெள்ளை நீறு மெய்யிற் கண்டு
கள்ளன் கையிற் கட்டவிழ்ப் பித்தும்;
ஓடும் பன்னரி யூளைகேட் டானைப்
பாடின என்று படாம்பல அளித்தும்:
குவளைப் புனலில் தவளை அரற்ற
ஈசன் தன்னை ஏத்தின என்று

காசும் பொன்னும் கலந்து தூவியும்:
வழிபடும் ஒருவன் மஞ்சனத் தியற்றிய
செழுவிதை எள்ளைத் தின்னக் கண்டு
பிடித்தலும் அவனிப் பிறப்புக் கென்னா
இடித்துக்கொண்டவன் எச்சிலை நுகர்ந்தும்;
மருத வட்டத்து ஒருதனிக் கிடந்த
தலையைக் கண்டு தலையுற வணங்கி
உம்மைப் போல எம்மிந் தலையும்
கிடக்கவேண்டுமென் றடுத்தடுத் திரந்தும்:
கோயில் முற்றத்து மீமிசைக் கிடப்ப
வாய்த்த தென்று நாய்க்கட்டம் எடுத்தும்;
காம்பவிழ்த் துதிர்ந்த கனியுருக் கண்டு
வேம்புகட் கெல்லாம் விதானம் அமைத்தும்:
விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று
புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த
பெரிய அன்பின் வரகுண தேவரும்:

என்று திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் பட்டணத்து அடிகள் இவரைச் சுட்டிக் கூறியுள்ளார். இவரது தகுதிகோணுத தலைமையும், வெகுளி பேணுத நிலைமையும், பெருங் கொடையும், அருங்குணங்களும், மருங்குடைமையும், பிறவும் இதனுல் இனிது தெளியலாம். கவியிற்கண்ட நிகழ்வின் விரிவை மருதூர் மான்மியத்தில் காண்க. ஈண்டு விரிக்கிற் பெருகும்.

கொடையும் பொறையும் உடையான் அளவில் கிளையை அடைவான் எனபது இதனுல் கூறப்பட்டது.

---

527 பூதன் உயர்பந்தன் புண்ணியன்முன் ஈந்துவந்தேன்
கோதறுசீர் கொண்டார் குமரேசா = யாதெனினும்
காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள. (எ)

இ—ள்.

**குமரேசா!** பூதன், பத்தன், புண்ணியன், என்னும் இவர் முன்பு ஈந்து உண்டதனால் பின்பு என் பெருஞ் செல்வங்களை அடைந்தார் எனின், காக்கை கரவா கரைந்து உண்ணும்; ஆக்கமும் அன்ன நீரார்க்கே உள என்க.

ஆக்கமேயன்றி அறம், புகழ், இன்பம் முதலிய நலங்கள் யாவும் உளவாம் என்பதை உம்மை உணர்த்தி நின்றது. இஃது எச்ச உம்மை. பிறர்க்கு இல்லை என்று பிரித்து நிற்றலின் ஏகாரம் பிரிநிலை என்க. கரவாகரைந்து = மறையாதனவாய் அழைத்து. கரைதல் = அழைத்தல், ஒலித்தல், அழுதல்.

கரவா என்னும் எதிர்மறைப் பலவின்பால் முற்று இங்கு எச்சமாய் நின்றது. கரவாது என்னும் எதிர்மறை எச்சமே ஈறு கெட்டு நின்றது என்றால் அது கரைந்து என்பதோடு புணருங்கால் இடையே ஒற்றுமிகும். முற்றுஆயின் அங்ஙனம் மிகாதென்க. அல்வழி ஆமா மியாமுற்று முன்மிகா என்பது இயல்.

கரைதலும் கரவாமையும் உண்ணலுக்கு அடையாய் நின்று காக்கையின் இயல்பை விளக்கின. அன்னநீரார் என்றது காக்கைபோலக் கரவாது கரைந்துண்ணும் அவ்வியல்புடையார் என்றபடி. காக்கையை முன்னர்க் கூறியதனால் அன்ன என்று பின்னர்ச் சுட்டினார்.

நீரார் = நீர்மையையுடையவர். நீர்மை = குணம், இயல்பு. மேல், கொடையும் பொறையும் உடையான் பெருங்கிளையையடைவான் என்றார்; அங்ஙனம் கொடுத்தற்கு வேண்டிய பொருள் இல்லையானால் என்செய்வது என்பார்க்கு உள்ளது எதுவோ அதனை ஒளியாது உதவினும் அமையுமென்று இதில் உணர்த்தியருளினார். காக்கைகள் இரையைக் கண்டபொழுது மறையாமல் தம் இனத்தைக் கூவியழைத்துக் கூடவைத்து உண்ணும்; அத்தகைய இயல்பினையுடையார்க்கே செல்வங்களும் உளவாம் என்பதாம்.

உள்ளதை ஒளியாமல் காக்கைபோலத் தமர்க்கு உண்ண உதவி ஒருவன் வாழ்வானாயின் எல்லாச் செல்வங்களையும் அவன் எய்தியாள்வான் என்பது கருத்து.

இனத்தை உடனழைத்துண்ணும் உயர்வை நோக்கியே காக்கைகளை வலிய அழைத்து மக்கள் இரையிடுகின்றனர்; அங்ஙனமே தாம் நுகர்வனவற்றைத் தமரும் நுகருமாறு செய்து வாழ்வோரை இனிது நோக்கி எல்லா நலங்களையும் அவர் எய்துமாறு இறைவன் எளிதில் அருள்புரிவன் என்க.

கரந்தும் கடிந்தும் உண்ணுகின்ற நாய் முதலியவற்றை இகழ்ந்து விலக்கலும், கரவாது உவந்துண்ணும் காக்கைகளைப் புகழ்ந்து பேணலும், இங்கு நிகழ்ந்துவருதலைக் காண்க; இங்ஙனம் கண்டிருந்தும் தமரை ஒழித்துச் சிலர் தனியேயிருந்து விழுங்கிக் களிப்பது மிக இரங்கத்தக்கதேயாம்.

பறவையாயிருப்பினும், இனத்தைத் தழுவிநிற்கும் ஓர் இயல்பினால் உயர்வுடை மக்கட்கும் உறுதியை உணர்த்தற்குரியதோர் உவமையாகக் காக்கை இங்கு அமைய வந்தது.

தன் கிளைஞரை ஒருவன் ஊட்டி உண்டால் அவன் வளம் பெற வேண்டுமென்று அவரனைவரும் கருதுவர்; அதனால் உரிமையும் செல்வமும் நாளும் பெருகிவரும் என்க. ஆக்கம் வேண்டுமாயின் கிளைஞரை ஊட்டி வாழவேண்டும் என்பது குறிப்பு.

உறவினரைத் தழுவி, வாழ்பவருக்குப் பெருஞ்செல்வங்கள் உளவாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பூதன், பந்தன், புண்ணியன் என்னும் இம்மூவர்பாலும் உணரப் படும்.

## கதை

பூதன் என்பவன் தொண்டைநாட்டிலே புள்வேளூர் என்னும் நகரிலே வேளாளர் குலத்திலே பிறந்தவன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னராகும். உழவு தொழிலையே இவன் விழுமிதெனக் கொண்டவன். தனக்குரிய சிறிய நிலவருவாயைக் கொண்டே எவர்க்கும் இவன் அரிய

உபகாரங்களைச் செய்தான். இவன், ஊற்றுநீர்போல் எல்லாரும் இன்புற அன்புற்றிருந்தான். உள்ளதைப் பிறர்க்கு உவந்து ஊட்டியபின்பு இவன் உண்டுமகிழ்ந்தான். இவனை ஒருநாள் ஔவை வந்து கண்டாள். அவ்வமையம் தன்பால் இருந்த எளியவுணவை அவ்அம்மைக்கு அன்போடு தந்தான். அவிச்சுவையை நோக்காது கவிச்சுவையையே நாடித்தமிழும் அவர் இவனது அன்பின் சுவையோடு கலந்து அதனை இன்புற உண்டார். கள்ளமில்லாத இவனது வள்ளன்மைக் குணத்தை உள்ளி உள்ளி உவந்தார்.

வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரெனவே புளித்த மோரும்—திரமுடனே
புள்வேளூர்ப் பூதன் புகழ்ந்துபரிந் திட்டசோ
றெல்லா உலகும் பெறும்.

என்று ஒரு கவி சொல்லி எழுந்தார். அருட்புலமை பெற்ற அவர், உலகம் பெறும் என்று அருளியகன்றதால் இவன் மிகப்புகழ்பெற்றான். அதன்பின் இவனது விளைநிலங்கள் பெருவளங்களையுதவின. கிளைஞரனைவரும் தன்னைவளைந்து மகிழ இவன் உயர்ந்து விளங்கினான். காக்கைபோல் தமரோடு கலந்துண்பவனுக்கே ஆக்கங்கள் உளவாம் என்பதை உலகம் இவன்பால் நோக்கிநின்றது.

## கதை 2

பந்தன் என்பவன் சோழமண்டலத்திலே காவிரிப்பூம்பட்டினத்திலே வணிசர் குலத்திலே பிறந்தவன். இவன் சிறந்த செல்வன். உயர்ந்த குணங்களெல்லாம் இவன்பால் நிறைந்திருந்தன. இவனதுகாலம் ஆயிரத்து முந்நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னதாகும். இரந்து வந்தவரெவர்க்கும் இல்லையென்னாமல் இவன் ஈந்துவந்தான். தன் உறவினர் வந்து தன் இல்லில் உண்டுமகிழ்வதைக் கண்டுமகிழவே இவன் காதல் கொண்டான். உடலுறுப்புக்கள்போலவே தன் கிளைஞரனைவரையும் இவன் உவந்து பேணினான். தனக்கெனவாழான் பிறர்க்குரியாளன் என்னும் புகழ்க்கு உரியனாய் இவன் பொருந்தி வாழ்ந்துவருங்கால் வெளிநாடுகளில் வாணிகஞ்செய்யவிரும்பி அகிற்கட்டை முதலிய பண்டங்களை ஏற்

றிக்கொண்டு கடல்வழியாக ஒருநாள் இவன் கப்பலேறிச்சென்ருன். இவனது வள்ளன்மையை மகிழ்ந்து ஆதிசேடன் கடலிடையே தோன்றித் தன் உடல் மறையநின்று இவன் முன் ஒரு கையை நீட்டினன். முதலில் இவன் கண்டு திகைத்தான். நேரேநின்றுகேட்க நாணி யாரோவந்து இங்ஙனம் வேண்டுகின்ருர் கொல்! என்றுகருதி அங்கு உள்ள பொருள்களை அள்ளிக்கொடுத்தான். அடுத்தும் ஒருகை தோன்றியது: அதற்கும் கொடுத்தான். அதன் பின் ஒன்று வந்தது; அதற்கும் தந்தான். மீண்டும் ஒன்று நீண்டது; அதற்கும் ஈந்தான். இங்ஙனமே அடுத்தடுத்துச் சேடன் ஆயிரங்கைகளையும் நீட்டினன். நீளுந்தோறும் ஈந்துவந்து இறுதியில் ஒருகைக்குப் பொருள் இல்லாமையால் இவனே அதில் இசைந்து புகுந்தான். உடனே இவனை அணைத்துக்கொண்டு சேடன் பாதலம் புகுந்தான். நாகர்களுக்கெல்லாம் இவனை நயந்துகாட்டி இவனது ஈகையைப்புகழ்ந்து தன் இல்லில் வைத்து இன்புறப்பேணிச் சகசுகி என்னும் தனது அருமைக் குமரியை மணம்புரிவித்து சிறந்த மணிகளும் நிறைந்த அணிகளும் உவந்துதந்து மீண்டும் இவ்வுலகுற உய்த்தான். அவ் அழகிய மனைவியோடும் விழுமிய பொருள்களோடும் பந்தன் தன் நகரினையடைந்தான். அனைவரும் கண்டு இவன் தகுதியை வியந்து புகழ்ந்தார். அவ்வமையம் ஔவையார்வந்து இவன்மீது பலபாடல்கள் பாடினர். தன் மாமன் தந்திருந்ததும், போர்த்துக்கொண்டால் என்றும் இளமைமாருமல் செய்யவல்லதும் ஆகிய அற்புத ஆடை ஒன்றை அந்த அம்மைக்கு இவன் அன்புடன் தந்தான். ஆடைகொடுத்துப் பாடல்கொண்டான் என அரசரும் இவனைப் பேணிக்கொண்டார். அந்தப்பாடல்கள் பந்தனந்தாதி என்று இப்பொழுது பாடப்படுகின்றன. தாம் பெற்றனவெல்லாம் தமர்க்கும் பிறர்க்கும் பேணி உதவியதால் இவன் பெருஞ்செல்வம் அடைந்தான் என்று அனைவரும் உவந்து புகழ்ந்தார். கிளைஞரைத்தழுவி இதம்புரிந்து வாழ்வோனுக்கு வளம்பலவரும் என்பதை இவன் வந்து காட்டினன். விரிவைப் புகார்மான்மியத்தில் காண்க.

## கதை 3

புண்ணியன் என்பவன் சூரியகுலத்து மன்னனாகிய பூமிசந்திரனுடைய புதல்வன். சாவக நாட்டிலே நாகபுரம் என்னும் நகரிலிருந்து இவன் அரசுபுரிந்தான். இவனது காலம் ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னாகும். இவன் முற்பிறப்பில் ஆபுத்திரன் என்னும் பெயருடன் மதுரையில் இருந்தவன். தனக்குக்கிடைத்த உணவைப் பலர்க்கும் பகுத்துக்கொடுத்தவன்.

ஐயக் கடிஞை கையின் ஏந்தி
மையறு சிறப்பின் மனைதோறும் மறுகிக்
காணார் கேளார் கால்முடப் பட்டோர்
பேணுநர் இல்லோர் பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருகவென் றிசைத்துடனூட்டி
உண்டொழி மிச்சில் உண்டோன்

என்று கூலவாணிகன் சாத்தனார் என்னும் புலவர் பெருமானால் இவன் கொண்டாடப்பட்டவன். உற்றவர்க்கு ஊட்டிய அவ்வுதவியின் பயனாகப் பின்பு, இவன் கொற்றவனானான். காக்கை கரவா கரைந்து உண்ணும் ஆக்கமும் அன்னநீரார்க்கே உள என்னும் உண்மையை இவனும் உணர்த்தி நின்றான்.

நாக புரமிது நன்னக ராள்வோன்
பூமிசந் திரன்மகன் புண்ணிய ராசன்
ஈங்கிவன் பிறந்த அந்நாள் தொட்டு
மோங்குயர் வானத்துப் பெயல்பிழைப் பறியாது
மண்ணும் மரனும் வளம்பல தருஉம்
உண்ணின் றுருக்கும் நோயுயிர்க் கில்லெனத்
தகைமலர்த் தாரோன் தன்திறம் கூறினன்.

தருமசாவகர் என்னும் முனிவரொருவர் இவனைக் குறித்து இங்ஙனம் கூறியுள்ளார். கரவாது முன்பு இவன் கரைந்து உண்டதும், அதனால் பின்பு இவன் கண்ட ஆக்கங்களும், அன்புகொண்ட ஆட்சியும் இதனால் அறியப்படும். விரிவை மணிமேகலையில் காண்க.

முற்றுத்தும் துத்தினை நாளும் அறஞ்செய்து
பிற்றுத்துத் துத்துவர் சான்றவர்—அத்துத்து
முக்குற்றம் நீக்கி முடியும் அளவெல்லாம்
துக்கத்துள் நீக்கி விடும். (நாலடியார்.)

துற்று = உணவு. துத்துவர் = உண்பர்.

கிளைஞரைப் பேணின் வளம்பல உளவாம் என்பது இக்குறள் கூறப்பட்டது.

---

528 பூத வழுதி புகழ்நோக்கி என்பலரும்
கோதறமுன் சூழ்ந்தார் குமரேசா—ஏதும்
பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர். (அ)

இ—ள்.

குமரேசா! பூதப் பாண்டியனை ஏன் பலரும்வந்து சூழ்ந்து வாழ்ந்தார் எனின், பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின் அதுநோக்கி வாழ்வார் பலர் என்க.

நோக்கின் வாழ்வார் என்று இயைத்து நோக்குக.

நோக்கான் என்னும் எதிர்மறைமுற்று எச்சமாகி நோக்கின் என்பதைத்தழுவி நின்றது. நோக்குதல் அவரவது தகுதியை யறிந்து உபசரித்தல்.

பொதுநோக்கான் = எல்லாரையும் ஒருதன்மையராக நோக்காது. வரிசையா நோக்கின் = அவரவர் தாமறிந்து தகுதியாக நோக்குவானாயின். அது என்றது வரிசையறிந்து நோக்கும் அச்சிறப்பை. பொது நோக்கு, வரிசை நோக்கு, என்னும் இருவகை நோக்குகளுள் வரிசை நோக்கையே அரசன் பெரிதும் உடையனாதல் வேண்டும் என்பது கருத்து. பொது நோக்கை மடமை நோக்காகவும் வரிசை நோக்கை அறிவு நோக்காகவும் வகுத்துக் கொள்க.

மேல், இன்சொல் பொறை ஈகைகளால் சுற்றம் பெருகும் என்றார்; இதில், வரிசைநோக்கானும் அதுவளரும் என்றார். மிக்க கிளைஞரைப் பெறுதற்குரிய உபாயங்களை இதில் உய்த்துணர்ந்து கொள்க.

எல்லாரையும் ஒரேவிதமாக நோக்காமல் அவரவரது தகுதிக்கேற்ப அரசன் நோக்குவானாயின் அந்நயத்தை நோக்கி அவனைச் சூழ்ந்து வாழுஞ் சுற்றத்தார் பலராவர் என்பதாம்.

கொடை முதலிய நலங்கள் இல்லையாயினும் பொது நோக்கமையறிந்த அரசனது திறத்தைவியந்து அறிஞர்கள் அவனைச்சூழ்வராதலால் அவ் இலக்கு தோன்ற அது நோக்கி என்றார்.

பெருங்கொடையும் இரும்பொறையும் இன்சொல்லும் வரிசை நோக்கும் அமையுமாயின் அவ் அரசனுக்குக்கிளைஞர் பலர் அமைவர் என்பது கருத்து.

வரிசையறியாது குலேசவழுதியைப்பிரிந்து இடைக்காடர் போனதுபோல் பொது நோக்குடையானை உயர்ந்தார் பொருந்தாமல் நீங்கிவிடுவர்; அதனால் அரசுக்கு இழிவுண்டாம் ஆதலால் அது நிகழாவண்ணம் வரிசைநோக்கை அரசன் உரிமையாகக் கொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

தகுதியையறிந்து நோக்கும் அரசனுக்கு மிகுதியான கிளைஞர்கள் உளராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ் வுண்மை பூதப்பாண்டியன்பால் உணரப்படும்.

## கதை

பூதப்பாண்டியன் என்பவன் மதுரையிலிருந்து அரசுபுரிந்த பாண்டியமன்னருள் ஒருவன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னாகும். பலகலைகளினும் இவன் தலைமையான புலமையுடையவன். சிறந்த போர்வீரன். மலைகலங்கினும் மாநிலங்கலங்கினும் தன் நிலை கலங்காதவன். தன்னொடு பகைத்த மன்னர் பலரையும் ஒல்லையூர் என்னும் இடத்தில் இவன் உடற்றிவென்று அதனைத்தாயங்கண்ணியார் என்

னும் புலவரொருவருக்குத் தந்துவந்தான். அதனால் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என இவன் ஒப்பப்பெற்றான். இவனுடைய மனைவி பெயர் அமராவதி. அவள் பேரழகோடு பெரும் புலமையும் வாய்ந்தவள். மணியும் ஒளியும்போல் அவளுடன் மருவி மகிழ்ந்து இவன் அரசுபுரிந்தான். இவன் செய்துவந்த உரிமையை நினைந்து கிளைஞர் பலரும் மகிழ்வுடன் இவனைத் தழுவியிருந்தார். அருந்திறலும் பெருங்கொடையுமுடைய இவனது குண நலங்களை அறிந்து அறிஞர் சிலர் வந்து இவனை அன்புடன் கண்டார். அவரவர் தகுதிக்கேற்ப இவன் உபசரித்தொழுகினன். ஆதனழிசி, அந்துவஞ்சாத்தன், மாவன் என்னும் இம்மூவரிடமும் இவன் மிக்க நண்புகொண்டான். அவர் தகவும் சூழ்ச்சியும் தண்ணளியுமுடையவர். எல்லாரையும் சமமாக நோக்காமல் அவரவர் தகுதியை யறிந்து அருளுடன் உபசரிக்கும் இவனது பெருந்தன்மையை வியந்து பலரும் வந்து இவனிடம் உறவாய் நின்றார். பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின் அது நோக்கி வாழ்வார் பலர் என்னும் உண்மையை உலகம் இவன்பால் கண்டது. விரிவை வழுதிமரபில் காண்க.

மடங்கலிற் சினைஇ மடங்கா உள்ளத்
தடங்காத் தானை வேந்தருடங்கியைந்து
என்னொடு பொருதும் என்ப : அவரை
ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு
அவர்ப்புறங் காணேனாயின், சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக ;
அறனிலை திரியா அன்பின் அவையத்துத்
திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தேன் ஆகுக ; மலிபுகழ்
வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்
பொய்யா யாணர் மையற் கோமான்
மாவனும், மன்னெயில் ஆந்தையும், உரைசால்
அந்துவஞ் சாத்தனும், ஆத னழிசியும்,
வெஞ்சின இயக்கனும், உளப்படப் பிறரும்

கண்போல் நண்பின் கேளிரொடு கலந்த
இன்களி மகிழ்நகை இழுக்கியான் ஒன்றோ
மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த
தென்புலம் காவலின் ஒரீஇப் பிறர்
வன்புலம் காவல் மாறியான் பிறக்கே (புறநானூறு.)

இது பூதப்பாண்டியன் போர்மேலெழுந்தபொழுது பொங்கி மொழிந்தது. இதனால் இவனது கல்வியறிவும், வெல்போர் வீரமும், மனைவிபால் வைத்திருந்த காதலும், கிளைஞரோடு கலந்து நின்ற உரிமையும், வரிசையறிந்து செய்தவகையும், அரசுமுறை புரிந்த திறமும், தன் மரபினை மதித்திருந்த பெருமையும், பிறவும் புலனும்.

ஒருதிசை யொருவனை உள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசில் மாக்கள்
வரிசை யறிதலோ அரிதே பெரிதும்
ஈதல் எளிதே மாவண் டோன்றல்
அது நற் கறிந்தனை யாயின்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே.

என்று மலையமானை நோக்கிக் கபிலர் அருளிய இஃது ஈண்டு காணத்தக்கது. தகுதியறிந்து நோக்கும் அரசனுக்கு மிகுதியான கிளைகள் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

529 திண்டோட் குலேசனைமுன் தீர்ந்தகன்றோன் பின்பன்பு
கொண்டுவந்தான் என்னே குமரேசா—பண்டு
தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்
காரண மின்றி வரும். (௯)

இ—ள்

**குமரேசா!** குலேசபாண்டியனைப் பிரிந்துபோன இடைக்காடர் பின்பு ஏன் உறவாகி வந்தார் எனின், தமர் ஆகி தன் துறந்தார் சுற்றம் அமராமைக் காரணம் இன்றி வரும்.

சுற்றம் வரும் என ஒட்டிக்காண்க. வரும் என்னும் பயனி லைக்கு எழுவாயாகவுள்ள சுற்றம் என்பதனோடு ஆதல் என்பதை வருவித்துக்கொள்க.

தமர் = தம்மவர்: என்றது சுற்றத்தாரை.

தன் துறந்தார் = தன்னைப்பிரிந்து போனவர்; ஐயுருபு இதில் அடங்கி நின்றது.

அமராமைக் காரணம் = கலந்து இராமைக்குக் காரணம்.

அமராமை என்பது அமர்தல் என்பதன் எதிர்மறைத் தொழிற்பெயர். அமர்தல் = தங்குதல், இருத்தல், பொருந்தல், விரும்பல்.

கொடை இன்சொல் முதலிய குணமுடைமையால் அரசனுக்குச் சுற்றம் கூடும் என்று இதுவரை கூறினார்; குற்றம் இன்மையானும் அவர் கூடப்பெறுவர் என்று இனிக்கூறுகின்றார்.

முதலில் தன்னோடு உறவினராயிருந்து தன்னைப் பிரிந்து போனவர் மீண்டும் வந்து சுற்றமாதல், அங்ஙனம் இராமல் போனதற்குக் காரணம் தன்னிடம் இல்லையாக உளதாம் என்பதாம்.

தன்னை வெறுத்துவிட்டு விலகிப்போன சுற்றத்தாரை மறுபடியும் ஒருவன் அடையவிரும்பின், அவர் இராமல் போனதற்குரிய காரணத்தைத் தன்பால் இல்லாமல் செய்யவேண்டும்; அங்ஙனம் செய்தால் தானேவந்து அவர் தமராகி நிற்பர் என்பார் "சுற்றம் அமராமைக் காரணம்இன்றி வரும்" என்றார். இயல்பாகவே அன்புடைய சுற்றம் ஏதாவது ஒரு பிழைநோக்கிப் பிரிந்துபோயின், அதனை நீக்கியவுடன் தானேவந்து அமர்ந்துவிடும்; ஆதலால் அரசன் அதனை அறிந்து செய்துகொள்ளவேண்டும் என்பது குறிப்பு. தன்னைவிட்டு நழுவிய சுற்றத்தைத் தழுவிக்கொள்ளுதற்கு வழியாது? என்று வருந்துகின்றவனை நோக்கி இஃது அருளியுள்ளதாகக் காண்க.

தன் குற்றத்தைக்கண்டு வெறுத்துப்போன சுற்றத்தை அரசன் அழைத்துக்கொள்ளவேண்டின் முதலில் அதனை ஒழிக்கவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குசேலபாண்டியனால் உணரப்படும்.

## கதை

குசேலபாண்டியன் என்பவன் மதுரையிலிருந்து அரசுபுரிந்த பூபசூடாமணிப் பாண்டியனுடைய புதல்வன். அந்தரசூடாமணி, சண்பகமாறன், பிரதாபசூரியன், வங்கிசசிரோமணி, வங்கிசபூடணன், சோமசூடாமணி, குலசூடாமணி, இராசசூடாமணி, எனப் பெயர் பெற்றிருந்த இவனுடைய முன்னோர்கள் எவரினும் புலமையில் இவன் தலைமை பெற்றிருந்தான்.

அத்தகைய பாண்டியருட் குசேல பாண்டியனென்னும்
அரசன் தோண்மேல்
வைத்தவனி தலம்புரப்போன் இலக்கணமும் இலக்கியமும்
வரம்பு கண்டோன்
எத்தகைய பெருநூலும் எல்லைகண்டோன் ஆதலினால்
இவனுக்கேற
முத்தமிழோர் பயில்சங்கம் இடங்கொடுத்த தனையமணி
முழவுத்தோளான்.

என முனிவராலும் இவன் புகழப்பெற்றான். இவனுடைய மனைவி பெயர் புனிதவதி. புலமை யின்பத்தையே நாளும் பொருந்தி நுகர்ந்து அனைவரும் மகிழ்வுற இவன் அரசுபுரிந்தான். புரிந்துவருங்கால் உரிமைகொண்டு இவனோடு உறவாகி நின்ற இடைக்காடர் சில பாடல்களை ஒருநாள் இவன் முன் பாடினார். அவரது பாடல்களின் அருமையை இவன் அறிந்திருந்தும் சிறிதும் மகிழாமல் அழுக்காற்றால் அவரை இகழ்ந்திருந்தான். அதனால் அவர் வருந்தியகன்றார். தமராயிருந்த புலவர் சிலரும் அவரோடு சென்றார். தனது குலதெய்வமாகிய சுந்தரப்பெருமானும் அவருடன் தொடர்ந்து போயிருந்தார். அரசன் இதனையறிந்து பெருந்துய

றுற்றுப் புலவரையடைந்தான். பிழைபொறுத்தருளெனப் போற்றிவேண்டினன். இயல்பாகவே இவன்பால் உறவாகிநின்ற அவர், உடனே வந்து இவனுடன் அமர்ந்திருந்தார். இறைவனும் தமரும் அருள்புரிந்துவந்தார். தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக் காரணம்இன்றி வரும் என்பதை உலகம் இவன் பால் அன்று கண்டு நின்றது. விரிவைத் திருவிளையாடலில் காண்க.

> வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும்
> கவாஅன் மகற்கண்டு தாய்மறந்தா அங்கு
> அசாஅத்தான் உற்ற வருத்தம் உசாஅந்தன்
> கேளிரைக் காணக் கெடும். (நாலடியார்.)

குற்றம் நீங்கிய அரசனுக்குச் சுற்றம் ஓங்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

530 கண்டிருந்தும் வீடணன்சேர் காரணத்தை யேனெண்
கொண்டான் இராமன் குமரேசா—அண்டி [ணிக்
உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந் தெண்ணிக் கொளல். (ம)

இ—ள்.

குமரேசா! விபீடணன் வந்த காரணத்தை அறிந்திருந்தும் ஏன் ஆராய்ந்து தெளிந்தபின் இராமன் அவனைத் தழுவிக்கொண்டான் எனின், உழைப் பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன் இழைத்து இருந்து எண்ணிக்கொளல் என்க.

பிரிந்து வந்தானை இருந்து எண்ணிக்கொளல் என இயைத்துக் காண்க.

உழை = பக்கம், இடம். உழைப்பிரிந்து = தன்பக்கல் நின்றும் பிரிந்துபோய். உழைஎனப் பொதுப்படக் கூறியிருப்பினும் இடம்நோக்கித் தன்னுழை என்றுகொள்ள நின்றது.

பிரிதற்கும் வருதற்கும் இடையேயுள்ள காரணத்தின் என்பது அவ்விரண்டற்கும் தனித்தனியே சென்றிசைந்து நில்லாமல் வருதற்கு மாத்திரம் உரிமையாய் நின்றது. காரணம் இல்லாமல் பிரிந்து பின் காரணத்தின் வந்தானை எனக் கூட்டிக்காண்க. இன்னது இதில் வரும்பொருளாம்.

இழைத்திருந்து என்றது வந்தவன் பின்பும் பிரிந்துபோகாமல் இருந்துவாழ்தற்கு அமைந்த காரணத்தை அமைத்துவைத்து என்றபடி. இழைத்தல் = அமைத்தல், செய்தல், அழுத்தல், ஆராய்தல்களை உணர்த்திவரும். பொற்பா இழைத்துக்கொளற்பாலர் புலமை மிக்கார் என்றார் பிறரும்.

மேல், சுற்றத்தார் தன்னைவிட்டுப் பிரிந்து போகாதபடி அரசன் இருந்துகொள்ளவேண்டுமென்றார்; பிரிந்துபோனவர் திரும்பவரின் அவர்பால் அவன் செய்யவேண்டியதை இதில் இயம்பியருளினார்.

தன்னிடத்தினின்றும் பிரிந்துபோய்ப் பின் எதாவது ஒரு காரணத்தினால் மீண்டு வந்தவனை அரசன் அமைத்துவைத்து ஆராய்ந்து அவனைத் தழுவிக்கொள்ளவேண்டும் என்பதாம்.

கொள்ளவில்லையானால் பின்னும் பிரிந்துபோய்ப் பகைவருடன் கூடி இன்னல் விளைப்பனாதலால் எண்ணிக்கொளல் என்றார்.

காரணமில்லாமலே தன்னைவிட்டுப் பிரிந்துபோன ஒருவன் மீண்டும் தன்பால் வருவானாயின் அவனை வெறுத்தகற்றாது வேண்டியதைச் செய்துவைத்து அரசன் அவனை ஆராய்ந்துகொள்ள வேண்டும் என்பது கருத்து.

இனி, பிறரிடத்தினின்றும் பிரிந்து, யாதாயினும் ஒரு காரணத்தை முன்னிட்டுத் தன்னிடத்து வந்தவனைத் தனியே அமைத்துவைத்து அவனியல்பை ஆராய்ந்து பின் அவனை அரசன் துணையாகத்தழுவிக் கொள்ளவேண்டும் எனவும் இது பொருள்படும்.

நலம் பெறலாம் என்று தன்னை நாடி வந்தவனை தழுவவிடாமல் அரசன் தழுவவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமன்பால் உணரப்படும்.

## கதை

நீதிகள் பல கூறி உணர்த்தியும் இராவணன் உணராமையால் விபீடணன் அவனைவிட்டுப் பிரிந்தான். இராமருடைய அருந்திறலையும் பெருங்குணங்களையும் அறிந்து மகிழ்ந்து அவரை அடைய விரும்பினான். இலங்கைமேல் படையெடுத்துவந்து இடையே தங்கியிருக்கும் அவர் இடத்தைநோக்கி வந்தான். வானரங்கள் இடையேவந்து அவனை வளைந்துக்கொண்டன. மயிந்தன் என்பவன் வந்து அவன் வரவினைத் தம்முதல்வனிடம் உரைத்தான். அவனைத் தழுவிக்கொள்வதைக் குறித்துத் தம் உழையிருந்தவர்களிடம் இராமர் உசாவியறிந்தார். சுக்கிரீவன் முதலிய அனைவரும் அவனைச் சேர்க்கலாகாதென்று சேரமொழிந்தார். அனுமான்மாத்திரம் அவனைத்தழுவவேண்டும் என்று வழுவற உரைத்தான். பேரறிவாளராகிய இராமர் அவருரைகளெல்லாவற்றையும் நேருறவைத்து ஆராய்ந்தார். அவன் வந்த காரணத்தையும் சிந்தையின் இயல்பையும் முந்துறத்தெளிந்தார். அவன் மீண்டுபோகாதபடி வேண்டியதைச் செய்தார். மெய்ம்மைத்துணையாக விரும்பிக்கொண்டார். அவனும் மாறுநண்புடையனாய் அவர்பால் மருவியிருந்தான். உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன் இழைத்திருந்து எண்ணிக்கொள்ளவேண்டும் என்பதை உலகம் இவர்பால் அன்று உவந்துகண்டது. விரிவை விபீடணன் அடைக்கலப் படலத்தில் காண்க.

ஆழியான் அவனைநோக்கி அருள்சுரந் துவகைதூண்ட
ஏழினோ டேழாய்நின்ற உலகுமென் பெயருமெந்நாள்
வாழுநாள் அன்றுகாறும் வாளெயிற் றரக்கர் வைகும்
தாழ்கடல் இலங்கைச்செல்வம் நின்னதே தந்தேனென்றான். (1)

குகனொடும் ஐவரானோம் முன்புபின் குன்றுசூழ்வான்
மகனொடும் அறுவரானோம் எம்முழை அன்பின்வந்த
அகனமர் காதலைய நின்னொடும் எழுவரானோம்
புகலரும் கானந்தந்து புதல்வரால் பொலிந்தானுந்தை. (2)

இவை, தன்பால் வந்த வீபீடணனைத் தழுவிக்கொண்டபொழுது இராமர் உரைத்தன. உறைப்பிரிந்து வந்தவனை இராமர் இழைத்திருந்ததும், எண்ணிக்கொண்டதும், சுற்றந்தழுவி நின்ற அவரது பெற்றியும் பிறவும் இவற்றால் இனிது புலனும்.

அல்ல லொருவற் கடைந்தக்கால் மற்றவற்கு
நல்ல கிளைக ளெனப்படுவ—நல்ல
வினைமாயின் மற்றதனை நீக்கு மருமே
மனைமர மாய மருந்து. (பழமொழி)

அடுக்கல் மலைநாட தற்சேர்ந் தவரை
எடுக்கலம் என்னார் பெரியோர்—அடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினும் இல்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு. (நாலடியார்)

உரிமையோடு தன்பால் வந்தவனை அரசன் அருமையோடு தழுவிக்கொள்ளவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

ஒருவன் செல்வம் நீங்கிய காலத்தும் அவன்பால் அன்பு நீங்காதிருப்பவர் அவன் சுற்றத்தாரே யாவர். நல்ல சுற்றம் ஒருவனுக்கு அமையுமாயின் எல்லாச் செல்வங்களும் அவனுக்கு எளிதில் உளவாம். சுற்றத்தாரோடு ஒருவன் ஒத்துவாழானாயின் அவன்பெற்ற செல்வமெல்லாம் முற்றும் பாழாம். தன் சுற்றத்தைத் தழுவிவாழ்தலே ஒருவன்பெற்ற செல்வத்திற்குப்பயனும். கொடையும் இன்சொல்லும் ஒருவன் உடையனாயின் அவனுக்கு அனைவரும் சுற்றமாவர். பெருங்கொடையோடு அமைதியுமுடையவன் இவ்வுலகில் நிரம்பிய கிளைகளையடைவான். உறவினரை யூட்டி உண்ணும் உரிமையாளனுக்கு அருமையான ஆக்கங்கள் பெருகிவளரும். தகுதியறிந்து நோக்கும் அரசனுக்கு மிகுதியான கிளைகள் உளவாம். குற்றம் நீங்கிய அரசனைச் சுற்றஞ் சூழ்ந்து நிற்கும். உரிமையோடு எவர்வரினும் அவரை உறவாக அரசன் தழுவிக்கொள்ளவேண்டும்.

53-வது சுற்றந்தழால் முற்றிற்று.

# 54-ம் அதிகாரம் பொச்சாவாமை.

அஃதாவது தன் காரியங்களில் அரசன் சோர்தலைச்செய்யாமை. பொச்சாவாமை என்றது பொச்சாப்பு என்பதன் எதிர்மறைத்தொழிற்பெயர். பொச்சாப்பு என்பது மறவியையும் நீமையையும் உணர்த்திவரும். பொச்சாவாமை = மறவாமை. அகத்திலுறும் பொச்சாப்பை அறவே ஒழித்தாலன்றிப் புறத்திலுற்ற சுற்றத்தைத் தழுவி ஒருவன் புகழ்பெற வாழமுடியாது ஆதலான் அதனையுணர்த்தற்கு அதன்பின் இது வைக்கப்பட்டது. மேல் கொள்ளத்தக்கதைக்கூறினார்; இதில் தள்ளத்தக்கதை உணர்த்துகின்றார்.

531 கண்ட களிப்பால் கதிரோனும் இந்திரனும்
கொண்டார்முன் தீதேன் குமரேசா—மண்டி
இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு. (க)

இ—ள்

குமரேசா! தாம்கொண்ட உவகைக்களிப்பால் சூரியனும் இந்திரனும் ஏன் பெருந்தீமையை அடைந்தார் எனின், சிறந்த உவகை மகிழ்ச்சியின் சோர்வு இறந்த வெகுளியினும் தீதே என்க.

சோர்வுதீதே என இயைத்துக்காண்க. ஏகாரம் தேற்றம். இறந்த சிறந்த என்னும் பெயரெச்சங்கள் இரண்டும் ஈண்டு மிகுதியை உணர்த்தி நின்றன.

இறந்த வெகுளி என்றது மிகுந்த கோபத்தை. அளவு இறந்தது என்றபடி. இறந்தார் இறந்தாரனையர் என மேலருளியுள்ளதுங்காண்க. பகைவர் கொடியர் முதலாயினோரை அடக்கி ஆளவேண்டிய அரசர்க்கு அளவு இறவா வெகுளி இன்றியமையாது வேண்டப்படுமாதலால் அதனை விதந்துகொள்ள இறந்த

என்றார். இன் உருபு இரண்டனுள் முன்னது எல்லைப்பொரு ளது. பின்னது ஏதுப்பொருளது.

மகிழ்ச்சியின்சோர்வு = மனக்களிப்பால் வரும் மறவி. சோர்வு, மறவி, பொச்சாப்பு என்பன ஒரு பொருட்சொற்கள்.

உவகையும் மகிழ்ச்சியும் இன்பஉணர்ச்சிகளையே ஒருபடியாக உணர்த்தி வருமாயினும் ஈண்டுச் செல்வமுதலிய நலங்களை உள்ளிமகிழ்தலையும், அதில் ஊன்றி மயங்கலையும் இருவேறு நிலையில் முறையே அவை உணர்த்திநின்றன.

மிக்க உவகைக் களிப்பினால் வரும் மறதியானது வரம்புகடந்த கோபத்தினும் தீயதாம் என்பதாம்.

பொச்சாப்பால் பெருந்தீமை யுண்டாம் என்பதை உணர்த்துதற்கு வெகுளியை இணைத்துக்காட்டியது எற்றுக்கெனின், அதன் கொடுமை வெளிப்படையாக எவர்க்கும் எளிதில் விளங்கும் என்பது கருதிஎன்க.

> சினத்தினால்வரும் தீமை அத்தீமைதீப் பிறப்பு
> மனத்தினீடிய மருட்கையும் வறுமையும் நரகும்
> அனைத்து நல்கிடும் ஆதலால் ஒருபொழு தயர்த்தும்
> தனக்கு நல்லவன் வளர்ப்பனோ சீற்றமாம் தழலை.
>
> வெகுளியே உயிர்க்கெலாம் விளைக்கும தீவினை
> வெகுளியே குணந்தவம் விரதம் மாய்க்குமால்
> வெகுளியே அறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்
> வெகுளியிற் கொடும்பகை வேறொன் றில்லையால்.

என்றபடி எல்லாத் தீமைகளையும் விளைக்கவல்ல வெகுளியினும் பொச்சாப்புப் பொல்லாதது என்பார் "மகிழ்ச்சியிற் சோர்வு வெகுளியிற்றீதே" என்றார்.

**தன்னைத் தான்காக்கிற் சினம்காக்க காவாக்கால் தன்னையே கோல்லும் சினம்** என்று மேற்சொல்லியபடி இறந்த வெகுளி தன்னை எந்தினவனைமாத்திரம் இறந்து படச்செய்யும்; மறவி அவ்

வாறன்றி ஒருவனுடைய புகழ், பொருள், கிளைமுதலிய எல்லாவற்றையும் கொன்று அவனையும் பொன்றச்செய்யும், ஆதலால் அக்கொடுமையை நினைந்து அதனை அறவே அரசன் அகற்றவேண்டும் என்பது கருத்து.

இறந்த வெகுளியும் சிறந்த உவகையும் என்றும் எவ்விதத்தும் அரசன் கொள்ளலாகாதென்பது குறிப்பு.

செல்வக்களிப்பால் தம்செயலை மறந்தவர் பின்பு அல்லற்படுவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சூரியன் இந்திரன் என்னும் இவ் இருவர்பாலும் உணரப்படும்.

கதை

சூரியன் என்பவன் இறைவன் கலையாய் நின்று உலகமுழுவதையும் விளக்கி விளங்கும் சோதியுருவினன். பரிதி, பாற்கரன், ஆதித்தன், பனிப்பகை, சுடர், பதங்கன், அருணன், ஆதவன், மித்திரன் முதலிய பல வேறுப்பெயர்களையுடையவன். தனது ஒளியியக்கத்தால் எல்லா உயிர்வருக்கங்களையும் இனிது இயக்கி வருபவன். காலதத்துவத்துக்கு இவன் அதிதேவதையாவன். இவனது ஒளிமண்டலம் பதினாயிரயோசனை அளவினையுடையது. காயத்திரி என்னும் அரியமந்திரத்திற்கு இவன் உரியவனாவன். இவனுடைய மனைவி பெயர் சஞ்ஞிகை. அப்புனிதவதியோடு இனிதமர்ந்திருந்து வைவசுவதன், யமன், யமுனை, சநி, தபதி, சாவர்ணி என இவ் அறுவரையும் பெற்றான். ஓர் உருளையுடையதும், எழுபரிகள் பூண்டதும், பேரழகு வாய்ந்ததுமாகிய விழுமிய தேர்மேலேறி நாளும் இவன் உலாவிவருவான். இவனால் எல்லா உலகங்களும் இயங்கி மகிழ்வுறும். சந்திரன், செவ்வாய், புதன் முதலிய அனைவரும் இவனால் ஒளிபெற்று இவனைச்சுற்றிநிற்பர். இவன், இங்ஙனம் சிறந்து விளங்கிவருங்கால் நாரதர்வந்து இவனைப்புகழ்ந்து போயினர். தான் இல்லையானால் இவ்வுலகம் இருள்பட்டுப்போம் எனத் தனது தலைமையையும், நிலைமையையும், இவன் பின்நினைந்து மகிழ்ந்தான். மேலும் மேலும் நெடுங்களிகொண்டான். அதனால் பருவம்தவறாமல் செய்யும் தனது உரிமையை மறந்தான். இவன் கருத்தின் விளைவைக் கண்ணுதற்பரமன் திருத்த

தவிழ்ந்து தம் நெற்றிக்கண்ணை இவனைநோக்கித் திறந்தார். அவ் ஒளிப்பிழம்பால் இவன் உள்ளங்கலங்கினான். பின் உளைந்துவே ண்டினான். சிறந்த மகிழ்ச்சியால்புகுந்த தீமையைப் பின் இவன் நினைந்து வருந்தினான். களிப்பினால் மறவியும் அதனால் தீமையும் விளையுமென்பதை உணர்ந்து தெளிந்தானாதலால் அதன் பின் இவன் அதனை அறவே ஒழித்து விளங்கினான். இதன் விரிவைப் பழனி மான்மியத்தில் காண்க.

## கதை 2

இந்திரன் ஒருநாள் ஐராவதத்தின்மேல் எழுந்தருளிச் சிறந்த ஆரவாரத்துடன் அமராவதியில் உம்பர்புடை சூழ உலாப் போந்தான். எம்மருங்கினும் இன்பக்காட்சிகளே இசைந்திருந்தன.

எத்திக்கும் கல்லென் றியம்கலிப்ப வெந்திழையார்
தித்தித் தமுதொழுக்கும் கீதம் செவிமடுப்பப்
பத்திக் கவரிநிரை தானைப் படுகடலில்
தத்திப் புரளும் திரைபோல் தலையணிப்ப.

என்றபடி இவன் தலைமைபெற்று வருங்கால் காசியிலிருந்து இறைவனைப் பூசித்துவிட்டு அருச்சனை புரிந்த தாமரை மலரொன் றைக் கையிலேந்திக்கொண்டு துருவாச முனிவர் அங்கு வந்தார். இவனைக்கண்டார். ஆசிகூறினார். ஈசனுவந்த அம்மலரை இவன் பால் நேசம் கொண்டுதந்தார். தான் கொண்டிருந்த சிறந்த மகி ழ்ச்சியால் அவரது பெருமையையும், தனது நிலைமையையும் இவன் மறந்துபோயினான்; ஆதலால் அவர் தந்ததை வாங்கித் தந்தியின் பிடர்மேல் வைத்தான். அதனைத் துதிக்கையால் எடுத்தெறிந்து அது மிதித்துச் சிதைத்தது. கோபமுனிவர் கொதித்துக் குதித் தார்.

புள்ளியதோ லாடை புனைந்தரவப் பூணணிந்த
வெள்ளிய செங்கண் விடையான் அடிக்கமலம்
உள்ளிய மெய்யன் புடையார் அருவருத்துத்
தள்ளிய செல்வத் தருக்கினாய் என்செய்தாய். (1)

கதிர்த்தார் முடியமரர் கையுறையே நன்கு
மதித்தாய் எம்மீசன் மதிமுடிமேற் சாத்தும்
பொதித்தா துவிழ்மலரைப் போற்றுது வாங்கி
மிதித்தானை சிந்தஅதன் மேல்வைத்தாய் பேதாய். (2)

சேட்டானை வானவநின் சென்னி செழியபரிவோர்
வாட்டானை வீரன் வளையால் சிதறுக்; நின்
கோட்டான நாற்கோட்டு வெண்ணிறத்த குஞ்சரமும்
காட்டானை யாக என இட்டான் கடுஞ்சாபம். (3)

இவற்றைக் கேட்டவுடனே இந்திரன் வாட்டமுற்றான். தன் உவகைக்களிப்பால் வந்த கேட்டை நினைந்தான். பின் கேடுற்று நொந்தான். மகிழ்ச்சியால் சோர்வுறும் அரசன் இகழ்ச்சியைச் சேர்வன் என்பதற்கு இவன் நிகழ்ச்சியே கரியாய் நின்றது. சிறந்த உவகை மகிழ்ச்சியில் சோர்வு இறந்த வெகுளியினும் தீதே யாம் என்பதை உலகமும் இவன் பால் உணர்ந்து தெளிந்தது. விரிவைத் திருவிளையாடலில் காண்க.

நெடியசெல்வ முடைமைகொண்டு நெஞ்சிடைக் களிப்பதே
வடிவமாகும் யானும் அம்மயக்கையே வளர்ப்பதாம்
கடியதேவி மறதியும் கலந்தபோதில் யாவரே
படியில்வானில் வெற்றியம் பதாகைநாட்ட வல்லரே. (1)

ஆசுறாத செல்வமோ டடுத்த வச்சிராயுதன்
வாசநா றலங்கலைத் துர்வாசன் நல்கவாங்கிமுன்
வீசுறாவெறிந்த தேறும் வேழமா மதங்கொலோ
ஏசுறாத தன்மதங்கொல் எம்மதங்கொல் என்பதே. (2)
(மெய்ஞ்ஞான விளக்கம்.)

மனமறதியைத் தனமதத்துக்கு மனைவியாக உருவகஞ் செய்து இயல்புற உரைத்த இவற்றுள்ளும் மேற்குறித்த உண்மையையே உணர்த்தியுள்ளமை காண்க.

கொடிய கோபத்தினும் மறவி கொடியது என்பது இதனால் கூறப்பட்டது.

532 வென்றி இளன்நீகன் மெய்ப்புகழ்தம் பொச்சாப்பால்
குன்றிநின்ற தென்னே குமரேசா—என்றுமே
பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு. (உ)

இ—ள்.

குமரேசா! இளன், நீகன், என்னும் இருவரும் தம் பொச்சாப்பால் என் புகழிழந்து நொந்தார் எனின், நிச்ச நிரப்பு அறிவினைக் கொன்றாங்கு பொச்சாப்பு புகழைக் கொல்லும் என்க.

நிச்சநிரப்பு = நித்தவறுமை; நாள்தோறும் வருந்தி இரந்து வயிற்றை நிரப்பும்படியான நிலையினையுடையதாதலால் அவ்வறுமையை நிச்ச நிரப்பு என்றார். பலவகைத் துன்பங்களையும் நித்தலும் நிரப்பி நிற்பது எனினுமாம். வட நூலார் இதனை நித்திய தரித்திரம் என்பர்

கொன்றால் என்னும் எச்சம் கொன்று எனக்குன்றி நின்றது.
ஆங்கு என்பது போல என்பது போல் உவமஉருபாம்.

தானம் துடைத்துத் தருமத்தை வேர் பறித்து, மானம் துடைப்பதோர்வாள் என்று இரத்தலை இறத்தலாகவே கருதியிருக்கும் அறிவுடையாரையும் நிலைகுலைத்து வறுமை சிறுமைப் படுத்தும் ஆதலால் 'அறிவினை நிச்ச நிரப்புக்கொல்லும்' என்றார். நிரப்பு என்னும் அல்லல் அடையப்பட்டார், நீர்மையே யன்றி நிரம்ப எழுந்த தம் கூர்மையும் எல்லாம் ஒருங்கு இழப்பர் என்றதுங் காண்க.

மேல், பொச்சாப்பு வெகுளியினும் தீயது என்றார்;
இதில், வறுமையினும் அது கொடியது என்றார்.

கொன்றாங்கு கொல்லும் என்று இறப்பும் எதிர்வும் தோன்ற இசைத்தது, வருந்தி இரந்து வறுமையால் அறிவு குன்றி நிற்றலை முன்னரே அறிந்துள்ளமை தோன்ற என்க.

கொடியவறுமை அறிவினைக் கெடுப்பதுபோல் ஒருவன் மறதி அவன் புகழினை அழித்து விடும் என்பதாம்.

பொச்சாப்பின் புன்மையை விளக்குதற்கு நிச்ச நிரப்பை நேர்காட்டியது, செல்வக்களிப்பால் தம் செயல் மறந்திருக்கும் அறிவிலிகள் தெளிவுற என்க.

தன்புகழினைக் கொல்லவந்த கொலையாளியாகவே மறவியைக் கருதி ஒருவன் மறவாமல் ஒழுகவேண்டும் என்பது கருத்து.

மறவியும் வறுமையும் தன்னை மருவாதபடி அறிவோடு அரசன் என்றும் மருவியிருக்கவேண்டு மென்பது குறிப்பு.

பொச்சாப்புடையவர் புகழிழந்து இழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இளன் நீகன் என்னும் இவ் இருவர் பாலும் உணரப்படும்.

## கதை.

இளன் என்பவன் சூரியகுல முதல்வனாகிய மனுவின் புதல்வன். இவன் அழகும் ஆண்மையும் அமையப் பெற்றவன். நல்ல வில்வீரன். சுதமதி என்னும் தனது அழகிய மனைவியோடமர்ந்து விழுமிய போகங்களை நுகர்ந்து இவன் விளங்கியிருந்தான். உருவிலும் திருவிலும் உயர்புகழுடையனாய் இவன் உலகை ஆண்டு வருங்கால் இமையச் சாரலில் உமாதேவியார் தனியேயிருந்து அருந்தவம் புரிந்தார். ஒரு நாள் அங்கு இவன் சென்றான். அவ் இறைவியிருக்கும் இடத்துள் ஆடவர் புகுதலாகாதென்றும், புகுந்தால் பெண்ணுருவாகி விடுவர் என்றும், முன்னரே புகன்றிருந்ததை இவன் அறிந்திருந்தும் தன் செல்வக்களிப்பால் மறந்து உள்ளே செல்லலுற்றான். உடனே தன்னுருவமாறிப் பெண்ணுருவமானான். உறுப்புக்களை நோக்கினான். உள்ளே நாணினான். வில்லையும் தூணியையும் வீசி யெறிந்து வெளியேவந்தான். இளன் எனும் பெயர் போய் இளை என நின்றான். அம் மெல்லிய வடிவோடு ஒல்கி ஒசிந்து தனிவழியே செல்லுங்காலையில் நடுநாளாகிய புதன் நடுவே கண்டான். பனிமலர்ச்சோலையில் தனியே வந்த இவ்வனிதையை நோக்கி அவன் மிகு மையல்

கொண்டான். இவளும் இசைந்தாள். பின்பு இசைந்த இன்பத்தை இருவரும் உவந்து துய்த்தார். ஒருவாமல் அவனோடு மருவியிருந்து இவள் ஒரு புதல்வனைப் பெற்றாள். அவனை புரூரவன் என்னும் பெயரோடு பின்பு புகழ் பெற்றிருந்தான். ஒரு சிறு மறதியால் தனது உருவையும் புகழையும் ஒருங்கே இழந்து இவன் உழந்து நொந்தான். பொச்சாப்பு புகழைக் கொல்லும் என்பதை உலகம் இவனால் பொருந்தக் கண்டது. விரிவைப் பாரதத்தில் காண்க.

வளை நெடுஞ்சிலைக் கரத்தினன் மறுவருள் மைந்தன்
உளையெழும்பரித் தேரினன் உறவினோன் றுணைரான்
விளையருந்தவ விபினமுற் றம்பிகை விதியால்
இளையெனும் பெயர் மடவால் ஆயின னென்ப. (1)

மார காகளம் எழுவதோர் மதுமலர்க் காவில்
தாரகாபதி புதல்வன்அத் தையலைக் காணு
வீரகாமபா ணங்களால் மெலிவுற மயங்கித்
தீரகாமமும் செவ்வியும் மிகும்படி நினைத்தான். (2)

புதனும் அந்தமென் பூவையும் புரூரவா வினைத்தம்
சுதனெனும்படி தோற்றுவித் தனரவன் தோன்றி
இதநலம் பெறு மழகினும் திறலினும் இலங்கி
மதனனுங்கலை முருகனும் எனும்படி வளர்ந்தான்.
(பாரதம்) (3)

இவற்றால் மேற்குறித்த உண்மை இனிது தெளிவாதல் காண்க.

## கதை 2

நீகன் என்பவன் சந்திரகுல வேந்தனாகிய சுகுணனுடைய புதல்வன். இவனுக்குக் கிருட்டிண ராயன் எனவும் பெயர். இவன் தொண்டைநாட்டைத் தனக்கு உரிமையாக்கொண்டவன். பல நூல்களிலும் இவன நல்லபயிற்சியுள்ளவன். இவன் அரசபுரிந்துவருங்கால் சோமநாதன் என்னும் வேதியனொருவன் தனது மனைவியையும், நுழவியையும் இவன் பாதுகாவலில் வைத்துவிட்டுத் தீர்த்தயாத்திரை போனான். இவன் அவ்விருவரையும் இடம

கன்ற ஓர் இல்லில்வைத்து வேண்டிய உணவுப்பொருள்களைக்கொடுத்து அதனை அடைத்துவைத்தான். நாள்பல கழிந்தன. அம்மறையவள் நிலையினை இவன் மறந்துபோயினன். முன் போனவன் வந்து இம்மானவன் முன் நின்றான். அதன் பின் நினைந்தான். விரைந்துபோய்த் திறந்துபார்த்தான். அவ்விருவரும் இறந்து கிடந்தனர். தான் மறந்துவிட்டதை நினைந்து நினைந்து மன்னன் வருந்தி நொந்தான். மறையவன் மறுகியழுதான். நல்ல புகழுடையனாயிருந்தும் அரசனை இதனால் எல்லாரும் இகழ்ந்தார். தன் பொச்சாப்பால் நேர்ந்த புன்பழியை அஞ்சி அரசன் அரசைத்துறந்தான். தன்குறை தீருமாறு செங்கண் நெடியோனை இவன் சிந்தித்திருந்தான். ஒருவன் புகழினை அவன் மறவி கொல்லும் என்பதை உலகம் இவன்பால் கண்டது. விரிவைத் திருவேங்கடத்தலபுராணத்தில் காண்க.

மறவியால் ஒருவன் புகழ் அழிந்துபோம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

533 சூடுபுகழ்த் துட்டியந்தன் துய்மனிவர் பொச்சாப்பால்
கோடினர்சீர் என்னே குமரேசா — கூடிநின்று
பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்கும் துணிவு. (கூ)

இ—ள்.

குமரேசா! துட்டியந்தன், இந்திரத்துய்மன் என்னும் இவர் பொச்சாப்பால் ஏன் தம்புகழை இழந்தார்எனின், பொச்சாப்பார்க்கு புகழ்மை இல்லை; அது உலகத்து எப்பால் நூலோர்க்கும் துணிவு என்க.

அது துணிவு எனஇயையும்.

புகழ்மை = புகழுடைமை: மைவிகுதி தன்மைப்பொருளையும் உடைமைப்பொருளையும் உணர்த்திவரும்; ஈண்டு உடைமைமேல் நின்றது. அது என்றது புகழில்லை என்னும் அவ்வுண்மையை.

உடற்கு அணிபோல் நின்று புகழ், உயிர்க்கு அழகைச் செய்யுமாதலால் அஃது உடைமை என நின்றது.

எப்பால் நூலோர்க்கும் = எவ்வகைப்பட்ட நூலுடையார்க்கும்.

அறநூல், பொருள் நூல், இன்ப நூல், வீட்டுநூல், முதலாக நூல்கள் பலவாகுமாதலால் "எப்பால் நூல்" என்றார். பால் = பகுதி. நீதிநூலார் விதிகளுட் சில, இன்ப நூலார்க்கும்; இன்பநூலார் விதிகளுட்சில, பொருள் நூலார்க்கும்; பொருள் நூலார் விதிகளுட்சில, அறநூலார்க்கும்; இங்ஙனமே ஒருநூலார் விதி மற்றொரு நூலார்க்கும் சிறுபான்மை பொருந்தாது; ஆயினும், பொச்சாப்பை உடையார்க்குப் புகழ் இல்லை என்பதில் யாவரும் ஒருமுகமாகப் பொருந்துவர் என்பார் "அது உலகத்து எப்பால் நூலோர்க்கும் துணிவு" என்றார். துணிவு = மாறுபடாமல் யாவராலும் உறுதியாகத்தெளியப்பட்டது

மேல், பொச்சாப்பு ஒருவன் புகழைக் கொல்லும் என்றார்; இதில், அதனையுடையவர்க்குப் புகழ்இல்லை என்பதை யாவரும் மறார் என்று கூறியருளினர்.

மறவியுடையார்க்குப் புகழுடைமையில்லை, அதனை உலகிலுள்ள எத்திறத்தாரும் ஒத்துக்கொள்வர் என்பதாம்.

மறவியுடையவன் ஆவன அறிந்துசெய்யும் அறிவினை இழந்துவிடுவனாதலால் புகழுக்கேதுவாகிய நலங்களை அவன் யாதும் செய்துகொள்ளான் என்க.

ஒருவன் புகழடைய விரும்பின் பொச்சாப்பை ஒருபோதும் அவன் அடையலாகாது என்பது குறிப்பு.

தன் புகழைக் கெடுத்துப் பழியை விளைத்துவிடும் இழிகுணம் என்று அஞ்சி மறவியை ஒருவன் அறவே ஒழிக்கவேண்டும் என்பது கருத்து.

பொச்சாப்புடையார் புகழினையுடையார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அட்டியந்தன், இந்திரத்துய்மன் என்னும் இவ் இருவர்பாலு முணரப்படும்.

## கதை

துட்டியந்தன் என்பவன் சந்திரகுல வேந்தனாகிய இனீக னுடைய புதல்வன். இவன் தந்தையைச் சனசயன் எனவும் கூறு வர். தாய்பெயர் பொன்மாலை. வடமொழியில் இவனுக்குத் துஷ் யந்தன் என்று பெயர். இவன் சிறந்த அழகன். திருந்திய நல னோடு இவன் செங்கோல் செலுத்திவருங்கால் ஒருநாள் வேட் டைக்குச் சென்றான். கண்ணுவ முனிவர் தவச்சாலையை நண்ணி னான். அங்கிருந்த சகுந்தலையைக் கண்டான். அப் பேரழகிமேல் இவன் பெருங்காதல் கொண்டான். அகமுருகி நிற்கும் இவன் முகமதியை நோக்கி அவளும் உளம் உருகினாள். ஒரு பருவச் சோலையிலமர்ந்து கருதிய நலங்களை இருவரும் மருவித்துய்த்தார். அதன் பின் "நின்னையன்றி இனி எவரையும் யான் மணந்துகொ ள்ளேன்" என்று இன்னுரைகூறி அவளை இருத்திவிட்டு மன்ன வன் போயினான். நிகழ்ந்ததை முனிவர் தெரிந்து மன்னவன் என் றதனால் மகிழ்ந்திருந்தார். மருவிய அன்றே மங்கை கருவுற்றிரு ந்து பருவமெய்தி ஒரு புதல்வனைப் பயந்தாள். அவனுக்குப் பர தன் என்று பெயரிட்டு வளர்த்துத் திங்கள் சில சென்றபின் மக னோடு அவள் இவனை வந்து கண்டாள். இவன் முன்னம் சொன் னதை முழுதும் மறந்தான். முறைதிறம்பி நின்றான். அவள் மிக அழுது நொந்தாள். தெளிந்தவரனைவரும் இவன் இயல்பினை இக ழ்ந்தார். அதனால் இவன் புகழ்குன்றி நின்றது. பொச்சாப்பார் க்குப் புகழ்மை இல்லை என்பதற்கு இவன் பொருந்தியிருந்தான். விரிவைப் பாகவதத்தில் காண்க.

## கதை 2

இந்திரத்துய்மன் என்பவன் சந்திரகுல வேந்தனாகிய சுமதி யின் புதல்வன். அமைதி அன்பு முதலிய உயர்குணங்களெல்லாம் இவன் மையப்பெற்றவன். கலைகள்பலவும் கற்றவன்; ஆயினும் உற்றதைவிரைவில் மறந்துவிடும் குற்றமும் இவன்பால் கூடியிருந் தது. சிறந்த நீதியோடு இவன் அரசுபுரிந்து வருங்கால் அகத்திய முனிவர் இவனிடம் வருவதாக ஒரு பொழுதைக்குறித்து முன்ன

534 திண்டோள் விரோசனன்சேர் சீரெல்லாம் எனிழந்தான்
கொண்டவொரு சோர்வால் குமரேசா—உண்டான
அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. (ச)

இ—ள்.

குமரேசா! தன் மறதியொன்றால் எல்லா நலங்களையும் இழந்து விரோசனன் ஏன் எரிந்து அழிந்தான் எனின், அச்சம் உடையார்க்கு அரண் இல்லை; ஆங்கு பொச்சாப்பு உடையார்க்கு நன்கு இல்லை என்க.

அரண் = பாதுகாப்புக்கு ஏதுவாகிய இடம். கோட்டை மதில், காடு, மலை முதலாக அது பலவகைப்படும். அகத்தில் அச்சம் உடையார்க்கு புறத்தில் எத்துணை அரண்கள் அமைந்திருப்பினும் அவற்றால்யாதும் பயனில்லை ஆதலால் அச்சமுடையார்க்கு அரண் இல்லை என்றார்.

நன்கு என்றது செல்வங்களை; எல்லா நன்மைகட்கும் ஏதுவாகுமாதலால் அவை நன்கு என நின்றது.

பொச்சாப்புடையார்க்குப் புகழ் இல்லை என்று மேல் அருளினார்; இதில், அவர்க்குச் செல்வங்களும் இல்லை என்றார்.

அச்சமுடையார்க்கு அரண்களால் பயனில்லை; அதுபோல மறவியையுடையார்க்குச் செல்வங்களால் யாதும் பயன் இல்லை என்பதாம்.

அகத்தில் மறதியுடையவர்க்குப் புறத்தில் எத்துணைப் பெருஞ்செல்வங்கள் பொருந்தியிருப்பினும் அவ் இழிகுணத்தால் அவையாவும் அழிவுறும் ஆதலால் பொச்சாப்புடையார்க்கு நன்கு இல்லை என்றார்.

அச்சமும் பொச்சாப்பும் அரசர்க்கு அணுவும் கூடாதென்பது கருத்து.

அஞ்சாமையும் தூங்காமையுமே அவர்பால் என்றும் அமைந்திருக்கவேண்டும் என்க.

எவ்வளவு நலங்கள் தன்னை அடைந்திருப்பினும் மறவியுடையவன் அவற்றின் பயனை முழுவதும் அடையான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விரோசனன்பால் உணரப்படும்.

## கதை.

விரோசனன் என்பவன் இரணியாக்கனுடைய புதல்வன். இவன் அஞ்சாத நெஞ்சினன். நாரணியைப் பேர்த்துப் போய்த் தந்தை மரணமடைந்த பின்பு பசியுமறந்து ஆதவனை நோக்கி இவன் மாதவம் புரிந்தான். பகலோன் மகிழ்ந்து இவன்முன் தோன்றி விழுமியமணிகள் இழைத்த அழகிய மகுடமொன்றை இவனுக்கு அருளுடன் தந்தான். அதனைத் தலையில் தரித்துக்கொண்டால் உலகமுழுவதும் ஒருவனுக்கு உரிமையாகும். எவராலும் எவ்வகையாயுதங்களாலும் அவன் வெல்லப்படான். அஃதில்லாத பொழுது அத்தலையின் உச்சியை ஒருவன் பகைமையோடு தொட்டால் ஆயிரம் துகள்களாக அது பொடிபட்டழியும். அத்தகைய அற்புதமுடியை எப்பொழுதும் பொற்புறப் புனைந்துகொண்டு இவன் அரசைப் பொருந்தியிருந்தான். இவனுடைய மனைவி பெயர் வாசகி. அவள், அழகும் அறிவும் அமையப்பெற்றவள். அவளோடமர்ந்து பெரும் போகங்களை நுகர்ந்து பாதலிகம் என்னும் நகரிலிருந்து இவன் அரசுபுரிந்தான். முடியின் இயல்பால் முடிவில்லாத நலங்களைத் தான் அடைந்துள்ளமையை நினைந்து இவன் நெடுங்களிகொண்டான். அதன பின் கொடுங்கோல் செய்தான். இவன் செய்யும் அல்லலைப் பொறாது அமரர் சிலர் சென்று மாலிடம் சொல்லி மறுகினர். அம்முடியுடையானை அமர்புரிந்து வெல்ல முடியாது என்று அவர் முடிவு செய்துகொண்டு ஒருநாள் இவன் கதிரையணுகினர். அவ்வமயம் ஒரு பனிமலர்ச் சோலையில் இவன் தனியே உலாவினான். போகினி வடிவங்கொண்டு அவர் இவன் முன்னே தோன்றினர். இவன் கண்டான். பெருங் காதல் கொண்டான். அவளைத் தழுவவிழைந்து தயங்கி நின்றான். அம்மாயமங்கையும் இவன்பால் நேயமுடையவள் போல் கண் மலர் விழி சாய்ந்தாள். தைலம் பூசி நின் தலையிலொரு மாலை சூட்டிய

பின்னரே பின்னைத் தழுவல் என்றாள். மோகவலைப்பட்ட இவன் மோக இச்சையால் எனது அரிய முடியின் இயல்பை முழுதும் மறந்தான்; அதனை எடுத்துவிட்டு அவளுடன் தனியிடம் போய் நின்று தன் தலையைச் சாய்த்தான். அவள் தீண்டினாள். தலை துகள் பட்டவுடனே இவன் மாண்டான். தான் பெற்றிருந்த நன்மைகள் யாவும் தன் மறதியால் இவன் முற்றும் இழந்தான். அச்சமுடையார்க்கு அரண் இல்லை ஆங்கு பொச்சாப் புடையார்க்கு நன்கு இல்லை என்பதை உலகம் இவன்பால் அன்று நன்கு தெளிந்தது. விரிவை விரோசனீயத்தில் காண்க.

உற்றிடும் ஆற்றல் மூன்றும் உபாயங்கள் நான்கும் நன்மை
பற்றிய தொழில்கள் ஐந்தும் பண்புறு குணங்கள் ஆறும்
மற்றவை அனைத்துங் கேடாய் வளர்பிறப் பேழுங் காறும்
பற்றிடும் நன்மை யின்றும் பாழ்க்கப் பொச்சாப்புச் சாரின்.

(விநாயக புராணம்.)

மறதியுடையவன் ஒரு பயனையும் அடையான் என்பது இதனால் உணரப்பட்டது.

---

535 என்னைமுன் காவா திழுக்கிக் கயன்சூடன்
தொன்மையின் நொந்தார் குமரேசா—உன்னியே
முன்னுறக் காவா திழுக்கியான் தன்பிழை
பின்னூ றிரங்கி விடும். (ரு)

இ—ள்

குமரேசா! கயனும், சங்கசூடனும், முன் அறிந்து காவாமல் மறந்திருந்து பின் என் அதனை நினைந்து நொந்தார் எனின், முன்னுறக் காவாது இழுக்கியான் பின்ஊறு தன்பிழை இரங்கி விடும் என்க.

இழுக்கியான் இரங்கிவிடும் என இயைத்துக் காண்க.

இழுக்கியான் என்றது மறந்திருந்தவனை; உறுவதைப் பருவ மறிந்து செய்யாமல் தவறி நின்றவன் என்றபடி. இழுக்குதல் = தவறுதல், வழுவுதல். பின்ஊறு தன்பிழை = பின்பு ஊற்றில் தன் பிழைக்கு என்க. இதில் ஊறு என்றது துன்பம் உற்றகாலத்தைக் குறித்து நின்றது. இனி, தன்பிழை பின் ஊறு எனக்கொண்டு தன் சோர்வால் பின் உண்டான தீமையை எனினுமாம். ஊறு என்னும் சொல் இடையூறு, துன்பம், தீமை, பரிசம் முதலியவற்றை உணர்த்திவரும்.

மேல், மறதியுடையவன் ஒரு நலமும் அடையான் என்றார்; இதில், அல்லல் பலவும் அவன் அடைவான் என்றார்.

தனக்கு உறுந் தீமையை முன்னறிந்து தடுக்காமல் சோர்ந்திருந்தவன், பின் அது உற்றபொழுது ஒன்றும் செய்யலாற்றாது கலங்கி நின்று, முன் மறந்துவிட்ட தன் பிழையினை நினைந்து நினைந்து வருந்துவன் என்பார் "இழுக்கியான் பின் ஊறு தன் பிழை இரங்கிவிடும்" என்றார். விடும் என்றது துணிவை உணர்த்தி நின்றது. ஒருகாரியத்தை முதலில் செய்யாமல் மறந்து விட்டுப் பின் அதனை நினைந்து இரங்கல் கழிவிரக்கம் எனப்படும்; மறவியில்லார் இதனை இறையும் அறியார்.

தன்னால் காக்கப்படும் துன்பங்களை அவை வருதற்கு முன்னரே அறிந்து காவாமல் மறந்திருந்தவன், பின் வந்துற்ற காலத்தில் தன் பிழையினை நினைந்து வருந்துவன் என்பதாம்.

மறதியானது தன்னையுடையானை வருந்த வருந்தவைத்துப் பின் இருந்து அழச்செய்புமாதலால் அதனை அரசன் ஒருபோதும் மருவலாகாது என்பது கருத்து.

முன் அறிந்து காவாமல் மறந்திருந்தவர் பின் வருந்தி மெலிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கயன், சங்கசூடன் என்னும் இவ் இருவர் பாலும் உணரப்படும்.

## கதை

கயன் என்பவன் சுதமன் என்னும் ஓர் அசுரவீரனுடைய புதல்வன். அறிவிலும் ஆற்றலிலும் இவன் மிகச்சிறந்தவன். பன்னெடுங்காலம் இறைவனை நோக்கி அருந்தவம்புரிந்து பெருந்திருவடைந்தவன். நெறிதிறம்பாமல் இவன் முறைபுரிந்தும் இவனுக்கு வழிபடவேண்டியிருக்கின்றதே என்று அமரர் சிலர் இவன்பால் பொறாமைகொண்டார். அயனிடம்சென்று இவனை வஞ்சித்துவரும்படி வேண்டினர். இவனது உடல் நலத்தால் உலகிற்குப் பெருநலம்விளையும் என்று கருதி அவரும் உருமாறிவந்து ஒன்று தருதல் வேண்டும் என்று இவனிடம் முறைசெய்து நின்றார். பகைவர் செய்த சூழ்ச்சி என்பதை அறியாமல் விரும்பியதைத் தருகின்றேன் என இவன் உறுதி கூறினன். அவர் உடனே இவன் உடம்பையே வேண்டினார். இவன் யாதும் மறுக்காமல் இசைந்து நின்றான். இவன் தவ உடம்பிலிருந்த நடு எலும்பை நீக்கிச் சிலையுருவாய் நின்ற தருமதேவதையைச் சேர்த்தார். பிதிரர்களை எண்ணிப் பிண்டம் இடுங்கால் அதனையே சிலையாகக் கருதி இதுபொழுது கொண்டாடுகின்றனர். இவன் பெயரால் கங்கையின பிறவில் ஒரு தீர்த்தமுள்ளது. அது கயாதீர்த்தம் எனப்படும். அமரர் ஏவலால் அயன் வந்து வஞ்சித்ததை இவன் பின்னர் அறிந்தான். முன்னர் மறந்திருந்தமையை நினைந்து பின் இவன் இரங்கி மெலிந்தான். விரிவை ஆக்கினேய புராணத்தில் காண்க.

## கதை 2

சங்கசூடன் என்வன் ஓர் அசுர மன்னன். சுதாமன் என்பவனுடைய புதல்வன். இவனுடைய மனைவி பெயர் துலசினி. இவன் சிறந்த வரபலங்களையுடையவன். தெய்வத்தன்மை வாய்ந்த மணிமாலை ஒன்றை இவன் எய்தியிருந்தான். அதனைக் கழுத்திலணிந்துகொண்டால் எவரும் இவனை வெல்ல முடியாது. அம்மணிமாலையை எவ்வகையாயினும் இவனை விட்டு நீக்கிவிட வேண்டுமென்று அமரர்கோன் திருமாலை வேண்டினன். இவன் மனமுவந்து கொடுத்தாலொழிய எவரும் அதனை வலிதில் எடுத்துக்

கொள்ள இயலாது. மாயவன் ஒரு தூயமுனிவன்போல் வந்து இவன் முன் நேயமுடன் நின்று பலவஞ்சம் புரிந்து அதனை வாங்கி மறைந்தார். அதன்பின் அமரர் வந்து இவனை அமர் செய்ய வளைந்தார். பகைவரை வெல்ல வகையறியாது இவன் பரிந்து நின்றான். தான் முன் மதி மறந்து இழந்த தன்மாலையை நினைந்தான். தன் பிழைக்கு இரங்கி மெலிந்தான். இறுதியில் இறந்து தொலைந்தான். முன்னுறக் காவா இழுக்கியான் தன்பிழை பின் ஊறு இரங்கிவிடும் என்பதற்கு இவனும் இணங்கி யிருந்தான். விரிவைப் பிரமகைவர்த்தத்தில் காண்க.

மறவியுடையவன் பின் வருந்தி மெலிவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

536 ஏதும் இழுக்காமல் எண்ணியேன் கேகயன்முன்
கோதின்றி நின்றான் குமரேசா—தீதில்
இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில். (சு)

இ—ள்.

குமரேசா! கேகயன் ஏன் தனது மனைவி மாட்டும் மறவியிலனாய் மதிபுற்றிருந்தான் எனின், இழுக்காமை யார் மாட்டும் என்றும வழுக்காமை வாயின் அது ஒப்பது இல் என்க.

இழுக்காமை = மறவாமை: இழுக்குதல் என்பதன் எதிர்மறைத் தொழிற் பெயர்.

வழுக்காமை வாயின் = தவறுமல் வாய்க்கப்பெறின். வாய்த்தலின் அருமை வாயின் என்றதனால் அறிய நின்றது.

அது என்றது வழுவாத மறவாமையை.

பகைவர் உறவினர் முதலிய எல்லாரிடத்தும் என்பார் யார் மாட்டும் என்றார்.

இனிய நிலை, எளிய நிலை, இன்னாநிலை முதலிய எந்நிலையினும் மறவியை ஒருவன் மருவாமல் இருப்பின், அவன் பெருநன்மையை மருவுவான் என்பார் "இழுக்காமை என்றும் வழுக்காமை வாயின் அது ஒப்பது இல்" என்றார்.

மேல், மறந்திருந்தவன் பின் இரங்கி வருந்துவன் என்றார்; இதில், மறவாதிருந்தவன் என்றும் நலமுடையனாய் நின்று நிலவுவன் என்றார்.

மறவாமை என்னும் உயர்குணம் யாவரிடத்தும், எக்காலத்தும் தவறுதலின்றி ஒருவனுக்கு வாய்க்குமாயின் அதனை ஒத்த நன்மை அவனுக்கு வேறு இல்லை என்பதாம்.

எல்லா நன்மைகளையும் ஒருங்கே தொலைத்தற்கு ஏதுவாகிய மறத்தலை ஒருவன் அறவே தொலைத்துவிடின் அதுவே அவனுக்குப் பெரு நன்மையாம் என்பது கருத்து.

அறிவு ஊக்கம் ஆண்மை அஞ்சாமை முதலிய எவற்றினும் உயர்வாகக்கருதி மறவாமையை அரசன் என்றும் மருவியிருக்க வேண்டும் என்பது குறிப்பு.

மறவியில்லாதவனுக்கு உயர்நலமுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கேகயன்பால் உணரப்படும்.

## கதை

கேகயன் என்பவன் கேகயம் என்னும் தேசத்தை ஆண்ட மன்னன். இவனுக்கு அசுவபதி என்றுபெயர். இவன் மிக்கநுண்ணறிவுடையவன் கலைகள் பலவும் வழுவறக் கற்றவன் பறவை முதலிய எவ்வகை உயிர் வருக்கங்களும் தம்முள் உரைத்துக்கொள்வதை இவன் உணர்ந்து கொண்டவன். எதையும் முன்னறிந்து காக்கும் நுண்மையோடு திண்மையுமுடையவன். இவன் பெயர் யுதாசித்து. தனது இனிய புதல்வியாகிய கைகேசியைத் தசரதன் விரும்பிவந்து தனக்கு மணஞ்செய்து தரும்படி கேட்டபொழுது அவன் அரச பதவியை அவள் வயிற்றில் தோன்றும் குமாரனுக்கே உரிமையாகும்படி மறவாமல் நின்று முன்னதாகவே இவன்

வரைவு செய்துகொண்டவன். அந்தப்புரத்தில் தனது அழகிய மனைவியோடு ஒருநாள் இவன் அமர்ந்திருக்கும்பொழுது எறும்பொழுங்கு ஒன்று அங்கு நிகழ்ந்திருந்தது. அதனிடையே இவன் காலைவைத்தான். உடனே அவை வெருண்டு நின்று ஒன்றோடொன்று வெருண்டுரையாடின. அதனை இவன் உணர்ந்து சிரித்தான். சிரித்ததைத் தனக்கு உணர்த்துமாறு மனைவி அணைத்து உரைத்தாள். அவ் அரிய மறைவினைப் பிறர்க்குரைத்தால் அழிவாம் என்பதை இவன் மறவாதிருந்தான்; ஆதலால் அவ்வுண்மையை உணர்த்தின் தன்னுயிர்க்கு அழிவுவந்துவிடும் என்று அவளிடம் இவன் தண்மையோடு சொன்னான். நீ அழிந்துவிட நேரினும் யான்அதை அறிந்துவிடவேண்டுமென்று அவள் மொழிந்து நின்றாள். சொல்லியவுடனே யான் துள்ளிமடிவேன் ஆதலால் சுடுகாட்டில் கட்டைகளை அடுக்கிவைத்தால் அதன் மேல் இருந்துகொண்டபின் அந்த இரகசியத்தை இயம்புகின்றேன் என்றான். அதற்கும் அவள் இசைந்தாள். அவளுடைய அருமைப் புதல்வியாகிய கைகேசியையும் இங்கு எண்ணிக்கொள்ளவேண்டும். இசைவின்படி இருவரும் இரவில் வெளியேசென்றார். செல்லுங்கால் அங்கோர் பாழ்ங்கிணற்றில் வார்ந்து தொங்கும் புல்லைக்கறித்துக்கொண்டுவந்து தனக்குத் தரும்படி பெண் எலி ஒன்று தன்னை அணைந்துநின்ற ஆண் எலியைக்கேட்டது. உனக்காக உள்ளேவிழுந்து யான் உயிர்துறக்கவா? என்று அஃது உரைத்துப்போயது. அதனை இவன் கேட்டான். மனைவியின் கொடுமையை நினைந்து தன் மடமைக்கு இரங்கினான். அவளை வெறுத்தகற்றி அன்றுமுதல் இவன் தனித்திருந்தான். மனைவிமாட்டும், மயலுறுநிலையிலும், தனது நிலையினை மறவாதிருந்ததால் பின்பு இவன் உயர்நலமுற்றான். இழுக்காமை யார் மாட்டும் என்றும் வழுக்காமை வாயின் அது ஒப்பது இல்லை என்பதை இவன் எய்தி உணர்த்தினான்.

மறவியின்மையே ஒருவனுக்குப் பெரிய நன்மையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

537 அன்றரிய தெனுமல் ஆர்வமுடன் சேகரனேன்
குன்றுமற் செய்தான் குமரேசா—ஒன்றும்
அரியவென் றுகாத வில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின். (எ)

இ—ள்.

குமரேசா! அரியன என்று தளராமல் தான் கருதிய தை என் இராச சேகரன் மறவாமல் செய்தானெனின், பொச்சா வாக் கருவியால் போற்றிச்செயின், அரிய என்று ஆகாத இல்லை என்க.

செயின் இல்லை எனச் சேர்த்துக்காண்க. செயின் என்றது அருமை தோன்ற நின்றது.

பொச்சாவாக் கருவி என்றது மறவியில்லாத மனத்தை. நினைப்பிற்கும் மறப்பிற்கும் நிலைக்களனுகி எல்லாக்காரியங்களையும் இனிதுமுடித்தற்கு எதுவாய் நிற்குமாதலால் அவ்வுரிமை தோன்ற மனம் கருவியென நின்றது.

மறவாத மனமுடையனுயினும் எடுத்தகாரியத்தை முடித்த ற்கு எற்ற உபாயங்களை எண்ணிச்செய்யாவிடின் அஃது இனிது முடியாது ஆதலால் போற்றி என்றார்.

இடையறாத நினைவும், தடையுறாத சூழ்ச்சியும், அரசன் உடையனுயின் எல்லா நலங்களுமதாமேவந்து அவனை அடையும் என்பார் "அரிய என்று ஆகாத இல்லை" என்றார்.

மேல், மறவாமை என்னும் உயர்குணமே ஒருவனுக்குப் பெருநன்மையாம் என்றார்; அதனையுடையவனுக்கு முடியாதகாரியங்கள் ஒன்றும் இல்லை என்று இதில் உணர்த்தியருளினார்.

மறவாத மனத்தால் ஒருவன் கருதிச்செய்வானுயின் அரியன என்று சொல்லப்பட்டு அவனுக்கு முடியாத காரியங்கள் யாதும் இல்லை என்பதாம்.

மறவியில்லாதவனுக்கு எல்லாக்காரியங்களும் எளிதில் முடியும் என்பது கருத்து.

செயற்கரிய காரியங்களையும் மறவியில்லாதவர் வழுவறச்செய்து முடிப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராசசேகர பாண்டியன்பால் உணரப்படும்.

## கதை

இராசசேகர பாண்டியன் என்பவன் மதுரையிலிருந்து அரசுபுரிந்த விக்கிரமபாண்டியனுடைய புதல்வன். இவனது காலம் ஆயிரத்தெண்ணூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னராகும். பதுமரேகை என்னும் தனது அருமை மனைவியோடு இனிதமர்ந்திருந்து இவன் உலகம் புரந்தான். இவன் பேரறிவாளன். கலைகள் பலவும் நிலைகண்டுணர்ந்தவன். மறவி என்பது சிறிதும் இல்லாதவன். அக்கரம், கணிதம், இலிகிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிநூல், சோதிடநூல், தருமநூல் யோகநூல், மந்திரநூல், சகுனநூல், சிற்பநூல், வைத்தியநூல், உருவநூல், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரபாடனம், நாடகம், நிருத்தம், சத்தம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், இரதசோதனை, கசசோதனை, அசுவசோதனை, அத்திரவிலாசம், இரத்தினசோதனை, கனகசோதனை, பூமிசோதனை, சங்கிராமம், மல்லயுத்தம், வில்வேதம், ஆகருடணம், உச்சாடனம், மோகனம், வசீகரம், மதனசித்தம், இரசவாதம், காந்தருவம், பைபீலம், கவுத்துவம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, அதிரிசயம், ஆகாயகமனம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கன்னத்தம்பம், கசகருணம், பரகாயப்பிரவேசம், இந்திரசாலம், மகேந்திரசாலம், நயனவேகம், கட்கத்தம்பம், வித்துவேடணம், என்னும் அறுபத்துநான்கு கலைஞானங்களுள் நிருத்தம் ஒன்று நீங்க மற்றெல்லாவற்றையும் இவன் திருத்தமுறக்கற்றான். உலகம் உய்ய இறைவன்செய்யும் நிருத்தத்தைத் தானும் செய்யலாகாதென்னும் கருத்தால்மட்டும் அதனை இவன் நிறுத்திவைத்தான். இங்ஙனம் இவன விளங்கிவருங்கால் சோழமண்டலத்திலிருந்துவந்த புலவனொருவன் தன் மன்னனாகிய கரிகாலசோழன் பரதத்தில்மிக வல்லுநன் என்றும், அஃது இவனுக்குத் தெரியாதுஎன்றும், இகழ்வோடு இயம்பி யகன்றான். அதனை நினைந்து இவன் மிகவும் நாணினன். பின்பு அதனைக் கற்கமுயன்றான். பருவம் மிகமுதிர்

ந்துவிட்டபடியால் பாதத்தை இனி அறிந்துகொள்ள முடியாது என்று அனைவரும் நயந்துமொழிந்தார். முயன்றால் முடியாதது ஒன்று உண்டா? என்று மறவா மனத்தோடு அதனை இவன் முனைந்து பயின்றான். விரைவில் முடிவுகண்டான். பாதத்தில் இப் பாரில் எவரும் தனக்கு ஒப்பாரில்லை என்று இவன் உயர்ந்து விள ங்கினான். முடியாத ஒன்றை முதிர்ந்த பருவத்தில் முடித்துக்கொ ண்ட இவன் ஒருநாள் கோவிலுட்புகுந்தான். அங்குத் திருநடங்கொ ண்டுநிற்கும் இறைவனைக் கண்டான். பாதத்தில் தான் பட்ட பாட் டை நினைந்தான். என்று! ஊன்றியதாளோ இதனை எடுத்தாட வில்லையே என்று இவன் இரக்கமீக்கொண்டான். மாறியாடும்படி இறைவனை வேண்டி மாறுமனத்தோடு இவன் மறுகிநின்றான். இவ னது சோர்வின்மையையும் சூழ்ந்துசெய்யும் அணிமையையும் விய ந்து இறைவன் கால்மாறி ஆடினார். அன்று முதல் இடத்தாள் ஊன்றி வலத்தாள் எந்திநிற்கும் திருக்கோலத்தோடு நடேசமூ ர்த்தி இன்றும்மதுரையில் நின்றுவிளங்குகின்றார். யாவராலும் செ ய்யமுடியாத அரிய காரியங்களையும் இவன் ஆற்றிமுடித்தான் என் றுஅமரரும் இவனைப் போற்றிப்புகழ்ந்தார். பொச்சாவாக்கருவி யால் போற்றிச்செயின் அரிய என்று ஆகாத இல்லை என்பதை உலகம் தெரிய இவன் உணர்த்தி நின்றான். விரிவைத் திருவிளை யாடலில் காண்க.

வான்மாறினும்மொழி மாறாத மாறன் மனங்களிக்கக்
கான்மாறி யாடிய கற்பகமேநின் கருணை யென்பால்
தான்மாறினும் விட்டு நான்மாறிடேன் பெற்றதாய்க்கு முலைப்
பான்மாறினும் பிள்ளைதான்மாறுமோ அதிற்பல்லிடுமே.

பாண்டியனது மறவாத மாண்பும், இறவாத அன்பும், அரி யன என்று பிறர்கருத நின்றவற்றை எளிதில் முடித்த திண்மை யும், இறைபுரிந்த தன்மையும், பிறவும் இதனால் இனிதுபுலனும்.

மறவாத மனமுடையவர்க்கு முடியாதகாரியம் யாதும் இல் லையென்பது இதனால் கூறப்பட்டது.

538 வில்விசையன் போர்வெறுத்து மீளலுற்றான் கண்ணனேன்
கொல்லென்று சொன்னான் குமரேசா—நல்லோர்
புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையும் இல். (அ)

இ—ள்.

குமரேசா! இசையாது இகழ்ந்து மீண்ட விசையனை மீண்டும் போய்ப் போரைச்செய்யும்படி ஏன் கண்ணன் செய்தான் எனின், செய்யாது இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்லை ஆகலான் புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் என்க.

புகழ்ந்தவை = நூலோர் புகழ்ந்து சொல்லிய செயல்கள்: அஃதாவது உறுபகை கடிதலும், உலகம் காத்தலும் முதலாக அரசர்க்கு விதித்துள்ள முறைகளை. புகழ்ந்த என்னும் வினைமாண் பால் நூலோர் என்பது வருவிக்கப்பட்டது. அதிகாரம் நோக்கி இங்ஙனம் கூறினும் அந்தணர் முதலிய ஏனையோர் செயல்வேண்டும் கடமைகளையும் ஈண்டு இயைத்துக்காண்க.

எழுமையும் இல் = ஏழு பிறப்பினுள்ளும் நன்மை இல்லை. ஏழின் தன்மையை உணர்த்தாமல் பிறப்பைக்குறித்ததால் எழுமை இங்கு ஆகுபெயரென்க. ஏழு பிறப்புவரையும் வினைப்பயன் தொடரும் என்று விளக்கப்பட்டிருத்தலால் உம்மை முற்றும்மையாம். இல் என்னும் பயனிலைக்கு ஏற்ற எழுவாய் இதில் வருவிக்கப்பட்டது.

மறவா மனத்தோடு செய்யும் அறிவுடையானுக்கு அரியகாரியங்களெல்லாம் எளிதில் முடியும் என்று மேல் அருளினார்; தனக்கு உரியதைச் செய்யாமல் மறதியுற்றிருப்பவன் எழுமையினும் துன்பமுறுவன் என்று இதில் உணர்த்தினார்.

தமக்கு உரியன என்று உயர்ந்தோர் விதந்துசொல்லிய செயல்களை அரசர் மறந்துவிடாமல் உறுதியாய்ச் செய்யவேண்டும்; அங்ஙனம் செய்யாது மறந்தவர்க்கு எழுபிறப்பினும் நன்மை இல்லை என்பதாம்.

வேறு கருமங்களைச்செய்து தனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை என்று செல்வச்செருக்கால் தன்னை மறந்திருப்பவனை நோக்கி இது சாற்றியதாகக் காண்க. எழுமையும் இல் என்று அச்சுறுத்தியது தன்கருமங்களில் இச்சையோடு அவனுக்கு எழுச்சி தோன்ற என்க.

இம்மையில் தன் கடமைகளைச் செய்யமறந்தவனுக்கு எழுமையினும் துன்பமுண்டாம் என்பது கருத்து.

தனது கடமைகளை மறவாமல் செய்தவனே அறமும் புகழும் அடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விசையன்பால் உணரப்படும்.

## கதை

பாண்டவர்கட்கும் துரியோதனாதியர்க்கும் போர்மூண்டபொழுது முதலில் விசையன் வில்லோடு முனைந்து சென்றான். அங்கு நிறைந்துநின்ற கிளைஞர்களைக்கண்டான். வீடுமர், துரோணர், கிருபர், முதலிய பெரியோர்களையும் நோக்கினான். பொருது வெல்ல வேண்டுமென்று கருதியிருந்த தனது உரிமையை மறந்தான். தனக்குச் சாரதியாய்நின்ற கண்ணனைத்தொழுது தன் தேரைத்திருப்பும்படி வேண்டினான். அவர் புன்னகைசெய்து என்னை? என்றார். இவன் போர்செய்யேன் என்றான். அவர் ஏன்? என்றார். சின்னாளில் அழிந்துபோகும் சிறிய அரசசெல்வத்தை விரும்பி இப்பெரிய கொலைப்பாவத்தை ஐயா, யான் செய்யேன் என்றான். "அரசர்க்குரிய உனது சாதி தருமத்தை அறவே மறந்து என் அறிவிழந்து இப்படி அமர்முகத்தில் பேசுகின்றாய்; பகைவரை அடுதலும் உலகினை அடைதலும் அரசர்க்கு உரிமையாம்; அதனை நீ மறந்தாய்: இதனால் உனக்குப் பெரும்பழி உண்டாம்; அறநுணுக்கங்களையறிந்து தனது கடமையைச்செய்யாத மடையன் என்று உன்னை வையம் வையும்: உன் வழிமுறைக்கும் இஃதோர் இழிவேயாகும்; இதனை இப்பொழுது நீ செய்யாவிடின் எப்பொழுதும் வசையாம்; இம்மை மறுமை முதலிய எம்மையிலும் உனக்கு நன்மையில்லையாம்; ஆதலால் நான் சொல்வதைக் கடைப்பிடித்து உனது உரிமையை மறவாமல் உடனே

செப்;" என்று திருமால் தெளிவுறுத்தினார். அதன் பின் தேர் விசையன் தேர்ந்து போர்முனைந்து செய்தான். அதனால் புகழும் இன்பமும் பொருந்தப்பெற்றான். செய்யாது இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்லை; ஆகலான் புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும் என்பதை இவன் செய்துகாட்டினான். விரிவைப் பகவற்கீதையில் காண்க.

ஆவ தான அமர்தொடாங் காயெனிற்
போவ தான புகழும் தருமமும்
பாவ மாம்பழி யாமிப் பழியினிற்
சாவதானது வேதலை யல்லவோ. (1)

அன்றியும்உனை அஞ்சினர் என்பரால்
நின்றியைந்து நிலத்துமுன் நீ செய்த
வென்றி யும்பழி யாய்நிற்கும் மேவலர்
ஒன்றி யம்பிலின் றுங்கிதன் மேலுண்டோ. (2)

இன்றுவாளமர் தன்னில் எதிர்ந்து நீ
பொன்றில் வானவர் போற்ற விண் காக்குவை
வென்றி சேறிவ் வேந்தரெலாந்தொழ
நின்று ஞாலம் அளிக்குவை நீயரோ. (3)

துற்ற இன்பமும் துன்பமும் தோல்வியும்
வெற்றியும்மிழ வும்மிகு பேறுமென்
றுற்ற இன்னவைக் கொத்த மனத்தனுப்க்
கொற்றவா சமர் செய்குற்றம் இல்லையால். (கீதை) (4)

புகழ்ந்தவை போற்றிச்செய்யாமல் விசையன் இகழ்ந்து நின்றபொழுது திருமால் இவ்வாறு இயம்பியருளினார். தாம் செய்தற்குரியதை ஒவ்வொருவரும் மறவாமல் செய்யவேண்டும் என்பதும், மேற்குறித்த சரித உண்மையும், இவற்றால் இனிது தெளிவாதல் காண்க.

தமது உரிமையை மறவாமல் செய்வோரே பெருநலமுறுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

539 உள்ளி இரணியன்முன் உய்ந்தகன்றான் பின்புதான்பம்
கொள்ளவில்லை என்னே குமரேசா—தள்ளி
இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. (௯)

இ—ள்

குமரேசா! முன்பு இகழ்ந்து இழிந்தவர்களை என் இரணியன் எண்ணி அகன்றான் எனின், தம் மகிழ்ச்சியின் தாம் மைந்து உறும்போழ்து, இகழ்ச்சியில் கெட்டாரை உள்ளுக என்க.

தாம் என்றது மகிழ்ச்சியில் மைந்துறுவாரை. மைந்து = மயக்கம், வலி.

மகிழ்ச்சியில் மைந்து உறும் போழ்து = மகிழ்ச்சிக்கண்ணே வலியுறும் பொழுது. இல்—ஏழனுருபு. இகழ்ச்சி என்னும் சொல் நிந்தையையும் மறதியையும் உணர்த்திவரும்.

தமது அழகு செல்வம் அதிகாரம் முதலியவற்றை நினைந்து செருக்கி நெடுங்களிகொண்டு அதனால் முறைசெயலை மறந்து கெட்டவர் பலர் என்பது தோன்ற பன்மையால் சுட்டினார். உற்ற போழ்து நிலைபெற உள்ளமுடியாததலால் உறும் போழ்து என்று நிகழ்விற் கூறினார். மகிழ்ச்சியில் தாழ்ந்து மதிமயங்கு முன்னரே அதனால் வரும் கேட்டை நினைந்து உய்யவேண்டும் என்பதாம்.

மேல், தன் கருமத்தைச் செய்யாது இகழ்ந்து விடலாகாது என்றார்; இதில், அங்ஙனம் இகழ்ந்ததனால் கெட்டவரை எண்ணியேனும் தெளிக என்றார்.

தம் உவகைக்களிப்பில் தாம் வலி மிகும்பொழுது அதனால் முன்சோர்ந்து கெட்டவர்களை அரசர் நினைந்துகொள்ள வேண்டும் என்பதாம்.

செல்வக்களிப்பால் தம் செயல் மறந்து கெட்டவர்களை ஒருவன் நினைந்தால், தனக்கும் அக்கேடு வந்துவிடுமே என்னும் அறிவு தோன்றும்; அது தோன்ற வீண் மகிழ்ச்சி நீங்கும்; அது நீங்க அமைதி ஓங்கும்; அதனால் நிலைகுலையாமல் நின்று தன் கடமையைப் பருவத்தோடுசெய்து அவன் உயர்நலமடைவான்; ஆதலால் மைந்துறும் போழ்து "இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக" என்றார்.

சூரபன்மன், இரணியன், இராவணன், துரியோதனன், சிசுபாலன், நகுடன், மது, கைடவன், வலன் முதலாயினோர் ஈண்டு உள்ளுதற்கு உரியராவர்.

மறவியால் வரும் தீமையை அறவே ஒழித்தற்கு உரிய உபாயத்தை இதில் உய்த்துணர்ந்து கொள்க.

இகழ்ச்சி யிற்கெடு வார்களை எண்ணுக
மகிழ்ச்சி யின்பத்தின் மைந்துறும் போழ்தெனப்
புகழ்ச்சி நூலுட் புகன்றனர் பூவினுள்
திகழ்ச்சி சென்றசெம் பொன்முடி மன்னனே. என்று

அடிகள் திருமொழிகளை அணைத்தெடுத்துத் தோலாமொழித்தேவர் தமது நூலாகிய சூளாமணியில் சூட்டியுள்ளமைகாண்க.

மறவியின் தீமையை உணர்ந்தவர் அதனை ஒருபோதும் மருவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இரணியன்பால் உணரப்படும்.

**கதை**

இரணியன் என்பவன் சூரபன்மனுடைய இளைய புதல்வன். பானுகோபனுக்கும் அக்கினி முகனுக்கும் தம்பியாவன். இவன் சிவந்த நிறத்தினன். சிறந்த குணத்தினன்.

ஆயிர மறையுணர்ந் தான்ற கேள்வியான்
தூயநல் அறத்தொடு முறையுந் தூக்கினோன்
மாயமும் வஞ்சமும் மாபிற் கற்றனன்
தீயதோர் அவுணருட் டிறலும் பெற்றுள்ளான்.

என்று, புலவரும் போற்ற இவன் புகழ்பெற்றிருந்தான். தனது அரிய நலங்களை நினைந்து முதலில் இவன் கழிபேருவகை கொண்டான். தன் சிறிய தந்தையாகிய தாருகன் செருக்கியழிந்ததை யறிந்தபின் தெளிந்த மதியுடையனாய் மறுமையின் பத்தையே இவன் சிந்தை செய்திருந்தான். அருமை யறியாமல் ஆறுமுகப்பரமனோடு அமர்குறித் தெழுந்தபொழுது தன் தந்தைக்கு அறவுரைகள் பல இவன் அருளுடன் கூறினான்.

அறுமுகத் தொருவ னாகும் அமலனை அரன்பால்வந்த
சிறுவனென் றிகழல் மன்னா செய்கையால் பெரியன் கண்டாய்
இறுதிசேர் கற்பமொன்றி னீறிலா தவன்பால் தோன்றும்
முறுவலின் அழலு மன்றோ உலகெலாம் முடிப்ப தம்மா. (1)

கடிமலர் மேலவன் இகழக் கண்ணுதல்
வடுகனை ஏவிவள் ளுகிரின் அன்னவன்
முடி களை வித்ததும் முகுந்தன் தன்னிடை
அடைதரு வித்ததும் அறிகிலாய் கொலோ. (2)

முன்தொரு பகபதி மொய்ம்பை அட்டது
ஃமந்தியல் அரக்கரை அழித்த செய்கையும்
தந்தியை உழுவையை உரித்த தன்மையும்
எந்தைதிற் குணர்த்தினர் இல்லை போலுமால். (3)

ஒன்னலர் தன்மைபூண் டுற்று ளோர்தமைத்
தன்னிக ரில்லவன் தண்டஞ் செய்தன
இன்னமோர் கோடியுண் டிருந்தி யானிவட்
பன்னினும் உலப்புறு செல்லும் பல்லுகம். (4)

என இகழ்ச்சியில் கெட்டாரை யெல்லாம் எடுத்துக் காட்டித் தந்தைக்கு இடித்துச்சொல்லினான். யாது கூறினும் தேறாதவனாய் இகழ்ந்துபோய் அவன் அழிந்ததை நினைந்து இவன் இரங்கியழுதான். பின்பு இவன் இகழாது தெளிந்தான். செருக்கைப் பெருக்குமென்று செல்வத்தை வெறுத்து விடுத்தான். அழிவுறும் மகிழ்ச்சியை இவன் அறவே ஒழித்தான். பின்னர் மறவிஇலனாகி மறுமை யின்பத்தையே இவன் கருதியிருந்தான். இகழ்ச்சியில் கெட்டாரை ஒருவன் உள்ளி உணரின் பின் அவன் மகிழ்ச்சியில் மைந்துறான் என்பதை இவன் மருவி உணர்த்தினான். விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

நெகிழ்ச்சியொன் றின்றிச் செய்ய நினைத்தகா ரியத்திற் சென்று
புகழ்ச்சிசெப் முயற்சி செய்யிற் பொருள்பய வாமை யில்லை
இகழ்ச்சியிற் கெட்டார் தம்மை எண்ணுதல் செய்வை யாயின்
மகிழ்ச்சியின் மைந்துறுத வண்மைவந் தடுக்கு மாதோ.
(விநாயக புராணம்.)

மறவியின் கொடுமையை நினைத்தால் மறவாமை உண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

540 உள்ளியவான் கங்கையையே உள்ளிப் பகீரதன்முன்
கொள்ளநின்றான் என்னே குமரேசா—தள்ளாமல்
உள்ளிய தெய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளிய துள்ளப் பெறின். (௰)

இ—ள்.

குமரேசா! தான் எய்த எண்ணிய கங்கையையே பகீரதன் ஏன் இடையறாமல் எண்ணி நின்றான் எனின், தான் உள்ளியது எய்தல் எளிது மன் மற்றும் உள்ளியதே உள்ளப்பெறின் என்க.

பெறின் என்றது அருமை தோன்ற நின்றது. பெறின் எளிது என்றதனால் பெறாக்கு எதுவும் அரிதாம் என்பது பெற்றாம்.

உள்ளியது என்றது தான் எய்தவேண்டுமென்று எண்ணிய பொருளை. உள்ளத்தின் செய்கையாதலால் உள்ளியது என நின்றது. இது வினையாலணையும் பெயர்.

அங்ஙனம் எய்துதல் அரிது என்பது தோன்ற நின்றமையால், மன் என்னும் இடைச்சொல் ஒழியிசைப் பொருளதாம். ஒழியிசையாவது எச்சமாகி ஒழிந்து நின்ற சொற்பொருளை உணர்த்தி நிற்பது.

கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.

என்றது தொல்காப்பியம். பின்னூலார் மன் என்பது அறுவகைப்பொருளிலும் வரும் என்றார். மன்னே அசைநிலை ஒழியிசை ஆக்கம், கழிவு மிகுதி நிலைபேறாகும். (நன்னூல்.)

மேல், மறவியால் கேடுவரும் என்றார்; அங்ஙனமாயின் மறவாமையால் வரும் பயன்யாது? என்பாரைநோக்கி இஃதருளியதென்க. உள்ளிய நலங்களெல்லாம் ஒருங்கே உளவாம் என்று பொச்சாவாமையால் வரும் பயனைக்கூறி அதன் பெருஞ் சிறப்பை உணர்த்தினர், மிக்க ஆர்வத்தோடு மக்கள் அதனை மேவுதல்கருதி.

தான் எய்த நினைத்தபொருளை அந் நினைத்தவாறே ஒருவனுக்கு எய்துதல் எளிதாம்; அதனையே மேலும் மேலும் அவன் நினைக்கக்கூடுமாயின் என்பதாம்.

தனக்கு எய்தவேண்டுமென்று எண்ணியபொருளை இடைவிடாமல் எண்ணி ஒருவன் அடைய முயல்வனாயின் யாதும் தடையுறாது அஃது எய்திவிடும் என்பார் "உள்ளியது உள்ளப்பெறின், உள்ளியது எய்தல் எளிது" என்றார். உள்ளிய வெல்லாம் உடனெய்தும் உள்ளத்தான் உள்ளான் வெகுளி எனின் எனமேலுருளியுள்ளதும் ஈண்டு உள்ளுதற்குரியது. மறவியையும், வெகுளியையும், ஒருவரிசையில் வைத்து அடிகள் கருதியுள்ளமை இவ்வதிகாரத்தின் முதலையுள்ளுங்காலும் இனிது உணரலாம்.

வறுமை பழி முதலிய சிறுமைகளெல்லாவற்றையும் மறவி விளைத்துவிடும் என்று தெளிந்து அதனை அறவே ஒழித்துவிட்டு உறுதியான நினைவோடு நின்று ஒருவன் முயலவேண்டும்; அங்ஙனம் முயல்வனாயின் எல்லா நலங்களையும் அவன் இன்புற எய்துவன் என்பதாம்.

மறப்பெனும் பகைவனை நினைப்பெனும் அறிவால் மாய்த்தவனுக்கே இவ் வையம் வாய்த்ததை உதவும் என்பது கருத்து.

மறவியில்லாதவனுக்குக் கருதியன வெல்லாம் கைகூடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பகீரதன்பால் உணரப்படும்.

## கதை

சூரியகுல மன்னனாகிய பகீரதன் தன் முன்னோராகிய சகரர்களை உய்விக்கும் பொருட்டுத் தெய்வ கங்கையை எய்தவிரும்பினான். அதனை எய்தும் உபாயங்களை அறிஞர் பலருடன் எண்ணி ஆராய்ந்தான். அதனையே நினைந்து நின்று முடிவில் அயனை நோக்கி அருந்தவம் செய்தான். பதினாயிரம் ஆண்டுகள் கழிந்தபின் இவன்முன் பிரமன் தோன்றிநின்று முக்கட்பரமனை எண்ணிமுயலின் முன்னியது முடியும் என்று மொழிந்து மறைந்தார். அதன் பின் பதினாயிர வருடங்களாக இடைவிடாமல் அப்பரம்பொருளையே நினைந்து இவன் அருந்தவம் புரிந்தான். அம்

மங்கை பங்கன் தோன்றினார். கங்கைவரில்யான்காத்துத் தருவல் என்று அருளி அகன்றார். அதன்பின் கங்கையை நினைந்து ஐயாயிரவருடம் கருதியிருந்தான். முழுகருளோடு அவள் தோன்றாமையால் மீண்டும் முப்பத்தையாயிரம் ஆண்டுகள் அவளையே நினைந்து அயராது நின்றான். இவ்வாறு அறுபதினாயிரம் ஆண்டுகள் கழிந்தன. இவனது உள்ளத் திண்மையையும், உள்ளியதையே உள்ளிநிற்கும் ஒள்ளிய திறத்தையும் கங்கை உவந்தெழுந்தாள். இவன் முன் அமைந்து தோன்றினாள். அவளை இனிதுற எய்து முன் இடையே பல அல்லல்கள் தோன்றின. அவ் எல்லாவற்றையும் தன் மறவாமாண்பால் அறவே நீக்கி அவளை இவன் உறவாகப்பெற்றான். அதனால் மரபோரை யெல்லாம் உயர்வாழ்வில் உய்த்தான். மறவியின்றி முயன்று கருதியதை அடைந்து உறுதியுடையோர்க்கெல்லாம் இவனே முதலுவமையாக நின்றான். சோர்வில்லாமல் ஒருவன் முயல்வனாயின் அவன் இயல்பை இன்றும் பகீரதத்தன்மை என்பர். உள்ளியது உள்ளப்பெறின், தான் உள்ளியதை எய்தல் ஒருவனுக்கு எளிதாம் என்பதை இவன் எய்தி உணர்த்தினான். விரிவை இராமாயணத்தில் காண்க.

மறதியில்லாதவர் கருதியவெல்லாம் அடைவார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

கொடிய கோபத்தினும் மறவி கொடியது. வறுமை அறிவினை அழிப்பதுபோல் மறவி ஒருவன் புகழினைக் கெடுத்துவிடும். மறவியுடையவன் ஒரு புகழையும் அடையான். எல்லாச் செல்வங்களையும் உடையனாயினும் அதனையுடையவன் இல்லாதவனேயாவான். முன் மறந்திருந்தவன் பின் இரங்கி வருந்துவான். மறவி இன்மையே ஒருவனுக்குப் பெரிய நன்மையாம். அரியகாரியங்களையும் அவன் எளிதில் முடிப்பான். தன் கருமத்தை மறவாமற் செய்தவனே இருமையினும் இன்பம் பெறுவான். மறந்து கெட்டவர்களை அறிந்து தெளிந்தேனும் தன் கடமையை ஒருவன் மறவாமல் செய்யவேண்டும். மறவியில்லாமல் ஒருவன் முயல்வானாயின் எண்ணிய பொருள்களெல்லாம் அவன் எளிதில் எய்துவான்.

ருச-வது பொச்சாவாமை முற்றிற்று.



---

# 55-ம் அதிகாரம் செங்கோன்மை.

அஃதாவது செங்கோலினது தன்மை. செங்கோல் என்றது அரச நீதியை. ஒருபக்கமும் கோணுமல் நேர்மையாயிருக்கும்கோல் செங்கோல் எனப்படும்; அதுபோல் என்றும் யார்மாட்டும் சிறிதும் கோடாமல் நின்று நெறிபுடைய அரசர் முறை செய்வாதலால் அது செங்கோல் என நின்றது. மறவியின்றி உள்ளியதையே உள்ளி உயர்ந்து நிற்கும் ஒள்ளிய வேந்தனுக்கே இம்முறைமை இயல்பாக உரிமையாகுமாதலால் அதன் பின் இது வைக்கப்பட்டது.

541 காதற் புதல்வரெனக் கண்ணோடா தேன்ககந்தன்
கோதறமுன் கொன்ருன் குமரேசா—தீதறவே
ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை. (க)

இ—ள்.

குமரேசா! தன் புதல்வர் எனவும் கண்ணோடாமல் ககந்தன் ஏன் அவரைத் தண்டித்தான் எனின் ஓர்ந்து யார்மாட்டும் கண்ணோடாது இறைபுரிந்து தேர்ந்து செய்வஃதே முறை என்க.

செய்வது என்பதில் ஆய்தம் விரிந்து நின்றது. இனி, செய்வு அஃது எனப்பிரித்து செய்தலாகிய அவ்வளவே எனினுமாம். ஏகாரம் பிரிநிலையோடு தெளிவும் தோன்ற நின்றது. ஓர்ந்து = ஆராய்ந்து. கண்ணோடாது = பரிவுறமல்: இது கண்ணோட்டம் என்பதன் அடியாகப்பிறந்த எதிர்மறைவினை யெச்சம். கண்ணோட்டமாவது ஒருவன் பிழைபுரியினும் உரிமைநோக்கி அவன்பால் உள்ளிரங்குதல். வடநூலார் இதனைத் தாட்சண்ணியம் என்பர். கண் ஓடியவழி நிகழ்வதாகலின் இது கண்ணோட்டம் என நின்றது.

இறை என்றது இறைக்குரிய கடமையை. இறை= அரசன். ஒக்கல் மக்கள் முதலிய தனது உரிமையாளரே யெனினும் பிழை செய்வரேல் சிறிதும் இரங்காமல் அதற்குத்தக்கவாறு அவரை

அரசன் தண்டித்தல் வேண்டும் என்பார் "யார்மாட்டும் கண் ணோடாது இறைபுரிந்து" என்றார்.

தன் குடிகள்செய்த குற்றத்தை ஆராய்ந்து, யாரிடத்தும் பாரபட்சமின்றி, நடுநிலையாக நின்று, அக்குற்றத்தின் இயல்பை உற்ற அமைச்சரோடு கலந்து தெளிந்து, அதற்குத்தக்கவாறாகத் தண்டஞ்செய்து, திருத்துவதே அரசனுக்கு முறையாகும் என் பதாம்.

அரச நீதியின் அரிய அமைவுகளை இதில் ஆய்ந்து காண்க. பிழைப்பினை ஓர்ந்தறிந்தாலும் கண்ணோட்டம் கொண்டால் இறை புரிய இயலாது; அதனால் முறைசிதையும்; ஆதலால் தான் முறை செய்யுங்கால் அரசன் அதனை அறவே ஒழிக்கவேண்டும் என்பார் "கண்ணோடாது" என்றார்.

கண்ணோட்டம் என்னுங் கழிபெருங் காரிகை
உண்மையான் உண்டிவ் வுலகு. எனவும்
கண்ணோட்டத் துள்ள துலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை. எனவும் போற்றிக்

கண்ணோட்டம் இன்றியமையாமல் அரசர்க்கு இருக்கவேண்டு மென்று அருளியிருப்பவும், ஈண்டுக் கண்ணோடாதே என்றது என்னை எனின், குற்றம் செய்தார்மேல் கண்ணோட்டம்கொண்டு அவரைத் தண்டியாதுவிடின் நீதியில்லாதவன் என்று அரசன் பழிக்கப்படுவனாதலால், தன் கருமம் சிதையாமல் கண்ணோடலா மேயன்றி அது சிதையவருங்கால் அரசன் அதனைக் கோடலாகா தென்க.

சினனே காமம் கழிகண் ணோட்டம்
அச்சம் பொய்ச்சொல் அன்புமிக வுடைமை
தெறல்கடு மையொடு பிறவுமிவ் வுலகத்து
அறந்தரு திகிரிக்கு வழியடை யாகும் தீது; என்று
பாலைக் கௌதமனார் பாடியுள்ளதும் காண்க.

தீயோரைத்தேர்ந்து தண்டித்து நல்லோரை ஓர்ந்து காத்த லே செங்கோன்மையாம் என்பது கருத்து.

தன் குடைக்கீழ்வாழ்வோர் என்றும் எவராலும் சிறிதும் இடருறாவண்ணம் அரசுசெய்தலே செங்கோல் மன்னர்க்குச் சிறந்த தன்மையாம் என்பது குறிப்பு.

தான்பெற்ற மகனேயாயினும் குற்றம் செய்வனுயின் அவன் மேல் கண்ணோடாமல் நின்று அறிவுடை அரசர் முறை செய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ககந்தன்பால் உணரப்படும்.

## கதை

ககந்தன் என்பவன் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து அரசுபுரிந்தவன். காந்தமன் என்னும் சோழ மன்னனுடைய காமக்கிழத்தியின் புதல்வன். அவ் அரசன் பரசுராமனுக்கு அஞ்சி யகலுங்கால் இவனுக்கு முடிசூட்டி யகன்றான். இவன் காத்ததால் அப் பட்டினம் காகந்தி என இவன் பெயரால் பின் பெயர் பெற்றது. இவன் சிறந்த வீரமும், நிறைந்த நீதியும், திருந்திய பண்பும், பொருந்தப்பெற்றவன். நல்ல உழவன் பயிர்களைக் காப்பது போல் இவன் உயிர்களைக் காத்தான். இவன் குடைகிழலிருந்த குடிகள் மிகமகிழ்வு கொண்டன. இவனது ஆட்சித்திறத்தை அறிந்து பரசுராமரும் வியந்தார். தன் புகழ் எங்கும் செல்ல இவன் செங்கோல் செலுத்திவந்தான். வருங்கால் ஒருநாள் மருதி என்னும் ஓர் அழகிய பார்ப்பனியைத் தன் புதல்வரிருவருள் முதல்வன் விரும்பினான். அவன் பெயர் காமந்தன் என்பர். அம் மறையவள் நிறையுடையளாதலால் அவனது இழிநினைவுக்கு இசையாதவளாய் இரங்கிச்சென்றாள். அதனை இவன் ஓர்ந்தான். அருந்திற லரசர் முறைசெயின் அல்லது, பெரும் பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச்சிறவாது; என்பதை இவன் கருதினவனாதலால் தன் மகன் எனவும் கண்ணோடாது அவனை இவன் வாளால் மாய்த்தான். இவனது மாயாத நீதியை வானவரும் வாயாரவாழ்த்தினர். திங்கள் சில சென்றன. பின்னொருநாள் கனகனெனப்பெயரிய இவனுடைய இளையமகனும் விசாகை என்னும் ஓர் வணிக மகளை வீதியிற்கண்டு விருப்பங்கொண்டு தன் தலையில் சூடியிருந்த மாலையை அவள் கழுத்தில் அணிந்து அவளைக் கைக்கொள்ளக் கருதித் தன்கையை உயர்த்தினன். அவள் கற்பின் மாண்பால்

அக் கரம் அக்கரம்போல் அசையாது நின்றது. இவன் அறிந்து போய் அவனையும் வாளால் எறிந்து வீழ்த்தினான். மன்னவர் தன்மை இன்னதென உணர்தற்குப் பின்னவரெவர்க்கும் இவன் முன்னவனாய் நின்றான். உயிரினும் சிறந்த தன் மக்கள் மாட்டும் ஓரம் கொள்ளாமல் ஒறுத்து முறைசெய்த இவனது செம்மையை அனைவரும் சேர்ந்து புகழ்ந்தார். ஓர்ந்து யார்மாட்டும் கண்ணோடாது இறைபுரிந்து தேர்ந்து செய்வஃதே முறை என்னும் முறைமையை உலகம் இவன்பால் உணர்ந்தது. விரிவைப் புகார் மான்மியத்தில் காண்க.

கொடிமிடை வீதியின் வருவோள் குழன்மேல்
மருதி பொருட்டால் மடிந்தோன் தன்முன்
கருகிய நெஞ்சினன் காமம் காழ்கொளச்
சுரியிரும் பித்தை சூழ்ந்துபுறந் தாழ்ந்த
விரிபூ மாலை விரும்பினன் வாங்கித்
தொல்லோர் கூறிய மணமீ தாமென
எல்லவிழ் தாரோன் இடுவான் வேண்டி
மாலை வாங்க ஏறிய செங்கை
நீலக் குஞ்சி நீங்கா தாகலின்
ஏறிய செங்கை இழிந்தில திந்தக்
காரிகை பொருட்டெனக் ககந்தன் கேட்டுக்
கடுஞ்சினந் திருகி மகன்துயர் நோக்கான்
மைந்தன் தன்னை வாளால் எறிந்தனன். (மணிமேகலை.)

ககந்தனது தன்மையும், கண்ணோடாத திண்மையும், அவன் செங்கோல் செலுத்திய ஒண்மையும், மேற்குறித்த உண்மையும், இதில் விளங்குதல் காண்க.

எய்திய குற்றத் தோர்கள் யாவரா யினுங்கண் ணோடா
தைதென நாடி நீதி அறந்தலைப் பிழையாத் தண்டஞ்
செய்தலே செங்கோலாகும் செய்யகோல் இன்றே லென்னும்
உய்திசெய் மழைபான் மக்கள் உறுபய னற்றபோதும்.
(விநாயகபுராணம்.)

காதிறை வனுக்குக் கண்ணென லான்மெய் காண்குறான் எனுமொழி
[ மாற்றி
வாதிகள் சாட்சி சாதக மெல்லாம் வகைவகை யினிது கேட்டமைந்த
மேதினிக் கிழமை நீக்கிடுந் தன்மை விளையினும் நடுவி னீங்காது
யாதியா அணுவும் பகுந்துதீர்ப் பதுவே பார்த்திபன் கடமையா
மன்றே. (1)

மன்னுயி ரனைத்தும் தன்னுயி ரென்ன மகிழ்வொடு தாங்கியா ரேனும்
இன்னலுற் றயர்ந்தோம் எனக்கலுழ்ந்திடிற்றன் இருவிழி நீரினை
[ யுகுப்பான்
அன்னவெந்துயரை நீக்குமுன் தானுஞ் றயின்றிடான் துயின்றிடான்
[ எவரும்
கன்னக ரெங்கும் உளனெனப் பகர நாடொறும் இயங்குவோன் கோனே
(நீதி நூல்.) (2)

யார் மாட்டும் கோடாமல் நடுநிலையாய் நின்று நீதிசெலுத்து வதே செங்கோன்மையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

542 மண்டுபுகழ் அய்யோத்தி வண்குடிகள் மன்னவன்பின்
கொண்டெழுந்தேன் போன குமரேசா—தண்டாத
வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழும் குடி. (உ)

இ—ள்

குமரேசா! இன்ப நலங்கள் மிகுந்திருந்தும் அவற்றை யெல்லாம் விட்டு அயோத்தியிலிருந்த குடிகள் தம் அரசனையே நோக்கி ஏன் முன் அமைந்து போயின எனின், உலகு எல்லாம் வான்நோக்கி வாழும், குடி மன்னவன்கோல்நோக்கி வாழும் என்க.

வான் என்றது மழையை, இஃது ஆகுபெயர். உலகு என்றது அதிலுள்ள உயிர்த்தொகுதிகளை. உலகு என்றதில் குடியும் அடங்கியதே எனினும் ஓர் அரசனது ஆட்சிக்குட்பட்ட மக்களியல்பைப் பகுத்துணர்த்தற்கு இங்ஙனம் வகுத்ததென்க.

உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டற்பாலதாகிய நீரை வானே உதவுகின்றமையானும், அஃதில்வழி யாதும் இயலாமையானும் உலகெல்லாம் வான் நோக்கி வாழும் என்றார்.

மேல், யார்மாட்டும் கோடாமல் என்றும் நெறியோடு நின்று நீதி செலுத்துவோனே செங்கோல் மன்னன் என்றார்; இதில், அம்மன்னவன் கோலே மன்னுயிர்க்கெல்லாம் ஆதாரம் என்றார்.

உலகிலுள்ள உயிர்களெல்லாம் மழையினாலேதான் நிலை பெறுகின்றன; ஆயினும் குடிகள் அரசன் கோலினாலேதான் வாழுகின்றன என்பதாம்.

உலகுக்கெல்லாம் மழை எப்படியோ அப்படியே குடிகட்கு அரசன் இன்றியமையாத துணையாம் என்பது கருத்து.

உணவுப் பொருள்களை உளவாக்கித் தம்மை ஊட்டி வாழ்விக்கும் வானிருந்தாலும், கோனில்லையானால் வேலி இல்லாத பயிர் போல் அழிவுமிகக், குடிகள் நலிவுறுமாதலால் அவை மன்னவன் கோல் நோக்கி வாழும் என்றார்.

நம்மனை மைந்தர் கிளகவாழ் வெல்லாம் நரபதியால் அவனிலனேல்
அம்மனை தீயர் கைவசமாவன் அருநிதி கொள்ளையாம் நாளும்
வெம்மையோ டொருவர் ஒருவரை யுண்பார் மேலவரசடரால் மெலி
அம்மவீதெல்லாம் உணர்ந்தரசானைக் கமைதனற் குடிகளினியல்பே [வார்

வேறு எவையிருந்தாலும் கோனில்லையானால் குடிகளுக்கு அவற்றால் பயனில்லையாதலே இதனால் அறிக.

கோனை நோக்கியே குடிகள் வாழும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அயோத்திக் குடிகள்பால் அறியப்படும்.

## கதை

அயோத்தி மன்னனாகிய அரிச்சந்திரன் விசுவாமித்திரனது சூழ்ச்சியால் அரசையிழந்து மனைவியையும் மகனையும் உடனழைத்துக்கொண்டு வெளியே சென்றான். அவனில்லையானால் தாம் இருக்க இயலாதென்று குடிகளும் அவன் பின் செல்லலானார். அவ்வமையம் அக்குடிகளுற்ற துயர்கள் இப்படியில்மிக்கன.

தலமுழுதும் தவமுனிவன் தனக்களித்தேம் இனியுறைதல் தகுதியன்றென்
றிலகுமணி மண்டபமும் எழின்மணிச்சிங் காதனமும் இழந்துபோந்து
பலவரசருடனமைச்சர் அழுதுடன்போய்ப் பாதவிக்கப் பதாதிமொய்க்கக்
குலமகனும் மடமயிலும் முன்னடக்கப் பின்னடந்தான் கொற்றவேந்தே.(1)

தொடைதுறந்து முடிதுறந்து பணிதுறந்து துடிமுரசந்துறந்து தாமக்
குடை துறந்து வெண்சவரிக் குழாந்துறந்து கரிபரிதேர்க்குலந்துறந்து
கடைதுறந்து மறுகணைந்த காவலன்றன் திருமுகத்தைக் கண்டோரெல்லாம்
அடையமன மழிந்துருகி யவரவரே முகத்திலறைந்தழுவதானார். (2)

மயிரோடுஞ் சிறையிழந்த போகில்போல் வேலியொடு வரம்பிழந்த
பயிரேபோல் கரமிழந்த கரியேபோல் பொறியிழந்த பாவையேபோல்
உயிரேபோய்ப் பரதவிக்கும் உடலேபோல் மத்தாலுள்ளுடைந்தலம்பும்
தயிரேபோல் தளர்ந்தலைந்து தத்தமக்கு நிகழ்ந்தவெலாம் சாற்றலுற்றார். (3)

எல்லாச் செல்வங்களும் நிறைந்திருந்தும் அவற்றுள் ஒன்றையும் நோக்காமல் தம் மன்னவனையே நோக்கி அயோத்திக் குடிகள் வாழ்ந்த உண்மையை இவற்றுள் ஆய்ந்து காண்க. இராமர் காடுநோக்கிப் போனபொழுது அக்குடிகள் அவரை நோக்கிப்போனதும் ஈண்டு அமைந்து நோக்கத்தக்கது. உலகம் வானைநோக்கி வாழ்வதுபோல் குடிகள் தம் கோனை நோக்கியே வாழும் என்பதை அவர் வாய்ந்து காட்டினார். விரிவை அம் மன்னவர் சரிதைகளில் காண்க.

> தானோக்கா தெத்துயரம் செய்திடினும் தார்வேந்தன்
> கோனோக்கி வாழும் குடிபோன் றிருந்தேனே.
> (குலசேகராழ்வார்.)

> கோனோக்கி வாழுங் குடியெல்லாம் தாய்முலையின்
> பானோக்கி வாழும் குழவிகள்—வானத்
> துளிநோக்கி வாழும் உலகம் உலகின்
> விளிநோக்கி இன்புறூஉங் கூற்று. (நான்மணிக்கடிகை.)

கொற்றவன் கோலே குடிகள் வாழ்வுக்கு மூலம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

543 வேதமுயர் நீதி விரதன்கோல் கொண்டபின்பேன்
கோதறமுன் நின்ற குமரேசா—தீதறுசீர்
அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல் (௩)

இ—ள்.

குமரேசா! பிரிய விரதன் செங்கோல் செலுத்திய பின் வேதமும் நீதிகளும் என் விளங்கி நின்றன எனின், மன்னவன் கோல் அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது என்க.

அந்தணர் நூல் என்றது வேதத்தை; வழிவழியாக அவரால் ஓதப்பட்டு வருகின்றதாதலால் அஃது இங்ஙனம் ஓதநின்றது. ஓத லந்தணர் வேதம்பாட என்றதும் ஈண்டு ஓர்ந்து கொள்க. அந்தணர் என்ற பதம் அழகிய தண்ணளியையுடையவர் என்னும் பொருளினது ஆதலால் அக்காரணத்தைக் கருதியபொழுது அவ் இயல்புடையார்க்கெல்லாம் அஃது உரிமையாய் நிற்கும்; கருதாதபொழுது காரண இடுகுறியாய் நின்று பிராமணரை மாத்திரம் அஃது உணர்த்திவரும்.

கோல் ஆதியாய் நின்றது = செங்கோல் காரணமாகி நிலைபெற்றது.

மேல், மன்னவன் கோலே குடிகளுக்கு மன்னிய துணை என்றார்; வேதமும் அறமும் விளங்கி நிற்றற்கும் அதுவே ஆதாரம் என்று இதில் விளக்கி யருளினார்.

அந்தணர் நூலாகிய வேதத்திற்கும், அதனால் கூறப்பட்டுள்ள அறத்திற்கும், அரசனது செங்கோலே தலைமையாகி நிலைபெற்றது என்பதாம்.

அரசன் நெறியோடு நின்று முறைசெய்துவரின், அந்தணர் நிறையோடு நின்று மறையோதிவருவர்; பிறரும் நிலைதவறுமலிருந்து தத்தமக்குரிய அறங்களைச் செய்வர்; ஆதலால் நூலுக்கும் அறத்திற்கும் கோல் ஆதி என்றார்.

வேத நீதிகளை உலகில் விளங்கச்செய்தற்கு வேந்தன் கோலே காரணமாகும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிரியவிரதன் பால் உணரப்படும்.

கதை

பிரிய விரதன் என்பவன் சூரியகுல முதல்வனாகிய சுவாயம்பு மனுவின் புதல்வன். தாய்பெயர் சதரூபை. இவன் பேரறி

வாளன். நாரதர் முதலிய அரு முனிவரரும் இவன் குண நலங்களை மிகவியந்தனர். தன் பெயருக்கேற்ப விரதவொழுக்கங்களில் இவன் மிக விருப்புடையன். இவன் மனைவி பெயர் சுகன்னி. அவள் அழகிலும் நிறையிலும் அறிவிலும் பெரியவள். அவளோடமர்ந்திருந்து இந் நிலவுலக முழுவதையும் இவன் நலமுற ஆண்டான். சூரியனோடு தொடர்ந்து செலலத்தக்க தெய்வத்தேரொன்றைத் தன் தவமாண்பால் இவன் எய்தப்பெற்றான். அதில் நிலவி நின்று எங்கும் உலாவி வந்தான். ஏழு கடல்களாகவும் ஏழு தீவுகளாகவும் இவ்வுலகை வரம்பு செய்துகொண்டு நெறி திறம்பாமல் நின்று இவன் முறைபுரிந்தான். புரிந்துவருங்கால் ஆக்னியித்திரன், இத்மசிக்கு, மக்கியபாகு, மேதை, இரண்யரேதசு, கிருதபிருடன், சவநன், மேதாதி, விதிகோத்திரன், புட்கரன் எனப்புதல்வர் பதின்மரும், ஊற்சவதி என ஒரு புதல்வியும் இவன்பால் தோன்றினர். அவருள் இத்மசிக்கு, எக்கியபாகு, மேதை, என்னும் மூவரும் யோகிகளாயினர். மற்றெழுவரும் பருவமெய்தும்வரை இவ்வுலகை இவன் அருளுடன் காத்தான். அதன் பின்னர் நாவலந்தீவு, இறலித்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, சான்மலித்தீவு, சாகத்தீவு, புட்கரத்தீவு, என்னும் மேற்குறித்த ஏழு தீவுகளையும் ஆக்னியித்திரன் முதலிய தன் புதல்வர்கள் எழுவருக்கும் முறையே பொருந்த வகுத்தினன். பின் அருந்தவனாயினன். இவனது ஆட்சியில் வேதவொழுக்கங்களும், அதில் கூறியுள்ள நீதியொழுக்கங்களும் எங்கும் விளங்கியிருந்தன.

கோதிலாதசெஞ் சூட்டுடை வாரணங் கூவ
ஓத ஞாலத்து மற்றைய தலத்துளார் விழிப்பார்
ஈத லேற்றலோ டறுதொழில் இருபிறப்பாளர்
வேத நாதத்தின் விழிப்பதவ் வியனகர் மாக்கள்.

என்றபடி இவன் நகரும் விளங்கியிருந்தது.

இவன் செங்கோல் மாண்பால் அறங்களெல்லாம் சிறந்து விளங்கின. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல் என்ற உண்மைக்கு இவன் கோலே இசைந்து நின்றது. விரிவைப் பாகவதத்தில் காண்க.

வேதமும் அறமும் விளங்குதற்கு வேந்தன் கோலே காரண மாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

544 சேர விரும்பொறையைச் சேர்ந்தன் றுலகமன்பு
கூர நின்ற தென்னே குமரேசா—சாரும்
குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. (ச)

குமரேசா! சேரவிரும்பொறை என்னும் மன்னவனைத் தழுவி யாவரும் ஏன் நீங்காமல் அன்புசெய்து நின்றனர் எனின், குடி தழீஇ கோல் ஓச்சும் மாநில மன்னன் அடி தழீஇ உலகு நிற்கும் என்க.

தழுவி என்னும் வினையெச்சங்கள் ஈரிடத்தும் தழீஇ என அளபெடுத்து நின்றன. தழுவுதல் = அணைத்தல், ஆதரித்தல். கோல்ஓச்சும் = செங்கோலைச் செலுத்துகின்ற. ஓச்சல் = எறிதல், செலுத்தல், ஓட்டல்.

மேல், வேதமும் அறங்களும் வேந்தன்கோலால் விளங்கும் என்றார்; இதில், அச் செங்கோல்மன்னன் அடியைச் சேர்ந்தே யாவரும் சிறந்து நிற்பர் என்றார்.

குடிகளைத் தழுவிச் செங்கோலைச் செலுத்துகின்ற பெரிய நிலத்தையுடைய அரசனது அடிகளை உலகத்தவர் அன்போடு தழுவிநிற்பர் என்பதாம்.

பிறரை என் எதிர் நோக்க வேண்டுமென்று தன் தலைமைத் தன்மையால் செருக்கித் தன் மனம்போனபடியே நடவாமல், குடிகளது நிலைமைகளை அறிந்து அவர்க்கு இதம்புரிந்து நடத்தலே, செங்கோல் மன்னர்க்குச் சிறந்த தன்மையாம் என்பது குறிப்பு.

அரசன் குடிகளைத் தழுவி நடந்தால் உலகம் அவன் அடிகளைத் தழுவி நிற்கும் என்றது அனைவரும் அன்பினராகி அவன் நிழலினையடைவர் என்பது கருதி என்க.

உற்றதை உசாவியும், கொடுத்தல் இன்சொல் முதலிய உதவி களைச் செய்தும், குடிகளை அணைத்து ஒருவன் அரசு செய்வனாயின்

உலகமுழுவதும் அவனுக்கு உரிமையாம் என்பது கருத்து. இவ்வுண்மை சேரலிரும்பொறையால் உணரப்படும்.

## கதை

சேரலிரும்பொறை என்பவன் சேரமன்னருள் ஒருவன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னராம். அருங்குணங்களெல்லாம் இவன்பால் ஒருங்கமைந்திருந்தன. புலவர் பெருமானாகிய கபிலர்பால் இவன் பெருநட்புடையவன். திட்பநோக்கோடு யானைபோல் எதையும் நுட்பமாக் காண்பவன் ஆதலால் சேரமான்யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை என்று இவன் பெரும்பெயர் பெற்றான். அரிய கலைகள் பலவும் கற்றவன். தொண்டி என்னும் நகரிலிருந்து எண்டிசைகளிலும் தன் இசை சென்றுவிளங்க இவன் செங்கோல்செலுத்தினன். குடிகள் இன்புறவே தன் கோலின்பயன் என்று இவன் குறித்திருந்தான். அல்லலென்பதை இவன் ஆட்சியில் யாரும் அறிந்திலர். பயிர்களுக்கு மழைபோல் இவன் உயிர்களுக்கு உதவினன். குடிகளைப் பேணி இவன் கோல்செலுத்திவருவதை அறிந்து அனைவரும் இவன் குடை நிழலடைந்தனர். தமக்கு உதவிவருகின்ற திறத்தைநினைந்து உயிர்களெல்லாம் இவனது நலத்தையே நாடிநின்றன. இதனால் உலகமுழுதும் உரிமையாகப்பெற்று இவன் இனிதுஆண்டான். குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன் அடிதழீஇ நிற்கும் உலகு என்பதை இவன் நிலைபெற உணர்த்தினன். விரிவைச் சேரர் குலமுறையில் காண்க.

இருமுந்நீர்க் குட்டமும்
வியன் ஞாலத் தகலமும்
வளி வழங்கு திசையும்
வறிது நிலைஇய காயமும், என்றாங்கு
அவை அளந்தறியினும் அளத்தற்கரியை
அறிவும் ஈரமும் பெருங்க ணோட்டமும்
சோறு படுக்கும் தீயொடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது

பிறிதுதெற லறியார் நின் நிழல்வாழ்வோரே
திருவில் அல்லது கொலைவில் அறியார்
நாஞ்சில் அல்லது படையும் அறியார்
திறனறி வயவரொடு தெவ்வர் தேய அப்
பிறர்மண் உண்ணும் செம்மல்! நின் நாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணின் அல்லது
பகைவருண்ணா அருமண் ணினையே!
அம்பு துஞ்சுங் கடி அரணால்
அறந் துஞ்சும் செங்கோலையே!
புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற அறியா ஏமக்காப்பினை!
அனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லாம் நின்னஞ்சும்மே. (புறநானூறு.)



அளத்தற்கரியை, செம்மல், அருமண்ணினை, செங்கோலை, ஏமக்காப்பினை, எனக் கொண்டுகூட்டி நம் சேரலிரும்பொறையை முன்னிலையாக்குக.

திருவில் = வானவில். நாஞ்சில் = கலப்பை. நின் அஞ்சும்மே = நினக்கு ஏதேனும் ஏதம் வருங்கொல்! என்று நின்பால் வைத்த காதல் மிகுதியினால் உயிர்கள் அஞ்சுமே என்க.

இது, குறுங்கோழியூர்க்கிழார் என்னும் புலவர்பெருமான் இவனை வியந்துபாடியது. இவனது நுண்ணறிவும், தண்ணளியும், அரசுபுரிந்ததிறனும், அதில் நிகழ்ந்த நலங்களும், குடிகளடைந்த இன்பமும், இவன்பால் உயிர்கள் கொண்டிருந்த அன்பும், பிறவும் இதில் இனிது விளங்குதல் காண்க.

குடிகளைத் தழுவி அரசன் கோலைச்செலுத்தின் உலகம் அவன் அடிகளைத் தழுவிநிற்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

545 வானும் நிலனும் வளஞ்சுரந்த வண்கரிகாற்
கோனிருந்த நாட்டேன் குமரேசா—ஆன
இயல்புளிக் கோலோச்சும் மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு. (ரு)

இ—ள்

குமரேசா! கரிகால் வளவனது நாட்டில் மழையும் விளைவும் ஏன் மலிந்திருந்தன எனின், பெயலும் விளையுளும் தொக்கு இயல்புளிக் கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட என்க.

தொக்கு நாட்ட எனத் தொடுத்துக்காண்க.

தொக்கு = ஒன்றுகூடி. நாட்ட = நாட்டின் பாலவாம்.

பெயல் = மழை; பெய்தலுடையது என்னும் ஏதுவான் வந்தது. விளையுள் என்றது நெல் முதலிய விளைவுப்பொருள்களை. அவை மிகுதற்குப்பெயலே காரணமாகுமாதலால் அவ்வுரிமை தோன்ற அது முதலில் நின்றது. இயல்புளி = இயல்போடு; அஃதாவது நூல்கள்சொல்லிய இயல்பின்படி என்க. உளி என்னும் சொல் ஈண்டு மூன்றும் வேற்றுமை உருபாய் நின்றது.

இயல்புளிக் கோல் ஓச்சும் என்றது நமரேனக் கோல் கோடாது, பிறரேனக் குணங் கோல்லாது, ஞாயிற்றன்ன வெந்திறலாண்மையும், திங்களன்ன தண்பெருஞ்சாயலும், வானத்தன்ன வண்மையும் உடையனாய் என நூல்கள் உரை செய்தபடியே முறை செய்யும் என்றவாறு.

மேல், குடியைத் தழுவி அரசன் கோல் ஓச்சின் உலகம் அவனடியைத் தழுவி நிற்கும் என்றார்; இதில், இயல்புளிக்கோல் ஓச்சின் அவனரசில் பெருவளங்கள் மிகும் என்றார்.

தனக்குரிய நெறியில் வழுவாமல் நின்று செங்கோலைச் செலுத்துகின்ற அரசனது நாட்டில் தகுதியான மழையும் மிகுதியான விளைவும் தொகுதியாக உளவாம் என்பதாம்.

நீதி தவறாமல் அரசன் முறைசெய்யின், அறம் வளரும்; அதனால் பருவந்தவறாமல் மழை பொழியும்; அதனால் நிலங்கள் பெருவளங்களைச் சுரக்கும்; ஆதலால் பெயலும் விளையுளும் தொக்கு மன்னவன் நாட்ட என்றார்.

இயல்பு குன்றி மன்னவன் கோல் ஓச்சின் அவன் நாட்டில் பெயலும் விளையுளும் குன்றிவிடும் என்க. நெறிவழுவாமல் நீதி செலுத்தும் அரசனது நாட்டில் பெருவளங்கள் உளவாம் என்பது

இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கரிகால் வளவன்பால் உணரப்படும்.

கதை

கரிகால் வளவன் என்பவன் சோழ மன்னருள் ஒருவன். உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி என்னும் அரசனுடைய அருமைப் புதல்வன். இவன், தாய்வயிற்றிலிருக்கும் பொழுதே தந்தை இறந்து போயினன். குழவிப்பருவத்தில் தனது வலது காலின் புறவடி நெருப்பால் சுடப்பட்டுக் கருகிவிட்டது. அதனால் இவன் கரிகால் வளவன் எனப்பெற்றான். சோழன் கரிகாற்பெருவளத்தான் எனவும், கரிகாலன் எனவும், இவனைக்கூறுவர். இவன் பேரறிவுடையவன். காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து அரசுபுரிந்தவன். மாறுபட்ட இருவர் தம் வழக்கை அரசன்பால் சென்று தீர்த்துக்கொள்வோம் என்று ஒருகாலத்தில் இவன்பால் வந்தார். இவனைக் கண்டார். இளவயதினனாதலால் தம் வழக்கை இவன் எவ்வாறு தீர்ப்பன் என்று கருதி அவர் இகழ்வுடன் நின்றார். அக்கருத்தைக் குறிப்பாலுணர்ந்து அவரை மறுநாள் வரும்படி செய்து தான்மிக முதியவன்போல் வடிவங்கொண்டு வந்து நெடுநாளாகத் தீராமலிருந்த அவ் அரியவழக்கை இவன் மதியுடன் தீர்த்தான். இவன் மதித் திறத்தை வியந்து அவர் மகிழ்ந்து சென்றார்.

உரைமுடிவு காணான் இளமையோன் என்ற
நரைமுது மக்க ளுவப்ப—நரைமுடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமல் பாகம் படும். என்று பழமொழியுள்ளும்

இவன் புகழ்மொழி பதிந்துநின்றது. இவன் பெரிய போர்வீரன். குன்றா வென்றியுடன் செங்கோல் செலுத்தியதால் இவன் புகழ் எங்கும் சென்றது. கடியலூர் உருத்திரங் கண்ணனார் என்பவர் இவன்மீது பட்டினப்பாலை என்னும் ஒரு நூலைப்பாடி வந்து பதினாயிரம் பொன் பரிசில் பெற்றுள்ளார். இவ்வுண்மை,

தத்து நீர்வரால் குருமிவென்றதும்
தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்

பத்தொ டாறுநூ றாயி ரம்பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும். என்று

கலிங்கத்துப் பரணியில் குறிக்கப்பட்டுள்ளது. இவனது ஆட்சியில் வறுமையேதுமின்றிக் குடிகள் பெருமகிழ்வுற்றிருந்தன. பருவ மழையும் அரிய விளைவும் இவன் நாட்டில் உரிமையோடு பெருகியிருந்தன. இயல்புளிக் கோலோச்சும் மன்னவனுட்ட பெயலும் விளையுளும் தொக்கு என்னும் உண்மைக்கு இவன் நாடே இலக்காய் நின்றது.

எரியும் ஏற்றத்தி னூனும் பிறர்நாட்டு
வாரி சுரக்கும் வளனெல்லாம்—தேரின்
அரிகாலின் கீழுகூஉம் அந்நெல்லே சாலும்
கரிகாலன் காவிரிசூழ் நாடு.

அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்
அன்னோன் வாழி வெல்வேற் குரிசில்
கருவி வானம் கடற்கோள் மறப்பவும்
பெரு வறனாகிய பண்பில் காலையும்
நறையும் நரந்தமும் அகிலும் ஆரமும்
துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி
நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பகம் புகுந்தொறும்
புனலாடு மகளிர் கதுமெனக் குடையக்
கூனிக் குயத்தின் வாய்நெல் அரிந்து
சூடுகோ டாகப் பிறக்கி நாடொறும்
குன்றெனக் குவைஇய குன்றாக் குப்பை
கடுந்தெற்று மூடையின் இடங்கெடக் கிடக்கும்
சாலிநெல்லின் சிறைகொள் வேலி
யாயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கும் நாடுகிழ வோனே. (பொருநராற்றுப்படை.)

இது, முடத்தாமக்கண்ணியார் என்னும் புலவர் பெருமான் கரிகால்வளவன்மீது பாடியது. இதனால் இவனது செங்கோன்மையும், வானும் நிலனும் சேர்ந்து இவனுக்கு வளஞ்சுரந்து நின்றவும், பிறவும் விளங்குதல் காண்க.

செங்கோல் மன்னவன் நாட்டில் எல்லாவளங்களும் செறிந்து விளங்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

546 வேல்கொண்டார் தம்மையெல்லாம் வென்றான் இடபன்செங்
கோல்கொண்ட தாலேன் குமரேசா—மால்கொண்ட
வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடா தெனின். (௬)

இ—ள்.

குமரேசா! தன் கோல் மாண்பால் வேல்வீரரை யெல்லாம் இடபன் ஏன் வென்று விளங்கினான் எனின், வென்றி தருவது வேல் அன்று; மன்னவன்கோல்; அதூஉம் கோடாது எனின் என்க.

அதூஉம் = அக்கோலும். அதுவும் என்பது அதூஉம் என அளபெடுத்து நின்றது.

வென்றி தருவது வேல் என்று வெளிப்படையாக விளங்கி நின்றமையால் அன்று என அதனைவிதந்து விலக்கினார்.

வீரத்திற்கும், நீதிக்கும் அறிகுறியாக வேலையும் கோலையும் அரசர்தாங்கியிருப்பாராதலால் அவ் இரண்டும் ஈண்டு இணைத்து எண்ண நின்றன.

மேல், செங்கோலால் செல்வம் பெருகும் என்றார்; இதில், அது வென்றியும் தரும் என்றார்.

கோல் கோடின், அரசன் கொடியனென இழித்துக் குடிகளே அவனுக்குப் பகைவராய் முடிவர்; அதன் பின் எத்துணையாற்றல்களை யுடையனுயினும் அவன் வெற்றியை யடையான்; ஆதலால், கோல் கோடாமையே அவன் வென்றிக்கு ஏதுவாய தென்க. எங்கும் தனக்கு வென்றி வேண்டுமாயின் அரசன் செங்கோலனாதல் வேண்டும் என்பது குறிப்பு.

அரசனுக்கு வெற்றியைக் கொடுப்பதுவேல் அன்று; அவன் செலுத்துங்கோல் கோடாதாயின், அதுவே அவனுக்கு அதனைக் கொடுக்கும் என்பதாம்.

அரசன் செங்கோலனாயின் யாவரும் அவன்பால் அன்புடையராய் அடங்கி நிற்பர்; அறமும் பெருகும்; தருமமே சயம் என்று

படி அதனால் அவனுக்கு என்றுங் குன்றாத வென்றியுண்டாம்; ஆதலால் கோல் வென்றிதரும் என்றார்.

கடுஞ்சினத்த கோல் களிறும், கதழ்பரிய கலிமாவும்,
நெடுங்கொடிய நிமிர்தேரும், நெஞ்சுடைய புகன்மறவருமென
நான்குடன்மாண்டதாயினுமாண்ட, அறநெறிமுதற்றே அரசின்
கோற்றம் ; என்றார் மருதனிளநாகனாரும்.

செங்கோல் மன்னனுக்கே என்றும் வென்றியுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இடபன்பால் உணரப்படும்.

## கதை

இடபன் என்பவன் சூரியகுல மன்னனாகிய நாபியின் புதல்வன். மாலின் கலையாய் இவன் இங்கு வந்து தோன்றினான். இவனது ஆற்றலையும் அறிவையும் வியந்து அமரரும் போற்றினர். இவன் மனைவிபெயர் சயந்தி. அவள் தெய்வமாது இவனது செம்மனத்தையும் தண்ணளியையும் மகிழ்ந்து இந்திரனே அவளை இவனுக்குத்தந்தான். அவ்விழுமிய அழகியோடு மருவியிருந்து இவன் இருநிலம் புரந்தான். இவன் காவலால் எங்கும் இன்பமே மேவி நின்றது. அருளும் அறிவும் நிரம்பிய மக்கள் பலர் இவன்பால் தோன்றினர். அப்புதல்வருள் பரதனென்பவனே அரசுரிமையில் முதல்வனாய் நின்றான். அவன் ஆண்டதனாலேதான் இந்நாடு பரத கண்டம் என அவன் பெயரால் இன்றும் நின்று விளங்குகின்றது.

மழைவளஞ் சிறப்பமுந்நீர் மாநில வளாகங்காத்து
விழைவெறிந் துலகமெல்லாம் மெய்ந்நெறி படரும் வண்ணம்
பழமறை முடிவுகூறும் பாடல்சால் இடபற் காங்கு
நுழைபுலன் வாய்ந்த மைந்தர் நூற்றுவர் தோற்றஞ்செய்தார்.

என்று அனைவரும் இவனது மக்கட்பேற்றைப்போற்றி மகிழ்ந்தார். எல்லா நலங்களுமெய்தி உயிர்களின்புறுமாறு இவன் செங்கோல் செலுத்திவந்தானதலால் பகைவரென்பவர் எங்கும் இவனுக்கு இலராயினர். இவனது ஆட்சி நலத்தையும் சூழ்ச்சித் திறத்தையும் வியந்து முனிவரும் மிகப் போற்றிப் புகழ்ந்தனர்.

தாயறியாத சேயிருந்தாலும் தானறி யாதவரில்லை
யாயதன்மையினால் அறனறிந்திருக்கும் அறிஞரை யறிந்தவர்க்குரிய
தேயவாதிக்கம் தந்துநன் னீதி செலுத்தியெங் கணுமருந்தினுங்கும்
தீயவரிலரென் றிசையுற நடத்தும் திறலுளோன் பூதல வேந்தே. என்

னும் நீதியின்படி இவன் நீதி செலுத்தினான். எய்யெனா எழுபகை எங்கும் இன்மையால் இவனது ஒள்ளியவாளும் வெள்ளிய வேலும் எப்பொழுதும் உறையிலேயே உறைந்திருந்தன. தனது செங்கோல் மாண்பால் என்றும் குன்றா வென்றியனாய் இவன் நின்று விளங்கினான். வேல் அன்று வென்றிதருவது மன்னவன் கோலே யாம் என்ற உண்மையை உலகம் இவன்பால் கண்டது. விரிவைப் பாகவதத்தில் காண்க.

மன்னவன்வலிசெங் கோலினா லன்றிவாளினால் சேனையால் இல்லை
நன்னெறி வழுவா மன்னவன்றனக்கு நாடெல்லாம் பேராண் உலகில்
மன்னுயி ரெல்லாம் அவன்படை யன்னோர் மனமெலாம் அவனுறைபீடம்
இன்னதன் மையனா யரசளிப்பவனை யிகல்செயும் செறுநருமுளரோ.

(நீதிநூல்)

தன் செங்கோலே அரசனுக்குச் சிறந்த வென்றிதரும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

547 ஆவினிளங் கன்றும் அமைச்சும் பிழைத்தனமுன்
கோமுறையால் என்னே குமரேசா—மேவும்
இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். (எ)

இ—ள்.

குமரேசா! மனுச்சோழன் முறைபுரிந்து வருங்கால் இறந்துபட்ட இளங்கன்றும் அமைச்சனும் ஏன் எழுந்து வந்தார் எனின், வையகமெல்லாம் இறைகாக்கும்; முட்டாச் செயின் அவனை முறை காக்கும் என்க.

செயின் என்பது அருமை தோன்ற நின்றது.

இறை = அரசன். முறை = செங்கோல், நீதி. அவனை என்றது வையகம் காக்கும் அவ் இறையை என்றவாறு.

முட்டாச் செயின் = தடையுறாமல் செலுத்துவனுயின். முட்டாது என்னும் எதிர்மறை வினையெச்சம் ஈறுகெட்டு முட்டா என நின்றது. முட்டுதல் = தடுத்தல், எதிர்த்தல்.

தான் நீதி செலுத்துங்கால் அஃது இனிது செல்லாதபடி இடையே நிகழும் தடைகளை விலக்கி அரசன் அதனைக்கடைபோகச் செலுத்துவனுயின் அச்செங்கோன்மையே அவனை இன்புறக் காக்கும் என்பார் "முட்டாச் செயின் முறைகாக்கும்" என்றார்.

மேல், செங்கோலே அரசனுக்கு வென்றியைத்தரும் என்றார்; இதில், யாதொரு தீதும் அடையாவண்ணம் அவனை அது காக்கும் என்றார்.

நீதி கோடாமல் செய்தால் தனக்கே கேடுவருமென்று ஒரு காரியம் தோன்றின், அவ்வமையம் அரசன் என்செய்வது என்பாரை நோக்கி இஃது இயம்பியதாகக் காண்க.

உலகத்தையெல்லாம் அரசனே காப்பான்; அவனை அவனது செங்கோலே காக்கும்; தடையுறாமல் அதனை அவன் செலுத்துவனுயின் என்பதாம்.

உலகம் காக்கும் அரசனைக் கடவுள் காப்பார் என்னாது அவனது முறையே காக்கும் என்றார், அதுவே அவருக்கு வடிவமாகலின்.

முட்டச்செய்யும்படியான சோதனைகள் வந்து முட்டிய விடத்தும் அரசன் முறையை விட்டுவிடலாகாது என்பது குறிப்பு.

யாண்டும் எவ்வகையினும் கோடாமல் நீதிசெலுத்தும் அரசனுக்குக் கேடே உண்டாகாது என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மனுச்சோழன்பால் உணரப்படும்.

## கதை

மனுச்சோழன் திருவாரூரிலிருந்து நெறிவழுவாமல் நின்று அரசுபுரிந்து வந்தான். இவன் இயல்முறை மிகவியக்கத் தக்கது.

தன்புகழ் கருதி மருவலரோடும் சமர்புரிந் துயிர்களை மாய்த்துத்
துன்பமே செய்ய இயைந்திடான் முற்போர் தொடுத்திடான் தன்னுயிரனைய
மன்பதைக் கிடுக்கண் யாவரே செயினும் வாளம ரியற்றி நீக்கிடுவான்
இன்பதுன்பங்கள் தனக்குமற்றவர்க்குமேகமென்றெண்ணுவோன்வேந்தே.

என்றபடி நேர்ந்து நின்று இவன் நீதிசெலுத்தி வருங்கால் இவனது செங்கோன்மையை வியந்து இறைவன் ஒருநாள் இயமனிடம் புகழ்ந்தார். அதனை வியந்து கொள்ளாமல் தான் நடுவனாதலால் இவனது நடுவுநிலைமையை முடிவுகண்டு தெளியவேண்டுமென்று அவன் உறுதிகொண்டு நின்றான். உடனே அவ் ஈசன் ஒரு பசுவாகவும், இயமன் அதன் கன்றாகவும், அமைந்து திருவாரூரை யடைந்தார். அவ்வமையம் அரசன்மகன் தேரிலேறி வீதியில் சாரி வந்தான். அக் கள்ளக்கன்று துள்ளிவந்து அதில் துணிந்து விழுந்து துடித்து மாய்ந்தது. பசுக்களுக்கெல்லாம் பதியாயுள்ள அப் பெரும்பசுவும் மறுகிநின்று உருகியழுதது. இதுவரையும் நடுவுநிலையாய் நின்று உயிர்களைக்காத்துவந்த அரசன் இதில் என்ன செய்வன்கொல்! என்று இமையவரும் எதிர்பார்த்து நின்றார். அம் முட்டுப்பாட்டிலும் இம்மன்னன் மனங்கலங்காமல் நின்று அவ் ஆனைப்போலவே தானும் மறுகவேண்டுமென்று முறைமையை முடிவுறச்செய்தான். அதனால் யாதொரு தீதுமின்றிப் பரம்பொருளின் அருளோடு பெரும்புகழும் அடைந்தான். முட்டாமல் முறையைச் செய்யின் அதுவே இறையைக்காக்கும் என்னும் உண்மைக்கு இவன் இலக்காயிருந்தான். இவன் முறையின் தகுதியை முன்னரும் கூறினோம். விரிவைத் திருவாரூர் மான்மியத்தில் காண்க.

வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன். (சிலப்பதிகாரம்)

சால மறைத்தோம்பிச் சான்றவர் கைகரப்பக்
காலைக்கழிந்ததன் பின்றையும்—மேலைக்
கறவைக்கன் றூர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான்
முறைமைக்கு மூப்பிளமை யில். (பழமொழி)

சிந்தனை ஆவிற்கு முற்றத் திருத்தேரில்
மைந்தனை யூர்ந்த மறவோனும். (விக்கிரமசோழனுலா)

அவ்வருக்கன்மக னாகிமனு மேதினிபுரந்
தரியகாதலனை யாவினது கன்றுநிகரென்
றெவ்வருக்கமும் வியப்பமுறை செய்த கதையும். (கலிங்கத்துப்பரணி)

மருளும் பசுவொன்றின் மம்மர்நோய் தீர
உருளுந் திருத்தே ரூரவோன். (குலோத்துங்கசோழனுலா)

ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான்
தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி உறவூர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான். (பெரியபுராணம்.)

மேல் குறித்த நம் மன்னன் செங்கோன்மையை வியந்து பன்னூல்களும் இங்ஙனம் பகர்ந்துள்ளன.

தான் செய்யும் நீதியே அரசனை உய்யக்காக்கும் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

548 திண்டோட் சுதயனன்முன் தேர்ந்துமுறை செய்யாமல்
கொண்டான்கே டென்னே குமரேசா—தண்டாமல்
எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தாற் றானே கெடும். (அ)

இ—ள்.

குமரேசா! சுதயனன் ஓர்ந்து முறைசெய்யாமல் ஒதுங்கியிருந்ததனுல் ஏன் விரைந்து கெட்டான் எனின், எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன் தண்பதத்தான் தானே கெடும் என்க.

எண்பதம் என்பது பண்புத்தொகையாதலால் எண்மை பதம் எனப் பிரித்துக்காண்க. எண்மை = எளிமை. பதம் என்னும் சொல்–பருவம், நிலைமை, இடம், காலம் முதலியவற்றை உணர்த்தி வரும்.

எண்பதத்தான் = எளிய செவ்வியையுடையனாய். அஃதாவது முறைவேண்டி வரும் குடிகள் எளிதிற் காண்டற்குரிய இனிய நிலையினனாகி என்க. காட்சிக்கு எளியன் என்றபடி. பதத்தான் என்னும் முற்று இங்கு எச்சமாகி நின்றது. ஓரா = ஓர்ந்து; ஆராய்ந்து அறிந்து என்றவாறு. ஓர்ந்து என்ற விதிவினையெச்சம், செய்யா என்னும் மறைவினையைத் தழுவியதெனின் வழுவாம்; ஆதலால் விதிப்பொருளதாய அதன் முதனிலையைத் தழுவி நின்றதென்க. விதிச்சொலின் முதனிலை மறைப்பொருள் பெறுநவும், மறைச்சொலின் முதனிலை விதிப்பொருள் பெறுநவும், உளவென மொழிகுவ ரொருபுடையோரே. என்றதுங் காண்க. தண்பதத்தால் = தாழ்ந்த பதத்தால்; என்றது இழிந்தநிலையில் நின்று என்க. தண்மை ஈண்டு இழிவின்மேல் நின்றது.

எண்பதமும் ஓர்தலும் முறைசெய்தற்கு இன்றியமையாது வேண்டப்படுமாதலால் அவ்வுரிமை தோன்ற அதன்முன் அவை அமைந்து நின்றன.

மேல், வழுவுறாமல் அரசன் முறைசெய்யின் அச்செயலே அவனைக்காக்கும் என்றார்; இதில், அங்ஙனஞ் செய்யாதிருந்தால் தானே அவன் இழிந்து கெடுவான் என்றார்.

யார்க்கும் எளிய செவ்வியை யுடையனாய் ஆராய்ந்து முறை செய்யாத அரசன் தாழ்ந்த நிலையில் நின்று தானாகவே கெடுவான் என்பதாம்.

முறைசெய்யாத அரசனைக் கெடுத்தற்கு வேறுபகைவர் வேண்டாம்; அவர்தம் செயலின்மையே அதனைச்செய்துவிடும் என்பார் "செய்யா மன்னவன் தானே கெடும்" என்றார்.

ஓர்ந்து முறைசெய்யாமல் உள்ளிருந்தே சச்சந்தன் ஒழிந்து போனதுபோல், காட்சிக்கு எளியராய் நின்று ஆட்சிபுரியாத அரசர் தாழ்ச்சியுற்றுத் தம்பதவியை யிழந்து விரைவில் அழிந்து போவர் என்பது கருத்து.

குடிகளுடைய இதத்தைநாடிக் கோலோச்சாமல் அரசன் மடியுற்றிருப்பின் அவன் அடியோடு கெடுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுதயனன் பால் உணரப்படும்.

## கதை

சுதயனன் என்பவன் சந்திரகுல வேந்தன். சயதீபன் என்னும் அரசனுடைய புதல்வன் சிந்து நதியின் வடபாலிருந்த பெருநிலமுழுவதும் தனக்கு உரிமையாகப் பெற்றிருந்தவன். இவனது காலம் இற்றைக்கு மூவாயிர ஆண்டுகட்கு முன்னராம். இவன் பேரழகன். இவனுடைய மனைவி பெயர் சுதமதி. அவளது இன்பச் செவ்வியிலேயே இவனுளம் மிகவும் அழுந்தி நின்றது.

தவளைக் கிண்கிணித் தாமரைச் சீறடிக்
குவளையே யளவுள்ள கொழுங் கணாள்
அவளையே யமிர் தாக அவ் வண்ணலும்
உவளகம் தன தாக ஒடுங்கினான்.

என்றபடி தன் அரசுக்குரிய எந்தப்பதத்தையும் விரும்பாமல் அந்தப்புரத்திலேயே இவன் அடங்கிக்கிடந்தான். குறைவேண்டிவரும் குடிகளுக்கு இறையேனும் காட்சி நல்காமல் தான் கருதிய நலனுக்கே இவன் இறையாகி நின்றான். தாம்ராசுவன் என்னும் குறுநிலமன்னனுடைய குமரனொருவன் இவனுக்கு உரிய நண்பினன். அவன் பெயர் நளன். அவன் துடுக்கோடு மிடுக்கும் வாய்ந்தவன். வெளியேவந்தால் அவனோடு உலாவலும், உள்ளே புகுந்தால் துணைவியோடு உறைதலுமே இவனுக்கு முறையாயிருந்தன. ஒருநாள் இவ் இருவரும் அழகிய பூஞ்சோலை ஒன்றில் உலாவி நின்றனர். அவ்வமையம் பிரமதி என்னும் பார்ப்பனி அங்கிருந்த பொய்கையில் நீர் கொள்ளுமாறு வந்தாள். இளமையும் நலனும் கனிந்த அவ்வழகிய வனிதையை நளன் தனியே கண்டான். காதல் மீக்கூர்ந்தான். விரைந்து தழுவ விழைந்து அவளை வலிந்து பிடித்தான். அவள் வாய்விட்டலறி வைது பதைத்தாள். அவன் கைவிட்டு நாணிக் கருத்தழிந்து மீண்டான். நிறையுடையளாய அம் மறையவள் இந்த நிகழ்ந்ததைத் தன் கணவனிடம் போய் நெஞ்சழிந்து மொழிந்தாள். தருமசீலன் என்னும் அவன் அம் மனைவியோடு மறுநாள் இம் மன்னனிடம் முறையிட வந்தான். இடையிலிருந்தவர் அவனுள்ளே நுழையாதவாறு பல இடையூறுகள் செய்தனர். நெடிது முயன்றும் அரசனைக் காணமுடியாமல் அவன் மறுகிநின்றான். அங்ஙனம் நின்றுவருகையில் இயல்பாக

வே ஒருநாள் இவன் வெளியேவந்தான். மறையவன் அணுகி மனைவியோடு முறையிட்டு நின்றான். "யான் மன்னன் அல்லன்; மணிகளை விலைசெய்யவந்த ஓர் வணிகன்; அரசன் உள்ளேயிருக்கின்றான்; அவனிடம்போய் உரை" என இவன் உரைத்துப்போனான். அவன் மனங்கொதித்து வணிகனாகவே நீ ஒழிந்துபோ என மனைவியோடு வைதுபோயினான். அவ்விருவரும் நெறியுடையாராதலால் அவ்வாறே இவன் அரசினையிழந்து பழியும் பாவமும் அடைந்து விரைவில் அழிந்துபோனான். எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன் தண்பதத்தால் தானே கெடும் என்னும் உண்மையை இவன் உணர்த்தி நின்றான். விரிவை மதிமாபில் காண்க.

முறைமை முட்டாது செய்து முழுநிலங் காப்பினந்த
இறைவனைச் செங்கோல் காக்கும் எளியசெவ் வியனுமாகான்
குறைவளர் குற்றமோரான் குணத்தொடு முறைசெய்யானை
நிறைதரு பாவந்தேய்க்கும் நெடும்பகை யின்றுமேனும்.

(விநாயகபுராணம்.)

ஓர்ந்துமுறை செய்யாதவன் தாழ்ந்து கெடுவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

549 வென்றிமிகு வச்சந்தன் வெய்யரைமுன் கொன்றொழித்தும்
குன்றான்சீர் என்னே குமரேசா—என்றும்
குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில். (கூ)

இ—ள்.

குமரேசா! வச்சந்தன் கொடியார் பலரை முன் கொன்றொழித்தும் என்பழியின்றி யிருந்தான் எனின், குடிபுறங்காத்து ஓம்பிக் குற்றம் கடிதல், வடுஅன்று; வேந்தன் தொழில் என்க.

கடிதல் தொழில் என இயைத்துக்காண்க. கடிதல் = ஒழித்தல், அழித்தல், ஒறுத்தல், அறுத்தல்.

குடிபுறங்காத்து = குடிகளைப் பாதுகாத்து. புறம் என்பது ஒருபொருளும் இன்றி ஈண்டு அசைநிலையாய் நின்றது.

காத்தலுக்கும் ஓம்பலுக்கும், கடிதல் அடியீடாகுமாதலால் அஃது இறுதியில் நின்றது.

மேல், காட்சிக்கு எளியனாய் நின்று ஆட்சிபுரியாதவன் தாழ்ச்சியுறுவன் என்றார்; இதில் தான் ஓர்ந்து முறைசெய்யுங்கால் குற்றமுடையாரை வருத்தும்படி நேர்ந்தால் அதற்காக அரசன் வருந்தலாகாது என்றார்.

குடிகளைப் பிறர்நலியாமல் பாதுகாத்துத் தானும் நலியாமல் பேணி அவர்மாட்டுக் குற்றம் நிகழின் அதனைத்தண்டித்து ஒழித்தல் அரசனுக்குப் பழியாகாது தொழிலேயாம் என்பதாம்.

தண்ணளியோடு எல்லாவுயிர்களையும் தாங்கிப் பேணுதற்குரிய அரசன் சிறையிடுதல், உடைமையைக் கவர்தல், நாட்டைவிட்டகற்றல் முதலிய தண்டங்களைச் சிலர்க்குச் செய்கின்றானே அஃது அவனுக்கு வடு அன்றோ? என்பாரை நோக்கி இஃது அருளியதாகக் காண்க.

கள்வர், பகைவர், முதலாயினோரால் குடிகளுக்கு இடையூறுண்டாகாமல் காத்தும், மிறையிறை கொள்ளாமல், தளர்ந்துழி உதவுதல் முதலிய இதங்களைத்தான் உவந்து செய்தும், அவர்பால் பிழைகள் தோன்றின் கண்ணோடாது அவற்றைக்கடிந்தும், முறை செய்வதே அரசனுக்கு முறையாம் என்பார் "காத்து ஓம்பிக் கடிதல் வேந்தன் தொழில்" என்றார்.

கொடியரைக் கடிந்து குடிகளைக் காத்தலே அரசனுக்குக் குலத்தொழிலாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வச்சந்தன்பால் உணரப்படும்.

## கதை

வச்சந்தன் என்பவன் பனந்தன் என்னும் அரசனுடைய புதல்வன். இவன் சிறந்த போர் வீரன். அழகும் தண்ணளியும் அறிவும் திண்மையும் அமையப் பெற்றவன். இவன்பெயர், வத்

சந்திரன் எனவும் வழங்கப்படும். சௌநந்தை என்னும் தனது அருமை மனைவியோடமர்ந்திருந்து இவன் அரசுபுரிந்தான்.

வையம் மன்னுயி ராக அம்மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடலன்ன மன்னனுக்கு
ஐயமின்றி அறங்கட வாதருள்
மெய்யின் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ. என்ற

மெய்யுரையின்படி இவன்மேவி நின்று இம்மேதினி புரந்தான். கொடியவர் அடங்கி ஒளியவும், குடிகள் உயர்ந்து மகிழவும் இவன் கோலோச்சிவந்தான். தனக்கு இறைசெலுத்தி வருகின்ற விடூரதன் என்னும் குறுநில மன்னனுடைய குமரி முதாவதி என்பவளைக் குசம்பன் என்னும் அரக்கன் கவர்ந்துகொண்டு தன்கடி நகர் புகுந்தான். கலந்து களிக்க விழைந்தான். அப்பேரழகி தன் கூரறிவால் ஒருகாலத்தை வரம்புசெய்துகாட்டி அது கழிந்தபின் அவன் கருத்துக்கு இசைந்துவிடுவதாக அவன் இசைந்துகொள்ளும்படி யிசைத்துத் தனியே இரங்கியிருநதாள். அவளுடன் பிறந்த சுநீதி, சுமதி, என்னும் அரசகுமாரிருவரும் தம் தங்கையை மீட்டும்பொருட்டு அங்குப்புகுந்து அவனால் சிறைபிடப்பட்டார். மல்லமரினும் வாளமரினும் அவன் மிக வல்லவன். இந்திரனும் அவனோடு அமர்செய்ய ஒருமுறை அஞ்சி நின்றான். அத்தகைய வல்லரக்கனையும் வெல்லக்கருதி அம் மாநகர் புகுந்து வலிந்தழைத்து அவனோடு இவன் பேரமர் புரிந்தான். அதில் அவன் தொலைந்தழிந்தான். அதன்பின் சிறையிலிருந்த இருவரையும் அந் நிறையுடையாளையும் அழைத்துக்கொண்டுவந்து விடூரதன்பால் விடுத்தான். அவன் மிகமகிழ்ந்து தன் புதல்வியை இவனுக்கே நிலவுரிமையோடு மணம்புரிந்து தந்தான். விரும்பியபோகங்களை அமைந்துதுய்த்து அனைவரும் இன்புற இவன் ஆட்சிபுரிந்து சௌரி, சுசக்கிரன், விக்கிரமன், கிரமன், பலன், பலாகன், சண்டன், பிரசண்டன் பிரவிரன் முதலிய குமரர்களைப்பெற்று அமரரும் போற்ற விளங்கியிருந்தான். களவு சூது கள்ளுண்ணல் முதலிய குற்றங்களையெல்லாம் முற்றும் நீக்கிக் கொடியரைக்கடிந்து குடிகளைக்காத்தான். அதனால் இவன் பெரும்புகழடைந்தான். குடிபுறங்காத்து குற்றங்கடிதல் வேந்தனுக்கு வடு அன்று தொழிலாம் என்பதை

உலகம் இவன்பாலுணர்ந்தது. விரிவை மார்க்கண்டேயத்தி
காண்க.

பரிசனம் பகைவர் கள்வர் படர்தரு முயிர்கடாமென்
றுரைசெய் ஐந்திடத்தி னுனும் உலகிடை யிடையூறெய்தா
வரிசையிற் காத்து நீதி வழுக்கினோர் தம்மை மொத்திக்
கரிசறப் பொருளுங் கோடல் காவலர் கரும மைந்தா.
(விநாயகபுராணம்)

மாநிலங்கா வலனாவான் மன்னுயிர் காக்குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ.
(பெரியபுராணம்.)

குற்றம் களைந்து தன் குடிகளைக்காத்தல் கொற்றவன் தொழி
லாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

550 கொற்ற அரக்கரைமுன் கொன்றழித்தும் சிராமன்
குற்றமற்ற தென்னே குமரேசா—முற்றும்
கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். (ய)

இ—ள்.

குமரேசா! அரக்கர் பலரைக் கொன்றழித்தும் இராமர் ஏன் கொலைக்குற்றமின்றி நின்றார் எனின், கொலையின் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ் களைகட்டதனொடு நேர் என்க.

ஒறுத்தல் நேர் என ஒட்டிக்காண்க.

கொடுமைக்கும் ஒறுத்தற்கும் கொலை தனித்தனி கூடநின்றது. கொலையிற் கொடியாரைக் கொலையின் ஒறுத்தல் எனக் கூட்டிக்கொள்க.

வேந்து = அரசன். பைங்கூழ் = பசியபயிர்கள்; உணவைக் குறிக்கின்ற கூழ் என்னும் சொல் அதற்குக் காரணமாகிய பயிர்களை யீண்டு உணர்த்தி நின்றது.

களை என்றது பயிரின் வளர்ச்சிக்குத் தடையாக இடையே கிளைத்து நிற்கும் இழிந்த புல் பூடுகளை; களைதற்கு உரியது ஆதலால் அது களை என நின்றது. களைதல் = நீக்கல், அழித்தல்.

கட்டதனொடு = களைந்ததனோடு. அகழ்ந்தது என்னாது கட்டது என்றார் முதிர்வு நோக்கி.

மேல், குற்றமுடையவரைக் கடிதல் அரசனுக்கு வடுஅன்று; தொழிலாம் என்றார்; அக் கடிதல் அவனுக்கு மிகவுரிமையாம் என்பதை இதில் உவமையால் விளக்கினார்.

கொடியாரைக் களையோடு நேரவைத்தது, உலகிற்கு அவரால் பயனின்மையும் இடருண்மையும் தேர என்க.

கொலைத்தொழிலில் கொடியவரை அரசன் கொலையாலொழித்தல் பசியபயிர்களுக்குக் களையைக் களைந்ததனோடு ஒக்கும் என்பதாம்.

உழவன் களையைக் கடிந்து நீக்கிப் பைங்கூழைப் பேணுதல் போல் அரசன் கொடியரைச் சினந்தொழித்துக் குடிகளைப் பேண வேண்டும் என்பது கருத்து. களையை அகழ்ந்தொதுக்கிப் பயிர்களைப் பேணவில்லையானால் அவை மடிந்துசாயும்; அதனால் உழவன் கழிந்து தேய்வான்; அதுபோல் கொடியாரைத் தொலைத்தொழித்துக் குடிகளைக் காக்கவில்லையானால், அவை குலைந்து தேய அதனால் அரசன் இழிந்து போவான் ஆதலால் ஒறுத்தலே அவனுக்கு உறுதியாம் என்க.

வேலியுடையானது வினையைவிளக்கி ஞாலமுடையானது நலந்துலக்கிய நயத்தை இதில் நயந்து காண்க.

பயிர்களுக்கு இடர்விளைக்கும் கடிய பூண்டுகள்போல் உயிர்களுக்குத் துயர்இழைக்கும் கொடியவர்களை அரசன் கொன்றொழிக்கலாம் என்பது குறிப்பு.

குற்றம் கடிந்து குடிகளைத் திருத்த வேண்டுமேயன்றி அரசன் அவரைக் கொன்றொழிக்கலாமோ? எனின், கடியலாகாவாறு அது காழ்ப்புக்கொண்டால் அதனையுடையவரை அடியோடு தொ

லைக்கவே வேண்டும் என்று இஃது உணர்த்தியதென்க. கொலைத் தண்டமும் அரசர்க்குக் குலத்தொண்டாம் என்பது குறிப்பு.

தீயாரை ஒடுக்கித் தேய்த்தலும் தூயரைநாடிக் காத்தலுமே செங்கோன்மையாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமன் பால் உணரப்படும்.

## கதை

இராமபிரான் விசுவாமித்திரரது வேள்வியைக் காத்துநின்ற பொழுது கொடிய அரக்கர் பலர் அங்குக் கொதித்து வந்தனர். அவரைக்கண்டு முனிவரனைவரும் அஞ்சி நடுங்கி இவர்பால் அடைந்து அலறினர்.

நஞ்சட எழுதலும் நடுங்கி நாண்மதிச்
செஞ்சடைக் கடவுளை யடையும் தேவர்போல்
வஞ்சனை யரக்கரை வெருவி மாதவர்
அஞ்சன வண்ணநின் அபயம் யாமென்றார்

இராமர் அவர்தம் கலக்கத்தைக் கலந்து நோக்கினார். கொலைத்தொழிலாளரைத் தொலைக்கவேவேண்டுமென்று குறித்தார்.

கவித்தனன் கரதலம் கலங்கல் நீரெனச்
செவித்தலம் நிறுத்தினன் சிலையின் தெய்வநாண்
புவித்தலம் குருதியின் புணரி யாக்கினன்
குவித்தனன் அரக்கர்தம் சிரத்தின் குன்றமே. என்றபடி

கொன்று குவித்தார். பின்னர்த் தண்டகவனம் புகுந்தபொழுது அங்கிருந்த மாதவரெல்லாரும் வந்து அரக்கரால் தமக்குறும் அல்லலெல்லாவற்றையும் சொல்லியழுதார்.

இரக்கமென் றொருபொருள் இலாத நெஞ்சினர்
அரக்கரென் றுளர்சிலர் அறத்தி னீங்கினார்
நெருக்கவும் யாம்படர் நெறியலா நெறி
துரக்கவும் அருந்தவத் துறையுள் நீங்கினேம். என்று

துயருரைகள் பலகூறி உளைந்தார். அவர்தம் மறுக்கத்தை நோக்கி இவர் இரக்கமீக்கூர்ந்து அவ் அரக்கர் கொடுஞ்செயலை வெறுத்தார். புகல் புகுந்திலரேல் புறத்தண்டத்தின் அகல்வரேனும்

என் அம்போடு வீழ்வரால் என்று அவர்க்கு ஆதாவு கூறியருளி அகன்றார். இடையே வந்து தடுத்த கரன்முதலிய கொடியர் பலரையும் கொன்று தொலைத்து, இலங்கை புகுந்து அரக்கர் குலத்தை அறுத்து, அல்லலைத் தீர்த்துத் தம் வில்லாண்மையை வியனுலகெங்கும் விளங்கநிறுத்தி, எல்லா வுயிர்களையும் நல்ல நெறியில் செல்லும்படி செய்து, இராம ராச்சியம் என்று இன்றும் வியந்து எவரும் சொல்லும்படி செங்கோல்செலுத்தி, வேந்தியலுக்கு முன் எந்தி நோக்கும் ஓர் இயலொளியாக இவர் இலங்கி நின்றார். அரக்கர் பலரைக் கொன்றிருந்தும் கொலைப்பழியின்றி இவர் குலப்புகழ்கொண்டார். ஆதலால் கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ் களைகட்டதனொடு நேர் என்னும் உண்மைக்கு இவர் நேர் நின்று திகழ்ந்தார்.

அறந்தலை நிறுத்தி வேதம் அருள்சுரந் தறைந்த நீதித்
திறந்தெரிந் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத் தேக விண்டு
பிறந்தனன் தன்பொற் பாதம் ஏத்துவார் பிறப்பறுப்பான்.

இஃது இராமரைக்குறித்து இராவணனிடம் அனுமான் கூறியபோது கூறப்பட்டது. இவரது காட்சியும், அரசகுலமாட்சியும், செங்கோல் செலுத்திய திண்மையும், உலகம்காத்த ஒண்மையும், வேறுபல உண்மையும், இதில் விளங்குதல் காண்க.

கருவிநஞ் சாதி தம்மால் காமரா ருயிரைக் கொல்வோர்
வெருவரச் சூறைகொள்வோர் மேவிபா றலைப்போர் கள்வர்
உருவளர் பிறனில் வேட்போர் உவர்முத லோரைக் கோறல்
பருவரு பாவ மன்று பயிர்க்களை களைதல் போலாம்.
(விநாயகபுராணம்.)

தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன் சொன்ன ஆகம நூல்நெறி
எத்தண்டமுஞ் செயும் அம்மையி லிம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன்கடனே. (திருமந்திரம்.)

கொடியவரைத் தொலைத்து அரசன் குடிகளைக்காக்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

### இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

யார்மாட்டும் கோடாமல் நேர்மையாய் நின்று நீதி செலுத்துவோனே செங்கோல் மன்னனாவன். அவன் கோலை நோக்கியே குடிகள் வாழும். வேதமும் அறமும் அவன் கோலால் விளங்கி நிற்கும். குடிகளைத்தழுவி அரசன் கோல் செலுத்தின் உலகம் அவன் அடிகளைத்தழுவி நிற்கும். செங்கோல் மன்னவனாட்டில் எல்லாவளங்களும் செறிந்து விளங்கும். தன் செங்கோலே மன்னவனுக்குக் குன்றா வெற்றியைக்கொடுக்கும். யாதும் தீதுறாதவாறு அக்கோல் அவனை எக்காலமும் காக்கும். நேர்ந்து முறை செய்யாதவன் தாழ்ந்து கெடுவான். குற்றங்களைந்து தன் குடிகளைக் காத்தலே கொற்றவன் தொழிலாம். உழவன் களைகளைக் களைந்து பயிர்களைப் பேணுதல்போல் அரசன் கொடியரைத் தொலைத்துக் குடிகளைக் காக்கவேண்டும்.

ருரு—வது செங்கோன்மை முற்றிற்று.

---

## 56-ம் அதிகாரம் கொடுங்கோன்மை.

அஃதாவது கொடுங்கோலினது தன்மை. இது செங்கோன்மைக்கு மாறாயது. செங்கோலினது இயல்பை விதிமுகத்தால் மேல் விளக்கினார்; அஃதுறுதிபெற எதிர்மறை முகத்தானும் இதில் உணர்த்துகின்றார் ஆதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

551 கொற்ற மகிடன் கொடியனென னுலகோர்
குற்றமுறச் சொன்னார் குமரேசா—உற்ற
கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து. (க)

இ—ள்.

குமரேசா! மகிடன் என்னும் அசுரவேந்தனை ஏன் அனைவரும் கொடியன் என்று கூறினார் எனின், அலைமேற்கொண்டு

அல்லவை செய்து ஒழுகும் வேந்து கொலைமேற் கொண்டாரின் கொடிதே என்க.

வேந்து கொடிதே என எந்திக்காண்க. ஏகாரம் தெளிவு தோன்ற நின்றது. இன் உருபு எல்லைப்பொருளது.

அரசன் என்னும் உயர்திணைப்பொருளை உணர்த்தி நிற்பி னும் வேந்து என்பது அஃறிணைச்சொல் ஆதலால் கொடிது என் னும் பயனிலையோடு அது முடிய நின்றது.

அலைமேற்கொண்டு = அலைத்தலையே உரிமையாகக்கொண்டு: அலைத்தல் = வருத்தல், துன்புறுத்தல். அலை என்னும் முதனிலை யே இதில் தொழிற்பெயர்ப்பொருளை உணர்த்தி நின்றது.

அல்லவை = நீதியல்லாதவற்றை; அநீதிகளை என்றபடி.

வேந்து என்னும் பண்புப்பெயர் பன்மை நோக்கியதெனின் கொண்டார் என்னும் உவமையோடு மாறுபாடின்றாம்; அன்றேல் பால்மயங்கி வந்த வழுவமைதி என்று கொள்க.

மிகுதலும் குறைதலும் தாழ்தலும் உயர்தலும்
பான்மாறு படுதலும் பாகுபா டுடைய. என்றது தண்டியலங்காரம்.

அலைத்தலை மேற்கொண்டு அல்லவற்றைச் செய்து ஒழுகும் அரசன் கொலைத்தொழிலை மேற்கொண்ட கொலையரினும் கொடி யன் என்பதாம்.

கொலைஞரால் நிகழ்வது உயிரழிவு ஒன்றே; அவ்வளவோடு அஃது அப்பொழுதே தீரும்; கொடுங்கோல் மன்னனால் பொரு ளழிவு புலமழிவு முதலாகப் பல இழவுகள் நாளும் நாளும் குடிகளு க்கு உளவாகு மாதலால் அவரினும் இவன் கொடியன் என்றார்.

செங்கோல் மன்னன் கொலையிற் கொடியாரை ஒறுத்து உல கைக் காப்பன் என்று மேல் அதிகாரத்தின் இறுதியில் உறுதிபெற உரைத்தார்; அதற்கு மாறாக அக்கொடுமையைத் தானே மேற் கொண்டு கொடுங்கோல் மன்னன் குடிகளை வருத்துவன் என்று இதன் முதலில் உணர்த்தினார்.

தம் தலைமேற்கொண்டு போற்றத்தக்க அரசன், அலைமேற் கொள்வனுயின் அவனைக் கோலைமேற்கொண்டவரினும் கொடியனுகவே குடிகள் கருதவேண்டும் என்பது குறிப்பு.

குடிகளைத் துன்புறுத்திக் கொடுமைகளைச் செய்கின்ற அரசன் கொலைஞனுகவே கருதப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மகிடன்பால் உணரப்படும்.

## கதை

**ம**கிடன் என்பவன் இரம்பன் என்னும் அசுர வீரனுடைய புதல்வன். இவன் நெடுந்தவங்களைச் செய்து பெருந்திருவடைந்து மாகிசம் என்னும் நகரிலிருந்து அசிலோமன், மகோதத்தன், உதாக்கன், பந்தகன் முதலிய அசுரவீரர் பலரைத் துணைவராக அமைத்துக்கொண்டு அரசுபுரிந்தான். தன் செல்வக்களிப்பால் எல்லாவுயிர்களுக்கும் இவன் அல்லலே விளைத்தான். பின் விண்ணையும் மண்ணையும் தன்னடிப்படுத்த விரும்பினுன். எங்கும்போய் வெகுண்டமர்புரிந்தான். இவன் பொல்லாச்செயலை நினைந்து எல்லாரும் வருந்தினர். தன் மரபினருள்ளும் வல்லமரிழைத்து இவன அல்லன செய்தான். கடியசொல்லும் கொடிய செயலுமுடையனுய் எவர்க்கும் கொடுமையே செய்துவந்தானுதலால் அனைவரும் இவனுக்குப் பகைவராயினுர்.

கொடியமன் னவர்க்குக் குடிகளே ஒன்னுர் கோட்டையே
அமர்க்களம் அவர்தம்
அடிகடோய்நிலமெங் கணும்படு குழியாம் அயின்றிடும்
அன்னமும் விடமாம்
நெடியவா சனமே காசனமேடை நிமிருழையோர்நமன் தூதர்
கடிமனை மயானக் காடெனிற் கொடுங்கோற் காவலருய்யுமா
றுளதோ.

என்றபடி எல்லாரும் இவனை ஒழிக்கமுயன்றுர். முடியாமையால் முடிவில் பரமனை நினைந்து மனமுருகியழுதார். அவர் சத்தியின் ஒரு கலையை யேவினுர். அஃதோர் கரியவடிவாய்த்திரண்டுவந்து அரிய போரையாற்றி இவனை அழித்துப்போயது. அவ்வுருவையே காளியென்பர். அரசனுயிருந்தும் கொடுங்கோலனுகி உயிர்

களுக்கு அல்லலைச் செய்ததால் கொலைஞனாகவே கருதி இவன் கொல்லப்பட்டான். கொலைமேற்கொண்டாரிற் கொடிதே அலை மேற் கொண்டு அல்லவை செய்தொழுகும் வேந்து என்னும உண்மைக்கு இவனே என்றவனாயினான். விரிவைத் தேவி பாகவதத்தில் காண்க.

இன்று கொளற்பால நாளைக் கொளப்பொருள்
நின்று குறை யிரப்ப நேர்படான்—சென்றொருவன்
ஆவன கூறின் எயிறலைப்பான் ஆறலைக்கும்
வேடலன் வேந்து மலன். ( நீதிநெறிவிளக்கம். )

கொலைஞரினும் கொடுங்கோல் மன்னன் கொடியனாவன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

552 வென்றிமிகு சம்பான்போய் வேண்டியபோதேனுலகோர்
குன்றிமிக நொந்தார் குமரேசா—கொன்றியலும்
வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. (உ)

இ—ள்.

குமரேசா! சம்பான் போய்க் கொடு என்று கேட்டபொழுது என் அனைவரும் மிக நடுங்கினர் எனின், கோலொடு நின்றான் இரவு, வேலொடு நின்றான் இடு என்றது போலும் என்க.

வேலொடு நின்றான் என்றது கள்வனை; இடு என்ற குறிப்பால் இஃது உணர நின்றது. வேறொருவரொடும் கூடாமல் தனக்குரிய கொலைக்கருவியை மாத்திரம் கைக்கொண்டு ஆறலைக்கும் கள்வன் தனியே நிற்பனாதலால் வேலொடு என்று அவன் நிலையை விசேடித்தார். ஒடு என்பது தனக்குரிய உடனிகழ்ச்சிப் பொருளை இதில் உணர்த்தாது அடையாய் நின்று நிற்றலை விளக்கிற்று.

கீழே வைத்து விடு; இல்லாவிடின், உன் உயிரை வாங்கி விடுவேன்; என்னும் குறிப்பினதாதலால் ஈ, தா, கொடு என்னும் இரைப்புரைகளுள் ஏதேனும் ஒன்றை இயம்பாமல் தன் கொடுமை தோன்ற இடு என்றான்.

மேல், கொடுங்கோல் மன்னன், கொலைஞரினும் கொடியன் என்றார்; இதில், அவன் கள்வனினும் கடியன் என்றார்.

இறைப்பொருளாயின் தாழ்மை கொணர்ந்து குடிகள் இறந்து விடுவாராதலால் அஃதன்றெனத் தெளிதற்கு இரவு என்றார்.

கோலைக் கைக்கொண்டுநின்ற அரசன் குடிகளிடம் ஒன்றை விரும்பிக் கேட்டல், வேலைக்கைக்கொண்டு நின்ற கள்வன், வழிச்செல்வோரை மறித்து பொருளைக் கொடுத்துவிட்டுப்போ என்று வெருட்டியதோடு ஒக்கும் என்பதாம்.

கேட்டதைக் கொடுக்கவில்லையானால் ஏதேனும் கேட்டை விளைத்து விடுவானே! என்று குடிகள் அஞ்சி நடுங்குமாதலால் அரசன் இரப்பைக் கள்வன் பறிப்போடு ஒப்பித்தார்.

ஈகையை என்றும் எஞ்சாமற் கொள்ளுதலே அரசற்கியல்பு அதனை விடுத்து இரப்பையும் மேற்கொள்ளல் அவற்கு இறப்பவும் இழிவாம் என்க.

அரசனாயிருப்பவன் இரத்தலை மேற்கொள்ளலாகாதென்பதும், கொள்ளின் அது கொடுங்கோன்மையாம் என்பதும், அக் கொடுங்கோலால் குடிகளுக்குப் பெருங்கேடுகள் உளவாம் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை சம்பரனால் உணரப்படும்.

## கதை

சம்பரன் என்பவன் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர்த் தண்டக வனத்தை யடுத்திருந்த வைசயந்தி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த ஓர் அசுரவேந்தன். இவனுக்குத் திமித்துவசன் எனவும் பெயர். இவன் சிறந்த போர் வீரன். நிறைந்த வரபலங்களையுடையவன். நினைத்த இடங்கட்கெல்லாம் நினைத்தவாறே சென்று மீளவும், எவரோடும் எதிர் நின்று பொருது வென்றிபெறவும் வல்லவன். விசாலன், சண்டன், வேகன், என்னும் அசுர வீரர் மூவரும் இவனுக்கு அமைச்சராகி அமர்ந்திருந்தனர். காமகலை என்னும் ஓர் அழகிய மங்கையைத் தனக்கு மனைவியாகக் கொண்டு அரிய போகங்களை நுகர்ந்து இவன் அரசுபுரிந்து வருங்கால் இவ்வுலக முழுவதையும் தனக்கே உரிமையாக்கிக்

கொள்ள விழைந்தான். இடங்கடோறும் சென்று உயர்ந்தபொருள்களையெல்லாம் தனக்கே கொடுத்துவிடவேண்டுமென்று உடையவர்களிடம் கேட்டான். இல்லையென்று சொன்னால் இல்லையும் உயிரையும் தமக்கு இல்லையென்று செய்து விடுவனே! என்று அல்லலுற்றஞ்சி உள்ளதில் உயர்ந்ததை எல்லாரும் இவனுக்கு உதவியொழிந்தார். இம்மண்ணுலகத்தோடு அமையாமல் விண்ணுலகத்தும் சென்று இடையிடையே பலகொடுமைகளை விளைத்து முடிவில் வந்து இந்திரபதத்தையே தன்பால் தந்துவிடும்படி இந்திரனிடம் ஒரு தூதுவனை ஏவினான். அவ் அமரர்கோனும் இவனுடன் அமர் செய்ய ஆற்றாது தன் அரசிழந்துபோனான். மூவுலகுக்கும் தான் ஒருவனே முதல்வனென்று இவன் உளங்களித்திருந்தான். இங்ஙனமிருக்கையில் அரசிழந்துபோன இந்திரன் தசரதனிடம் வந்து இவன் கொடுமையை மொழிந்து தன்னைக் காத்தருளும்படி வேண்டினான். அவ்வீரவள்ளல் விரைந்தெழுந்து போரணி புனைந்து, அதுபொழுது மணந்து வந்திருந்த புதிய மனைவியாகிய கைகேசியும் தொடர்ந்தனளாதலால் அவளையும் உடன்கொண்டு சென்று, பொன்னுலகைத் தன்வசம் செய்துள்ள இக்கொடுங்கோல் மன்னனோடு நெடும்போர் புரிந்து, வேரற வென்று மீட்டி நேருற நின்று சின்னாள் வரையும் காத்திருந்து பின்னொரு நன்னாளில் இந்திரனுக்கே அதனை முடிசூட்டித் தந்து திருவயோத்திக்கு வந்தான். கொடு என்று இச்சம்பரன் வந்து கேட்குங்கால் கள்வனைக் காட்டில் கண்ட வழியினர் போல் நாட்டிலுள்ளவர்களெல்லாம் நடுங்கி நொந்தனர். வேலொடு நின்றான் இடு என்றது போலும், கோலொடு நின்றான் இரவு என்னும் உண்மைக்கு இவன் இலக்காயிருந்தான். விரிவை அயோத்தி மான்மியத்தில் காண்க.

இன்றளிர்க்கற்பகநறுந்தேன் இடைதுளிக்கும் நிழலிருக்கை யிழந்துபோந்து
நின்றளிர்க்குந் தனிக்குடைகீ ழொதுங்கிக் குறையிரந்து நிற்பநோக்கிக்
குன்றளிக்குங் குலமணித்தோட் சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்துநீகொ
டன்றளித்த அரசன்றோ புரந்தரனின் றாள்கின்ற தரசவென்றான். [ண்

இது, விசுவாமித்திரர் தசரதனை நோக்கி யிசைத்தது. சம்பரனது கொடுங்கோன்மையும், அவன் வெங்கி யிரந்து வேந்தலைத்து நின்றதும், மேற்குறித்த உண்மையும், இதில் விளங்குதல் காண்க

உறையில் வாளொடு யாவழங் குறுவனக் கோடி
மறவ னோர்பொருள் தருகென இரத்தலை மானும்
இறைவன் வாழ்குடி தன்னிலோ ரொருபொரு ளிரத்தல்
அறவ னாகிய நீயிதை யறிந்திலை யந்தோ. (பிரபுலிங்கலீலை.)

அடிகள் கருத்தை இஃது அடியொற்றி நிற்றல் காண்க.

அரசன் இரவினை மேற்கொள்ளல் கொடுங்கோன்மையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

553 நேடிமுறை செய்யா நிருகனுயர் நாடிழந்து
கூடினன்கே டென்னே குமரேசா—கோடாமல்
நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறும் நாடு கெடும். (௩)

இ—ள்.

குமரேசா! நிருகன் நாடிமுறைசெய்யாமையால் ஏன் நாடிழந்து கெட்டான் எனின், நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன் நாள்தொறும் நாடு கெடும் என்க.

தொறும் என்னும் இடைச்சொல் நாளின் பன்மையோடு தொழிலின் பயில்வுதோன்ற நின்றது. அது பெயராக நின்றால் பசுக்கூட்டத்தை யுணர்த்தும். அர் விகுதி பெற்றுத் தொறுவர் என்று வந்தால் ஆயரைக் குறிக்கும்.

நாள்தொறும் நாடி = தன் நாட்டில் நிகழும் குற்றங்களை ஒவ்வொரு நாளும் தவறாமல் ஆராய்ந்து. வினைக்கு ஏற்ற செயப்படுபொருள் இதில் இணைக்கப்பட்டது. முறைசெய் என்னும் குறிப்பால் குற்றம் என்பது குறிக்க நின்றது.

மேல், கோலொடு நின்றான் இரப்பு, குடிகளுக்குக் கொடுந் துயர் விளைக்கும் என்றார்; அங்ஙனம் இரக்குதொகுத்தாலும் அரச திருவினை அவன் விரைவில் இழந்து போவான் என்று இதில் விளங்க உணர்த்தினார்.

தன் நாட்டில் நிகழ்கின்ற குற்றங்களை நாள்தோறும் நன்கு ஆராய்ந்து தக்கபடி முறை செய்யாத அரசன் நாளும் நாளும் அதனை இழந்து தேய்வான் என்பதாம்.

தன் விளை நிலத்தில் தோன்றும் களையைக்கடிந்து வேலி முதலியன ஆற்றி நாளும் சென்று உழவன் போற்றாவிடின் அது பாழாம்; அதுபோல் தன் நாட்டின் நிலைமையை நாள்தோறும் ஆராய்ந்து குற்றங்கடிந்து குடிகளைப் பேணுறுபின் அதன் பயனை யெய்தாமல் அரசன் அழிவான்; ஆதலால், "நாடிச்செய்யா மன்னவன் நாடுகெடும்" என்றார். உடைமை வினை உடையான் மேல் நின்றது.

கேட்டை நாட்டுக்கே கூட்டின், முறை செய்யாத அரசனது நாடு நாள்தோறும் கேடுறும் என்று கொள்க. இனி, மன்னவன் ஆள்தோறும் நாடுகெடும் என்று கொண்டு, அவன் இருக்கும் வரையும் அது விளங்காது எனினுமாம்.

நாடோறும் நாடி முறைசெய்தலே அரசன் கடமையாம் என்பதும், அச் செயலால் அவனுக்குக் கேடாத இன்பம் கூடும் என்பதும் குறிப்பு.

நாடி முறை செய்யாதவன் கேடடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நிருகன்பால் உணரப்படும்.

## கதை

நிருகன் என்பவன் சூரியகுலமன்னனாகிய வசுதரனுடைய புதல்வன். இவன் அருங்கலை விநோதன். பெருங்கொடையாளன். இவனது காலம் இக்குவாகு மன்னனுக்குப் பின்னதாம். இவன் அமைச்சர் சிலருடன் அமர்ந்திருந்து அரசுபுரிந்துவந்தான் இவன் மனைவிபெயர் சயமதி. இவன் சிறந்த அறிவுடையனாயினும் அரச போகங்களில் அழுந்திய மனத்தினனாதலால் அந்தப்புரத்திலேயே யடங்கியிருந்தான். அவ் வீட்டின்பமென்றே தன் வீட்டுளின்பத்தை இவன் விரும்பித்துய்த்து வியந்து திளைத்தான். அதனால் நாட்டைநாடும் நாட்டம் குன்றினன். குடிகள் வாட்டமடைந்து வரினும் அதனைக்கேட்டல் துறந்தான். அதனால் கேடு

கள் பல தோன்றின. இங்ஙனமிருந்து வருங்கால் புட்கரம் என்னும் நகரிலிருந்து தன்பால் வந்து முன்புதானம் வாங்கிச்சென்ற அந்தணரிருவர் ஓர் ஆவின்பொருட்டு எனது எனது என்று பெருவாதம் புரிந்து முடிவில் இவன்பால் முறையிடவந்தார். நெடுநாளாக அவர் எதிர்பார்த்திருந்தும் இறைபுளவேனும் இரங்கிவந்து இவன் இறைபுரிந்திலன். வந்தவர் ஒருநாள் வருந்திச் சலித்தார். அவ்வமையம் அங்கோர் வம்பன் வந்தான். பார்ப்பீராதலால் நும்மை அரசன் பாரான் என்று அவன் பகர்ந்துபோனன். அவ்வேதியரிருவரும் அரசனது நீதியை வெறுத்துத் தம் வழக்கிலிருந்த பசுவை வழியே சென்ற ஒருவனுக்கு வழங்கிவிட்டு மறை முறையோடு இவனை வைபத்துணிந்தார். "ஒரு நீதியும் செய்யாமல் ஓதிபோல் உள்ளே ஒடுங்கியிருக்கின்றாய்; ஆதலால், நீ ஓதியாய் ஒழிக என அவர் ஓதி ஒழிந்தார். ஓதி = ஓந்தி அவர் உரைத்தபடியே அரசன் ஓந்தியா யொழிந்தான். நாடி முறை செய்யாமையால் அரசனுக்கு இக்கேடு வந்ததேயென்று அனைவரும்கூடி அழுதிரங்கினர். அதன்பின் நாடுங்கெட்டு நலமிழந்தது. நாடொறும் நாடி முறை செய்யா மன்னவன் நாடொறும் நாடு கெடும் என்னும் உண்மையை உலகம் இவன்பாலுணர்ந்தது. விரிவை மனுமுறையில் காண்க.

மன்னவன் கோயில் தன்னில் மறையவர் விரைந்து வந்து
பன்னெடுங் காலநின்று முறையிடப் பார்த்து வேந்தன்
என்னகா ரணநீர் வந்து முறையிட்ட தென்னக் கேளா
அன்னவன் றன்னைக் கோம்பி யாகெனச் சபித்தாரன்றே.

போயிரு வருமக்கோவைப் புரையறு தவத்தின் மிக்க
தூயமா முனிவர்க்கீந்து கொன்றுகா ரியத்திற் போனார்
ஆயமன் னவனுங் கோம்பி யாகியாழ் கிணற்றில் வீழ்ந்தான்
தேயநா டோறு நாடாத் திறன்மன்னன் கேடி தென்றான்.

இராமாயணம்

இராமபிரான் அரச தருமங்களை இளவலுக்கு உணர்த்துங்கால் இவை உரைக்கப்பட்டன. நாடி முறை செய்யாதவன் நாடிழந்து கெடுவான் என்பதும், மேற்குறித்த சரிதவுண்மையும், இவற்றுள் விளங்குதல் காண்க.

நாடோறு மன்னவன் நாட்டில் தவநெறி
நாடோறு நாடி யவனெறி நாடானேல்
நாடோறு நாடு கேடு மூட னண்ணுமால்
நாடோறுஞ் செல்வ நரபதி குன்றுமே. திருமந்திரம்.

முறை செய்யாதவன் அரசிழந்து கெடுவான் என்பது இத
னுல் கூறப்பட்டது.

---

554 அன்றேன் அவிச்சித் தரசிழந்து தன் செயலால்
குன்றி இழிந்தான் குமரேசா—நின்றிருந்த
கூழுங் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு. (ச)

இ—ள்.

குமரேசா! தன் கொடுஞ் செயலால் எல்லா நலங்களை
யும் இழந்து ஏன் அவிச்சித்து இழிந்து நொந்தான் எனின், கோல்
கோடிச் சூழாது செய்யும் அரசு, கூழும் குடியும் ஒருங்கு இழக்
கும் என்க.

அரசு இழக்கும் என அமைத்துக் காண்க.

கூழ் என்றது பொருளை. கோல் கோடி = அரசமுறைதவறி. சூழ்
தல் = எண்ணுதல், ஆராய்தல். அவன் கூழுக்கே முதலில் இழவு
கூடுமாதலால் அம்முறை நோக்கி அது முன்னின்றது.

மேல், நாடி முறைசெய்யாத மன்னவன் நாடு கெடும் என்றார்;
இதில், பொருளும் குடியும் அவன் பொருந்தாதொழிவன் என்றார்.

ஏதும் ஆராயாமல் நீதி தவறிச் செய்யும் அரசன், செல்வத்
தையும் குடிகளையும் சேர இழந்து விடுவான் என்பதாம்.

அரசன் கொடுங்கோலனுயின் அரசநிலை இழந்தே போ
வான் என்பது கருத்து. இவ்வுண்மை அவிச்சித்துபால் உணரப்
படும்.

## கதை

அவிச்சித்து என்பவன் சந்திரகுல மன்னனுகிய அயாதி
மரபில் வந்தவன். கரந்தமன் என்னும் வேந்தன் குமான். இவன்

திண்ணிய திறலுடையனாயினும் நுண்ணிய அறிவில்லாதவன். தனது முறைமையை மறந்து இவன் நெறி பிறழ்ந்து திரிந்தான். எங்கேனும் அரசகுமரிகளுடைய திருமணங்குறித்துச் சுயம்வரம் நிகழின் அங்கு இவன் புகுந்து அமரினை விளைப்பான். கௌரி, சுமித்திரை என்னும் மனைவியரிருவரோடு இவன் மருவியிருந்தும் அமைதியுறாமல் அல்வழியலைந்தான். இவனது கொடுங்கோன்மையை நினைந்து அனைவரும் வருந்தினர். ஒருநாள் விசிதபுரத்து வேந்தன் மகளாகிய வைசாலினியை விழைந்து அங்குச் சென்று அமராடினான். அதில் இவன் நிலைகுலைந்தான். தான் நாடிவந்த மங்கைமுன் தன் பீடழிய நேர்ந்ததேயென்று இவன் நாணி நொந்தான்; ஆயினும், அவள் இவனையே மணந்து கொள்ள இசைந்தாள். பார்த்தார் பலர் காண யான் மானபங்கமுற்றேனாதலால் இனி யாரையும் காதலியேன் என்று இவன் மறுத்துச்சென்று அனைவரும் வெறுத்ததால் தன் அணிநகர் புகாமல் ஓர் அடவியிற் புகுந்தான். அவளும் இவனுக்கன்றி வேறெவனுக்கும் தன்னுடல் உரியதன்றென்று உறுதிகூறி விரதமேற்கொண்டு தனிவனமொன்றில் தங்கியிருந்தாள். நாள்பல கழிந்தன. திருடகேசி என்னும் அரக்கனொருவன் கண்டு விருப்பமீக்கூர்ந்து அவளையெடுத்துக்கொண்டு விரைந்து போகையில் "ஐயகோ! யான் அவிச்சித்தன் மனைவி; என்னையேன் இவ் அல்லற்படுத்துகின்றாய்" என்று அவள் அலறியழுதாள். அதனையிவன்கேட்டு அதிவேகமாகச் சென்று அவ் அரக்கனைக்கொன்று அவளை மீட்டான். அதன்பின் நிகழ்ந்ததை யோர்ந்து அவளோடு உவந்து கலந்து அங்கேயே இவன் உறைந்திருந்து ஒரு புதல்வனைப் பயந்தான். அவனுக்கு மருத்தன் என்று பெயர். தந்தை அரசிழந்திருப்பதைப் பருவமெய்தியபின் அவன் அறிந்து வருந்தி அதனை அடையமுயன்றான். அரசுக்குரிய இயல்பினை மறந்து தன் செயலால் மேல் நிகழ்வதையும் எண்ணாமல் மதமிகுந்து செய்ததால் இவ் இழவுவந்ததேயென்று இவனும் பின் எண்ணி நொந்தான். கூழும் குடியும் ஒருங்கிழக்கும் கோல் கோடிச் சூழாது செய்யும் அரசு என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்தது. விரிவை அயாதியத்தில் காண்க.

கொடுங்கோல் மன்னன் குடியும் பொருளும் ஒருங்கே யிழப்பான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

555 நீலி துயரால் நெடுஞ்செல்வம் தேய்ந்தவசு
கோலிழந்தான் என்னே குமரேசா—ஞாலமிசை
அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. (ரு)

இ—ள்.

குமரேசா! நீலியை வருந்தியழுமாறு செய்தவசு பின் செல்வமும் கோலும் என், சேர இழந்தான் எனின், அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண்ணீர் அன்றே செல்வத்தைத் தேய்க்கும் படை என்க.

கண்ணீரைப் படைஎன்று உருவகஞ்செய்ததற்கேற்பச் செல்வத்தை மரம் என்னுமையால் இஃது ஏகதேசவுருவகம்.

அல்லற்பட்டு = துன்பமுற்று

ஆற்றாது = பொறுக்கமாட்டாமல். படை என்றது ஈர்வாளை; தேய்க்கும் என்ற வினைக்குறிப்பால் இது தெரிய நின்றது. ஈர்வாள் = மரத்தையறுக்கின்ற ஒருவகைக் கருவி.

அல்லற்பாடும் ஆற்றாமையும் அழுகைக்குக் காரணமாகுமாதலால் அதன் இயல்பு தோன்ற முதலில் நின்றன. கள்ளன்றே களிப்புக்குக் காரணம் என்றாற்போல அன்றே என்னும் வினாவுருவம் தொன்று தொட்டே துணியப்பட்டுள்ளமை தோன்ற நின்றது.

நீர் கண்ணையும், அக்கண் அழுதலையும், அஃது ஆற்றாமையையும், அஃது அல்லற்பாட்டையும், நிரலே புல்லி நின்று செல்வத்தைத் தேய்த்தற்குரிய நிலைமையை விளக்கின. மேல், அரசன் முறை தவறின் உயர்திருவும் அவனைவிட்டுத்தவறிவிடும் என்றார்; நிறை செல்வமாயிற்றே எவ்வாறு அது குறைவுபடும் என ஐயுறுவார்க்கு அதனைக் குறைத்தற்கு வேறு கருவிகள் வேண்டா; அழுதகண்ணீரே அமையும் என்று இதில் அறிய அருளினார்.

அரசனது கொடுங்கோன்மையால் வருத்தமுற்றுப் பொறுக்கமாட்டாமல் குடிகள் அழுதகண்ணீரே அவன்செல்வத்தை அடியோடு அழித்தற்குக் கருவியாம் என்பதாம்.

செல்வம் புண்ணியத்தால் வளர்ந்து வருதலும் பாவத்தால் தேய்ந்து போதலும் தெளிந்தவுண்மையாதலால் அழுத கண்ணீரே தேய்க்கும் என்றார்.

தன் செல்வம் தேயாமலிருக்கவேண்டுமாயின் குடிகளுக்கு அரசன் அல்லலைச் செய்யாதிருக்கவேண்டுமென்பது குறிப்பு.

எவ்வளவு பெருந் திருவுடையனாயினும் பிறர் வருந்துமாறு ஒருவன் அல்லலைச் செய்வானாயின் அதனை அவன் இழந்துபோவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வசுவால் உணரப்படும்.

### கதை

வசு என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னர்க் கலிங்க நாட்டிலே சிங்கபுரம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். இவன் அஞ்சாநெஞ்சினனாயினும் அறிவும் ஈகையும் அமையப்பெறாதவன். சிறியாரிணக்கமே பெரிதுங் கொண்டவன். அவருள் பாதன் என்பவனே இவனுக்கு மிகவும் நண்பினன். அவன் மிகத் தீயவன். அவன் சொல்லியபடியே இவன் எல்லாம் செய்வான். குடிகளை அல்லற்படுத்தியே இவன் அச்சுறுத்தி வந்தான். இவனது கொடுஞ்செயலை நினைந்து அனைவரும் வருந்தினர். அக்காலத்தில் கபிலபுரம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவனும், தனக்கு ஒருவகையில் உறவினனும், அமைதியாளனுமாகிய குமரன் என்பவனோடு இவன் பகைமை கொண்டிருந்தான். இங்ஙனமிருக்கையில் அந்நகரிலிருந்த சங்கமன் என்னும் வணிகன் தன் மனைவியோடு வந்து இவன் நகரினையடைந்து ஓரிடத்தில் தங்கி வாணிகம் புரிந்தான். அதனைப் பாதன் கண்டு பகைமைகொண்டு இவனிடம் வந்து அவனைக் கொன்றுவிடும்படி கோள்மூட்டினான். உடனே அவனை இவன் கொலைசெய்தொழித்தான். தீயனேனும் பாம்பு சேவியி லொரு வற்கவ்வ மாயுமே மற்றையவன் என்ற வாய்மையின்படி அவன் மாய்ந்து போனான்.

இக்கொடுமையை அவன் மனைவியாகிய நீலி யறிந்து நெடுந்துயரடைந்து தலைவிரிகோலமாய் அழுதுபுரண்டு துன்பம் பொறுக்கமாட்டாமல் பதினாலாவது நாள் ஒரு மலைமேலேறி உருண்டுவிழுந்து தன் உயிரை மாய்த்தாள். அல்லலுற்று ஆற்றாமல் அவள் அழுதுமாய்ந்த பாவத்தால் இவன் செல்வம் தேய்ந்து சின்னாளில் இவனும் சீரிழந்தழிந்தான். அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீரன்றே செல்வத்தைத் தேய்க்கும் படை என்னும் உண்மையை உலகம் இவன்பால் கண்டது. விரிவை மணிமேகலையில் காண்க.

கொலைக்களப் பட்ட சங்கமன் மனைவி
நிலைக்களம் காணாள் நீலி யென்போள்
அரசர் முறையோ பரதர் முறையோ
ஊரீர் முறையோ சேரீர் முறையோவென
மன்றினும் மறுகினும் சென்றனள் பூசலிட்
டெழுநாளிரட்டி யெல்லை சென்ற பின்
றொழுநா ளிதுவெனத் தோன்ற வாழ்த்தி
மலைத்தலை யேறியோர் மால்விசும் பேணிபிற்
கொலைத்தலை மகனைக் கூடுபு நின்றோள். (கட்டுரைகாதை)

இது, மதுரைமாதெய்வம் கூறியதாக இளங்கோவடிகள் இசைத்தது. மேற்குறித்த உண்மையை இதுவும் விளக்கி நிற்றல் காண்க.

குடிகள் அல்லலுற்றழுதால் கொற்றவன் செல்வந்தேய்ந்தழிவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

556 தென்னவன்முன் செங்கோலால் சேர்ந்தான் புகழ்பின்னேன்
கொன்னே இழிந்தான் குமரேசா—மன்னியசீர்
மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேல்
மன்னாவாம் மன்னர்க் கொளி. (௬)

இ—ள்.

**குமரேசா!** நிலைபெற்றுநின்ற செழியன் தன் செங்கோன்மை கோடியபின் என் நிலைகுலைந்து ஒளியிழந்தான் எனின்,

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃது இன்றேல் மன்னர்க்கு ஒளி மன்னுவாம் என்க.

மன்னுதல் = நிலைபெறுதல். அஃது என்றது செங்கோன்மையை.

ஒளி என்றது புகழை; தன்னையுடையானை எங்கும் விளக்கி நிற்குமாதலால் அஃது இங்ஙனம் இசைக்க நின்றது.

ஒளி மன்னுவாம் = புகழ்கள் நிலைபெறுவாம். வீரம் கொடை நியாயம் முதலிய ஏதுக்களால் புகழ் பலவாமாதலால் மன்னுவனப் பன்மையாற் கூறினார்.

மேல், கொடுங்கோல் மன்னனுக்குச் செல்வம் தேயும் என்றார்; இதில், அவனுக்குப்புகழும் மாயும் என்றார்.

அரசர்க்கு நிலைபேறுடையது செங்கோன்மையே; அஃதில்லையேல் அவர்க்குப் புகழ்கள் நிலையாவாம் என்பதாம்

நிலைபெற்றபுகழ் தனக்கு எய்தவேண்டுமாயின் தன் நீதியினின்று அரசன் நிலை தவறலாகாது என்பது கருத்து.

கொடுங்கோல் மன்னர்க்கு நெடும்புகழுண்டாகாது என்பது குறிப்பு.

செங்கோலாலேதான் அரசர்க்குப் புகழுண்டாகுமென்பதும், அதுகோடுமாயின் அடியோடு அதுபோகும் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை செழியன்பால் உணரப்படும்.

### கதை

மதுரையிலிருந்து அரசுபுரிந்த நெடுஞ்செழியன் தன் செங்கோன்மாண்பால் பெரும்புகழுடையனாய் முதலில் விளங்கியிருந்தான். இவன் காலத்தில் பாராசரன் என்னும் மறையவனொருவன் சேரமன்னனிடம் சென்று பரிசில்பெற்று மீண்டு திருத்தண்கால் என்னும் நகர்வழியாக வருங்கால், அங்கு வீதியில் விளையாடிக் கொண்டிருந்த தக்கிணன் என்னும் வேதியச்சிறுவன் மறையோதியதைக்கேட்டு, வியந்து மகிழ்ந்து, தான் கொணர்ந்த அணிகளை

யும் ஆடைகளையும் அவனுக்கு உதவியகன்றான். அவன் கொண்டுபோய்த் தன் தந்தையிடம் தந்தான். வார்த்திகன் என்னும் அம்மறையவன் அவற்றைப் பார்த்து மகிழ்ந்தான். அதனைப் பொறாமல் சிலர் அவனை ஈர்த்துவந்து அடாதனகூறி ஏவலாளரிடம் காட்டி காவற்சிறைபிலிட்டார். அவ்வார்த்திகன் மனைவியாகிய கார்த்திகையென்பவள் அங்கு வந்து அழுதுபுலம்புவதை நம் அரசன் கேட்டு மிக இரங்கி உற்றதையோர்ந்து சிறையிலிட்டவனை வெளியேவிட்டுத் தன் ஏவலர் அறியாமற்செய்த பிழையினைப் பொறுக்கவேண்டுமென்று அவனிருந்தவூருடன் வயலூர் என்னும் ஓர் நகரையும்விட்டு, தன் மணிமார்பம் மண்ணில்படும்படி விழுந்து வணங்கி அவனை வாழ்த்திவிட்டான். இங்ஙனமே இம் மன்னன் எல்லாவுயிர்களும் இன்புறுமாறு நெறிதவறாமல் நின்று நீதி செலுத்திவந்தானாதலால் இவன் புகழ் எங்கும் பரந்து பொங்கி நின்றது. பின்பு தீவினைவயத்தால் கோவலனை ஆராயாமல் கொல்வித்தானாதலால் முன்பு தனக்கு நிலைபெற்றிருந்த புகழ் முழுதும் தேய்ந்தது. தானும் பழிமலைந்து மாய்ந்தான். தன் செங்கோன்மை சிறிது சிதைந்ததால், பொங்கியிருந்த இவன் ஒளி முழுதும் பொன்றியொழிந்ததே யென்று அனைவரும் பொருமியழுதார். மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதின்றேல் மன்னாவாம் மன்னர்க் கொளி என்னும் உண்மைக்கு இவன் உரியவனாய் நின்றான்.

சீர்த்தகு சிறப்பின் வார்த்திகன் புதல்வன்
ஆலமர் செல்வன் பெயர்கொண்டு வளர்ந்தோன்
பாறுறு செவ்வாய்ப் படியோர் முன்னர்த்
தளர்நா வாயினும் மறைவிளி வழாஅது
உளமலி யுவகையோ டொப்ப வோதத்
தக்கிணன் தன்னை மிக்கோன் வியந்து
முத்தப் பூணூல் அத்தகு புனைகலம்
கடகம் தோட்டொடு கையுறை யீத்துத்
தன்பதிப் பெயர்ந்தன னாக நன்கலன்
புனைபவும் பூண்பவும் பொறாஅ ராகி
வார்த்திகன் தன்னைக் காத்தன ரோம்பிக்

கோத்தொழி லிளையவர் கோமுறை யன்றிப்
படுபொருள் வெளவிய பார்ப்பா னிவனென
இடுசிறைக் கோட்டத் திட்டன னாக
வார்த்திகன் மனைவி கார்த்திகை யென்போள்
அலந்தன ளேங்கி யழுதனள் நிலத்திற்
புரண்டனள் புலந்தனள் பொங்கின ளதுகண்டு
மையறு சிறப்பின் ஐயை கோயில்
செய்வினைக் கதவந் திறவா தாகலிற்
றிறவா தடைத்த திண்ணிலைக் கதவம்
மறவேன் மன்னவன் கேட்டனன் மயங்கிக்
கொடுங்கோ லுண்டு கொல் கொற்றவைக் குற்ற
இடும்பை யாவதும் அறிக்கி மின்னென
ஏவலிளையவர் காவலற் றொழுது
வார்த்திகற் கொணர்ந்த வாய்மொழி யுரைப்ப
நீர்த்தன் றிதுவென நெடுமொழி கூறி
அறியா மாக்களின் முறைநிலை திரிந்தவென்
இறைமுறை பிழைத்தது பொறுத்தல் நுங் கடனெனத்
தடம்புனற் கழனித் தங்கால் தன்னுடன்
மடங்கா விளையுள் வயலூர் நல்கிக்
கார்த்திகை கணவன் வார்த்திகன் முன்னர்
இருநில மடந்தைக்குத் திருமார்பு நல்கிஅவன்
தணியா வேட்கையும் சிறிது தணித் தனனே.

(சிலப்பதிகாரம்.)

மேற்குறித்த சரிதவுண்மையும், நம் செழியனது செங்கோல் மாண்பும், இதில் ஒளிர்தல் காண்க. இத்தகைய மன்னன் கோல் சிறிது கோடியதால் மன்னிநின்ற ஒளி முழுதும் மன்னுதொழிந் தது. அறிவறைபோகிய பொறியறு நெஞ்சத்து இறைமுறை பிழைத்தோன் என்னும் பழியும் புகுந்ததாதலால் செங்கோன் மையை அரசர் என்றும் சிதையாமல் போற்றவேண்டு மென்பதாம்.

கொடுங்கோலுடையானுக்கு நெடும் புகழில்லை யென்பது இதனால் கூறப்பட்டது.

557 அன்றேனோ வேநன் அளியின்மை யாலுலகோர்
குன்றி யுழைந்தார் குமரேசா—என்றும்
துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு. (எ)

இ—ள்

குமரேசா! வேநன் என்னும் அரசன் முன் இரக்கமில்லாதிருந்ததனால் குடிகள் ஏன் மிகக்கலக்கமுற்று நொந்தார் எனின், துளிஇன்மை ஞாலத்துக்கு எற்று வேந்தன் அளிஇன்மை வாழும் உயிர்க்கு அற்றே என்க.

துளி என்றது மழையை. எற்று = எத்தன்மைத்து. அற்று = அத்தன்மைத்து. இவை வினாவடியாகவும், சுட்டடியாகவும் பிறந்த குறிப்பு முற்றுக்கள். ஏகாரம் தேற்றம். அளி என்பது அன்பு அருள் என்னும் இருவகைப் பண்புகட்கும் இடையேவைத்து எண்ணப்படுவதோர் இன்குணம்.

அன்பு—உற்றவர்மேல் நின்றுருகும் உள்ளக்காதல்.

அளி—மற்றவர் மேலும் சென்று நெகிழ்வதாய மன உருக்கம்.

அருள்—ஓரறிவுமுதல் ஆறறிவு ஈறுகவுள்ள எல்லா வுயிர்களிடத்தும் இயல்பாகவே இளகிச் செல்வதாய பேரிரக்கம்.

அரசன் அளியின்மைக்குத் துளியின்மையை ஒப்புக்காட்டினார் அவன் அதனையுடையனாயின் குடிகள் பெருநலமடையும் என்பது தோன்ற. வானோக்கிவாழும் உலகெல்லாம் மன்னவன் கோல்நோக்கி வாழும்குடி என்றதை இஃது எதிர்நோக்கி யுள்ளமை காண்க.

மேல், கொடுங்கோல் மன்னர்க்கு ஒளிமன்னாது என்றார்; இதில், அவர் அளிஇன்மையால் உயிர்கட்கு அல்லலுண்டாம் என்றார்.

மழையில்லாமை இவ்வுலகத்துக்கு எப்படித் துன்பத்தைப் பயக்கும்? அப்படியே அரசன் அளியில்லாமை அவனாட்டில் வாழும்குடிகட்குத் துன்பம் பயக்கும் என்பதாம்.

மழைபோல் நின்று மன்னன் அளி உயிர்கட்கு உயர் நலம் விளைக்கும் ஆதலால் அஃது இங்கு ஒப்புற நின்றது.

மாமழை போற்றுதும் மாமழைபோற்றுதும்
நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோல்
மேனின்று தான்சுரத்த லான். என்று இளங்கோவடிகள்

வழங்கியுள்ளதும் ஈண்டு எண்ணத்தக்கது.

இத்தகைய அளியை வேந்தன் இழந்துவிடுவது கொடுங்கோன்மையாம் என்பது குறிப்பு. அரசன் இரக்கமில்லாதவனாயின் அவன் நாட்டில் வாழும் குடிகட்குப் பெருந்துன்பமுண்டாம் என்பது கருத்து. இவ்வுண்மை வேநன்பால் உணரப்படும்.

கதை

வேநன் என்பவன் சூரியகுல மன்னனாகிய அங்கனுடைய புதல்வன். தாய் பெயர் சுநீதை. இவன் ஆறாவது மனுவின் பதினொராவது வழிமுறையில் வந்தவன். நெடுங்காலமாக மகப்பேறின்றி வருந்தி அருந்தவங்கிடந்து அடைந்தனராதலால் பெற்றோர் இவனைப் பெருங்காதலோடு போற்றிவந்தனர். பல கலைகளையும் பயின்று பருவமெய்தியும் தன் பயிற்சிக்கேற்ப உணர்ச்சியெய்தாமல் இவன் மதத்துத் திரிந்தான். நிலைதிரியாமல் ஒழுக வேண்டும் என்று நீதிகள் பல கூறிவந்தும் இவன் திருந்தாமையால் தந்தை மிகவருந்தி ஒருநாளிரவு தனியே வெளியேறினான்.

மழகளிற்று மருவலர் போர்கடந்
தழலும் வேற்படை அங்கன் அறநெறி
ஒழுகு சேனை உயிர்த்திலம் என்றிரும்
பொழி லிரங்கப் புகுந்தனன் கானகம். இப்பழிமொழி

உலகமெங்கணும் பரந்து புகுந்தது. தன் வன்கண்மையினால் தந்தைபிரிந் தகன்றாரே! என்று இவன் சிறிதும் இரங்காமல் கட்டவிழ்ந்த காளைபோல் களித்தேயிருந்தான். அரசுக்குரிய தன் இயல்பினைமறந்து அருளை அறவே துறந்து ஆருயிரனைத்தும் அல்லலுற இவன் அல்லவை செய்தான். இவனது கொடுமையை நினைந்து குடிகள் நடுங்கினர். நாடு முழுதும் கேடுகள் மலிந்தன. அறிஞர் பலர்வந்து இவனுக்கு அறவுரைகள் பல அன்புடன் கூறினர்.

நிறந்தலை மயங்க வெம்பி நெடுங்கடல் சுடுவதாயின்
இறந்தலை பெருகுநீர்வா ழுயிர்க்கிடரெல்லை யுண்டோ
மறந்தலை மயங்கு செவ்வேல் மன்னவன் வெய்யனாயின்
அறந்தலை மயங்கி வையம் அரும்படருழக்கு மன்றே. என்று

இது போன்ற நீதிகள் பல எடுத்துணர்த்தியும் இவன் இறையும் கேளாமல் அவரை இகழ்ந்து வெறுத்தான். அருள் சிறிதுமின்றி இவன் செய்துவருகிற கொடுமைகளை ஆற்றமாட்டாமல் அனைவரும் அகன்றுபோனார். உயிர்களுக்கெல்லாம் துயரையே மிகுத்து வருகின்ற இவன் இருப்பதினும் இறப்பது நன்று என்று முனிவர் சிலர் எண்ணி நொந்தனர். அதனால் இவன் இறந்து தொலைந்தான். அளியின்மை ஞாலத்துக்கு எற்று அற்றே வேந்தன் அளியின்மை வாழும் உயிர்க்கு என்னும் உண்மைக்கு இவன் உரியவனாயினான். விரிவைப் பாகவதத்தில் காண்க.

நெல்லுயிர் மாந்தர்க் கெல்லாம் நீருயிர் இரண்டுஞ் செப்பிற்
புல்லுயிர் புகைந்து பொங்கு முழங்கழல் இலங்கு வாட்கை
மல்லலங் களிற்றுமாலை வெண்குடை மன்னர் கண்டாய்
நல்லுயிர் ஞாலந் தன்னுள் நாமவேல் நம்பியென்றான்.
(சீவகசிந்தாமணி.)

அரசன் அளியிலனாயின் இவ்வுலகில் அழிதுயர்மலியும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

558 உள்ளவரே துன்புற் றுளைந்தார் நரகன்கோல்
கொள்ளநின்ற போதேன் குமரேசா—எள்ளறரும்
இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். (அ)

இ—ள்.

**குமரேசா!** நரகாசுரன் அரசு செய்யுங்கால் அவனாட்டிலுள்ள செல்வர்களெல்லாம் ஏன் அல்லலுற்றார் எனின், முறைசெய்யா மன்னவன் கோலின் கீழ்ப்படின், இன்மையின் உடைமை இன்னாது என்க.

படின் இன்னாது என்றதனால் படாவழி யாண்டும் அஃது இனிதாம் என்பது பெற்றாம்.

இன்மை என்றது வறுமையை. உடைமை என்றது செல்வத்தை. இன் உருபு எல்லைப்பொருளது.

இன்னாது என்றது இனிது என்பதற்கு எதிராயது. இன்மையாளரினும் உடைமையாளரே அங்கு இன்னாமையில் ஆழ்வராதலால் அஃது இங்ஙனங்கூற நின்றது.

கொடுங்கோல் மன்னவன் நாட்டில் யாரும் இன்புற்று வாழ முடியாதென்பது தவறு; எல்லா நலங்களுக்கும் ஏதுவாய பொருளிருந்தால் என் அங்கு இனிது வாழமுடியாது? என்பாரை நோக்கி இஃது இயம்பியதென்க.

மேல், இரக்கமில்லாத அரசனது நாட்டில் எவர்க்கும் துன்பமாம் என்றார்; இதில், செல்வமுதலிய நலங்கள் மிக்கவர்க்கே அங்கு அல்லல் மிகும் என்றார்.

நெறியோடு நின்று நீதிசெலுத்தாத அரசனது ஆளுகைக்குள் வாழின், பொருளில்லாமையினும் அஃதுடைமையே யாவர்க்கும் துன்பமாம் என்பதாம்.

இல்லாதவர் ஒருபயனும் இல்லாதவராதலால் அவரைப் பதரென விடுத்துப் பொருளுடையவரையே தான் விரும்பியயாவும் தரும்படி கொடுங்கோல் மன்னன் வருத்துவன்; தாராராயின் செற்றமீக்கூர்ந்து தீராத அல்லல்பல அவர்க்குச் சோச்செய்வன் ஆதலால், "இன்மையினும் உடைமை இன்னாது" என்றார்.

இன்னலுக்கு ஏதுவாயதால் அஃது இன்னாது என நின்றது.

இனிமைக்கு ஏதுவாய உடைமையும் கொடுங்கோலுடையவன் நாட்டில் இன்னாமையாம் என்பது கருத்து. இதனால் அவனது கொடுந்தீமை இனிது புலனாம்.

இன்புற ஓம்புதற்கு உரிய அரசன் அதனைச் செய்யாதொழிவதோடு அமையாமல் துன்பமும் செய்வனாயின் அக்கொடியவன் கோற்கீழ் வாழ்வதினும் குடிவாங்கிப்போதலே நலம் என்பது குறிப்பு.

கோடுங்கோல் மன்னர் வாழும் நாட்டில்
கடும்புலி வாழும் காடு நன்றே. என்றதுங்காண்க.

நீதியில்லாத அரசன் நாட்டில் செல்வமுள்ளவர்க்கே அல்லலுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நரகாசுரன்பால் உணரப்படும்.

## கதை

கொடிய வீரனாகிய நரகாசுரன் சோதிதம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்துவருங்கால் எல்லாவுயிர்களுக்கும் அல்லலேசெய்துவந்தான். அந்நாட்டிலுள்ள அழகிய மங்கையரெவரும் தன் இன்பநலத்துக்கே உரியவரென்று இவன் எண்ணித்திரிந்து இழுக்கேபுரிந்தான். பஞ்சசன், நிசும்பன், அயக்கிரீவன், பிராயணன், முதலிய அசுர வீரர்பலர் இவனுக்கு அமைச்சராகி நின்றனர். அப்பொல்லாதவர்களும் இவன் செல்வழிக்கிசைந்தே அல்வழியில் சொல்லிளைத்து வந்தார். சிறந்தபொருளை அரிதின்முயன்று எவரேனும் அடைந்திருப்பின் இவனுக்கு அறிவித்து அதனை இவன் அடையுமாறு அவர் முடிவுசெய்துவிடுவர். உடையவன் உடனே கொணர்ந்து அதனை இவனுக்கு உதவவில்லையாயின் அவனுயிர்க்கே கேடுதரும்துயரை இவன் உதவிவிடுவான். இவன் கொடுங்கோன்மையை நினைந்து குடிகள் நெடுந்துயரடைந்தனர். இங்ஙனம் செய்துவந்த இவன் அமரரிடமும்சென்று உடைமைகளைவௌவி வருணனது குடையையுங்கவர்ந்து அமராவதி புகுந்து இந்திரனுடையதாய் காதிலணிந்திருந்த அழகிய குழையையும் பறித்துத் தன் அணிநகர்வந்தான். அமரர்கோன் இவனையாதுஞ் செய்யலாற்றாது மாலிடம்வந்து மனமுருகி நொந்தான்.

அழிவெம்மதம் பொழியோங்கலின் அயிராவதப்பாகன்
மழைவண்ணனை யடைந்தன்னைதன் வார்காதணி மகரக்
குழைதன்னொடு பனிமாலைவெண் குடையுஞ் செழுங்கோடியும்
கழிவெஞ்சின நரகாசுரன் கவர்ந்தேகின னென்றான்.

என்றதையறிந்துகொண்ட திருமாலும் இவனுக்குரிய காலம் வரையும் ஒடுங்கியிருந்து ஒருநாள் வந்து உடன்றமர்புரிந்து இவனையொழித்துப்போனார். பொருள் இல்லாதவரினும் அதனையுடை

யவரே இவனது ஆட்சியில் பெருந்துயரடைந்தனர். இன்மையின் இன்னாது உடைமை, முறைசெய்யா மன்னவன் கோற்கீழ்ப்படின் என்னும் உண்மைக்கு இவன் இங்கு உரியவனாய் நின்றான். இவன் மகன் பெயர் பகதத்தன். இசையின்மைக்கு இலக்காக முன்னரும் இவன் இசைக்கப்பட்டுள்ளான். விரிவை இலிங்கபுராணத்திலும் காண்க.

கொடுங்கோல் மன்னவனாட்டில் செல்வமுடையவர்க்கே அல்லலுண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

559 கோடாத பூடணன்முன் கோடியதால் வான்பெயல்பின்
கோடிநின்ற தென்னே குமரேசா—கூடும்
முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
யொல்லாது வானம் பெயல். (௯)

இ—ள்.

குமரேசா! குலபூடணன் முறை கோடிச்செய்ததால் வானம் ஏன் பெயல்கோடியது எனின், மன்னவன் முறைகோடிச் செய்யின் உறைகோடி வானம் பெயல் ஒல்லாது என்க.

உறை = மழைத்துளி: உறைகான் மாறிய ஓங்குயர் நனந் தலை எனப் பெரும்பாணாற்றுப்படையினும், வாள்போழ் விசும் பில் வள்உறை சிதறி எனத் திருமுருகாற்றுப்படையினும், உறை உதவிநிற்கும் பொருளை யுணர்க.

ஒல்லாது = இயலாது: இது, ஒல்லும் என்பதன் எதிர்மறை முற்று. ஒல்லல் = இசைதல், இயலல், முடிதல். வானம் என்றது மேகத்தை.

உறை கோடி வானம் பெயல் ஒல்லாது = துளிமாறி மேகம் பொழிதலைச்செய்யாது.

இனி, கோட என்னும் செயவென்னெச்சமே கோடிஎனத் திரிந்து நின்றதென்று கோடின், சொல்திரியினும் பொருள்திரியா வினைக்குறை என்னும் விதியால்கொள்க.

மேல், கொடுங்கோல் மன்னவனாட்டில் உடைமையினும் இன்மையே நல்லதென்றார்; இதில் அவ் இன்மைதானாகவே எய்தி விடும் என்றார். இயல்புளிக் கோலோச்சும் மன்னவனாட்ட பெயலும் விளையுளுந்தொக்கு என்றதற்கு இஃது எதிராய்நின்றது. முறைகோடாதாயின், உறைகோடாதென்பதாம். முறைவேண்டு பொழுதிற் பதனெளியோர் ஈண்டு உறை வேண்டுபொழுதிற் பெயல்பெற்றோரே. என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

நீதிதவறி அரசன் ஆட்சிசெய்யின் அவன் நாட்டில் பருவத்தில் மழை தவறும்படி மேகம் பெய்யாமல் செய்துவிடும் என்பதாம். கொடுங்கோலால் பெருங்கேடுகள் தோன்றும் என்பார் மன்னவன் முறைகோடின் வானம் உறைகோடும் என்றார்.

கோன் நிலை திரிந்திடிற் கோள்நிலை திரியும்
கோள் நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
மாரி வறங் கூறின் மன்னுயி ரில்லை
மனனுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயி ரென்னும் தகுதியின் றாகும். (மணிமேகலை).

கோணிலை திரிந்துநாழி குறைபடப் பகல்கள் மிஞ்சி
நீணில மாரியின்றி விளைவஃகிப் பசியு நீடிப்
பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந்தறங்கண்மாறி
யாணையிவ் வுலகு கேடாம் அரசுகோல் கோடினென்றான்.(சீவகசிந்தாமணி)

மன்னவன் முறைகோடிச்செய்யின் அதனால் இவ் உலகுக்கு எய்தும் கேடுகளை இவற்றுள் உய்த்து நோக்குக.

உலகம் நலமுறவேண்டுமாயின் நிலைதிரியாமல் அரசன் முறை செய்யவேண்டும் என்பது கருத்து.

அரசன் முறைதவறி நடந்தால் அவன் நாட்டில் மழைவளங் குன்றிப் பெருந்துயர்மிகும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குலபூடணன்பால் உணரப்படும்.

## கதை

குலபூடணன் என்பவன் மதுரையிலிருந்து அரசுபுரிந்த அநந்தகுண பாண்டியனுடைய புதல்வன். இவனது காலம் இற்றை

க்கு ஆயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னராம். இவன் அழகும் ஆண்மையும் அமையப்பெற்றவன். கலையில் தெளிவிலும் கட்டுரைவன்மையிலும் இவன் நிலைபெற்று நின்றவன். பெயருக்கேற்பத் தன் மரபுக்கெல்லாம் சிறந்த ஒரு மணியணியாய் இவன் விளங்கியிருந்தான். அரசபதவியிலமர்ந்திருந்தும் துறவிகளும் வியக்கத்தக்க விரத ஒழுக்கங்களையே இவன் மேற்கொண்டு நின்றான். ஆருயிரனைத்தையும் நேருறநோக்கி இவன் ஆதரித்து வந்தான். இங்ஙன முறைசெய்துவருங்கால் குலத்தால் பெரியோம் என்று வேதியர் சிலர் செருக்கித்திரிந்தார். அவர்மேல் இவன் வெறுப்புக்கொண்டான். அக்கொள்கையின் முதிர்ச்சியால் அம்மரபிலுள்ள நல்லவரெல்லாரையும் இவன் நயவாதிகழ்ந்தான். இங்ஙனமாறு அவர்க்கு உதவியிருந்த ஊதியத்தையும் மறுத்தான். செம்மைதுறந்து இவ் அண்ணல் செய்துவரும் வெம்மைக்கு அற்புது அந்தணரனைவரும் வெந்துயர்கூர்ந்தார். இவன் சிறிதும் இரங்காமல் முறைதவறிநின்று கேள்வியாளரோடு வேள்வியையுமிகழ்ந்தான்.

கருணையோடுந் தனதுபய கரமுதவும் பொருள்மழையில்,
அரணியமந் திர வனல்கள் அவையுதவும் பெருமழையே

என்றவாறு பெய்துவந்த மழையும் இவன் செய்கை நேர்ந்து பெய்யாது நின்றது. அதனால் நாடெங்கும் துயர் மிகுந்தது.

அறவோ ரெல்லாம் நிரப்பெய்தி யாகங்கிடந்த நாலன்றி
மறைநூ விழந்து முனிவேள்வி வானோர்வேள்வி தென்புலத்தின்
உறைவோர் வேள்வி யிழந்திழிந்த தொழில்செய் தாரூ துயிர்வளர்ப்பான்
புறநா டணைந்தார் பசியாலே புழுங்கி யொழிந்த குடியெல்லாம். என்றபடி

அனைவரும் அழுங்கியகன்றார். இவனும் பெருந்துயரடைந்து என்செய்தேன் என ஒருநாள் இறைவனை நினைந்து இரவில் நெடுந்துயில் கொண்டான். அறிதுயிலமர்ந்தார்க்கும் அறிவரிய அம் மறை முதல்வர் இவன் கனவில்தோன்றி "நீ முறை திரிந்ததால் மழையும் நிலைதிரிந்தது; கோன்முறை கோடின், வான்உறை கோடும் என்பதை நீ உணராமலிருந்தாய்; இனி அதனை ஒருபோதும் மறவாதே; முன்போல் நின்று நீ முறைசெய்துவரின்

மழைவளஞ்சுரக்கும்; அதுவரையும் இவ் உலவாக்கிழிகொண்டு உயிர்களை ஓம்புக; உனக்கு எல்லா நலங்களும் உளவாம்'' என்று ஒரு திருப்பொறியை அந் நிமலன் உதவி மறைந்தார். இவன் எழுந்து வியந்தான். தன் செயலுக்கு இரங்கி நொந்தான். இறைவனருளை எண்ணிமகிழ்ந்தான். முன்போல் இசைந்து நின்று முறையோடு செங்கோல் செலுத்தினான். அதன் பின் மழைவளஞ்சுரந்தது. மாநிலம் மகிழ்ந்தது. முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி ஒல்லாது வானம் பெயல் என்னும் உண்மையை இவன் உணர்ந்து தெளிந்தான். விரிவைத் திருவிளையாடலில் காண்க.

வேந்தன் முறைதிறம்பின் வேத விதிதிறம்பும்
ஏந்திழையார் தங்கற்பும் இல்லறமும் நில்லாவாம்
மாந்தர் பசியா லுணங்க மழை வறந்து
பாந்தண் முடிகிடந்த பாரின்விளை வஃகுமால்.
(பிரமோத்தரகாண்டம்.)

தற்பாடு பறவை பசிப்பப் பகையற
நற்சூல் கொள்ளாது மாறிக் கால்பொர
சீரை வெண்டலைச் சிறுபுன் கொண்மூ
மழைகா லூன்று வளவயல் விளையா
வாய்மையுஞ் சேட்சென்று காக்குந் தீதுதரப்
பிறவுமெல்லாம் நெறிமாறு படுமே
கடுஞ்சினங் கவைஇய காட்சிக்
கொடுங்கோல் வேந்தன் காக்கு நாடே. (ஆசிரியமாலை.)

முறைசெய்யாத மன்னவனுட்டில் மழைபெய்யாது என்பது இதனால் கூறப்பட்டது.

---

560 வேதியரேன் நூன்மறந்தார் வேந்தொருவன் காவாத
கோதுடைமை யான் முன் குமரேசா—தீதகன்ற
ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

இ—ள்.

குமரேசா! முறையோடு அரசன் காவாமையால் மதுரையில் என் வறுமை மிகுந்து மறையொலி முதலியன முன் மறைந்தன எனின், காவலன் காவான் எனின், ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல் மறப்பர்; என்க.

காவலன் என்றது அரசனை. உயிர்களைக் காத்தற்குரியவன் என்னும் ஏதுவான் வந்தது.

ஆ பயன் = ஆவால் எய்தும் பயன்; அஃதாவது பால். அறுதொழிலோர் என்றது அந்தணரை; ஆறுவகைப்பட்ட தொழில்களையுடையார் என்றபடி. அவை ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்பன. ஓதல் வேட்டல் அவை பிறர்ச் செய்தல், ஈதலேற்றலென்றாறு புரிந்தொழுகும், அறம்புரி அந்தணர் என்று பாலைக் கௌதமனாரும்; அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்று ஆசிரியர் தொல்காப்பியனாரும்; இருமூன்றெய்திய இயல்பினில் வழாஅது என்று நக்கீரனாரும்; ஒன்று புரிவோர், இருபிறப்பாளர், முத்தீச்செல்வர், நான்மறை பயில்வோர், ஐவகை வேள்வியர், எனப்பிறரும் இவரைச் சுட்டியுள்ளமை காண்க.

மேல், அரசன் முறை செய்யானாயின் அவனாட்டில் மழை பெய்யாது என்றார்; இதில், பசுக்களும் பால் மறைக்கும்; பார்ப்பாரும் நூல் மறப்பர் என்றார்.

அரசன் நெறியோடு நின்று உயிர்களைக் காவானாயின், பசுக்களும் பால் குன்றும்; பார்ப்பாரும் நூல்களை மறந்து விடுவர் என்பதாம்.

பால் மிகுதலும் நூல் நிலவலும் அரசனது கோலின் பயனாக அமையுமாதலால் அவன் காவானாயின் அவை மேவா என்க.

மேலருளியாங்கு முறைகோடிய அரசன் நாட்டில் பருவத்தில் மழை பெய்யாது; ஆகவே பசும் புற்கள் இவ்வுலகில் தோன்றா; ஆதலின் மேய்தலின்றி மெலிந்து பால் ஈதலின்றிப் பசுக்கள் இழிவுறும்; ஆதலால், ஆபயன் குன்றும் என்றார். புலந்தலைப் புல் இன்றேல், முலைத்தலைப் பால் இன்றாம் என்றதுங்காண்க.

தமக்கு நேர்முகமான ஓர் ஊதியமின்றி உலக நலங்கருதியே செந்தண்மை பூண்டொழுகும் அந்தணர் வேத முதலியன ஓதி வருவர்: அங்ஙனம் ஓதி வருவார்க்கு உண்டியும் உறையுளும் உதவி அரசன் ஓம்பாதொழியின், அவற்றை அவர் ஓதாதொழிவர்; ஆதலால் காவலன் காவான் எனின் அறுதொழிலோர் நூல் மறப்பர் என்றார்.

காவலன் காவானாயின் எல்லாநலங்களும் குன்றும் என்றாலும் ஆவையும் அந்தணரையு மாத்திரம் இங்கு விதந்து கூறியது என்னையெனின், அவர் தாழின் யாவும் தாழும் என்பது தேற என்க. உயிர்கள் இவ்வுலகில் நிலைத்து வாழ்தற்கு ஏதுவாயது மழை; வேள்வியின் பயன் வீழ்புனலாவது என்றபடி அது பருவம் தவறாமல் பெய்தற்கு வேள்வி ஏதுவாகும்; அது செய்தற்கு இன்றியமையாது வேண்டற்பாலதாய அவி பசுவின் பாலானே அமைவதாம்; அதுகொண்டு அதனைச் செய்தற்குரியார் அந்தணரேயாவர்; அத்தகைய ஆவும் அந்தணரும் தம் இயல்பு குன்றின் உலகில் யாவும் குன்றிவிடும் ஆதலால் அவர் இங்ஙனம் கூறநின்றனர் என்க. வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் என்று திருஞானசம்பந்தரும், ஆவுக்காயினும் அந்தணர்க்காயினும் என்று கம்பரும், ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும் என்று நெட்டிமையாரும், அந்தணன் நாறும் ஆன்பால் அவியினை என்று திருத்தக்க தேவரும் உரைத்துள்ளன ஈண்டு உணரத்தக்கன.

மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவ வின்றெனின் இன்றால். என்ற மணிமேகலையும் ஈண்டு மனங்கொள்ளத்தக்கது.

செங்கோல் செலுத்தி அரசன் காவானாயின் அவன் நாட்டில் மறையொலியும் பிறநலங்களும் மாய்ந்துபோம் என்பது இதிலுணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வெற்றிவேற் செழியன்பால் உணரப்படும்.

## கதை

வெற்றிவேற்செழியன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் இப்பாண்டிநாட்டின்

தெற்கிலுள்ள கொற்கையிலிருந்து அரசுபுரிந்தவன். வில், வேல் வாள் முதலிய படைக்கலப் பயிற்சியில் இவன் உயர்ச்சிபெற்றவன். பெரிய போர்வீரன். போர்முகத்தடங்கா மடங்கலேறு என்று கொற்றவரெவரும் போற்றும் வெற்றியுடன் விளங்கியிருந்தானாக லால் வெற்றிவேற் செழியனென இவன் விளம்பப் பெற்றான். அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்துவந்த நெடுஞ்செழி யன் கோவலனைக் கொல்வித்த கொடும்பழியை நினைந்து கடுந்துய ரடைந்து மடிந்தானாதலால் அவ்வுயரிய நகரம் உயிரில்லாத உடல் போல் ஒளியிழந்திருந்தது. அரசில்லாமையால் குடிகள் அலமந் துழன்றன. மழை வளங்குன்றி வறுமையுமிகுந்தது.

செய்யாட்கிழைத்த திலகம்போல் சீர்க்கொப்ப
வையம் விளங்கிப் புகழ்பூத்த லல்லது
பொய்யாத துண்டோ மதுரை புனைதேரான்
வையையுண் டாகும் அளவு. என்றும்,

மழைகொளக் குறையாது புனல்புக மிகாது
கரைபொரு திரங்கு முந்நீர் போலக்
கொளக்கொளக் குறைபாது தரத்தர மிகாது
மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல். எனவும்

பாடல் பெற்றோங்கிய அப்பீடுடைப் பதியும் இறைவனில்லாமை யால் மறையொலி யிழந்தது. கறவையும் குறைந்தது நிறைபழி பூண்டது. இந்நிலையில் நெடுநாள் நீண்டது. அவ்வமையம் நம் வெற்றிச்செழியன் தன் குலத்தில் நேர்ந்த இச்சலத்தை நீக்கக் கருதிக் கொற்கையை விடுத்து மதுரையை அடைந்து உற்றதை யோர்ந்து உறுவேள்விசெய்து உணர்வின் திறத்தால் உயர்கோ லோச்சி உலகம் காத்தான். அதன் பின் மழைவளஞ் சுரந்தது. குடிகளும் நிறைந்தனர். ஆனிரை யெங்கும் அரும்பயனுதவின. மறையொலி யெங்கணும் முறைமுறை முழங்கின. அதனால்,

பூவினுட் பிறந்தோன் நாவினுட் பிறந்த
நான்மறைக் கேள்வி நவில்குர லெடுப்ப
ஏம வின்றுயி லெழுதல் லல்லதை
வாழிய வஞ்சியும் கோழியும் போலக்
கோழியி னெழாதெம் பேரூர் துயிலே. (பரிபாடல்)

னெனும் பேரூரப்பெற்றுச் சீரோர்ந்து நின்றது. அரசிழந்தமையால் எல்லா நலங்களும் குன்றி நின்ற அந்நாடு இவன் வந்து காத்ததால் பின் நிலைநிறைந்த பயனோடு நின்று திகழ்ந்தது. காவலன் காவானெனின், ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர் என்பதை இவன் நேர் நின்றுணர்ந்தான். நெடுஞ்செழியன் காவாமையால் நிலைகுலைந்திருந்ததை இவன் வந்து காத்து நிலைநிறுத்தியதால் இளஞ்செழியன் என்று உலகம் இவனை ஏத்தி நின்றது. விரிவை வழுதி மரபில் காண்க.

கொற்கையி லிருந்த வெற்றிவேற் செழியன்
பொற்றொழிற் கொல்லர் ஈரைஞ் ஞூற்றுவர்
ஒருமுலை குறைத்த திருமா பத்தினிக்
கொருபக லெல்லை யுயிர்ப்பலி யூட்டி
யுரைசெல வெறுத்த மதுரை மூதூர்
அரசுகெடுத் தலமரும் அல்லற் காலைத்
தென்புல மருங்கிற் றீதுதீர் சிறப்பின்
மன்பதை காக்கும் முறைமுதற் கட்டிலி
னிரைமணிப் புரவி யோரேழ் பூண்ட
ஒருதனி யாழிக் கடவுட் டேர்மிசைக்
காலைச் செங்கதிர்க் கடவுள் ஏறினனென
மாலைத் திங்கள் வழியோ னேறினன். (சிலப்பதிகாரம்).

மேற்குறித்த உண்மை இதிலும் விளங்குதல் காண்க.

அறுதொழி லாளர் நூல்கள் அயர்ப்பர்ஆன் பயனின்றாகும்
உறைபெய லொழியும் கூழுங் குடிகளும் ஒருங்கு நீங்கும்
பெறுபயன் நாட்டிற்குன்றும் பிறங்கொளி நிலைபெறாது
கறையின்மேற் பொருள்கைக்கொண்டு காவலை விடுப்பின்மைந்தா.
(விநாயகபுராணம்).

ஆவையும் பாரையும் மற்றற வோரையும்
தேவர்கள் போற்றும் திருவேடத் தாரையும்
காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவும் மறுமைக்கு மீளா நரகமே. (திருமந்திரம்).

அரசன் நீதியோடு காவானாயின் வேதமுதலியனயாவும் மேவா என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

கொடுங்கோல் மன்னன் கொலைஞரினும் கொடியவன். அவன் குடிகளிடம் பொருள்கேட்டல் கள்வர் வழிப்பறி செய்தல் போலாம். நாடி முறைசெய்யாத அரசன் நாடிழந்து கெடுவான். குடியும் செல்வமும் அவன் அடியோடு இழப்பான். அல்லல் வினையே தன் செல்வத்தை யழிக்கும். கொடுங்கோலுடையான் நெடும் புகழுடையான். அரசன் அருளிலனாயின் இவ்வுலகில் அறிதுயர் மலியும். முறையில்லாத அரசனது நாட்டில் பொருளுள்ளவரோ துயர்மிக உறுவார். அங்கு மழை பெய்யாது. பால் உதவாமல் பசுக்களும் குன்றும்; நூல்களை மறந்து மேலோரும் மெலிவர்.

நிக-வது கொடுங்கோன்மை முற்றிற்று.

---

# 57-ம் அதிகாரம்
# வெருவந்த செய்யாமை.

அஃதாவது உயிர்கள் வெருவுதற்கு ஏதுவாகிய செயல்களை அரசன் செய்யாமை. வெருவுதல்=அஞ்சுதல். கொடுங்கோலின் பயனாய் நிகழும் கொடுந்தொழில்களை யெல்லாம் ஒருங்கே ஒழிக்க வேண்டுமென்று உணர்த்துகின்றதாதலின் அதன்பின் இது வைக்கப்பட்டது.

561 நாடிப் புருகுச்சன் நாகர்மேற் செல்லாதேன்
கூடி யொறுத்தான் குமரேசா—கோடாமல்
தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங் கொறுப்பது வேந்து. (க

இ-ள்

குமரேசா! நாகரையும் கந்தருவரையும் நடுவாக நின்று ஆராய்ந்து கொடுமையிற் செல்லாவாறு புருகுச்சன் ஏன் ஒறுத்த

திறத்தினான் எனின், தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால் ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து என்க.

அரசன் வெருவந்த செய்பலாகாதென்றால் குற்றஞ் செய்தாரை அவன் தண்டித்தல் கூடாதன்றோ? என்பாரை நோக்கி இது கூறியதென்க.

ஒறுப்பது வேந்து—ஒறுப்பவனே அரசன்: ஒறுத்தல்—தண்டித்தல். தக்காங்கு ஒத்தாங்கு என்பன ஒருசொல் நீர்மைய. இனி, தக்க ஆங்கு ஒத்த ஆங்கு எனப் பிரித்து அகரம் தொக்கு நின்றதென்று கொண்டால் தக்கபடி, ஒத்தபடி என்று பொருள் கொள்க.

தக்காங்கு நாடி—தகுதியாக ஆய்ந்து; என்றது வழுவுறாமல் நடுவு நின்று, தெளிவாக ஆராய்ந்து என்றவாறு.

தலைச்செல்லா வண்ணத்தால் என்றது குற்றமான வழியில் குடிகள் செல்லாதபடி என்றவாறு. தலை இதில் அடையுருபாய் நின்றது; தலைக்கூடி, தலைப்பிரிந்த என்பனபோல. முன் சென்ற பிழைவழியில் மீண்டும் செல்லாதவாறு எனினுமாம். இதில், தலை—இடம். தன்னொப்பாரை இல்லானைத் தலைச் சென்று என்றது சிந்தாமணி.

ஒத்தாங்கு ஒறுப்பினும், தலைச் செல்லாவண்ணம் நண்ணாதாயின் அதனாற் பயனில்லையாதலால் வண்ணத்தால் என்றார்.

நெறிகடந்து தீமையிற் செல்வாரைத் தகுதியாக ஆராய்ந்து மீண்டும் அது செய்யாதபடி அதற்குத் தக்கவாறாகத் தண்டிப்பவனே அரசனாவான் என்பதாம்.

தக்காங்கு நாடாமலும் ஒத்தாங்கு ஒறுக்காமலும் தம் மனம் போனவாறே செய்யின் அது வெருவந்த செய்கையாமாதலால் அரசன் அங்ஙனம் செய்யலாகாதென்பது கருத்து.

உயிர்கள் அல்வழியிற் செல்லாமலடங்கி நல்வழியிலொழுகுமாறே தன் ஒறுப்பு உருப்படவேண்டும் என்பது குறிப்பு.

தக்காங்கு நாடாமல் மிக்க தண்டஞ்செய்தல் கொடுங்கோன்மையாம் என்பதும், அறிவுடைய அரசர் யாண்டும் அவ்வாறு

செய்யார் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை புருகுச்சன்பால் உணரப்படும்.

## கதை

புருகுச்சன் என்பவன் சூரியகுல வேந்தனாகிய மாந்தாதாவின் குமாரன். இவன் உருவின் மிக்கதோர் உடம்போடு அறிவிலும் ஆற்றலிலும் மிக்கவன். தெரிந்து முன் எடுத்துவைத்த திகிரி மன்னர்கள் அறுவருள் ஒருவன். சிறந்த போர்வீரன். எதையும் தெளிந்துணர்ந்து பொருந்திய நீதியைத் திருந்தச் செய்பவன்.

கைப்புனை யேற்றுப் பொய்ப்புகழ் எலாக் காதினன் அருள்பொழி கண்ணன்
தப்புரை வழங்கா நாவினன் புவியோர் தாசன் தான் எனவுணர் மனத்தன்
செப்பயல் மடவார் காணருமுரத்தன் திருந்தலர் காணரும் புறத்தன்
எப்பொழு தினுஞ்சென் றியாருங்காண் முகத்தன் ஈசனன்புடையவன்

இறையே என்னும் உரையின்படி இவன் இசைந்திருந்தான். இவனது தகவையும் அருளையும் அறிந்து மகிழ்ந்து தனது அருமை மகளாகிய நருமதை யென்பவளை நாகர் வேந்தன் இவனுக்கு மணம்புரிந்து தந்தான். அப்பேரழகியோடு அமர்ந்திருந்து அரியபோகங்களை நுகர்ந்து இவன் அரசுபுரிந்து வருங்கால் நாகர் சிலர் வந்து இந்நிலத்து மக்கள் பலர்க்கு மிக்க துயர் விளைத்தார். அவ் இருதிறத்தார் இயல்பையும் இவன் நடுவாக நின்றாராய்ந்து முடிவாக நாகர்களையே நயந்தடக்கி மறுத்துஞ் செல்லாவண்ணம் ஒறுத்து நிறுத்தினான். மாமன் மரபினரென்றும் மனந்திரியாமல் கருதியாக நின்று இவன் முறைசெய்ததை வியந்து அனைவரும் புகழ்ந்தார். சின்னாட்கழிந்தபின் ஆறுகோடி கந்தருவர் வந்து நாகலோகத்தை முற்றுகைசெய்து பேரிடர் விளைத்தார். கந்தருவர்க்கும் நாகர்கட்கும் ஈண்டியிருந்த பகைமையின் பயனாக இது மூண்டுள்ளதென்று தெரிந்து ஆண்டுச் சென்று அவ்விருவகையினர் இயல்பையும், இயைபையும், இவன் நொடித்து நாடினான். இருவகையாரும் இதமுறுமாறு இவன் இனிது கூறினான். ஆற்றலின் ஏற்றத்தாலும், படையூற்றத்தாலும் கந்தருவர் சிறந்திருந்தனராதலால் சீற்றந் தணியாதவராய்ப் போராற்றி நாகரைப் போக்கத் துணிந்தார். இவன் பொங்கியெழுந்து பெரும்போர் புரிந்தான். அதில் அவ் ஆறுகோடி வீரரும் வேறு வேறு ஓடினர். சென்றவர்

மீண்டுந் திருப்பாதுடைக்கித் தன் வென்றியை எங்கும் இவன் விளங்க நிறுத்தினன். பின்பு வசுதன் என்னும் ஒரு புதல்வனைப் பயந்து எல்லா வுயிர்க்கும் இன்பம் பயப்ப இவன் இருநிலம் புரந்தான். ஒருவர்க்கும் வெருவரல் நிகழாமல் உற்ற குற்றந்திருமாறு ஓர்ந்து ஒறுத்துவந்த இவன் வேந்தியலை அமரரும் வியந்தார். தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால் ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து என்னும் உண்மைக்கு இவன் உரியவனாயினன். விரிவை மனுமரபில் காண்க.

வெருவந்தசெய்யாமல் அரசன் ஒறுத்தலைப் ஓர்ந்து செய்ய வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

562 திண்டோள் வழுதி சினந்தெழுந்தும் உள்ளிரக்கம்
கொண்டெறிந்தான் மெல்லக் குமரேசா—பண்டிக்
கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர். (௨)

இ—ள்.

குமரேசா! பெருவழுதி என்னும் பாண்டியன் வெகுண்டெழுந்து விரைந்தும் வன் இரங்கி மெல்ல எறிந்தான் எனின், ஆக்கம் நெடிது நீங்காமை வேண்டுபவர், கடிது ஓச்சி மெல்ல எறிக என்க.

கடிது ஓச்சி=கடுமையாக ஓங்கி: ஓச்சல்=ஓங்கல், எறிதல், ஓட்டல், செலுத்தல். ஓச்சாமல் எறிந்தால் அதனால் பயனில்லை யாதலால் ஓச்சி என்றார். கடுமை தோற்றத்திலும், மென்மை ஆற்றுதலிலும், அமைந்திருக்கவேண்டும் என்பதாம்.

இன்றேறு நம்மைக் கொலைத்துவிடுவான் என்று குற்றஞ் செய்தவர் அஞ்சி நடுங்குமாறு தோன்றிப் பின்பு ஆதரவோடு அரசன் அவரைத் தண்டித்தல்வேண்டும் என்பார் "கடிது ஓச்சி மெல்ல எறிக" என்றார்.

குடி புறங்காத்து ஓம்பிக் கோலோச்சி நிற்கும் அரசன் குற்றம் கடிதற்கு வேலோச்சுங்காலும் வெருவந்த செய்பவனாகான் என்பது குறிப்பு.

மேல், தக்காங்கு நாடி ஒத்தாங்கு ஒறுக்கவேண்டும் என்றார்; இதில், அங்ஙனம் ஒறுக்குங்காலும் வெம்மையாகத் தொடங்கி மென்மையாகவே செய்யவேண்டும் என்றார்.

தாம் எய்தியுள்ள செல்வம் நெடுங்காலம் நீங்காமல் நிற்க வேண்டுவோர் கடுமையாக ஓங்கி மிருதுவாக எறியவேண்டும் என்பதாம்.

கொடிய தண்டம் செய்யின் ஆக்கம் நெடிது நில்லாது ஆதலால் திருவுடை மன்னர் இவ்வுண்மையை யுணர்ந்து அதனை மென்மையாகவே செய்யவேண்டும் என்பது கருத்து.

அறிவுடைய அரசர் யாண்டும் வெருவந்த செய்யார் என்பதும், குற்றஞ் செய்தாரை ஒறுக்கத் தொடங்கியபோதும் இரக்கங் கொண்டே செய்வர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை பெருவழுதியால் உணரப்படும்.

## கதை

பெருவழுதி என்பவன் சந்திரகுலத் தோன்றல்களாகிய பாண்டிய வேந்தருள் ஒருவன். இவன் மனமாட்சியும் வினைமாட்சியும் மதிமாட்சியுமுடையான் எவராலும் போற்றத்தக்கவன். இவனது காலம் இரண்டாயிர ஆண்டுகட்கு முன்னதாம். பலகலைகளிலும் இவன் வல்லவன். நல்ல சொல்வன்மை யுள்ளவன். இவனுடைய சொற்கள் செம்மையும் தெளிவுமுடையனவாய் எவர்க்கும் நன்மைதருவன. வடக்கே இமயமலையும், தெற்கே குமரிக்கோடும் கிழக்கும் மேற்கும் கடல்களும் எல்லையாகவுடைய இப்பெருநிலமுழுவதும் இவன் ஒருவனே தனிநின்று புரந்தான். பரம்பொருளிடத்து நிரம்பிய அன்பினன். செய்தற்கரிய வேள்விகள் பல இவன் செய்துமுடித்தவன். செறிந்து நீண்ட சிகையினையுடையவன். அதனால் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி என்னும் பெரும்பெயரோடு இவன் விளங்கியிருந்தான். உயர்நிலை யுலகம் அமிழ்தொடு பெறினும், பொய்சேண் நீங்கிய வாய்நட்பினையே

முழங்குகடலேணி மலர்தலை யுலகமொடு உயர்ந்த தேஎத்து விழுமியோர் வரினும், பகைவர்க்கஞ்சிப் பணிந்தொழுகலையே—தென்புல மருங்கின் விண்டு நிறைய வாணன் வைத்த விழுநிதிபெறினும் பழி நமக்கெழுக என்னாய் விழுநிதி—ஈதலுள்ளமொடு இசைவேட் குவையே—அன்னாய் நின்னொடு முன்னிலையெவனோ! என மன்னிநின்று ற்றும் முன்னிலையாக பல்சாலை முதுகுடுமியின் நல்வேள்வித் துறை போகிய தொல்லாணை நல்லாசிரியர் புணர்கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின் என இவன் முன்னாகின்றான். மனோவதி என்னும் தனது அருமை மனைவியுடன் மருவியிருந்து இவன் இருநிலம்புரந்தான். அரசியல் நலங்களெல்லாம் இவனுக்கு அணிகளாக அமர்ந்திருந்தன. பேராற்றலும் பெருவீரமும் உடையவனாயினும் உயிர்கள் மாட்டுப் பேரிரக்கமுள்ளவன். சாமம் பேதம் தானம் தண்டம் என்னும் அரசர்க்குரிய நால்வகை உபாயங்களுள் இறுதி உபாயத்தை அறநெறிதிறம்பாமல் இவன் ஆற்றிவந்ததிறம் பெரிதும் போற்றத்தக்கது. ஒருவகையானும் தணியாமல் பகைவர் முறுகிவரின் அல்லது அவர் மேல் இவன் அமர்செய்யத் துணியான். அங்ஙனம் துணிந்தபொழுதும் அவர் நகரினை வளைந்து கொண்டு அங்குள்ள அந்தணர், பசுக்கள், பெண்கள், பாலர் முதலாயினோரை ஆதரவோடு வெளிவரச்செய்தே பின் அவரை அச்சுறுத்தி வெல்வான். தன் குடிகளுள் பிழையுடையாரை இவன் ஒறுக்கப்புகுங்கால் முதலில் அவர் அஞ்சி நடுங்குமாறு தொடங்கினும் பின்பு அன்போடே செய்வான். ஈரமும் குன்றாமல் தன் வீரமும் கோடாமல் இவன் வென்று விளங்கினான். வெருவந்தசெயலைப் பகைவராகி இவன்பால் எதிர்வந்தவரும் கண்டிலர். கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம் நீங்காமை வேண்டுபவர் என்னும் உண்மைக்கு இவன் உறையுளாயிருந்தான். விரிவை வழுதிமரபில் காண்க.

ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம் அம்பு கடிவிடுதும்: நும் அரண் சேர்மினென

அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே. (1)

வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்
கீழது முப்புணர் அடுக்கிய முறைமுதற் கட்டின்
நீர்நிலை நிவப்பின் கீழும் மேல
தானிலை யுலகத் தானும் ஆனாது
உருவும் புகழும் ஆகி விரிசீர்த்
தெரிகோல் ஞமன்ன போல ஒருதிறம்
பற்றல் இலியரோ நிற்றிறம் சிறக்க
செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்
கடற்படை குளிப்ப மண்டி யடர்புகர்ச்
சிறுகண் யானை செவ்விதின் ஏவிப்
பாசவற் படப்பை யாரெயில் பலதந்
தவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம்
பரிசின் மாக்கட்கு வரிசையின் நல்கிப்
பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே
வாடுக இறைவநின் கண்ணி ஒன்னார்
நாடுசுடு கமழ்புகை எறித்த லானே
செலிய ரத்தைநின் வெகுளி வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே
ஆங்க, வென்றியெல்லாம் வென்றகத் தடக்கிய
தண்டா ஈகைத் தகைமாண் குடுமி

தண்கதிர் மதியம் போலவுந் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னுக பெருமநீ நிலமிசை யானே (புறநானூறு) (௨)

இவை, நமது பாண்டியன் பெருவழுதியை வியந்து காரிகிழார், நெட்டிமையார் என்னும் புலவர்பெருமான்கள் இருவரும் பாடியன. இவனது சீலமும் செம்மையும், வீரமும், பகைவரை வென்றுநின்ற மேன்மையும், குடிகளை ஓம்பிவந்த பான்மையும், குற்றங்கடியுங்காலும் வெருவந்தசெய்யாமல் இதம்புரிந்து அறிந்த விதமும், பிறவும் இவற்றால் விளங்குதல் காண்க.

குற்றங்கடியும்பொழுதும் அரசன் கொடுமை செய்யலாகாது என்பது இதனால் கூறப்பட்டது.

---

563 குன்றுமால் நன்னன் கொடுமைசெய்தான் எனுடனே
குன்றி யழிந்தான் குமரேசா—என்றும்
வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்தம் ஒல்லைக் கெடும். (௩)

இ—ள்

**குமரேசா!** குடிகள் நடுங்குமாறு கொடுமைகளைச்செய்து வந்த நன்னன் என் விரைந்து அழிந்தான் எனின், வெருவந்த செய்து ஒழுகும் வெங்கோலனாயின், ஒருவந்தம் ஒல்லைக்கெடும் என்க.

ஒருவந்தம் கெடும்; ஒல்லைக்கெடும் எனத்தனித்தனி ஒட்டிக் காண்க. ஆயின் கெடும் என்றது ஆகவே கேட்டிற்கு ஏதுவென்பதும் ஆகானாயின் யாதொரு கேடுமின்றி நீடுவாழ்வன் என்பதும் தோன்ற என்க.

வெருவந்த என்றது அஞ்சி நடுங்கத்தக்கசெயல்களை: அவை கையைப்புடைத்தல், நெய்யெரிபுகுத்தல், கடுங்கட்கோறல் முதலாயின. வெருவ வந்தன ஆதலால் வெருவந்த எனநின்றது. வெருவரல் என்னும் இணைவினையடியாகப் பிறந்ததெனினுமாம். வெரு = அச்சம். வெருவரக் குருதிச் செந்தினை பரப்பி எனவும் வெருவரு செலவின் வெகுளிவேழம் எனவும் வருவன காண்க.

ஒருவந்தம் என்பது உறுதி, துணிவு என்பவற்றை யுணர்த்திவரும்: ஒரு முடிவு என்னும் உறுதிப்பாடு தோன்ற நின்றது.

மேல், கடுங்கண்டம் செய்தல் கொடுங்கோலாம் என்றார்; இதில், அங்ஙனம் செய்பவன் நிச்சயமாக விரைந்து கெடுவான் என்றார்.

குடிகளஞ்சும்படியான செயல்களைச் செய்து நடக்கும் கொடுங்கோலனாயின் அவ்வரசன் உறுதியாக விரைவில் கெடுவான் என்பதாம்.

அரசன் கொடுங்கோலனாயின் அன்றே அவனுக்குக் கெடுங்காலமாம் என்பது கருத்து.

கொடுங்கோல் மன்னன் விரைந்து கெடுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நன்னன்பால் உணரப்படும்.

## கதை

நன்னன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர்க் கொங்குநாட்டின் வடபாலிருந்த பெருநிலப்பகுதியைத் தனக்குரிமையாகப் பெற்று அரசுபுரிந்தவன். இவன் மிகக்கொடியவன். ஈரமென்பது சிறிதுமில்லாத கோரநெஞ்சினன். கல்லாவுணர்வும் பொல்லாநினைவும் புல்லிநின்றவன். தன் சொல்லாலும் செயலாலும் எல்லாவுயிர்களுக்கும் இவன் அல்லலே விளைத்துவந்தான். புலியைக்கண்ட புல்வாய்களைப்போல் இவன் நலிவை நினைந்து குடிகள் நடுங்கி நொந்தனர். தன்னைத் தவிர மற்ற மக்களையெல்லாம் மிக்க இழிவாக மதித்துக்களித்து இவன் மதத்துத்திரிந்தான். எவர்வந்து எவ்வாறு முறையிடினும் தான் முன்னியதீமையை இவன் முடித்தேதீருவன். தன் சோலையிலிருந்த இனியமாங்காய் ஒன்று அருகிலிருந்த நதியில் விழுந்து மிதந்துபோயதை அங்கு நீராடவந்த மதிவதி என்னும் வணிகன்மகள்கண்டு விரும்பியெடுத்துத் தனியே தின்றாள். அதனை இவனறிந்தான். தான் தின்னுதற்குரியதை ஒருபெண் கொண்டு தின்றாளே என்று பெருங்கோபங்கொண்டு அவளைக் கொன்றுவிடும்படி இக்கொடுங்கோலன் பணித்தான். அக்கொடுமையைக் கேள்

வியுற்றுப் பெருந்திருவுடைய அவ்வணிகர் தலைமகன் விரைந்து வந்து இவனடியில் விழுந்து தன் மகள் அறியாமல் செய்ததை மன்னித்துவிடும்படி மறுகிவேண்டினன். இக்கொடியவன் சிறிதும் இரங்காமல் அவளைக் கொல்லவே துணிந்தான். அவ்வணிகன் பதைத்து அவள் நிறையளவு பொன்னையும், எண்பத்தொரு யானைகளையும் தந்து விடுகின்றேன் அவளைக் கொலைபுரியாமல் அருள் புரிய வேண்டுமென்று உளமுருகி வேண்டினன். அவன் எவ்வளவு மன்றாடியும் இப்படுபாவி அவளைக் கொன்றேதீர்த்தான். இக் கொடுஞ்செயலால் எங்கும் இவன் பெரும்பழியடைந்தான். உடனே இவன் பட்டத்துயானை கோசர் என்பவரால் பட்டு மாய்ந்தது. அதன்பின் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் என்னும் சேரமன்னன் வந்து இவன் ஊரை வளைந்தான். அப்போரில் இவன் பொன்றிமடிந்தான். நச்சுப்பாம்பினிடம் நல்ல ஒளிமணி தோன்றியதுபோல் இத் தீயவன் வயிற்றில் வேண்மான் என்னும் ஒரு தூயவன் தோன்றியிருந்தான். பின்பு பெரும்புகழை அவன் வளர்த்துவந்தாலும் இவன் நெடும்பழிகுன்றாதிருந்தது. தன் பொல்லாச்செயலால் இவன் ஒல்லையில் மடிந்ததையறிந்து எல்லாரும் வியந்தார். வெருவந்த செய்தொழுகும் வெங்கோலனாயின் ஒருவந்தம் ஒல்லைக்கெடும் என்னும் உண்மையை உலகம் இவன்பால் கண்டது.

மண்ணிய சென்ற வாணுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற் றொன்பது களிற்றொடு அவள்நிறை
பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் செலீஇயரோ வன்னை
யொருநாள் நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே. (குறுந்தொகை.)

இது, பரணர் என்னும் புலவர்பெருமானால் பாடப்பட்டது. மேற்குறித்த நன்னனது வெங்கோன்மையும், வெருவந்தசெய்கையும் பழியோடுபட்டு அவன் இழிந்து கெட்டதும் இதன்கண்ணும் விளங்குதல் காண்க.

வெருவந்த செய்வோன் விரைந்து கெடுவான் என்பது இந் நூல் கூறப்பட்டது.

---

564 பொன்றுமுன் தந்தையிறப்பப் பொல்லாச் சுயோதனனேன்
குன்றிமுன்னே மாய்ந்தான் குமரேசா—என்றும்
இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி யொல்லைக் கெடும். (ச)

இ—ள்.

குமரேசா! தந்தை இறந்துமுன்னமே தன் ஆயுள் குறுகித் துரியோதனன் ஏன் இறந்துபோனான் எனின், இறை கடியன் என்று உரைக்கும் இன்னாச்சொல் வேந்தன், உறைகடுகி ஒல்லைக்கெடும் என்க.

சொல்வேந்தன் ஒல்லைக்கெடும் = சொல்லையுடைய அரசன் ஒல்லையில் அழிவான். ஒல்லை = காலவிரைவு. உறைகடுகி = உறைதல் சுருங்கி; அஃதாவது வாழ்நாள் குறைந்து. சுருங்கியதைக் கடுகு என்பர். உறை என்னும் சொல்—படைக்கூடு, பாலிடுபிரை, மழைத்துளி, அளவுக்குறி, ஆயுள், இடம், வெண்கலம் முதலிய வற்றை உணர்த்திவரும்.

கடியன் என்றது கொடியவனை. இது கடுமை என்பதன் அடியாகப் பிறந்தது. கடுமை = விரைவு, கொடுமை, மிகுதி, மூர்க்கங் களைக்குறித்துவரும்.

மேல், கொடுஞ்செயலுடையான் விரைந்து கெடுவான் என்றார்; அச்செயலால் குடிகள் வருந்துவர்; அதன்பின் அவனைக் கொடியன் என்று சொல்லுவர்; அச்சொல், அவன் ஆயுளைத் தேய்த்து எல்லாத்தீமைகளையும் ஒல்லையில்விளைக்கும் ஆதலால் சொல்வேந்தன் கெடும் என்று இதில் தொடுத்துரைத்தார்.

நம் மன்னன் கொடியன் என்று குடிகள் சொல்லும் இன்னா மொழியை அரசன் உடையனாயின் அவன் ஆயுள் குறுகி விரைவில் அழிவான் என்பதாம்.

குடிகள் நொந்துரைக்கும் கடுங்கூற்றே கொடுங்கோல் மன்னனுக்குக் கொடுங்கூற்றம் என்பது குறிப்பு.

குடிகள் அஞ்சுகின்ற செயல்களை அரசன் செய்வனாயின் அவன்பால் அன்பிலராகிப் படியிருந்தும் குடிபேணான் படுபாவி சிறிதிரங்கான் இடிவிழுந்த மரம்போல இவன் இடிந்துபோகானா! என்று நெஞ்சு நொந்து அவர் வைவாராதலால் அதனை இன்னாச்சொல் என்றார். இவ்வகை வன்சொற்கள் பலர் வாயினுமிருந்து வருமாயின் அரசனுக்கு அஃதோர் பெருங்கேடாம்; ஆதலால் அங்ஙனம் நிகழாவண்ணம் அரசன் செங்கோலனாதல்வேண்டும் என்பது கருத்து.

எல்லா வலிகளுமுடைய அரசனைக் குடிகளுரைக்கும் இன்னாச்சொல் என்ன செய்துவிடும் என்பார்க்கு இஃதியம்பியதென்க.

அரசன் வெருவந்தசெய்வனாயின் அவன் எதிர்வந்து குடிகள் யாதும் செய்ய இயலாது; ஆதலால் தமக்குள்ளேயே இங்ஙனம் உரைத்து உளைவர் என்பதாம்.

குடிகள் வாயால் கொடியனெனப்படுமரசன் கடிதில் கெடுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துரியோதனன்பால் உணரப்படும்.

## கதை

துரியோதனன் திருவுடைமன்னனாயிருந்தும் அவன்செய்து வந்த கொடுமைகளை நினைந்து அனைவரும் அவனைக் கொடியன் என உரைத்துக் குலைந்து நொந்தார். ஐவரைக் கொல்லுமாறு அரக்குமாளிகையில் நெருப்பு வைத்து அல்லல் பலவும் செய்து வந்ததோடமையாமல் துரோபதையைப் பற்றிக்கொண்டு வந்து அவையில் நிறுத்தித் துகிலுரியச் செய்தான். இவனுக்குத் துணையாயிருந்த கொடியவருங்கூட அது கொடுமையென்று கூறினார். நினைக்கவும் கூடாத அந்நெடுங் கொடுமையை நேர்ந்து செய்யுங்கால், இம்மன்னன் எதிர்வந்து மறுத்துரைக்கமாட்டாமல் அந்நகர் மாந்தர் உள்ளங்குலைந்து உற்றதுயரை யார் சொல்லவல்லார்.

சூழுங் கனல்வா யுருமன்றித் துளிவாய் முகிலு மகிதலத்து
வீழுங் கொல்லோ வுற்பாதம் விரவிற் றென்றே வெருஉக் கொள்ளத்
தாழும் பெரிய கரியகுழல் தாரோ டலையத் தழீஇக்கொண்டு
வாழுஞ் சுரும்பு சுழன்றறற்ற மண்மே லிழுத்து வருகின்றான்.

தழலோ வென்னுங் கற்புடைய தனிநாயகிதன் தாமநறுங்
குழலோ வரகக் கொடிவேந்தன் குலமோ குலைந்த திவணென்பார்
நிழலோ புனிக்கு நெருப்பன்றோ நெறியொன் றில்லா நீடுபொலங்
கழலோன் மதிவெண் குடையென்பார் கையாற் கண்டகண்புடைப்பார்.

காட்டுந்திறல் வெஞ் சிலைவிசயன் கையால் வகிர்ந்து கடிகொண்மலர்
சூட்டும் பனிச்சை யிவண்புழுதித் துகளேறிய தென்றழுதுநைவார்
மீட்டுந் தடாமல் ஏகென்றுவிட்டாள் மைந்த ரிட்டவினை
கேட்டுங் கொடிய காந்தாரி கிளையோ டின்றே கெடுமென்பார்.

என்னே குடியிற் பிறந்தாருக் கிருப்பன் றிவ்வூர் இனியென்பார்
முன்னே யோடி முறையிட்டால் முனியுங்கொல்லோ எமையென்பார்
பின்னே யிரங்கி யழுதழுது பேதுற்றின்னல் பெரிதுழப்பார்
அன்னே துன்பங் களைந்தின்ப மாவாய் என்றே யருள்புரிவார்.

இன்னவாறு பலரும் பன்னியழுது கொடியன் கொடியன் என இம் மன்னனை வைது நொந்தார். அதனால் தந்தையிருப்பவும், தாய் தயங்கியிருப்பவும், இவன் முந்துறமடிந்து கடிதில் முடிந்து தீர்ந்தான். இறை கடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் வேந்தன் உறை கடுகி ஒல்லைக்கெடும் என்னும் உண்மைக்கு இவன் உரியவனானான்.

கொடிய மன்னன் கடிதில் மடிவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

565 பெற்ற அமணன் பெருஞ்செல்வம் பின்னிழிந்து
குற்றமுற்ற தென்னை குமரேசா—உற்ற
அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து. (ரு)

இ—ள்

குமரேசா! அமணனது பெருஞ் செல்வம் ஒருபயனுமின்றி ஏன் மிக இழிவுகொண்டது எனின், அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ் செல்வம், பேஎய்கண்டன்னது உடைத்து என்க.

ஆன் விகுதியைச் செவ்வியோடும் சேர்த்துக் காண்க. செவ்வி = காலம், சமயம்.

அருஞ்செவ்வி = அரியசெவ்வியனாய்; என்றது தன்னைவிரும்பி வருவோர் எளிதில் காணமுடியாதவாறு காலம் கடத்துவோன் என்றவாறு. மேல் எண்பதத்தான் என்றதற்கு இஃது எதிர்மறை என்க.

உண்ணும் சமயம், உறங்கும் சமயம், விழிக்கும் சமயம், புரளும் சமயம் எனப் புகலுரைகூறி ஒருவரையும் முகமலர்ந்து நோக்காமல் வறும்பொழுது போக்கும் கருங்குணத்தார் இவ் அருஞ்செவ்வியைத் தமக்கோர் பெருஞ்செவ்வியாகப் பேணிக் களிப்பர்.

செல்வத்துக்குப் பெரிய என்னும் அடைகொடுத்தது ஒரு பயனுமின்றி இடபேதத்தால் இழிந்து கிடக்கும் அதன் சிறுமைக்கு இரங்கி என்க.

மேல், அரசன் கொடியனாயின் அவன் ஆயுள் குறுகிவிடும் என்றார்; இதில், அவன் செல்வம் ஒருவர்க்கும் பயனின்றி வறிதே கழியும் என்றார்.

தன்னைக்காண விரும்பினார்க்கு எளிதில் காட்சிநல்கானாய்க் கண்டால் கடுத்த முகத்தினையுடையானது பெரிய செல்வம் பேய் கண்டாற்போல்வதொரு தீமையுடையது என்பதாம்.

பேய் கண்ட என்றது அளபெடுத்து நின்றது. இன்னிசை, சொல்லிசை, இசைநிறை என்பவற்றுள் இஃது இசைநிறை அளபெடையென்க. அஃதாவது செய்யுளோசை குறைந்தவிடத்து அதனை நிறைக்க இடுவது. பேய்கண் என்றது இசைகுறைந்து மாச்சீராய்நின்று தளைதட்டியதாதலால் அதனை நீக்கும்பொருட்டு எகரம் அதன் நெட்டெழுத்தின் பின் அளபெடையாக இங்குஇடப்பட்டது. அளபெடை = மாத்திரை மிகுக்க எடுப்பது.

குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே. என்றது

தொல்காப்பியம். அரசனாயிருப்பவன் அருஞ்செவ்வியனாயும் இன்னா முகத்தனாயும் இருத்தல்கூடாது என்பது கருத்து.

எளிய செவ்வியும் இனியமுகமுமுடையாராய்க் குடிகளுக்கு அளி செய்வோரே செங்கோல் மன்னராவர்; அருஞ்செவ்வியாய்

இன்னாமுகத்தராய்க் கொன்னே கழிபவர் கொடுங்கோலரே யாவ ரென்பதாம்.

காட்சிக்கெளியன் கடுஞ்சொல்லன் அல்லன் என்ற மாட்சிக்கு இது மாறாயது என்க.

அருஞ்செவ்வியும் இன்னாமுகமுமுடையானைப் பெரும்பேய் என்றே கருதவேண்டும் என்பது குறிப்பு.

பேய் வயப்பட்டது எவர்க்கும் பயனாகாதது போல் கொடுங்கோல் மன்னனுடைய செல்வம் ஒருவர்க்கும் பயன்படாது என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அமணன்பால் உணரப்படும்.

## கதை

அமணன் என்பவன் குமண மன்னனுடைய தம்பி. தலைக் கொடையாளி என்னும் நிலைத்த புகழை இந்நிலவுலகெங்கணும் நிறைத்துநின்ற அவ்வுயர்ந்தவனோடு உடன்பிறந்திருந்தும் இழிந்த செயல்களையே இவன் எய்தியிருந்தான். சீதேவி தோன்றும் திருப்பாற்கடல்தனிலே மூதேவி என் வந்து முன்பிறந்தாள் என்னும் அம்முறைமைக்கு இவன் பின்பிறந்திருந்தான். ஆசை மிகுதியால் அக்குமணனைக் காரிசில வனத்துக்கு ஓட்டிவிட்டு அரசைக் கவர்ந்துகொண்டு இவன் ஆட்சிசெய்தான். இன்னாமுகத்தனாய இவன் மன்னனாயபோது அந்நாட்டிலிருந்த எல்லாவுயிர்களிடத்தும் இன்னாமை மன்னி நின்றது.

> அழுமொலி சங்கமாக அணைத்துமா ரடிக்கு மோதை
> முழவொலி யாகக் கண்ணீர் மொய்மணப் பன்னீராகப்
> புழுதிவீ தியிற்சுகந்தப் பொடியெனப் புரியினெங்கும்
> இழவா சிருப்ப வேந்தா இளவா செய்தலுற்றான்.

என்றபடி இவன் எய்தி நின்றான். குடிகளது நலத்தைச் சிறிதும் நோக்காமல் தன் உடல் நலத்தையே உள்ளூறநோக்கி இவன் உவந்திருந்தான். இங்ஙனம் இருந்துவருங்கால் பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் பெருமான் குமணவள்ளலை நாடிவந்தார். இங்கு நாடமுடியாமல் நின்று நடந்ததை யறிந்தார். வந்தவரை ஏனென்று கேளாத ஈனமும் இன்னாமுகமுமுடைய

இவன்பால் இனி என்னபயன் என்று அவர் எண்ணி நொந்தார்; புகழ்மணம் சிறிதும் கமழாமையால் அமணன் என்ற பெயர் இவனுக்கு அமையுமென்றுகொண்டு அவர் அமைதியுற்றுநின்றார்.

அறத்தையும் நோக்கான் செவ்வி யருளையும் நோக்கான் அன்புத்
திறத்தையும் நோக்கான் கொண்ட சிறப்பையும் நோக்கான் எய்தும்
மறத்தையும் நோக்கான் பண்டை வழக்கையும் நோக்கானாகிப்
புறத்தொடும் அகத்தும் செல்வப் பொருளையே நோக்கி வாழ்வான்.

ஆதலால் தன்னைநோக்கான் என்று தெளிந்து வனத்திலிருக்கும் அவ்வள்ளலை நோக்கியே அவர் சென்றார். ஊருணிநீர்போல் எல்லாருக்கும் இனியபயன்களை உதவிவந்த அப்பெரிய செல்வம் இவன் கைக்கொண்டபின்பு ஒருவருக்கும் பயன்படாமல் இழிவு கொண்டது. அருஞ்செவ்வி இன்னாமுகத்தான் பெருஞ்செல்வம் பேய்கண்டன்னது டைத்து என்னும் உண்மையை உலகம் இவன்பால் கண்டது. விரிவைக் குமண சரிதையில் காண்க.

இன்னாமுகத்தானது செல்வம் எவர்க்கும் பயன்படாது என்பது இதனால் கூறப்பட்டது.

---

566 வென்றிச் சுதாசநனேன் வெஞ்செயலால் மன்திருவும்
குன்றி இழிந்தான் குமரேசா—கன்றும்
கடுஞ்சொல்லன் கண்ணில னாயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி யாங்கே கெடும். (சு)

இ—ள்.

குமரேசா! கடுஞ்சொல்லும் கொடுஞ்செயலுமுடைய சுதாசநன் ஏன் தனது நெடுஞ் செல்வத்தை யிழந்து இழிந்தான் எனின், கடுஞ்சொல்லன் கண் இலன் ஆயின், நெடுஞ்செல்வம் நீடு இன்றி ஆங்கே கெடும் என்க.

கண் என்றது கண்ணோட்டத்தை. கண் நோக்கிய பின் நிகழ்வதைக் கண் என்றதனால் இது கருவி ஆகுபெயராம். ஆகுபெயராவது ஒருபெயர் அதனோடு இயைபுள்ள மற்றொன்றுக்கு உரிமையாய் வருவது. ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்—தொன்முறை யுரைப்பன ஆகுபெயரே. என்றது இயல்.

நீடு இன்றி = நீடுதலின்றி: அஃதாவது நெடுங்காலம் நிலைத்து நில்லாமல் என்றவாறு. ஆங்கே = அப்பொழுதே. ஏகாரம் தேற்றத்தோடு விரைவும் தோற்ற நின்றது.

நீடின்றி என்றதோடு அமையாது மீண்டும் ஆங்கே என்றது செல்வத்தின் நெடுமைக் கேற்ப அதனழிவுக்கும் நெடுங்காலம் வேண்டுமன்றே? என்று ஐயுறவேண்டாம்; வெண்ணெய்க்குன்று எரியுற்றாற்போல் அவனது வெங்கோன்மையால் அன்றே அது விரைந்து அழிந்துபோம் என்பது விளங்க என்க. குன்றத்தனையிருநிதியைப் படைத்தோர் அன்றைப்பகலே அழியினும் அழிவர் என்றதுங் காண்க.

மேல், இன்னாமுகத்தான் செல்வம் எவர்க்கும் பயன்படாது என்றார்; இதில், கடுஞ்சொல்லனது நெடுஞ்செல்வம் விரைந்து அழியும் என்றார். அரசன் கடுஞ்சொல்லும் கொடுஞ்செயலுமுடையனாயின் அவன்பால் அன்பிலராகி யாவரும் அகந்திரிவர்; அவனது சிறுமையை நினைந்து திருமகளும் நீங்கிவிடுவள் என்றவாறு.

கடிய சொல்லை யுடையவனாய்க் கண்ணோட்டமும் இலனாய் அரசன் இருப்பனாயின் அவனது பெரிய செல்வம் நெடிதுநில்லாமல் கடிதில் அழியும் என்பதாம்.

அரசனது வாயும் கண்ணும் தீயவாயின், அன்றே அவன் செல்வத்துக்கு நாசம் தோன்றும் என்பார் ஆங்கே கெடும் என்றார்

அரசன் இன்சொல்லும், அளியுமுடையனாயின் இவ்வுலக முழுவதும் உரிமையாகி அவன்பால் நெடிதுநிற்கும் என்று மேலருளிய அவ்வுயர்குணங்கட்கு இவை நேர்மாறாதலால் இவற்றை யுடையவன் நெடிய செல்வமும் கடிதின் மடியும் என்றார்.

> புண்ணிய முலர்ந்தபின் பொருளி லார்களைக்
> கண்ணிலர் துறந்திடும் கணிகை மார்கள்போல்
> எண்ணிலள் இகந்திடும் யாவர் தம்மையும்
> நண்ணிய நண்பிலள் நங்கை வண்ணமே.

என்றபடி அரசுக்குரிய அறந்துறந்தவரை அரசதிருவும் துறந்து போய்விடும் என்க.

கடுஞ்சொல்லும் வன்கண்மையும் தன் நெடுஞ் செல்வத்தைக் கெடுத்துத் தனக்குப் பெரும்பழியைக் கொடுத்துவிடுமென்றஞ்சி அரசன் அவற்றை ஒருபோதும் கொள்ளலாகாதென்பது கருத்து.

அரசன் கடுஞ்சொல்லுடையனுயின் அவன் நெடுஞ்செல்வம் கெடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுதாச நன்பால் உணரப்படும்.

## கதை

சுதாசநன் என்பவன் சூரியகுலவேந்தனுகிய சுதாமனுடைய புதல்வன். இவனது காலம் திரிசங்கு மன்னனுக்குப் பின்னதாம். இவன் அஞ்சா நெஞ்சினன். படைக்கலப் பயிற்சியில் மிகத் தேர்ச்சிபெற்றவன். பல நூல்களிலும் நல்ல பயிற்சியுள்ளவன்; ஆயினும் அமைதியும் பண்பும் அமையப்பெறாதவன். தனது அடுந்திறலையும் நெடுந்திருவையும் நினைந்து இவன் நெடுங்களி கொண்டான். குடிகள் நலத்தைச் சிறிதும் நாடாமல் கொடுமை செய்துவந்தான். கடுத்தமுகமும் கடுஞ்சொல்லுமுடையனுதலால் அடுத்திருந்தவரும் இவன்பால் அன்பு நீங்கினுர். அரசாளுரிமையை இவன் முறைமையோடு செய்யாமையால் நாடுமுழுதும் நிலைமாறி நின்றது.

ஆர்வலஞ் சூழ்ந்த ஆழி அலைமணித் தேரை வல்லான்
நேர்நிலத் தூருமாயின் நீடுபல் காலஞ் செல்லும்
ஊர்நிலம் அறிதல்தேற்று தூருமேல் முறிந்து வீழும்
தார்நிலமார்ப வேந்தர் தன்மையும் அன்னதாமே.

என்னும் உண்மையை உணராமல் தன் மனம்போனபடி இவன் மதத்துத் திரிந்தான். அதனுல் இறைவளமும் நிலவளமும் குறுக நேர்ந்தன. குலகுருவாகிய வசிட்டர் இவன் நிலைமைக்கு இரங்கி ஒருநாள் நீதிகளுரைத்தார். இவன் எதுங்கேளாமல் அவரோடு எதிர்த்துரையாடினுன். உடனே அரக்கனுகுமாறு இவனை அவர் சபித்துப் போனுர். அவ்வாறே இவனுகித் தொலைந்து அரச திருவை யிழந்தான். கடுஞ்சொல்லன் கண்ணிலனுயின் நெடுஞ் செல்வம் நீடின்றி ஆங்கே கெடும் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்தது. விரிவைக் காஞ்சி மான்மியத்தில் காண்க.

கடுஞ்சொல்லுடையான் நெடுஞ்செல்வம் கெடும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

567 அன்றேன் கொடுந்தண்டம் ஆற்றி நெடுங்கிள்ளி
குன்றினன் ஆற்றல் குமரேசா—என்றும்
கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கு மரம். (எ)

இ-ள்.

குமரேசா! கொடுந்தண்டம் புரிந்த நெடுங்கிள்ளி என்தன் அடுந்திறல் அழிந்தான் எனின், கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன் அடுமுரண் தேய்க்கும் அரம் என்க.

கை இகந்த தண்டம்=முறை கடந்த தண்டம்; என்றது கொடுந்தண்டத்தை. கையிகத்தல்=கடத்தல், ஒழுங்குதவறுதல். அடுமுரண்=பகைவரை அடுதற்கு ஏற்ற வலி. அடுதல்=கொல்லல், வெல்லல். அரம்= இரும்பைத் தேய்த்தற்குரிய ஒருவகைக்கருவி. மொழியும், தண்டமும் அரம் என்று உருவகஞ்செய்ததற்கேற்ப முரணை இரும்பு என்னாமையால் இஃது ஏகதேச வுருவகம். அஃதாவது ஒரு பகுதியை உருவகித்து மற்றொரு பாகத்தை உருவகஞ்செய்யாது விடுவது. எத்துணை வல்லிரும்பையும் அரம் தேய்த்து மாய்த்துவிடும்; அதுபோல் அரசன் வலி எவ்வளவு மிக்கதாயினும் அவனது கொடுங்கோன்மையால் அஃது அழிந்தே போம் என்பதாம்.

மேல், கடுஞ்சொல்லும், கண்ணோட்டமின்மையும், அரசனது நெடுஞ்செல்வத்தைக் கெடுக்குமென்றார்; அவனது அடுமுரணும் இதில் அழியும் என்றார்.

கடிய சொல்லும் கொடிய தண்டமும் அரசனது நெடிய வலியை முடியத் தேய்த்துவிடும் என்பதாம்.

பகைவரையெல்லாம் வெல்லுதற்கேற்ற பேராற்றல் அமைந்திருப்பினும், கடுமொழியும் கொடுந்தண்டமும் அரசனுடையனாயின் ஒருவரும் அவனை அடையாதகல்வர்; அதனால் குடிவளம் குன்றி அடுமுரண் தேய்ந்து அவன் கெடுவான் என்பது கருத்து.

இன்சொலாலன்றி இருநீர் வியனுலகம்—வன்சொலால் என்றும் மகிழாதே என்றதனால் கடுமொழியின் கேடு காணப்படும்.

கொடுஞ்சொல்லையும் குற்றத்தின்மிக்க தண்டத்தையும் யாண்டும் அரசன் கொள்ளலாகாதென்பது குறிப்பு.

கொடுந்தண்டஞ் செய்வோன் குன்றி யழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நெடுங்கிள்ளிபால் உணரப்படும்.

## கதை

நெடுங்கிள்ளி என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூற்றிருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னர் உறையூரிலிருந்து அரசு புரிந்த ஒரு சோழமன்னன். சோழமண்டலத்திலுள்ள ஆவூர் என்னும் நகரமும் இவனுக்கு அரசுநிலையமாக இருந்தது. மல்லமரிலும் வில்லமரிலும் இவன் மிக்க மாட்சியுடையனாயினும் ஆட்சிக்குரிய சூழ்ச்சித்துறையில் தேர்ச்சியில்லாதவன். எதையும் எண்ணித் துணியாமல் செய்துவிட்டுப் பின் எண்ணியிரங்கும் இயல்பினையுடையவன். இவன் மனநலமுற்றவனாயிருந்தும் சினமிகப் பெற்றவனாதலால் கடுமொழியோடு ஒறுத்தலையும் கைமிகந்தே செய்துவந்தான். வருங்கால், காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து அரசுபுரிந்துவரும் கிள்ளிவளவனுக்கும் இவனுக்கும் இடையே பெரும்பகைமூண்டிருந்தது. ஒருநாள் இளந்தத்தன் என்னும் புலவன் ஒருவன் பரிசில் கருதிப் பல இடங்கட்குஞ்சென்று முடிவில் அவன் நகரையடைந்து பெற்று அதன்பின் இவன் நகருக்கு வந்தான். அச்செஞ்சொற்புலவனை வஞ்சன் என்று கருதி இவன் வைது சினந்து வதைக்கத்துணிந்து ஓர் வன்சிறையிலடைத்துவைத்தான். இக்கொடுந்தீமையைக் கோவூர்க்கிழார் என்னும் புலவர்பெருமானார் அறிந்து விரைந்தோடிவந்து இவனை அடைந்து அரசே! நீ குறித்த கொடுமையை விடுவாயாக; பழுத்த மரங்களைத் தேடிச்செல்லும் பறவைகளைப்போல வள்ளல்களை நாடிச்சென்று பரிசில் பெற்று மீண்டு சுற்றத்தாரோடு சூழ்ந்திருந்துண்டு யார்க்கும் யாதொரு தீதையும் புரியாதுவாழும் புலவர் மரபோனை நீ கொலைபுரியப்

புகுந்தது உன் நிலைமைக்கே கேடாம் என்று அவன் தலைமைக் கேற்பக்கூறித் தத்தனை யுய்வித்தார். தலை பிழைத்ததென்று தத்தன் தப்பிப் பிழைத்தான். இதனை இவன் பகைவனை கிள்ளிவளவன் கேள்வியுற்றான். தன் ஊரிலிருந்து வந்தவன் என்னும் ஓர் ஏதுவினால் இத்தீது செய்தானே! என்று இவன் மீது பெருஞ்சினங் கொண்டு படையோடு எழுந்தான். அவன் தம்பியாகிய நலங்கிள்ளி அவனை அமர்த்தி விட்டு நெடுங்கிள்ளியின் தலைகிள்ளி வருகின்றேன் என்று வந்தான். அவ்வமையம் இவன் ஆவூரில் அமர்ந்திருந்தான். அதனைவந்து அவன் வளைத்துக் கொண்டு அடு போராற்றினன். அதில் இவன் தோல்வியுற்று நகர்க்குட் புகுந்து கோட்டைக்கதவினை அடைத்துக்கொண்டு உள்ளே ஒடுங்கியிருந்தான். நலங்கிள்ளி பொருமுரணோடு புறத்தேயிருந்தான். முற்றுகை நீட்டித்ததனால் உள்ளிருந்தவரெல்லாரும் மிகஉழைந்து நொந்தார். அவர்தம் மறுக்கத்தைத் தெரிந்து கோவூர்க்கிழார் வந்து இவனிடம் உருக்கமாகச் சில உரைகள் உரைத்தார்.

இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅது
இருந்தரை நோன் வெளில் வருந்த ஒற்றி
நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்து
அலமரல் யானை உருமென முழங்கவும்;
பாலில் குழவி அலறவும்; மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும்; நீரில்
வினைபுனை நல்லில் இனைகூஉக் கேட்பவும்;
இன்னா தம்ம ஈங்கினிது இருத்தல்
துன்னருந் துப்பின் வயமான் தோன்றல்,
அறவை யாயின் நினதெனத் திறத்தல்;
மறவை யாயிற் போரொடு திறத்தல்;
அறவையும் மறவையும் அல்லையாகத்
திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்
நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங்காலே. என்று

அவர் இவன் உறுதிகாண உரைத்தார். இவன் அமையமறிந்து திறந்துகொண்டு ஆவூரை நீங்கி உறையூரையடைந்தான். அவன் ஆவூரைக் கைப்பற்றிக்கொண்டு பின்னும் உறையூரைவந்து வளைத்து அமர்செய்து இவனை வென்று அதனையும் கவர்ந்து தனக்குரிமைசெய்துகொண்டான். தன் கொடுவினையால் இவன் அடுமுரண் தேய்ந்ததே என்று அனைவரும் இரங்கினர். கடுமொழியும் கையிகந்ததண்டமும், வேந்தன் அடுமுரண் தேய்க்கும் அரம் என்பதை உலகம் இவன்பால் அறிந்தது.

வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடியவென் னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
ஓம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந்தன்றோ? இன்றே; திறப்பட
நண்ணார் நாண அண்ணாந் தேகி
யாங்கினி தொழுகி னல்ல தோங்குபுகழ்
மண்ணாள் செல்வ மெய்திய
நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே.

இது, நெடுங்கிள்ளி இளந்தத்தனைக் கொல்லப்புகுந்தபொழுது கோவூர்க்கிழார் சொல்லித்தடுத்தது.

கொடுங்கோல் மறமன்னர் கீழ்வாழ்தல் இன்னா
நெடுநீர் புணையின்றி நீந்துதல் இன்னா
கடுமொழி யாளர் தொடர்பின்னா இன்னா
தடுமாறி வாழ்த லுயிர்க்கு. (இன்னா நாற்பது)

கொடுந்தண்டஞ் செய்வோன் அடுந்திறலழிவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

568 என்னே சததன்வா எண்ணுமற் செய்துபின்பு
கொன்னே யழிந்தான் குமரேசா—துன்னும்
இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு. (அ)

இ—ள்

குமரேசா! சததன்வா தீமையை ஆராயாமல் செய்து பின்பு ஏன் திருவிழந்து அழிந்தான் எனின், இனத்துஆற்றி எண்ணாத வேந்தன், சினத்து ஆற்றிச்சீறின் திரு சிறுகும் என்க.

இனம் என்றது அமைச்சரை: உடனிருந்து அரசனுக்குத் துணைபுரிவாராதலால் அவர் இங்ஙனம் உரைக்க நின்றார். தன் சாதியும் இனம் எனப்படுமாயினும் எண்ணி ஆற்றுதற்கு ஏற்ற அறிவுடையாரையே அஃது ஈண்டு எண்ண நின்றது.

இனத்து ஆற்றி=அமைச்சரோடு கலந்து; என்றது தான் செய்யவேண்டிய காரியத்தை அமைச்சர்பால் வைத்து முதலில் ஆராயுமாறு செய்து என்றவாறு.

இனம் சினம் என்பன அத்துச்சாரியை பெற்றுநின்றன. சினம் அகத்திருந்து புலப்படாது புறப்படும்; சீற்றம் அதன்பயனாய் மண்டி உரைவடிவாகி வெளிப்படும். சினத்தாற்றிச்சீறின் = சினத்தைச் செய்துகொண்டு சீறுவனாயின். சீறுதல் = அதட்டல், உரற்றல், உறுமுதல்.

மேல், அரசன் கொடுந்தண்டம் செய்யின் அவன் அடுந்திறல் கெடும் என்றார்; இதில், மதிகுன்றி மன்னன் மனம்போனபடி செய்யின் அவன் நிதி குன்றும் என்றார்.

அமைச்சர் முதலிய தன் துணைவரோடிருந்து ஆராயாமல் ஒரு காரியத்தைச்செய்துவிட்டு அதன் பின் அரசன் வெகுண்டு சீறுவனாயின் அவன் செல்வம் தேய்ந்துபோம் என்பதாம்.

இனத்து ஆற்றி எண்ணாமையும், சினத்து ஆற்றிச்சீறுதலும் தனக்குப் பெருங்கேட்டை விளைக்கும் கொடுஞ்செயல்களாம் ஆதலால் அவற்றை அரசன் யாண்டும் கொள்ளலாகாது என்பது கருத்து.

வெருவந்தசெயலை ஒருவன் அறிவிழந்து செய்யின் பின்பு அவன் திருவிழந்து கெடுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சததன்வாவிடம் உணரப்படும்.

## கதை

சததன்வா என்பவன் யதுகுல வேந்தனாகிய இருதிகனுடைய புதல்வன். தாய் பெயர் சவுமதி என்பர். தேவமீடன் கிருதவன்மன் என்னும் இருவரும் இவனுடன் பிறந்தவர். இவனது காலம் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னராம். இவன் திருவுற்றிருந்தும் அறிவற்றிருந்தான். அழகனே யாயினும் இழிகுணம்வாய்ந்தவன்; ஈரம் புல்லாதவன். வீரமும் இல்லாதவன். வாரம்புரிந்து ஓரம்புகல்பவன். அடுக்குமிக்கவன். எதையும் எண்ணுமல் செய்துவிட்டுப் பின் இருந்து வருந்துவன். வடமதுரையையடுத்திருந்த பெரிய நிலப்பகுதியைத் தனக்கு உரிமையாகக் கொண்டு இவன் அரசுபுரிந்தான். புரிந்துவருங்கால் சத்திராசித்தின் அருமைத் திருமகளாகிய சத்தியபாமையை இவன் மணந்து கொள்ள விழைந்திருந்தான். அம்மன்னன் கண்ணனுக்கே தன் பெண்மணியைக் கைப்பிடித்துத்தந்தான். இவன் எண்ணியிருந்த எண்ணமெல்லாம் பாழாகப் பின்பு எண்ணுதனவெல்லாம் எண்ணியெண்ணி நொந்தான். அவனைக் கொன்றுவிடவேண்டுமென்றே இக்கொடியவன் குறிக்கொண்டிருந்தான். ஒருநாளிரவு ஒருவரும் அறியாமல் தன் உறைவாளோடு அவன் படுக்கையறையிற் புகுந்து இவன் பதுங்கியிருந்தான். அவ்வுத்தமன் அணையிலமர்ந்து அயர்ந்து துயின்றான். அமைபநோக்கி யெழுந்து இக்கொலைப் பாதகன் இரக்கம் சிறிதும்இன்றி அவனைக் கொலைபுரிந்துவிட்டு அவன் கழுத்திலணிந்திருந்த சமந்தகம் என்னும் அற்புதமணியைக் கவர்ந்துகொண்டுபோனான். அம்மணி சூரியனால் அம்மன்னனுக்குத் தரப்பட்டது. தன்னைத் தரித்துக்கொண்டவர்க்கு எல்லா நலங்களையும் தரவல்லது. உடையவன் விரும்பினால் நூற்றுறுபதுதுலாம் பொன்னை ஒருமுறையில் உதவும். அப்பெண்மணியைஇழந்தாலும் இவ்வொண்மணியமைந்ததே யென்று இப்புன்மதியன் மகிழ்ந்தான். தந்தை மடிந்துகிடந்ததை விடிந்தபின் சத்தியபாமை கண்டு மூர்ச்சையாய் விழுந்தாள். துடித்தெழுந்தாள். தனக்கு மணமுடிந்து மதிஒன்று நிரம்புமுன்னரே தந்தைக்கு இவ்விதி வந்ததேயென்று அப்பதிவிரதை பதைத்தழுது இப்பாதகன் செய்ததென்றுதெரிந்து தன்பதியிடஞ்சென்று புகன்றாள். தனக்குப் பெண்

ணைக்கொடுத்த மாமனுக்கு இப்பிழையைக்கொடுத்தானே யென்று கண்ணன் கொதித்து இவன்மேல் கனன்றுவந்தான். இப்படி மகன் ஓடியொளித்துத் தனக்கு உதவிசெய்யுமாறு இனத்தவரோடு இசைத்தான். அலையெழுதழலின் வெம்பி ஆடமருழந்த மல்லர்–கொலையுறப் பணைத்து வீங்கு குங்குமக் குவவுத்திண்டோள்–மலையொடு மலையவல்லார் மண்ணினில் விசும்பில் மற்றை– உலகினில் உளர்கொல் என்று உரை பலஉதவி ஒருவரும் இவனுக்கு உதவாராயினர். இந்நிலையில் இவன் செல்வஞ் சுருங்கிச் சீரழிந்தது. சமயத்துக்கு உதவிசெய்யவில்லையேயென்று அவரை இவன் சினந்து சீறிவிட்டு விரைந்து ஓடி விதர்ப்பதேயம் புகுந்தான். கண்ணன் கடுகித்தொடர்ந்துபோய் இவன் தலையையறுத்துத் தரையிலுருட்டிவந்து தன் தலைவியைத் தேற்றினன். இவன் முதலில் அறிஞரோடு ஆராயாமல் பெரும்பழியைச் செய்துவிட்டுப் பின் வருந்தியழுது வைது தன் பெருந்திருவையும் இழந்து முடிவில் அழிந்தான். இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச் சீறிற் சிறுகும் திரு என்னும் உண்மைக்கு இவன் உரியவனாயினன். விரிவைப் பாகவதத்தில் காண்க.

அணிபுரை பணைமென் றோளார் அலர்கதி ராரந்தாழ்ந்த
பணைமுலை பொருத தாரான் பள்ளிகொள் களிறுபோலத்
துணர்விரி யமளிமீது துஞ்சுழி யெருக்கித் துஞ்சா
மணியினைக் கவர்ந்தான் மற்ற மானவேற் றடக்கையானே. (1)

தண்ணறுங் கோதை சோரச் சத்தியபாமை நெஞ்சந்
துண்ணெனச் சோர்ந்து மாழ்கிச் சுடர்செய்வேற் றந்தைதன்னை
எண்ணெய்பெய் தோணியிட்டாங் கெய்தினள் கொழுநன்தன்பால்
புண்ணுறு புலவு வாட்கட் புலம்புமுத் துகுப்ப நின்றாள். (2)

கேட்டனன் விளைந்த வண்ணங் கிளர்கட லுலகங்காப்பச்
சூட்டுவா ளரவப் பள்ளி துயிற்சுவை துறந்த தொல்லோன்
மோட்டுவெண் டிங்கள்மேனி முன்னவன் றன்னோ டொல்லை
ஓட்டினன் கொடிஞ்சித் திண்டேர் உற்றனன் நகரமாதோ. (3)

உந்தி நீ ருலகங் காக்கும் ஒருதனித்திகிரி மாயன்
வந்தன னென்ன லோடும் வயிறெறி தவழ அஞ்சிக்

கொந்தழல் வேலினானைக் கொன்றெறி மணி கைக்கொண்ட
கந்தடு களிற்றுத் தானைக் காவலன் கலக்கமுற்றான். (4)

இனத்தாற்றாக சததன்வா பின் சினத்தாற்றிச் சீரழிந்ததும் மேற்குறித்த வுண்மையும் இவற்றுள் விளங்குதல் காண்க.

அறிவிழந்து கொடுமைசெய்தவன் திருவிழந்து கெடுவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

569 தீதுமிகு தாரகன்முன் தேர்ந்துசிறை செய்யாதேன்
கோதுமிக மாண்டான் குமரேசா—மோதிச்
செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும். (கூ)

இ—ள்.

குமரேசா! போர் நிகழும் என்று தெரிந்திருந்தும் முன் பொருந்துவதைச் செய்யாத தாரகன் பின் என் வருந்தி மாய்ந்தான் எனின், செருவந்த போழ்தில் சிறைசெய்யா வேந்தன் வெருவந்து வெய்து கெடும் என்க.

அரசன் வெருவந்தசெய்யின் அவனுக்கே வீண்கேடுவிளையும், ஆயுள்குறையும், ஒருவரும்நெருங்கார், அருஞ்செல்வம் கெடும், ஆற்றல்தேயும், அரசுகுன்றும், என்று இதுவரை கூறிவந்து இறுதியில் அவனே வெருவந்து அழிவன் என இதில் விதிக்கின்றார். செரு என்றது போரை: செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே எனவும், செருப்புகன்றெடுத்த சேணுயர் நெடுங்கொடி எனவும், செருநிலத் தவருயிர் செகுத்தும் எனவும், செரு விளைத்தழலும் வேலோய்எனவும் வருவனவற்றுள் செரு விளைத்து நிற்கும் பொருளையுணர்க.

சிறை என்றது பாதுகாப்பிற்கேற்ற அரணை.

வெய்து கெடும்=விரைந்து கெடுவான். வெம்மை ஈண்டு விரைவின்மேலது. வெந்து எனவும் பாடம்.

சிறைசெய்யாதிருந்தவன் பகைவர் வந்தபோழ்து பதைத்து ஒன்றுஞ்செய்யலாற்றாது உடனே ஒழிவன் என்பார் வெருவந்து என்றதோடு அமையாமல் வெய்து கெடும் என்றார்.

மேல், இனத்தோடு எண்ணிச்செய்யாதவன் எய்தியுள்ள திருவை யிழந்துவிடுவன் என்றார்; இதில், செருவருமுன்னரே சிறைசெய்யாதவன் பின்னர் வெருவராலுற்று விளிவன் என்றார்.

அருஞ்செவ்வி, இன்னாமுகம், கடுமொழி, கையிகந்ததண்டம், இனத்தாற்றி எண்ணாமை, சினத்தாற்றிச் சீறல், என்னும் இவையே, குடிகளும் இனமும் வெருவுதற்கேற்ற செயல்களாம்; செருவந்தபோழ்தில் வேந்தன் சிறைசெய்யாமை எவ்வாறு வெருவந்த செயலாம் எனின், அவைபோலன்றித் தனக்கும் பிற க்கும் ஒருங்கே வெருவாலை இது விளக்குமாதலால் அவற்றினும் இது வெய்யதாம் என்க.

போர்வந்தகாலத்தில் தனக்கு அமைவான அரணை முன்னதாகவே செய்துகொள்ளாத அரசன் பின் வெருவி நொந்து விரைந்து கெடுவான் என்பதாம்.

போரினை விளைத்தற்குப் பகைவர் முனைந்திருக்குங்காலத்தில் தன் பாதுகாப்பிற்கு ஏற்றநலங்களை யெல்லாம் முன்னதாகவே எண்ணி அமைத்து அரசன் வைத்துக்கொள்ளாவிடின், அவர் புகுந்தபொழுது குடிகளும் படைகளும் குலைந்துவிடும்; அதன் பின் யாதுஞ்செய்யலாற்றாது தானும் அஞ்சி அழியநேரும்; ஆதலால் "சிறைசெய்யா வேந்தன் வெருவந்து வெய்துகெடும்" என்றார்.

பகைவரால் போர்மூண்டிருக்குங் காலத்தில் ஆவதைச்செய்யாமல் அயர்ந்திருக்கும் அரசன், பின் சாவதைக் காண்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தாரகன்பால் உணரப்படும்.

### கதை

தாரகன் என்பவன் அசுரேசனாகிய சூரபன்மனுடைய தம்பி. இவன் சிறந்தவரபலங்களை யுடையவன். திருமாலோடும் ஒருமுறை இவன் எதிர்நின்று பொருது அவர் ஏவியசக்கரத்தைக் கையில்பிடித்துத் தன் கழுத்தில் அணிந்துகொண்டான். இவன் நிருதியின் புதல்வியாகிய சவுரி என்பவளை மணந்து நெடும்போகங்களை நுகர்ந்து கிரவுஞ்சகிரியை அரணாகக் கொண்டுள்ள மாயமாபுரிஎன்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தான். இவனது கொடுங்கோ

ன்மையை யஞ்சி அமரார்முதலனைவரும் கடுந்துயரடைந்தனர். அறிவும் ஆற்றலும் அமைந்தவனாயிருந்தும் எவரும் வெருவுதற்குரிய செயல்களையே இவன் விரும்பிச்செய்துவந்தான். இவனும் இவன் முன்னோனும் செய்துவரும் கொடுமைகளை யாற்றாதயர்ந்த அமரர் இறுதியில் அறுமுகப்பரமனைத் தமக்குத் துணையாகக்கொண்டு அமர்செய்யத்துணிந்தார். அங்ஙனம் பகைவர் திரண்டுசூழ்ந்து அமர்செய்ய அமைந்திருப்பதை இவன் அறிந்திருந்தும், தன்னைவெல்ல வல்லார் யாண்டும் இல்லை யென்னும் புல்லிய செருக்கால் எவ்விதமான பாதுகாப்பையும் செய்துகொள்ளாமல் இறுமாந்திருந்தான். பரமனைமுன்னிட்டுப் படைகளோடு அமர்குறித்து மகேந்திரத்தை நோக்கிவந்த இந்திரன் இடைவழியில் இவனது நகரினை வளைத்துக்கொண்டான். அமரர்களும், பூதகணங்களும், வீரவாகுதேவர் முதலிய அரிய வீரர்களும் ஆர்த்துநிற்றலை அந்நகரிலிருந்தவர்கண்டு அஞ்சிநடுங்கினர். அதன்பின் இவன் அறிந்து கோரமோடுகொதித்து வந்தான். உடனே கொல்லப்பட்டான். போர்வருமென்று தெரிந்திருந்தும் ஒருவிதமான புகலிடமும்செய்யாது தொலைந்தானே! என்று உறவினர் சிலர் இவனை வைது தொலைந்தார். செருவந்தபோழ்தில் சிறைசெய்யா வேந்தன், வெருவந்து வெய்துகெடும் என்னும் உண்மைக்கு இவன் விளங்கியிருந்தான். விரிவைத் தாரக வதையில் காண்க.

சேர்ந்திடு மெல்லை பூதர் சேனைபோய் நகரம்புக்கு
நேர்ந்திடு மவுண ரோடு நின்றமர் விளைத்து நின்றார்
ஓர்ந்தன ரதனைத் தூத ரோடித்தங் கோயில் புக்குச்
சார்ந்திடு திருவில் வைகுந் தாரகற் றொழுது சொல்வார் (1)

எந்தைமற் றிதுகேள் நம்முன் இமையவர் தொகையை யிட்ட
வெந்துயர்ச் சிறையை நீக்க விரிசடைக் கடவுள் மைந்தன்
கந்தனென் றொருவன் வந்தான் அவுணரைக் கடக்கு மென்னா
அந்தர நெறிசெல் விண்ணோர் அறைந்திடக் கேட்டு மன்றே (2)

என்னிவர் மாற்றம் என்னா யார்தெரி குற்றே மாக
அன்னவர் இயம்பி யாங்கே யாயிரத் திரட்டி யென்னப்
பன்னுறு பூத வெள்ளம் படர்ந்திடக் குமரன் போந்தான்
முன்னுறு தூசி நந்தம் முதுநகர் அலைத்த தென்றார் (3)

என்றலும் வடவைத் தீயி விழுதெனும் அளக்கர் வீழத்
துன்றிய வெழுச்சி மானத் துண்ணெனச் செற்றந் தூண்ட
மின்றிக ழரிமா னேற்று வியன்றவி சிருக்கை நீங்கிக்
குன்றுறழ் மகுட மண்ட கோளகை தொட வெழுந்தான் (4)

இவை, பூதர்வந்து வளைந்தபொழுது தாரகனிடம் தூதர்சென்று உரைத்தன. செருவருமென்று தெரிந்திருந்தும் இவன் சிறைசெய்யாதிருந்ததும், பின் வெருவி நொந்ததும், இவற்றுள் விளங்குதல் காண்க.

செருவருமுன்னரே சிறைசெய்யாதவன் பின் வெருவாலுற்று விரைவிலழிவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

570 பாரம் பொறேனென்று பாரேனோ கஞ்சனுயர்
கோரம் புகன்றாள் குமரேசா—ஆரவே
கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை. (ய)

இ—ள்.

குமரேசா! கஞ்சனது கொடுங்கோன்மையைப் பொறுக்கமாட்டாமல் நிலமகள் ஏன் நெஞ்சு நொந்தாள் எனின், கடுங்கோல் கல்லார்ப் பிணிக்கும்; அது அல்லது நிலக்குப்பொறை இல்லை என்க.

கல்லார் என்றது அறிவிலிகளை. கடுங்கோல் என்றது கொடுங்கோல் மன்னனை. உடையான் வினை உடைமை மேல் நின்றது.

கடுங்கோல் கல்லார்ப்பிணிக்கும் = கொடுங்கோல் மன்னன் அறிவில்லாதாரைத் தனக்குத் துணையாகக் கூட்டிக் கொள்வன். அது அல்லது = அக்கோல் அல்லது. அது என்றார் பெயர்த்தும் பெயர் கூறக்கூசி.

இனி, அது என்றதற்குக் கல்லார் கூட்டம் என்று பரிமேலழகர் கொண்டபடியே கொண்டால் என்னையெனின், கூட்டம் என ஒன்று கூட்டவேண்டுதலானும், நிலக்குப்பொறை என்றதற்கு அஃது இலக்கன்மையானும், இலக்காயின் அது என்னாது அவரென்றே அடிகள் அருளியிருப்பாராதலானும், கொடுங்கோலே ஈண்டு

அதிகாரத்தின் குறிக்கோளாதலானும், அங்ஙனங் கோடல் கூடு மா? என்பதை நாடிக்கொள்க.

வெருவந்த செயல்களைச்செய்து தனக்கும் பிறர்க்கும் பெருங்கேட்டை விளைப்பவன் கொடுங்கோலனவன் என்று இதுவரை உரைத்தார்; இதில், அக்கொடியனைப் பொறுத்தற்குப் பூமிதேவியும் வருந்துவள் என்றார்.

கொடுங்கோல் மன்னன் அறிவில்லாதாரைத் தனக்குத்துணையாகச்சேர்த்து வைத்துக்கொள்வன்; அக்கோல் அல்லது இவ்வுலகத்துக்கு வேறு பாரம் இல்லை என்பதாம்.

பூமிக்குச் சுமைகளாக வேறுபலவும் உளவெனினும், பெருங்கேடுகளையெல்லாம் ஒருங்கே தருதற்கு உறையுளாயுள்ள கொடுங்கோல்போல் அவை பெரும் பாரங்களல்ல என்பார் அது வல்லதில்லை என்றார்.

கல்லார் தனித்தனியே பிரிந்துகிடப்பின் யாதும்செய்யலாற்றாது அடங்கியிருப்பர்; நஞ்சைத் தொகுத்தாற்போல் அவரை ஒன்றுசேர்த்துவைத்து அரசனும் ஆதாவாய் நின்றவிடின் தம் பொல்லாச் செயல்களெல்லாவற்றையும் அவர் பொருந்தப்புரிவாராதலால் இவ்வுலகம் பாம்பின் வாய்த்தேரைபோல் அவரால் தேம்பிநிற்கும்; இக்கடுந் துயர்க்கெல்லாம் கொடுங்கோல் மன்னனே காரணனவனாதலால் அவனைப் பொறுக்கலாற்றாது உலகம் வருந்தும் என்பது கருத்து.

அரசன் நிலமகளுக்குத் தலைமகனாதலால் அவன் செங்கோலனாயின் எல்லா நலங்களையுமுடையளாய் அவள் பொறையுயிர்த்திருப்பள்; அங்ஙனஞ் செய்தற்குரிய அவன் கொடுங்கோலனாயின் கடும்பொறையளாய் அவள் பெருந்துயரடைவளாதலால் அவன் ஒழிந்துபோதலையே உளங்கொண்டிருப்பள் என்பதாம்.

குலமலை முதலிய பெரிய பாரங்கள் பலவற்றையும் இயல்பாகவே பொறுத்திருக்கின்ற நிலமகளுக்குக் கொடுங்கோல் எவ்வாறு தாங்குதற்கரிய பாரமாம் எனின், அவள் தருமவுருவினளாதலால் பாவ வுருவமாய அதனைத் தாங்கலாற்றாது தயங்குவள் என்க.

கொடுங்கோல் மன்னனைப் பொறுக்கலாற்றாது பூமிதேவி யும் வருந்துவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கஞ்சன்பால் உணரப்படும்.

## கதை

கஞ்சன் என்பவன் வடமதுரை மன்னனாகிய உக்கிரசேன னுடைய புதல்வன். மிக்க கெடுமதியாளன். தந்தைக்குத் துய ரிழைத்துத் தானே அரசுக்குத் தலைவனாயினான். இவன் அர சனாய பொழுது உலகம் மிக அல்லலை யடைந்தது. கடுமொழி கொடுந்தண்டம் முதலிய கொடுமைகளையெல்லாம் இவன் உடை மைகளாகக் கொண்டிருந்தானாதலால் குடிகளெல்லாரும் கொடுந் துயருழந்தனர். சாணூரன், முட்டிகன், பிரலம்பன், மாகன், நாவர்த்தன், அரிட்டன், துவிதன், தேனுகன், பாணன், மூகன், முரன், பூதன், கேசி முதலிய தீயவர் பலரையும் தனக்குத் துணை வாராக இவன் அணைத்துக்கொண்டான். அப்பொல்லாதார் இவ னைப் பொருந்தி நின்று தம் பொல்லாச்செயலை எங்கும் பொருந்தப் புரிந்தார். கொடியரைச் சேர்த்துக்கொண்டு குடிகேடு செய்து வரும் இவன் கொடுங்கோன்மையைப் பொறுக்கலாற்றாது பூமி தேவியும் பூமகனிடம் சென்று புலம்பியழுதாள். கடுங்கோலுக் குக் கெடுங்காலம் விரைவிலுண்டாம் என்று அம் மலர்மகன்கூறிய சில நிலைமொழிகளால் இந்நிலமகள் தேறி அது போங்காலம் வரையும் புலம்பியிருந்தாள். கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது இல்லை நிலக்குப் பொறை என்னும் உண்மைக்கு இவன் இலக்காயிருந்தான்.

> அரசுருப்புணர் அவுணரால் ஆற்றல ளாகிப்
> பரவை மாநிலப் பசுங்கொடி மல்லலஞ் சேதா
> உருவெடுத்தன ளுற்றனள் உற்றது கிளந்தாள்
> மரைமலர்ப் பொகுட்டுறைதரு மறையவற் கன்றே.
> அலர் பசுந்துழாய் அணிமுதற் றேவுவந் தளிக்கும்
> மெலியல்நீயென வெண்டிரைக் கருங்கட லுடுத்த
> நிலமடந்தையை விடுத்தனன் நிரையிதழ்க் கமல
> மலரின் வந்தவன் மாண்டதன் பேருல கடைந்தான்.

பாகவதம்.

கொடுங்கோலரைப் பொறுக்கலாற்றாது நிலமகள் வருந்திய தும், மலரவனிடம் மொழிந்ததும், மால் வந்து அழித்து அளிப் பா் என அவர் வாய் மலர்ந்தருளியதும், பிறவும் இவற்றுள் பிறங் குதல் காண்க.

கொடுங்கோல் மன்னனே இவ்வுலகிற்கு நெடும்பாரமாவன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

உற்ற குற்றத்தை ஓராமல் மிக்க தண்டஞ்செய்தல் அரச னுக்கு மிக்கவுந் தீதாம். தண்டனை புரியுங்காலத்தும் அரசன் தண்ணளிபோடே செய்தல் வேண்டும். அரசன் வெருவந்த செய்யின் விரைந்து கெடுவான். கொடியனென்று சொல்லப்ப டும் அரசன் கடிதில் மடிவான். இன்முகத்தான் செல்வம் எவ ர்க்கும் பயன்படாது. கடுஞ் சொல்லனுடைய நெடுஞ் செல்வம் கடிதில் கெடும். அரசன் கடுந்தண்டம் புரியின் அவனது அடுந் திறல் அழியும். அறிவிழந்து கொடுமை செய்தவன் திருவிழந்து கெடுவான். வெருவந்தனசெய்திருந்தவன் செருவந்த காலத்தில் மிக நொந்துபடுவான். குடிகளஞ்சுமாறு செய்யுங் கொடுங்கோ லனே இவ்வுலகத்துக்குப் பெரும் பாரமாவன்.

நூஎ—வது வெருவந்த செய்யாமை முற்றிற்று.

---

# 58-ம் அதிகாரம் கண்ணோட்டம்.

அஃதாவது அரசன் அளியுடையனாதல்; என்றது குடிகள் மாட்டுப் பிழைகண்டாலும் ஏழை மாந்தர்க்கு அஃதியற்கைதானே யென்று இரக்கங்கொண்டு இயன்றவரை பொறுத்துதவுதலே. வெருவந்த செய்கையை விடுத்து அருளுடையனாய் அரசன் அமை ந்திருக்கவேண்டுமென்று இஃதுணர்த்துகின்றதாகலான் அதன் பின் வைக்கப்பட்டது.

571 திண்டோள் இரும்பொறையேன் சீருமல் கண்ணோட்டம்
கொண்டிருந்தான் பண்டு குமரேசா—கொண்டாடும்
கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையான் உண்டிவ் வுலகு. (க)

இ—ள்.

குமரேசா! தன் அரியாசனத்திலேறிய மோசிகீரனிடத்தும் கண்ணோட்டம் கொண்டு என் இரும்பொறை இனியதைச் செய்தானெனின், கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை உண்மையான் இவ்வுலகு உண்டு என்க.

இல்லையானல் இவ்வுலகம் இனிதாக இராது என்பதாம்.

கண்ணோட்டம் = இரக்கம். காரிகை = அழகு. கண்ணோட்டம் தன்னையுடையானுக்குப் பேரழகை விளைக்குமாதலால் அது காரிகை என நின்றது.

அழகு என்பது கண்டோரால் விரும்பப்படுவதோர் உருவப்பொலிவு. அது செயற்கை இயற்கை என இருவகைப்படும். செயற்கை அழகாவது அணி ஆடை முதலியவற்றால் திகழ்வது. இயற்கையழகு, கல்வி கொடை கண்ணோட்ட முதலியவற்றால் அமைவது. முன்னது உடலழகு எனவும், பின்னது உயிரழகு எனவும் உரைக்கப்பெறும்.

கண்ணோட்டமுடையவனை எல்லாரும் விரும்பிப் போற்றுவாரென்பது கருத்து. கழி, பெரு என்ற இரண்டும் மிகுதி என்னும் ஒரு பொருளையே உணர்த்திவரும். அவை பிரிவின்றி இணைந்து சிறப்பும் இன்பமும் தோன்ற அழகுக்கு அடையாய் நின்றன; உயர்ந்தோங்கு நெடுவரை, காகிளங்கமுகு என்பன போல; இங்ஙனம் வருவதை மீமிசைச் சொல் என்பர். ஒரு பொருள் இருசொற் பிரிவில வரையார் எனவும், ஒரு பொருட் பன்மொழி சிறப்பினின் வழா எனவும் வரும் இயல் விதிகளை ஈண்டு எண்ணிக்கொள்க.

கண்ணோட்டம் என்று சொல்லப்படுகின்ற பேரழகு அரசரிடம் உண்டாகலான் இவ்வுலகம் இனிதாக உளதாகா நின்றது என்பதாம்.

கண்ணோட்டமுண்மையே மக்கட்டன்மையாமாதலால் அஃது இல்லையாயின் இரக்கமற்ற கொடுவிலங்குகள் அடர்ந்த காடுபோல் இவ்வுலகம் பயனின்றிப் பாழ்படும் என்பார் காரிகை உண்மையான் உலகு உண்டு என்றார். தன் கண்ணோடிக் கண்ட பின்னரே துன்புறுகின்ற ஓர் உயிர்க்கு ஒருவன் அன்புசெய்ய இயலுமாதலால் அது கண்ணோட்டம் என நின்றது. தண்ணளியின் ஒரு பகுதியே கண்ணோட்டம் என்க. இதனைத் தயை எனவும், தாட்சணியம் எனவும் கூறுவர்.

அரசன் கண்ணோட்டமுடையனாயின் பெரும் புகழுடையனாய் எல்லாராலும் அவன் போற்றப் படுவானென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இரும்பொறைபால் உணரப் படும்.

## கதை

இரும்பொறை என்பவன் இற்றைக்கு ஆயிரத்துத் தொளாயிர ஆண்டுகட்கு முன்னர் வஞ்சி நகரிலிருந்து அரசுபுரிந்த சேர மன்னன். இவன் தந்தையைச் சேரன் செல்வக்கோன் என்பர். தாய் பெயர் பதுமை. உயிர்போற்றலையே செருவத்தானே—கோடைபோற்றலையே இரவலர் நடுவண் என இவன் இசைபெற்று நின்றவன். யாவர்க்கும் பேருபகாரி. திருவுடையாரினும் அறிவுடையாரையே இவன் மிக மதித்திருந்தான். கண்ணோட்டமுடைமையில் மன்னவரெவரினும் இவன் முன்னோடி நின்றான். உரவோர் எண்ணினும் மடவோர் எண்ணினும்—பிறர்க்கு நீ வாயினல்லது நினக்குப்—பிறருவம மாகா ஒருபெரு வேந்தே—கழைவிரிந்தெழுதரு மழைதவழ் நெடுங் கோட்டுக்—கொல்லிப் பெருந; கொடித் தேர்ப் பொறைய, நின்—வளனும் ஆண்மையும் கைவண்மையும்—மாந்தரளவிறந்தன என இவனது குண நலங்களை அரிசில்கிழார் உளமகிழ்ந்து உரைத்துள்ளார். தகடூரை இவன் வென்று கொண்டதால் சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறை என்று பின் இவன் பெயர்கொண்டு நின்றான். தன் குடிகளுக்கு இடர் விளைத்தால் பொறுக்கானேயன்றித் தனக்குப் பிறர் பெரும்பிழை செய்யினும் அவர்மேல் கண்ணோட்டங் கொண்டு அதனைப் பொ

றுத்துக் கொள்வான். இவன் எழுந்தருளியிருக்கும் அரசு கட்டிலில் மோசிகீரனர் என்னும் புலவரொருவர் ஒருநாள் அமர்ந்துறங்கினர். இவன் வந்து நோக்கினன். அவர்மேல் இரக்கங்கொண்டான். அவ் இனிய துயில் இடையே பழுதுபடாதபடி அருகிலிருந்து அவர் எழுகின்ற வரையும் இவன் கவரி கொண்டு வீசினன். புலவர் விழித்தார். உணர்ந்து நாணி விரைந்து இறங்கினர். என் இறங்கினீர் என்று அவரை அணைத்துக் கொண்டு அரசன் ஆதரவு செய்தான். உடனே அவர் இவனது கண்ணேட்டத்தை வியந்து கருத்தோடு ஒரு பாடல் பாடினர். அதனை இதனடியில் காட்டுதும்; அதன் பொருளை ஆய்ந்து காண்க.

மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்கில் பொலிய மஞ்ஞை
ஒலிநெடும் பீலி ஒண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை எண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய என்னைத் தெறுவர
இருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
அதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறிதல்
அதனொடும் அமையாது அணுகவந்து நின்
மதனுடை முழவுத்தோள் ஓச்சித் தண்ணென
வீசி யோயே; வியலிடங் கமழ
இவணிசை யுடையோர்க் கல்லது அவணது
உயர்நிலை யுலகத் துறையுளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குரிசில்நீ ஈங்கிது செயலே. (மோசிகீரனர்).

மேற்குறித்த உண்மையும், இவன் கண்ணேடிய தன்மையும், அதில் கருத்தோடிப் புலவர்பாடிய ஒண்மையும், பழையகால நிலைமையும், பழகினேர்தம் தலைமையும் இதில் நிலவுதல் காண்க. பிழை பொறுக்கும் பெற்றியனய் இம்மன்னன் தண்ணளியோடிருந்ததனல் உயிர்களெல்லாம் பெருமகிழ்வோடு உறைந்திருந்

தன. கண்ணோட்டமென்னும் கழிபெருங்காரிகை உண்மையான் உண்டு இவ்வுலகு; என்னும் உண்மைக்கு இவன் உரியவனாய் நின்றான். விரிவைச் சோர்குலமுறையில் காண்க.

மனமிக வுருகுகின்ற மாண்பினன் எவனோ அன்னோற்
குணவரும் முத்திகையி னுளதென்ப; காமம் லோபம்
நினைவருங் குரோதமின்ன நீத்துநல் லொழுக்கி னிற்கும்
வினையினர் சாதத்தன்றோ மேதினி நிலைபெற்றோங்கும்.
(விண்டுபுராணம்).

கண்ணோட்டமே ஒருவனுக்குப் பேரழகாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

572 வென்றி உதியனன்று மேவிநின்றான் கண்ணோட்டம்
குன்றாமல் என்னே குமரேசா—என்றுமே
கண்ணோட்டத் துள்ள துலகியல் அஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை. (உ)

இ—ள்

குமரேசா! உதியன் என்பவன் என்றும் கண்ணோட்டமுடையவனாய் ஏன் விளங்கி யிருந்தான் எனின், உலகியல் கண்ணோட்டத்து உள்ளது; அஃது இலார் உண்மை நிலக்குப் பொறை என்க.

அஃது என்றது கண்ணோட்டத்தை. உண்மை—உளராந் தன்மை. உலகியல் என்றது ஒப்புரவுசெய்தல் முதலிய உதவிகளை.

மனிதனென்று இவ்வுலகத்தில் ஒருவன் வந்தால் கண்ணோட்டமுடையனா யிருத்தல்வேண்டும்; இல்லையானால் உடனே அவன் செத்துப்போவதே நல்லது என்பார் 'அஃதிலார் உண்மை நிலக்குப் பொறை' என்றார். இங்ஙனம் மென்மையோடு கூறியது அவர்மேல் அடிகள் கண்ணோடி என்க.

மேல், உலகிற்கு உயிர்போல்வதாய கண்ணோட்டமே ஒருவனுக்குப் பேரழகு என்றார்; இதில், அவ் அழகு இல்லாதவன் இவ்வுலகத்திற்கே ஒரு பாரமாவன் என்றார்.

உலக இயக்கம் கண்ணோட்டத்தின்கண்ணே தங்கியுள்ளது; அக்கண்ணோட்டம் இல்லாதார் உளராதல் இந்நிலத்திற்கு ஒரு பாரமாம் என்பதாம்.

கண்ணோட்டம் இல்லாதவன் இறந்துபடின் தனக்கொரு பாரந் தொலைந்தது என்று நிலமகள் அன்று உளமகிழ்ந்திருப்பள் என்பது குறிப்பு.

மரங்கள் மலைகள் முதலிய பாரங்க ளெல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டிருக்கின்ற நிலத்திற்குக் கண்ணோட்டம் இல்லாதவன் எவ்வாறு பாரமாவன் எனின், அவை செருக்கொன்று மின்றி, நின்ற இடத்திலேயே நின்று, நிழல் முதலியவற்றை யுதவி நிலவும்; இவன் உயிர்க்குரிய தன்மையில்லாதிருந்தும் தன்னையும் ஒரு மனிதனுகக் கருதிக்கொண்டு காலோடித் திரிந்து தன் வன் கண்மையினால் தனக்கும் பிறர்க்கும் புன்கண்ணை விளைத்துப் புரையே புரிவனாதலால் இவன் இருப்புப் பூமிக்குப்பொறுத்தற்கு அரியதோர் பொறையேயாம் என்க.

உலகிற்கு உயிரெனச்சிறந்த அரசன் கண்ணோட்டமுடையனாயிருத்தல்வேண்டும்; அஃதில்லையானால் அவன் பிறப்பு இழிக்கப்படும் என்பதாம்.

கண்ணோட்டமுள்ள அரசனை உலகத்தாரெல்லாரும் தம் கண் என மதித்துப் போற்றுவர் என்பது கருத்து. இவ்வுண்மை உதியன்பால் உணரப்படும்.

## கதை

உதியன் என்பவன் சேரமன்னருள் ஒருவன். இவனது காலம் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னராம். இவன் பெரிய போர்வீரன்; ஆயினும் ஆருயிர்களிடத்துப் பேரிரக்கமுள்ளவன். பலகலைகளிலும் தலைமையான புலமையுடையவன். சூழ்ச்சித்திறத்தில் மிகத் தேர்ச்சிபெற்றவன். முறைவேண்டியும் குறைவேண்டியும் தன்னைக் காணவந்தவருடைய கருத்தை அவர் கூறுமுன்னரே குறிப்பாலுணர்ந்துகொள்ள வல்லவன். தன் குடைக் கீழ்வாழும் குடிகள் இறையளவேனும் துயருருவண்ணம் இவன் முறைபுரிந்துவந்தான். ஒருங்கால் பாண்டவர்கட்கும்

துரியோதனனாதியர்க்கும் போர் மூண்டது. அதனை யறிந்து இவன் மிக இரங்கினான். உயிர்கள் பல மாண்டுபோமே! என்று அளிமீக்கொண்டு விரைந்துசென்று துரியோதனனை யடைந்து அமர் வேண்டாம் என்று அமர் மொழிகள் பல அருளுடன் கூறினான். அவ் வணங்காமுடியோன் ஒன்றுக்கும் இணங்காமல் பிணங்கி நின்றான். இவன் வருந்தி மீண்டான். பின்னரும் போர் நிகழ்ந்தபோது அங்குப்புகுந்து அவ்விருதிறப் படைகட்கும் இயைந்துள்ள நிலைமைக்கு இரங்கி உணவும் நீரும் முடிவுவரை தகவோடு உதவினான். ஆதலால் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்று இவன் பின் பெயர்பெற்று நின்றான். இவனருளியல்பால் எல்லா வுயிர்களும் மகிழ்வுகொண்டிருந்தன. இவனது கண்ணோட்டத்தால் உலக ஒட்டம் இனிதாயதை நோக்கி அனைவரும் இவனை உவந்து புகழ்ந்தார். உலகியல் கண்ணோட்டத்து உள்ளது; ஆதலால் அதனை உடையவரே இவ்வுலகில் உயர்வுறுவர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. இவனது குணநலங்களை வியந்து புலவர் பலர் மகிழ்ந்து பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று இதனடியில் வருகின்றது.

மண்டிணிந்த நிலனும்
நில னேந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித் தலைஇய தீயும்
தீமுரணிய நீரும், என்றாங்கு
ஐம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சிய தகலமும்
வலியும் தெறலும் அளியு முடையோய்;
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்து நின்
வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந;
வான வரம்பனை நீயோ பெரும;
அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருது களத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்;

பாஅல் புளிப்பினும் பகல் இருளினும்
நாஅல் வேதம் நெறி திரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலியரோ வத்தை யடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி அந்தணர் அருங்கட னிறுக்கும்
முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே.
(புறநானூறு.)

இது, முரஞ்சியூர் முடிநாகராயர் என்னும் புலவர் தலைவர் நம் உதியனைக்குறித்துப் பாடியது. இதனால் இவன் பெருந் திருவும், அருந்திறலும், ஐம்பெரும் பூதங்களின் தன்மைமுழுதும் தாங்கியிருந்ததும், கண்ணோட்டமும், பாரதப்போரில் சோறு கொடுத்ததும் வேறுபலவும் விளங்குதல் காண்க.

முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்
பெருஞ் சோறுகொடுத்த ஞான்றை. என அகநானூற்றினும்,

ஓரைவர் ஈரைம்பதின்ம ருடன்றெழுந்த
போரில் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
சேரன் பொறையன் மலையன் திறம்பாடிக்
கார்செய் குழலாட ஆடாமோ வூசல்
கடம்பெறிந்த வாபாடி ஆடாமோ வூசல்.

எனச் சிலப்பதிகாரத்தினும், பாரதப்படைக்கு இவன் உணவளித்த உண்மை உணரப்படும்.

கண்ணோட்டமில்லாதவன் பூமிக்குச் சுமையே யாவன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

573 தண்டாமல் தந்தர் தருமரேன் கண்டவுடன்
கொண்டார்கண்ணோட்டம் குமரேசா—உண்டாகும்
பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்ணென்னும்
கண்ணோட்ட மில்லாத கண். (௩)

இ—ள்.

குமரேசா! புட்பதந்தரும், தருமரும் கண்டவுடனே என்கனிந்து கண்ணோட்டம் கொண்டார் எனின், பாடற்கு

இயைபு இன்றேல் பண்என்னும்; கண்ணோட்டம் இல்லாதகண் கண் என்னும் என்க.

கண் இரண்டனுள் ஒன்று கண்ணையும், மற்றொன்று இடத்தையும் குறிக்கும்.

பண் = இசையின் பகுதி; உரம் கண்டம் உச்சி மூக்கு அண்ணம் இதழ் பல் நா என்னும் எட்டையும் நிலைக்களனாக்கொண்டு எடுத்தல் படுத்தல் நலிதல் கம்பிதம் உருட்டு ஒலி தாக்கு குடிலம் என்னும் எண்வகை நுண்வினைகளால் பண்ணப்படுவதாதலான் அது பண் என நின்றது. மிடறும், யாழ் முதலிய கருவிகளும் இதற்கு இடமாம். பாவோடணைதல் இசையென்றார் பண் என்றார்—மேவார் பெருந்தானம் எட்டானும்—பாவாய்—எடுத்தல் முதலா இருநான்கும் பண்ணிப், படுத்தமையாற் பண் என்று பார். என்றது இசைநூல். இது பாடலோடு இயைந்த வழியே இன்னோசை யுடையதாய்ப் பண்எனப் பெற்றுப் பயன்படும்; இன்றேல் இன்னாதாய் இழிக்கப்படும் என்க. பண் அமையா யாழின் கீழ்ப் பாடல் பெரிதின்னா என்றார் கபிலரும்.

இல்லாதகண் = இல்லாத இடத்து; கண் இதில் இடத்தை யுணர்த்தி நின்றது.

கண்ணோட்டம் இல்லையாயின் கண்ணாற் பயனில்லை என்பதற்குப் பண்ணை எடுத்துக் காட்டியது என்னை எனின், அது செவியுணர்வால் நிகழ்வதாதலால் கண் உணர்வால் நிகழ்வதாய இதனோடு கருதநின்றது என்க.

பாடலுக்காகவே பண் பண்ணப்பட்டுள்ளதுபோல் கண்ணோட்டத்துக்காகவே கண் படைக்கப்பட்டுள்ளதென்பதாம்.

கண்வனப்புக் கண்ணோட்டம் கால்வனப்புச் செல்லாமை
எண்வனப்பு இத்துணையா மென்றுரைத்தல்—பண்வனப்புக்
கேட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் தன்னாடு
வாட்டானன் றென்றல் வனப்பு. என்ற சிறுபஞ்சமூலமும் ஈண்டுத் தெரியத்தக்கது.

மேல், கண்ணோட்டமில்லாதவர் பூமிக்கே ஒரு பாரமாவர் என்றார்; இதில், அவர் கண்களைக் கண்கள் என்று கொள்ளலாகாது என்றார்.

பாடலுக்குப் பொருத்தமில்லையாயின் பண் என்னபயத்ததாம்? அதுபோல் கண்ணோட்டம் இல்லாத இடத்துக் கண் என்ன பயனுடையதாம் என்பதாம்.

கண்ணுடையரென்றால் அவர் கண்ணோட்டமுடையராயிருத்தல்வேண்டும்; இலரேல் அவர் குருடரேயாவர் என்பது குறிப்பு.

கண்ணோட்டமே கண் பெற்றதற்குப் பயனும் என்பதும், அதனையுடையவரே பிறப்பின் பயனைப் பெற்றவராவர் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை புட்பதந்தர்கண்ணும் தருமர்பாலும் உணரப்படும்.

## கதை

புட்பதந்தர் என்பவர் ஓர் அருந்தவர். எய்தியிருந்த உடம்போடு செய்தவத்தின் பயனாக இந்திரவுலகத்தில் தங்கி விநோதமாக ஒருநாள் இவர் யமபுரம் சென்றார்.

வம்புலாங் கூந்தல் மனைவியைத்துறந்து பிறர்பொருள்தாரமென்றிவற்றை
நம்பினார் இறந்தால் நமன்றமர் பற்றி எற்றிவைத்தெரியெழுகின்ற
செம்பினால் இயன்ற பாவையைப் பாவீ! தழுவென மொழிவதற்கஞ்சி
நம்பனே! வந்துன் திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்.

என்று திருமங்கையாழ்வார் அருளியபடி இங்கு நெறியில் நீங்கிய ஒருவனை அங்கு எரியில் இடுவதைக் கண்டார். இரக்கங்கொண்டு உடனே இயமனிடம் சென்று அவனை வருத்தாமல் விடும்படி வேண்டினார். அவன் தீவினை தீரவேண்டும் ஆதலால் அவனுக்குப் பதிலாக அத்தீயில் புகுவார் யார்! என்று அத் தென்திசை மன்னன் இசைத்தான். நானே புகுகின்றேன் என்று உடனே அதில் புகுந்து இங்குத் தோன்றிநின்று அவன் மாபினுள்ளவரும் துயருறுவாறு கண்ணோடி இவர் உயர்தவம் செய்தார். கண்ணோட்டமே கண்ணின் பயனும் என்பதை இவர் அன்று காட்டி நின்றதை அனைவரும் கண்டு தெளிந்தார். விரிவைச் சிவபுராணத்தில் காண்க.

## கதை 2.

தருமர் தம் வாழ்நாள் முடிவில் இவ்வுலகத்தைத் துறந்து அங்குச்செல்ல நேர்ந்தபொழுது, தெய்வவூர்தியுடன் தேவர்கள் வந்து அவரை அதில் மேவச்செய்து மேலெழச்செய்தார். அவ் வமையத்தில் இவரது அருளின் இயல்பை அறிய விரும்பிக் கூற்று வன் ஓர் நாய்போல் வந்து இவர்முன் தோற்றி நின்றான். உணங்கி ஒரு கால் முடமாகி ஓர் கண்ணிழந்து செவியின்றி—வணங்கு நெடுவால் அறுப்புண்டு வயிறும் முதுகும் வளைந்தோடி—அணங்கு நலிய மூப்பெய்தி அகல்வாய் அழிபுண்ணுற இழிந்த—சுணங்கன் என இணங்கிநிற்கும் அதனை இவர் கண்டார். அதன் நிலைமைக்கு இரங்கி உடனே இவர் தம் உள்ளம் உருகினார். அதனையும் இவ் விமானத்தில் உடன் ஏற்றல்வேண்டும்; இன்றேல், இதில் யான் இரேன் என்று இறங்கத் துணிந்தார். இவரது புண்ணியப் பொலிவையும் தண்ணளியையும் எமன் எண்ணி வியந்து தன் உருவெய்தி இவருடன் நண்ணியிருந்தான். அனைவரும புகழ்ந்து பெருமகிழ்வுகொண்டு அவ்வுலகடைந்தார். கண்ணோட்டம் இல் லாதது கண் ஆகாது என்பதும, அதனையுடைய கண்ணே இன் பயனுடையதாய்ப் புண்ணியவுலகத்தைப் பொருந்தும் என்பதும, இவர் அன்று பொருந்தக் காட்டினார். விரிவை வியாசபாரதத்தில் காண்க.

கண்ணோட்டமே கண்ணுக்குப் பயனும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

574 நன்றான கண்ணிருந்தும் நாடாமல் சூர்மதனன்
கொன்றார் முன் என்னே குமரேசா—என்றும்
உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண். (௪)

இ—ள்.

குமரேசா! தம் கண்முன்னே கொன்று சிதைப்பதைக் கண்டிருந்தும் சூரபன்மனும், மதனனும், ஏன் சிறிதும் கண்ணோ டாமல் களித்திருந்தார் எனின், அளவினால் கண்ணோட்டமில்லாத கண் உளபோல் முகத்து எவன் செய்யும் என்க.

எவன்செய்யும் என்ற வினாவுருவம் யாதொரு பயனையும் செய்யாதென்பது தோன்ற நின்றது.

அளவிறந்த கண்ணோட்டம் அரசமுறைக்குத் தீதாகுமாத லால் அளவினல் என்றார்.

மேல், கண்பெற்றதற்குப் பயன் கண்ணோட்டமேயாம் என் றார்; இதில், அஃது இல்லையாயின் அக்கண்ணால் யாதும் பயனில்லை என்றார்.

ஒன்று நாம்பென்கோ ஒன்றாத என்பென்கோ
இன்றசைதான் என்கோ யாதென்கோ—மென்றொடையாழ்ப்
பண்ணோட்டும் இன்சொற் பணைத்தோளாய் சேர்ந்தவர்பால்
கண்ணோட்டம் இல்லாத கண். என்ற பெருந்தேவனார்

வாக்கும் ஈண்டு எண்ணத்தக்கது.

அளவோடு கண்ணோடுதல் இல்லாத கண்கள் உள்ளன போல முகத்திலிருந்து என்ன பயனைச் செய்யும் என்பதாம்.

உயிர்கள் வருந்துவதைக் கண்டிருந்தாலும் வன்கண்ணர் அவற்றின்மேல் கண்ணோடி இதஞ்செய்யார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சூரபன்மன், மதனன் என்னும் இவ் இருவர்பாலும் உணரப்படும்.

## கதை

சூரபன்மன் தங்கையாகிய அசமுகி யென்பவள் தனது புன் செயலால் கையிழந்து வந்து தன் முன் கதறி நின்றதைக் கண்டவுடன் தன் அருகிலிருந்த தேவர்களையும் ஏவலர்களையும் நோக்கி அக்கையைக் கொய்தவனை என் கொய்யாமலிருந்தீர் என்று கருத்தின்றிக் கொதித்தான். சிறிதும் இரங்காமல் அவ ரை வருத்திவதைக்குமாறு பணித்தான்.

சிற்சிலர் தமதுநாவைச் செங்கையைச் சேதித்திட்டான்
சிற்சிலர் துண்டந்தன்னைச் செவிகளைக் களைதல்செய்தான்
சிற்சிலர் மருமந்தன்னை சிறுபுறத்தொடுகொய் வித்தான்
சிற்சிலர் தாளைத்தோளைச் சென்னியைச் சேதிப்பித்தான்

இங்ஙனம் நினைப்பினும் நடுங்குதற்குரிய இக்கொடுஞ் செயல் களைக் கண்டிருந்தும் சூரபன்மன் அவர்மேல் இரக்கங்கொள்ளா மல், யாதும் விள்ளாமல், இனிதுறக் களித்தேயிருந்தான்.

கண்ணோட்டமில்லாத கண் உளபோல் முகத்தில் இலைத்திருந்தாலும் அதனால் ஒருபயனும் உண்டாகாது என்பதை உலகம் இவன்பால் அன்று உணர்ந்து நின்றது.

## கதை 2.

மதனன் என்பவன் ஏமாங்கத நாட்டை வஞ்சித்துக்கொண்ட வன்கண்ணனாகிய கட்டியங்காரனுடைய மைத்துனன். இவன் மிகத்தீயவன். ஈரமென்பது சிறிதுமில்லாத ஈனநெஞ்சினன். திண்மையிலனாயினும் உண்டியை நன்கு உவந்துகொண்டு உடல் வளர்த்து நின்றான். சீவகனைக் காவாகப்பற்றிக் கொன்றுவிடுமாறு ஒருநாள் இவன் கொண்டு சென்றான். தெய்வ அருளால் இவன் கையினின்றும் நீங்கி அவன் கரந்து சென்றான். தீயனை மாமன் காய்வன் என்று கவன்று அருகில் நின்ற ஒருவனை வலிந்துபற்றி வாளாலரிந்துவிட்டுச் சீவகனைக் கொன்றுதீர்த்தேன் என்று இவன் போய் அவன்முன் நின்று கூறினான். மூடனை மூடர் கொண்டாடிய முறைபோல் அப்பேதை மகனும் இப்பேடி மகனைப்பேணி நின்று பெருஞ்சிறப்புச் செய்தான். பழகினவன் என்றும் பாராமல் இப்பாவிமகன் அன்று படுகொலைபுரிந்ததைப் பார்த்தவரனைவரும் பதைத்து நொந்தார். இவன் கண்டும் கண்ணோடாமல் களித்துப் போனான். உளபோல் முகத்து எவன் செய்யும் அளவினால் கண்ணோட்டம் இல்லாத கண் என்னும் உண்மைக்கு இவனும் உரியவனானான். விரிவைச் சிந்தாமணியில் காண்க.

அருள்வலி யாண்மை கல்வி யழகறி விளமை யூக்கம்
திருமலி யீகை போகம் திண்புகழ் நண்பு சுற்றம்
ஒருவரிவ் வுலகில் யாரே சீவக னொக்கு நீரார்
பெரிதரிதிவனைக் கொன்றாய் பெறுகெனச் சிறப்புச்செய்தான்.

இது, சீவகனைக் கொன்றுவிட்டேன் என்று மதனன் வந்து நின்றபோது நன்றெனவியந்து கட்டியங்காரன் நயந்துசொன்னது. இவரது கண்ணோட்டமின்மையை இதில் கருதிக் காண்க.

கண்ணோட்டமில்லையாயின் அக் கண்ணால் யாதும் பயனில்லையென்பது இதனால் கூறப்பட்டது.

575 கண்டவுடன் பாரியேன் கண்ணோடி முல்லைக்குக்
கொண்டதேர் விட்டான் குமரேசா—உண்டான
கண்ணிற் கணிகலங் கண்ணோட்டம் அஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும். (ரு)

இ—ள்

குமரேசா! அதரிடைநின்ற முல்லைக்கொடி அசைந்து துவண்டதைக் கண்டவுடன் பாரி ஏன் கண்ணோட்டம் கொண்டு தன் தேரை அதற்குத் தந்துவந்தான் எனின், கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்; அஃது இன்றேல் அது புண் என்று அறிவோரால் உணரப்படும் என்க.

அது என்பதும், அறிவோர் என்பதும் இதில் வருவிக்கப்பட்டன. அஃது என்றது கண்ணோட்டமாகிய அவ்வணிகலத்தை என்றவாறு.

அணிகலம் = அணியும் கலம்; என்றது ஆபரணத்தை. கலம் என்னும் சொல் படை முதலிய அடைகளைப் பெற்றுப் படைக்கலம், மரக்கலம், பரிகலம், எனப் பலபொருள்களிலும் பரவிவரும்.

காது முதலிய பிறவுறுப்புக்கட்கு மணி பொன்களாற் செய்யப்பட்டவற்றை அணிகலங்களாகக் கொண்டு மகிழ்கின்ற மாந்தர், கண்ணிற்கு அணிகலமாக அடிகள் ஈங்குக் காட்டியருளியதைக் கருதிக்கொள்ளவேண்டும்.

மேல், கண்ணோட்டமில்லாத கண் பயனற்றது என்றார்; இதில், அதனைப் புண் என்றே எண்ணவேண்டும் என்றார்.

ஒருவன் கண்ணிற்கு அணிகலமாவது கண்ணோட்டமேயாம்; அஃது இல்லையாயின் அக்கண் புண் என்றே அறிவுடையாரால் உணரப்படும் என்பதாம்.

தனக்குரிய பயனாய கண்ணோட்டத்தைக் கண் கொள்ளவில்லையானால் அதனைப் புண் என்றே கொள்ளவேண்டும் என்றது என்னை எனின், உயிர்க்குறுதியின்றி உருக்கொண்டு உடம்பில் நின்று ஊனமுற்றொழியும் அதன் ஈனம் நோக்கி என்க.

எல்லா நலங்களுமுடையனாயினும் கண்ணோட்டமில்லையாயின் அவன் மிக இழிக்கப்படுவான் என்பது குறிப்பு.

கண்ணோட்டமே கண்ணுக்கு அழகாகும் என்பதும், அதனை யுடையவனைத் தம் கண் என வைத்து உலகத்தார் போற்றுவர் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை பாரிபால் உணரப்படும்.

## கதை

மாரியோடு நேர்வைத்துப் போற்றப்பெற்ற பாரி மன்னன் ஒருநாள் தேரிலேறி உபவனஞ் சென்று அங்கு நிகழ்ந்த காட்சிகளைக்கண்டு களித்துத் தன் அணிநகர் மீண்டான். மீளுங்கால் இடைவழியில் படர்ந்து நின்ற ஒரு முல்லைக்கொடியைக்கண்டான். கொளுகொம்பில்லாமல் அஃது அலமந்து துவள்வதை நோக்கி இவன் அகம் குழைந்தான். தான் ஊர்ந்து சென்ற தேரின்மேல் அது இனிதாக ஊர்ந்து செல்லுமாறு அதனருகே கொண்டுபோய் இதமாக நிறுத்திவிட்டுத் தன் ஊரை நோக்கி இவன் உவந்து போனான். ஓரறிவுடைய ஒரு கொடியினிடத்தும் கண்ணோட்டங் கொண்டு இவன் அன்று செய்ததை அனைவரும் எண்ணி வியந்தார். பூத்தலை அறாஅப் புனைகொடிமுல்லை, நாத்தழும் பிருப்பப் பாடாதாயினும், கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த, பரந்தோங்கு சிறப்பிற் பாரி; எனப் புறநானூற்றினும், சுரும்புண, நறவுவா யுறைக்கு நாகநெடுவழிச், சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய, பிறங்குவெள்ளருவி வீழுஞ்சாரற், பறம்பிற் கோமான் பாரி; எனச் சிறுபாணாற்றுப் படையினும், மேற்குறித்த உண்மை போற்றப்பட்டுள்ளது. இவனது வள்ளற்குணமும் உள்ளப் பெருமையும் உள்ளுந்தோறும் உணர்வோரை உள்ளமுருக்கும். இவன் காலத்திருந்த கொண்கன், மாகன் என்னும் குறுநிலக்கிழவர் கண்ணோட்டமில்லாதவராதலால் ஒருவராலும் கருதப்படாமல் இழிந்தார். கண்ணோட்டமுண்மையால் எல்லாருடைய கருத்திலும் இவன் கலந்தோடி நின்றான். கண்ணோட்டமே ஒருவன் கண்ணுக்கு அணிகலமாம் என்பதும், அதனை யுடையவன் இவ்வுலகுக்கெல்லாம் ஓர் அணிகலனாய் விளங்குவன் என்பதும், இவன்பால் விளங்கி நின்றன.

புலர்ந்த சாந்திற் புலரா வீகை, மலர்ந்த மார்பின் மாவண்பாரி ஈத்த திரங்கான் ஈத்தொறும் மகிழான், ஈத்தொறு மாவள் ளிய

னென நுவலும் எனப்பதிற்றுப்பத்தில் கபிலரும்; கொடுக்கிலா தானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை எனப் புகலூர்த் தேவாரத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகளும்; பாரியான கோடைக் கோண்டலே எனத்திருப்புகழில் அருணகிரியாரும்; இவனது குண நலங்களை நினைந்து கூறியுள்ளமை காண்க.

கண்ணுக் கருளணியாம் கைக்கீத லேயணியாம்
பெண்ணுக்குக் கற்பொன்றே போணியாம்—மண்ணுக்கு
நீதி யொழுக்கம் நிறையறிவோ டஞ்சாமை
யாதியுடை வேந்தே யணி. (அணியறுபது).

கண்ணிற் கணிகலங் கண்ணோட்டம் காமுற்ற
பெண்ணிற் கணிகலம் நாணுடைமை—நண்ணும்
மறுமைக் கணிகலங் கல்வி இம்மூன்றும்
குறியுடையார் கண்ணே யுள. (திரிகடுகம்).

இதிலுள்ள முதலடி அடிகள் அடியை அடியொற்றி நிற்றல் காண்க.

கண்ணோட்டமில்லாத கண்ணைப் புண்ணென்றே கருதவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

576 அன்றறைந்தார் மற்றோர் அரதத்தர் கண்ணோடிக்
குன்றாதேன் நின்றார் குமரேசா—என்றுமே
மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர். (௬)

இ—ள்

குமரேசா! உடனிருந்தவர் கண்ணோடாது கடிந்தனர்; அரதத்தர் ஏன் மிக இரங்கி அருள்செய்தார் எனின், கண்ணோடு இயைந்து கண் ஓடாதவர், மண்ணோடு இயைந்த மரத்து அனையர் என்க.

கண்ணோடாதவர் என்றது இரக்கமில்லாதவரை; ஒருயிர் துயருறுவதைத் தம்கண் சென்று கண்டுவைத்தும், அதற்கு உள்ளிரங்கி உதவாமல் ஒழிந்துபோவார் என்றபடி. ஓடாமை என்னும்

கண்ணின்செயல் அதனையுடையவர் மேல் நின்றது. ஓர் உறுப்பின் தொழில் உறுப்பியோடும் உற்று முடியும் என்க.

சினைவினை சினையோடும் முதலோடும் செறியும். என்றது இயல். சினை = உறுப்பு; முதல் = உறுப்பி.

மண்ணோடு இயையாவழிக் குற்றியெனவும், கட்டையெனவும், கூறப்படுமேயன்றி மரம் எனப்படாது; மரம் எனத் தனியேகூறினும் மண்ணோடு இயைந்திதென்றே அது தெளியப்படும்; ஆயினும் அலைகடல், நிலைமலை என்பனபோல் அடைமொழி அதன் இயற்கையான இயல்பினை விளக்கி நின்றது. மரத்தின் கணு அதற்குக் கண் எனப்பெறும்; பெற்றும் கண்ணிரக்கம் அதன்பால் இல்லாமையால் கண்ணோடியைந்து கண்ணோடாதவரைத் தன்னோடுவைத்து அது முன்னுடை நின்றது. வரக்கண்டும் நாணாதே வல்லையால் நெஞ்சே, மரக்கண்ணோ மண்ணுள்வார் கண். என்ற முத்தொள்ளாயிரமும் ஈண்டு உய்த்துணரத்தக்கது. இரக்கமின்மையால் தலைவனது கண்ணை இதில் மரக்கண் என்றது காண்க.

மேல், கண்ணோட்டம் இல்லாத கண் புண்ணே என்றார்; இதில், அதனை இல்லாதவன் மரப்பிறப்பே என்றார்.

கண்ணோடு பொருந்தியிருந்தும் கண்ணோட்டம் இல்லாதவர் மண்ணோடு பொருந்திநிற்கின்ற மரத்தினை யொப்பர் என்பதாம்.

குருடராயுள்ளவர், கண்ணோட்டம் இலராயின் அவர் குருட்டுத்தன்மையால் அதுகூடவில்லையென்று பொறுத்துக்கொள்ளலாம்; கண்ணிருந்தும் அதனைக் கொள்ளாதிருப்பவர் எண்ணவுங் கூடாத ஓரிழிவினரேயாவர்; ஆயினும், அவரை மரத்தோடு ஒப்ப வைத்தது அடிகளது கண்ணோட்டத்தால் என்க.

ஆறறிவுடைய மகனேயாயினும் கண்ணோட்டம் இல்லாதவன் ஓரறிவுடைய மரமே யாவன் என்பது கருத்து.

கண்ணோட்ட முடையாராய்த் தண்ணளி புரிவோரே புண்ணியவுருவினராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அரதத்தர்பால் அறியப்படும்.

## கதை

அரதத்தர் என்பவர் சோழநாட்டிலே கஞ்சனூரிலே வாசுதேவாசாரியர் என்னும் ஓர் வைணவவேதியருடைய புதல்வர். வடமொழியில் இவர் மிகச்சிறந்த புலமையுடையவர். எல்லாவுயிர்களிடத்தும் இரக்கமுள்ளவர். ஒருயிர் வருந்துவதைக்கண்டால் எரியுற்ற மெழுகுபோல் இவருள்ளம் இளகிவிடுவார். அளிக்கொருநிலையன்னான் என்னும் புகழ்க்கு உரியராய் இவர் பொருந்தியிருந்தார். ஒருநாள் தம் தாயார் அயலகத்தில் பதக்கு நெல்லைவாங்கி வெயிலில் உலர்த்திவைத்து இளமைப்பருவத்தினராய இவரை அதற்குக்காவலாக அமைத்துவைத்தார். இவர் அமர்ந்திருந்தபொழுது அங்குவந்த ஒரு காளைஎருது அதனைக் கவர்ந்து தின்றது. இவர் அதனை ஓட்டாமல் தின்னு தின்னு என்று அதற்கு இசைவாக அந்நெல்லை ஒதுக்கிக்கொடுத்தார். அது உண்டு மகிழ்வதை இவர் கண்டு மகிழ்ந்தார். தம் தந்தையார் வைணவராயிருந்தும் இவர் அவ்வழியில் ஒழுகாமல் திருநீறு உருத்திராக்கமுதலிய சிவசின்னங்களைத் தரித்துக்கொண்டு சிவவழிபாடு செய்து வந்தார். பருவமெய்தி நெறிதிறம்பாமல் இவர் ஒழுகி வருங்கால் ஒருநாள் ஒரு மரத்தினடியிலிருந்து சிவபூசை செய்துகொண்டிருந்தார். இருக்குங்கால் அவ்வழியே களைத்துவந்த ஓர் நாய் இவர் அருகணைந்து தன் நாவை நீட்டிக்கொண்டு நின்றது. அது நீர் வேட்கையோடு நிற்கின்றதென்று இரங்கி பூசைக்குவைத்திருந்த நீரையே அது குடிக்கும்படி பொருந்தவைத்தார். அந்தணரோடு வரிசையாகஇருந்து ஒருநாள் இவர் உண்ணப்புகுமுன் தொழுநோய்மலிந்த புலையனொருவன் பசியென்று வந்தான். தனக்கு உண்ணவைத்திருந்ததை உடனே அவனுக்கு இவர் உதவிவிடுத்தார். அந்தணர் சிலர் இவரை இகழ்ந்ததோடு அமையாமல் நிந்தைபலகூறி அவ்வுணவை உண்ணுவாறு அவனைக் கடிந்து விலக்கினர். அவரை இவர் நோக்கினர்.

மண்டி மேல்வந்த நஞ்சினையஞ்சியே மயங்கிப்
பண்டு நொந்துவந் தடைந்தயர் பண்ணவர்க்கிரங்கி
உண்டு கொண்டதை அமிழ்தவர்க் கருளிய நீல
கண்டனார் அளி கண்டுமேன் கண்ணளி யிழந்தீர். என்று

அவர்மேல் கண்ணோடி மொழிந்தார். மொழிந்தும் பசித்துயரோடுவந்த அவனுக்கு அவர் பலதுயரும் செய்தார். அவர் தருக்கையும் வன்கண்மையையும் அனைவரும் வெறுத்து இகழ்ந்தார்; இவரது தகவையும் தண்ணளியையும் வியந்து புகழ்ந்தார். கண்ணோடாதவர் மண்ணோடியைந்த மரத்தனையராகவே இழிக்கப்படுவர் என்பதும், கண்ணோட்டமுடையவர் புண்ணியவுருவினரென்றே போற்றப்படுவரென்பதும், உலகம் இவர்பால் அன்று பொருந்தக்கண்டது. விரிவைச் சதுர்வேதசாரத்தில் காண்க.

கண்ணோடாதவர் மண்ணோடியைந்த மரமேயாவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

577 கண்டான் அமர்முகத்தை கண்ணோட்டம் ஏன் மிகவும்
கொண்டான் அசோகன் குமரேசா—உண்டாகும்
கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையும் இல். (எ)

இ—ள்.

குமரேசா! போர்முகத்தைக் கண்டவுடன் அசோகன் ஏன் கண்ணோட்டம் கொண்டு தண்ணளி செய்தான் எனின், கண்ணோட்டம் இல்லவர் கண் இலர்; கண்ணுடையார் கண்ணோட்டம் இன்மையும் இல் என்க.

கண்ணோட்டமுடையவரே கண்ணுடையாராவர்; அஃதில்லாதவர் குருடரேயாவர் என்பார் இல்லவர் கண் இலர்; உடையார் இன்மையும் இல் என்றார்.

மேல், கண்ணோட்டமில்லாதவர் மரத்தினையொப்பர் என்றார்; இதில், அவர் குருடரேயாவர் என்றார்.

கண்ணோட்டம் இல்லாதவர் கண் இல்லாதவரே; கண்ணுடையவர் கண்ணோட்டம் இலாதலும் இல்லை என்பதாம்.

கண்ணுடையாராயினும் கண்ணோட்டம் இல்லாதவரைக் குருடரென்றே கருதவேண்டும் என்பது கருத்து.

தம் பகைவராயினும் அவர் துன்புறக் கண்டால் அறிவுடையார் இரக்கங்கொண்டு அவர்பால் இதம் புரிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அசோகன்பால் உணரப்படும்.

## கதை

அசோகன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்து நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் மகத நாட்டிலே கபிலம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்தவன். இவனுடைய தந்தை பெயர் பிந்துசாரன் என்பர். இவன் இயல்பாகவே எல்லா வுயிர்களிடத்தும் இரக்கமுள்ளவன். புத்தரது குணநலங்களையும் அவரொழுக்கங்களையும் பெரிதும் பேணி அவர்பால் இவன் பேரன்பு கொண்டவன். தன் செங்கோல் மாண்பால் பல நாடுகளையும் உரிமையாகப்பெற்று எங்கும் இவன் புகழ்பெற்று நின்றான். இங்ஙனம் நின்றுவருங்கால் கலிங்கதேசத்து மன்னனாகிய அமரகன் என்பவன் இவன் மேல் பொறாமைகொண்டு அமர் செய்ய வந்தான். இவனும் படையோடெழுந்து அவனோடு அமராடினன். அதில் அவன் படைமுழுதும் இழந்து துயர்மிக அடைந்தான். அதனை இவன் கண்டான். பகைவனாயிருந்தும் அவன்மேல் அருள் மீக்கொண்டு, அறவுரைகள் பலகூறி அவனை ஆதரித்து விடுத்து, இனி எவ்வகையானும் எவரோடும் அமர் புரிவதில்லையென்று தமரும் அறியாமல் தனக்குள்ளேயே இவன் உறுதி செய்துகொண்டான்.

அல்லித்தாள் அற்றபோதும் அறாதநூ லதனைப் போலத்
தொல்லைத்தம் உடம்பு நீங்கத் தீவினை தொடர்ந்து நீங்காப்
புல்லிக்கொண் டுயிரைச்சூழ்ந்து புக்குழிப் புக்குப் பின்னின்
றெல்லையில் துன்பவெந்தீச் சுட்டெரித் திடுங்க ளன்றே. (1)

அறவிய மனத்த ராகி யாருயிர்க் கருளைச் செய்யிற்
பறவையும் நிழலும் போலப் பழவினை யுயிரோ டாடி
மறவியொன் றானுமின்றி மனத்ததே சுரக்கும்பால
கறவையிற் கறக்குந் தம்பாற் காமுறப் பட்டவெல்லாம். (2)

என்னும் உண்மைகளை இவன் உள்ளத்திற்கொண்டு எல்லாவுயிர்களுக்கும் இவன் இதமே செய்து வந்தான். ஆடு மாடு முதலிய விலங்கினங்களும் வருந்தாது வாழுமாறு நலம் பல புரிந்து, இருபுறங்களினும் நிழல்தரு மரங்களை வழிகள்தோறும் வைத்து வளர்த்துப் புத்தமதக் கொள்கைகளை இந்நாடெங்கும் பரப்பி இலங்கையிலும் பரப்புமாறு சில போதகர்களையுய்த்துத் தானும் பலஇடங்களுக்குச் சென்று தண்ணளியொன்றே புண்ணியவுருவம் என்று

இவன் போதித்து வந்தான். இருவர் ஏறியதால் தளர்ந்து வந்த மெலிந்த குதிரையொன்றை ஒருநாள் இவன் கண்டான். அதன் மேல் இரக்கங்கொண்டு அவரை இறங்குமாறு செய்து வேண்டிய பொருளை அவர்க்கு விரும்பிக்கொடுத்து இதஞ்சொல்லி அவரை அனுப்பிவிட்டு அதனைக் கொண்டுபோய் இதமுற வளர்த்துப் பின் இன்புற விடுத்தான். வேறொன்றை ஒருவர் கொல்லின் அந்நேரம் ஐயோ என் முகம் வாடி நிற்பதுவும் ஐயநின் அருள் அறியுமே; என்ற தாயுமானவர் வாக்கை இவன் தன்னதாக்கி நின்றான். கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர்; கண்ணுடையார் கண்ணோட்டம் இன்மையும் இல்; என்னும் உண்மைக்கு இவன் உரியவனானான். விரிவைச் சந்திரகுப்தத்தில் காண்க.

கண்ணோட்டமுடையவரே கண்ணுடையாராகக் கருதப்படுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

578 சென்று சிதையாமல் சீவகனேன் கண்ணோட்டம்
குன்றாமல் செய்தான் குமரேசா—நின்ற
கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு. (அ)

இ—ள்.

குமரேசா! தன் இயல்வினை சிதையாமல் கண்ணோடி நின்ற சீவகனை உலகமுழுவதும் ஏன் உவந்துகொண்டது எனின், கருமம், சிதையாமல் கண்ணோடவல்லார்க்கு இவ்வுலகு உரிமை யுடைத்து என்க.

அங்ஙனம் ஓடுதலின் அருமைகருதி வல்லார் என்றார்.

கருமம் சிதையாமல் = தன் காரியம் சிதறாமல்; அதாவது அரசநீதி குன்றாதவாறு என்றபடி.

குற்றம் செய்தாரை ஒறுக்காமல் விடுதலும், நண்பினராய் நின்று தன் குடிகளை நலிவாராயின் அவர்மேல் கண்ணோடி அவரை யாதும் செய்யாது அமர்தலும், அரசநீதிக்கு வழுவாகுமாதலால் அங்ஙனம் ஆகாதவாறே அரசன் கண்ணோடவேண்டும் என்ப

தும், அத்தகையானுக்கு எல்லா நலங்களும் எளிதில் எய்தும் என்பதும் இதன் கருத்தாம் என்க.

மேல், கண்ணோட்டமுடையவரே கண்ணுடையராவர் என்றார்; அங்ஙனம் கண்ணோடிய தால் வரும்பயன் யாது என்பார்க்கு இவ் உலகமுழுதும் அவர்க்கு உரிமையாம் என்று இதில் உணர்த்தியருளினார்.

தன் கருமமாகிய நீதி சிதையாமல் கண்ணோடவல்ல அரசனுக்கு இவ்வுலகமுழுதும் உரிமையாகும் இயல்பினையுடையதாம் என்பதாம்.

கண்ணோட்டத்தின் பான்மையையும் அதனால் வரும் மேன்மையையும இதில் கருதிக்காண்க.

தன் நீதி தவறாமல் ஒருவன் கண்ணோடுவனாயின் உலகத்தாரெல்லாரும் உரிமையோடு அவனை உவந்து போற்றுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சீவகன்பால் உணரப்படும்.

## கதை

சீவகன் உருமாறிக் கந்துக்கடன் என்னும் வணிகன் இல்லில் வளர்ந்துவருங்கால் இளவேனிற்காலமொன்றில் அழகிய பனிமலர்ச்சோலையுட் புகுந்தான். அங்கு வேதியர் சிலர் குழுமி இனிய வுணவுகளை அமைத்து உண்ணப்புகுமுன் நாயொன்று இடையே புகுந்தது. அவர் வெகுண்டெழுந்து அதனை வளைந்து கல்லுந் தடியுங்கொண்டு கொல்லத்துணிந்தார். இவன் அதனைக் கண்டு அந்தோ! பாவம், அந்தணரா நீங்கள்! என்று இரங்கி ஓடி அவரை விரைந்து நீக்கி வேறே போக்கிவிட்டு அடி எறிகளால் துயருற்றுக் குருதியைக் கக்கிக்கொண்டு சோர்ந்துகிடக்கும் அந் நாயைத் தன் இருகைகளாலும் அணைத்தெடுத்து நீர்தெளித்து உயிர்ப்பித்துத் தனியிடமொன்றிலுய்த்து உயர்நிலையில் வைத்தான். பின்னொருநாள் வேடனொருவன் வில்லுங் கையுமாய் நின்று பறவைகளையும் விலங்குகளையும் கொல்வதைக் கண்டு கண்ணோட்டங்கொண்டு அக் கொடுந்தொழிலை விடும்படி அவனுணர்வுக்குப் படும்படி புணர்த்தினான். ஒரு முறை மலைச்சார

யில் மேய்ந்துகொண்டுநின்ற பசுக்கூட்டங்களை வேடர் சிலர் வந்து கவர்ந்துசெல்ல அவரைவெல்ல ஆற்றாது கட்டியக்காரன் வெள்கி நின்றான். தன் நகரில் வந்து இது செய்து சென்றாரே என்று இவன் சினந்து சென்றான். அங்கிருந்த வேடர்கள் ஐம்பத்தாறு யிரவரும் இவனை வந்து வளைந்துகொண்டார். அவ்வமையத்தும் அவரைக் கொல்லலாகாதென்று இரங்கித் தன் கரவேக சரவேகங்களால் அவர்களுடைய வில், தூணி, வேல், வாள் முதலிய படைக்கலங்கள் மாத்திரம் பொடிபடும்படிசெய்து ஓர் ஊறும் செய்யாமல் அவரை அச்சுறுத்தி ஓட்டினான். அவரும் ஓடி மறைந்தார். அதனைத் திருத்தக்கதேவர் மிகத் திறம்பட விளக்கியுள்ளார். அது

ஐந்நூறு நூறு தலைபிட்ட ஆறுயிரவர்
மெய்ந்நூறு நூறு நுதிவெங்கணை தூவி வேடர்
கைந்நூறு வில்லுங் கணையும் அறுத்தான் கணத்தின்
மைந்நூறு வேற்கண் மடவார் மனம்போல மாய்ந்தார்.

எனவரும். மாய்தல் இங்கு மறைதல் என்க. வீரமும் கோடாமல் தன் ஈரமும் குன்றாமல் இவன் வென்றுவந்த திறத்தையும் நின்று செய்த தயவையும் அனைவரும் அன்று புகழ்ந்தார். இவன் அளியின் இயல்பை நினைந்து உயிர்களெல்லாம் இவனுக்கு உரிமையாய் அன்புபூண்டு நின்றன. கருமம் சிதையாமல் கண்ணோடவல்லார்க்கு உரிமையுடைத்திவ்வுலகு என்னும் உண்மைக்கு இவன் உரியவனானான். விரிவு சரிதையில் தெளிவாம்.

ஊனொடு தேனும் கள்ளும் உண்டுயிர் கொன்ற பாவத்
தீனராய்ப் பிறந்த திங்ஙன் இனியிவை ஒழிமின்; என்னக்
கானில் வாழ் குறவன் சொல்லும், கள்ளொடூன் தேன்கைவிட்டால்
ஏனையெம் உடம்பு வாட்டல்; எவன் பிழைத்துக்கொல்! என்றான். (1)

ஊன்சுவைத் துடம்பு வீக்கி நரகத்தில் உறைதல் நன்றோ?
ஊன்தின்று துடம்பு வாட்டித் தேவராய் உறைதல் நன்றோ?
ஊன்றி இவ் இரண்டினுள்ளும் உறுதிநீ உரைத்திடென்ன
ஊன் தின்று தொழிந்து புத்தேள் ஆவதே உறுதியென்றான். (2)

உறுதிநீ உணர்ந்து சொன்னாய் உயர்கதிச் சேறி எடா
குறுகினாய் இன்பவெள்ளம் கிழங்குணக் காட்டுள் இன்றே

இறைவனூற் காட்சி கொல்லா ஒழுக்கோடேன் துறத்தல் கண்டாய்
இறுதிக்கண் இன்பந்தாங்கும் இருங்கனி இவை கொள் என்றான். (3)

உயிர்கள் மேல் கண்ணோட்டங்கொண்டு வேடன் வெஞ்செயலை விலக்குமாறு சீவகன் இன்சொல் இசைத்ததும், அவன் முதலில் இசையாதுநின்று பின் இவனது அருளியல்பால் இசைந்து இரங்கியதும், மேற்குறித்தவாறும் இவற்றுள் விளங்குதல் காண்க.

தன் முறை சிதையாமல் ஒருவன் கண்ணோடுவனாயின் உலகம் அவன்வசமாகும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

579 மண்டிவைத கண்ணரையும் மாவளத்தான் கண்ணோடிக்
கொண்டேன் பொறுத்தான் குமரேசா—மண்டி
ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. (கூ)

இ—ள்.

குமரேசா! தன்னை வைத கண்ணனரையும் மாவளத்தான் ஏன் கண்ணோடிப் பொறுத்தான் எனின், ஒறுத்து ஆற்றும் பண்பினார் கண்ணும், கண்ணோடிப் பொறுத்து ஆற்றும் பண்பே தலை என்க.

பண்பினார் கண்ணும் = இயல்புடையாரிடத்தும்; கண்—ஏழனுருபு. உம்மை கண்ணோடாமைக்கு ஏதுவைக்காட்டி நின்றது.

ஒறுத்தாற்றார் கண் கண்ணோடல் பண்புடையார்க்கு இயல்பாகலான் இது தலையாயிற்று.

கண்ணோடாது இறைபுரிதலே அரசனுக்கு முறையாமென்று மேல் உரைசெய்துவிட்டு, ஈண்டுக் கண்ணோடிப் பொறுத்தாற்றுக என்றது பொருந்துமோ எனின், தன் குடிகட்குப் பிறர் இடர் இழைக்குங்கால் கண்ணோடாது அவரை ஒறுத்தடக்குக என்று அங்கு உணர்த்தினார்; இங்குத் தனக்குத் துன்பஞ் செய்துழி அவர்மேல் இரக்கங்கொண்டு பொறுத்தாற்றுக என்றருளுகின்றார் ஆதலால் பொருந்தும் என்க. மலர்தலை யுலகினுக்கு உயிரெ

னச்சிறந்த அரசர்க்குத் தம்முயிரினும் தம் குலநீதி சிறந்ததாம் என்பதை யிதில் தெளிந்துகொள்க.

மேல், தன் கருமமாகிய நீதி சிதையவருங்கால் அரசன் கண்ணோடலாகாதென்றார்; இதில், தன்னைச்சிதைத்தாலும் கண்ணோடுக என்றார்.

தம்மை ஒறுக்கத்தொழுகும் இயல்புடையாரிடத்தும் கண்ணோட்டமுடையாராய்ப் பொறுத்தொழுகும் இயல்பே அரசர்க்குச் சிறப்பாம் என்பதாம்.

தமது நண்பர் தம்மைத் துன்புறுத்தினும் அவர்மேல் கண்ணோடி அறிவுடையார் அன்புறுத்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாவளத்தான்பால் உணரப்படும்.

## கதை

மாவளத்தான் என்பவன் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து அரசுபுரிந்த சோழன் நலங்கிள்ளியின் தம்பி. இவன் உள்ளதை யில்லையென்னாமல் எவர்க்கும் உதவிநின்றவன். விகடங்களிலும் விநோதங்களிலும் இவன் மிகவிருப்புடையவன்; ஆயினும், ஒருமுறை தன்னோடு பழகினவர் பின்பு பலஇடர்கள் விளைத்தாலும் அவர்மேல் கண்ணோடிப்பொறுப்பவன். ஒருநாள் தாமப்பல் கண்ணனார் என்னும் புலவரோடு பொழுதுபோக்காக இவன் வட்டாடிக்கொண்டிருந்தான். அதில் அவர் தேர்ச்சியில்லாதவர்; ஆயினும் முன்கோபமுள்ளவர். ஆட்டத்தில் பலமுறையும் இவனே வெற்றியடைந்தான்; அதனால் அவருள்ளத்தில் வெகுளியடைந்தது. தங்கள் பாடலழகு இந்த ஆடலில் காணோமே! என்று அவரை நோக்கி நகைமுகத்தோடு இவன் நயந்து மொழிந்தான். அவருள்ளந் திரிந்திருந்ததாதலால் உணர்வுந்திரிந்து "உன் தாய் உன்னையாருக்குப் பெற்றாள்" என்று சீறியெழுந்தார். இவன் அவர் சிறுமைக்கு இரங்கிச் சிரித்தெழுந்தான். கைதளர்ந்தபொழுது சிலர்க்கு வாய் வளருமாதலால் கண்ணனார் அங்ஙனம் வளர்ந்துவிட்டார் என்று அவர்மேல் இவன் கண்ணோடி நின்றான். அவ்வளவோடு அமையாது தவறுசெய்தவன்போல வருந்தி நின்று தன்னைமன்னிக்கும்படி அவரை வேண்டினான். பொறுத்தற்கரிய வடு

வரையை வாரியெறிந்தும் தன்னை வெறுத்தொழிக்காமல் இவ்வீரன் பொறுத்துச் செய்ததைப் புலவர் நினைந்து நினைந்து உளங் கரைந்தார். உடனே ஒரு பாடலும் பாடினார். அதனை இதன் அடியில் காண்க. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும் கண்ணோடிப் பொறுத்தாற்றும் பண்பே தலை என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்தது.

நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
காலுண வாகச் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவரும் அருளக் கொடுஞ்சிறைக்
கூருகிர்ப் பருந்தி னேறு குறித்தொரீஇத்
தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி யஞ்சிச் சீரை புக்க
வரையா வீகை யுரவோன் மருக;
நேரார்க் கடந்த முரண்மிகு திருவிற்
றேர்வண் கிள்ளி தம்பி; வார்கோற்
கொடுமர மறவர் பெரும; கடுமான்
கைவண் டோன்றல்; ஐயமுடையேன்
ஆர்புனை தெரியனின் முன்னோரெல்லாம்
பார்ப்பார் நோவன செய்யலர்; மற்றிது
நீர்த்தோ நினக்கென வெறுப்பக் கூறி
நின்யான் பிழைத்தது நோவா யென்னினும்
நீ பிழைத் தாய்போல் நனிநா ணினையே!
தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்குஞ் செம்மல்
இக்குடிப் பிறந் தோர்க்கு எண்மை காணுமெனக்
காண்டகு மொய்ம்ப காட்டினை யாகலின்
யானே பிழைத்தனென் சிறக்க நின் ஆயுள்
மிக்குவரும் இன்னீர்க் காவிரி
எக்க ரிட்ட மணலினும் பலவே. (புறநானூறு.)

இது, வெறுத்துக்கூறியதன்னை ஒறுத்தொழிக்காமல் மாவளத்தான் பொறுத்துநின்றபொழுது கண்ணனார் போற்றியுரைத்தது. கண்ணோடிப்பொறுத்தாற்றிய இவனது பெருந்தன்மையை

வியந்து புலவர் கூறிய இதில் பல அரும்பொருள்கள் பொதிந்துள் ளன. அவற்றை உய்த்துநோக்கி உணர்ந்துகொள்க.

பயின்றவர் தம்மால் கூறப்பட்டன மறுக்க மாட்டா
இயன்றநற் குணங்கண் ணோட்டம், இத்தகு கண்ணோட்டந்தான்
முயன்றுசெய் முறைக்குக் கேடு மூன்னூநர் மாட்டுக்கூடா;
நயந்தபி னெக்குத் தீங்கு நாட்டினேர் தம்பால் நாட்டல்.

தன்னை யொறுத்தவரிடத்தும் கண்ணோட்டங்கொண்டு பொ றுத்துக்கொள்ளலே ஒருவனுக்குப் பெருமை என்பது இதனால் கூறப்பட்டது.

---

580 அன்றுபெய்த நஞ்சை அரனும் அங்கதனும்
குன்றுதேன் உண்டார் குமரேசா—நின்று
பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். (ய)

இ-ள்.

குமரேசா! நஞ்சுபெய்ததைக் கண்டிருந்தும் அரனு ரும் அங்கதனும் ஏன் அதனை உண்டு நின்றார் எனின், நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர், நஞ்சுபெயக்கண்டும் உண்டு அமைவர்; என்க. உண்ணமைக்கு ஏதுவை உம்மை உணர்த்தி நின்றது.

வேண்டுபவர் அமைவர் என்றதனால் வேண்டாதவர் அமை யார் என்பதாம்.

நஞ்சு பெயக்கண்டும் = விடம் இடப்பார்த்தும். பெய்தல் = இடுதல், சொரிதல். இச்செயலுக்கேற்ற எழுவாயை இதில் வரு வித்துக்கொள்க. நாகரிகம் என்பது பிலுக்கு, விநோதம், கண் ணோட்டம், முதலியவற்றை புணர்த்திவரும். அஃது ஈண்டு கண் ணோட்டத்தைக்குறித்து நின்றது. நகரவாழ்வினர் இயல்பை நாக ரிகம் என்பர்; ஆதலால், நாகரிகம் உடையேம் என்று உடையும், நடையும் காட்டித் தம்மைவியந்துகொண்டிருப்போர் அவ்வுடை மையின் உண்மையியல்பை யீண்டு ஊன்றி உணரவேண்டும்.

நயத்தக்க நாகரிகம் = நயக்கத்தக்க கண்ணோட்டம். நயத்தல் = விரும்பல். வன்கண்ணரும் கண்ணோட்டத்தைத் தன்கண் காண

விரும்புவாரதலால் நயத்தக்க என்னும் அடை அதனை நயந்து நின்றது.

மேல், தம்மைத் துன்புறுத்துவோரிடத்தும் கண்ணோட்டங் கொண்டு அரசர் அன்புறுத்தவேண்டும் என்றார்; இதில், நட்டவர் நஞ்சு ஊட்டினும் கண்ணோட்டமுடையவர் அதனைத்தட்டாமல் உண்பர் என்றார். முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின், நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்; என்ற நற்றிணைப்பகுதியும் ஈண்டு நயந்து கொள்ளத்தக்கது.

யாவரும் விரும்பத்தக்க கண்ணோட்டத்தைத் தனக்கு உரிமையாக விரும்புகின்றவ , நண்பினர் தமக்கு நஞ்சை இடுவதைக் கண்டிருந்தாலும் அவரை மறுக்கமாட்டாமல் அதனை உண்டு மகிழ்வர் என்பதாம்.

தம்மோடு பழகினவர் பின்பு என்னசொன்னாலும், யாதுசெய்தாலும், கண்ணோட்டமுடையவர் அவரை மறுக்கமாட்டாமல் அவற்றிற்கு இசைந்தே கொள்வர் என்பார் நாகரிகம் வேண்டுபவர் நஞ்சுண்டமைவர் என்றார்.

கண்ணோட்டத்தின் இறுதியான நிலையை அறுதியிட்டு உறுதிபெற உணர்த்திய ஒண்மையை இதில் ஊன்றி யுணர்க.

தண்ணளியின் ஒருபகுதியே கண்ணோட்டம் என்பதும், அதனையுடையவர் பிறவுயிர்கள் வருந்தக்கண்டால் உடனே இரங்கி இதம்புரிவர் என்பதும், தமக்குப் பிறர் பேரிடர்விளைத்தாலும் அவர்க்காகப்பொறுத்து அதனை மேற்கொள்வர் என்பதும், உயிர்க்கிறுதி பயக்கத்தக்க விடமேயாயினும் நண்பர் நலம்பெறுமாறு தரின் அதனையும் உண்டுவிடுவர் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை அரனார்பாலும், அங்கதன் கண்ணும் அறியப்படும்.

## கதை

அரன் என்பது சிவபரம்பொருளின் திருநாமங்களுள் ஒன்று. அழிப்பவன் என்பது அதற்குப்பொருள். உயிர்களுடைய துயர்களை அழிப்பவன்; அல்லது ஊழிக்காலத்தில் எல்லாவற்றையும் அழித்து நிற்பவன் என்னும் ஏதுவான் வந்தது.

இவர் அடியார்க்கு எளியவர். அருள்வடிவானவர். பத்திவலை யில் படுவோன் என்று முத்தர்களால் பாடப்பெற்றவர். தன்பால் அன்பினளாய கௌரியென்னும் ஒரு பார்ப்பனமங்கையின் பரிவுக் கிரங்கித் தாயைபோய்க் குழந்தையாகி அன்புடையாள் அன்பிற் பட்டு வாய்விட்டுக் கிடந்தழுத மகவு என்னும்படி தகவுற நின்ற வர். தாயிழந்து தபங்கிநின்ற பன்றிக்குட்டிகளுக்குத் தாயாய் நின்று பால் கொடுத்தவர்.

தாயிழந்து வெம் பசித்தழல் அகஞ்சுடத் தழன்று
காயும் ஆகபம் புறஞ்சுடக் கானிடைக் கிடந்து
தீயும்வனமென் குருளைகள் தெருமர இரங்கி
ஆயு மாய்முலை அளித்துயி ரளித்தனம் அதனால்;
அகில வேதமும் ஆகமபேதமும் நம்மைச்
சகல சீவ தயாபரன் என்றுரைசால்பால்

என்று தாமே தமது அளியின் இயல்பை இம்மையிலெவரும் அறி யஅம்மைக்கு அருளினர். பழகிய சுந்தரமூர்த்திகளுடைய மொ ழியினை மறுக்கமாட்டாமல் பானளிரவு பரவையாரிடம் தூதும் நடந்தார். இவர்தம் அளியின் பெருமை அளவிடலரியது. பாற் கடலிலிருந்து மண்டியெழுந்த நஞ்சைக்கண்டு நடுங்கிநின்ற தேவர், இவர்பால் வந்து அதனை உண்டு அடக்கவேண்டுமென்று ஓலமிட் டபொழுது அவர்தம் மறுக்கத்தைக்கண்டு இரக்கமீக்கொண்டு அவருரையை மறுக்கமாட்டாமல் அதனை இவர் உண்டு அமைந் தார். கண்ணோட்டமுடையவர் நஞ்சுபெயக் கண்டும் உண்டு அமை வர் என்னும் உண்மைக்குத் தாமே உரியவராய் நின்று உலகறிய இவர் அன்று உணர்த்தியருளினர். விரிவைச் சிவரகசியகண்ட த்தில் காண்க.

காளக வுருவு கொண்ட கடுவினை யுண்கோ! அன்றேல்
நீளிடை யதனிற் செல்ல நெறிப்பட எறிகோ! என்ன
வாளுறு மதிதோய் சென்னி வானவனருள அன்னோன்
தாளுற வணங்கி நின்று சதுர்முகன் முதலோர் சொல்வார்.
ஐயநீ யன்றி யாரிவ் அனல்விட மாற்று நீரார்
செய்யகைக் கொண்ட வாற்றால் சிறிதெனக் காட்டிற்றன்றே

வெய்யதோர் இதனையின்னே விட்டனை யென்னிற் பின்னை
யுய்வரோ யாருமின்னே யொருங்குடன் முடிந்திடாரோ.

முடிவிலா வுனக்கேயன்றே முன்னுறு பாகமெல்லாம்
விடமதே யெனினு மாக வேண்டுதும் இதனை வல்லே
அடியரேம் உய்யுமாற்றால் அருந்தினை யருண்மோ வென்னக்
கடிகமழ் இதழி வேய்ந்தோன் கலங்கலீர் இனிநீர் என்றான்.

என்றனன் விரைவிற்றன்கை ஏந்திய விடமுட் கொள்ளச்
சென்றது மிடற்றில் அன்னதிறத்தினை யாரு நோக்கி
இன்றெம துயிர் நீ காத்தற் கிங்கிது சான்றாய் அங்கண்
நின்றிட அருடி யென்றே நிமலனைப் போற்றலுற்றார்.

போற்றலும் மிடற்றில் எங்கோன் பொலன்மணி அணியதென்ன
மாற்றருந் தகைமைத்தான வல்விடம் நிறுவி அன்னார்க்
கேற்றநல் அருளைச்செய்ய யாவரும் இறந்தே யின்று
தோற்றின ராகு மென்னச் சொல்லருமகிழ்ச்சி கொண்டார்.

(கந்தபுராணம்.)

நஞ்சை அஞ்சி அமரர் நடுங்கிநின்றதும், அதைக்கண்டிரங்கி அவர்க்காக அமலன் அதனை உண்டு அமைந்ததும், அதன் பின் உலகம்கொண்ட இன்பமும் இவற்றுள் இலங்குதல் காண்க.

இடைந்தவர்க்கு அபயம் யாமென் றிரந்தவர்க் கெறிநீர்வேலை
கடைந்தவர்க் காகி ஆலம் உண்டவற் கண்டிலீரோ
உடைந்தவர்க் குதவானாயின் உள்ளதொன் றீயானாயின்
அடைந்தவர்க் கருளானாயின் அறமென்னும் ஆண்மையென்னாம்.

(இராமாயணம்.)

கோலால மாகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த
ஆலால முண்டான் அவன்சதுர்தான் என்னேடீ?
ஆலால முண்டிலனேல் அன்றயன்மா லுள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ. (திருவாசகம்.)

வானவர் இந்திரன் இந்திரைகேள்வன் மறைவிரிஞ்சன்
தானவ ரென்று புகல்வதுண்டோ சமரிற் சிலையால்
கானவ னெற்றுங் களவீசர் அன்று கடல்விடத்தைப்
போனக மாக அமுதுசெய் யாவிடிற் பூதலத்தே. (கருவை.)

மாலெங்கே வேதனுயர் வாழ்வெங்கே இந்திரன்செங்
கோலெங்கே வானோர் குடியெங்கே—கோலஞ்சேர்

அண்டமெங்கே அவ்வவ் அரும்பொருளைக் கேகினது
கண்டமுங்கே நீலமுறக் கால். (அருட்பா.)

கண்ணுதற்பரமன் கண்ணோடி நஞ்சுஉண்டதை வியந்து பன்னூல்களும் இங்ஙனம் பாராவியுள்ளன.

## கதை 2.

அங்கதன் என்பவன் மகதநாட்டிலே வாருணம் என்னும் நகரிலேயிருந்த இராயசிங்கன் என்னும் குறுநில மன்னனுடைய தம்பி. இவன் நேர்மையோடு கூர்மையுமுடையவன். உயிர்கள் சிறிதுவருந்தினும் இவன் பெரிதும் இரங்கி அவற்றைப்பேணியருள்வான்,

குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும் அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற தாயினும் ஆயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன் நாராயணாவென்னும் நாமம்.

என்னும் உண்மையை நாடிக்கொண்டு அப்பெருமானடியையே எப்பொழுதும் இவன் நயந்து நின்றவன். கற்பிலும் கல்வியிலும் பொற்பிலும் சிறந்த தனது இனிய மனைவியோடமர்ந்து எல்லா நலங்களையும் நுகர்ந்து இவன் இன்புற்று வருங்கால் இவன்பால் இருந்த அரிய வயிரமணி ஒன்றைத் தன்னிடம் தந்துவிடும்படி அண்ணன் கேட்டான். அம்மணியைச் சகந்நாதத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானுக்கே அணியவேண்டுமென்று இவன் உறுதிசெய்திருந்தானாதலால் உடனே முன்னோனிடம் உதவாதிருந்தான். அவன் கொடுஞ்சினமுடையவனாதலால் இவனைக்கொன்றுவிடும்படி ஒருத்தியிடம் குறித்துவிட்டான். அவள் உணவில் நஞ்சைக் கலந்து கொண்டுவந்து இவன்முன் உண்ணவைத்தாள். உண்மையை உணராமல் இவன் அதனை உண்ணஎடுத்தான். உடனே அவள் உள்ளங்கலங்கி ஐயகோ! நும்முன்னோன்சொற்படி அதில் நஞ்சுபெய்துவைத்தேன் உண்ணவேண்டாமென்று உடல் துடித்தாள். அண்ணன் எண்ணத்துக்குப் பின்னம் வரலாகாதென்று அதனை இவன் உண்டேதீர்த்தான்; ஆயினும் கண்ணன் அருளால் யாதொருகேடும் இவன் காணுதிருந்தான். இதனை முன்னவன்

அறிந்து நொந்து தன் புன்மையைப் பொறுத்தருளும்படி இவனைப்போற்றி நின்றான். தண்ணளிமிக்க இவனும் அவ் அண்ணன் பால் ஆரா அன்போடே மேவியிருந்தான். பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்; என்னும் உண்மைக்கு இவனும் உரியவனானன். விரிவைத் தொண்டர் கோவையில் காண்க.

நட்டவர் நஞ்சு இட்டாலும் கண்ணோட்டமுள்ளவர் அதனைத் தட்டாமல் உண்பர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

கண்ணோட்டமே அரசர்க்குப் பேரழகாகும். அதனாலேதான் உலகம் நிலைபெறுகின்றது. அஃதில்லாதவர் இவ்வுலகத்துக்கு ஒரு பாரமேயாவர். மாந்தரின் கண்ணுக்குப்பயன் கண்ணோட்டமேயாம். கண்ணோட்டமில்லாத கண் முகத்திலிருந்தாலும் பயனொன்றுமில்லை. அக்கண்ணைப் புண்என்றே கொள்ளவேண்டும். ஆறறிவுடைய மனிதரேயாயினும் கண்ணோட்டமில்லாதவர் ஓரறிவுள்ள மரமேயாவர். கண்ணிருந்தாலும் அவர் குருடரேயாவர். தன் கருமம் சிதையாமல் ஒருவன் கண்ணோடுவனாயின் அவனுக்கு இவ்வுலகமுழுவதும் உரிமையாகும். தன்னை ஒறுக்குமியல்புடையாரிடத்தும் கண்ணோடிப் பொறுக்கும் தன்மையே ஒருவனுக்குப் பெருஞ்சிறப்பாகும். நட்டவர் நஞ்சையிட்டாலும் மிக்க கண்ணோட்டமுடையவர் அதனைத் தட்டாமல் உண்பர்.

௫அ-வது கண்ணோட்டமுற்றிற்று.

---

# 59-ம் அதிகாரம் ஒற்றாடல்.

அஃதாவது அரசன் ஒற்றரை யாளுந்திறம். ஒற்றராவார் பகைவர் உறவினர் பொதுவினர் என்னும் எவரிடமுஞ் சென்று அவரறியாவகை நின்று ஆங்கு நிகழ்ந்தவற்றை யறிந்துவந்து அரசரிடம் சொல்வோர். ஒற்றி யறிபவராதலால் இவர் ஒற்றர் என நின்றார். சாரணர் எனவும் வேவுகாரர் எனவும் இவர் கூறப்படுவர். வெருவந்த செயலாகிய கொடுங்கோன்மையை யொழித்துக் கண்ணோட்டமுடையராய் நின்று செங்கோல்

செலுத்தும் வெண்குடை வேந்தர் அங்கங்கே நிகழ்வனவற்றை அறிந்துகொண்டு ஆவனசெய்தற்கு இவ் ஒற்றரையே கண்ணாக வுடையராதலால் கண்ணோட்டத்தின்பின் இது வைக்கப்பட்டது.

581 ஒற்றரைமுன் கண்ணா வுவந்தேதன் விசயதான்
கொற்றமுறக் கொண்டான் குமரேசா—உற்றறியும்
ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்.

இ—ள்.

குமரேசா! ஒற்றரைத் தன் கண்ணாக என் விசயதான் முன் உவந்துகொண்டான் எனின், ஒற்றும் உரைசான்ற நூலும் இவை இரண்டும் மன்னவன்கண் தெற்றென்க.

தெற்றென்க = தெளிக.

ஒற்றும் = ஒற்றரும்; ஒற்றி நின்று உண்மையை உணர்பவர் என்பதாம். ஒற்றுதல் = அடுத்தல், கிட்டல். இனி, ஒன்றுதல் என்பது தல்விகுதி குன்றி வல்லொற்றாகி ஆகுபெயராய் நின்று அப்பொருளுற வந்தது எனினுமாம். ஒற்று என்னும் அஃறிணைச் சொல், வேந்து, அமைச்சு என்பனபோல ஈண்டு உயர்திணைப் பொருளில் வந்தது. ஒற்றரையும் நூலையும் தன் இருகண்களாக அரசன் தெளிக என்பார் ஒற்றும் நூலும் மன்னவன்கண் தெற்றென்க என்றார்.

உரைசான்ற நூல் = புகழமைந்த நூல்; என்றது பல்லோராலும் சிறந்ததென்று புகழ்ந்துரைக்கப்பெற்ற உயர்ந்த நூல் என்றவாறு. அது, என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும்—நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்க்—குன்றாத, செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போன்—மன்புலவன் வள்ளுவன் வாய்ச்சொல் எனவும்; மணற்கிளைக்க நீரூறும் மைந்தர்கள் வாய் வைத் துணச்சுரக்கும் தாயமுலை ஒண்பால்—பிணக்கிலா, வாய் மொழி வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்கு ஆய்தொறும் ஊறும் அறிவு எனவும்; உரைசான்றுவரும் உயர்நூல்போல்வதாம்.

ஒற்றரும் புகழமைந்த நூலும் ஆகிய இவை இரண்டையும் தனக்கு இரண்டுகண்களாக அரசன் தெளியவேண்டும் என்பதாம்.

உளக்கண் நீதிநூலாக ஒற்றே வெளிக்கண் எனவிடுத்து
விளக்குஞ் செயலால் மொழிதன்றால் வேண்டாசுற்றம் வினைஞரையும்
அளக்க மைந்த ஒற்றுவது ஐயுறாத வுருவோடு
துளக்கமின்றி என்செயினும் சோர்விலாத தென அறிக. என்றதும்
இங்கு நினைவுறத்தக்கது.

எல்லாவுண்மைகளையும் அரசன் கண்டுகொள்ளுமாறு ஒற்றர் கொண்டுவந்து சொல்வாராதலால் அவனுக்கு அவர் கண் என நின்றார்.

அரசனுக்குச் செவிகண் என்னும் உலகவழக்கையும்,

தங்கண்ணே யனைய ஒற்றர் தனிமொழி வழி சார் சால்பால்
அங்கண்மா ஞாலங்காக்கும் அரசர்க்குச் செவிகண்ணாமே. என்னும் செய்யுள் வழக்கையும் ஈண்டுச் சிந்தித்துக்கொள்க.

உடலுறுப்புக்களுள் கண் எப்படி ஒருவனுக்குச் சிறந்ததோ அப்படியே ஒற்றன் அரசனுக்குச்சிறந்தவனாவன் என்பது கருத்து.

ஒற்றாடல் என்னும் இதில் நூலையும் ஒற்றிக்கொண்டது என்னெனின், உலக நிகழ்ச்சிகளைக் கண்டறிதற்கு ஒற்றன் கருவியாதல்போல் சூழ்ச்சித்திற முதலிய உணர்வுக்காட்சிகள் எல்லாவற்றையும் உய்த்துணர்தற்கு உரைசான்ற நூல் உதவியாகுமாதலால் இனம்பற்றி அதுவும் ஈண்டு உடன் எண்ண நின்றது.

இவையிரண்டும் கண் எனப் பொதுவாகக் கூறியிருப்பினும் ஒற்றைப் புறக்கண்ணாகவும், உரைசான்ற நூலை அகக்கண்ணாகவும் ஓர்ந்துகொள்க. நீதியும் ஒற்றும் நிகரிலாக் கண்ணா நீணிலத்து அல்லவை யொழித்தும் என்றார் பிறரும்.

உணர்வமைந்த ஒற்றனையும் புகழமைந்த நூலையும் தனக்கு உற்ற துணையாக அரசன் பற்றிக்கொள்வனாயின், வெற்றி முதலிய எல்லா நலங்களையும் அவன் பெற்று மகிழ்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விசயதரன்பால் உணரப்படும்.

## கதை

விசயதரன் என்பவன் கங்கைகொண்டான் எனவும் இராசராசன் எனவும் பெயர்பெற்று விளங்கியிருந்த சோழமன்னனுடைய பேரன். அம்மன்னன் மகளாகிய தருமவதி என்பவளை

இராசசிம்மன் என்னும் பாண்டிய அரசன் மணம்புரிந்திருந்தான். அவ்வழுதி வேந்தனுக்குப் புதல்வனாய் அவள் வயிற்றில் இவ்விசயதரன் தோன்றினான். அவ்வளவர்கோனுக்கு வேறு ஆண்மகவின்மையால் இவனையே தன்குல அரசுக்கு உரிமையாக வேண்டினான். இசைக்குரிசிலாகிய பாண்டியனும் அதற்கு இசைந்து விடுத்தான். அதனால் இவன் வழுதிவழியில் வந்தும் வளவர் கோனாய்நின்று மாநிலம்புரந்தான். இவன் அரியகலைகள் பலவும் ஆய்ந்தவன். பெரிய போர்வீரன். தன் பெயருக்கேற்பவே இவன் குன்றாவென்றி யுடையனாய் நின்றுவிளங்கினான். கருணாகரன் என்னும் மதிமானொருவன் இவனுக்கு அமைச்சனாகவும் தானைத்தலைவனாகவும் அமர்ந்திருந்தான். பராக்கிரமகேது, கலுழவேகன் என்னும் ஒற்றரிருவரையும் உய்த்து உலகநிலையை உற்றுணர்ந்துகொண்டு தன் முறைமையில் குற்றம் யாதும் உறாதவாறு இவன் கோலோச்சி வந்தான். ஆட்சிமுறையில் இராமனாகவும் சூழ்ச்சித்துறையில் கண்ணனாகவும் அனைவராலும் இவன் எண்ணநின்றான்.

அன்றிலங்கை பொருதழித்த அவனே அப்பாரதப்போர்
முடித்துப் பின்னை
வென்றிலங்கு கதிராழி விசயதரன்
எனவுதித்தான் விளம்பக் கேண்மின். (1)

தேவரெலாங் குறையிரப்பத் தேவகிதன்
திருவயிற்றில் வசுதேவ ற்கு
மூவுலகுந் தொழுநெடுமால் முன்னொருநாள்
அவதாரம் செய்த பின்னை. (2)

இருள்முழுதும் அகற்றும்விது குலத்தோன் தேவி இகல் விளங்கு
தபனகுலத் திராசராசன்
அருள் திருவின் திருவயிற்றில் வந்துதோன்றி ஆலிலையின்
அவதரித்தான் அவனே மீள. (3)

திங்களின் இளங்குழவி செம்மலிவ னென்றும்
செய்யபரி திக்குழவி ஐயன்இவன் என்றும்
தங்களின் மகிழ்ந்திரு குலத்தரசர் தாமும்
தனித்தனி உவப்பதோர் தவப்பயனு மொத்தே. (4)

எனச் சயங்கொண்டான் என்னும் சிறந்தபுலவர் இவனைவியந்துபாடியுள்ளார். இவன் இங்ஙனம் விளங்கிவருங்கால் கலிங்க மன்னனது விலங்கிய இயல்பை ஒற்றரால் விரைந்து அறிந்து அவனை வென்று கைக்கொண்டான். தான் பெற்ற நலங்களுக்கெல்லாம் ஒற்றரும் நூலுமே உற்றதுணையாக இவன் உணர்ந்துவந்தானுதலால் அவரைத் தன் கண்களாகவே கருதியிருந்தான். ஒற்றும் உரைசான்றநூலும் இவைஇரண்டும் தெற்றென்க மன்னவன் கண் என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். விரிவை வளவர்குலமுறையில் காண்க.

ஒற்றரைத் தன் கண்களாக அரசன் கருதிக்கொள்ளவேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

---

582 ஏனோ உலகரியல் பெல்லாம் அறிந்துவந்தான்
கோனுநன் மாறன் குமரேசா—ஆனமல்
எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில். (உ)

இ—ள்.

**குமரேசா!** எல்லாருடைய செயல்களையும் இயல்களையும் நாள்தோறும் என் நன்மாறன் ஒற்றரால் உணர்ந்து வந்தான் எனின், எல்லார்க்கும் நிகழ்பவை எல்லாம் எஞ்ஞான்றும் ஒற்றனுல் அறிதல் வேந்தன் தொழில் என்க.

ஒற்றன் என்பது அதிகாரம் நோக்கி இதில் வருவிக்கப்பட்டது. நிகழ்பவை = உளவாகும்செயல்களை. நிகழ்தல் = நடத்தல், நிறைவேறல்.

வல் அறிதல் = விரைந்து தெரிதல்; வல் = விரைவு. வழிபடுவோரை வல்லறி தீயே எனவும் வல்லே மல்லேம் ஆயினும் வல்லே நின்வயிற் கிளக்குவம் எனவும் வருவனவற்றுள் வல்என்னுஞ் சொல்விரைவு குறித்து நிற்றலை உணர்க.

உயிர்களின் வினையளவையறிந்து அவற்றிற்குத் தக்கவாறு பயனுதவிநிற்கும் உலகமுதல்வனுகிய இறைவனைப்போலவே இ இறைவனும் தன் நாட்டின்கண் அங்கங்கே நிகழும் செயல்களை

ல்லாவற்றையும் விரைந்தறிந்து அவற்றிற்கேற்றவாறு முறையை ஆற்றிவரவேண்டுமாதலால் "எல்லாம் வல்லறிதல் வேந்தன் தொழில்" என்றார்.

மேல், ஒற்றனை அரசன் கண்ணாகக் கருதவேண்டும் என்றார்; இதில், உலகில் நிகழும் எல்லாச்செயல்களையும் அவனைக்கொண்டு விரைந்து அறிதல் வேண்டும் என்றார்.

உலகிலுள்ள எல்லாரிடத்தும் நிகழ்கின்ற எல்லாச்செயல்களையும் நாள்தோறும் ஒற்றரால் விரைந்து அறிதல் வேந்தனுக்குரிய தொழிலாம் என்பதாம்

எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை யாம் அறிந்துகொள்ளவேண்டுமென்று பரமனைநினைந்து வேண்டி அதன்பின் கழறிற்றறிவார் எனச் சேரமான் பெருமான் பெயர்பெற்று நின்றது ஈண்டுக் கருதத்தக்கது.

ஒற்றர்களை உய்த்து உலக நிகழ்ச்சிகளை நாள்தோறும் அரசன் உய்த்துணரவேண்டுமென்பது கருத்து. இவ்வுண்மை நன்மாறன்பால் உணரப்படும்.

## கதை

நன்மாறன் என்பவன் இந்திரவர்மன் எனவும் சுந்தரசுகுணன் எனவும் பெயர்பெற்றிருந்த பாண்டியவேந்தனுடைய அருமைப்புதல்வன். இவன் வீரருள்வீரன். தன் பெயருக்கேற்பவே நன்மையான குணங்கள்யாவும் இவன்பால் நயந்திருந்தன. உயிரை உடல்தாங்கி நிற்றல்போல் உலகமுழுவதையும் இவன் ஓம்பிவந்தான். ஆட்சியின் மாட்சியாலும் அறிவு ஆற்றல்களாலும் தன் காலத்திருந்த மன்னவரெவரினும் இவன் முன்னவனாய் நின்றான். திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளின் முகமண்டலத்தில் விளங்கியுள்ள இருகண்களினும் நெற்றிக்கண் நிவந்து நிற்றல் போல் சேரன் சோழன் என்னும் இருபெரு வேந்தரினும், இவன் உயர்ந்து நின்றான். அந்நிலையினை வியந்து

ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்

பெருவிறல் அமரர்க்கு வென்றிதந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல
வேந்து மேம்பட்ட பூந்தார் மாற
நீ நீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர்
வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறைக்
கடுவளி தொகுப்ப ஈண்டிய
வடுவாழ் எக்கர் மணலினும் பலவே. என மருதனிள

நாகனார் என்னும் புலவர்பெருமானார் இவனைப்புகழ்ந்து வாழ்த்தியுள்ளார். செந்திலம்பதியின் மணல்மேட்டிலுள்ள மணலினும் பலகாலம் நெடிது வாழவேண்டுமென்று புலவர்வாயால் இதில் இவன் போற்றப்பெற்றுள்ளமை காண்க. இங்ஙனம் சிறந்து விளங்கிய இவன் ஒற்றரை உய்த்து உலகநிலையினை விரைவிலோர்ந்து உயிர்கள் இனபுற முறைபுரிந்து வந்தான். தாய் அறியாத சேய் இருந்தாலும், தான் அறியாதவர் இல்லை என்னுமாறு ஒல்லையிலறிந்து உதவிவந்தானாதலால் எண்ணிய யாவும் எண்ணியாங்கெய்தி இவன் இன்புற்றிருந்தான். எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும் வல்லறிதல் வேந்தன் தொழில் என்னும் உண்மையை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான். இவனது அரசியலையும் அறிவையும் செயலையும் வியந்து நக்கீரனார், இடைக்காடனார், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார், பேரிசாத்தனார், ஆவூர்மூலங்கிழார், முதலிய உயர்ந்த புலவர்கள் பலரும் புகழ்ந்து பாடியுள்ளார். அவற்றுள் ஒன்றை இதனடியில் தருதும். அதன் ஆன்றபொருளை ஊன்றியுணர்க.

ஏற்று வலன் உயரிய எரிமருள் அவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்,
கடல் வளர் புரிவளை புரையு மேனி
அடல் வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்,
மண்ணுறு திருமணி புரையு மேனி
விண்ணுயர் புட் கொடி விறல்வெய் யோனும்,
மணி மயில் உயரிய மாறா வென்றிப்

பிணிமுக வூர்தி யொண்செய் யோனும், என
ஞாலங் காக்குங் கால முன்பின்
தோலா நல்லிசை நால்வ ருள்ளும்,
கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்;
வலியொத் தீயே வாலி யோனைப்;
புகழொத் தீயே இகழுநர் அடுநனை;
முருகொத் தீயே முன்னியது முடித்தலின்;
ஆங்காங் கவரவர் ஒத்தலின், யாங்கும்
அரியவும் உளவோ நினக்கே? அதனால்,
இரவலர்க்கு அருங்கலம் அருகாது ஈயா
யவனர், நன்கலம் தந்த தண்கமழ் தேறல்
பொன்செய் புனைகலத் தேந்தி நாளும்
ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து
ஆங்கினிது ஒழுகுமதி ஓங்கு வாண் மாற,
அங்கண் விசும்பின் ஆரிருள் அகற்றும்
வெங்கதிர்ச் செல்வன் போலவும் குடதிசைத்
தண்கதிர் மதியம் போலவும்
நின்று நிலைஇயர் உலகமோ டுடனே.

இது, நமது நன்மாறனை நக்கீரனார் பாடியது: சிவன் திருமால் பலதேவன் முருகவேள்களோடு ஒப்பவைத்து இவன் உரைக்கப்பட்டுள்ளமையை இதில் உய்த்து நோக்குக. இதனால் இவனது உலகியல் அறிவும், உயர்குண இயல்பும், தலைமையும், திறலும், நிலைமையும், பிறவும், நெடிதுபுலனும்.

ஒற்றால் உலகியலை விரைவிலறிதல் அரசனுக்கு உரியதொழிலாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

ஒற்றரின்றி நின்ற உயர்கலிங்கன் பின்பேனே
கொற்றமின்றி நொந்தான் குமரேசா—சுற்றிவரும்
ஒற்றினை னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில். (௫)

இ—ள்.

குமரேசா! ஒற்றால் ஒற்றி உணராத கலிங்கமன்னன் பின்பு ஏன் கொற்றம் இலனாய் நொந்தான் எனின், ஒற்றினான் ஒற்றிப் பொருள் தெரியா மன்னவன் கொற்றம் கொளக் கிடந்தது இல் என்க.

ஒற்றினன் = ஒற்றரால். ஒற்றி = ஒற்றுவித்து; அஃதாவது உலக உண்மைகளை ஒற்றரால் ஓர்ந்து என்றவாறு. கொற்றம் = வெற்றி; பகைவரைக் கொல்வதாலுறுவதென்னும் ஏதுவான் வந்தது. கொளக் கிடந்தது = அடையக் கிடந்தது.

மேல், உலகில் நிகழ்கின்ற எல்லாவற்றையும் நாள்தோறும் அரசன், ஒற்றரால் அறிந்துகொள்ளவேண்டும் என்றார்; இதில், அங்ஙனம் அறியாத மன்னன் தன் மேன்மையை யிழந்து மெலிவான் என்கின்றார்.

ஒற்றரையுய்த்து உலக நிகழ்ச்சிகளை அறிந்துவரச்செய்து உண்மையைத் தெரிந்துகொள்ளாத அரசன் வெற்றியை அடைந்துகொள்ளுதற்குரிய வழி வேறுயாதும் இல்லை என்பதாம்.

ஒற்றரால் ஒற்றித்தெரிவதிலேதான் மன்னவன் கொற்றம் கிடக்கின்றது என்பது குறிப்பு. ஒற்றினன் ஒற்றிப் பொருள் தெரிந்தபின்பே இலக்குவன் நிகும்பலையில் புகுந்து கொற்றம்கொண்டதும் ஈண்டுக் குறிக்கொண்டுணர்க.

ஒற்றரைக் கண்ணாகக் கருதுக; அவரைக்கொண்டு உலகநிகழ்ச்சிகளை நாளும் விரைந்து தெரிந்துகொள்ளுக; என்று முன் இரண்டு பாடலால் மொழிந்ததைக்கண்ட ஒருவன், அங்ஙனம் கருதாமலும், தெரியாமலும் இருந்தால் அதனால் வருங்குறையாதோ? என அவனைநோக்கி இஃது அறைந்ததாகக் காண்க.

வேறு எத்துணை ஆற்றல்களை யுடையவனாயினும் ஒற்றரையில்லாதவன் வெற்றியை அடையான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கலிங்கன்பால் உணரப்படும்.

## கதை

கலிங்கன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர்க் கலிங்கதேசத்தைத் தனக்கு உரிமையாக்கொண்டு அரசுபுரிந்தவன். இவன் பெயர் சனபதி எனவும் அமரகன் எனவும் வழங்கப்படும். இவன் திண்மையும் சினமும் சேரப்பெற்றவன். பல போர்முனைகளிலும் அஞ்சாது புகுந்து வென்றவனாதலால் தன் ஆணையை எங்குஞ்செலுத்தலாம் என்று எண்ணியிருந்தான. அதனால் தன் முன்னோர் சோழமன்னர்க்கு முறையே செலுத்திவந்த இறைப்பொருளைச் செலுத்தாமல் இவன் மறுத்துவிட்டான். அது காரணமாக விசயதரன் என்னும் சோழமன்னனுக்கும் இவனுக்கும் இடையே பகைமை மூண்டது. மூண்டிருந்தும் அதற்குரிய பாதுகாப்பை யாதும் அமைத்துக்கொள்ளாமலும், உலக நிலைகளையும், பகைவர் இயல்புகளையும் ஒற்றரையுய்த்து உணர்ந்துகொள்ளாமலும் இவன் உவந்திருந்தான். இங்ஙனமிருப்பச் சோழ மன்னனது சேனையை விரைவோடு செலுத்திவந்து கருணாகரத்தொண்டைமான் என்னும் வீரன் இவன் ஊரை வளைத்துக்கொண்டான். அதன்பின் இவன் அதிர்ந்து உணர்ந்தான்.

அந்தரம் ஒன் றறியாத வடகலிங்கர்
குலவேந்தரனபன் வீரம்
வெந்தறுகண் வெகுளியினால் வெய்துயிர்த்துக்
கைபுடைத்து வியர்த்து நோக்கி
வண்டினுக்கும் திசையானை மதங்கொடுக்கும்
மலர்க்கவிகை அபயற் கன்றித்
தண்டினுக்கும் எளியனோ எனவெகுண்டு
தடம்புயங்கள் குலுங்க நக்கான்
கானரணும் மலையரணும் கடலரணும்
சூழ்கிடந்த கலிங்கர் பூமி
தானரண முடைத்தென்று கருதாது
வருவதும்அத் தண்டுபோலும். என்று மண்டியெழுந்து வன்போர்புரிந்தான். மாற்றவரோடு ஆற்றமுடியாமல் இறுதியில் மறுகியுடைந்தான். முற்றியவலி யிருந்தும் ஒற்றரை

யுய்த்து உளவறியாமையால் இவன் வெற்றியை யிழந்தானே! என்று அனைவரும் இவனை வெறுத்திகழ்ந்தார். ஒற்றினால் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன் கொற்றம் கொளக் கிடந்தது இல் என்னும் உண்மைக்கு இவன் இலக்காயிருந்தான்.

ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றேரான் துணையாத் தெரிந்தும்—குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று. (நீதிநெறி)

ஒற்றினால் ஒற்றிப் பொருள்தெரிதல் முன்னினிதே
முற்றான் தெரிந்து முறைசெய்தல் முன்னினிதே
பற்றிலனாய்ப் பல்லுயிர்க்கும் பாத்துற்றுப் பாங்கறிதல்
வெற்றிவேல் வேந்தர்க் கினிது. (இனியவைநாற்பது.)

ஒற்றர் இல்லாத அரசனுக்கு வெற்றியில்லையென்பது இதனால் கூறப்பட்டது.

---

584 ஓதியுயர் வீமனுய்த்த ஒற்றனேன் மற்றவரைக்
கோதறமுன் ஆய்ந்தான் குமரேசா—நீதி
வினைசெய்வார் சுற்றத்தார் வேண்டாதார் என்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று. (ச)

இ—ள்

குமரேசா! வீமனது ஒற்றனாகிய சுவேதன் என்பவன் அனைவரையும் ஏன் அன்று ஆராய்ந்துசென்றானெனின், வினைசெய்வார் சுற்றத்தார் வேண்டாதார் என்று ஆங்கு அனைவரையும் ஆராய்வதுஒற்று என்க.

ஆராய்வது ஒற்று = ஆராய்பவனேஒற்றனாவான். கடாவுருவு கண்ணஞ்சாமை உகாமைமுதலிய ஒற்றின்குணங்கள்யாவும் ஆராய்தலைமுன்னிட்டே அமையுமாதலால் அதனைமுதலில்வைத்தார். ஒற்றருக்கும், வேந்தனுக்கும், உள்ள உறவுமையை மேல்மூன்று கவிகளால் விளக்கி இனி அவர்க்கு உரிய இயல்பை யுணர்த்துகின்றார். வினைசெய்வார் என்றது அரசகாரியம்செய்யும் அமைச்சர்

முதலாயினோரை. வேண்டாதார் என்றது பகைவரை. என்ற என்பது என்று எனநின்றது. ஆங்கு—அசை. அன்றி உவமைச் சொல்லாகக் கொண்டால் என்று சொல்லப்பட்டவாறே பிறரனை வரையும் என்று கொள்க.

மேல், ஒற்றர் இல்லையாயின் அரசனுக்கு வெற்றி இல்லை என்றார்; இதில், அவர்க்கு உற்றதொழில் இஃது என உணர்த்தி யருளினார்.

அரசனுக்குத் துணையாய் நின்று காரியஞ்செய்யும் அமைச்சர் முதலாயினோர் சுற்றத்தார் பகைவர் என்றுசொல்லப்பட்ட அனைவரையும் ஆராய்வானே ஒற்றனவான் என்பதாம்.

ஆட்சிக்குத் தாழ்ச்சி நிகழாவண்ணம் வினைசெய்வார் முதலிய அனைவரையும் சொற்செயல்களால் நாள்தோறும் ஒற்றன் ஆராய்ந்துவரவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுவேதன்பால் உணரப்படும்.

## கதை

சுவேதன் என்பவன் விதர்ப்பதேயத்திலே சயபுரி என்னும் நகரிலேயிருந்த வேதநாதன் என்னும் ஓர் வேதியனுடைய புதல் வன். வடமொழியிலுள்ள பல நூல்களிலும் இவன் வல்லவன். அரிய பொருள்களைக் கண்டுபிடிப்பதிலும் கருதிய காரியங்களைக் கொண்டுமுடிப்பதிலும் இவன் மிகச்சிறந்தவன். அந்நாட்டு வேந் தனாகிய வீமன்பால் பேரன்புடையவன்.

> குடவளை யினங்கள் வயிறுளைந்தீன்ற குருமணி கருவென அயிர்த்து
> மடல் முறுக்கவிழும் கமலமென் பொருட்டில் வரிச்சிறைக்குருகு கடை [கிடக்கும்
> தடநிறை வாளை பகட்டினம் உகளும் தண்பணைவிதர்ப்ப நாடுடையோன்
> விடுசுடர் பரப்பி விளங்குபொற் கழலான் வீமனென் றுளனொருவேந்தன்.

என ஆன்றோர் வியந்துபுகழும் அவ் வேந்தல் இவனைக் கண்ணாகக் கொண்டு எல்லாக் காரியங்களையும் கருதிவந்தான். இவன் அவ னுக்குஆவதை நாள்தோறும் ஆராய்ந்தறிந்து அன்போடு மேவி யிருந்தான். இருக்குங்கால் மன்னன் மகளாகிய தமயந்தி தன் மணமகனைப் பிரிந்து மறைந்திருப்பதை அறிந்துவருமாறு சில

ஒற்றர்களை உய்த்தும் பயனில்லாமையால் இறுதியில் இவனை அனுப்பினான். இவன் பல இடங்களிலும் தேடிப் பின் சேதி நாட்டை யடைந்தான். சுதர்மன் என்னும் வேந்தன் மகளும், அந்நாட்டு மன்னனாகிய சுவாகு என்பவனைப் பெற்றவளும், தனக்குப் பெரியதாயும் ஆன சாருகாசினியால் ஆதரிக்கப்பட்டுத் தமயந்தி அங்குத் தங்கியிருப்பதை இவன் அமைவாக அறிந்து அரிய உபாயங்களால் அரசமாளிகையுட்புகுந்து உறுதியாகத் தெளிந்து அனைவர்க்கும் உண்மையை உணர்த்தி அவ்வுத்தமியைக் கொண்டு வந்து தந்தையிடம் ஒப்புவித்தான்.

> காட்டில் நள்ளிருட் காலையில் காவலன் நீத்த
> தீட்டொணு எழிற் றெரிவையைத் தேடினன் கொணர்ந்த
> மூட்டு முத்தழல் முறைமையின் வளர்த்திடு சுதேவன்
> வேட்ட யாவையும் கொள்கென அளித்தனன் வீமன்.

இன்னணம் அம்மன்னன் பலவுதவிகளையும் செய்து இவனை இன்னுயிர்த்துணைவனுக்கொண்டு உலக நிகழ்ச்சிகளையெல்லாம் இவனால் இதமுற ஆராய்ந்துவந்தான். வினைசெய்வார் சுற்றத்தார் வேண்டாதார் என்ற ஆங்கு அனைவரையும் ஆராய்வது ஒற்று என்னும் உண்மைக்கு இவன் முற்றும் உரித்தாகி அம்மன்னனது அரசமுறைக்கு உறுதுணையாய் நின்றான். விரிவை விதர்ப்பநீயத்தில் காண்க.

அனைவரையும் ஒற்றன் ஆராய்ந்துவரவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

585 உற்ற வுருவோ டுகாதேன் சுகசாரர்
கொற்றமுற்று நின்றார் குமரேசா—முற்றும்
கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டும்
உகாஅமை வல்லதே யொற்று. (ரு)

இ—ள்.

குமரேசா! சுகனும் சாரனும் ஐயுறுதவடிவோடு பொருந்தி அறிந்து ஏன் அஞ்சாது நின்றார் எனின், கடாஅ உருவொடு கண் அஞ்சாது யாண்டும் உகாஅமை வல்லதே ஒற்று என்க.

வினைசெய்வார், சுற்றத்தார், வேண்டாதார் முதலியோரை ஆராயவேண்டிய ஒற்றனுக்குக் கடாவுருவும், கண்ணஞ்சாமையும், உகாமையும் வேண்டுமென்று இஃதுணர்த்துகின்றது.

கடாஅ உருவொடு = ஐயுறாத வடிவோடு.

கடாத என்பது ஈறுகுறைந்து அளபெடுத்து நின்றது. இது, கடுக்கும் என்பதன் எதிர்மறைப் பெயரெச்சம். கடுக்கும் = ஐயுறும். கடுத்தல்—ஒப்பு, ஐயம், வேகம் என்றது சூடாமணி.

கடா எனவும் உகாமை எனவும் நின்றால் செய்யுளோசை குன்றித் தளைதட்டுமாதலால் அதனை நிறைத்து நீக்கற்கு அளபெடைகள் படைக்கப்பட்டன.

உகாஅமை வல்லதே = வெளியிடாமை வல்லவனே. இஃது உகுதல் என்பதன் எதிர்மறைத்தொழிற்பெயர். உகுதல் = சிந்தல், சொரிதல், உமிழ்தல், வெளியிடல்.

கண்ணஞ்சா என்பது நேரசை மூன்றணைந்து தேமாங்காய் என்னும் வாய்பாடு பெற்று வெண்சீராய் நின்றது; அதன்முன் தியாண்டும் எனநிரைபசை நேர்ந்துவந்தது வழுவன்றோ வெனின், அவ் அசையின் முதலிலுள்ள தி என்பது குற்றியலிகரம் ஆதலால் வழுவன்றென்க. ஒற்றெழுத் தியற்றே குற்றியலிகரம் எனவும் தளைசீர்வண்ணம் தாங்கெட வரினே, குறுகிய இகரமும் குற்றிய லுகரமும், அளபெடை ஆவியும் அலகியல் பிலவே எனவும் வரும் இயல்விதிகளை ஈண்டு எண்ணிக்கொள்க.

மேல், அனைவரையும் ஆராய்வானே ஒற்றனவன் என்றார்; அங்ஙனம் ஆராயுங்கால் அவன் சேரவேண்டிய இயல்பினை இதில் தேர வுணர்த்தினார்.

பிறர் ஐயுறாத வடிவோடு அமைந்து சென்று அவர் ஐயுற் றறியலுறின் அஞ்சாது நின்று, தன் உள்ளக்கருத்தை எவ்விடத்தி னும் வெளிப்படுத்தாமல் வரவல்லவனே ஒற்றனாவான் என்பதாம். அல்லாதவன் ஒற்றனகான் என்பதை ஏகாரம உணர்த்தி நின்றது.

புறத்தில் ஐயுறாத வுருவோடு பொருந்தியிருப்பினும் அகத் தில் அச்சமுடையனாயின் அதனால் பயனில்லையாதலால் அஞ்சா

மையும், அஃது அமையினும் அடக்கமில்லாமல் பிறர்க்குரையாடின் உற்றபயன் முற்றும் இழந்து குற்றம் மிகுமாதலால் உகாமையும், ஒற்றனுக்கு இன்றியமையாமல் வேண்டும் என்க.

மனம் வாக்கு காயம் என்னும் மூன்றிலும் ஒற்றன் உரிமை யுற்றிருக்கும் விதத்தை இதில் உய்த்துணர்க.

வேண்டிய உருவங்கொண்டு யாண்டும் புகுந்து யாதும் வழு வாமல் உண்மையை உணர்ந்துவருவோரே ஒற்றாவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுகன் சாரன் என்னும் இவ் விருவர்பாலும் உணரப்படும்.

## கதை

சுகன் சாரன் என்பவர் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர் இலங்கையில் விளங்கியிருந்தவர். அரக்கர் மரபினர். அறிவிலும் ஆற்றலிலும் இருவரும் ஒரு நிகரானவர். இவர் இராவணனுக்கு மிக இனியவராய் நின்று உலகில் நிகழும் உளவு களை யறிந்து வழுவற உரைத்து வந்தவர். வேண்டுருவம் கொண் டெழுந்து யாண்டும் புகுந்து அஞ்சாமல் நின்று எதையும் ஆராய வல்லவர். ஒற்றருக்குரிய திறங்களெல்லாம் முற்றவும் அமைந்து இவர் முதன்மைபெற்றவர். இவரைக் கண்ணாகக்கொண்டு கருது நிலப் பலபொருளும் இராவணன் கண்டுவந்தான். இராமன் கருங் கடல் கடந்து இலங்கையின் மருங்கடைந்து படையோடமர்ந் திருந்தபொழுது உற்றவர்நிலைமையை உணர்ந்துவருமாறு இவரை அவன் உய்த்து விடுத்தான். இவர் வந்தார். யாரும் ஐயுறாத வாறு குரங்குகள்போலவே இவர் உருவம் பொருந்தி அப்பெரும் படையுட் புகுந்தார். செயல்களாலும் மொழிகளாலும் அவர் தம் இயல்புகளை ஆராய்ந்தார். சுக்கிரீவன் அங்கதன் நீலன் குமுதன் முதலிய பெருவீரர்கள் பக்கமும் இவர் சிறிதும் அஞ்சாமற்புகுந்து அவர் பேசுவன யாவையும் ஆசறவுணர்ந்து வேறு பல இடங்களி லும் விரகோடு விரைந்து திரிந்தார். அங்ஙனம் திரிந்துவருங்கால் வீடணன் ஐயுற்று இவரை வஞ்சரென அறிந்துகொண்டான் உடனே வந்து பற்றினன். வஞ்சர் இவரென வானரங்கள்பால் தந்துணர்த்தினன். தம் வலிய கைகளால் நலியப்புடைத்து

கொடிகளால் பிணித்து உற்றதை உரையின் என ஏற்றி வைது அவர் இன்னல் பலவும் செய்தார். என்னசெய்தாலும் உள்ள தோன்றும் உரையாமல் இவர் உரனோடு நின்றார். முடிவில் இராமனிடம் கொண்டுபோய் நிறுத்தி கொற்ற அரக்கன் ஏவிய ஒற்றர் இவர் என வீடணன் குறித்துக் காட்டினான். அக்கமலக்கண்ணன் உறுதிகொள்ளாமல் இவரது குரங்கு வடிவத்தைக் கண்டு இரங்கி நின்றார். 'ஐயகோ! நம்மை வெல்லமுடியாதென்று தெளிந்து நல்லவன்போல் வந்து இப்பொல்லாத அரக்கன் நம் எல்லாரையும் இங்கு வஞ்சமாகக் கொல்லப் புகுந்துள்ளான் ஐயனே!' என்று அழுது புலம்பி, வீடணன்பால் ஐயம் எழும்படி இராமன் முன் அபயமிட்டுக்கொண்டு யாதும் உமிழாமல் இவர் அமர்ந்துநின்றார். இவர்தம் அஞ்சாமையையும் நெஞ்சடக்கத்தையும் வியந்து விபீடணன் பின் வேறொரு வழியாக இவர் மெய்யியல்பை விளக்கிக் காட்டினான். கடாஅ உருவொடு கண் அஞ்சாது யாண்டும் உகாமை வல்லதே ஒற்று என்னும் உண்மைக்கு இவர் உரியவராய் நின்றார். விரிவை இராமாயணத்தில் காண்க.

கூட்டிய விறற் றிண்கையால் குரங்குகள் இரங்கக் குத்தி
மீட்டொரு வினைசெய்யாமல் மாணையின் கொடியால் வீக்கிப்
பூட்டிய கையர் வாயால் குருதியே பொழிகின்றாரைக்
காட்டினன் கள்வரென்னாக் கருணையங் கடலுங் கண்டான்.

பாம்பிழைப் பள்ளி வள்ளல் பகைஞரென் றுணரான் பல்லோர்
நோம்பிழை செய்தார் கொல்லோ! குரங்கென இரங்கி நோக்கித்
தாம்பிழை செய்தா ரேனும் தஞ்சமென் றடைந்தோர் தம்மை
நாம்பிழை செய்யலாமோ நலிந்திடல்; விடுதி யென்றான்.

அனுமப் பொலிந்த வள்ளல் கருணையால் அழுத கண்ணன்
நகனிறை கானில் வைகும் நம்மினத் தவரும் அல்லர்
தகவிறை யில்லா யுள்ளத்து இராவணன் தந்த ஒற்றர்
சுகன் இவன்; அவனும் சாரன்; என்பதூஉந் தெரியச் சொன்னான்.

கல்விக்கண் மிக்கோன் சொல்லக் கருமன நிருதக் கள்வர்
வல்விற்கை வீர, மற்றிவ் வானரர் வலியை நோக்கி
வெல்விக்கை அரிதென் றெண்ணி வினையத்தால் எம்மை யெல்லாம்
கொல்விக்க வந்தான்; மெய்ம்மை; குரங்குநாம் கொள்கஎன்றார்.
(ஒற்றுக் கேள்விப்படலம்.)

ஐயுறுத உருவோடு பொருந்தி இவர் அஞ்சாது நின்றதும், இவரை ஐயுற்றுப் பிடித்து வீடணன் ஐயன்முன் கொண்டுசென்றதும், அம்மெய்யனும் அயிர்த்ததும், பிறர் அல்லல்பலவுஞ் செய்தாலும் தம் உள்ளங்கொண்டவற்றை இவர் உமிழாதிருந்ததும், பிறவும் இவற்றுள் ஒளிர்தல் காண்க.

அஞ்சாமையும் அடக்கமும் ஒற்றர்க்கு எஞ்சாமல் வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

586 அன்றேன் பருணன் அருந்தவன்போல் ஆராய்ந்து
குன்றாமல் சென்றான் குமரேசா—நின்று
துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று. (௬)

இ—ள்.

குமரேசா! எல்லா இடங்களிலும் அருந்தவன்போல் தங்கிப் பருணுதன் ஏன் பண்டு சோர்வின்றி ஆராய்ந்து சென்றான் எனின், துறந்தார் படிவத்தர்ஆகி இறந்து ஆராய்ந்து என்செயினும் சோர்வு இலது ஒற்று என்க.

மேல் ஒற்றருக்கு வல்லது வகுத்தார்; ஈண்டு இல்லது இஃதெனை இசைக்கின்றார்.

படிவத்தர் = விரதஒழுக்கினர். படிவம் = நோன்பு.

இறந்து = மிகுந்து; அஃதாவது புகுதற்கரிய இடங்களிலெல்லாம் துணிந்து புகுந்து என்றவாறு.

வானரவேந்தன் சேனையோடு கலங்கிநின்றபொழுது வேதிய வடிவங்கொண்டு விரகோடு புகுந்து இராகவன் இயல்பினை அனுமான் ஆராய்ந்துவந்ததுபோல் ஒற்றர் நேர்ந்துசென்று தேர்ந்து வரவேண்டும் என்பார்ஆகி ஆய்ந்து சோர்வு இலது ஒற்றுஎன்றார்.

மேல், பிறர் ஐயுறாதவடிவோடு ஒற்றன் அமைந்து செல்லவேண்டும் என்றார்; அவ்வடிவுக்குரிய சில இனங்களை இதில் அறிவித்தருளினார்.

துறவிகள்போலவும், விரத ஒழுக்கினர்போலவும் வேடந்தாங்கிப் புகுதற்கரிய இடங்களிலெல்லாம் புகுந்து ஆராய்ந்து பிறர் ஐயுற்றுப்பிடித்து என்னதுன்பஞ்செய்தாலும் தன்னியல்பினை வெளிப்படுத்தாதவனே ஒற்றனாவான் என்பதாம்.

தவவொழுக்கம் இல்லார் தவவேடத்தை மேற்கொள்ளல் அவமாகுமன்றே! அதனை ஒற்றர் கொள்வது குற்றமாகாதோ எனின், செங்கோல் மன்னர்க்குக் கண்போல்நின்று உண்மைகாணும் கருத்தோடு சேறலின் அவர்க்கு அது குற்றமாகாதென்க.

சிறந்த ஒற்றர்கள் துறந்தவர்போலமைந்து எங்குந்துணிந்து புகுந்து மறைந்திருந்தபொருளை அறிந்துவருவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பருணுகன்பால் உணரப்படும்.

## கதை.

பருணுகன் என்பவன் விதர்ப்பதேசத்திலே குண்டினபுரத்திலேயிருந்த விசாரசருமன் என்னும் ஒரு வேதியனுடைய புதல்வன். இசைநூலிலும் கணிதநூலிலும் இவன் மிகவல்லவன். அடக்கமுள்ளவன். எதையும் எண்ணித்துணியும் நுண்ணுணர்வுடையவன். ஒருவன் சொல்வழியால் அவன் உள்ளநிலையை உணர்ந்துகொள்வதிலும், குறிப்பறிந்து கூறுவதிலும இவன்மிகச் சிறப்புப்பெற்றவன். அரசிழந்து அகன்றுபோன நளனைத்தேடிவருமாறு தமயந்தியின் தந்தையாகிய வீமன் ஒற்றர் சிலரை ஏவினான். அவருள் இவனும் ஒருவனாயமைந்து சென்றான். பிறரெல்லாரும் பயனொன்றுமின்றி மிகநொந்து மீண்டார். இவன்மாத்திரம் தீர்த்தயாத்திரை செய்பவன்போல் சிறந்த தவவேடங்கொண்டு இடங்கள் தோறும்புகுந்து இனிதுற ஆராய்ந்து முடிவில் திருவயோத்தியையடைந்தான். தன் இயல்பின்படி குறிப்பறிந்துபுகுந்து ஒவ்வொருவரையும் கூர்ந்து ஆராய்ந்துவருங்கால் அந்நகர் வேந்தனாகிய இருதுபன்னனது குதிரைச்சாலையையணுகினான். அங்கோர் தனிமனையில் நிறம்கருகி உருமாறித் தனியே உறைந்திருக்கும் ஒருவனைக்கண்டான். அவன் இவனைக்காணவில்லை. அவ்வுருமாற்றம் அவனுக்கு இயற்கை அன்று என ஐயுற்று அவன் கருத்தைக்காணுமாறு இவனொன்று கருதினான். காதலியைக் கானகத்தில்

காரிருளில் நீத்தகன்றேன்; என்னும் இத்தொடர்மொழி அவன் செவியில்படுமாறு மெல்லஇசைத்து இவன் மெதுவாய்நடந்தான். அவன் விரைந்து திரும்பி விழிநீர்ததும்ப விரும்பிநோக்கினான். அந்நோக்கால் அவனை நலன்னனவே இவன் நன்குதுணிந்து மீண்டும் சிலகூறி வேண்டியனதெரிந்து விதர்ப்பதேயம் புகுந்து தமயந்தியிடம் விளங்கவுரைத்தான். துறந்தவன்போல்சென்று விரைந்தறிந்துவந்து யாதும்சோர்வின்றி விளம்பியதைக்கேட்டு அனைவரும் இவனைவியந்து புகழ்ந்தார். துறந்தார் படிவத்தாகி இறந்தாராய்ந்து என்செயினும் சோர்விலது ஒற்றுஎன்னும் உண்மைக்கு இவன் உரியவனாய் நின்றான். விரிவை நைடதத்தில் காண்க.

ஒற்றர் எங்கும்சென்று யாதும் சோர்வின்றி எதையும் ஆராயவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

587 வண்டுருவாய் வந்து மறைந்தறிந்தான் வீடணன்பின்
கொண்டான் தெளிவேன் குமரேசா—அண்டி
மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
யையப்பா டில்லதே யொற்று. (எ)

இ—ள்.

குமரேசா! இந்திரசித்து காந்து செய்த செயல்களை ஒருவரும் அறியாமற்போய் வீடணன் ஏன் ஒளிந்து அறிந்து பின் தெளிந்து வந்தான் எனின், மறைந்தவை கேட்க வற்று ஆகி, அறிந்தவை ஐயப்பாடு இல்லதே ஒற்று என்க.

வற்று ஆகி இல்லதே ஒற்று என அமைத்துக்காண்க.

மறைந்தவை = மறைவாகச் செய்த செயல்களை; இரகசியங்களை என்றபடி. வற்று ஆகி = வல்லவனாகி; இது வன்மை என்பதனடியாகப் பிறந்தது.

அறிந்தவை ஐயப்பாடு இல்லதே = அறிந்த செயல்களில் ஐயமின்றித்துணிய வல்லவனே.

ஒற்றன் அறிந்ததை அவனே ஐயுறவோடு வந்து சொன்னால், அக்காரியத்தில் அரசன் யாதும், துணிந்துசெய்ய இயலாது ஆத

லான் அவன் தெளிந்தே சொல்லவேண்டும் என்பார். 'ஐயப்பாடு இல்லதே ஒற்று' என்றார்.

மேல், யாண்டும் புகுந்து அமைந்ததை ஆராய்ந்தறிந்து யாதும் சோர்வின்றி ஒற்றன் வருதல்வேண்டும் என்றார்; இதில், அவன் அறிந்ததை ஐயமின்றித் துணிந்து சொல்லவேண்டும் என்றார்.

மறைவாகச் செய்த செயல்களை விரகோடு அறியவல்லனாய் அறிந்தவற்றின்கண்ணே ஐயப்பாடு இல்லாதவனாய் உள்ளவனே ஒற்றனாவான் என்பதாம்.

பிறர் மறையின்கட் செவிடாய் இருத்தல்வேண்டும் என்ற அறநூல் விதிக்கு மறைந்தவை கேட்க என்ற இது மாறாகாதோ எனின், அரச நீதிக்கு அங்கமாய் நின்று உற்றதை அறிந்துவரும் இயல்பினனாய ஒற்றனுக்கு உரிமையாமேயன்றி இது வழுவாகா தென்க.

பிறர் மறைந்து செய்த செயல்களைக் காந்துபோய் நின்று அறிந்து தெளிந்துவந்து தன் அரசன்பால் துணிந்துரைப்பவனே சிறந்த ஒற்றன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை வீடணன்பால் உணரப்படும்.

## கதை

இந்திரசித்து சீதையைக் கொன்றுவிட்டதாகவும், திருவயோத்தியிலுள்ள பரதன் முதலானவர்களையெல்லாம் கொல்லப் போவதாகவும் பாவனைகாட்டி ஆகாயமார்க்கமாகச்சென்று இலங்கையின் தென்கீழ்த்திசையில் நிகும்பலை என்னும் இடத்தில் புகுந்து தமக்கு வெற்றியுண்டாகுமாறு ஓர் வேள்வியைச் செய்துகொண்டிருந்தான். இக்கரவினை அறியாமல், அவன் செய்தது மெய்யென்று நம்பி இராமன் முதலாக அனைவரும் கலங்கிநின்று கருத்தழிந்து நொந்தார். அவ்வமையம் வீடணன் ஊக்கமுற்று அவரைநோக்கினான்.

பத்தினி தன்னைத் தீண்டிப் பாதகன் படுத்தபோது
முத்திறத் துலகும் வெந்து சாம்பராய் முடியுமன்றே
அத்திற மானதேனும் அயோத்திமேற் போன தன்மை
சித்திரம் இதனையெல்லாம் தெரிகலாம் சிறிதுபோழ்தின்.

என்று தேற்றி யிருத்திவிட்டு வண்டுருவங்கொண்டு மறைந்து சென்று அசோக வனத்துட் புகுந்து அம்மையிருத்தலைக்கண்டு அகமகிழ்வுகொண்டு விரைவாக மீண்டான். மீளுங்கால் வேள்விக்குரிய பொருள்களை யெடுத்துக்கொண்டு அரக்கர் சிலர் ஒளிந்து நின்று திரள் திரளாக எழுந்து செல்வதைக்கண்டான். காவாக ஏதோ ஒரு காரியம் நிகழ்கின்றது என்று கருதி அவர் பின் தொடர்ந்தான். "மன்னன் மகன் வேள்வியை முடித்துவிட்டால் நமக்கு வெற்றியுண்டாகும்; இல்லையானால் நமக்கு இங்கு இருப்பே இல்லை"; என்று அவர் மொழிந்து போவதை இவன் மறைந்து கேட்டுக்கொண்டே நிகும்பலை புகுந்து இந்திரசித்தன் செய்யும் மந்திரத்தையும், தந்திரத்தையும் கண்டு விரைந்து வந்து இராமனிடம் விளங்கக்கூறினான். அதன் பின் இலக்குவன் சென்று அவ்வேள்வியைச் சிதைத்தான். தன் பகைவன் மறையச் செய்த செயல்களை அரக்கர் வாயிலாகக் கேட்டுப் பின்பு அறிந்ததை ஐயமறத்தெளிந்து வந்து இராமனிடம் இவன் துணிந்து சொன்னதை அனைவரும் வியந்து புகழ்ந்தார். மறைந்தவை கேட்கவற்றாகி அறிந்தவை ஐயப்பாடு இல்லதே ஒற்று என்னும் உண்மைக்கு இவன் உரியவனாகி அன்று உணர்த்தி நின்றான். விரிவை உயுத்த காண்டத்தில் காண்க.

மறைந்ததையறிந்து தெளிந்து சொல்ல வல்லனே சிறந்த ஒற்றனாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

588 தாதியையேன் ஒற்றுத் தமயந்தி மற்றுமுய்த்தாள்
கோதில் நளன்பால் குமரேசா—காதலால்
ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினா லொற்றிக் கொளல்.

குமரேசா! ஒற்றால் உணர்ந்த பின்பும் தமயந்தி ஏன் மற்றும் ஒருத்தியை உண்மையுணர்ந்து வருமாறு நளன்பால் உய்த்துவிட்டாள் எனின், ஒற்று ஒற்றித் தந்த பொருளையும் மற்றும் ஓர் ஒற்றினால் ஒற்றிக்கொளல் என்க.

ஒற்று = ஓர் ஒற்றன். ஒற்றித்தந்த = அறிந்துவந்து அறிவித்த. பொருளையும் = காரியத்தையும். உம்மை தாராதபொருளையும் என எதிரதுதழீஇயதோடு சிறப்பும் தோன்றநின்றது.

மேல், ஒற்றன் மறைந்ததை அறியவும், அறிந்ததைத் தன் அரசன்பால் துணிந்துசொல்லவும் வல்லனாதல் வேண்டும் என்றார்; இதில், ஓர் ஒற்றன் அறிந்துவந்து சொன்னதை மற்றும் ஓர் ஒற்றனை உய்த்து அரசன் ஒப்புமை உணரவேண்டும் என்கின்றார்.

முதலில் ஓர் ஒற்றன் அறிந்துவந்து அறிவித்த காரியந்தனையும் பின்னும் ஓர் ஒற்றனை உய்த்து ஒற்றுவித்து உண்மையையுணர்ந்துகொள்க என்பதாம்.

மாற்றாரோடு மருவியோ, வேறுவகையில் மனநிலைதிரிந்தோ, ஓர் ஒற்றன் தன்நிலை மாறவும் கூடுமாதலால் அவன்சொல்லை நம்பி உடனே அரசன் காரியத்தில் இறங்கிவிடாமல் பின்னரும் ஒருவனை அனுப்பி அதனைத் தீரத்தெளிந்துகொள்ளவேண்டும் என்பது கருத்து.

ஒற்றரைத் தூண்டி யன்னோர் உறுவலி யுணர்வரேனும்
மற்றும் ஓர் ஒற்றினல்லால் அன்னது மனத்துட்கொள்ளா
சுற்றமும் அனிகமன்றி ஒருபுடை துவன்றிச்சூழும்
பெற்றியும் உளதோ? என்னவேயொரீஇத் தேர்வர் பின்னும். என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

தன் ஒற்றன்போய் ஒருபொருளை அறிந்துவந்து சொன்னாலும் அறிவுடையார் மறுபடியும் ஒருவனைஏவி அதனைத் தீரத்தெளிந்துகொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தமயந்திபால் உணரப்படும்.

## கதை

தமயந்தி என்பவள் விதர்ப்பதேயத்து வேந்தனாகிய வீமனுடைய அருமைத் திருமகள். பேரழகுடையவள். அறிவும் நிறையும் அமையப்பெற்றவள். ஒழுகொளிவிரிந்த கதிர்மணி வண்ணன் உந்தியந்தாமரை யுறைவோன்—முழுமதிக்கலையுள்

நிறைந்தபேரழகை மொண்டுகொண் டரிபாந்தகன்ற,—மழைமதர் நெடுங்கட் டமயந்திவதனம் வகுத்தனன்; எனவும், நாற்குணமும் நாற்படையா ஐம்புலனும் நல்அமைச்சா—ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா—வேற்படையும், வாளுமேகண்ணு வதனமதிக்குடைக்கீழ்—ஆளுமே பெண்மை அரசு; எனவும் புலவர்களால் இவள் போற்றநின்றவள். தனது உயிர்த்துணைவனாகிய நளன், தன்னை வனத்தில்விட்டுப்பிரிந்துபோனபின் வருந்திவந்து தந்தை இடமடைந்து இவள் இருந்துகொண்டு, அவன் இருப்பை அறிந்துவருமாறு ஒற்றர் சிலரைத்தெரிந்து விடுத்தாள். பின்பு தேர்ந்த உபாயத்தால் திருவயோத்தியிலிருந்து தன் திருநகரை அவன் வந்து சேருமபடி செய்தாள். முன்னருணர்த்திய ஒற்றனது உரையின் உண்மையை ஒற்றிநின்று உணர்ந்துவருமாறு கேசினி என்னும் தோழியொருத்தியைப் பின்னரும்விரகோடு இவள்பேணி விடுத்தாள். அவள்சென்று அவனதுசெயலையும் இயலையும் தேர்ந்து வந்து "உருவொன்றுதவிர உரை நடை முதலியனயாவும் நம் இறைவனுடையனபோலவே உள்ளன" என உருகிமொழிந்தாள். அதன்பின் சிறிது அரிசியைஉதவி அழல்இல்லாமல் அதனை உணவாக்கித்தருமாறு செய்தும், மக்களைவிடுத்து அவன்மனநிலையைத் தெரிந்தும், உறுதியாகத் தன் நாயகனே என்று இறுதியில்தெளிந்து தந்தைபால்மொழிந்து அவனைத்தன்பாலடையச்செய்து பின் புஇன்புற்றிருந்தாள். ஒற்று ஒற்றித்தந்தபொருளையும் மற்றும் ஓர் ஒற்றினால் ஒற்றிக்கொளல்வேண்டும் என்னும் அரசகுணமாட்சி இவள்பால் அமைந்திருந்தமையைக்கண்டு அனைவரும் அன்று வியந்துகொண்டார்.

ஓர் ஒற்றன் உணர்த்தியதை மற்றும் ஒருவனால் அரசன் உய்த்துணர்ந்து கொள்ளவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

589 தேருச் சுயோதனனும் தேறினன் ஒற்றியைந்து
கூறியபின் என்னே குமரேசா—வேறாக
ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும். (௯)

இ—ள்.

குமரேசா! சென்றிருந்த ஒற்றர் தனித்தனியே வந்து சொன்னபின் துரியோதனன் என் அன்று நன்று என்று தெளிந் தான் எனின், ஒற்று ஒற்று உணராமை ஆள்க; உடன் மூவர் சொல் தொக்க தேறப்படும் என்க.

ஒற்றுஒற்று உணராமைஆள்க = ஒரு ஒற்றனை மற்றொரு ஒற்றன் அறியாவகை ஆள்க.

மூவர்சொல்தொக்க தேறப்படும் = மூன்றுஒற்றர்சொல் ஒத் தனவாயின் தெளியப்படும். தொகுதல் = ஒன்றுகூடல், ஒத் திருத்தல்.

மேல், ஓர் ஒற்றன் அறிந்துவந்ததையும் மற்றோர் ஒற்றனை விட்டு ஒப்புமைகாண்க என்றார்; இதில், மூன்று ஒற்றர் சொல் ஒருபொருளில் ஒத்தனவாயின் அதனை மெய்யென்று தெளிய லாம் என்கின்றார்.

ஒற்றர் தங்களை ஒற்றரின் ஆய்தலும்
கற்ற மாந்தரைக் கண் எனக் கோடலும்
சுற்றம் சூழ்ந்து பெருக்கலும் சூதரோ
கொற்றங்கொள்குறிக் கொற்றவற் கென்பவே. என்றசிந்தா

மணியும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

ஒருவனையொருவன் அறியாவகை ஒற்றரை ஆள்க; வேறு வேறுவிட்ட ஒற்றர் மூவரதுசொல்லும் பயனொத்தனவாயின் உட னே தெளியப்படும் என்பதாம்.

மூவரேயாயினும் நால்வரேயாயினும் பயன் ஒத்திராவிடின் அக்காரியத்தைத் தேறலாகாது என்பது கருத்து.

ஒற்றர் பலரால் ஒருகாரியம் ஒருபடியாக உரைக்கப்படுமாயி ன் அதனை உண்மையென்று ஒருவன் தெளிந்துகொள்ளலாம் என் பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துரியோதனன் பால் உணரப்படும்.

## கதை

பாண்டவர் உருவங்கரந்து ஒருவரும் அறியாமல் உறைந்திருப்பதை அறிந்துவிடவேண்டுமென்று துரியோதனன் ஒற்றர் பலரை விடுத்தான். அவர் எங்குந்தேடியலைந்து முடிவில் இல்லையென்று வந்தார்.

ஈராறு மொன்றுஞ் சரார்க்குள்ள நாள்சென்ற இனிநம்முடன்
பாராள வருமுன்னர் அடலைவர் உறைநாடு பார்மின்கள் என்று
ஓராயிரங்கோடி ஒற்றர் விடுத்தான் அவ்வொற்றர்களும்
வாராழி சூழெல்லை யுறவோடி விரைவின்கண் வந்தார்களே.

காடென்று மலையென்று நதியென்று கடலென்று கடலாடைசூழ்
நாடென்று நகரென்று நாடாததிசையில்லை நாடோறும்யாம்
தோடென்று தாதென்று தெரியாது மதுமாரி சொரிமாலையாய்
நீடென்று வலமேவும் அவனிக்குள் அவரில்லை நின்னாணையே.

என்று தம்மாலானதை அவர் நிகழ்த்திச்சென்றார். ஐவர் உறையும் நாடு மழையும் விளைவும் மலிந்து நிலவும்; போய்அறிந்து வம்மின் என்று விரகோடு பின்னுஞ்சிலரை இவன்விரைந்து விடுத்தான். அவருள் ஒருவன் மச்சநாட்டில்புகுந்து விராடநகரத்தில் அவர் இருப்பதாக உற்றறிந்துவந்து உள்ளதையுணர்த்தினான். அதன்பின்னரும் ஒருவரையொருவரறியாமல் இருமுறை ஒற்றர் இருவரை வேறுவேறுவிட்டான். அம்முத்திறத்தாரும் ஒற்றிவந்துரைத்தன பயனால் ஒத்திருந்தன; ஆதலால், அது மெய்யென்று இவன் மேவித்தெளிந்தான். கொடுமையாளனாயிருந்தும், ஒற்று ஒற்று உணராமையாள்க; உடன் மூவர் சொல்தொக்கதேறப்படும், என்னும் இவ்வேந்துரிமையில் இவன் தேர்ந்து நின்றான்.

ஒருவரையொருவர் அறியாவகை ஒற்றரை அரசன் விரகோடு ஆளவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

590 ஒற்றிவந்த ஒற்றருக்கேன் ஓர்சிறப்பும் செய்யவில்லை
கொற்றநெடுஞ் சேரன் குமரேசா—உற்ற
சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை. (ய)

இ-ள்

குமரேசா! நெடுஞ்சேரலாதன் என்பவன் தன் ஒற்றருக்கு ஏன் பிறர் அறியுமாறு சிறப்புச்செய்யவில்லை எனின், ஒற்றின்கண் சிறப்பு அறியச் செய்யற்க; செய்யின், மறை புறப்படுத்தான் ஆகும் என்க.

ஒற்றர்திறனும், அவரை அரசன் கொண்டாளும்விதமும், அரசஅங்கத்தில் அவர்க்குள்ள தனிஉரிமையும், இதுவரைகூறிவந்து கண்போல் அமைந்துநின்று தனக்கு உதவிசெய்துவரும் அவர்க்கு அரசன் செய்யவேண்டிய உதவியின் சீர்மையை இறுதியாக உறுதிபெற இதில் உணர்த்துகின்றார்.

ஒற்றின்கண் = ஒற்றரிடத்து. சிறப்பு = சிறப்பினை. அஃதாவது பொன்னுடைதருதல், இன்அணிபுனைதல், உவந்து புகழ்தல், உயர்பதம் உதவல், முதலிய உபசாரங்களை. இவை சன்மானம் எனப்படும்.

மறை = இரகசியம்; அந்தரங்கமான இராசகாரியங்கள் என்றவாறு.

மேல், ஒருவரையொருவர் உணராவகை ஒற்றரை அரசன் ஆளவேண்டும் என்றார்; இதில், அவர்க்குச்செய்யும் சிறப்பினையாரும் அறியாதபடி அடக்கமாகச் செய்யவேண்டும் என்கின்றார்.

வெளிப்படையாகச்செய்யின், இவன் யாவன்? மன்னன் இவன்பால் இது செய்தற்குக்காரணம் என்னை? எனக் கண்டவர் வினவுவர்; அதனால் அவனது உட்காரியம் வெளிப்பட்டுவிடும் ஆதலால் "செய்யின் மறை புறப்படுத்தான் ஆகும்" என்றார்.

ஒற்றரிடத்துச் செய்யத்தக்க சிறப்பினை அரசன் பிறரறியுமாறு செய்யலாகாது; செய்தானுபின், அடக்கமாகவுள்ள மறைப்பொருளைத் தானகவே வெளிப்படுத்தினவனுவான் என்பதாம்.

ஒற்றரை வைத்து ஆளும் உபாயமும் அவர் சொற்களைத் தேறும் திறமும், அவர்க்குச் சிறப்புச்செய்யும் விதமும் மேலதனேடிணைத்து இதில் உணர்த்தப்பட்டுள்ளமையை ஊன்றி உணர்க.

ஒருவரொருவர் தமையறியாது ஒருமை வினைக்கண் மூவர்தமை
மருவ விடுக்க; மூவர்களும் வந்துமொழிவ தொத்துவிடின்
கருமமதனை மிகத்தெளிக; கருமமறைப்ப வேண்டுதியேல்,
பொருவி லவர்தம் பாற்சிறப்புப் புறந்தோன்றுமற் செய்திடுக.

என்றதும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

உளவறிந்துசொல்லும் ஒற்றருக்கு உலகறியுமாறுசெய்யாமல் அடக்கமாகவைத்தே சிறப்புச்செய்யவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நெடுஞ்சேரலாதன் பால் உணரப்படும்.

## கதை

நெடுஞ்சேரலாதன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் மகோதை என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த உதியன் என்னும் சேரமன்னனுடைய புதல்வன். பல்யானைச்செல்கெழுகுட்டுவன் என்பவனுக்கு இவன் முன் பிறந்தவன். இவன் மிக்கநுண்மதியாளன். தன் முன்னோராகிய சேரமன்னர் சிறப்புமுழுவதும் தன்பால் இவன் சேர நின்றவன். சிறந்த போர் வீரன். சதமுகன் சதாயு என்னும் ஒற்றர் இருவரைத் துணையாக்கொண்டு உலக நிகழ்ச்சிகளை நாளும் உற்றறிந்து தன் வேந்தியலை எங்கும் விளங்கச்செய்து, பின்பு வடநாடு புகுந்து அங்குள்ள அரசர்பலரையும் வென்று இமயமலையையணுகி அதுவரையும் தனக்குரிமையெனக்கருதி அதற்கு அறிகுறியாக அம்மலைமேல் தன் புலிக்கொடியைப் பொறித்துப்புகழுடன் மீண்டான். அதனால் இமயவரம்பன் **நெடுஞ்சேரலாதன்** என இவன் இசைபெற்று நின்றான்.

மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு
வெளியன் வேண்மாண் நல்லினி யீன்றமகன்
அமைவர லருவி இமையம் விற்பொறித்து
இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்
தன்கோல் நிறீஇத் தகைசால் சிறப்பொடு
பேரிசை மரபின் ஆரியர் வணக்கி

நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்த்தலைப் பெய்து கைபிற் கொளீஇ
அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறல் மூதூர்த் தந்துபிறர்க் குதவி
அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்றாள்
இமையவரம்ப னெடுஞ்சேரலாதன். எனப் பதிற்றுப்பத்தின் இரண்டாம்பத்தில் இவன் துதிக்கப்பெற்றுள்ளான். அப் பத்தைப்பாடிய குமட்டூர்க் கண்ணனார் என்னும் புலவர் பெருமானுக்கு ஐந்நூறு ஊர்கள் பரிசிலாகத்தந்து முப்பத்தெட்டு ஆண்டுகளாகத் தென்னாட்டில் வருவதில்பாகமும் இம்மன்னன்கொடுத்தான். கொடைக்கடன் அமர்ந்த கோடாநெஞ்சினன்—மன்னுயிரழிய யாண்டுபல மாறித்—தண்ணியல் எழிலி தலையாதாயினும்—வயிறுபசிகூர ஈயலன்—வயிறு மாசிலீயரவன் ஈன்ற தாயே; எனச் சான்றோர் பலரும்போற்ற ஆன்றநலன்களோடு இவன் அமர்ந்திருந்தான். அங்ஙனம் இருந்துவருங்கால் இவனது பெருமையை நினைந்து பொறாமையால் குறுநிலமன்னர் எழுவர் ஒருங்குசேர்ந்து இவன்மேல் பகைமையைவிளைத்தார். அவர் நிலைமையை ஒற்றரால் ஓர்ந்து ஓரமையம் அவரனைவரையும் இவன் ஒருசேரவென்றான். அப்பகைவரை வெல்லும்வரையும் தன் ஒற்றரென அவரை எவரும் அறியாவகை இவன் விரகுசெய்துவந்தான். இவன் செய்த உதவிகளைப் பயன்முற்றியபின்னரே அவ் ஒற்றரும் உணர்ந்து உவகைமீக்கூர்ந்தார். ஒற்றின்கண் சிறப்பு அறியச்செய்யற்க; என்னும் பொய்யாமொழிக்கு இவனோர் பொருளாய் நின்றான். விரிவைச் சேரர்குலமுறையில் காண்க.

மற்றவர் அறியுமாறு ஒற்றனுக்குச் சிறப்புச்செய்யலாகாது என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

ஒற்றரை அரசன் கண்ணாகக் கருதிக்கொள்ளவேண்டும். அவரைக்கொண்டு உலகநிகழ்ச்சிகளை யெல்லாம் விரைந்து அறிந்துகொள்ளுதல் அவனுக்குச் சிறந்தகடமையாம். ஒற்றர் இல்லை

டாயின் மன்னனுக்கு வெற்றியில்லை. வினைசெய்வார் சுற்றத்தார் பகைவர்முதலிய அனைவரையும் அவர் ஆராய்தல்வேண்டும். பிறர் ஐயுறுதவாறு அமைந்தவுருவமும் அஞ்சாமையும் அடக்கமும் அவருடைத்தாதல் வேண்டும். துறந்தவர் முதலாகச் சிறந்தவர்போன்று அமைந்து சென்று எங்கும்புகுந்து எதையும் ஆராய்ந்து யாதும்சோர்வின்றி அவர் வருதல்வேண்டும். பிறர் மறைவாகச்செய்தசெயல்களை விரகோடு அறிந்துவந்து துணிந்துசொல்லவேண்டும். ஓர் ஒற்றனல் அறிந்தகாரியத்தை அரசன் மற்றொரு ஒற்றனல் தெளிந்துகொள்ளவேண்டும். அங்ஙனங் கொள்ளுங்கால் தன் ஒற்றருள் ஒருவரையொருவர் உணராவாறு அரசன் சதுரோடு ஆளவேண்டும். உளவறிந்துகூறும் ஒற்றனுக்குப் பிறரறிந்துகொள்ளுமாறு செய்யாமல் அடக்கமாகவைத்தே அரசன் சிறப்புச்செய்யவேண்டும்.

ருசுவது ஒற்றுடல் முற்றிற்று.

---

# 60-ம் அதிகாரம் ஊக்கமுடைமை.

அஃதாவது தம் கருமநிகழ்ச்சியில் தளர்ச்சியின்றி மக்கள் மனக் கிளர்ச்சியுடையராதல். ஒற்றரால் ஒற்றியறிந்து வினைசெய்யப்புகும் அரசர்க்கு இவ்வுடைமை முதன்மையாக இருக்கவேண்டுமாதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

---

591 நன்றும் பொருளினுமேன் நார்முடியான் ஊக்கத்தைக்
குன்றுமல் கொண்டான் குமரேசா—என்றும்
உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லார்
உடைய துடையரோ மற்று. (க)

இ—ள்.

குமரேசா! நார்முடிச்சேரலன் என்பவன் ஊக்கத்தை ஏன் தனக்குச் சிறந்த உடைமையாகக் கொண்டிருந்தான் எனின்; உடையர் எனப்படுவது ஊக்கம்; அஃது இல்லார் மற்ற உடையது உடையரோ? என்க.

இல்லார் உடையரோ? என இயைத்துக் காண்க. ஓகாரம் எதிர்மறை.

உடையது என்றது பொருளை; ஒருவன் உடைமையாகக் கொண்டுள்ளது என்றபடி. மற்று=வேறு, பிறிது. பொருளுடையவரையே உடையர் என உலகம் உரைக்கின்றது ஆதலால் அவ்வுடைமையினும் ஊக்கம் எவ்வாறு உயர்வுடைமையாம் என ஒருவன் உன்ன அவனைநோக்கி இஃது உணர்த்தியதாகக் காண்க.

உடையரோ? என வினவுகையில் உரைத்தார் அதற்கு விடைகூறப்புகுந்து விதந்து ஆராயுங்கால் ஊக்கத்தின் உண்மையான உயர்வுடைமை தானுகவே உணரத்தகும் என்பது கருதி.

உடையர்என்று ஒருவரைச் சிறப்பித்துச் சொல்லத்தக்கது ஊக்கமேயாம்; அவ்வூக்கம் இல்லாதார் வேறு பொருளுடையாராயினும் உடையாரவரோ? ஆகார் என்பதாம்.

செல்வம் இலராயினும் ஊக்கம் உடையாராயின் அவரே உடையர் எனும் பதத்திற்கு உரியராவர்; அஃது இல்லாதவர் எவ்வளவு செல்வங்களை யுடையாராயினும் அவர் உடையர் என உரைத்தற்கு உரியராகார் என்பது இதன் கருத்தாம் என்க.

உடைமைகள் என்று சொல்லப்படுகின்ற எல்லாப்பொருள்களையும் அடைதற்கு ஊக்கமே காரணமாகுமாதலால் அதனை யுடையவரை உடையர் என்றும்; எல்லா வுடைமைகளையும் இயல்பாகவே எய்தியிருப்பினும் கோழைகள் தம்கோழைத்தனத்தால் அவற்றை இழந்துவிட நேரும் ஆதலால் அஃது இல்லார் உடையர் என நில்லார் என்றும் உணர்த்தியருளினர். ஊக்கமுடைமையின் உயரிய உண்மையை இதில் ஊன்றியுணர்க.

ஊக்கமுடையவரே எல்லாச்செல்வங்களையும் உடையராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நார்முடிச் சேரலன்பால் உணரப்படும்.

## கதை

நார்முடிச்சேரலன் என்பவன் வஞ்சிமாநகரிலிருந்து அரசு புரிந்த சேரமன்னன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தெ

மூநூறு ஆண்டுகட்கு முன்னராம். இவன் அருங்கலைவிநோதன். பெருங்கொடையாளி. எண்ணிய எதையும் எண்ணியாங்குமுடிக்கும் திண்ணியன். புண்ணியங்கள் பல பொருந்தச்செய்தவன். தன் அரசினையெய்தற்குரிய பருவத்தையடைந்து இவன் முடிசூடப்புகுங்கால் பகைமைமிக்கதாயத்தார் சிலர் அம்மணிமுடியைக்கரவாகக் கவர்ந்துகொண்டு போயினர். முடிபுனைதற்குரிய நல்லகாலம் தவறுகின்றதேயென அனைவரும் அல்லலுற்றனர். அவ்வமையம் இவன் மிகஊக்கத்தோடெழுந்து அங்குக்கிடந்த களங்காய்களைக் கண்ணியாகத் தொடுத்தணிந்து, நாரால் முடிசெய்து புனைந்துகொண்டான். சிதைவிடத்தில் ஒல்காமல் நின்று செய்த இவனது திண்மையையும் ஒண்மையையும் அனைவரும் உணர்ந்து மகிழ்ந்தார். அன்று முதல் களங்காய்க்கண்ணி நார் முடிச்சேரலன் என்று இவன் பெயர்பெற்று நின்றான். இவன் காலத்தில் மிகக்கொடியவனாய் நின்று குறும்புசெய்துகொண்டிருந்த நன்னன் என்னும் மன்னனை மையவென்று அவனது வெற்றிப்பாட்டினையும் மேன்மையையும் பற்றறத்தொலைத்தான். தமிழ்நாடு முதலிய பல நாடுகளையும் தன்னடிப்படுத்தி இவன் தனியரசுசெய்தான். ஆக்கமுடையாரெவரும் இவனது ஊக்கமுடைமையை நோக்கி இவன்பால் ஒடுங்கியிருந்தனர்.

உலகத்தோரே பலர்மற் செல்வர்
எல்லாருள்ளும் நின் நல்லிசை மிகுமே
வாழ்கநின் வளனே நின்னுடை வாழ்க்கை
வாய்மொழி வாயர் நின்புகழ் ஏத்தப்
பகைவ ராரப் பழங்கண் அருளி
நகைவர் ஆர நன்கலஞ் சிதறி
ஆன்றவிந் தடங்கிய செயிர்தீர் செம்மால்
வான்றோய் நல்லிசை யுலகமொ டுயிர்ப்பத்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியு
மாயிரும் புடையன் மாக்கழல் புனைந்து
மன்னெயில் எறிந்து மறவர்த் தரீஇத்
தொன்னிலைச் சிறப்பின் நின்னிழல் வாழ்நர்க்குக்
கோடற வைத்த கோடாக் கொள்கையும்

நன்றுபெரி துடைமையால் நீயே
வெந்திறல் வேந்தேஇவ் வுலகத் தோர்க்கே. என்று

காரியாற்றுக்காப்பியனார் என்னும் புலவர்பெருமானார் பதிற்றுப் பத்தில் இவனது குணநலங்களை வியந்துபாடியுள்ளார். தன் மீது பாடிய பத்துப்பாடலுக்காக அப்புலவருக்கு நாற்பது நூறாயிரம் பொன்னும், பூழி நாட்டில் பாதியும், இவன் போற்றிக்கொடுத்தான். இவனது உள்ளத்திறனையும் வள்ளற்குணத்தையும் அனைவரும் உள்ளியுள்ளி யுவந்தார். உரியகாலத்தில் புனைதற்குரிய முடியில்லாதிருந்தும் ஊக்கமிகுதியால் நாரால் ஓர் முடியமைத்தணிந்து யாராலும் வெல்லமுடியாதவாறு உயர்ந்து விளங்கினான். பொருள் படைகளை மிகஉடையாராயிருந்த நன்னன் முதலிய மன்னர் பலரினும் ஊக்கமுடைமையால் இவன் முன்னவனாய் நின்றான். ஊக்கம் உடையவரே உடையர் எனப்படுவார்; அஃது இல்லாதவர் வேறு எதனையுடையாராயினும் உடையராகார் என்னும் உண்மையை இவன் உணர்த்தி நின்றான். விரிவைச் சேரர்குலமுறையில் காண்க.

ஊக்கமுடையவரே எல்லாச் செல்வங்களையும் உடையராவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

*592 மண்டுபொருள் இன்றிநின்றும் மங்கைமன்னன் ஊக்கமொன்றே
கொண்டுயர்ந்தான் என்னே குமரேசா—தண்டாத
உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். (உ)

இ—ள்

குமரேசா! தம் உள்ளமுடைமையால் திருமங்கை மன்னன் ஏன் எல்லாரினும் உயர்ந்து விளங்கினான் எனின், உள்ள முடைமை உடைமை; பொருளுடைமை நில்லாது நீங்கி விடும் என்க.

உள்ளமுடைமை உடைமை = ஊக்கமுடைமையே நிலைபெற்றஉடைமை. உள்ளம் என்றது ஊக்கத்தை; உள்ளத்தின் குணமாதலால் அஃதிங்ஙனம் ஓதநின்றது. உடைமை என்றது செல்

வத்தை. பொருளுடைமை நில்லாது நீங்கிவிடும் என்றதனால் உள்ளமுடைமை நீங்காமல் என்றும் நிலைத்து நிற்கும் என்பதாயிற்று.

மேல், ஊக்கமுள்ளவரே உடையர் என்றற்கு உரியராவர் என்றார்; அவ்வுடைமையின் உறுதியான நிலையினை இதில் உணர்த்தியருளினார்.

ஊக்கமுடைமையே ஒருவனுக்கு நிலைபெற்ற உடைமையாம், எனைச் செல்வமுடைமை நிலைநில்லாது நீங்கிப்போம் என்பதாம்.

உடைமை என்பது பொருள் அன்றோ? ஊக்கம் எங்ஙனம் உடைமையாம் என்பாரை நோக்கி இஃதுணர்த்தியதாகக்காண்க.

உண்மையான உடைமை இதுவே என உறுதிபெற அடிகள் உணர்த்திய உண்மையை இதில் ஊன்றி யுணர்க.

தன்னைக்கொண்டவர்களை உலகில் விளக்கிச் சிறப்பிப்பதில் ஊக்கமும் பொருளும் ஒருநிகரான உடைமைகளேயாயினும் முன்னது உயிர்க்குணமாய் உள்ளுறைந்திருக்கும்; பின்னது புறப் பொருளாய் வெளியமைந்து நிற்கும்; ஆதலால், அது நிலைத்து விளங்கும் எனவும், பொருள்நில்லாது நீங்கும் எனவும் உணர்த்தி யருளினார்.

ஊக்கமுடையவன் என்றுங்குன்றாமல் நின்று எல்லாநலங் களையும் அடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை திருமங்கை மன்னன்பால் உணரப்படும்.

## கதை

திருமங்கை மன்னன் என்பவர் சோழமண்டலத்திலே திரு வாலி நாட்டிலுள்ள குறையல் என்னும் ஊரிலே ஆலிமன் என்ப வர்க்குப் புதல்வராய்ப் பிறந்தார். இவர் மறவருள் ஒருவகைப் பிரிவினராய கள்ளர் மரபினர். நல்ல போர்வீரர். இவரது காலம் இற்றைக்கு ஆயிரத்திருநூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னராம். நாலாயிரமாண்டுகட்கு முன்னரெனவுங் கூறுவர். இவர் எண்ணி யதை எண்ணியாங்குமுடிக்கும் இயல்பினையுடையவர். குமுத வல்லி என்னும் தமது அருமை மனைவியோடு இவர் அமர்ந்து வாழ்ந்தார். இவரது மனத்திட்பத்தையும் வினைத்திறத்தையும்

வியந்து அந்நாட்டு மன்னனாகிய சோழன் தன்தானைக்குத் தலைவனாக இவரைத் தழுவிக்கொண்டான். இவரும் சேனாதிபதியாய் நின்று பல போர்முனைகளிலும் சென்று வென்றுவந்தார். இவரது ஊக்கமுடைமையையும் உண்மை வண்மைகளையும் மகிழ்ந்து ஒரு பெருநிலப்பகுதியை அம்மன்னன் இவருக்கு உரிமையாகவேதந்து தனக்கு இறைசெலுத்திவரும்படி இசைந்துவிடுத்தான். அதன் பின் இவர் குறுநிலமன்னராய்ப் பெரும்புகழோடு வாழ்ந்தார். வாழ்ந்துவருங்கால் மாலடிக்கே மனங்குழைந்தவராய் அவரடியவர்கட்கு உணவும் உடையும் மனமகிழ்வோடு தினமும் உதவிவந்தார். அதனால் தமது பொருள்முழுதும் குறைந்தது. தனக்குச் செலுத்தவேண்டிய இறைப்பொருளைச் செலுத்தவில்லையே என்று அரசன் இவரை வருத்தி வருத்தினான். இவரும் வருந்தி முயன்று பெருமானருளால் அவ் இறைக்கடனை இறுத்துவிட்டுப் பின்னர் எங்குஞ்சென்று பொருள்களைக் கவர்ந்துகொண்டுவந்து தாம்கருதிய அறங்களைச்செய்தார். இவர், ஆடல்மா என்னும் குதிரைமேலிவர்ந்து நீர்மேல் நடப்பான், நிழலில் ஒதுங்குவான், தாளூதுவான், சாயைபிடிப்பான், தோலாவழக்கன் என்னும் ஐவரைத்துணைவராக்கொண்டு தம் கொள்ளைச்செயலைக் குறைவறநடத்தி அதனால் எய்தியபொருளால் திருவரங்கத்தில் திருமதிலைக்கட்டினார். அக்காலத்தில் நாகபட்டினத்திலிருந்த பௌத்தாலயத்தில் சிறந்த பொன்னால் புத்தனைப்போல் ஓர் உருவஞ்செய்து நிறுவப்பெற்றிருந்தது. சூடாமணி பதுமமங்கலம் என்னும் அவ் ஆலயத்துள் எவரும்புகாதபடி குறுக்கிக்கட்டியவாயிலில் இடையே ஒரு சக்கரப்பொறி மிக்கவுறுதியோடு மேவிநின்றது. இவர் அங்குச்சென்று வாழைத்தண்டுகளை ஒன்றன்பின் ஒன்றாகக்கொடுத்து சுழன்று கொண்டிருக்கும் அதன் வேகத்தைத்தடுத்து அகற்றி உள்ளே புகுந்து அப் பொற்பதுமையை யெடுத்துக்கொண்டு திருவரங்கத்தையடைந்து பெருமானுக்கு உரிய பணிகளைச்செய்தார். இவரது உள்ளப்பெருமையை மகிழ்ந்து திருமால் இவர்க்கு மயர்வற்றமதிநலத்தையருளினர். அதன்பின் இவர் சிறந்த ஞானியாய்த்திகழ்ந்து பல அரிய பாடல்களால் அப்பெருமானை யேத்தித்துதித்தார். இவரது பாடல்கள் செறிவும் தெளிவும் இனிமையும் உடையன.

அவை பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், எழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரிய திருமடல், என ஆறு கூறுக அமைக்கப்பட்டுள்ளன. நீலன், பரகாலன், நாலு கவிப்பெருமான், கலியன், ஆலிநாடன், திருமங்கையாழ்வார் என்பன இவர்க்குத் திருநாமங்களாம். பொருளுடைமை நில்லாது நீங்கியும் தம் உள்ளமுடைமையால் எல்லா நலங்களையுமடைந்து எவரினும் சிறந்து விளங்கி ஊக்கமுடைமையே மக்கட்கு உயிருடைமை என்பதை இவர் உணர்த்தி நின்றார். விரிவை ஆழ்வார் சரிதையில் காண்க.

ஊக்கமே ஒருவனுக்கு அழிவில்லாத உயருடைமை என்பது இதனால் கூறப்பட்டது.

---

593 ஆக்கம் இழந்தும்போய் ஆரியனேன் சோர்தலின்றிக்
கோக்குலச்சீர் கொண்டான் குமரேசா—நோக்கின்று
ஆக்கம் இழந்தேமென் றல்லாவா ருக்கம்
ஒருவந்தங் கைத்துடை யார். (ங)

இ—ள்.

குமரேசா! ஆக்கத்தை இழந்தும் ஏன் கலங்காமல் சென்று ஆரியன் அரசதிருவை அடைந்தான் எனின், ஊக்கம் ஒருவந்தம் கைத்துடையார், ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார் என்க.

உடையார் அல்லாவார் என உய்த்துக் காண்க. அல்லாவார் = கலங்கார்; இது அல்லாப்பர் என்பதன் எதிர்மறைமுற்று. அல்லாத்தல் = கலங்கல், வருந்தல். ஒருவந்தம் = உறுதி, நிலைபெறு.

கைத்து = கையகத்தது; கைப்பொருள் என்றவாறு. இது குறிப்புவினையாலணையும் பெயர்.

மேல், ஆக்கத்தினும் ஊக்கமே ஒருவனுக்குச் சிறந்தது என்றார்; இதில் அதனை உறுதியாக உடையவர் இயல்பினை உணர்த்துகின்றார்.

ஊக்கமுடையார் பொருள்களை ஆக்கவல்லவராதலால் அதன் இழப்பை நினைந்து கலங்கார் என்க.

ஊக்கத்தை உறுதிபெற்ற கைப்பொருளாகவுடையவர் செல்வம் ஒழிந்துபோனாலும் அதனை இழந்துவிட்டேம் என்று தம் மனங்கலங்கார் என்பதாம்.

ஆக்கத்தின் சிதைவு எவர்க்கும் அலமாலைத் தருவதாயினும் ஊக்கமுடையாரை அஃது ஒன்றுஞ்செய்யாது என்பது குறிப்பு.

அழியாவுடைமையாகிய ஊக்கத்தை உடையவர் அழியும் பொருள்களின் அழிவுக்கு இரங்கார் என்பது கருத்து.

ஆக்கம் இழந்தாலும் ஊக்கமுடையார் உளங்கலங்கார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆரியன்பால் உணரப்படும்.

## கதை

ஆரியன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் மணலூர் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த வீரபாண்டியன் என்னும் வேந்தனுடைய புதல்வன். தாய் பெயர் இந்துகாந்தை. இவன் அழகும் அறிவும் அமையப்பெற்றவன். இவனுக்கு மூத்தவன் இராசசூரன் என ஒருவன் இருந்தான். முறைப்படி அரசுரிமையை அவனெய்தியபின் இவன்பால் அன்பிலனாகி அவமதித்தொழுகினான். அதனால் இவன் உளங்கவன்று அந்நகரை விட்டகன்று தென்திசை நாடிச்சென்று களா என்னும் ஒருவகைச் சிறு தருக்கள் அடர்ந்த காட்டில்புகுந்து இரவில் அங்குக் கலங்காதிருந்தான். விடிந்தபின் அக்களா வனத்தின் வளமலிந்த நிலைமையை நோக்கி மனமகிழ்ந்தான். அதனைச்சூழ்ந்த குன்றுகளில் தங்கியிருந்த குறும்பர்பலரைத் தன் ஊக்கமே துணையாகக்கொண்டு உடன்று வென்று அவ்வனத்தைப் பண்படுத்தி அதனிடையே தோன்றிய சிவலிங்கத்தைக்கண்டு பெருமகிழ்வுகொண்டு அதற்குச்சிறந்த ஆலயம் ஒன்று உயர்ந்தநிலையில் அமைத்து விரும்பிய குடிகளை மேவச்செய்து அங்கு இவன் பெரும்புகழோடு விளங்கினான். பின்பு குறுநிலமன்னர் பலர் திறை கொணர்ந்துதர இவன் பேரரசனாயினான். நமது நாட்டில் கரிவலம்வந்தநல்லூர் என்று இக்காலத்தில் விளங்கும் நகரமே அக்காலத்தில் புதுக்கியிருந்து இவன் அரசுபுரிந்த இடமாம். இத்தல

மூர்த்திக்குப் பால்வண்ணநாதர் என்று பெயர். ஒப்பனையாள் என்பது அம்மையின் திருநாமம். தன் பெருஞ்செல்வத்தை யிழந்தும் இவன் சிறிதும் வருந்தாமல்வந்து தனியேநின்று முயன்று தன் ஊக்கமுடைமையால் ஆக்கங்கள் பலஎய்தி அரசனுயினன். ஊக்கம் ஒருவந்தம் கைத்துடையார் ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து மகிழ்ந்தது. விரிவைப் பிரமாண்ட புராணத்தில் காண்க.

ஊக்கமுடையார் என்றும் உளங்கலங்கார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

594 சென்றசெல்வ மெல்லாம்பின் சேர்ந்த பணந்தன்பால்
குன்றாமல் என்னே குமரேசா—நன்றாகும்
ஆக்கம் அதர்வினுய்ச் செல்லும் அசைவிலா
வூக்க முடையா னுழை. (சு)

இ-ள்

குமரேசா! சிறந்த செல்வங்களெல்லாம் பணந்தனிடம் என்னெளிதில்வந்து சேர்ந்தன எனின், அசைவு இலா ஊக்கம்உடையான் உழை, ஆக்கம் அதர்வினுய்ச்செல்லும் என்க.

ஊக்கமுடையானுழை ஆக்கம் செல்லும் என ஒட்டிக்காண்க. அசைவுஇலா = தளர்வில்லாத. ஊக்கம் உடையான் உழை = ஊக்கத்தையுடையவனிடத்து. அதர் = வழி. உழை = இடம். ஆக்கம் அதர்வினுய்ச்செல்லும் = செல்வம் வழிவினவிக்கொண்டு வரும். மடியிலான் தாள் உளாள் தாமரையினுள் என அடிகளருளியபடியே செல்வம் முயற்சியின் கண்ணேயே தங்கியிருக்கின்றது; அம்முயற்சி ஊக்கமுடையவனிடத்தே தான் உறைந்துள்ளது; ஆதலால் அவனிருக்கும் இடத்தைத்தேடிக்கொண்டு தானேவந்து அச்செல்வம் அவனைச்சேரும் என்பார் ஊக்கமுடையானுழை ஆக்கம் அதர்வினுய்ச் செல்லும் என்றார். ஊக்கத்துக்கும் ஆக்கத்துக்கும் உள்ள உயிருரிமையை இதில் உய்த்துணர்க. ஊக்கமுடைமை ஆக்கத்திற்கு அழகு என்பதையும் ஈண்டு நோக்கிக்கொள்க.

மேல், உற்றபொருள் ஒழிந்துபோயினும் ஊக்கமுடையவன் தளர்ந்துவிடான் என்றார்; இதில், அப்பொருள் தானாகவே அவனிடம் வந்துசேரும் என்றார்.

தளர்வில்லாத ஊக்கமுடையவனிடத்துச் செல்வம் வழிவினவிக்கொண்டு தானாகவேவந்துசேரும் என்பதாம்.

தன்னையீன்ற தாய்ப்பசுவைக் கன்று தேடியடைதல்போல் ஊக்கமுடையானைத் தேடிவந்து ஆக்கம் சேரும் என்றார் இஃது அதன் காரியமாதலால்.

உள்ளத்தில் ஊக்கமுடையவனுக்கு எல்லா ஆக்கங்களும் எளிதில் உளவாம் என்பது கருத்து.

ஊக்கமுடையவனிடத்து எல்லாச்செல்வங்களும் தானாகவே வந்துதங்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பனந்தன்பால் உணரப்படும்.

## கதை.

பனந்தன் என்பவன் சூரியகுலத்தோன்றலாகிய நபாகனுடைய புதல்வன். தாய்பெயர் சுப்பிரபை. இவன் நுண்மதியோடு திண்மையுமுடையவன். முறையழிந்த செயலால் தன் தந்தை அரசிழந்திருந்ததைப் பருவமெய்துமுன்னரே தாய்வாயிலாக இவன் அறிந்து வருந்தி இழந்தஅரசினை யெய்தவிழைந்திருந்தான். தக்கவயது வந்தபின்னர் நீபன் என்னும் முனிவரொருவரையணுகிப்பணிவொடொழுகி அவரருளால் பலகலைகளிலும் இவன் தலைமையான புலமையை அடைந்தான். வில் வேல் வாள் முதலிய படைக்கலங்களையும் நன்குபயின்று மிகச்சிறந்துநின்றான். பின்பு ஊக்கத்தோடு பெரிதுமுயன்றான். இவன் கிளர்ச்சி தளர்ச்சியுறுமாறு இவன் பகைவர் பல இடுக்கண்களைவிளைத்தார். அவற்றிற்கெல்லாம் யாதும் அசைவிலனாகி இவன் இசைபெறமுயன்றான். இவனது ஊக்கத்தையும் உயர்வினை யுள்ளியுழைக்கும் நோக்கத்தையும் வியந்து அறிஞர்பலர் இவன்பால் அன்புடையாரானர். துணைவலியோடு மனவலியுடையனாய்ப் பகைவரது வினைவலியை அறிந்து அவரை இவன் வெல்லவிழைந்தான்.

தூங்கு சிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன
ஓங்கு குலம் நையஅதன் உட்பிறந்த வீரர்
தாங்கல்கட னாகுந்தலை சாய்க்கவரு தீச்சொல்
நீங்கல் மட வார்கள்கடன் என்றெழுந்து போந்தான்.

என்றபடி கிளர்ந்து போந்து மாற்றார் அனைவரையும் முனைந்து வென்று அவர் வலிந்து கொண்டிருந்த அரசுமுழுவதையும் இவன் கவர்ந்து கொண்டான். பின்பு முடியுடைவேந்தரெல்லாரும் தன் அடி வணங்கும்படி இவன் முடிபுனைந்தாண்டான். பிரியவதி என்னும் தனது இனிய மனைவியோடமர்ந்து அரியபோகங்களை நுகர்ந்து நந்தன், வத்சந்திரன், நரேந்திரன் என்னும் புதல்வர் மூவரைப்பயந்து எங்கும் இவன் புகழ்பரப்பி நின்றான். ஒன்றும் இல்லாதிருந்தும் தன் அசைவில்லா ஊக்கத்தால் எல்லா ஆக்கங்களையும் இவன் எளிதில் எய்திவிளங்கினான். ஆக்கம் அதர்வினாய்ச்செல்லும் அசைவிலாவூக்கமுடையானுழை என்னும் உண்மைக்கு இவன் உரியவனாய் நின்றான். விரிவை மனுமாபில் காண்க.

ஊக்கமுடையானை ஆக்கம் அடையும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

595 திண்டோ ளுயாதன் தெய்வீகன் உள்ளத்தால்
கொண்டார் உயர்வேன் குமரேசா—மண்டிநின்ற
வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. (ரு)

இ—ள்.

குமரேசா! வாழியாதனும் தெய்வீகனும் தம் உள்ள மிகுதிக்கேற்ப ஏன் உயர்ந்து விளங்கினார் எனின், மலர்நீட்டம் வெள்ளத்து அனைய; அதுபோல் உயர்வு மாந்தர்தம் உள்ளத்து அனையது என்க.

இஃது எடுத்துக்காட்டுவமையாதலால் அதுபோல் என்னும் உவமஉருபு இடையே இடப்பட்டது.

மலர்நீட்டம் = பூக்களின் நீளங்கள்.

வெள்ளம் என்றது குளம், பொய்கை முதலியவற்றிலுள்ள நீரினை. உள்ளம் என்றது ஊக்கத்தை. வெள்ளம், உள்ளம் என்பன அத்துச்சாரியை பெற்றுநின்றன.

மேல், ஊக்கமுடையவனிடத்து ஆக்கம் தானாகவே வந்து சேரும் என்றார்; இதில், அவ்வூக்கத்தின் அளவுக்குத்தக்கவாறே மக்கள் உயர்வர் என்கின்றார்.

நீர்ப்பூக்களின் நீளங்கள் அவைநின்ற நீரின் அளவினவாம்; அதுபோல மக்களின உயர்ச்சி அவர்தம் ஊக்கத்தின் அளவினதாம் என்பதாம்.

தம் உள்ளத்தின் அளவுக்குத்தக்கவாறே மக்கள் உயர்வர் என்பதை உணர்த்துதற்கு வெள்ளத்தின் மலரை விளக்கிக்காட்டினார் நீர், நீள நீள நீண்டும் அது தாழத் தாழத் தானும் தாழ்ந்தும் நிற்கும் அதன்தன்மைகருதி.

நீர்நிலைகளிலுள்ளதாமரை அல்லி முதலிய நீர்ப்பூக்கள் அந்நீரின் அளவு எவ்வளவோ அவ்வளவாகவே நின்று விளங்கும் அதுபோல் ஊக்கத்தின் அளவுக்குத்தக்கவாறே பொருள் படை புகழ்முதலியவற்றால் மக்கள் உயர்ந்து விளங்குவார் என்பார் உயர்வு உள்ளத்தனையது என்றார். உயர்வுக்கும், ஊக்கத்துக்கும் உள்ள உரிமையை இதில் ஊன்றியுணர்க.

மலரின் வளர்ச்சிக்கு வெள்ளம் எப்படி ஆதாரமாயிருக்கின்றதோ அப்படியே ஒருவன் உயர்ச்சிக்கு அவன் உள்ளமே ஆதாரமாக வுள்ளது என்பது கருத்து.

இராகவன் பணியை மேற்கொண்டு தென்திசை நோக்கிச் சென்ற இரண்டு வெள்ள வானரங்களும் மகேந்திரமலையையடைந்து தளர்ந்துநின்றபொழுது, கிளர்ந்தெழுந்து தன் ஊக்கமிகுதியால் பாய்ந்து இலங்கையிற்புகுந்து கலங்காமல் ஆய்ந்து கதித்து வந்து பின்உற்றவரெவரினும் உயர்ந்து விளங்கிய அனுமான்போல் ஊக்கமுடையமகன் உலகில் உயர்ந்து விளங்குவான் என்பதாம்.

தம் ஊக்கத்தினளவுக்குத்தக்கவாறே மக்கள் உயர்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வாழியாதன் கண்ணும் தெய்வீகன்பாலும் உணரப்படும்.

## கதை.

வாழியாதன் என்பவன் வஞ்சிநகரிலிருந்து அரசுபுரிந்த சேரமன்னன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னராம். இவன் பெருங்கொடையாளன். ஊக்கமே தனக்கு உறுதுணையாகக்கொண்டவன். எண்ணிய எதையும் ஒருவன் எய்தலாம் என்று தன் நண்பர்களோடு அடிக்கடி இவன் இசைத்து நின்றவன். இவனது சிறந்த ஊக்கத்தையும் உயர்ந்த நோக்கத்தையும் வியந்து கபிலர் என்னும் புலவர்பெருமான் இவன் மேல் சிலபாடல்கள் பாடினார். அவர்க்குப் பரிசிலாக நூறாயிரம் பொன்னும் கொடுத்து நன்று என்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற்கண்ட நாடெல்லாம் இவன் காட்டிக்கொடுத்தான். மல்லல் உள்ளமொடு மாசறவிளங்கிய—செல்வக்கடுங்கோ வாழியாதன் என அனைவரும் இவனைச்சொல்லித் துதித்தார். இவன் முடிபுனையுங்கால் தனக்கு உரிமையாயிருந்த சிறுநிலப்பகுதியை நோக்கி யமையாமல் தன் ஊக்கமிகுதியால் உலகமுழுவதையும் தன் ஒரு குடைக்கீழ்க்கொள்ளவிழைந்தான். அங்ஙனமே பின்பு கொண்டு விளங்கினன். மாந்தர்தம் உள்ளத்தனையது உயர்வு என்னும் உண்மைக்கு இவனே முதலுரிமையாய் நின்றான்.

வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅது
இடஞ் சிறிதென்னும் ஊக்கந் துரப்ப
ஒடுங்கா வுள்ளத்தோம்பா வீகைக்
கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கனம் ஒத்தியோ வீங்குசெலன் மண்டிலம்
பொழுதென வரைதி புறங்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே. (புறநானூறு)

இது, நமது வாழியாதனைக்குறித்துக் கபிலர் பாடியது. உள்ளிய எதையும் தன் ஊக்கமுடைமையால் ஒருங்கேயெய்தி, என்றும் ஒருபடியாய்நின்று, எங்கும் புகழொளிபரப்பி, நிலைதிரியாமல் வா

மூம் இம்மன்னனை நீ எவ்வாறு நிகர்ப்பை என்று சூரியனை நோக்கிக் கூறி இவன் சீரியஇயல்பினைத் தெரித்துள்ளமையை இதில் தெளிந்து காண்க.

## கதை 2.

தெய்வீகன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்துநூறு ஆண்டு கட்குமுன்னர்த் திருக்கோவலூர் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந் தவன். சோழநாட்டிற்கும் தொண்டைமண்டலத்துக்கும் இடை யேகிடந்த நிலமுழுவதும் நடுநாடெனப்பட்டு இவனுக்கு உரி மையாயிருந்தது. அறிவிலும் ஆண்மையிலும் இவன் மிகச்சிறந்த வன். வஞ்சனை தீவினை மறந்தநெஞ்சினன். இவனது உண்மையை யும் திண்மையையும் உவந்து இந்திரன்வந்து ஒருதெய்வப்புரவியை இவன்பால் தந்துபோயினன். அஃது உணவுமுதலியன ஒன்றும் வேண்டாது பதுமைபோலமர்ந்து எங்கும் செல்லவல்லது. அத னால் எண்ணியஇடங்கட்கெல்லாம் எளிதில்நண்ணி எவ்வுயிர்க்கும் இனிது செய்துவந்தான். அத்தெய்வப்புரவியைத் தமக்குத் தந் துவிடும்படி மூவேந்தரும் தனித்தனி இவன்பால் தூதுவிடுத்தார். ஒருவருக்கும் கொடுப்பதில்லையென்று உறுதியாக இவன் மறுத்து விட்டான். அதன்பின் அம்முடிமன்னர் மூவரும் ஒருங்குதிர ண்டு இவன்மேல் அமர்செய்யவந்தார். இவன் ஊக்கத்தோடு அவர்பால் ஒரு தூதுவனை விடுத்து வெற்றிக்கும் தோல்விக்கும் உற்றபயன்யாது என உசாவச்செய்தான். தாம் தோல்வியுறின் தமது கன்னியரைத் தருவதாகவும் இவன் தோற்பின் அக்குதி ரையைக் கொடுத்துவிடவேண்டுமென்றும் உறுதிசெய்துகொண் டார். இருவகையாரும் இசைந்தார். பொருது வெல்லமுனைந்தார். அப்போரில் இவன் பேரூக்கத்தோடு புகுந்துமலைந்தான். அவர் தளர்ந்து குலைந்தார். சேரன் சோழன் பாண்டியன் என்னும் அம் மூவரசரும் தம் வாய்மையின்படி தம் குமரிகள் மூவரையும் இவ னுக்கு மணம்புரிந்துதந்தார். பத்மாவதி, பொன்மாலை, காஞ்சன மாலை என்பன அம்மூவருக்கும் முறையே பெயர்களாம். அப் போழுதிகள் மூவரோடும் இவன் மருவிமகிழ்ந்து சித்திரசேநன், மெய்ப்பொருளன், நரசிங்கமுனையன் எனும் புத்திரர் மூவரைப் பெற்றுப்புகழுடன் வாழ்ந்தான். பொருள் படை முதலிய எல்லாச்

செல்வங்களையும் தன் உள்ளத்திறனலெய்தி இவன் உயர்ந்துவிள ங்கினன். வெள்ளத்தனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத்தனை யது உயர்வு; என்னும் உண்மையை உலகறிய இவன் உணர்த்தி நின்றான்.

தன் ஊக்கமுடைமைக்குத் தக்கவாறே ஒருவன் உயர்ந்து விளங்குவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

596 தெள்ளு வசுமன் திரிசங் குயர்வுள்ளிக்
கொள்ளநின்றார் முன்னேன் குமரேசா—எள்ளாமல்
உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

இ-ள்

குமரேசா! வசுமன், திரிசங்கு என்னும் இவ் அரசர் இருவரும் உயர்வினையே உள்ளி ஏன் ஊக்கமோடு உற்றுநின்றார் எனின், உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்; மற்று அது தள்ளி னும் தள்ளாமை நீர்த்து என்க.

உள்ளுவது என்னும் ஒருமை எல்லாம் என்னும் பன்மை யோடு உடன்மயங்கி நின்றது.

உயர்வு உள்ளல் = உயர்வையே கருதுக. அல்விகுதி உடன் பாட்டு வியங்கோளில்வந்தது. உயர்வு என்றது கல்வி, செல்வம், முதலாய நலங்களுள் உயர்ந்தநிலையினை. அது தள்ளினும் = அவ் வுயர்ச்சி தவறிவிடினும். தள்ளாமை நீர்த்து = தவறாத நீர்மை யினையுடையது. நீர்மை = இயல்பு, தன்மை.

உள்ளத்தனையதே உயர்வு ஆதலானும், உள்ளியதை எய்தல் ஊக்கமுடையானுக்கு எளிதாம் ஆதலானும், உயர்வான நிலையினை யே அரசன் உள்ளவேண்டுமென்று உணர்த்தியதை உன்னி, அங் ஙனம் உள்ளியும் அஃது உறவில்லையாயின் தன்னை உலகம் எள் ளும் அன்றோ? எனத் தள்ளுறுங்கால் அவனைநோக்கி இது சொ ல்லியதாகக்காண்க.

மேல், ஒருவன் உயர்வு அவன் உள்ளத்தளவு என்றார்; இதில், அவ்வுயர்வினையே ஒருவன் உள்ளவேண்டும் என்கின்றார்.

பள்ளியில்படித்த பிள்ளைகள் சிலரைநோக்கி ஒருதொகை சொல்லுமின் என்று பெரியவரொருவர் ஒருகாற்சொல்லியபொழுது, ஒருவன் பத்து என்றான், மற்றொருவன் இருபது என்றான்; அடுத்தொருவன் ஐம்பது என்றான், பின் ஒருவன் ஆயிரம் என்றான், இறுதியில் ஒருவன் கோடிஎன்றான்; அப்பெரியவர் பெருந்தொகைசொன்னவனை அயலிருந்தவர்களிடம் சுட்டிக்காட்டி இவன் உள்ளம் உயர்வை உள்ளியதாதலால் பருவமெய்தியபின் பெருந்திருவுடையனாய் இவன் சிறந்துவிளங்குவான் என்றார்; அவ்வாறே அவன் ஊக்கத்தால் உயர்ந்து விளங்கினான்; இஃது எவ்வாற்றினும் உயர்வுள்ளலுக்கு உரியதாதலால் இதுவும் ஈண்டு உள்ளநின்றது.

ஒருவன் கருதுவதெல்லாம் தன் உயர்ச்சியையே கருதுக; அவ்வுயர்ச்சி கைகூடாமல் தவறினும் அக்கருத்துத் தவறாத இயல்பினையுடையதாம் என்பதாம்.

யாதுபாவித்திடினும் அதுவாகின்றனை எனும் அருண்மொழியின்படி ஒருவன் உள்ளியபடியே உயர்ந்து விளங்குவான் என்பது கருத்து. மக்கள் உயர்ந்து விளங்குதற்கு அமைந்தகருவியை அடிகள் அளந்தருளியுள்ளமையை இதில் அறிந்துகொள்க.

எவரும் புகழ்ந்து போற்றுதற்குரிய உயர்ந்தநிலையினையே தான் எய்துமாறு ஒருவன் எண்ணவேண்டுமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வசுமன் கண்ணும், திரிசங்குபாலும் உணரப்படும்.

## கதை

வசுமன் என்பவன் சூரியகுலவேந்தனாகிய அரியச்சுவனுடைய புதல்வன். இவன், வைவசுவதமனுவின் இருபத்தேழாவது வழிமுறையில் வந்தவன். பொருந்திறத்தில் இவன் பெரும்பேர் படைத்தவன். எங்கும் தன் புகழ்செல்லத் திருவயோத்தியிலிருந்து இவன் செங்கோல்செலுத்தினான். வசுமனை என்னும் தனது அருமைமனைவியோடமர்ந்து இனியபோகங்களை நுகர்ந்து திரிதனுவா என்னும் ஒரு புதல்வனைப்பயந்து உலகமுழுவதையும் பொதுவறப்புரந்தான். செய்தற்கரிய பரிவேள்விகள் பல இவன் செய்துமுடித்தான். உள்ளியனவையும் உள்ளியாங்குஎய்தித் தன் ஊக்கமுடைமையால் இவன் உயர்ந்து விளங்கினான். "பருந்து வீழ்

ஞாட்பில் கூற்றெதிர்ப்படினும் பாயொளி பருதிவேல் திரிபா—இசீ ந்திட வுடற்கும் வசுமஞ என்னும் இசைநிசை அளந்திடும் வேந் தன்'' என மாந்தர்கள்போற்ற இவன் மகிழ்ந்து வாழ்ந்தான். உலகவுயர்ச்சிகளெவற்றினும் தன் ஊக்கத்தால் தலைமைபெற்ற இவன் முடிவில் இந்திரபதத்தையும் எய்தஎண்ணி என்றுமுயன் ருன். அக்கருத்து இனிது நிறைவேறாது இடையே தடையுற் றது. ஆயினும் இவனது மனத்திட்பத்தையும் மதித்திறத்தையும் அனைவரும் மதித்துப்போற்றினர். உள்ளுவதெல்லாம் உயர்வுள் ளல் மற்று அது தள்ளினும் தள்ளாமை நீர்த்து என்னும் உண் மையை உலகம் இவன்பால் உணர்ந்தது. விரிவை மனுமாபில் காண்க.

## கதை 2.

சூரியகுலத் தோன்றலாகிய திரிசங்குமன்னன் தன் ஊக்க முடைமையால் இந்நிலவுலகில் பல வுயர்நிலைகளையடைந்து இறுதி யில் எய்திநின்றவுடம்போடு துறக்கத்தையுமெய்தவிரும்பி அது கூடாதுஎன்று வசிட்டர்தடுத்தும் கேளாதவனுப் முனைந்து முயன் ருன். அதனுல் அவர்சினந்து புலையனுமாறு சபித்தார். அச்சா பத்தால் தன் அரசநிலையையிழந்து புலைபுருவையடைந்து அடவிக டோறும்சென்று மிகவருந்தியுழன்ருன். அங்ஙனம் உழன்றும் தான் உள்ளிய உயர்வையே உள்ளியிருந்து முடிவில் கோசிகனை யடைந்து குறித்தகுறிப்பினைக் கூசாதுரைத்து அவர் உரைத்தப டியே நடந்து துறக்கம்புக அமரர் வெறுத்துத்தள்ளினர். அவர் அங்ஙனம் தள்ளினும் இவன் தளராதுநின்று தான் உள்ளியதை யே கொள்ளவிழைந்து பின் இடையே கொண்டுநிகழ்ந்தான். இவனது உளஉறுதியை வியந்து அமரரும் உவந்து புகழ்ந்தார் தான் கருதிய உயர்ச்சி ஒருவனுக்குக் கைகூடாதாயினும் அக்கரு த்தை உலகம் வெறுத்திகழாது என்பதை இவன் உணர்த்திவிளங் கினன். ஆதலால் உயர்வினை உள்ளி ஊக்கத்தோடு முயல்வதற்கு இன்றும் இவனையே உலகம் முந்துறமொழிகின்றது.

உயர்நிலை யெய்தவே ஒருவன் உறுதிபெற முயலவேண்டும் என்பது இதனுல் கூறப்பட்டது.

597 வென்றிமிகு உக்கிரமர் மெய்ப்பிரக லாதான்றேன்
குன்றூர் சிதைவிற் குமரேசா—என்றும்
சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு. (எ)

இ—ள்

குமரேசா! உக்கிரகுமாரரும் பிரகலாதரும் சிதைவிடத்தும் தளர்வில்லாதவராய் உறுதியாய்நின்று தன் உள்ளியதை முடித்தார் எனின், புதைஅம்பின் பட்டு களிறு பாடுஊன்றும்; அதுபோல், உரவோர் சிதைவுஇடத்து ஒல்கார் என்க.

இஃது எடுத்துக்காட்டு உவமையாதலால் அதுபோல் என்னும் உவமை உருபு இடையே இடப்பட்டது.

புதை என்னும்சொல் செறிவு, மறைவு, தொகுதி முதலியவற்றைபுணர்த்திவரும். புதை அம்பின் = தொகுதியாகிய பல அம்புகளால். இன் உருபு இதில் ஏதுப்பொருளது. அம்பு என்பது வில்லில்வைத்து எய்யும் ஒருவகை ஆயுதம்; அது, கணை பகழி பாணம்எனவும் வழங்கப்படும். சிதைவு = அழிவு. களிறு என்றது ஆண்மைதோன்ற என்க. பாடு = பெருமை.

உரவோர் = ஊக்கமுடையோர்; உரம் என்பது அறிவு ஊக்கம் வலி திண்மைமுதலியவற்றைக்குறித்து வரும்.

ஒல்கார் = தளரார். இஃது ஒல்கல் என்பதன் அடியாகப்பிறந்தது. ஒல்கல் = குறைதல், மெலிதல், குழைதல், தளர்தல்களைபுணர்த்திவரும். ஒடுங்கு பசி யுழந்த ஒல்கு நுண்மருங்குல் எனவும், பருநிலை நெடுந்தூண் ஒல்கத் தீண்டி எனவும், வருவனவற்றுள் ஒல்கல் உணர்த்திநிற்கும் பொருளையுணர்க.

தான் உள்ளிய உயர்ச்சி தவறினும் தன் முயற்சியில் ஒருவன் தளர்ச்சியுறலாகாதென்று மேலுரைத்தார்; அஃது உறுதிபெற ஓர் உவமையை எடுத்துக்காட்டி இதில்உணர்த்தியருளினார்.

பல அம்புகளால் அடிபட்டுப் புண்பட்டவிடத்தும் யானை தளராமல் நின்று தன் பெருமையை நிலைநிறுத்தும்; அதுபோல

ஊக்கமுடையவர் தாம்கருதிய உயர்ச்சிக்குச் சிதைவுவந்தவிடத் தும் உளந்தளராமல் தம் தலைமையை நிலைநிறுத்துவர் என்பதாம்.

தாம் உயர்ச்சிபெறக்கருதி ஊக்கமுடையார் முயற்சிசெய்யுங் கால் இடையே பல இடையூறுகள் புகுந்து அதனைத்தடைசெய் தழிப்பினும் தம் உள்ளந்தளராமல் நின்று தாம உள்ளியதை அவர்முடித்தேவிடுவர் என்பது கருத்து. இதற்கு யானையை உவ மைகாட்டியது அதன் மேன்மையை நோக்கிஎன்க. இவ்விலங் கின் கலங்காமையை உணர்ந்தேனும் மக்கள் விலங்காமல் நின்று ஊக்கமுடையாராய் உயர்ந்துகொள்ளவேண்டும் என்பது குறிப்பு

இடையூறுகள் பல இடையேயெழுந்து தன் தவத்தைக் குலைத்துத் தான்கருதிய உயர்ச்சியைச் சிதைத்தபொழுதும் விசு வாமித்திரர் தளராமல் நின்றுமுயன்று நினைத்ததைமுடித்துத் தன் பெருமையை நிலைநிறுத்தியதுபோல் உளவுறுதியுடையார் தளர்வுறாது முயல்வர் என்பார் "உரவோர் சிதைவிடத்து ஒல் கார்" என்றார்.

எவ்வளவு தடைகள் நேரினும் தளராமல் நின்று தாம்கரு தியதை அறிவுடையார் தவறாமல் முடித்துக்கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உக்கிரகுமாரர்கண்ணும் பிரகலாதர்பாலும் உணரப்படும்.

## கதை

மதுரையிலிருந்து அரசுபுரிந்த உக்கிரகுமாரபாண்டியன் மீது பொறாமைகொண்டு இந்திரன் பல இடையூறுகளை விளைத் தான். அவற்றிற்கெல்லாம் யாதும்அஞ்சாமல் நின்று இம்மன் னன் முறைசெய்துவந்து தொண்ணூற்றாறு பரிவேள்விகளைத் தொடர்ந்துமுடித்தான். அதனால் அவ்வானவர்கோன் மிகமனங் கவன்று இம்மானவர்கோன் வளநகரை வாரியையேவி அழி க்கவுன்னினான்.

பொருங்கடல் வேந்தனைக் கூவிப் பொள்ளென
இருங்கடல் உடுத்தபார் ஏழும் ஊழிநாள்
ஒருங்கடும் வெள்ளமொத் தருத்துப்போய் வளைந்து
அருங்கடி மதுரையை அழித்தியால் என்றான்.

விளைவது தெரிகிலன் வேலைவேந்தனும்
வளவயல் மதுரையை வளைந்திட் டிம்மெனக்
களைவது கருதினன் பேயுங் கண்படை
கொளவரு நனந்தலைக் குருட்டுக் கங்குல்வாய்.

பொள்ளெனப்பொங்கி நள்ளிரவில் அங்ஙனம் கருதிவந்தகடலின் பெருமுழக்கத்தைக்கேட்டு அமளியிலிருந்து விரைவிலெழுந்து வெளியேவந்து நோக்கி விம்மிதமெய்தித் தன் வெற்றிவேலை வெகுண்டெடுத்து அவ் வேலைமேல்வீசியெறிந்தான். அதனால் அது வற்றியிழிந்தது. பின்னரும் இவன் நாட்டில் மழைபெய்யாதிருக்கும்படி மேகவாகனன் செய்தான். அதனால் வழுதிநாடுமுழுவதும் வருந்திநொந்தது. ஆயினும் இவன் உளந்தளராதவனாய் உயிர்களை ஆதரித்து ஒருநாள் விநோதமாகப் பொதியமலையை யடைந்தான். அவ்வமையம் அங்குப்போந்திருந்த புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, என்னும் நான்குமேகங்களையும் பிடித்துக்கொண்டுவந்து விலங்கிட்டு விலங்காமல் சிறையிலடைத்துவைத்தான். அவற்றை மீட்கும் பொருட்டு இந்திரன் சேனையோடுவந்து மதுரையைவளைத்துநின்று மன்னனை அறைகூவி அழைத்தான். இவன்சிறிதும் கலங்காமல் ஊக்கத்தோடு சினந்தெழுந்து முனைந்துவந்தவரனைவரையும் மோதிவென்று முடியில் வளையெறிந்து இந்திரன் முடியினையுடைத்தான். அவன்முறிந்துபோய் இவனதுஊக்கத்தை நினைந்துநினைந்து வியந்தான். "யான் பகைமையை விடுத்தேன்; இனி வளமுற உன் நாட்டில் மழை பொழியச்செய்கின்றேன்; என் மேகங்களை விடுக;" என்று அவன் இவனை மேவிவேண்டினன். இவன் மிகுமகிழ்வெய்தி அவ் அமைவினை ஊகமோடு உறுதிசெய்துகொண்டு மேகங்களை விடுத்தான். அதன்பின் பருவமழைபெய்யப் பெருவளங்கள் மல்கின. அல்லல் பலஅடைந்தும் தன் உள்ளந்தளராமல் நின்று உள்ளியதையெய்திய இவனது ஊக்கமுடைமையை அமரரனைவரும் நோக்கிப்புகழ்ந்தார். உரவோர் சிதைவிடத்து ஒல்கார் என்னும் உண்மையை உலகம் அறிய இவன் அன்று உணர்த்திநின்றான்.

## கதை 2.

பிரகலாதன் திருமாலிடம் அன்புகொண்டான் என்று இரணியன் பெருமுனிவுகொண்டு கொடுமைகள் பலசெய்து முடிவில் கொதித்தெழுந்து கொல்லவந்தான். அப்பொழுதும் இவன் உளங் கலங்காதவனாய்த் தான் உள்ளியதையே உரைத்து எதிர்நின்றான். நீ உள்ளிய கள்வன் யாண்டுள்ளான் அதனை இப்பொழுதே உரைத்திடுக என அவன் உரைத்துத்துள்ளினான். உடனே ஒன்றுக்கும் ஒல்காதவனாய் அவன் இருக்கும் இடத்தைச்சொல்லுகின்றேன் கேள் என அடியில்வருமாறு இவன் சொல்லினான்.

சாணினும் உளனோர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட
கோணினும் உளன்மா மேருக் குன்றினும் உளன் இந்நின்ற
தூணினும் உளன்முன்சொன்ன சொல்லினும் உளன் இத்தன்மை
காணுதி விரைவின் என்றான்; நன்றெனக் கனகன் சொன்னான்.

உம்பர்க்கும் உனக்குமொத்திவ் வுலகெங்கும் பரந்து ளானைக்
கம்பத்தின் வழியேகாணக் காட்டுதி காட்டி டாயேல்
கும்பத்தின் கரியைக் கோண்மாக் கொன்றென நின்னைக்கொன்
செம்பொத்த குருதிதேக்கி உடலையும் தின்பேன் என்றான். [றுன்

இங்ஙனம் வீரவேகத்தோடு இரணியன் அச்சுறுத்தியும் இவன் சிறிதும் அஞ்சாதவனாய்த் தான்கருதியதொன்றையே ஊக்கமோடுஉறுதிசெய்திருந்தான். பின்பு,

என்னுயிர் நின்னாற் கோறற்கு எளியதொன் றன்று யான்முன்
சொன்னவன் தொட்டதொட்ட இடந்தொறுந் தோன்றானாயின்
என்னுயிர் யானேமாய்ப்பல்; பின்னும் வாழ்வுகப்பல் என்னின்
அன்னவற்கடியன் அல்லேன் என்றனன் அறிவின் மிக்கான்.

இதனைக்கேட்டவுடனே இவனது ஊக்கத்தைவியந்து அனைவரும் உவந்து போற்றினார். தான் உள்ளியதைத் தள்ளுதற்குத் தந்தை பலகோடிஅல்லல்களை விளைத்தும் இவன் உளந்தளராமல் நின்று உள்ளியதையே உறுதிபெறமுடித்தான். புதைஅம்பிற் பட்டுப்பாடூன்றும் களிறுபோல் உரவோர் சிதைவிடத்து ஒல்கார் என்னும் உண்மைக்கு இவனும் உரியவனாயினான்.

அல்லல் வந்தவிடத்தும் ஊக்கமுடையவர் தம் உள்ளந்தளரார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

598 உள்ளமுடை நந்திமான் ஓரிபோல் ஈதலின்பேன்
கொள்ளவில்லை மற்றோர் குமரேசா—தள்ளாத
உள்ள மிலாதவ ரெய்தார் உலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு. (அ)

இ—ள்.

குமரேசா! உள்ளத்திறன்மிக்க நந்திமானும், ஓரியும் போல் பிறர் ஏன் வள்ளற் பெருமையை எய்தவில்லை எனின், உலகத்து வள்ளியம் என்னும் செருக்கு, உள்ளம் இலாதவர் எய்தார் என்க.

இலாதவர் எய்தார் என இயைத்துக்காண்க. உள்ளம் என்றது ஊக்கத்தை. வள்ளியம் = வள்ளல் தன்மையை உடையேம்; இது வண்மைஎன்பதன் அடியாகப்பிறந்தது. வண்மை = ஈகை. ஈதலின்பம், காதலின்பம்போல் தம அகத்துமாத்திரம் புலனாந்தன்மையது ஆதலால் தன்மையால்கூறினர்.

செருக்கு என்பது சிறுமைக்குணம் அன்றோ? அதனைஎய்த வேண்டுமென்று ஈண்டிசைத்தது என்னைஎனின், செல்வத்தில் சிறந்தோம், கல்வியில் உயர்ந்தோம், எனத்தம்மையே வியந்து அல்வழியில் திமிர்ந்து அகங்கரித்திருப்பதே செருக்கு எனப்படும்; கொடைமுதலிய நலங்களையுடையேம் எனத்தமக்குள்ளேயே களித்திருக்கும் அவ்விழுப்பம் கம்பீரம் எனப்படும்; ஆதலால் இதனை எய்தலே ஒருவன் எய்திய பிறவிக்குப்பயனும் என்க.

செருக்கு என்னும்சொல் அல்வழியை நோக்கியதேல் சிறுமையாம்; நல்வழியைநோக்கியதேல் பெருமையாம், இது, கல்வி ஆண்மை முதலியவற்றால் மேன்மையாகத்தோன்றும் பான்மையதாம். கல்விதறுகண் இசைமை கோடையேனச் சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே; என்றது இயல்.

இவ்வுலகத்தில்யாம் வண்மையுடையேம் என்னும் பெருமையை ஊக்கம் இல்லாதவர் உறார் என்பதாம். ஊக்கமில்லையானால்

முயற்சியுண்டாகாது அதனால் பொருள் இல்லையாம்; ஆகவே பிறர்க்கு உபகரித்தலாகிய ஈதலும், அதனால் உளதாம் இன்பமும், இலவாம்; ஆதலால் உள்ளம் இலாதவர் வள்ளியம் என்னும் செருக்கு எய்தார் என்றார். இனி, செல்வம் இருந்தாலும் உள்ளம் இல்லையானால் வள்ளல் என்னும் பதத்தை அவர் கொள்ள இயலாது எனவும் இது கொள்ளநின்றது. உள்ளமுடைமைக்கும் வள்ளன்மைக்கும் உள்ள உரிமையை இதில் ஊன்றியுணர்க.

சிபி, ரகு, அக்ரூரன், கன்னன், குமணன், என்னும் இவர் வள்ளியம் என்னும் பதத்தைக்கொள்ளுதற்கு அவர்தம் உள்ள முடைமையே காரணமாயதை ஈண்டு உள்ளியுணர்க. ஒன்றார் ஆர்எயில் அவர்கட்டாகவும் நுமதெனப் பாண்கடன் இறுக்கும் வள்ளியோய் என ஊன்பொதிபசுங்குடையார் சொல்லியாங்கு இலங்கையை வென்றுகொள்ளுமுன்னரே தன் ஊக்கமிகுதியால் அதனை வீடணனுக்குத்தந்து வீரவள்ளலென இராகவன் விளங்கி மகிழ்ந்ததையும் ஈண்டு நினைந்து மகிழ்க. கையில் ஒன்றும் இல்லையானாலும் உள்ளத்தில் ஊக்கமுடையவர் வள்ளியம் என்னுஞ்செருக்கைக் கொள்வர் என்பது குறிப்பு. இதனால் ஊக்கமுடைமையினது உயர்வுடைமை இனிதுணரப்படும்.

ஊக்கமுடையார் கைப்பொருளை யொழிந்தாரேனும் ஒழிவில்லா
ஆக்கமுடையாரேயாவர் ஆக்கமிருந்தும் அசைவில்லா
ஊக்கம் இலரேல் ஏதுமிலர் உஞற்றுமுயற்சி பொருள்கொடைகள்
தேக்கு புகழ்நற் செருக்கிவைபின் சேரா ஏமகண்டனே. என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

இத்தகைய ஊக்கத்தை உயிரணியாக ஒருவன் உடையனுதல்வேண்டும் என்பது கருத்து.

உள்ளமுடையவர்க்கே வள்ளலுடைமையுளவாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நந்திமான்கண்ணும் ஓரிபாலும் உணரப்படும்.

## கதை.

நந்திமான் என்பவன் தொண்டைமண்டலத்திலே ஆறையம்பதி என்னும் ஊரிலே இருந்து அரசுபுரிந்த ஒருகுறுநிலமன்னன். நல்ல சீலமுள்ளவன். பலநூல்களையும் பயின்றுதெளிந்த

வன். தன்னூக்கமுடைமையால் ஆக்கம்பலவுமெய்தி ஆருயிர்க்கெல்லாம் அருள்புரிந்து வந்தான். தான் ஈட்டியுள்ள செல்வத்துக்குப் பயன் ஈதலேயாமென்று இவன் ஈந்துமகிழ்ந்தான். இவனது உள்ளமுடைமையையும் வள்ளற் குணத்தையும் உள்ளிமகிழ்ந்து நாளும் பலபேர் இவனை நயந்து வந்தார். வந்தவரெவர்க்கும் சிந்தையுவந்து இவன் வழங்கிவந்தான். இவனுடன் பிறந்த தம்பியொருவனிருந்தான். அவன் பெயர் சிந்துகன் என்பர். அவன் சிறிது கல்வியுடையனாயினும் வசைபாடுதலில் பெரிதும் வல்லுநன். முன்னவனது செல்வவுரிமையைக் கொள்ளவிழைந்தானாதலால் அவன் இவனைக் கொல்லத் துணிந்தான். வன்புலவனொருவனைத் தனக்குத் துணையாகச் சேர்த்துக் கொண்டு எழுத்துக்களை மாற்றி இவன் மீது பல வசைக் கவிகளைப்பாடி அந்தப்புரத்தில் இவன் அமளியில் துயிலும்பொழுது சாளரவாயிலாக இவன் காதில்படும்படி ஒரு பாடலைப் பாடிவிட்டு அப்புலவனை ஓடும்படி செய்தான். அதனைக் கேட்டெழுந்தான். அக்கவியின் சுவையை இவன் கருதி மகிழ்ந்தான். முழுதும் கேட்க விழைந்தான். தனக்கு அழிவு நேரும் என்று கூறியும் இவன் யாதுந்தளராமல் அவற்றை ஓதும்படி செய்து ஒவ்வோர் கவிக்கும் ஒரு பெருந் தொகைப்பொருளை உதவினன். ஓதுந்தோறும் தன் உயிர்க்கு ஏதம் வருவதையறிந்தும் ஏதும் அஞ்சாமல் சுடலையளவு பந்தரிடும்படி செய்து பாடல்களைக் கேட்டுப் படிப்படியாக நடந்து முடிவில் படுநிலத்தையடைந்தான். அப்பாடலுக்குப் பரிசிலாகத் தம்பிக்குத் தன் அரசசெல்வத்தைத் தந்தேன் என்று யாவரும் அறிய அகமுவந்து கூறி உறுதியோடு நின்று இறுதியில் இவன் ஆவியை விடுத்தான். இவனது உள்ளமுடைமையையும் வள்ளற் குணத்தையும் உள்ளியிரங்கி அனைவரும் பின் உவகை மீக்கூர்ந்தார். உள்ளம் உடையவரே உலகத்துவள்ளியம் என்னும் செருக்கை எய்துவர்; இல்லாதவர் எய்தார் என்னும் உண்மைக்கு இவன் இனமாய் நின்றான். விரிவை ஆறைமான்மியத்தில் காண்க.

பொள்ளா நுழைவழி போய்த்தலை நீட்டும் புலவர் முன்சொல்
கள்ளாருஞ் செஞ்சொற் கலம்பக மேகொண்டு காயம்விட்ட
தெள்ளாறை நந்தியெனுந் தொண்டை மான்கலி தீர்ப்பதற்கு
வள்வார் முரசம் அதிர்ந்தான் டதுந்தொண்டை மண்டலமே.

வானூறு மதியை யடைந்ததுன் வதனம் வையகம் அடைந்ததுன் கீர்த்தி
கானூறு புலியை யடைந்ததுன் வீரம் கற்பகம் அடைந்ததுன் கரங்கள்
தேனூறு மலராள் அரியிடஞ் சேர்ந்தாள் செந்தழல் புகுந்ததுன் மேனி
யானுமென் கலியும் எவ்விடம் புகுவோம் எந்தையே நந்தி நாயகனே.

மேற்குறித்த தொண்டைமண்டலசதகத்தானும், இவன் பிரிவை நினைந்து ஒரு புலவன் வருந்திக்கூறிய இவ் இரங்கற்பாவனும், இவனது அழகும், புகழும், அறிவும், வீரமும், ஊக்கமும், ஆக்கமும், உண்மையும், வண்மையும், பிறவும் இனிது புலனும்

## கதை 2

ஓரி என்பவன் கடைவள்ளல்கள் எழுவருள் ஒருவன். இவன் சிற்றரசனாயினும் பேரரசரும் வியக்கத்தக்க பெருவண்மை யுடையவன். ஊக்கமுடைமையே உறுதியான கைப்பொருளாகக் கொண்டவன். அஞ்சா நெஞ்சினன். வஞ்சமில்லாதவன். உள்ளத்தூய்மையே உயிர்கட்கு ஆக்கமென்னும் உண்மையை இவன் உணர்ந்து தெளிந்தவன். பெரும்படையுடன் தன்னைப் பொரும் படி வந்த காரியோடு தன் ஊக்கமே துணையாக இவன் போரில் தாக்கி எதிர்த்தவன். கல்வியறிவில் சிறந்தவனாயினும் விநோதங்களில் மிக விருப்பமுள்ளவன். கூத்தாட்டத்தில் வல்லுநரான கூத்தர் சிலர் பல இடங்களிலும் சென்று ஆடித் தாம் நாடியபடி பரிசிலையடையாதவராய் இறுதியில் இவனையடைந்து தகுதிபெற ஆடினார். தனக்கு மிகச்சிறந்தவுடைமையாயிருந்த ஒருமலைப்பகுதியை அவர்க்கு இவன் உதவினான். பொருள்மிக இருந்தும் உள்ளமில்லாமையால் வள்ளல் என்னும் பெருமையைப் பிறர் கொள்ளாதிருப்ப இவன் ஊக்கத்தால் அதனைக்கொண்டு திகழ்ந்தான். அதனால் நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக் குறும்பொறை நன்னாடுகோடியர்கீந்த, காரிக்குதிரைக் காரியொடுமலைந்த ஓரிக்குதிரை ஓரி எனச் சிறுபாணாற்றுப் படையுள் நல்லூர் நத்தத்தனார் என்னும் புலவர் பெருமானால் இவன் போற்றப்பட்டுள்ளான். உள்ளமுடையவரே வள்ளியம் என்னும் செருக்கைக் கொள்ளுவர் என்னும் உண்மைக்கு இவனும் இங்கு உரிமையாய் நின்றான். விரிவைப் புறநானூற்றில் காண்க.

ஊக்கமுடையவர்க்கே ஈதலின்பம் உண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

599 பத்துத் தலையானும் பாய்ந்தேன் சடாயுவந்து
கொத்தப் பயந்தான் குமரேசா—மெத்தப்
பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின். (௯)

இ—ள்.

குமரேசா! சடாயு வந்து பாய்ந்தபொழுது பத்துத் தலைகளையுடைய இராவணனும் ஏன் பயந்து நின்றான் எனின், பரியது கூர்ங்கோட்டது ஆயினும், புலிதாக்குறின் யானை வெரூஉம் என்க.

பத்துத்தலையான் = இராவணன். இத்தலைச்சுட்டு அவனது பருமையின் நிலைமை கருதநின்றது. உம்மை உயர்வு சிறப்பு.

பரியது = பெரிய உடம்பினையுடையது. இது பருமை என்பதன் அடியாகப்பிறந்தது. கூர்ங்கோட்டது = கூரிய கொம்பினையுடையது. கொம்பின் கூர்மையினும் உடம்பின் பருமை யானைக்கு இயல்பானதாதலால் அவ்இயைபுதோன்ற அது முதலில் நின்றது.

வெருவும் என்பது வெரூஉம் என இன்னிசைதோன்ற அளபெடுத்துநின்றது. வெரூஉம் = அஞ்சும். தாக்குதல் = அடித்தல், பாய்தல், எதிர்த்தல்.

பருத்திப்பொதிபோல் உடல்பருத்து, வடித்தவேலைக் கையில் பிடித்து நின்றாலும் ஊக்கமில்லாதவன் அஃதுடைய ஒருவனைக் கண்டால் உள்ளம் நடுங்குவான் என்பதை உணர்த்துதற்கு யானையையும் புலியையும் அமைத்துக்காட்டிய நயத்தை இதில் ஆய்ந்து காண்க. கருதியதொன்றைப் பிறிதொருமொழியால் உணரவைத்ததனால் இது பிறிதுமொழிதல் என்னும் அலங்காரமாம்.

மேல், தன்னை வள்ளலென உள்ளும்பெருமை ஊக்கம் இல்லாதவர்க்கு உண்டாகாது என்றார்; இதில், அவர் உடல் பருத்திருந்தாலும், படைமிகுத்திருந்தாலும், ஒரு பயனுமின்றி இழிவர் என்றார்.

யானை எல்லாவற்றினும் பெரியஉடம்பினது; அதுவுமன்றிக்

கூரிய கொம்பினையுமுடையது; ஆயினும், புலி எதிர்ப்புறின் அதற்கு அஃது அஞ்சும் என்பதாம்.

உடல்வலியும் படைவலியும் புறத்தில் எவ்வளவு உடையராயினும் அகத்தில் ஊக்கம் இல்லாத அரசர் அதனையுடையவர்க்கு உடைந்து ஒழிவர் என்பது கருத்து.

உருவப்பொலிவும் கருவிச்சிறப்பும் இலனாயினும் ஊக்கமுடையவன் தாக்கினால் எவரும் அஞ்சுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சடாயுபால் உணரப்படும்.

## கதை.

சடாயு என்பவன் சூரியசாரதியாகிய அருணன் புதல்வன். சம்பாதியின் தம்பி. கழுகுகளுக்கு அரசன். பறவை உருவினனாயினும் அறிவிலும் ஆற்றலிலும் மிகவும்பெரியவன். தயரதனுடைய உயிர்த்தோழன். சம்பரன் என்னும் அசுரனோடு அவன் பெரும் போர்செய்தபொழுது உடனிருந்து அம்மன்னனுக்கு இவன் உதவிபுரிந்தவன். அச்சமென்பதை அறியாதவன். அசுரர்பலரும் அஞ்சத்தக்க பெருவீரமுடையவன். ஆயினும், அருந்தவரெவரும் வியந்து போற்றும் பெருந்தகையினன்.

தூய்மையன் இருங்கலை துணிந்த கேள்வியன்
வாய்மையன் மறுவிலன் மதியின் கூர்மையன்
ஆய்மையின் மந்திரத் தறிஞ னாமெனச்
சேய்மையின் நோக்குறு சிறகனான் தனை.

வீட்டிவான் அவுணரை விருந்து கூற்றினை
யூட்டிவீழ் மிச்சில்தான் உண்டு நாடொறும்
தீட்டிமேல் இந்திரன் சிறுகண் யானையின்
தோட்டிபோல் தேய்ந்தொளிர் துண்டத் தான்தனை.

சொற்பங்க முறநிமிர் இசையின் சும்மையை
அற்பங்க முறவரும் அருணன் செம்மலைச்
சிற்பங்கொள் பகலெனக் கடிது சென்றுநீர்
கற்பங்கள் எனைப்பல கண்டுளான் தனை. எனக் கவியுலகில்

கம்பரால் இவன் காணப்பட்டுள்ளான். கோதாவரி நதியினருகிலுள்ள ஒருமலையில் இவன் தங்கியிருக்குங்காலத்தில் அங்குவந்த

இராம இலக்குவர்களைக்கண்டு தனது உரிமைத்தோழனது அருமைப்புதல்வரென வுணர்ந்து உற்றதற்கிரங்கி உள்ளமுருகி அதன் பின் அவரை ஓம்பிவந்தான். வருங்கால், அவ் வில்வீரர் இருவரும் இல்லாதபொழுது பொல்லாத இராவணன் உள்ளே புகுந்து கள்ளம்புரிந்து சீதையைக்கவர்ந்துகொண்டு சென்றதை இவன் இடையே கண்டான். அடா! எங்கடா போகின்றாய்! நில் நில் என்று வானிடைவிரைந்து வந்து நேரே இரைந்து நின்றான். அவன் நிமிர்ந்து நோக்கினான். தன் நெஞ்சங்கலங்கினான். எண்ணியதை முடிக்குமுன் இடையே இடையூறு நேர்ந்ததே! என்று அவன் எண்ணியுளைந்தான். ஆயினும், எடுத்ததை விடுத்திட இசையாமல் இலங்கையைநோக்கி விரைந்தான். பத்துத் தலைப்பதரே! பத்தினியை எங்குஎடுத்துப் போகின்றாய் என்று அவன் தேரில் இவன் பாய்ந்தான். வெள்ளிமலையை அள்ளியெடுத்த மெய்வலியும், ஒள்வாளும், வல்வில்லும் உடைத்தாயிருந்தும் இவன் எதிர்ந்து பாய்ந்தபொழுது அவன் அதிர்ந்து அஞ்சினான். பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை வெரூஉம் புலி தாக்குறின் என்னும் பொய்யாமொழியின் பொருண்மையை இவன்பால் அனைவரும் அன்று பொருந்தக்கண்டார். விரிவை இராமாயணத்தில் காண்க.

கொழுந்தே யனையாள் குழைந்தேங்கிய கொள்கைகண்டான்
அழுந்தேல் அவலத்திடை அஞ்சலை அன்னமென்னா
எழுந்தான் உயிர்த்தான் அடஎங்கினிப் போவதென்னா
விழுந்தான் அவன்தேர்மிசை விண்ணவர் பண்ணையார்ப்ப.

திண்டேர் அழித்து ஆங்கவன் திண்புறஞ் சேர்ந்ததூணி
விண்டான் மறைப்பச் செறிகின்றன வில்லிலாமை
மண்டாரமர்தான் வழங்காமையின் வச்சைமாக்கள்
பண்டார மொக்கின்றன வள்ளுகிரால் பறித்தான்.

பாய்ந்தான் அவன்பன் மணித் தண்டுபறித்தெறிந்தான்
ஏய்ந்தார் கதித்தேர்ப்பரி யெட்டினையெட்டு மெஞ்சித்
தேய்ந்தாசற வீசியத் திண்டிறற்றுண்ட வாளால்
காய்ந்தான் கவர்ந்தானுயிர் காலனுங் கைவிதிர்த்தான்.

மாச்சிச் சிரம்பாய்ந்தவன் மார்பினுந் தோள்கள்மேலும்
ஓச்சிச் சிறகாற் புடைத்தான் கடித்தான் உலையா
மூச்சிற்ற இராவணனும் முடிசாய்ந்திருந்தான்
போச்சு இத்தனைபோலும் நின்ஆற்றலெனப் புகன்றான்.

சடாயுவின் ஊக்கமும், உள்ளப்பண்பும், இராவணனைத்தாக்கிய தும், அதனால் அவன் தயங்கியதும், பிறவும் இவற்றுள் வயங்கு தல்காண்க.

உடல் வலியும் படைவலியுமுடையனாயினும் ஊக்கம் இல்லா தவனுக்கு அவற்றால் பயனில்லை என்பது இதனால்கூறப்பட்டது.

---

600 உள்ள வெறுக்கையொன்றே உற்றுயர்ந்து சாணக்கன்
கொள்ளநின்றான் சீரேன் குமரேசா—தள்ளா
உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு. (ώ)

இ—ள்.

குமரேசா! தன் ஊக்கமிகுதியையே உரனாகக்கொண்டு சாணக்கன் ஏன் எல்லாரினும் உயர்ந்து விளங்கினான் எனின், உரம் ஒருவற்கு உள்ளவெறுக்கை; அஃது இல்லார் மரம்; மக்கள் ஆதலே வேறு என்க.

ஊக்கமுடைமையின் பெருமையை உடன்பாட்டானும், எதிர்மறையானும், பிறவகையானும், இதுவரைவிளக்கி அவ்வுடைமை இன்மையால் உளவாகும் இழிவினை அறுதியிட்டு உறுதிபெற இறுதியாக இதில் உணர்த்துகின்றார்.

உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை = ஊக்கமே ஒருவனுக்கு நிலையுள்ளசெல்வமாம். வெறுக்கை என்பது பொன்னையும் பொருளையும் குறித்துவரும். வைத்ததன்றே வெறுக்கை; அன்ன வாகநின் அருங்கல வெறுக்கை; எனப் புறப்பாடல்களுள்ளும் வெறுக்கைக்கிழவன் மகளென்ன விருந்துசெய்தாள் எனச் சிந்தாமணியுள்ளும், ஈண்டிய வெறுக்கைஎனக் கந்தபுராணத்தும், வெறுக்கை என்னுஞ்சொல் விளக்கிநிற்கும் பொருளையுணர்க.

இனி, உரம் என்பதை அறிவாகவும், உள்ளவெறுக்கை என்பதை ஊக்கமிகுதியாகவும்கொண்டு ஒருவனுக்கு அறிவாவது

ஊக்கமிகுதியே எனவும் இது நோக்கப்படும். மேல், உருவத்தால் பெரியனேயாயினும் ஊக்கம் இல்லாதவனுக்கு உயர்வு இல்லைஎன்றார்; இதில், பிறப்பால் மக்களேயாயினும் அவர் மரங்களேயாவர் என்கின்றார்.



ஊக்கமே ஒருவனுக்கு நிலைபெற்றசெல்வம்; அவ்வூக்கம் இல்லாதவர் உருவால் மக்களேயாயினும், உண்மையில் மரங்களேயாவர் என்பதாம்.



ஊக்கமுடைமையே அறிவுடைய மக்கட்கு உயிருடைமையாகுமாதலால் அஃது இல்லாரை மரம் என்றார்; ஆயின் மரம் என்றதோடு நின்றுவிடாமல் மீண்டும் மக்களாதலே வேறு என்றது என்னையெனின், தளிர், இலை, கனி, கிளைகளையுடைய அச் சாதி மரங்களோடு இம் மடிமரங்கள் வடிவால் வேறுபட்டிருத்தலின் வேறுஎன விதந்து மறுத்தும் வுணர்த்தினார் என்க.

ஊக்கம் இல்லார் மரம்; என்றவுடனே கேட்டுநின்றவன் மனம் பொறாமல் ஆறறிவுவாய்ந்து யாண்டும் எண்ணிஇயங்கும் இயல்புடைய மக்களை, ஓரறிவுடையனவாய் நின்றஇடத்திலேயே நின்று கழியும் மரங்கள் என்றது எப்படிப்பொருந்தும்? என்று எதிர்த்துகேட்க மக்களுக்குரிய ஊக்கமும் முயற்சியும் இல்லாதொழிதலால் அது பொருந்தும் என அவனைநோக்கி இஃது அறைந்ததாகக்காண்க.

உண்ணல் உறங்கல் உரையாடல் போதல்வருதல் முதலிய தொழில்களுடைமையானும், விழுமியவுருவுடைமையானும், பொதுநோக்கில் மக்களாகக்காணப்பட்டாலும் மக்கட்டன்மையாகிய ஊக்கம் இல்லையாயின் அவர் மரங்களாகவே மதிக்கப்படுவர் என்க.

நிறைந்தபொருளும் சிறந்த அறிவும் ஒருவனுக்கு ஊக்கமேயாம் என்பது கருத்து.

ஊக்கமுடையவரே மக்களுள் உயர்ந்தவராவர் என்பதும், இல்லாதவர் இழிந்தவரேயாவர் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை சாணக்கியன்பால் உணரப்படும்.

## கதை

சாணக்கியன் என்பவன் மகததேசத்திலே குசுமபுரிஎன்

னும் நகரிலேயிருந்த மாவிரதன் என்னும் ஒரு சோழியவேதியனு டையபுதல்வன். இவனது காலம் இற்றைக்கு இரண்டாயிரத் திருநூறு ஆண்டுகட்கு முன்னரென்பர். இவன் மறையவரேயி னும் மன்னரும் வியக்கத்தக்க மனவுறுதியுடையவன். தன் உயிர்க்கு இறுதிவருவதாயினும் தான் கருதியதை இவன் முடித்தே தீருவன். ஒருநாள் விளைநிலமொன்றில் போய்க்கொண்டிருக்கையில் கட்டுவாகை என்னும் காட்டுக்கொடி இவன் காலில் தட்டியது. தன் இயக்கத்துக்கு இடர் இழைத்ததென்று சினந்து அற வேதொலைக்கவேண்டுமென்று அதனை இவன் அகழ்ந்துகொண்டிருந்தான். அவ்வமையம் அவ்வழியேவந்த சகடாலன் என்னும் அமைச்சன் அச்செயலினை வினவியுணர்ந்து இவனது ஊக்கமுடைமையைநோக்கிவியந்தான். தன் அரசனை வஞ்சித்து அரசுரிமையை வெளவிக்கொண்டு பாடலிபுரத்திலிருந்து அதுபொழுது ஆண்டுவருகின்ற நவநந்தன் என்பவனைத் தொலைத்தற்கு இவனே தகுதியானவன் என்றுகருதித் தனக்குத்துணைவனாக அணைத்துக் கொண்டு தன்வளநகரடைந்தான். அம் மன்னவன் முன்னர் ஒரு நாள் இவனை மருவ விடுத்தான். இவனது மனப்பான்மையை யறியாமல்அவன் இவனை அவமதித்தான். நான் பார்ப்பானானால் உன்னை ஒருகைபார்க்கின்றேன் என்று ஆர்த்தெழுந்து தன் சிகையை அவிழ்த்துத் தொங்கவிட்டுக்கொண்டு வெளியேவந்தான். குறித்த வினையை முடித்தாலொழிய தான் விரித்த மயிரை முடிப்பதில்லையென்று இவன் விரைந்துபோனான். போனவன் அவனை வெல்லுதற்கு ஆன உபாயங்களெல்லாம் ஏழு நாட்களுக்குள் அமைத்துக்கொண்டு மீளவும்வந்து அவனை மாளச்செய்தான். அவன் மாண்டுதொலைந்தபின் முன்னையமன்னன் மகனாகிய சந்திர குப்தன் என்பவனுக்கு முடிசூட்டி அவ்வரசினை உரிமைசெய்தான். அம்மன்னன் இவனைக் குருவாகவும் தெய்வமாகவும் கொண்டாடித் தனக்கு மந்திரியாகப் பின் அமைத்துக்கொண்டான். இவனும் அமைச்சனாக அமர்ந்து நின்று அவ் அரசுக்கும் உலகிற்கும் நலம்பலபுரிந்து வந்தான். இவனது மனத்திட்பத்தையும் வினைத்தூய்மையையும் வேந்தர் பலரும் வியந்து போற்றினர். அரசமுறைக்குரிய பலவகைத்துறைகளையும் தெளிவுறவிரித்து

அரிய நீதிநூல் ஒன்று எவரும் எளிதிலுணருமாறு வடமொழியில் இவன் அருளியுள்ளான். இவனது உணர்வும் ஊக்கமும் சூழ்ச்சியும் மாட்சியும் இடங்கடோறும் அதில் இனிதுற மிளிர்கின்றன. நூற்றைம்பது அதிகாரங்களையுடையதாய்ப் பதினேந்து காண்டங்களில் ஆறுயிரம் சுலோகங்களால் அதுமுடிந்துள்ளது. அந்நூல் சாணக்கியநீதி என்று இவன் பெயரால் விளங்கி வழங்கி வருகின்றது. வேறெவராலும் முடித்தற்கரிய பெரியகாரியங்களையெல்லாம் தன் ஊக்கமுடைமையால் முடித்து இவன் உயர்ந்து விளங்கினன். இவன் மாற்றார் ஊக்கமின்மையால் ஒருபயனும் இலராகியிழிந்தார். உரமே ஒருவனுக்கு உள்ளவெறுக்கையாம் அஃதில்லார் மரமேயாவர் என்பதை இவன், மாண்புற உணர்த்தினன். விரிவை வாருசியத்தில் காண்க.

ஊக்க முரண்மிகுதி யொன்றிய நற்சூழ்ச்சி
யாக்க மவன்கண் அகலாவால்—வீக்க
நகப்படா வென்றி நலமிகு தாராற்
ககப்படா வில்லை யரண். (வெண்பாமாலை).

மனிதனுகப்பிறந்திருந்தாலும் ஊக்கமில்லாதவன் மரமேயாவன் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

ஊக்கமுடையவரே உடையர்என்று சொல்லுதற்கு உரியராவர். பொருளுடைமையினும் ஊக்கமுடைமையே ஒருவனுக்கு உண்மையான உடைமையாகும். ஆக்கம் இழந்தாலும் ஊக்கமுடையவர் உள்ளங்கலங்கார். அவரைத் தேடிக்கொண்டு அவ் ஆக்கம் தானகவே அவரிடம் வந்துசேரும். தம் ஊக்கத்துக்குத் தக்கவாறே மக்கள் உயர்ச்சியையடைவர். தான் உயர்ந்த நிலையையடையுமாறே ஒருவன் உள்ளுதல் வேண்டும். உள்ளியது தவறினும் ஊக்கமுடையவர் தம் உள்ளந்தளரார். வள்ளலென்னும் பெருமையை உள்ளமில்லாதவர் எய்தார். உருவத்தில் மிகப்பெரியவனுயினும் ஊக்கமில்லாதவன் அதனையுடையவனுக்கு அஞ்சுவான். மக்களேயாயினும் ஊக்கமில்லாதவர் மரங்களேயாவர்.

௬0-வது ஊக்கமுடைமை முற்றிற்று.

# 61-ம் அதிகாரம் மடியின்மை.

அஃதாவது சோம்புதலில்லாமை. மனக்கிளர்ச்சியோடு முயற்சி செய்யாதபடி இச் சோம்பல் தன்னையுடையவரைக் கூம்பச்செய்து பின் தேம்பவிடுக்கும் ஆதலால் இத்தீமையை அறவே அரசன் ஒழிக்கவேண்டும் என்று இஃதுணர்த்துகின்றது. மேற் குறித்த ஊக்கமுடைமைக்கு இது மாறுயது ஆதலால் வேறுக எதிர்மறுத்து அதன்பின் வைக்கப்பட்டது. கொள்ளத்தக்கது ஆதலின் ஊக்கத்தை உடைமையாகவும், மடி தள்ளத்தக்கது ஆத லின் அதனை இன்மையாகவும் இசைத்தார் என்க.

601 அன்று மடியூர்ந்த ஆத்திரே யன்குடிபின்
குன்றிநின்ற தென்னே குமரேசா—நன்றும்
குடியென்னும் குன்ற விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும். (க)

இ—ள்

குமரேசா! ஆத்திரேயன் என்பவன் மடியினையடைந் தான் அதனால் அவன்குடி ஏன் மாய்ந்து தொலைந்தது எனின், குடி என்னும் குன்ற விளக்கம் மடி என்னும் மாசு ஊரமாய்ந்து கெடும் என்க.

விளக்கம் கெடும் என இயைத்துக்காண்க. என்னும் என்பன இரண்டும் உருவகவுருபுகள். குடியின் உயர்வுதோன்ற அதனை விளக்கம் என்றும், மடியின் இழிவுதோன்ற அதனை மாசுஎன்றும் உருவகித்தார்.

குன்றுஎன்பது குன்று என்னும் வினையடியாகப்பிறந்த எதிர் மறைப் பெயரெச்சம். குன்றுவிளக்கம் = குன்றுததீபம். வாடாவி ளக்கு என்றவாறு. குன்றுதல் = வாடுதல், மழுங்குதல். குடியைக் குன்றுவிளக்கம் என்றது இடையறவுபடாது தொடர்புற என் றும் விளங்கிவருவது என்னும் இயைபு கருதி என்க.

மடி என்னும் மாசூர = மடியாகிய குற்றம் பரவ. ஊர்தல் = தவழ்தல், ஏறுதல், பரவல். மடி ஊர மாய்ந்துகெடும் என்றது இடிவிழ எரிந்து இறந்தான் என்பதுபோல் காரணகாரியப்பொரு ட்டாய் நின்றது.

மடி கொடியது; தம்பால் இல்லையாம்படி அறவே மக்கள் அதனை ஒழிக்கவேண்டும்; என்ன, அங்ஙனம் ஒழிக்காது ஊரவி டின அதனுல் என்னும் என்பாரை நோக்கி இஃது இயம்பியதாகக் காண்க.

குடியாகிய நந்தா விளக்கு மடியாகிய தீமை நெருங்கமாய்ந் துபோம் என்பதாம்.

மடிபுகுந்தால் முயற்சியின்றும்; அதனுல் பொருள்வளம்யா தும் இலதாம்; ஆகவே அக்குடி உயிரில்லாத உடல்போல் ஒரு நலமுமின்றி வறிதே கழிந்தொழியும் ஆதலால் மடிஊரக் குடிமாய் ந்துகெடும் என்றார்.

மடியால் ஒருவன் குடிமாய்ந்துபோம் எனத் தனியேகூறி விடாமல் மாசையும் விளக்கத்தையும் மருவிக்கூறிய தென்னையெ னின், தகழியில் நெய்பெய்து திரியிட்டுத் தீயேற்றின் சுடரொளி ஓங்கிவிளங்கும்; அங்ஙனம் விளங்கிவருங்கால் அத் திரிநுனியில் கருள்என்னும் மாசுதிரண்டு மல்கினுல் அவ் விளக்கம் குன்றி முடி வில் அணைந்துபோம்; அதுபோல் இல்லமே தகழியா, இற்பிறந்த மகனே திரியா, ஊக்கமே நெய்யா, முயற்சியே சுடரா அமைந்து ஒருகுடி விளங்கிவருங்கால் அம் மகன்பால் மடிதோன்றின் அக் குடி விளக்கம் குன்றிப் பின் அடியோடு அழிந்துபோம் ஆதலால் இங்ஙனம் உருவகித்து உணர்த்தினர் என்க.

உருவகத்தை உருவநோக்காமல் விளக்கம் என்பதற்கு ஒளி என்று பொதுவாகப் பொருள்கொண்டு மாசுஊர அது மறையும் என நிறைவுறினும் அமையும்.

இனி, மாசு என்பதற்கு இருள் என்று பொருள்கொண்டு பரிமேலழகர் உரைத்தபடியே உரைத்தால் என்னையெனின், விளக் குப்புக இருள் மாயுமேயன்றி இருள், விளக்கை மாய்த்தல் யாண் டும் இன்மையானும், அங்ஙனம் இசைத்தல் இயற்கைக்கு மாறும் ஆதலானும், ஒளியை மாய்க்கவல்லதோர் இருள் எனப் புதுவதா கப் படைத்துக்கூறின் உலகமலைவாகும் ஆதலானும், அங்ஙனம் உரைத்தல் பொருந்துமா? என்பதைப் பொருந்தியுணர்க.

ஒருவன் சோம்பலுடையனாயின் அவன்பிறந்த குடும்பம் இருந்தஇடமும் தடந்தெரியாமல் விரைந்து அழிந்துபோம் என்பது கருத்து.

மடி குடியைக்கெடுக்கும் கொடியது ஆதலால் மக்கள் அதனை முடியக்கெடுத்து முயன்று தம் குடியை விளக்கவேண்டும் என்பது குறிப்பு.

மடியுடையான் குடி அடியோடு அழிந்துபோம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆத்திரேயன்பால் உணரப்படும்.

## கதை.

ஆத்திரேயன் என்பவன் சோழநாட்டிலே வேதிமங்கலம் என்னும் ஊரிலே அத்திரி என்னும் ஓர் வெதியனுக்குப் புத்திரனாய்த்தோன்றினன். இவனது காலம் இற்றைக்கு இரண்டாயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முன்னரென்பர். இவன் அழகில் சிறந்தவன். அறிவில் இழிந்தவன். ஒருமகனாயிருந்தபடியால் இருமுதுகுரவரும் இவனைப் பெருமகிழ்வோடு போற்றிவந்தார். இவன் பருவமெய்தினன். ஒருமுயற்சியுமின்றி அறிவிழந்து திரிந்தான். இரவு முழுவதும் காவாகப்புகுந்து கருதிய மகளிரைக் கலந்து களித்தான். பகலெல்லாம் உறங்கிக்கழித்தான்.

பேய்மொழி கேட்கும் யாமம் பிறன்கடை திரிவான் ஈன்ற
தாய்மொழி கேளான் மற்றுந் தந்தைதன் மொழியும் கேளான்
ஏயுமேற் குலத்தே வந்தும் இழிகுல விடர்பாற் கூடி
யாய சூகரத்தைச் சேர்ந்த ஆனிளங் கன்று போன்றான்.

பெருக்காயத் திரிகுலத்துப் பிறந்துமே பிறமாதர்
செருக்காயத் திரிகுலத்தார் பிறரோடுஞ் சென்றுழல்வான்
இருக்காயத் திரிவாரை இகழுவான் இனமயில்போல்
உருக்காயத் திரிமயக்கால் உயர்காயத் திரிமறந்தான்.

அஞ்சுமகம் அஞ்சுமக மாயினன் உயர் குலத்து
விஞ்சுசீர் அறுதொழிலும் அறுதொழிலாக் கைவிட்டான்
பஞ்சணையிற் கலவிநலம் பாராட்டிச் செவிக்கோதும்
வஞ்சியர்கள் சதுர்மறையே வழங்குசதுர் மறையானன். என்ற

படி தீவினைக்கே இவன் இரையாயினன். அங்ஙனம் மடியும் மடமையுங்கொண்டு வினையிலந்த இவனது கொடுமையைக்கண்டு பெற்றோரும் இவனைப் பேணாதிகழ்ந்தார். பெருங்கவலையுற்றார். இவன் எவர்மொழியும் கேளாமல் ஒருதொழிலும் பாராமல் தன் மனம்போனபடியேயலைந்து முடிவில் மடிந்துதொலைந்தான். ஒரு மகனானபடியால் பெற்றோரும் இவன் பிரிவுக்கு இரங்கிப் பேதுற்றழிந்தார். வழிவழியாகச்சிறந்து பெருந்திருவோடு விளங்கிவந்த இவன்குடியும் இழிந்தழிந்தது; பின்பு இருந்த இடமும் தெரியாமல் தொலைந்தொழிந்தது. குடிஎன்னும் குன்றா விளக்கம் மடி என்னும் மாசூரமாய்ந்து கெடும் என்பதை உலகம் இவன்பால் ஆய்ந்துகண்டது. விரிவைச் சிவகசியத்தில் காண்க.

மடியால் ஒருவன் குடி மாய்ந்துபோம் என்பது இதனால் கூறப்பட்டது.

602 தன்னுமடி யென்றொழித்தேன் தானப்பன் தன்குடிசீர்
கொள்ள முயன்றான் குமரேசா—எள்ளும்
மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

குமரேசா! மடியைக் கொடிது என்று கருதிக் கடிந்தான் தானப்ப முதலியார் தன் குடியைப் பேணினார் எனின், குடியைக் குடியாக வேண்டுபவர், மடியை மடியா ஒழுகல் என்க.

தன்னுமடி = வறுமை சிறுமைகளில் தள்ளுகின்றமடி.

மடியை மடிஆ ஒழுகல் = சோம்பலைச் சோம்பலாகவே கருதி ஒழுகுக. அங்ஙனம் கருதின் அதன் கொடுமையை அஞ்சிக் கடிவர் என்பது கருத்து. அல்விகுதி உடன்பாட்டு வியங்கோளில் வந்தது.

இனி, மடியா என்பதைச் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் கொண்டால் மடியை மடித்து என்று பொருள் கொள்க. அஃதாவது சோம்பலைத் தம்பால் இல்லையாம்படி மாய்த்து என்றவாறு.

வேண்டுபவர் ஒழுகல் என்றதனால் ஒழுகாதவர் வேண்டாதவராய் இழிவர் என்பதாயிற்று.

மேல், மடி ஒருவன் குடியை அடியோடு கெடுத்துவிடும் என்றார்; இதில், குடிகெடுக்கும் அக்கொடியதைக் குறிக்கொண்டு நீத்தவரே தம் குடியைக் காத்தவராவர் என்கின்றார்.

தாம் பிறந்த குடியைச் சிறந்த குடியாகச் செய்ய விரும்புகின்றவர், சோம்பலை, அறவே தொலைத்து ஒழுகவேண்டும் என்பதாம்.

மடி குடியைக் கெடுத்துவிடும் என்றஞ்சி அதனையறவே ஒழித்து ஒருவன் ஒழுகவில்லையாயின் அவன் குடி ஒழிந்துபோம் என்றவாறு. ஒருவன் குடி ஓங்கவேண்டுமாயின் அவன் மடி நீங்க வேண்டும் என்பது கருத்து.

செல்வம் கல்வி முதலிய நலங்களை ஈட்டித் தம் குடும்பத்தை மேன்மைப் படுத்தும் பான்மையுள்ள குலமக்கள் மடியை ஒருபோதும் மருவார் என்க.

தெளிவுற நூல்பல தினமும் ஓதியே
மிளிருடல் வருந்தியும் வெறுக்கை யீட்டிநற்
கிளிமொழி மனைவியைக் கிளைஞரைப்பல
எளியரைத் தாங்குவோர்க் கில்லை மந்தமே. என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

மடியில்லாதவனே தன் குடியை மாண்புறச் செய்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தானப்ப முதலியார் பால் உணரப்படும்.

## கதை.

தானப்ப முதலியார் என்பவர் இற்றைக்கு எழுநூறு ஆண்டுகட்கு முன்னர்த் தொண்டைமண்டலத்திலே களத்தூர் என்னும் நகரிலே இருந்தவர். வேளாண் மரபினர். இவருடைய தந்தையார் பெயர் வேதியப்ப முதலியார் என்பர். இவர் பொருளுடையவர். பல நூல்களையும் ஓதியுயர்ந்தவர். ஈதலே தன் உயிர்க்கு ஊதியம் என்பதை இயல்பாக இவர் உணர்ந்து தெளிந்தவர். இவர் இளமையாயிருக்கும் பொழுதே தந்தையாரது வள்

னெலாம் குன்றியது. இவர் பருவமெய்தினார். தளர்ந்திருந்த தன் குடியை வளம்பெறச் செய்யவிரும்பினார். உளந்தளராது முயன்றார். அதனால் நிலம்பல எய்தி நிவந்தார்.

ஆக்கமிங் கொருவரால் அணுக வேண்டுமேல்
ஊக்கமுண் டாவரேல் உறுவர் அன்னது
நீக்கமில் கொள்கையி னிற்பரேயெனின்
மேக்குறு பெருந்திரு விரைவின் மேவுமால்.

என்ற மெய்யுரையின்படி எல்லா நலங்களும் இவர்பால் எய்தி நின்றன. தன் விளைபுலங்கள் பெரும் பலன்கள் தருமாறு நாளும் இவர் பேணி வினைசெய்து உற்றவரெவர்க்கும் உளமகிழ்வோடு உதவிவந்தார். அதன்பயனாக இவர் வயலில் ஒருமுறை நெற்கதிர்கள் பல பொற்கதிர்களாகப் பொங்கி நின்றன. இவர் வியந்து மகிழ்ந்து அவற்றையும் நெல்லைப்போலவே குவித்து எல்லார்க்கும் பகுத்து ஈந்தார். அதுமுதல் அவ்வூர் பொன்விளைந்தகளத்தூர் என்று போற்றப்பெற்றது. இவர் மடியற முயன்று தளர்ந்த குடிகள் பலவற்றையும் தாங்கித் தன் குடியையும் ஓங்கச் செய்தாராதலால் **குடிதாங்கி முதலியார்** என்று அனைவராலும் கொண்டாடப் பெற்றார். ஆதலின் மடியை மடியா ஒழுகல் குடியைக் குடியாக வேண்டுபவர் என்னும் மெய்ம்மொழிக்கு இலக்காய் இவர் ஈண்டு மேவி நின்றார்.

நன்றாய் விளைந்ததை வேதியர்க் கீந்தந்த நன்மையினால்
பொன்றான் விளைந்திட நெற்போலவே அதைப் போரடித்துக்
குன்றாக் குவித்ததை நெற்பரிமாற்றங் கொடுத்தளித்தான்
மன்றார் களத்தைக் **குடிதாங்கி**யுந் தொண்டை மண்டலமே.

படிக்காசுப் புலவர் இவரது பண்பினை வியந்து தொண்டை மண்டல சதகத்தில் இங்ஙனம் பாடி மகிழ்ந்துள்ளார். மடியை யற ஒழித்துக் குடியை நிலைநிறுத்திய இவரது நிலைமையும் பிறவும் இதனால் நெடிது புலனும்.

மடியில்லாதவன் குடியே மாண்பினையடையும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

603 கன்றுமடிகொண்ட கவுற்சனேன் தன்குடிமுன்
குன்ற மடிந்தான் குமரேசா—என்றும்
மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியும் தன்னினு முந்து. (௩)

இ—ள்.

**குமரேசா!** மடியுடைய கவுற்சன்குடி ஏன் அவன் மடியுமுன்னரே மாய்ந்து போயது எனின், மடி மடிக்கொண்டு ஒழுகும் பேதை பிறந்தகுடி, தன்னினும் முந்து மடியும் என்க.

மடி இரண்டனுள் முன்னது சோம்பல்; பின்னது வயிறு என்க.

மடிமடிக்கொண்டு = மடியைத் தன் மடியில் வைத்துகொண்டு; என்றது சோம்பலைத் தன்னுள்ளேகொண்டு என்றவாறு. மடி என்னும் வயிற்றின் பெயர் ஈண்டு உள் என்னும் பொருளில் நின்றது. ஒருவன் ஒருபொருளைத் தன் வயிற்றுடன் இறுக்கி வைத்திருப்பின் அவன் அதனை அடிமடிக் கொண்டுள்ளான் என்பர்.

இனி, மடிக்கும் மடி என வினைத்தொகையாக்கின் தன்னை யுடையானை அழிக்கும் சோம்பல் என்று கொள்க.

பேதை = அறிவில்லாதான். பால்தோன்றாது கூறினர் அவன் கீழ்மை தோன்ற. தன்னினும் முந்துமடியும் = அப்பேதை அழியுமுன்னரே அவன் பிறந்தகுடி அழியுமென்றவாறு.

எல்லா ஆக்கங்களையும் எளிதில் நல்கவல்ல ஊக்கத்தைக் கைவிட்டு குடிகெடுப்பதைத் தன் மடியில் வைத்துக்கொண்ட அவன் மடமை கருதிப் பேதை என்றார். கையல்லதன்கட் காதன்மை செய்தலே பேதைமை என்க. பேதைமை யென்ப தோன்றியாதேனின் ஏதங்கோண் டூதியம் போகவிடல்; என்றதும் ஈண்டு உள்ளத்தக்கது.

மேல், தான்பிறந்த குடியைச் சிறந்த குடியாகச் செய்ய விரும்புவோன் மடியைச் சேறலாகாதென்றார்; சேர்ந்தால் அவன்குடி உடனே இதில் மாய்ந்துபோம் என்கின்றார்.

சோம்பலைத் தன்னுள்ளே கொண்டு ஒழுகும் அறிவிலிபிறந்த குடி அவன் மடியுமுன்னரே அழிவுறும் என்பதாம்.

மடியுடையான்குடி பொருள்வளம் குன்றும்; அதனால் அதன் பெயர் விளக்கம் இன்றும்; அஃது அங்ஙனமாயினும், அவன் வினையுள்ள அளவும் மாய்வு இலனாய் வறுமையும் பழியும் எய்தி நடைப்பிணம்போல் நாட்டில் அலைந்து திரிவனாதலால் பேதை பிறந்தகுடி அவன் தன்னினும் முந்து மடியும் என்றார்.

சோம்பரென்பவர் தேம்பித்திரிவர் என்ற ஔவையார் அருள் மொழியும் ஈண்டு அறியத்தக்கது.

மடியன் மாய்ந்துபடு முன்னரே அவன்குடி தேய்ந்துவிடும் என்பது கருத்து.

மடியையுடையவனே மடையனாவன் என்பதும், அவன் மடிந்துபோமுன்னரே அவன்குடி அழிந்துபோம் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை கவுற்சன்பால் உணரப்படும்.

## கதை

கவுற்சன் என்பவன் தொண்டைமண்டலத்திலே காஞ்சி நகரிலே இருந்தவன். குற்சன் என்னும் ஓர் வேதியனுடைய புதல்வன். இவன் காலம் இற்றைக்கு இரண்டாயிர ஆண்டுகட்கு முன்னராம். இவன் பிறந்தபொழுது இவன் குடி சிறந்த நிலையில் இருந்தது. இவன் இழிந்த குணத்தினன். முயல்வினை யிகந்து மயல்வினை யுவந்தான்.

மரபுசேர் குற்ச னென்னும் மறையவன் தனக்குப் பாபர்
இருவரும் உச்ச மேறச் சுபரெலா நீசம் எய்த
உரகரும் காரி சேயும் உதித்திட உதித்தான் மன்றே
கரவடன் கவுற்சன் என்பான் கரும்பினில் அரும்பு போல்வான்.

மடமெலாம் ஒன்ருய்ப் பாலன் வடிவெடுத் தெனவே தோன்றிப்
புடவியில் ஒழுக்க மாதி புண்ணிய நெறிகள் யாவும்
இடைபடக் கிடந்து பாவம் கிளர்வுறத் தவழ்ந்து பொல்லா
நடலையும் கொலையும் சூதும் நடைபெற நடைபெற்றனே.

என்றபடி கெடுநிலையில் வளர்ந்து பின் மடியும் மடைமையும் கொண்டு இவன் மதத்துத் திரிந்தான்; வீணர்கள் கூட்டத்தை

யே இவன் காணியாக விரும்பினன். பெறும் பொழுதனைத்தை யும் வெறும் பொழுதாக்கினன். தாய்மொழி மறுத்தான். தந்தை யையும் இகழ்ந்தான். தன் சிந்தை சென்ற வழியே சென்று களித் தான். ஒருதொழிலுமின்றி வறிதேகழியும் இவனது இழிநிலையை நினைந்து இருமுது குரவரும் அழிதுயரடைந்தார். இவன் பருவம் எய்து முன்னரே திருமுழுவதையும் சோஇழந்தான். அதன் பின்னர்யாரும் இகழ இவன் பாரில் அலைந்தான். வித்தி நல்லறம் விளைந்த அதன்பயன்—துய்ப்போர் தம்மனைத் துணிச்சிதர் உடுத்து —வயிற்றுக்காய் பெரும்பசி அலைத்தற்கு இரங்கி—வெயிலென முனி யாது புயலெனமடியாது—புறங்கடை நின்று புன்கண்கூர்ந்து முன்—அறங்கடை நில்லா தயர்வோர் பலரால். என்ற அருண் மொழியின்படி இவன் அயர்ந்து நொந்தான். மடி மிகுந்த இவன் மிடிபுகுந்தலையக் குடியும் அழிந்து பழியும் அடைந்தது. மடிமடிக் கொண்டொழுகும் பேதைபிறந்த குடிமடியும் தன்னினும் முந்து என்னும் உண்மைக்கு இவன் முந்தியிருந்தான்.

மடியுடையான் குடி விரைவில் மாய்ந்துபோம் என்பது இத னால் கூறப்பட்டது.

---

604 அன்று புகழ்ச்சத்தி யாதனனும் ஏன்மடிந்து
குன்றி யிழிந்தான் குமரேசா—நின்ற
குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு. (ச)

இ—ள்.

**குமரேசா!** மடிமிகுந்திருந்த சத்தியாதனன் தன் குடி யினை யிழந்து ஏன் குன்றினன் எனின், மடி மடிந்து மாண்ட உஞற்று இலவர்க்கு குடிமடிந்து குற்றம் பெருகும் என்க.

உஞற்று இலவர்க்குக் குற்றம் பெருகும் என இயைத்துக்கா ண்க. மடி மடிந்து = சோம்பலின் கண்ணே அழுந்தி. எச்சம்இதில் ஏதுப்பொருளுற நின்றது.

உஞற்று இலவர் = முயற்சி இல்லாதவர்.

தன்னை யுடையானுக்கு எல்லாமாட்சிகளையும் முயற்சிநல்கவல்லதாதலான் மாண்ட என்னும் அடையினை அதுமருவி நின்றது. மடியில் மடிந்தவர் ஒருகால் உஞற்றுவாராயினும், திருந்தச்செய்தல் பயன்மிகவருதல் முதலிய மாட்சிகள் பொருந்த ஆற்றாராதலால் அது தோற்ற அவ் அடை ஏற்றியதெனினுமாம்.

மடிந்து இரண்டனுள் முன்னது அழிந்து எனவும், பின்னதுவீழ்ந்து எனவும் பொருள்படும். மடிதல் = சாதல், சாய்தல், சோம்பல். உவவு மடிந்து உண்டாடியும் என்ற பட்டினப்பாலையையுங்கண்டு ஒட்டிநோக்குக.

மடியுடையான்குடி அவன்மடியுமுன்னரே மேல் அழியும் என்றார்; இதில், அவனுக்கு இழிவுகள் பல எய்துமென்றார்.

சோம்பலின்கண்ணே வீழ்ந்து சிறந்த முயற்சி இலராயினார்க்குக் குடியும் அழிந்து குற்றமும் மிகும் என்பதாம்.

முயற்சியைக் கைவிட்டு ஒருவன் மடியுடையனாயின் அவனை மிடி அடையும்; அதனால் அவன் குடிகெடும்; அதன்பின் சிறுமையும் பழியும் எய்தி இருமையையும் இழந்து அவன் இழிக்கப் படுவன் ஆதலால் மடியுடையானுக்குக் குடியும் மடிந்து குற்றமும் பெருகும் என்றார்.

உடையுணவு நீக்கும் உளமறிவு தேய்க்கும்
நடைகளிப்பு மாய்க்கும் நலிவெல்லாம் தோய்க்கும்
திடன்மதிப்புக் கல்விகுணம் சீர்சாய்க்கும் சார்ந்தே
மடிதான் முயற்றில் வழி. என்றபடி தன்னைச்சார்ந்தவர்க்கு எல்லா இன்னல்களையும் மடி அடைவிக்கும் என்க.

தான் பிறந்த குடியையும் இழந்து இழிந்த துயரங்கள் பலவும் மடியுடையான் அடைந்து வருந்துவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சத்தியாதனன்பால் உணரப்படும்.

## கதை

சத்தியாதனன் என்பவன் விதர்ப்பதேசத்து வேந்தன். தாலபுரம் என்னும் நகரிலிருந்து இவன் அரசுபுரிந்தான். இவன்கா

லம் இற்றைக்கு மூவாயிர ஆண்டுகட்கு முன்னாம். இவன்சிறந்த அழகும் நிறைந்த திருவும் சேரப்பெற்றவன். இவன் மனைவிபெயர் சதி. அவள் பேரழகுடையவள். அவளது இன்பப்பரப்பிலேயே இவன் மிக இழிந்து திளைத்தாலால் முறைசெய்தலை முழுதும் மறந்தான். ஒரு முயல்வுமின்றி இல்லாள் இன்பமே இல்லாக்கொண்டு இவன் இருந்துவருங்கால் இவன் பகைவனுகிய துன்மருடணன் என்பவன் இவன் நிலைமையை அறிந்து மகிழ்ந்தான். மடிபுகுந்திருக்கும் இந்நிலையிலேதான் இவனை முடியவெல்லமுடியும் என்று அவன் கருதிச் சூழ்ந்து படையோடெழுந்து வந்து ஒருநாள் இவன் நகரினைவளைந்தான். உற்றதைபுணர்ந்து பின் இவன் உளைந்துநொந்தான். முற்றிய பகைவனால் இவன்முடிந்துமடிந்தான். உற்றவரனைவரும் ஓடியொழிந்தார். இவன் சுற்றமும் துணைவரும் துயரடைந்தழிந்தார். மடிமிகுந்திருந்ததால் இம்முடிவுவந்ததென்று இவன் குடிகளெல்லாரும் கூடிநொந்தார். அவ்வமையம் கருவுற்றிருந்த இவன் மனைவி ஒருவரும் அறியாவகை தனிவனமொன்றில் மறைவுற்றிருந்தாள்.

மடிசேரும் அவர்க்கொரு நாளும் மறல்
விடியாதவர் நெஞ்சிடை வெந்துயரே
குடியாகும் மறந்தொடர் குற்றமெலாம்
நெடிதாக வளர்ந்திடும் நிச்சயமே. என்ற நீதிமொழியினை இவன் நினைந்து திருந்தாமல் மடிந்து தொலைந்தானே! என்று அறிஞரனைவரும் இவன் அழிநிலைமைக்கு இரங்கியுளைந்தார். சிறந்திருந்த குடியும் இவன் மடிந்தொழிந்தபின் இழிந்தழிந்தது. பழிபுகுந்து வளர்ந்து நின்றது. குடிமடிந்து குற்றம்பெருகும் மடிமடிந்து மாண்ட உளுற்று இலவர்க்கு என்ற உண்மையை உலகம் இவன்பால் கண்டது விரிவைப் பிரமபுராணத்தில் காண்க.

மடிமிகுந்தவன் குடியினையிழந்து குற்றம் அடைவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

605 கேடுற்றான் முன்னம் கிரீவன் மடிமறவி
கூடியதால் என்னே குமரேசா—கோடும்
நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன். (ரு)

61-ம் அதிகாரம் மடியின்மை.

இ-ள்.

குமரேசா! அயக்கிரீவன் மடியும் மறவியும் கொண்டதால் என் மடிந்து ஒழிந்தான் எனின், நெடுநீர் மறவி மடி துயில் நான்கும் கெடுநீரார் காமக் கலன் என்க.

நான்கும் நீரார் கலன் என்பதிலுள்ள நயத்தை இதில் நயந்து காண்க.

நெடுநீர் = நீண்ட தன்மை; அஃதாவது உடனே செய்யவேண்டியதான ஒருகாரியத்தை இன்று செய்வோம்; நாளைச்செய்வோம்; நாளைநின்றுசெய்வோம்; என நீளக்கடத்திநிற்கும் பாழியல்பு. வடநூலார் இதனைத் தீர்க்கசூத்திரதை என்பர். இது மடிக்கு முதற்படியாகுமாதலால் முன்னுறவைத்தார். மடிமகனுக்கு முன்னுள்ள இரண்டும் தூல சூக்கும உடம்புகளாகவும், பின்னது காரணமாகவும் கருதப்படும். வைப்பு முறையால் அவற்றின் பருவ முறைகளையும் உருவ நிலைகளையும் உணர்ந்துகொள்க.

மடியின்மை என்னும் இவ் அதிகாரத்தில் நெடுநீர்முதலிய மூன்றையும் இடையேபுகுத்தியது என்னையெனின், மடிபோல அவையும் குடிகேடுதருவன ஆதலால் அதனோடு இங்கு உடன் எண்ணநின்றன என்க. இன்துயில் எவர்க்கும் இன்றியமையாதது ஆதலால் துயில்என்றது ஈண்டு நெடுந்துயிலை என்க. முன்னின்ற நெடுமையைப் பின்னுள்ள மூன்றனோடும் பெய்துகாண்க.

கெடுநீரார் = அழியும இயல்பினையுடையார். காமக்கலன் = விரும்பிஏறும் மரக்கலம். கலன் என்பதை அணி என்று கொள்ளின்விரும்பிப்பூணும் ஆபரணம் என்று கொள்க.

தாமதமும், மறப்பும், சோம்பலும், துயிலும், ஆகிய இந்நான்கும் அழியும் இயல்பினையுடையார் ஆர்வமுற்று ஏறும் மரக்கலமாம் என்பதாம்.

தமக்கு இதமாயிருக்கும் என்றுகருதித் தன்மேல் விரும்பி யேறினவரைச் சிறிதுதூரம்போயபின் கடலிடையே கவிழ்த்து ஒழியும்கெடுகப்பல்போல் மடி துயில் முதலியன முதலில் இன்பம்

பயப்பனவாக அமைந்துநின்று பின்பு தம்மைக்கொண்டவரை அடியோடு கெடுத்துவிடும்; ஆதலால் அவை காமக்கலன் என நின்றன.

சோம்பலும் நெடுந்துயிலும் ஒருவனிடந்தோன்றுமாயின் அவன் விரைந்தழிதற்கு நிகழ்ந்த கெடுகுறிகளாக அவற்றை உணர்ந்துகொள்ள வேண்டுமென்பது கருத்து.

வானுலாம் அருணனென்னும் மக்கள் ஆயுளின் கணக்கன்
தானெழும் முன்எழாரைச் சகத்திரக் கரத்தால் தட்டும்
ஏனென எழார்வாழ்நாளை எண்குறைத் தெழுதிக்கொள்வான்
ஆனதுகண்டு காலன் அவரிடம் அணுகுவானே. என்றதும்

ஈண்டு அறியத்தக்கது. மடியும் மறவியும் உடையான் கடிதில் மடிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அயக்கிரீவன்பால் உணரப்படும்.

## கதை.

அயக்கிரீவன் என்பவன் தேவதம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த ஓர் அரக்கர்குலவேந்தன். இவன் உயர்ந்த வரபலங்களையுடையவன். சிறந்த போர்வீரன். குதிரை முகமும் மனித வடிவுமுடையவனாதலால் இவனுக்கு அயக்கிரீவன் என்று பெயர் அமைந்தது. அயம் = குதிரை. கிரீவம் = கழுத்து. மதனசுந்தரி என்னும் தனது இனிய மனைவியோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து தேவர்முதல்பாவரையும் ஏவலாகக்கொண்டு இவன் சிறந்துவிளங்கினான். ஆண்டுகள் பலகழிந்தபின் தன் செல்வத்திமிர்ப்பால் எல்லாருக்கும் இவன் அல்லலை இழைத்தான். அதனால் அமரரனைவரும் இவன்பால் பகைமைகொண்டனர். அங்ஙனம் பலர் பகைமைகொண்டிருப்பவும் இவன் தகைமையொன்றுமின்றிப் பொறியின்பங்களையே நுகர்ந்து வறிதேயிருந்தான். ஒருமுறையுஞ்செய்யாமல் மடிமிகுந்து இவன் அறிவிழந்திருப்பதையும், பகைவர்மிகவளர்ந்து பொரநினைந்திருத்தலையும், எதிரறிந்து தெளிந்து அமைச்சர் பலர் இவனுக்கு அறிவுறுத்தினர். இவன் யாதும் தேராதவனாய்த் தீதையே நேர்ந்து தியங்கி நின்றான்.

விழிதெரிந் திருக்கவும் குருடு மேவுவர்
மொழிதெரிந் திருக்கவும் மூகராகுவர்

பொழிமது வன்றியும் மயக்கும் பூணுவர்
அழிதரு காலமாம் அரசர் வண்ணமே, என்றவாறு

அழிநிலைக்கேயேதுவான பல இழிகுணங்களையும்பேணி இவன்வழி திரிந்து வருங்கால் இவன்போல் வடிவங்கொண்டு திருமால் அமர் செய்யவந்தார். மதிமயங்கித் துயில்புரிந்திருந்த இவன் அவர் வரவறிந்தகால் எதிரெழுந்துவந்தான். அயமுகம்பொருந்தி அவர் அமர் விரும்பிநிற்பதை இவன் அமைவுறக்கண்டான். "யாவராலும் நீ சாவதில்லை; ஆயினும் உன்முகத்தோடு ஒருவன் நின்றுன் தோன்றுவனுயின் அவனுடன் அமர்புரியற்க; புரியின் உடனே நீ அழிவாய்" என்று தேவியருளியிருந்த ஆசிவாதத்தையும் அறவேமறந்து இவன் அமர்செய்யத்துணிந்தான். உடனே அவரால் இவன் இறந்து விழுந்தான். சிறந்த வலிகளையுடையனுயிருந்தும் மடியும் மறவியும் குடிபுகுந்ததனுல் இவன் மடிவுறலானுன். நெடுநீர் மறவி மடி துயில் நான்கும் கெடுநீரார் காமக்கலன்; என்னும் உண்மையை இவன் அன்று காட்டி நின்றுன். விரிவைத் தேவிபாகவதத்தில் காண்க.

மடியும் மறவியும் மக்கட்குக் கெடுதிகளாம் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

தண்டார் அசமஞ்சன் சத்திரபந் தேன்புவிமுன்
கொண்டுமெய்த வில்லை குமரேசா—கொண்ட
படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடையார்
மாண்பய னெய்த லரிது. (௩)

இ—ள்.

குமரேசா! அரசவுரிமை அமைந்திருந்தும் அசமஞ்சனும், சத்திரபந்துவும் என் அதன்பயனை அடையவில்லை எனின், படியுடையார் பற்று அமைந்தக் கண்ணும், மடியுடையார் மாண்பயன் எய்தல் அரிது என்க.

உம்மை அஃது அமைதலின் அருமையை உணர்த்திநின்றது. அருமை இன்மைமேற்று.

படியுடையார் என்றது அரசரை; படி = பூமி. அதனைத் தனக்கு உரிமையாகவுடையவர் என்றவாறு. பற்று = செல்வம். அமை

ந்தக்கண்ணும் = பொருந்திய விடத்தும். அமைதல் = அடங்குதல், பொருந்தல், அடைதல், நெருங்குதல்.

செல்வத்தை ஈட்டற்கும் காத்தற்கும் துய்த்தற்கும் மூயற்சியே காரணமாகுமாதலால் அஃதில்லாத மடியர் படிமுழுதும் பெற்றாலும் பயன்பெறார் என்றார்.

மேல், கெடும் இயல்புடையாரே மடிமிகவுறுவர் என்றார்; இதில், படிமுழுதடையினும் அதனால் அவர் பயனடையார் என்றார்.

உலகமுழுவதையும் ஆளுகின்ற அரசாதுசெல்வம் எய்தியவிடத்தும் மடியினையுடையார் அதனால் சிறந்தபயனை அடைதல் அரிது என்பதாம்.

இனி, படிமுழுதுமுடைய மன்னர் துணைமை கிடைத்தவிடத்தும் மடியுடையார் அதனால் பயனடையார் எனவும் இது பொருள்பட நின்றது. இதில், பற்று = அன்பு, துணை.

மனைவி திருமகளனையளேயாயினும் கொண்டவன் குருடும் பேடும்கொண்டவனாயின் அவளால் எய்தும் இன்பத்தை அவன் யாதும் எய்தான்; அதுபோல், அரசசெல்வம்முழுவதும் தன்பால் வலியவந்து அமைந்திருப்பினும், மடிமகன் அதன் பயனைச்சிறிதும் அடையான் என்க.

பெருந்திரு அடையினும் மடியர் அதன்பயன் அடையார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அசமஞ்சதன் கண்ணும், சத்திரபந்துவின் பாலும் அறியப்படும்.

## கதை.

அசமஞ்சதன் என்பவன் சூரியகுலத்தோன்றலாகிய சகரமன்னனுடைய புதல்வன். தாய்பெயர் சுகேசினி. இவன் பருவமெய்தியபின் ஒருதொழிலும் இன்றிப் பித்தன்போல் வறிதேஒடுங்கியிருந்தான். உண்மையில் இவன் மனநலமுடையனாயினும் உலகநிலைக்குமாறாய் மடிமிகுந்திருந்தான். இவன் இருப்பை வெறுத்துத்தந்தை தாயர் திருத்தமுயன்றார்.

காலபார் கோத்து ஞாலத் தியக்கும்
காவற் சாகா டுகைப்போன் மாணின்
ஊறின் றாகி யாறினிது படுமே

பயுந்தல் தேற்றுறேன் வைகலும்
பகைக்கூழ் அள்ளற் பட்டு
மிகப்பழிநோய் கலந்தலைக் குநமே. என்று பலப்பல நீதிகளையெடுத்து விளக்கி இவனை முயற்சியில் புகுத்தினர். இவன் அதில் சிறிதும்புகாமல் மடியேபுகுந்தான். அதனால் மன்னன் மனங்கவன்று வைது இவனை வனத்துக்கோட்டிவிட்டு இவன் மகனாகிய அஞ்சுமானுக்கே முடிசூட்டி அரசுநிலை உரிமைசெய்தான். படிமுழுதும் அமைந்திருந்தும் தன் மடியுடைமையால் அதன் பயனையடையாமல் படுவனம் அடைந்தானே! என்று இவனது நிலைமையை நினைந்து அனைவரும் பரிந்திரங்கினர். படியுடையார் பற்றமைந்தக்கண்ணும் மடியுடையார் மாண்பயன் எய்தல் அரிது என்பதை இவன் இயைந்துகாட்டினான். விரிவை மனுமாபில்காண்க.

கதை 2.

சத்திரபந்து என்பவன் விசுவாதன் என்னும் சூரியகுலத்து வேந்தனுடைய புதல்வன். இவன் மிகக்கொடியவன். மடியும் படையுமே குடியாகக்கொண்டவன். அல்லும் பகலும் இன் அல்வழியிலேயே திமிர்ந்து யாதொரு தொழிலுமின்றித் தீதே மிருந்தான். வேறுமுயற்சியிலனாயினும் துயிற்சுவையிலும் அயிற்சுவையிலும் இவன் மிகப்பயிற்சியுடையனாயினன். குடிகேட்டிற்கு ஏதுவாயமடியினை மேற்கொண்டு இவன் மதியற்றிருத்தலுக்கிரங்கி மதியுடையார் சிலர் இவனுக்கு மதியூட்டினர். இவன் யாதும்கேளாதவனாய்த் தாழ்வின்கண்ணேயே தூங்கி வாழ்வற மயங்கினான். கேடுகள் பல இவன்பால் நாளும் வளர்ந்தன.

கண்கூடாப் பட்டது கேடெனினும் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி
தான்வாய் மடுப்பினும் மாசுணம் கண்துயில்வ
போரா பெருமூச்செறிந்து. என்றவாறே இவன் மடிமீக்கூர்ந்தான். அதனால் அரசுரிமையை அடியோடு இழந்து இவன் அடவியிற்புகுந்தான். அங்கு வேடனாய்நின்று வெந்தொழில் புரிந்தான். வளர்குடிப்பிறந்தாரேனும் வாழ்வுண்டோ மடியற்றார்க்கே என்ற முதுமொழியின்படி இவன் வாழ்வினையிழந்து தாழ்வடைந்

தானே யென்று அனைவரும் தயங்கி நொந்தார். நிலமுழுதும் ஆளும் தலைமையெய்தியிருந்தும் தன் மடியுடைமையால் அதனைக் கடிதில் இழந்து கொடியனாகி இவன் குலநலம் அழிந்தான் ஆதலால் படியுடையார் பற்று அமைபினும் மடியுடையார் மாண்பயன் எய்தார் என்பதை உலகம் அறிய இவன் உணர்த்திநின்றான். விரிவை விண்டு தருமத்தில் காண்க.

உலகமுழுதும் அமைந்தாலும் மடியுடையார் அதனால் ஒரு பயனும் அடையார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

607 எள்ளி யிடித்துரைத்தார் ஏவலரும் கும்பகன்னன்
கொள்ளுமடி கண்டேன் குமரேசா—உள்ளே
இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர். (எ)

இ—ள்

குமரேசா! மடிகொண்ட கும்பகன்னன் என் பின்பு இடிகொண்டு இகழப்பட்டான் எனின், மடிபுரிந்து மாண்ட உஞற்று இல் அவர், இடிபுரிந்து எள்ளும் சொல் கேட்பர் என்க.

ஏவலர் = ஏவிய தொழில்களைச்செய்வோர்; தொண்டுபுரிவோர் என்றவாறு. உம்மை இழிவுசிறப்பு.

இவர் கேட்பர் என இயைத்துக்காண்க. மடிபுரிந்து = சோம்பலைவிரும்பி. புரிதல் = விரும்பல், செய்தல். மாண்ட உஞற்று = சிறந்தமுயற்சி. மாட்சியாவது திருந்தச்செயல், பயன்மிகச்செய்தல் முதலாயின.

இடிபுரிந்து = இடித்தலைச்செய்து; ஒருவன் தீவழியில் செல்லுங்கால் அங்ஙனம் செல்லலாகாது என்று அவன் நண்பர் அவனைவற்புறுத்திகூறுதலை இடித்தல் என்பர்; நகுதற்பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற்பொருட்டு; எனவும், இடித்திடித்துக் கட்டுரைகூறிற் செவிக்கொளா—கண்விழியா—நெட்டுயிர்ப்போடுற்றபிணம்; எனவும் வருவனவற்றுள் இடித்தல் உணர்த்திநிற்கும் பொருளையுணர்க.

மேல், அரசநிருவந்து அமைந்தாலும் மடியுடையான் அதன் பயனை அடையான் என்றார்; இதில், அவன் இடிபட்டு இகழப்படுவான் என்கின்றார்.

மடியைவிரும்பிச் சிறந்த முயற்சியில்லாதவர் இடியுற்றுப் பின் இகழ்ந்து சொல்லும் சொல்லைக் கேட்பர் என்பதாம்.

முயற்சியுடையவர் செல்வம் கல்வி முதலிய எல்லாநலங்களையுமடைந்து புகழ்ச்சிக்குரியராய்த் திகழ்வர்; அஃதில்லாதமடியர் வறுமை பழி முதலிய சிறுமைகளை மருவி இகழ்ச்சிக்குரியராய் எல்லாராலும் எள்ளப்படுவர் ஆதலால் "உஞற்றுஇலவர், எள்ளுஞ் சொல்கேட்பர்" என்றார்.

ஒருவன் மடியுடையனுயின் அவன் குடியில் பல கேடுகள் தோன்றும்; தோன்றவே "இப்படுமகன் நெடுமாடுபோல வளர்ந்திருந்தும் ஒரு முயல்வுமின்றித் தன் குடிகெடநின்றானே" என்று படியிலுள்ளவர் அவனைப்பழித்து இடிப்பர்; அங்ஙனம் இடித்துச் சொல்லுங்கால் எதிர்த்து யாதும்சொல்ல வழிஇல்லாமையால் அம் மடிமகன் தலைகுனிந்து வருந்தியிருப்பன் என்பதாம். இத்தகைய இழிவிற்கும் வருத்தத்திற்கும் ஏதுவாய அப் பழிமடியை மக்கள் சிறிதும்பற்றலாகாது என்பது கருத்து. மடியைவிரும்பி வந்தேயிருந்தவன் பின்பு இடிமிகப்பெற்று இகழப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கும்பகன்னன்பால் உணரப்படும்.

## கதை

கும்பகன்னன் ஒருமுயல்வு மின்றி மடிமிகுந்து உறங்குகையில் இலங்கையில் பல கேடுகள் புகுந்தன. படைகள் பலமாண்டபின் இராவணன் எழுந்துபோய் இராமனோடு எதிர்த்து அமராடி வலிமுழுதும் இழந்து மனமழிந்து இறங்குகண்ணினனாய் எல்லழி முகத்தினனாய்த் தன் இல்லை வந்தடைந்தான். அதன்பின் தன் தம்பியை அழைத்துவரும்படி கிங்கரர் சிலரை ஏவினன். அவர் ஓடி வந்தார். இவன் உறங்குவதைக்கண்டார். உணர்த்த முயன்றார். தம் மாலான்வரையும் தட்டி யெழுப்பியும் எழுந்திராமல் இவன் விழுந்துறங்கினன். அதனால் அவர் வெகுண்டு இடித்து வெய்து வைதார்.

உறங்கு கின்ற கும்பகன்ன உங்கள்மாய வாழ்வெலாம்
இறங்கு கின்ற தின்றுகாண் ! எழுந்திராய் எழுந்திராய்
கறங்கு போல விற்பிடித்த காலதூதர் கையிலே
உறங்கு வாய் உறங்குவாய் இனிக்கிடந்துறங்குவாய்.

என்றுமீறி லாவரக்கர் இன்பமாய வாழ்வெலாம்
சென்றுதீய நம்முன்னோன் தெரிந்துதீமை தேடினான்
இன்றிறத்தல் திண்ணமாக இன்னுமுன்னுறக்கமே
அன்றலைத்த செங்கையால் அலைத்தலைத் துணர்த்தினர்.

இங்ஙனம் வருத்தியுணர்த்தியபின் சிறிதுணர்ந்து விழித்தான். உன்குடி அடியோடு கெடுகின்றதே நீ ஏன் இங்ஙனம் மடிகொண்டு மாய்கின்றாய்? என்று அவர்வாய் வந்தனகூறி வைதிடித்தார். அவர் இகழ்ந்து சொல்லுமவற்றிற்கு எதிர்த்துச்சொல்ல வழியில்லாமையால் வீரனாயிருந்தும் யாதுங்கூறாமல் இவன் இரங்கிநொந்தான். பின் எழுந்துசென்றான். மடிபுரிந்து மாண்ட உளாற்று இலவர், இடிபுரிந்து எள்ளுஞ் சொற்கேட்பர்; என்பதை உலகம்காண இவன் உணர்த்திநின்றான்.

மடியுடையான் எல்லாராலும் இகழப்படுவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

608 வென்றி அதிகனுமுன் வெம்மடிகொண் டொன்றால்
குன்றினன் என்னே குமரேசா—கன்றும்
மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் ஒன்னார்க்
கடிமை புகுத்தி விடும். (அ)

இ—ள்.

குமரேசா ! மடிமையுற்றதனால் தன் பகைவர்க்கு அடிமையாகி ஏன் அதிகன் அழியலுற்றான் எனின், மடிமை குடிமைக்கண் தங்கின், தன் ஒன்னார்க்கு அடிமை புகுத்திவிடும் என்க.

உம்மை அவனது முன்னைய திண்மையை யுணர்த்திநின்றது. மடிமை = மடியினது தன்மை. அஃதாவது ஒருமுயற்சியுமின்றி வறிதே சோம்பியிருத்தல். ஒன்னார் = பகைவர்.

புகுத்தும் என்றதனால் புகுவதனிழிவும், அவனது இசைவின்மையும் புலன்கொள நின்றன. தன் என்றது குடிமையுடைய

தன்னை என்றவாறு. அடிமைபுகுதற்கு இயைபில்லாத அவனது உயர்வை இஃது உணர்த்தியதென்க.

எவ்வளவு மிடியராயினும் பிறர்க்கு அடியாராக யாரும் இசையார்; அக்கொடிய இழிநிலையில் இருந்துவருந்தும்படி தன்னையுடையானை மடி தள்ளிவிடும் ஆதலால் அப் பொல்லாததைச் சிறிதும் கொள்ளாது அறவே தள்ளியொழுகவேண்டும் என்பது கருத்து.

மடியை விரும்பினவன் இடிபுரிந்து மேல் இகழப்படுவன் என்றார்; இதில், அவன பகைவர்க்கு அடிமையாகியே யிழிவன் என்றார்.

மடியினது தன்மை ஒருவனது குடிமையின்கண்ணே தங்குமாயின், அஃது அவனைத் தன்பகைவர்க்கு அடிமையாக்கியேவிடும் என்பதாம்.

முயற்சியுடையவன் பொருள்படைகளால் உயர்ச்சியெய்தி இசையோடு எல்லாரையும் ஆள்வான் ஆதலால் அஃதில்லாதவன் அடியனாகி வசையில் வீழ்வான் என்றார்.

இழிந்தமடியினையுடையவர் உயர்ந்தநிலையினை ஒருபோதும் அடையார் என்பது கருத்து.

"பாரெல்லாம் ஆள் வேந்தரும் நால்தேர் பண்யோரும்
சீரெல்லாம் சூழ் செல்வரும் மந்தம் சேரரே
நேரில்லாமா பாதகர் இனர் நெடுஞ் சோரம்
ஊரெல்லாம் செய் துய்பவர் மாசோம் புடையாரால்." எனறும் ஈண்டு உன்னத்தக்கது.

மடிமையைத் தனக்கு உரிமையாகக்கொண்டவன் பிறர்க்கு அடிமையேயாவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அதிகன்பால் உணரப்படும்.

## கதை.

அதிகன் என்பவன் கொங்குநாட்டின் மேல்பாலிருந்த பெருநிலப்பகுதியைத் தனக்கு உரிமையாக்கொண்டு அரசுபுரிந்த ஒரு குறுநிலமன்னன். உயர்திருவடைந்தும் இழிகுணமே மலி

ந்து இவன் களிமிகுத்திருந்தான். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னராம். உறையூரிலிருந்து அரசுபுரிந்து வந்த சோழமன்னர்க்கு இவன் மரபினர் வழிவழியாகத் திறைசெலுத்தி வந்தனர். அரசக்குரிய முறை ஒன்றுஞ் செய்யாமல் பொறியின்பங்களையே நுகர்ந்து இவன் மடி புகுந்திருந்தானாதலால் அதனைத் தகுதியறிந்து செலுத்தாமல் மிகை புரிந்துநின்றான். அதனால் பகை வளர்ந்தது. இவன் காலத்தில் அரசுபுரிந்திருந்த புகழ்ச்சோழன் என்னும் மன்னர்பெருமானர் இவனது மிகைச்செயலை யறிந்துவெகுண்டு இவனை வென்று வருமாறு சில படைகளை யேவினர். இங்ஙனம் பகைமலிந்து படையெழுந்து வரும்வரையும் இவன் ஒருவகையும் செய்யாமல் மடிமிகுந்தே யிருந்தான். படைகள் வந்து தன் நகரை வளைந்த பின் இவனதிர்ந்து எழுந்தான். நிகழ்ந்ததை யறிந்து நெஞ்சங் கலங்கினன். பின் நேர்ந்து பொர இயலாமல் இவன் நிலைகுலைந் தழிந்தான். தன் உரிமை முழுவதையும் இழந்து அவர்க்கு அடிமையாகவே இவன் அமர்ந்தான். மடிமை குடிமைக்கண் தங்கின் தன் ஒன்னார்க்கு அடுத்து அடிமை புகுத்திவிடும்; என்னும் உண்மைக்கு இவன் உரியவனாய் நின்றான். விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.

> சிற்றறும் பாதியாச் சீவகோடிகள்
> முற்றுமெய் யுழைத்துயிர் முறையிற் காக்குமால்
> சற்றுமெய் அசைவிலாச் சழக்கர் ஆருயிர்
> அற்றவோர் சவங்கொல் மற் றசரமே கொலோ.
>
> (நீதிநூல்).

மடிமையுடையவர் அடிமையாவர் என்பது இதனால் கூறப்பட்டது.

609 உற்ற குடியை உயர்தரும குத்தனேன்
குற்றமறக் காத்தான் குமரேசா—பற்றிக்
குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

இ-ள்.

குமரேசா! தருமபுத்திரன் மடியறுபன்றதால் அவன் குடியில் வந்த குற்றம் என் கடிதின் நீங்கியது எனின், குடி ஆண்மையுள் வந்த குற்றம், ஒருவன் மடிஆண்மை மாற்றக் கெடும் என்க. குற்றம் கெடும் எனக் கூட்டிக் காண்க.

மடிமாறுமையே குடி கெட்டிற்குக் காரணமாகுமாதால் அதனை மாற்றக் கெடும் என்றார்.

குடி ஆண்மை = குடியை ஆளுந்தன்மை; அஃதாவது மடியின்றி முயன்று தான் பிறந்தகுடியைச் சிறந்த குடியாகச் செய்யும் இயல்பு. அதில் வந்த குற்றமாவது வறுமை, பகை முதலியவற்றால் நேர்ந்த தாழ்வுகள்.

இனி, இதனைக் குடியுள் வந்த குற்றம், ஆண்மையுள் வந்த குற்றம் எனத் தனித்தனி கூட்டி இருபாலினும் நேர்ந்த பிழை எனச் சார்ந்து காணினுமாம்.

மடி ஆண்மை = மடியை ஆளுந்தன்மை; அஃதாவது ஒரு தொழிலும் செய்யாது தமோகுணவபத்தனாய்ச் சோம்பியிருக்கும் இயல்பு.

மடியுடையான் தன் குடியை யிழந்து பகைவர்க்கு அடிமையாகிய இழிவன் என்று மேலுணர்த்தினார்; அங்ஙனம் இழந்து இழிவுறாமல் ஒருவன் சிறந்து விளங்கவேண்டுமாயின் அவன் யாது செய்யவேண்டும் என்பாரை நோக்கி இஃது இயம்பியதாகக் காண்க.

மடியை ஆளும் இயல்பை ஒருவன் ஒழித்துவிடின் அவன் குடியை ஆளும் திறத்தில் கூடியிருந்த குற்றம் அப்பொழுதே ஒழிந்துபோம் என்பதாம்.

ஒருவன் மடியை ஒழித்துவிடுவனாயின், அவன்குடியிலும், ஆண்மையிலும் மேன்மை யெய்துவான் என்பது கருத்து.

மடியோன் றளர்தேல் வல்விரைந்து வகுக்குந் தொழிலை நீட்டிக்கும்
கடியுமறவி துயில்விளைக்கும்; கலதிதனைச்சேர்த்திடும்; பகைவர்க்
கடிமை புகுத்தும்; குடிகெடுக்கும்; அதனைவிடுப்பின் ஆண்மையி
குடிமை யிடத்தும் வேறுளவாம் குற்றம் பலவும் ஒழிக்குமே. [னும்

என்றதும் ஈண்டு உணரத்தக்கது.

மடியை ஒழித்து ஒருவன் முயல்வனுயின் அவன்குடி மறு வின்றி விளங்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை தருமகுத்தன்பால் உணரப்படும்.

### கதை.

தருமகுத்தன் என்பவன் சந்திரகுல வேந்தனுகிய சத்தியாதனனுடைய புதல்வன். தாய் பெயர் சதி. இவன் கருவிலிருக்கும்பொழுதே தந்தை செருவிலழிந்தானுதலால் தாய் அறிவழிந்துபோய் ஒருகாட்டில் இவனை அலமந்துயிர்த்தாள். கருவுயிர்த்த இருமதிக்குள் ஒரு பொய்கையில் புகுந்து புனலருந்துகையில் முதலைவாயிலகப்பட்டு அவளுமுயிரழிந்தாள். இருமுதுகுரவரையும் இழந்து வனத்தில் இவன் வறிதே கிடந்தான். அவ்வமையம் அங்கோர் பார்ப்பனி வந்தாள். அவள் பெயர் உமை. இவனைக் கண்டு பெருமகிழ்வுகொண்டு தழுவியெடுத்துத் தன் அகம் புகுந்தாள். தன் புதல்வனுகிய சுசிவிரதனேடு சேர்த்து இவனை அவள் போற்றி வளர்த்தாள். இவன் பருவமெய்தினுன். சாந்தகர் என்னும் முனிவரொருவர் ஒருநாள் இவன் குலநிலைமையையுணர்த்தினர். இவன் உணர்ந்து வியந்து உளமிக நொந்தான். கரும்பில் அரும்புபோல் ஒருபயனுமின்றி வீணே அரும்பியுள்ளேனே என்று தன்பிறப்பினை முனிந்து இவன் பெருங்கவலைகொண்டான்.

தீங்கரும் பீன்ற திரள்கால் உளையலரி
தேங்கமழ் நாற்றம் இழந்தாஅங்கு—ஓங்கும்
உயர்குடி யுட்பிறப்பின் என்னும் பெயர்பொறிக்கும்
போரண்மை இல்லாக் கடை. என்பதைத்

தன் பெயர்க்கே உரிமைசெய்துகொண்டு இவன் பெருமுயற்சி செய்தான். அதன் பயனுக இவன் பெருந்திருவடைந்தான். இவனது அலையா அறிவையும், உலையா முயற்சியையும், உணர்ந்து வியந்து திரமிடன் என்னும் கந்தருவ வேந்தன் இவனைத் தன்பதிக்கு அழைத்துச் சென்று தனது அருமைத் திருமகளாகிய அஞ்சுமதி என்பவளை இவனுக்கு உரிமைசெய்து தந்தான். அப்போழகியோடமர்ந்து பெரும்போகங்களை நுகர்ந்து பின்பு தனது திருநகரை யடைந்தான். இவனது ஆண்மையை அஞ்சிப் பகைவரும் இவன்

பாலன்புடையாகி அடங்கியிருந்தார். தன்புகழ் எங்குஞ்செல்ல இவன் செங்கோல் செலுத்தினன். மடியின்றி முயன்றதால் முடிபுடைமன்னரும் அடிபரவும்படி இவன் முடிபுனைந்தாண்டான். குற்றமெய்திக் குன்றிநின்ற குடியை இவன் உற்று முயன்று உயர்த்தி விளக்கினன். குடியாண்மையுள் வந்த குற்றம் ஒருவன் மடியாண்மைமாற்றக் கெடும் என்பதை இவன் தோற்றி உணர்த்தினன். விரிவைப் பிரமோத்திரகாண்டத்தில் காண்க.

மடியில்லாதவன் குடியே மறுவற்று விளங்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

610 வென்றிமிகு கூற்றுவனார் மேதினியெல் லாமொருங்கே
குன்றாதேன் கொண்டார் குமரேசா—என்றும்
மடியிலா மன்னவ னெய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு. (௰)

இ—ள்

குமரேசா! மடியின்றி முயன்ற கூற்றுவனார் உலகமுழுவதையும் ஏன் ஒருங்கே கொண்டார் எனின், அடி அளந்தான் தாஅயது எல்லாம், மடி இலா மன்னவன் ஒருங்கு எய்தும் என்க.

எல்லாம் ஒருங்கெய்தும் என இயைத்துக்காண்க.

அடி அளந்தான் என்றது திருமாலை. வாமனவடிவங்கொண்டு மாவலியிடம்வந்து மூவடி மண்கேட்டு மேவிய உலகங்கள் யாவையும் தன் காலினளவால் தாவி அளந்தான் ஆதலால் அந்நெடுமாலை அடியளந்தான் என்றார்.

தாயது என்றது உலகத்தை; மால் தாவி அளந்தது என்றவாறு. அளபெடை தளைதாங்கின்றது.

மேல், ஒருவன் மடியின்மையால் அவன் குடியில் வந்த குற்றம் நீங்கும் என்றார்; இதில், அவன் உலகமுழுவதையும் ஒருங்கே அடைந்து ஓங்குவான் என்றார்.

மடியில்லையானல் அதனால்வரும் பயன்யாது என்பாரை நோக்கி இஃது இயம்பியதாகக்காண்க.

திருமால் அன்று நீட்டியளந்த உலகமுழுவதையும் மடியில்லாத அரசன் ஒருசேர அடைவான் என்பதாம்.

மடியினையுடையான் குடியினையிழந்து, குற்றங்களையடைந்து இடிமிகப்பெற்று, எள்ளலுற்று, அடிமையாகிப் பின் அழிந்தே தொலைவான் என்று மடியுண்மையால் உளவாம் கேடுகளை இதுவரை விளக்கிவந்து அஃது இன்மையால் எய்தும்பயனை உறுதி பெற ஆறுதியிட்டு இறுதியாக இதில் உணர்த்தியருளினார்.

மடியொன்றுமாத்திரம் ஒருவன்பால் இல்லையாயின் உலகமுழுவதையும் அவன் ஒருங்கே உடையவனாவான் என்றார் அவ்இன்மையாலெய்தும் நன்மையின் பெருமையை யினிதுணர்ந்து மக்கள்மடியகன்று மாண்புறுவர் என்பது கருதி.

மடியின்மையே திருமகளுக்கு உறைவிடமாகும் ஆதலால் அவளையுடையவன் அடிப்பட்ட உலகமுழுவதையும் அதனையுடையவன் அடைந்துகொள்வான் என்பார் அடியளந்தான் தாயதுஎல்லாம் மடியில்லா மன்னவன் எய்தும் என்றார். இடைவிடாது புயன்று திருமாலை மாவலியிடம் ஏவி அவன் அடியாற்கவர்ந்த உலகமுழுவதையும் இந்திரன் அன்று எய்திநின்றதனை எண்ணிவந்ததோ? எனவும் இஃது எண்ணநின்றது.

மடியில்லாதவனுக்கே இவ்வுலகமுழுவதும் உரிமையாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கூற்றுவனார்பால் உணரப்படும்.

## கதை

கூற்றுவனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்து மூந்நூறு ஆண்டுகட்கு முன்னர்க் களந்தை என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த ஒரு குறுநிலமன்னர். இவர் அறிவும் ஆண்மையும் அமையப்பெற்றவர். எண்ணிய எதையும் ஒருவன் எய்தலாம் என்னும் திண்ணியநிலையில் இவர் சிறந்துநின்றவர். இளமையாயிருக்கும் பொழுதே எல்லாருக்கும் தலைவராகவேண்டுமென்று இவர் எண்ணியிருந்தார். தாம் கருதியிருந்தபடியே பருவமெய்தியபின் இவர் உறுதியோடு முயன்றார். மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்—எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி—அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்—கருமமே கண்ணாயினார்;

என்றவாறு இவர் கருதி வினைசெய்தார். குறுநிலமன்னர் பலரை யும் இவர் பொருதுவென்றார். மாற்றலர்க்கு மறலிபோல் மருவி யிருந்தார் ஆதலால் கூற்றுவனார் என்று இவர் கூறப்பெற்றார். இவரது போராற்றலையும் போராற்றலையும் வியந்து அஞ்சி மறுபுல மன்னரனைவரும் திறைதர இசைந்து இவர் வழிமுறைநின்று முறை புரிந்துவந்தார். ஊக்கமோடு முயன்றதால் இவர் ஆக்கமீக்கூர்ந் தார்.

பொன்னின் ஆகும் பொருபடை அப்படை
தன்னின் ஆகும் தரணி தரணியிற்
பின்னை ஆகும் பெரும்பொருள் அப்பொருள்
துன்னுங் காலைத் துன்னாதன இல்லையே. என்றபடி

எல்லா நலங்களும் இவர்பால் துன்னிநின்றன. உலகமுழுவதும் உரிமையாக அமைந்தும் முடிபுனையும் உரிமையைப் படிமுறையில் இவர் அடையாதிருந்தார் ஆதலால் அதனையடையுமாறு துணி ந்து தில்லை வேதியரையழைத்து மந்திரமுறையோடு தனக்கு முடி சூட்டுமாறு உரைத்தார். சோழ மன்னருக்கன்றி வேறுயாருக்கும் தாங்கள் முடிசூட்டுவதில்லை என்று அவர்சொல்லியகன்றார். இவர் உள்ளங்கவன்று இறைவன்திருவருளை உள்ளியிருந்தார். இவர்கன வில் வந்து பரமனே திருமுடி புனைவதாக அருள் புரிந்தார். அவ்வாறே புனைந்து அரசுபுரிந்து அறங்கள் பல செய்து அரசர் பெருமான் என இவர் நிலவி நின்றார். செருக்குக்கேதுவாய செல்வநிலையிலிருந்தும் சிவவழிபாட்டிற் சிறந்திருந்தார் ஆதலால் அறுபான்மும்மைநாயன்மாரோடு ஒருயான்மையாகவைத்து இவர் போற்ற நின்றார். இவர் மடியின்றி முயன்றதால் படிமுழுதும் ஆளும் பதவியைப் பெற்றார் என அனைவரும் இவரது ஆண்மை யைப் புகழ்ந்தார். மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான் தாயது எல்லாம் ஒருங்கு; என்னும் உண்மைக்கு இவர் உரி மையாயிருந்தார். விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.

குன்றாத புகழாளர் களந்தைவேந்தர் கூற்றுவனார் மாற்றலர்மண் கொண்டு சூடப், பொன்றாழ முடிவேண்டிப் புலியூர்வாழும் பூசுரர்கள்கொடாதகலப்பு னிதனீந்த, மன்றாடுர் திருவடியே முடியாச்சூடி மாநிலங்காத் திறைவனுறை மாடக்கோயில், சென்றாசை யுடன்வணங்கிப் பணிகள்செய்து திருவருளால் அமருலகம் சேர்ந்துள்ளாரே.

இவரது ஆள்வினையுடைமையும், தாழ்வுறு கொடைமையும், படி முழுதும் எய்திய பான்மையும், சிவனருள்செய்த மேன்மையும், பிறவும் இதனால் இனிது புலனும்.

மடியில்லாதவன் உலகமுழுவதையும் ஒருங்கே ஆள்வானென்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

மடி ஒருவன் குடியைக்கெடுத்துவிடும். அக்கொடிய மடியைக் கொள்ளாதவனே தன்குடியை உயர்த்தவல்லவனுவான். அதனைக்கொண்டொழுகுவனுயின் அப்பேதைமகன் அழியுமுன்னரே அவன்குடி அழிந்துபோம். மடியையுடையவன் தன் குடியையிழப்பதோடு குற்றமும் அடைவான். மடியும், துயிலும், மறவியும், தமசும், கெடும் இயல்புடையார் குடிபுகும் இடமாம். உலகமுழுதும் அடையினும் மடியினையுடையார் அதனால் மாண்பயன் அடையார். மடியினையுடையவன் இடிமிகப்பெற்றுப் பின் இகழப்படுவான். மடிமையைக்கொண்டவன் பிறர்க்கு அடிமையே யாவன். மடியில்லாதவன் இவ்வுலகில் குடிநலமுடையனுய் மாண்புற்று வாழ்வான். மடியடையாதவன் இவ்வுலகமுழுவதையும் ஒருங்கே யடைவான்.

சுக-வது மடியின்மை முற்றிற்று.

---

# 62-ம் அதிகாரம் ஆள்வினையுடைமை

அஃதாவது முயற்சி யுடையராதல். ஆள்வினை என்பது முயற்சியையும் உற்சாகத்தையும் உணர்த்திவரும். ஆண்டகையோரால் ஆற்றநிற்பது என்பதாம். மடியிலனுயினும் கிளர்ச்சியோடு முயற்சி செய்யாவழி வளர்ச்சிபெற்று வாழமுடியாதாதலான் அவ்வினையை இடைவிடாது ஆளவேண்டும் என்று இஃதுணர்த்துகின்றது; ஆதலின் மடியின்மையின் பின் இது வைக்கப்பட்டது. அதிகாரமுறைமையும் இதனுனே புலனும்.

611 கண்டரிதென் றெண்ணன் கடலையுமுன் நின்றநளன்
கொண்டடைத்தான் என்னே குமரேசா—கண்டே
அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். (க)

இ—ள்.

குமரேசா! அரிதென்று கருதித் தளராமல் கடலையும் நளன் என் முன் முயன்று அடைத்தான் எனின், அருமை உடைத்து என்று அசாவாமைவேண்டும்; பெருமை முயற்சி தரும் என்க.

அசாவாமை வேண்டும் என்பது உண்ணாமைவேண்டும் புலால் என்றதுபோல் ஏவல்கண்ணிய வியங்கோள் என்க.

அசாவாமை = தளராமை; இஃது அசைவு என்பதன் அடியாகப்பிறந்தது. அசைவு = தளர்வு, சோர்வு, சலனம்.

வேண்டும் என்பது அசாவாமையுடன் கலந்து வியங்கோள் முற்றாகவும், பெருமைக்கு அடையாகவும் இடையேகருதநின்றது.

ஆதரிப்பாரொருவருமின்றி வழியிடை அசைந்துநின்ற சிறு கொடியும் வயிரங்கொண்டால் யானையையும் தன் வயப்படுத்த வல்லதாம்; அதுபோல் முதலில் மிகமெலியனாயினும் ஒருவன் தளர்வின்றி முயல்வனாயின் அவனை அது வலியனாக்கிவிடும்; விடவே அரியகாரியங்களும் அவனுக்கு எளிதில் முடியும் என்க.

ஆடுகோ டாகி அதரிடை நின்றதூஉம்
காழ்கொண்ட கண்ணே களிறணைக்கும் கந்தாகும்
வாழ்தலும் அன்ன தகைத்தே ஒருவன்றான்
தாழ்வின்றித் தன்னைச் செயின். என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது. நாம் செய்து முடித்தற்கு அருமையுடையதென்று ஒரு தொழிலைக்கண்டு தளராதிருக்கவேண்டும்; அது முடித்தற்கு ஏற்ற பெருமையை முயற்சிதானே கொண்டுவந்து தந்துவிடும் என்பதாம்.

முயன்றால் முடியாதது ஒன்றும் இல்லையாதலால் எதையும் கண்டு தளராமல் நீ முயற்சியைச்செய் என்று அடிகள் விதித்த ஆண்மையை இதில் ஆய்ந்து காண்க.

தளர்வின்றி முயல்வோனுக்கு எதுவும் எளிதில் முடியுமென்பது இதனால் கூறப்பட்டது.

---

612 மண்டுபுகழ் ஆட்கொண்டான் மாறுமல் என்வினையைக்
கொண்டு புரிந்தான் குமரேசா—கொண்ட
வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு. (உ)

இ—ள்.

குமரேசா! வினையை இடைவிடாமல் ஆட்கொண்டான் ஏன் உரிமையோடு செய்து வந்தான் எனின், வினைக்குறை தீர்ந்தாரின் உலகு தீர்ந்தன்று; ஆதலின் வினைக்கண் வினைகெடல் ஓம்பல் என்க.

முயற்சியானது தன்னையுடையானை எல்லா நலங்களையும் அடைதற்குரிய தகுதியுடையவனாக ஆக்கிவைக்கும் என்று மேல் அருளினார்; அத்தகைய முயற்சியைச் செய்யாமல் ஒருவன் கைவிடுவானாயின் அவனை உலகம் கைவிட்டுவிடும் என்று இதில் உணர்த்துகின்றார்.

வினைக்குறை என்றது முயற்சியை; வினையாகிய குறையை என்க. தம் கடமையாகக்கருதி மக்களால் நிறைவுற முடிக்கப் படுவதாதலால் கருமம், குறை என நின்றது. கொற்ற நீ கொடுக்கல்வேண்டும் குறை எனக் குரிசில் நேர்ந்தான் என்றார் திருத்தக்கதேவரும். காரியம் என்னும் பொருளில் குறையை இதில் கூறியுள்ளமை காண்க.

வினைக்கண் = செய்யப்படும் தொழிலின்கண்; வினைகெடல் = செயல் கெடுதலை; வளர்த்தல் காத்தல்களை உணர்த்திவரும் ஓம்பல் என்னும் சொல் ஈண்டு ஒழிக என்னும் பொருளில் வந்தது. எதிர்மறைவியங் கோளாகக் கொண்டு வினைகெடலை ஓம்பாதே எனினுமாம்.

ஆளும் வினையில் பாழும் மடிபுகுந்து கேடு தாராதபடி நாளும் நீ பாதுகாத்துக் கொள்க என்பார் "வினைக்கண் வினை கெடல்

ஓம்பல்" என்றார். தீர்ந்தாரின் உலகு தீர்ந்தன்று = நீங்கினாரினின்றும் உலகம் நீங்கினது. இனி, இரண்டாம் வேற்றுமைத் தொகையாகக் கொண்டால் தீர்ந்தாரை என்று கொள்க. இதில் இன்சாரியை.

முயற்சியைச் செய்யாது விட்டவரை உலகம் வைது கைவிட்டது; ஆதலால் செய்யத்தக்க தொழிலின்கண் செயல் கெடுதலை ஒழிக என்பதாம்.

தீர்ந்தன்று என்று இறந்தகாலத்தாற் கூறினார் தெளிவும் துணிவும் தோன்ற.

முயற்சியில்லாதவர் இவ்வுலகில் ஒரு வகையிலும் உயர்ச்சி பெறமுடியாதாதலால் உயிருடன் இருப்பினும் இறந்தவராகவே உயர்ந்தோர்கள் அவரை இகழ்ந்துவிடுவர் ஆதலால் வினைக்குறை தீர்ந்தாரின் உலகு தீர்ந்தது என்றார்.

இனி, வினைக்குறை என்பதை வினையெச்சம் எனப் பொருள் கொண்டால், செய்யத் தொடங்கிய வினையைக் கடைபோகச் செய்யாமல் இடையே கைவிடாதே; விடின் உன்னை உலகம் இகழ்ந்து நீங்கிவிடும் எனக் கொள்க. வினைக்குறையைத் தீர்த்தாரை உலகம்தீராது எனவும் இது கருத நின்றது.

முயற்சியை இடைவிடாமல் செய்தவரையே இவ்வுலகம் உயர்ச்சியாக வைத்துப்போற்றும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆட்கொண்டான்பால் உணரப்படும்.

## கதை.

ஆட்கொண்டான் என்பவன் சோழநாட்டிலே வக்கபாகை என்னும் நகரிலே மிக்ககீர்த்தியோடு விளங்கியிருந்த ஓர் வேளாண் மரபினன். இவனுடைய தந்தைபெயர் வாபதி ராயன் என்பர். இவனது காலம் இற்றைக்கு எண்ணூறு ஆண்டுகட்கு முன்னராம் இவன் அருங்கலை விநோதன். பெருங்கொடையாளன். பொருங்கலை விதங்களும் மருந்துறவுணர்ந்தவன். கருதிய எதையும் வழுவற முடிப்பதில் இவன் பெரிதும் வல்லுநன். இவனது வினைத்திறத்தையும் மனத்திடத்தையும் வியந்து தனக்கு அமைச்சனாகச் சோழ

மன்னன் இவனை அணைத்துக் கொண்டான். மந்திரியாகவும் தந்திரியாகவும் அமைந்து நின்று அம்மன்னன் ஆட்சியில் மாட்சிகள் பல தோற்றி விளங்க இவன் ஆற்றிவந்தான். இமயமுதல் குமரிவரையுமுள்ள நிலமுழுவதையும் தனது வினைநலத்தால் அவ் அரசுக்கு இவன் உரிமையாக்கினன். ஆள்வினையும் சூழ்வலமும் கொண்டு இவன் ஆள்வதைக்கண்டு அனைவரும் புகழ்ந்தார். முயற்சியால் உயர்ச்சியெய்தி இவன் விளங்கிவருங்கால் வில்லிபுத்தூரரை நோக்கிப் பாரதத்தைத் தமிழில் பாடும்படி இசைத்தான். இவ்வள்ளல் உரைத்தவாறே அவரும் ஆறாயிரம் பாடலாக அதனைச் சொல்லிமுடித்தார். அதில், இவனது குணநலங்களை நினைந்து இடைஇடையே அவர் புகழ்ந்து மகிழ்ந்துள்ளார். பதினெட்டாம் நாட் போரில் ஐவர் வென்று மீண்டபொழுது அவர்கொண்ட மகிழ்வுக்கு இவன்பால் பரிசுபெற்றவர்களது உவகையை உவமை காட்டினர்.

நாகையாப் புகழான் பெண்ணை நதிவளஞ் சுரக்குநாடன்
வாகையாற் பொலிதிண் டோளான் மாகதக் கோங்கர் கோமான்
பாகையாட் கொண்டான் செங்கைப் பரிசுபெற்றவர்கள் போல
ஓகையாற் செருக்கி மீண்டார் உதிட்டிரன் சேனையுள்ளார்.

கன்னன் கொடையை உன்னியுரைக்குங்கால் இம்மன்னன் கொடையை முன்னநிறுத்தினர்.

கோவல்சூழ் பெண்ணைநாடான் கொங்கர்கோன் பாகைவேந்தன்
பாவலர் மானங்காத்தான் பங்கயச் செங்கை யென்ன
மேவலர் இவனொன்றுமல் வெங்களந் தன்னில் நின்ற
காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனகமாரி

இங்ஙனம் புலவர்பாடும் புகழுடையனாய் இந்நிலவுலகில் பல நலங்கள்நிலவுமாறு இவன் நிலவிநின்றான். கொங்குமண்டலத்திலும், மகதநாட்டிலும் இவனுக்கு நிலவுரிமைகள் இருந்தன. தான் செய்யத்தொடங்கிய வினைகளில் குறைசிறிதும் நிகழாவண்ணஞ் செய்து முடித்தமையே இவன் எய்திய பெருமைக்கெல்லாம் ஏதுவாய்நின்றது. ஆட்கொண்டான் வினையைஆளும் அழகுடைமைக் கொண்டான் வீரவாட்கொண்டார் எவரும்போற்ற வலங்கொண்டான் என இவன் மேன்மையை உலகம் வியந்துகொண்டாட வினை

ஆண்மையால் இவன் உயர்ந்து கொண்டான். வினையை விளங்க ஆற்றுமையால் இவன்காலத்திருந்த கொங்கன் மாகதன் என்பவரை உலகம் இகழ்ந்து விட்டு இவனை மாத்திரம் உவந்து நின்றது. வினைக்குறை தீர்ந்தாரை உலகம் தீர்ந்து விடும் ஆதலால் வருந்தியேனும் தன் தொழிலை ஒருவன் திருந்தச் செய்யவேண்டும் என்பதை உலகம் காண இவன் உணர்த்திநின்றான்.

மற்றவனிப் புவியாளும் வளவனுக்கு முடிகவித்து வழுதித் தெவ்வைச்
செற்றவனுக் கவனியெல்லாம் செங்கோன்மை நிலையிட்டுச் செல்வமெல்லாம்
கற்றவருக் கிருகையுடைக் கற்பகம்போல் இனிதளித்துக் கமலமாதும்
கொற்றவையும் மனங்களிப்பத் தன்னுமம் மேருவினும் கோட்டினனே.

தென்னாட்டில் வடநாட்டில் குடநாட்டில் குணநாட்டில் தெவ்வர் ஓடக்
கன்னாட்டி அமர்பொருது கங்கைநீர் ஊட்டுவித்துக் கண்டன்வேங்கை
எந்நாட்டும் எழுதி அவன் திருமரபோர் பெற்றபுகழ் யாவர்பெற்றார்
அந்நாட்டுக் கொற்ற மெல்லாம் அக்குரிசில் புகழொடவதரித்ததன்றே.

ஆற்றியமெய்ச் செல்வத்தால் அளகையை வென் றிருங்கவினால் அமரூரை
மாற்றியபொற் றடமதிற்சூழ்வக்கபாகையின் அறத்தின் வடிவம் போலத்
தோற்றியஅக் கொங்கர்பிரான் சூழ்தமிழான் ஆட்கொண்டான் சுற்றத்தோடு
போற்றியஇப் புவிமுழுதும் தன்திருப்பேர்மொழிகொண்டே புரந்தானம்மா

பிறந்துய்யக் கொண்டவன்இப் பேருலகம் பெருவாழ்வு கூரு நாளில்
நிறைந்தபுகழ்ச் சனிநகர்வாழ் வில்லிபுத்தூரனை நோக்கி நீயும் நானும்
சிறந்ததிசைக்கு இசைநிற்கப் பாரதமாம் பெருங்கதையைப் பெரியோர் தங்கள், சிறந்தசெவிக்கு அமுதமெனத் தமிழ்மொழியின்விருத்தத்தால் செய்களென்றான். இவை, வில்லிபுத்தூராருடையபுதல்வன் வரந்தருவான் செய்தன. இவற்றால் இவனது வினைமாட்சியும், மனமாட்சியும், வண்மையும், திண்மையும், ஒண்மையும், பிறவும் உணரலாம்.

வினையாளரையே இவ்வுலகம் வியந்துபோற்றும் என்பது இதனால் கூறப்பட்டது.

613 பண்டுதாள் ஆற்றிநின்ற பத்திரனேன் வேளாண்மை
கொண்டு சிறந்தான் குமரேசா — தண்டாத
தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. (௩)

இ—ள்.

குமரேசா! விடாது வினைசெய்து வந்த வீரபத்திரன் ஏன் சிறந்தஉபகாரி என உயர்ந்து விளங்கினுன்எனின், வேளாண்மை என்னும் செருக்கு, தாளாண்மை என்னும் தகைமைக்கண்ணே தங்கிற்று என்க. ஏகாரம் பிரித்துக்கூட்டப்பட்டது.

வள்ளியம் என்னும் செருக்கு என்றதுபோல் இறுதிஅடி இதில் இயைந்துநின்றது.

வேறொன்றின்கண்ணும் தங்கவில்லைஎன்பதை ஏகாரம் விளக்கி நிற்றலால் பிரிநிலைஎன்க. தாளாண்மை என்றது முயற்சியை. தாளை ஆளுந்தன்மை என்க. தாள்—முயற்சி. தாள் ஆற்றித்தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு; என்றதும் ஈண்டுச்சிந்திக்கத்தக்கது. தாள்ஆளர்க்கு உண்டோ? தவறு; என நாலடியாரிலும், பீடுகெழுதிருவின் பெரும்பெயர் நோன்தாள்; எனப் பொருநராற்றுப்படையிலும் தாள் உணர்த்தி நிற்கும் பொருளையுணர்க. தாளாளன் என்பான் கடன் படா வாழ்பவன், வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணுதான், என்றது திரிகடுகம்.

வேளாண்மை — உபகாரம், உதவி, ஒப்புரவு.

பிறர்க்கு உபகாரம் செய்தலே ஒருவன் எய்திநின்ற பிறவிக்குப்பயனும் ஆதலால் அதனை அவன் உழைப்பின்பயனுக ஈண்டு உணரவைத்தார்.

முயற்சியைக் கைவிட்டவரை உலகம் இகழ்ந்துவிடும், ஆதலால் அதனைவிடாமல் மக்கள் செய்யவேண்டும் என்று மேலுணர்த்தினுர்; அங்ஙனம் செய்தால் உயிர்க்கு உறுதியாகியபயனை எய்தி உயர்ந்து விளங்கலாம் என்று இதில் உரைத்தருளினுர்.

உபகாரம் என்று சொல்லப்படுகின்ற மேன்மை முயற்சி என்று சொல்லப்படுகின்ற உயர்ந்தகுணத்தின் கண்ணேயே நிலை பெற்றுள்ளது என்பதாம்.

முயற்சியுடையார்க்கே பொருள்கைகூடும்; அதனுல் பிறர்க்கு உபகரித்தற்குரியதகுதியை அவரேஅடைவர்; ஆதலால் வேளாண்மை தாளாண்மையின் கண்ணேதங்கிற்று என்ருர்.

வேளாண்மை செய்து விருந்தோம்பி வெஞ்சமத்து
வாளாண்மை யானும் வலியராய்த்—தாளாண்மை
தாழ்க்கு மடிகோ ளிலராய் வருந்தாதார்
வாழ்க்கை திருந்துதல் இன்று. என்றது பழமொழி.

உபகாரிஎன்னும் பெருமையை முயற்சியாளனே பெறுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வீரபத்திரன்பால் உணரப்படும்.

## கதை

வீரபத்திரன் என்பவன் இற்றைக்கு எண்ணூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர்த் தொண்டைமண்டலத்திலே கண்ணனூர் என்னும் நகரிலேயிருந்த ஓர் வேளாண்மரபினன். இவனுடைய தந்தையார் பெயர் சாமிநாதமுதலியார் என்பர். இவன் பிறரின் நோயைத்தன் நோய்போல் போற்றும் பேரருளுடையவன். விளை நிலங்களைப் பண்படுத்தி அவற்றினின்றும் பெருவளங்களையீட்டுவதில் இவன் மிகுபுகழ்படைத்தவன். உயர்ச்சிகளெவற்றிற்கும் முயற்சியேகாரணம் என்னும்உணர்ச்சியை எவரும் உணர்ந்து கொள்ளுமாறு இவன் இனிதமர்ந்து நின்றான். ஊழான் வருமென்று உழார்க்கு விளைவுண்டோ—தாழாமுயற்சி யுறுதிபெறத் தாம் வேண்டின்—வீழாமை வேண்டும் வெறிதே கணமேயும்—வாளா கழித்தல் மறு; என்ற இவைபோன்ற உறுதிமொழிகளைத்தன்னையடுத்தவரெவர்க்கும் இவன் எடுத்து மொழிந்து அயர்ச்சியை நீக்கி அவரை முயற்சியில் ஊக்கினான். இவனது ஆள்வினையுடைமையை வியந்து அரசரும் புகழ்ந்தார். இங்ஙனம் இவன் வாழ்ந்து வருங்கால் மழைவளந்தன்றியது. ஆயினும், தளர்வு இலனாய்த் தன் விளைநிலங்களில் நீர் நிலைகளை ஆக்கிக்கொண்டு ஆள்வினையைத் தாழ்வின்றிச்செய்து யார்க்கும் உபகாரியாய் இவன் அருள்புரிந்துவந்தான். தன் வயலில் செழித்தோங்கிநின்றிருந்த கரும்புகளைச் சிலர் போய் ஒளித்திருந்து தின்றார்; அவரை இவன் கண்டு மகிழ்ந்து பசியால் இது செய்தார் என்று பரிந்து எனக்குப் புண்ணியம் வருமாறு புகுந்துதின்றீரோ! என்று புகழ்ந்து போற்றினான். பின்னர் வேலியைத் திறந்து விடுத்துத் தன் கரும்புகளை எல்லாரும் தின்னுமாறு ஏவி அதற்குக் கூலியாகப் பொருளையும் வாரி

இவன் அருளுடன் தந்தான். மன்னரும் உபகரிக்க இயலாது வறிதிருந்த காலத்தினும் இவன் உறுதியோடு முயன்றதால் எல்லார்க்கும் உபகரித்து வந்தான். அதனால் பேருபகாரியென்று இவன் பெயர்பெற்று நின்றான். கரும்பு தின்னக் கூலியும் கொடுத்தானே? என்று அனைவரும் இவனது பேருபகாரத்தை உவந்து துதித்தார்.

வேலியழித்துக் கரும்பையெல்லாந் தின்ன விட்டிரவோர்
காலில் வணக்கமும் செய்தேத்திப் பின்னுங் கரும்புதின்னக்
கூலியளந்துங் கொடுத்தான் ஒருவன் குமணனைப்போல்
வாலிதின்மிக்க கொடையாளனுந்தொண்டை மண்டலமே.

என்று படிக்காசுப்புலவரும் தமது சதகத்தில் இவனது வேளாண்மையையும், தாளாண்மையையும் வியந்து புகழ்ந்துள்ளார். இத்தகைய புகழ்ச்சிக்கெல்லாம் தன் முயற்சியே காரணமாகத் தன் மரபினரெவரினும் இவன் உயர்ச்சியுற்று நின்றான். தாளாண்மை என்னும் தகைமைக் கண்ணேதான் வேளாண்மை என்னும் செருக்குத் தங்கியுள்ளதென்பதை உலகம் இவன்பால் அன்று உணர்ந்து நின்றது.

உத்தம கங்கா நதிமரபினிற்கண் ணூரின்மா வேலியைத் திறந்தே
இத்தனை மனிதர் எனுங்கணக் கின்றி யிருவிலர் தனிற்புகழ் வளரச்
சுத்தமாம் சுவைச்செங் கரும்பினைப் புசிக்கச் சொல்லியே பினுந்தினுங்கூலி
பத்தியாக் கொடுத்தான் தொண்டைமண்டலத்தின் பலத்தினால் வீரபத்
திரனே. என்றார் கூத்தரும். இதனால் மேற்குறித்த வுண்மையும் இவனது முயல்வும், இயல்பும் மரபும் பிறவும் இனிது புலனும்.

பேருபகாரி என்னும் பெருமை ஆள்வினையுடையானுக்கே அமையும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

614 அன்று செவந்தான்நன் றாற்றினான் வேளாண்மை
குன்றினனோ் நாகன் குமரேசா—நன்றான
தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும். (ச)

இ—ள்

குமரேசா! ஆள்வினையுடைய சேவந்தான் பேருபகாரியாய் உயர்ந்தான்; நாகன் என் அதனை ஆற்ற இயலாது அயர்ந்தான் எனின், தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை வாளாண்மை போலக் கெடும்; என்க.

இல்லாதான் வேளாண்மை கெடும் என இயைத்துக் காண்க. தாளாண்மைக்குப் பயன் வேளாண்மையே யாதலால் இரண்டும் இங்ஙனம் இயைந்து நின்றன.

பேடிகை வாள் ஆண்மைபோல = பேடி தன் கையில் வாளை ஆளுந்தன்மைபோல; பேடி என்றது பெண் இயல்போடு ஆண் இயல்பும் கலந்து ஒருபாலோடும் பொருந்தாமல் வறிதே நிற்கும் இழிவடிவை. பெண் தன்மை மிகுந்து ஆண்தன்மை குறைந்திருப்பதைப் பேடி எனவும், ஆண்தன்மை மிகுந்து பெண்தன்மை குன்றி நிற்பதை அலி எனவும் கொள்க. வடநூலார் பொதுவாக நபும்சகம் என்பர்.

முயற்சி இல்லாதவன் உபகாரியாக இருக்கமுடியாது என்பதை உணர்த்துதற்குப் பேடிகை வாளாண்மையை ஒப்புக்காட்டியது, வாளை வீசி ஆண்மை செலுத்த அவள் ஆசைகொள்ளினும் தன் கோழைத்தனத்தால் அவட்கு அது கைகூடாதவாறுபோல் உபகரித்தற்குத் தனக்கு விருப்பமிருப்பினும் முயல்வின்மையால் அவற்கு அது இயலாதென்பது எளிதில் தெளிவாதற்கென்க. பொருள் இல்லான் வேளாண்மை காமுறுதல் இன்னா என்றார் கபிலரும்.

உபகாரி என்னும் உயர்வினை முயற்சியுடையவனே அடைவான் என்று மேலுரைத்தார்; அஃது இல்லாதவன் அதனை எய்த இயலாது என்பதை ஓர் உவமையால் இதில் உணர்த்தியருளினார். முயற்சியில்லாதவரைப் பேடிகளோடு ஒப்பிட்டார், அவர் தம் இகழ்ச்சி தோன்ற.

முயற்சி இல்லாதவன் உபகாரியாந்தன்மை, பேடி தன் கையில் வாளை ஆளுந்தன்மைபோல் வீணே பாழ்படும் என்பதாம்.

வள்ளல் என்னும் பெருமையை முயற்சியில்லாதவன் கொள்ளவிரும்புதல், வீரன் என்னும் மேன்மையைப் பேடி எய்த விரும்புதல்போலாம் என்றார்; அவ்விருப்பம் வீணே நகைப்புக்கு இடமாம் என்பது விளங்க. ஒருவன் முயற்சி செய்யானாயின், அவன் பொருள் இலனாவன்; ஆகவே உபகாரியாம் பெருமை அவனுக்கு உண்டாகாது; ஆதலால் தாளாண்மை இல்லாதான் வேளாண்மை கெடும் என்றார்.

தாளாண்மை இல்லாதார் வேளாண்மை செலுத்துவதும்; தரைமேலென்றும்
வேளாண்மை இல்லாதார் மனைவாழ்க்கை நடத்துவதும்; விசையமவேட்டு
வாளாண்மை இல்லாதார் மண்டுசமர்க் கேறுவதும்; வளர்புராணம்
கேளாதார் கதிவிழைவும் விழியிலார் வழிநடக்கும் கிரமம் ஆமால்.

என்ற அருமைப் பாடலை ஈண்டு அறிந்துகொள்க.

வாளை வீசிப் பகைவரை வெல்லும் மேன்மை வீரனுக்கே அமையும்; அதுபோல் பொருளை வீசி உபகாரியாம் பெருமை முயற்சியாளனுக்கே பொருந்தும் என்க.

பிறர்க்கு உதவி செய்தலே தன் உயிர்க்கு ஊதியமாகுமாதலால் அத்தகைய பெருமையை என்னபாடு பட்டாவது ஒருவன் எய்தவேண்டும் என்பது கருத்து.

முயற்சியுள்ளவனே உபகாரியென்னும் மேன்மையை உறுவான் என்பதும், அல்லாதான் அடையான் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை செவந்தான்கண்ணும், நாகன்பாலும் உணரப்படும்.

## கதை.

செவந்தான் என்பவன் தொண்டை நாட்டிலே மல்லை என்னும் நகரிலே யிருந்தவன். பல்லவர் மரபினன். நல்ல செல்வமுள்ளவன். இவனது காலம் இற்றைக்கு நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னராம். இவன் மிக்க நுண்மதியாளன். புலவர்கள் பால் பெருவிருப்புள்ளவன். ஆள்வினையை எப்பொழுதும் தாழ்வறச்செய்து பெருவளமெய்தி எவர்க்கும் பேருபகாரியாய்ச் சீர்பெற நின்றான். இவனது தாளாண்மையையும் வேளாண்மையையும் வியந்து புலவர் சிலர் இவன்மேல் பலபாடல்கள் பாடினார்.

உலகம் மகிழ இவன் உதவி வாழ்ந்துவருங்கால் இராமச்சந்திர கவிராயர் என்பவர் ஒருநாள் இவன்பால் வந்தார். அவரது அருமை பெருமைகளை அறிந்து மகிழ்ந்து தன்னுடனேயே யிருந்து வாழும்படி இவன் இன்னுரை பகர்ந்தான். அவரும் நெடுநாள் உடனிருந்து இவனது உபகார நலத்தையும் பெருந்தன்மையையும் கண்டு உவகை மீக்கூர்ந்தார். சொன்ன மன்ன ஆடை தந்தான்; வீதியில் வெற்றிலை மடித்துச் சுருளும் தந்தான்; கன்னவில் மோதிரம் தந்தான்; சரப்பளி தந்தான்; இரட்டைக் கடுக்கன் தந்தான்; செந்நெல்விளை யூர்தந்தான்; பேர் தந்தான்; மல்லையில்வாழ் செவந்தான் உங்கட்கு—என்ன தந்தான்? என்றவர் கட்கு எத்தனையும் தரத்தந்தான் இயம்பத்தானே; என்று இயம்பி மகிழ்ந்தார். கோவைப் பிரபந்தமொன்றும் இவன் மேவப் பெற்றான். அதில் ஒரு பாடலில் திருமாலோடு நிகராக இவன் செப்பப் பட்டுள்ளான். அந்நூல் மிக்க சுவையினையுடையது.

> மாதாம் படிபட்டு மெய் செவந்தான் குழல் வைத்திசைத்துச்
> சேதாம் பலங்கனி வாய் செவந்தான் செந்திருமடந்தை
> சூதாந் தனந்தைத் தாரஞ்செவந்தான் ஐவர்தூது சென்று
> பாதாம் புயஞ்செவந்தான் செவந்தான் மல்லைப் பல்லவனே.

இங்ஙனம் உதவி நலத்தால் இவன் உயர்ந்து விளங்கினான். அவ்வுயர்ச்சிக்கெல்லாம் இவன் முயற்சியே காரணமாகி முன்னுற நின்றது. இவன் நண்பனாகிய நாகன் என்பவனும் இவன்போல் ஈகையில் சிறந்தவனா யிருந்துவந்தான்; ஆயினும் முயலாதிருந்தமையால் அவன் பொருள் முழுதும் குறைந்தது. பின்பு தன்பால் வந்தவர்க்கு உதவ விரும்பியும் இயலாமையால் நிறைக்காளத்தி போல் அவன் சிந்தை கலங்கினான். தாளாண்மை இல்லாதான் வேளாண்மை, பேடி கை வாளாண்மைபோலக் கெடும்; என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

ஓடி முயலான் உதவி செயவிரும்பல், பேடிவிழைவே பிழை.

முயற்சியில்லாதவன் உபகாரியென்னும் மேன்மையை உற முடியாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

615 ஏதோ தனக்கின்பம் எண்ணாமல் பிச்சையப்பன்
கோனாய் முயன்றான் குமரேசா—தானார
இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண். (ரு)

இ—ள்

குமரேசா! பிச்சையப்பன் என்பவன் தனக்கு இன்பத்தை விரும்பாமல் எப்பொழுதும் என் முயற்சியையே விரும்பினான் எனின், இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர் துன்பம் துடைத்து ஊன்றும் தூண் என்க.

விழைவான் தூண் என உருவகஞ் செய்தது குடும்ப பாரத்தைத் தாங்கிநிற்கும் அவனது நெடுந்தகைமையை நோக்கி என்க.

விழையான் என்னும் எதிர்மறைமுற்று ஈண்டு எச்சமாகி விழைவான் என்பதைத் தழுவிநின்றது. உடல் நலத்தை விரும்புதலும், உழைப்பை அஞ்சுதலும், முயற்சிக்குத் தடைகளாம் ஆதலால் வினையாளன் அவற்றை ஒழித்தொழுகவேண்டும் என்பதாம்.

கேளிர் = உறவினர்; கேண்மையுடையாராய் நலந்தீங்குகளைத் தன்பால் வந்து கேட்பவர் என்னும் ஏதுவான் வந்தது.

ஊன்றும் தூண் = தாங்கும் தம்பம்.

முயற்சியுடையவன் பொருள் முதலிய நலங்களையடைந்து உயர்ச்சியெய்தித் தன்னையடுத்தவரது அல்லல்களை நீக்கி ஆதரவாய் நின்று நல்ல நிலைமையில் அவரை நிலைபெறச் செய்வன் ஆதலால் அவன் தூண் என நின்றான்.

அமைந்த பாரத்தைத் தாங்குதற்குத் தூண் ஆதாரவாய் நிற்றல் போல் தன் குடும்ப பாரத்துக்கு முயற்சியாளனே பற்றுக்கோடாவன் என்ற இதில் ஆள்வினையின் மேன்மையை உற்றுநோக்குக.

முயற்சியில்லாதவன் ஒருவருக்கும் உபகரிக்க இயலாது என்று மேலுரைத்தார்; அதனையுடையவன் யாவர்க்கும் ஆதரவாவன் என இதில் அருளினார்.

தனக்கோர் இன்பத்தை விரும்பாதவனாய் எப்பொழுதும் முயற்சியை விரும்புகின்றவன், தன்னுடைய கிளைகளின் கவலையை நீக்கி நிலைபெறத் தாங்கும் தூணாவான் என்பதாம்.

தான் வருந்தி முயன்று தன்னையடைந்தவரெவர்க்கும் ஆதரவாய்நின்று இதம்புரிந்துவருதலையே தான் பிறந்தமைக்குச் சிறந்த பயனாக ஒருமகன் கருதவேண்டும் என்பது கருத்து.

அழல் மண்டு போழ்தின் அடைந்தவர்கட்கெல்லாம்
நிழல் மரம்போல் நேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போல்
பல்லார் பயன்துய்ப்பத் தாம் வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன், என்ற நாலடியை யீண்டு நயந்து நோக்குக.

வருந்தி முயல்வோன் தன் கிளைகளுக்கெல்லாம் ஓர் பெருந்துணையாவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிச்சையப்பன்பால் உணரப்படும்.

## கதை

பிச்சையப்பன் என்பவன் தொண்டைமண்டலத்திலே வளவந்தை என்னும் பெருநகரிலே யிருந்த ஓர் வேளாண்குலமகன். இவனுடைய தந்தையார் பெயர் சிவசங்கர முதலியார் என்பர். இவனது காலம் இற்றைக்கு முந்நூறு ஆண்டுகட்கு முன்னராம். இவன் நுண்ணறிவும் தண்ணளியுமுடையவன். யாவர்க்கும் பேருபகாரி. வெங்கம்மை என்னும் தனது அருமை மனைவியோடு இனிதமர்ந்து இவன் இல்லறம் புரிந்துவந்தான். முயற்சியுடையவரே இவ்வுலகில் உயர்ச்சியுறுவர் என்னும் உண்மையை இவன் உணர்ந்து தெளிந்தவன். வினைஆட்சியில் இவன் மிகுமாட்சியுடையவன். தனக்கென நினையான் பிறர்க்குரியாளன் என்னும் புகழ்க்கு உரியனாய் இவன் பொருந்தியிருந்தான். தங்குறைதீர் உள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்—வெங்குறைதீர்க்கிற்பார் விழுமியோர்—திங்கள் கறையிருளை நீக்கக் கருதாது உலகில்—நிறையிருளை நீக்கும் மேல்நின்று என்னும் நீதிக்கு இவனோர் நிலையமாகி நிலவிவருங்கால் அவ்வூர்க்கோர் புலவன் வந்தான். அவனை இவன் ஆதரித்துத் தன்பாலழைத்து வைத்து இன்புற நெடுநாள் இனிது பேணினான். இவன் வருந்தி முயன்று பிறர்க்கே இதம்புரிந்து வருதலை அவன் அறிந்து மகிழ்ந்தான். பின் வியந்து பாடினான்.

உடையவிழ்ந் தான்கரம் போலுநட்பென்னும் உயர்மொழியின்
நடையுடையாய்; மிடியுற்றுழி நண்பர்க்கும் நற்றமிழ்ச்சொற்
படையுடை யார்க்கும் நிதியாயினை; வெள்ளைப் பங்கயத்தின்
பெடையுடை வேதத் தனஞ்சேர் பெருநகர்ப் பிச்சப்பனே.

இலனென்னும் எவ்வம் உரையாமை யீதல் இயல்பகலாக்
குலனுடை யான்கண்ண தென்றமைக் கேற்பக் குறித்து வந்த
புலவர்க் குணவிட்டுப் போற்றிய தும்பர் புகழ்வதன்றிப்
பிலமும் புகழ்ந்திடும் மூதூர் வளவந்தைப் பிச்சப்பனே.

இவ்வகையில் அப்புலவன் இவன்மேல் ஓர் சதகம் இயற்றியுள்ளான். தனக்கு இன்பம் வேண்டாமல் இவன் முயன்றதால் பிறர்க்கெல்லாம் பேருபகாரியாய் இவன் சீர்பெற்று விளங்கினான். இன்பம்விழையான் வினை விழைவான் தன்கேளிர் துன்பம் துடைத்து ஊன்றும் தூண் என்னும் உண்மைக்கு இவன் உரியவனாய் நின்றான். விரிவைத் தொண்டைமண்டல மான்மியத்தில் காண்க.

வருந்தி முயல்பவனே எவர்க்கும் பெருந்துணையாவன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

616 தாவில் உயர்திருவில் தந்தைமிக்கான் ஏனின்மை
கோவலன்முன் புக்கான் குமரேசா—மேவும்
முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். (சா)

இ—ள்

குமரேசா! கோவலன் தந்தையாகிய மாசாத்துவான் முயன்று திருவடைந்து உயர்ந்து விளங்கினான்; அவன் மகன் இன்மையாளனாய் இழிந்துபோயினன் எனின், முயற்சி திருவினை ஆக்கும்; முயற்று இன்மை, இன்மைபுகுத்திவிடும்; என்க.

முயற்று இன்மை = முயற்சியில்லாமை. இன்மை புகுத்தி விடும் = வறுமையைச் செலுத்திவிடும்.

முயற்சி திருவினை ஆக்கும் என்ற துணையானே அஃது இன்மை வறுமையைச்சேர்க்கும் என்பது தானே பெறப்படுமன்றோ

மீண்டுங்கூறிய தெற்றுக்கெனின் அதன் கொடுந்தீமையை மறந்து விடாமல் குறிக்கொண்டுநின்று மக்கள் ஒழித்து உய்யவேண்டு மென்னும் அருட்பெருக்கான் என்க.

மேல், முயற்சியானது தன்னையுடையானுக்கு எல்லா நலங் களையும் உதவி யாவர்க்கும் தலைவனாக அவனை உயர்த்திவிடும் என்றார்; அஃதின்மை எவர்க்கும் இழிந்தவனாகத் தன்னையுடை யானை இழித்துவிடும் என்று இதில் உணர்த்துகின்றார்.

முயற்சி செல்வத்தினை உண்டாக்கும்; அஃதில்லாமை வறு மையை அடைவித்துவிடும் என்பதாம்.

எல்லாப் பெருமைகளையும் ஆக்குதற்குரிய திருவினை முயற்சி ஆக்கும் என்றார்; அதனை நோக்கியேனும் மக்கள் அயராமல் அதனை ஆற்றியுய்வர் என்று கருதி.

முயற்சியின்மை வறுமைக்குக் காரணமாகுமாதலால் அதனை அறவே தொலைத்து செல்வத்துக்கு ஏதுவாகிய முயற்சியினை மக்கள் உறுதியோடு செய்யவேண்டும் என்பது கருத்து.

முயற்சியுடையவன் செல்வத்தை யெய்திச் சிறந்து விளங்கு வன் என்பதும், அஃதில்லாதவன் வறுமையை யடைந்து சிறுமை யுறுவன் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை மாசாத்துவான்கண்ணும், கோவலன்பாலும் உணரப்படும்.

## கதை.

மாசாத்துவான் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்தைம் பது ஆண்டுகட்கு முன்னர்க் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த ஒரு வணிகர் தலைவன். கோவலனுடைய தந்தை. பெருமனைக்கிழத்தி என்னும் தனது அருமை மனைவியோடு இவன் இனிதமர்ந்து வாழ்ந்தான். ஆள்வினையுடைமையில் இவன் மிகமேன்மை படைத் தவன். கலமே இலமாகக்கொண்டு இருங்கடல் கடந்து இவன் பெரும்பொருள் தொகுத்தவன். வடுவஞ்சி வாய்மொழிந்து— தமவும் பிறவும் ஒப்பநாடிக்—கொள்வதும் மிகைகொளாது கொடுப் பதும் குறைகொடாது—பல்பண்டம் பகர்ந்துவீசிச் செல்வங்கொ குத்த தன்மரபினரெல்லார்க்கும் திருவினும், நெறியிலும் இவன் முதல்வனாய் நின்றான். தான் வருந்தி யீட்டிய பொருளை வறிய

வர் முதலிய எவர்க்கும் இவன் விரும்பியுதவினன். ஈதற்குச்செய்க பொருளை என்னும் நீதிக்கு இவனோர் நிலையாய் நின்றான். வடமலைப்பிறந்த மணியும் பொன்னும்—குடமலைப்பிறந்த ஆரமும் அகிலும்—தென்கடல்முத்தும் குணகடல் துகிரும்—கங்கைவாரியும் காவிரிப்பயனும், ஈழத்துணவும் காழகத்து ஆக்கமும், அரியவும் பெரியவும் ஆகிய பல்வகைப் பொருள்களையும் இவன் நிலையமிந்து தொகுத்து மறுபுலங்களுக்கு அனுப்பினன். அதனால் பெருவளங்கள் மிகுந்தன. முதுநிலம் புரக்கும் முடியுடை மன்னரும் இவனது நிதியின் பெருமையை வியந்து இவன்பால் நேயமீக்கூர்ந்தார். அரசுவிழை திருவோடு அமர்ந்து யாவர்க்கும் அருள் புரிந்து குபோன் என இவன் உயர்புகழ்பெற்று விளங்கினன்.

பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த
ஒருதனிக் குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வத்தான்
வருநிதி பிறர்க்கார்த்தும் மாசாத்துவான் என்பான்
இருநிதிக் கிழவன்; என்று இவனதுஉயர்வையும் திருவையும் வியந்து இளங்கோவடிகளும் உவந்து புகழ்ந்துள்ளார். இவன் இங்ஙனம் இருந்துவருங்கால் தன் புதல்வனாகிய கோவலனுக்கு மணம்புரிவித்துப் பெரும்பொருளையுதவி மணமகளோடு அமர்ந்து மனையறம்புரிந்து வருமாறு அவனைத்தனியே வைத்தான். அவன் யாதுமுயல்வின்றி யிருந்ததால் தன்பொருளெல்லாம் இழந்துவறியனாகி நாணிமனைவியோடு மதுரையையடைந்து மறுகி யழிந்தான். தந்தைமுயன்று திருவெய்திநிவந்துவாழ இம்மைந்தன் முயலாமையால் இவ்வகையிலிழிந்துபோனனே ? என்று அனைவரும் இரங்கினர். முயற்சி திருவினை ஆக்கும்; முயற்று இன்மை இன்மைபுகுத்திவிடும் என்னும் உண்மைக்கு இவர் உரிமையாய் நின்றார். விரிவைச்சிலப்பதிகாரத்தில் காண்க.

மானிடனொருவன் தனக்கருஞ்செல்வம் வாய்க்கவென்றனுதினமுயற்சி
தானுஞற்றுவனேல் கடவுளும் அதனைத் தந்தளிக்குவன் அதாலன்றோ
ஆனபேரறிஞர் திருவினை முயற்சியாக்கும் அம்முயற்சியிலாமை
ஈனமார் இன்மை புகுத்திடு மாலென் றியாரு நன்குணர்தாநவில்வார்.

ஆள்வினையைக் குறித்துக் கூறுங்கால் தேவாரசர் நம் அடிகளைக்குறித்துக் கூறியிருத்தலை இதில் கூர்ந்துகாண்க.

முயற்சியுடையவரே உயர்ச்சியான திருவினை அடைவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

617 மண்டுமடி கொண்டிழிந்தான் மாகந்தன் என்முயன்று
கொண்டுயர்ந்தான் எவ்வி குமரேசா—மிண்டு
மடியுளாள் மாமுகடி யென்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள். (எ)

இ—ள்.

குமரேசா! மாகந்தன் மடி கொண்டு இழிந்தான்; எவ்வி என் முயன்று திருவெய்தி உயர்ந்தான் எனின், மாமுகடி மடி யுளாள் என்ப; தாமரையினாள் மடியிலான் தாள் உளாள் என்ப; என்க.

என்ப என்றது இடைநிலைத்தீவகமாய் நின்று ஈரிடத்தும் சென்றிசைந்தது. முகடி என்றது மூதேவியை. மா என்னும் அடை அவளது கருமையின் பெருமை தோன்ற நின்றது. மூது மை குறித்த தெனினுமாம். மா என்னும் சொல், பெருமை வண்டு குதிரை முதலிய பல பொருள்களையும் குறித்துவரும்.

தாமரையினாள் = இலக்குமி. தாமரைமலரைத் தனக்கு இருப் பிடமாகக் கொண்டவள் என்றவாறு. எரிநிறப் பொன்னிதழ் ஏந்துதாமரைத் திருமகள் என்றார் திருத்தக்கதேவரும்.

மடி இலான் தாள் உளாள் = மடியில்லாதவனது முயற்சியி லுள்ளே யிருக்கின்றாள். இலான் தாள் உளாள் என்ற இனிமை யை நோக்குக. சோம்பலை மாத்திரம் ஒருவன் ஒழித்துவிடுவனா யின் அவனிடம் திருமகள் குடிபுகுந்திருப்பள் என்பதாம்.

முயற்சி ஒருவனைச் செல்வத்தில் உயர்த்தும்; மடி வறுமை யில் ஆழ்த்தும் என்று மேலுணர்த்தினார்; அங்ஙனம் அவை ஆற்று தற்குரிய காரணத்தை இதில் காட்டி அருளினார்.

சோம்பலின்றி முயல்பவன்பால் எல்லாச் செல்வங்களும் சேர்ந்திருக்குமாதலால் தாமரையினாள் மடி இலான் தாள் உளாள் என்றார். திருமகள் முயற்சியாளனது அடியிலிருப்பள் என்று காணும்படியாகவும் இத்தொடர் கலந்திருத்தல் காண்க.

கரிய மூதேவி மடியின்கண்ணே தங்கியிருக்கின்றாள்; இலக்குமி மடியில்லாதானுடைய முயற்சியின்கண்ணே அமர்ந்துள்ளாள் என்று அறிஞர் சொல்வர் என்பதாம்.

மடியன் வறியனுவான்; முயற்சியாளன் செல்வனுவன் என்றவாறு. மடியானது வறுமைக்கு அதிதேவதையாகிய மூதேவி குடிபுகுந்திருக்கும் இடமாதலால் அதில் அடியிடாமல் திருமகளுக்கு உறைவிடமான முயற்சியையே ஒருவன் கொள்ளவேண்டுமென்பது குறிப்பு.

ஊக்கி முயன்றவன் செல்வம் பெறுவான்; அங்ஙனமுயலாமல், வருவது தானே வருமென்று சொல்லிக்கொண்டு மடிந்திருப்பவன் அல்லலே அடைவான் என்பது கருத்து.

> உள்ளமுடை யான்முயற்சி செய்யஒரு நாளே
> வெள்ளநிதி வீழும்விளை யாததனி னில்லை
> தொள்ளைபுணர் வின்னவர்கள் சொல்லின் மடிகிற்பின்
> என்னுநர்கட்கு எக்கழுத்தம் போல இனிதன்றே.

என்றது சிந்தாமணி. மடியுடையான் வறுமையடைந்து இழிவான் என்பதும், அஃதின்றி முயன்றவன் செல்வமெய்திச் சிறந்து நிற்பான் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை மாகந்தன்கண்ணும், எவ்வியிடமும் உணரப்படும்.

## கதை.

மாகந்தன் என்பவன் மகதவேந்தன்பால் நண்பனுயிருந்த மாதவராயன் என்னும் ஓர் வேதியனுடைய புதல்வன். இவன் தீது மிகுந்தவன். தந்தை வைத்துப்போன பெரும்பொருளைத் துய்த்துத் தருக்கிக்களித்து ஒருவினையும் செய்யாமல் வறிதேயிருந்தான். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முன்னராம். இவன் அல்வழியில் திரிந்து தன் செல்வமெல்லாவற்றையும் இழந்தான். பின்னுந் தெளியாமல் பிழையே மிகுந்து பேதுற்றிருந்தான். ஒருதொழிலும் இல்லாதான் முகடியாவன் என்னும் மூதுரைக்கு இவனோர் எதுருவாய்நின்று தன் கொடிய மடியால் இவன் பெருமிடியனுனன்.

பெண்டிர் மதியார்; பெருங்கிளை காணாது
கொண்ட விறகாா; குறிப்பின் அஃதுபா
வெண்டளை நின்று வெறுக்கை இலராயின்

மண்டினர் போல்வர்; தம்மக்களும் ஒட்டார். ஆகலால் இனத்தாரனைவரும் இவனை இகழ்ந்து வெறுத்தார். இவன் இரந்து திரிந்து பின் இறந்து தொலைந்தான். மடியில் மூகடியுள்ளாள் ஆகலால் அதனையுடையவன் மிடியனாகி அழிவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து தெளிந்தது. விரிவைக் காசிமான்மியத்தில் காண்க.

## கதை 2.

எவ்வி என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டி நாட்டின் வடகீழ் எல்லையிலிருந்த மிழலைக் கூற்றம் என்னும் நகரிலிருந்தவன். இவன் தாளாளராய் நின்ற வேளாளர் மரபினன். பெருங்கொடையாளன். ஏர் பலகொண்டு சீர்பெற வாழ்ந்தவன். உழவுத்தொழிலால் உயர்நலமடைந்து பல ஊர்களையும் தனக்கு உரிமையாகப் பெற்றுக் குறுநிலமன்னனாய் இவன் குலவியிருந்தான். உழுவார் உலகத்தார்க்கு ஆணி என்னும் உண்மைக்கு இவனோர் உரையாணியாய் நின்று அனைவர்க்கும் உதவி செய்துவந்தான். இவன் தாளாண்மையோடு வேளாண்மையு முடையவனாதலால் வாளாண்மை யுடையவரும் கேளாளராகி இவன்பால் கெழுமியிருந்தனர். அக்காலத்தில் மதுரையிலமர்ந்து அரசுபுரிந்திருந்த முடிமன்னனாகிய பாண்டியனும் இவனது பெருந்திருவை நினைந்து பெரிதும் வியந்தான். தான் மடியின்றி முயன்றதால் முடியுடை மன்னரும் விழைந்து நோக்கத்தக்க பெருந்திருவடைந்து இவன் சிறந்து விளங்கினான். தாமரையினாள் மடியில்லான் தாள் உளாள் என்னும் உண்மையை உறுதிபெற எவர்க்கும் இவன் உணர்த்தி நின்றான். இவனது ஆள்வினையாண்மையும் வாழ்வுறுமேன்மையும் புறநானூறு முதலிய பழைய நூல்களில் இனிது புலனாம்.

நெல்லரியும் இருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயில்முனையில்
தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து
திண்திமில் வன்பரதவர்

வெப்புடைய மட்டுண்டு
தண்குரவைச் சீர்தூங்குந்து
தூவற் கலித்த தேம்பாய் புன்னை
மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்
எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து
வண்டுபட மலர்ந்த தண்ணறுங் கானல்
முண்டகக் கோதை ஒண்டொடி மகளிர்
இரும்பனையின் குரும்பை நீரும்
பூங்கரும்பின் தீஞ் சாறும்
ஓங்குமணற் குவவுத் தாழைத்
தீநீரோடு உடன்விராஅய்
முந்நீர் உண்டு முந்நீர்ப் பாயும்
தாங்கா உறையுள் நல்லூர் கெழீஇய
ஓம்பா வீகை மாவேள் எவ்வி. என மாங்குடிகிழார் என்னும் புலவர் பெருமானார் இவனது மாண்பினை வியந்து பாடியுள்ளார். தொழில் செய்வோர்பலர் இவன்பால் அமர்ந்திருந்த திறனும்; இவன் உழுவித்து முயன்ற விதமும், நிலங்கள் தந்த வளனும், நேர்ந்திருந்ததிருவும் பிறவும் இதனால் இனிதுபுலனும்.

மடி வறுமைக்கும் முயற்சி திருவுக்கும் காரணமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

618 பண்டு திலீபன் பயனின்மை கண்டுமேன்
கொண்டு முயன்றான் குமரேசா—மண்டும்
பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி. (அ)

இ—ள்

குமரேசா! தன்வினையுடைமைக்குப் பயன் இன்மையைக் கண்டிருந்தும் திலீபன் என்இடைவிடாது முயன்றான் எனின், பொறி இன்மை யார்க்கும் பழி அன்று; அறிவு அறிந்து ஆள்வினை இன்மையே பழியாம் ஆதலால் என்க.

யார்க்கும் என்றது மக்கட்பரப்பு முழுதையும் சுட்டிநின்றது. உம்மை முற்றும்பொருளது.

பொறியென்னும் சொல் அறிவு, செல்வம், அடையாளம்—விதிமுதலியபலபொருள்களையும் குறித்துவரும். ஈண்டு பொறிக்கப்பட்டது என்னும் ஏதுவான் அது விதியை உணர்த்திநின்றது. பொறித்தல் = எழுதல். தலை எழுத்து என்பதும் அது. போம் பொருள்கள் போகும் அவை பொறியின் வகைவண்ணம்; எனவும், பொறியிலாதேன் முன்னுறஇதனை ஓரேன்; எனவும் சிந்தாமணியுள் வந்தன காண்க.

ஆள்வினை இன்மை = முயற்சி செய்யாமையே. அறிவில்லாதவினை இழிவுஞமாதலால் அறிந்த என்றார்.

அறிவு அறிந்து = அறியவேண்டுவனவற்றையறிந்து; அறிவு இதில் ஆகுபெயர். காலம் அறிந்து, இடம் அறிந்து, செய்வினையின்—மூலம் அறிந்து, விளைவறிந்து—மேலும்தாம், சூழ்வன சூழ்ந்து, துணைமைவலி தெரிந்து—ஆள்வினை ஆளப்படும்; என்றவாறு தன்வலிமுதலிய எல்லாவற்றையும் ஆராய்ந்தறிந்தே பின்பு வினையில் இறங்கவேண்டும் என்க.

முயற்சியே திருமகளுக்கு உறைவிடமாம் என்று மேலுரைத்தார்; அத்தகைய முயற்சியைச் செய்யாமையே ஒருவனுக்குப் பழியாம் என்று இதில் அருளினர்.

விதி இல்லாமை எவர்க்கும் பழி ஆகாது; அறியத்தக்கனவற்றை யறிந்து வினைசெய்யாமையே ஒருவற்குப் பழி ஆகும் என்பதாம்.

ஈட்டும் பொருள்முயற்சி எண்ணிறந்த ஆயினும், ஊழ் கூட்டும்படி அன்றிக் கூடாவாம் என்றபடி பயனைத்தருதற்குரிய விதி ஒருவனுக்கு இல்லையாயின் அவன் முயற்சி செய்வதனால் பயன்யாது? என்பாரை நோக்கி இஃதுணர்த்தியதாகக்காண்க.

முன்னைவினைப்பயனுய் ஊழ்மன்னிநிற்கும் ஆதலின் தனக்கு அஃது உளதாதலும் இலதாதலும் எவர்க்கும் புலனுகாது ஆதலால் அதனைநோக்கி மடிந்திருக்காமல் தம்கடமையாகிய முயற்சியை ஒவ்வொருவரும் உணர்ச்சியோடு உஞற்றவேண்டும் என்பது கருத்து. பொறியிருந்தால் தான், வருவது தானே வருமே!

என்று ஒருதொழிலும் செய்யாமல் வறிதேயிருக்கும் ஆறிவிலி எல்லாராலும் பழிக்கப்படுவன் ஆதலால் அப்பழி புகாதபடி முயல வேண்டுமென்க.

மழை பெயலின்மையால் ஒருபயனுமின்றி யொழியினும் அவ்விளைநிலமுடையானை அதுநோக்கி ஒருவரும் பழியார்; உழுதல் முதலிய தொழில்களைச் செய்து, அழகுறத்திருத்தி வித்திடாமல் எய்த்திருப்பவனையே உலகம் பழிக்கும் ஆதலால் பொறியின்மை பழி அன்று; ஆள்வினையின்மை பழி என்றார்.

ஊழை எதிர்பாராமல் எல்லாரும் உறுதியோடு முயற்சி செய்யவேண்டும் என்பது குறிப்பு.

ஊழ் இல்லை என்று தளர்ந்து அறிவுடையார் ஆள்வினையை விடார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திலீபன்பால் உணரப்படும்.

## கதை.

திலீபன் என்பவன் சூரியகுலத் தோன்றலாகிய அஞ்சுமானுடைய புதல்வன். அஞ்சாத நெஞ்சினன். நெறியும் நீதியும் இறைவழுவாதவன். அறிவிலும் பொறையிலும் அருளிலும் சிறந்தவன். சுதட்சிணை என்னும் தனது இனிய மனைவியோடமர்ந்து அரிய போகங்களைநுகர்ந்து திருவயோத்தியிலிருந்து இவன் அரசுபுரிந்து வருங்கால் ஒருநாள் இமயச்சாரலையடைந்து இனிது உலாவி நின்றான். அவ்வமையம் அங்கு வந்திருந்த தெய்வப்பசுவைச் சிங்கமொன்று பாய்ந்து பற்றியது. உடனே இவன் இடையே பாய்ந்து தன் வடிவாளை எடுத்து அவ்அரியை இருதுணிபடுத்த மடுத்தபொழுது "யான் பசியால் வருந்தி இதனைத் தின்னப்புகுந்தேன்; நீ என் என்னைக் கொல்லத் துணிந்தாய்" என்று இம்மன்னனை நோக்கி அது தன் வல்வாய் திறந்தது. அதைக் கேட்டவுடனே இரக்கமீக்கொண்டு என்னை உண்டுகொள் அதனை விட்டு விடு என்று இவ்வேந்தல் இசைத்தான். இவன் உளப்பண்பைச் சோதிக்கும்பொருட்டுக் கும்போதரன் என்னும் சிவகணத் தலைவனே அச்சிங்கமாக வந்தானாதலால் இவனது ஆண்மையையும், அருட்பான்மையையும் வியந்து போற்றி அப்பசுவை விட்டு அகன்றுபோனான். இங்ஙனம் எவ்வுயிர்க்கும் ஆதரவாய் நின்று

விதிமுறைவழாமல் முதுநிலம்புரந்தான்; கபிலமுனிவரால் எரிந்து போன தன் முன்னோராகிய சகரரை நற்கதியில் உய்க்கும் பொருட்டு கங்கையைக்கொண்டுவர இவன் கருதி முயன்றான். பலவழியாலும் பலமுறை முயன்றும் ஒருபயனுமின்றி வறிதே கழிந்தது. ஆயினும் இவன் ஊக்கம் குன்றாமல் உருற்றி நின்றான். நற்கெறும்பு தூங்கணம் புட்காக்கை என்றிவைபோல்

தங்கருமம் நல்ல கடைப்பிடித்துத் தங்கருமம்
அப்பெற்றியாக முயல்பவர்க்கு ஆசாரம்
எப்பெற்றியானும் படும். என்று எண்ணி முயன்றும்

எண்ணிய பயனை இவன் எய்தவில்லை. பின்னரும் திண்மையோடு நின்று முயன்று பயன்பெறாமல் முடிந்தான். இங்ஙனம் முடிந்தும் எவரும் இவனை இகழவில்லை. மன்னனுக்கு ஊழ் கூட்டவில்லையே என்று உலகம் உளைந்து இரங்கியது. இவனது ஊக்கத்தையும் நோக்கத்தையும் உவந்து புகழ்ந்தது. அறிவறிந்து ஆள்வினைசெய்யாமையே பழியாம் அன்றிப், பொறியின்மை யார்க்கும் பழியாகாது என்பதை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான். பின்பு இவன் மகனாகிய பகீரதன் நின்று முயன்று அதனைக் கொண்டுவந்தான். விரிவை இரகுவம்சத்தில் காண்க.

அந்த மாளனும் அண்ணல் அளித்ததேசய்
செந்தொல் நாவலர் ஏத்து திலீபனும
கந்தநாண்மலர்க் கண்ணினன் தாள் தரும்
தஞ்சமா நதி நோக்கித் தவஞ்செய்தான். (1)

விழைவு மாநதி மெய்த்தவம் செய்தவன்
தொழுது போற்றலும் துன்னிய தில்லையால்
மொழியும் வேந்தன் உயிர்த்தனன் முன்னுவோர்
பழுதுநீக்கு பகீரதன் தன்னையே. (2)

பாகவதத்தில் இவன் சரிதம் இங்ஙனம் குறிக்கப்பட்டுள்ளது. பொறியின்மை கண்டும் ஆள்வினையைத் தாழ்வுற இவன் ஆற்றி வந்தமை இவற்றானும் தேற்றமாம்.

உறுதி பயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறும் முயல்ப—இறுமுயிர்க்கும்
ஆயுள் மருந்தொழுக்கல் தீதன்றால் அல்லனபோல்
ஆவனவும் உண்டு சில. (நீதிநெறிவிளக்கம்.)

முயற்சிசெய்யாமையே ஒருவனுக்குப் பழியாமென்பது இதனால் கூறப்பட்டது

---

619 வென்றிச் சுதரிசனன் மெய்வருந்தி என்முயன்றான்
குன்றிவிதி நின்றும் குமரேசா—என்றுமே
தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். (கசு)

இ—ள்.

குமரேசா! ஊழ் உதவாது ஒழிந்திருந்தும் சுதரிசனன் ஏன் உடல் வருந்தி முயன்றான் எனின், தெய்வத்தான் ஆகாது எனினும், முயற்சி தன் மெய்வருத்தக் கூலிதரும்; என்க,

முயற்சி கூலிதரும் என இயைத்துக்காண்க.

மெய்வருத்தக் கூலி = உடம்பு வருந்திய வருத்தத்தின் அளவு பயன். தெய்வம் என்றது விதியை. அருவமாய்நின்று பயனுதவுதலால் அஃது இங்ஙனம் அறையநின்றது.

நீர்மேல்குமிழிபோல் நிலையாதழியும் பொய்புடம்பை மெய் என்றது மங்கலவழக்கால் என்க. மற்றெவற்றினும் மெய்ப் பொருளையறிதற்கு மக்களுடம்பு மிக்கதாயிருத்தலின் அது மெய் என நின்றதெனினுமாம். முயற்சியும், விதியும் ஒருவன் கருதிய பயன்களைத்தருதற்கு உரிமையுடையனவாதலால் அவைஇரண்டும் ஈண்டு உடன் எண்ண நின்றன. முன் செய்துபோந்த உழைப் பின்பயனுக உருக்கொண்டு மறைவாய் நின்று விதி இனிதாகப் பயனுதவும் ஆதலால் அவ் இயல்புதோன்ற அது முதலில் நின்றது.

ஊழ் ஒன்றும் உதவாதொழியினும் மக்கள் முயற்சியைக் கைவிடலாகாதென்று உணர்த்தினர் அதன் உறுதியான உதவியின் உண்மையை நோக்கி.

மேல், விதியில்லாமை இழிவாகாது; முயற்சி செய்யாமையே ஒருவனுக்குப் பழியாம் என்றார்; இதில், அம்முயற்சி தன்னையுடையானுக்கு எவ்வாற்றானும் தன்பயனைத் தப்பாமல் உதவும் என்று அருளினர்.

ஊழ் வகையால் பயனாகாதாயினும், தன் உடல் வருந்திய வருத்தத்தின் அளவு முயற்சி பயன்கொடுக்கும் என்பதாம்.

இனி, தெய்வத்தான் ஆகாது எனினும் என்பதற்குக் கடவுள் அருளாராயினும் எனினுமாம். இங்ஙனம் சொல்லின் வினைப் பயன்களை மக்கட்கு முறைப்படுத்தூட்டு முதல்வராதலால் முன்னைய நல்வினையின்மையால் கருதியபயனை அவர் தாராராயினும் இப்பொழுது செய்யும் உடல் முயற்சியளவு பலனுண்டாம் என்று பகுத்துக்கொள்க. ஆங்காலம் மெய்வருந்தவேண்டாம் என்றபடி. ஊழ் உளதாய வழி ஒருவருத்தமுமுறாமலே பெரும் பயன்கள் உளவாம்; அஃது இலதாய வழியும் உடம்பு வருந்திய அளவுக்குப் பயன் பொருந்தாமல் போகாது; ஆதலான் தெய்வத்தான் ஆகாது எனினும் மெய்வருத்தக் கூலிதரும் என்றார்.

முயற்சி ஒருவகையானும் பாழ்போகாது ஆதலால் அதனை உறுதியோடு நின்று என்றும் செய்யவேண்டுமென்பது கருத்து.

விடாது தனுவிற் செயும் முயற்சி மேன்மேல் பொருளை மிகவளர்க்கும்;
கெடாது சுற்று நட்பினர்தம் கிளையும் தாங்கும்; யாவர்க்கும்
தடாத உபகாரமும் புரியும்; தடந்தா மனையாளையும் சேர்க்கும்;
படாத ஊழ்வந்திடுகாறும் பயனே விளைக்கும்; பழி இன்றே.

என்றதும் இங்கு அறியத்தக்கது.

விதிபுதவாதாயினும் தன் உடல் வருந்திய அளவு ஒருவனுக்குப் பயனுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுதரிசனன்பால் உணரப்படும்.

## கதை.

சுதரிசனன் என்பவன் இற்றைக்குப் பன்னீராயிரம் ஆண்டுகட்குமுன்னர் உத்தரகோசலத்திலிருந்து அரசுபுரிந்த சூரியகுலத் தோன்றலாகிய துருவசித்தனுடைய புதல்வன். தாய் பெயர் மனோரமை. இவன் இளைஞனாயிருக்கும்பொழுது வினைஞர் சிலருடன்கூடி அரசன் வேட்டைக்குப்போய் ஓர் கோளரிவாய்ப்பட்டு இறந்துபோயினன். அம்மன்னனுக்கு இரண்டாவது மனைவியாயிருந்த லீலாவதி என்பவளுக்குச் சத்துருசித்து என்றொரு புதல்வன் இருந்தான். அவள் தந்தையாகிய யுதாசித்து என்பவன்

அரசுரிமையைத் தன் பேரனுக்கே உரிமைசெய்யக்கருதி முதன் மகனாகிய இவனைச் சதியால் வதைசெய்யத் துணிந்தான். இதனை மனோரமையின் தந்தையான விரோசனன் எதிராந்து வந்து சுதரிசனனுக்குத் தீது நேராவண்ணம் உடனிருந்து காதலோடு பாதுகாத்துவந்தான். வருங்கால் ஒருநாள் இரவு அக்கொடிய யுதாசித்து கரவாக வந்து வாளால் வீசி விரோசனனை வதைத்துப் போனான். அதனையறிந்து மனோரமை அழுது பதைத்துத் தன் மகனையும் அக் கொடியவன் கொன்றுவிடுவன் என்று அஞ்சி யாவரும் அறியாவண்ணம் அவனை எடுத்துக்கொண்டு ஓர் வனத் துட்புகுந்து வருந்தியிருந்தாள். அவ் வறிய நிலையிலிருந்து இவன் வளர்ந்து பருவமடைந்து தாய்வாயிலாகத் தன் இயல்பினை யறிந் தான். வனசரன்போல் அலைந்து இயன்றவளையும் முயன்று அன்னையை ஆதரித்துவருங்கால் இடையிடையே பல அல்லல் களை யடைந்தான். மன்னன் மகனாயிருந்தும் இவ்இன்னல் அடைதற்கு ஏது முன்னை வினையே என்று ஓர் முனிவன் மொழிந்துபோனான். ஆயினும் உள்ளந்தளராமல் நின்று ஊழை நோக்கி உளையாமல் இவன் உழைத்துக் கங்கையின் தென்கரை யில் ஒரு சிறு குடிலை அமைத்து அதில் தங்கியிருந்தான். செயத் தகு முயற்சி செய்திடிற் செயிர்தீர் செய்யவள் மணாளனும் இரங்கி, வியத்தகுவேண்டும் யாவையும் அளிப்பன் என்னும் மெய்யுரை யின்படியே இவன் மெய்வருந்தி வருங்கால், ஒருநாள் மாலைப் பொழுதில் அங்குவந்து உலாவிநின்ற காசிமன்னனாகிய சுபாகு என்பவன் இவனது உருவையும் நிலையையும் நோக்கி வியந்து அருகிலணுகி உரையாடி உண்மையை யுணர்ந்து உள்ளமுவந்து உடனழைத்துச் சென்று தன் அருமைத் திருமகளாகிய சசிகலை என்பவளை இவனுக்கு மணமுடித்துத்தந்து அரசுரிமையையும் உதவினான். அப்பொழுதியோடு அமர்ந்து பெரும்போகங்களை நுகர்ந்து நெடுநாள் அமர்ந்து பின் ஒருநாள் படையோடெழுந்து சென்று பகைவனை வென்று தன் தந்தையின் அரசுரிமையையும் இவன் தகவுடன் அடைந்தான். ஊழ் மாறுகொண்டிருந்தும் தளராமல் நின்று தன் உடல் வருந்தியதால் பின்பு இவன் உயர்ந்து விளங்கி னான். தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன் மெய்வருத்

தக் கூலிதரும் என்னும் உண்மையை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான். விரிவைக் காசிமான்மியத்தில் காண்க.

விதி உதவாதாயினும் தனக்குரிய பயனை முயற்சி தவறாமல் தந்துவிடும் என்பது இதனால் கூறப்பட்டது.

620 தண்டாத ஊழையுமுன் சாவித்திரிவென்று
கொண்டாள் தென்னை குமரேசா—மண்டாடும்
ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர். (10)

இ—ள்

குமரேசா! முயற்சியால் ஊழையும் வென்று தன் நாயகனை என் சாவித்திரி மீட்டி மேவிக்கொண்டாள் எனின், உலைவு இன்றித் தாழாது உஞற்றுபவர், ஊழையும் உப்பக்கம் காண்பர்: என்க. என்னே என்றது இம்மாதர் புதுமையிருந்தபடி என்னே என்றவாறு. மண்டாடும் = எதிர்நின்று போராடுகின்ற.

ஆள்வினையுடைமையால் எய்தும் வாழ்வு நலமெல்லாம் இது வரை அருளிவந்து, வெல்லுதற்கரிய ஊழையும் அதனால் வென்று விடலாம் என்று உறுதிபெற இறுதியாக இதில் உணர்த்துகின்றார்.

உம்மை அதனது வன்மையை உணர்த்தி நின்றது. புறம் காண்பர் என்றதனால் அதன் பொருமுரண்புலனும்.

உப்பக்கம் = பின்பக்கம்; என்றது முதுகை. இப்பக்கம் அப்பக்கம் என்பன அண்மை சேய்மைகளைச் சுட்டி நிற்றல்போல் உப்பக்கம் என்றது பின்புறத்தைச் சுட்டி நின்றது. உப்பக்கம் நோக்கி உபகேசி தோள்மணந்தார் என்று திருவள்ளுவமாலையில் நல்கூர் வேள்வியாரும், அந்தணன் பங்கின் இல்லத் துணைக்கு உப்பால் எய்த என்று பரிபாடலில் நல்லந்துவனாரும் இச்சொல்லை நல்கியுள்ளமை காண்க.

தான் எடுத்த முயற்சி கைகூடவில்லையானால் உலைதலும் தாழ்தலும் ஒருவனுக்கு உளவாகும் ஆதலால் 'உலைவுஇன்றித் தாழாது உஞற்று' என்றார்.

உலைவு இன்றி = கலங்காமல் நின்று: உலைதல் = நிலைகுலைதல், கலங்கல் தாழாது = குன்றாது; முயற்சியை ஆற்றும் முறைகளில் குறையாது என்றபடி. காலம் நீட்டியாது எனினுமாம்.

மேல், ஊழ் மாறுகொண்டு உதவாதாயினும் இயன்ற அளவு முயற்சி பயன்தரும் என்றார்; இதில் குன்றாமல் முயன்றால் ஊழையும் வென்றுவிடலாம் என்றார்.

எதற்கும் தளர்வின்றி நின்று சூழ்ச்சியோடு துணிந்து முயற்சி செய்பவர் பயனைவிலக்குவதாய தீயஊழையும் புறங்கண்டு வென்று பயன்கொள்வர் என்பதாம்.

ஊழை எதிர்பார்த்திராமல் ஊக்கத்தோடு முயற்சிசெய்ய வேண்டும் என்று அடிகள் உணர்த்திய ஒண்மையை இதில்ஊன்றி யுணர்க.

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும் என முந்துறவைத்து ஆண்டு வெலற்கரிது என்ற அவ் ஊழை முயற்சியால் ஈண்டு வென்றுவிடலாம் என்றது முரண் அன்றோ எனின், அவ்விரண்டற்கும் உள்ள உரிமையை ஊன்றி உணரின் முரண் அன்மை உணரப்படும் என்க. என்னை உணர்ச்சியெனின், ஊழும் முயற்சியும், வித்தும் மரமும்போல ஒன்றற்கொன்று மிக நெருங்கிய உரிமையுடையது, முன்னர் முயன்ற அளவுக்குத் தகவே பயனை யுதவிவிட்டு மேல் ஒன்றும் உறாதவாறு தான் கருதிய எதையும் விலக்கிக்கொண்டு ஒருவன் முன் ஊழ் மூண்டுநிற்கும்; பின்னர் அவன் உலையாது ஊக்கி முயலின் ஆகூழுடையவனுவன், ஆகவே முன்னர் மூண்டுநின்ற போகூழ் புறங்காட்டும் ஆதலால் உஞற்றுபவர் ஊழையும் உப்பக்கம் காண்பர் என்றார் என்க.

தனக்கு வயது பதினாறே; அதற்குமேல் யாதும்இல்லை என ஊழ் அமைந்திருப்பவும், உலைவின்றி முயன்றதால் அதன்நிலை குன்ற வென்று மார்க்கண்டர் என்றும் நிலையாய் நின்றதும் ஈண்டு நினைவுறத்தக்கது.

உலையா முயற்சி களைகளு ஊழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே—உலகறியப்
பால்முளை தின்று மறலி உயிர்குடித்த
கால்முளையே சாலுங் கரி. என்று குமரகுருபரரும்

இதனை நினைந்து கூறியுள்ளமை காண்க.

இடைவிடாத முயற்சியுடையவர் தடையுறாமல் உயர்ச்சி அடைவர் என்பது கருத்து.

உலையாத முயற்சியாளர் ஊழையுங்கடந்து விளங்குவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாவித்திரிபால் உணரப்படும்.

## கதை

சாவித்திரி என்பவள் மத்திரதேயத்து மன்னனாகிய அசுவபதியினுடைய அருமைத்திருமகள். இவள் தாய்பெயர் மாளவி. கலைமகளை நோக்கி நெடுங்காலம் கடுந்தவம்புரிந்த பெருந்தகவால் இக்குலமகளை அங்கோமகன் பெற்றெடுத்தானாதலால் சாவித்திரி என்று பெயரிட்டுத் தன் உயிரினும் அருமையாகப் பாவித்து வந்தான். சாவித்திரி என்பது சரசுவதிக்கு உரியபெயர்களுள் ஒன்று. தன் பெயரழகுக்கேற்பவே எல்லா அழகுகளும் இவள்பால் குடிகொண்டிருந்தன. பல நூல்களையும் ஓதியுணர்ந்து இளமையிலேயே இவள் பேரறிவடைந்தாள். சாளுவதேயத்து மன்னன் மகனாகிய சத்தியவான் மிகஉத்தமன் என்று கேள்வியுற்றுளாதலால் அவனையே தனக்கு நாயகனாக உளத்தில் இவள் உறுதிசெய்திருந்தாள். இருக்குங்கால் நாரதமுனிவர் அங்குவந்தார். தந்தைவணங்கி உபசரித்து உரையாடிக்கொண்டிருக்கையில் இவள்போய் அவரைத்தொழுதுபணிந்தாள். இவளது அழகையும் அறிவையும் உவந்துநோக்கி இவளை மனைவியாகப்பெறுதற்கு உரியவன் யாவன் என அப்பெரியவர் வினவினர். இவள் குறித்திருப்பதை மன்னன் குறிப்போடு குறிப்பித்தான். ஐயகோ! சத்தியவான் இன்னுமோராண்டுக்குள் உயிர்துறப்பனேஎன்று முனிவர் உரைத்துஇரங்கினார். அரசன் உளங்கலங்கினான். நினைப்பின்வழியே வினைப்பயன் விளையும் என இவள் நுனித்துணர்ந்தவளாதலால் கலக்கம்யாதுமின்றி உள்ளியதையே உளத்தில் உறுதிசெய்திருந்தாள். இவள் தகவை வியந்து கடுத்தகற்கஞ்சி அவனுக்கேஉரிமையாக அரசன் கொடுத்துவந்தான். தன் அரசினை யிழந்து வறியனாகி வனத்திலிருக்கும் அவனுடன் இவள் அகமகிழ்ந்து அமர்ந்திருந்தாள். ஆயினும் ஊழின் விளைவை நாளும் எண்ணி ஆள்வினையோடே தவத்தை இவள் ஆற்றிவந்தாள். காலமுடிவில் காலன்வந்து தன்கணவனுயிரைக் கவர்ந்து செல்லுங்கால் இவள் அவனைத் தொடர்ந்து சென்றாள்.

இவளது கற்பையும் தகவையும் கண்டு வியந்து என்னை யாரும் காணார் உன் கற்பின் தூய்மையால் இன்று கண்டுகொண்டாய் உனக்குவேண்டியது யாதுஎன அவன் இவளை வேண்டிநின்றான். யான் பிறந்தகுடியும் புகுந்தகுடியும் சிறந்து திகழவேண்டுமென்று இவள் புகன்று தொழுதாள். அப்படியே ஆகுக என்று அவன் அருளியகன்றான். இவளும் அகலாது தொடர்ந்தாள். பின் சொல்லியன எல்லாம்தந்து நில் என நிறுத்தியும் இவள் நில்லாமல் சென்று தென்புலத்தை நெருங்கினாள். உன் பதிக்கு விதிமுடிந்தது ஆதலால் அவனைத்தவிர வேறு எதுவேண்டுமாயினும் கேள் தருவல் என்று தருமன் அருள்புரிந்தான். என் கேள்வனையன்றி வேறொன்றும் இனியான் கேட்கவேண்டுவதில்லை; என்னை நிலை குலையாமல் நிலைநிறுத்தவேண்டின் என் தலைவனைத்தந்தருளும்; இன்றேல் நும்புரத்தில் யான் வந்துபுகுந்திருக்கின்றேன் என்று பொருமி நின்றாள். இவளது நிலைமையையும், உலையாது முயலும் உள உறுதியையும், வியந்து கவர்ந்த உயிரை இயமன் நயந்து விடுத்தான். இவள் மீண்டுவந்து கொழுநனைப்பெற்று மகிழ்வுடன் வாழ்ந்தாள். தன்முயற்சியால் விதியையும் வென்று விளங்கிநின்ற இவளை அனைவரும் வியந்து போற்றினார். உலைவின்றித்தாழாது உஞற்றுபவர், ஊழையும் உப்பக்கம் காண்பர் என்னும் உண்மையை உலகம் காண இவள் உணர்த்திநின்றாள். விரிவைத் தரும சங்கிதையில் காண்க.

தாழ்வற முயலின் ஊழுந்தணந்துபின் வாங்கும்; இன்மை
வீழ்வுறும்; புன்மையாவும் விளிவுறும்; விளியா இன்ப
வாழ்வுறும்; மாபும் மாண்பும் வண்மையும் வளரும; நாளும்
கேழ்கிளர் புகழுமோங்கும்; கேண்மையோ டாண்மையாமே.

குன்றாது முயல்பவர் ஊழையும் வென்றுவிடுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

முடியாதென்று கருதி எதையும் கண்டு தளராமல் உறுதியோடு நின்று மக்கள் முயற்சியைச் செய்தல்வேண்டும். முயற்சியைச் செய்யாமல் ஒருவன் ஒழிந்துவிடின், உலகம் அவனைப் பழித்து

விடும். பிறர்க்குஉபகரித்தலாகிய பெருமையை முயற்சியுடைய வனே அடைவான். அஃதில்லாதவனுக்கு அப்பெருமை சிறிதும் இலதாம். தனக்கொரு நலத்தை விரும்பாமல் எப்பொழுதும் முயற்சியையே செய்கின்றவன் எல்லார்க்கும் ஓர் இன்பப்பொருளாய் இருந்து விளங்குவான். முயற்சியுடையவன் செல்வத்தை யெய்திச் சிறந்து விளங்குவான்; அஃதில்லாதவன் அல்லலும் வறுமையும் அடைந்து தாழ்வான். மூதேவிக்கு இருப்பிடமாய மடியினைவிட்டுத் திருமகளுக்கு உறைவிடமாகிய முயற்சியைச் செய்யின் எல்லாவுயர்ச்சிகளும் தாமே எய்தும். விதியை நினைத்துகொண்டு முயற்சியைக்கைவிடின் அதுவே ஒருவனுக்குப் பெரும்பழியாகும். கருதியபயனை விதிதரவில்லையாயினும் முயற்சித்தக்கவாறு பலனுண்டாகும். தாழ்வற முயல்பவர் ஊழையும் வெல்வர்.

௬உ-வது ஆள்வினையுடைமை முற்றிற்று.

---

# 63-ம் அதிகாரம் இடுக்கணழியாமை.

அஃதாவது உறுந்துன்பங்களுக்கு உளங்கலங்காமை. இடுக்கண் = துன்பம். அழியாமை என்றது அழிதல் என்பதன் எதிர்மறைத்தொழிற்பெயர். அழிதல் = நிலைகெடுதல். முயற்சிசெய்யுங்கால் இடையே தோன்றும் இடையூறுகளுக்கு அஞ்சிக் கலங்கின் எத்துணை ஆள்வினையுடையாரும் தாழ்வினை அடைவாராதலால் அவற்றிற்கு அழியாமல் நின்று அதனை ஆற்றவேண்டுமென்று உணர்த்துகின்றது ஆதலின் அதன்பின் இது வைக்கப்பட்டது. அதிகாரமுறைமையும் இதனானே புலனும்.

621 பண்டிடுக்கண் பற்றப் பதையாமல் என்தருமன்
கொண்டு நகைத்தான் குமரேசா—மண்டி
இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில். (க)

இ—ள்.

குமரேசா! இடுக்கண் வந்தபொழுது நடுக்கம் கொள்

ளாமல் தருமர் ஏன் நகைத்து நின்றார் எனின், இடுக்கண் வருங்கால் நகுக; அதனை அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல் என்க.

ஒப்பது இல்லையெனவே மிக்க தின்மை சொல்லவேண்டாவாயிற்று.

இடுக்கண் = துன்பம்; துன்பம் நேர்ந்தபொழுது மக்கள் கண் இடுங்கும் ஆதலால் அஃது இடுக்கண் என வந்தது. இடுங்குதல் = நெருங்குதல், சுருங்குதல். தோல்வியடைந்து முதல் நாளமரில் இராவணன் துயருற்று நின்றபொழுது இறங்குகண்ணினன், எல் அழிமுகத்தினன் என்று அவனது நிலைமையைக் கம்பர் புலப்படுத்தியிருத்தல் காண்க. கழித்தவேல் எறுபெற்ற கடத்திடைப் பிணையின் மாழ்கி விழித்து வெய்துயிர்த்து என்றார் திருத்தக்கதேவரும்.

வருத்தமுற்றோன் அவிநயம் வகுப்பிற், பொருத்தமில்லாப் புன்கணுடைமையும், சோர்ந்தயாக்கையும் சோர்ந்தமுடியும், கூர்ந்த வியர்வும் குறும்பல்லுயாவும், வற்றிய வாயும் வணங்கிய வுறுப்பும், உற்றதென்ப வுணர்ந்திசினோரே என்றது அவிநயம். இடுக்கணியல்பு இதனான் இனிது புலனும். புன்கண் பழுங்கண் உறுகண் அலக்கண் என்பனவும் இதுபோல்வனவாம். அதனை அடுத்து ஊர்வது = அவ் இடுக்கணை நெருக்கி நின்று நீக்கவல்லது. அஃது என்றது நகுதலை.

துன்பம் வந்தால் எவரும் நிலை குலைந்து அலமருவரேயன்றி உளமகிழ்ந்து நகைபுரியார் ஆதலால் நகுக என்றார்.

வருங்கால் என நிகழ்வுதோன்றக்கூறியது, அதன் இளமையின் எண்மைகருதி. உலைவின்றித் தாழாது உஞற்றின் ஊழையும் வென்றுவிடலாம் என்ற உண்மையையுன்னி உறுதியோடு முயற்சிசெய்துவருங்கால் இடையே இடுக்கண்வந்தால் அதற்கு யாது செய்வதென்ன அவரைநோக்கி இஃது ஓதியதாகக்காண்க.

உனக்குத் துன்பம் வந்தகாலத்து கலங்காமல்நின்று உளமகிழ்க; அத்துன்பத்தைத் தொடர்ந்து அடாவல்லது அம்மகிழ்ச்சி போல்வது வேறு இல்லை என்பதாம்.

இன்பம் வருங்கால் இயல்பாகவே நிகழற்பாலதாய நகுதலை இடுக்கண் வருங்கால் செய்க என்றார், அச்செயல் தளர்ச்சியை

நீக்கிக் கிளர்ச்சியையாக்கும்; ஆகவே மேல் ஆவதைச்செய்து வளர்ச்சியுறலாம் என்பது கருதி. தோன்றும் துன்பத்தைத் துடைத்தற்கு ஏன்ற உபாயம் இதுவே என எண்மைதோன்ற உணர்த்திய அடிகளது ஒண்மையை இதில் ஊன்றியுணர்க.

தமக்கு இடுக்கண் வந்தபொழுது அறிவுடையார் அதற்கு நடுக்கமுறாது அதன் விளைவை நினைந்து நகைபுரிவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தருமர்பால் உணரப்படும்.

## கதை.

தருமரை வலிய அழைத்து வஞ்சனையால் அரசு முழுவதையும் வெளவிக்கொண்டு வனத்துக்குப்போ என்று துரியோதனன் வல்லுரையாடினான். சிறந்த அணி உயர்ந்த ஆடை முதலிய அரசகோலம் அனைத்தையும் கவர்ந்து அல்லல் பலவும் செய்தான். துரியோதனன் துச்சாதனன் சகுனி கன்னன் என்னும் நால்வரொழிய மற்றவரெல்லாரும் இவர்க்கு உற்ற இடுக்கணை நினைந்து தம் உள்ளங்கரைந்தார்.

ஒழிவுசெய் கருணைநால்வர் உள்ளமுமொழிய ஏனை
வழுவறு மன்னருள்ள மம்மரோ டயர்ந்து விம்மக்
குழைவினு னுகர்தலின்றிக் கொற்றமா நகர மாக்கள்
தழலென வுயிர்த்து மாழ்கித் தனித்தனி புலம்பலுற்றார்.

இங்ஙனம் அனைவரும் புலம்பி நிற்பவும் இவர் மாத்திரம் யாதுங் கலங்காமல் வினையின் விளைவை நினைந்து மனமகிழ்ந்து நின்றார். அவ்வஞ்சன் உரைத்தபடியே பதின்மூன்று வருடம் வனத்தில் திரிந்து வந்து பின் நினைத்ததை முடிப்போம் என்று வீமன் முதலிய தம்பிமார்களையும் உடனழைத்துக்கொண்டு முகமலர்ச்சியோடு சென்றார். அகத்தில் அல்லலுற்றிருக்கும் புறத்தில் இவர் நகைபுரிந்து போதலையறிந்து நீறுபூத்த நெருப்புப்போல் மன்னன் அமர்ந்து போகின்றானே என்று புலவர் புகழ்ந்து போற்றினர். துன்பம் வந்தபொழுது தளர்ந்துவிடாமல் கிளர்ந்து நின்றதால் உன்னியதை முடித்து இவர் பின் உயர்ந்து விளங்கினர். இடுக்கண் வருங்கால் நகுதலே அதனைத்துடைத்துயர்தற்கு இனித்த உபாயம் என்பதை உலகம் காண இவர் அன்று உணர்த்தி நின்றார்.

நாட்டிடை யெல்லைபொற்றாள் நறுமலர் சிவக்க ஏகிக்
காட்டிடை புகுந்தபோதும் கலக்கமற் றுவகைகூர்ந்தான்
கூட்டிடை யின்பத்துன்பக் கொழும்பயன் துய்த்துமாறி
வீட்டிடை புகுதும்போதும் மெய்ம்மகிழ் விபுதர்போல்வான்

இஃது, அல்லல் வந்தபொழுதும் மனங்கலங்காமல் இவர் வனம் புகுந்ததை வியந்து வில்லி சொல்லியது. இடுக்கணழியாமைக்கு எடுத்துக்காட்டாக இவர் முன்னிருந்த உண்மையைப் புலவர் பலரும் பின் புகழ்ந்துரைத்துளார்.

மெல்ல கருதலே அல்லலைத் தொலைத்தற்கு நல்ல உபாயம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

622 வெள்ள மெனஇடும்பை மேவியுமேன் மூலரன்று
கொள்ளவில்லை துன்பம் குமரேசா—தள்ளரிய
வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையான்
உள்ளத்தி னுள்ளக் கெடும். (உ)

இ—ள்

குமரேசா! மூலங்கிழார் இடும்பை பல எய்தியும் அவற்றால் என் இன்னல் உறாதிருந்தார் எனின், வெள்ளத்து அனைய இடும்பை, அறிவுடையான் உள்ளத்தின் உள்ளக் கெடும் என்க.

இடும்பை கெடும் என இயைத்துக் காண்க. வெள்ளம் என்பது நீர்ப்பெருக்கு, மிகுதி முதலியவற்றை உணர்த்திவரும்.

வெள்ளத்து அனைய இடும்பை=வெள்ளம்போன்ற துன்பங்கள். இங்ஙனம் கூறியது மிகுதிதோன்ற என்க. பல துன்பங்கள்கூடி ஒரு வெள்ளமாய்ப் பெருகி வருதல்போல் பல இடும்பைகள் ஒருங்கே நெருங்கி வருமென்பதை இது நினைத்து வந்தது.

உள்ளக்கெடும் = நினைக்கக்கெடும். உள்ளுதல் = நினைத்தல். துன்பங்கள் பல ஒருங்கே திரண்டு நெருங்கிவரினும் வினைப்பயனால் விளைந்தன எனவும், காலக்கழிவில் * கழிந்துபோமெனவும் அறிவோடு ஒருவன் நினைத்துவிடின் அவன் நெஞ்சிற் புகாமல் அவையனைத்தும் நீங்கிவிடும் ஆதலால் வெள்ளத்தனைய இடும்பை உள்ளக்கெடும் என்றார். பொருளுடையான், வலியுடையான்

என்னாது அறிவுடையான் என்றார் அங்ஙனம் உள்ளுதற்கு உரிய வன் அவனேயாதலால். நகுதலே துன்பத்தைத் தொலைத்தற்குத் தகுதியான உபாயம் என்று மேல் அருளினார்; அறிவோடு உள்ளி னும் அஃது ஒழியும் என இதில் உணர்த்தினார்.

வெள்ளம்போலப் பெருகி மிகுதியாக வந்த துன்பங்கள் அறிவுடையவன் மனத்தில் விரகோடு நினைத்தவுடனே ஒழிந்து போம் என்பதாம்.

எவ்வளவு துன்பங்கள் எதிர்ந்து வரினும் அறிவுடையார் முன்னம் அவை இழிவுறும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மூலங்கிழார்பால் உணரப்படும்.

## கதை.

மூலங்கிழார் என்பவர் சோழநாட்டிலே ஆலூர் என்னும் நகரிலே வேளாளர் மரபிலே பிறந்தவர். இவரது காலம் இற்றைக்கு ஆயிரத்தெழுநூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னராம். பல நூல்களையும் வழுவறப் பயின்று புலவர் திலகராய் இவர் விளங்கியிருந்தார். அரிய கருத்துக்களை இனிய மொழிகளில் பொதிந்து தெளிய விளக்குவதில் இவர் மிகச் சிறந்தவர். இவரது பாடல்களைப் படிக்குந்தோறும் அறிவு பெருக்கெடுத்து நிற்கும். அறிவும் ஒழுக்கமும் இவர்பால் நிறைபொருந்திருந்தன. பானுமதி என்னும் தனது இனிய மனைவியோடமர்ந்து இல்லறம் புரிந்து வந்தார். அறிவு மிகுந்திருந்த இவர்பால் வறுமையும் புகுந்திருந்தது. ஆதலால் அதனை நீக்க முயன்று பலவகையானும் ஊக்கி நின்றார். அது நீங்கவில்லை. மேலும் மேலும் இடும்பைகள் பல எய்தி நின்றன. எதுவரினும் சிறிதும் இளையாமல் மன அமைதியுடன் இவர் மருவியிருந்தார். வைததனை இன்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த சோறென்று கூழை மதிப்பானும்,—ஊறிய கைப்பதனைக் கட்டியென்றுண்பானும், இம்மூவர் மெய்ப்பொருள் கண்டு வாழ்வார் என்னும் மெய்ம்மையின்படியே இவர் மேவிவாழ்ந்தார். வாழ்ந்துவருங்கால் ஒருநாள் மனமெலிந்து எழுந்து மதுரையையடைந்து அக்காலத்து அங்கு அரசுபுரிந்திருந்த நன்மாறன் என்னும் மன்னனையணுகித் தன் இன்மையின் இயல்பை அவன் எளி

திலுணர்ந்து உதவுமாறு இவர் ஒன்று எழுதி விடுத்தார். அவ் வழுதி வேந்தன் இவர் வரவை முழுதும் மறந்து வேறொரு வழியில் வழுவியிருந்தான். அங்ஙனமிருந்தும் இவர் யாதும் நிலைகலங்காமல் எழுந்தார். நீதியொன்று மொழிந்தார்.

ஒல்லுவது ஒல்லும் என்றலும், யாவர்க்கும்
ஒல்லாது இல்லென மறுத்தலும், இரண்டும்
ஆள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே;
ஒல்லாது ஒல்லும் என்றலும், ஒல்லுவது
இல்லென மறுத்தலும், இரண்டும் வல்லே
இரப்போர் வாட்டல் அன்றியும் புறப்போர்
புகழ்குறை படூஉம் வாயில்; அத்தை
அனைத்தா கியரினி யிதுவே யெனைத்தும்
சேய்த்துக் காணாது கண்டனம்; அதனால்,
நோயில ராகநின் புதல்வர் யானும்
வெயிலென முனியேன், பனியென மடியேன்,
கல் குயின் றன்ன என் நல்கூர் வளிமறை
நாணலது இல்லாக் கற்பின் வாணுதல்
மெல்லியற் குறுமகள் உள்ளிச்

செல்வல் அத்தை; சிறக்கநின் நாளே. என உரைத்துச்சென்றார். இதனால் இவரது அறிவும், அருளும் இடும்பைக்கு அழியாத இயல்பும், பிறவும் இனிது புலனும். மீண்டு தன்னூராகிய ஆவூரை மேவினார். தனக்கு அமைந்திருந்த சிறிய நிலத்தைப் பருவஞ்செய்து பயிரிடத்துணிந்து பண்புடன் முயன்றார். முயன்று வருங்கால் இடைவிடாமல் இடும்பைகள் பல திரண்டு வந்தன.

ஆவீன மழைபொழிய இல்லம்வீழ அகத்தினள்நோய் தனில்
வருந்த அடிமை சாவ
மாவீரம் போகுதென்று விதைகொண்டோட வழியிலே கடன்
காரர் மறித்துக் கொள்ளச்
சாவோலை கொண்டொருவன் எதிரேசெல்லத் தள்ளாத விருந்து
வரச் சர்ப்பந் தீண்டக்
கோவேந்தர் தமதுரிமைப் பகுதிகேட்பக் குருக்கள் வந்து
தட்சிணைக்குக் குறுக்கிட்டாரே. என்றபடி

இடும்பைகள் பல குறுக்கிட்டும் யாதும் குன்றாமல் அவற்றை யின்பமாகவே கருதி இவர் இனிது முயன்றார். அதனால் அவை யனைத்துங்குன்றியழிய இவர் புகழோடு நின்று விளங்கினார். வெள்ளத்தனைய இடும்பையும் அறிவுடையான் உள்ளத்தின் உள்ளக் கெடும் என்னும் உண்மையை உலகம்காண இவர் உணர்த்தி நின்றார்.

எய்தாத வேண்டார் இறங்கார் இழந்ததற்குக்
கைவாரா வந்த இடுக்கண் மனமழுங்கார்
மெய்யாய காட்சி யவர். ஆசாரக்கோவை.

வெள்ளம்போன்ற இடும்பைகளும் அறிவுடையான் உள்ளங்காண ஒழியும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

623 வள்ளனளன் கிள்ளி வளவனிவர் முன்னிடும்பை
கொள்ளவில்லை யென்னே குமரேசா—துள்ளும்
இடும்பைக் கிடும்பை படுப்பர் இடும்பைக்
கிடும்பை படாஅ தவர். (௩)

இ—ள்.

குமரேசா! நளன், கிள்ளிவளவன் என்னும் இவர் துன்பம் பல எய்தியும் துயருறாமல் என் துணிந்திருந்தார் எனின், இடும்பைக்கு இடும்பை படாதவர், இடும்பைக்கு இடும்பை படுப்பர் என்க. படாதவர் படுப்பர் எனப் படுத்திருக்கும் அமைப்பைப் படுத்துப்பார்க்க. அளபெடை இசைநிறைத்து நின்றது.

இடும்பை = துன்பம், வருத்தம், அச்சம். இடும்பைக்கு இடும்பை படாதவர் = துன்பத்திற்கு அஞ்சித் துயரப்படாதவர். படின் எடுத்தவினையை இடையே இளைத்துவிட நேரும்; படானாயின் திண்ணியனாய் நின்று அதனைத் திருந்தச்செய்து பயன் பொருந்தப்பெறுவன்; அதனால் அவனை வருத்தவந்த இடும்பை யாதும் பயன்பெறாமல் வறிதேயிழிந்தழியும் ஆதலால் இடும்பை படாதவர் இடும்பைக்கு இடும்பை படுப்பர் என்றார்.

இடும்பை என முன்வந்த சொல்லே பின்னும் பலவயின் வந்தது ஆதலால் இது பின்வருநிலை என்னும் அணியாம் என்க.

முன்வரும் சொல்லும் பொருளும் பலவயிற்
பின்வரு மென்னிற் பின்வருநிலையே. என்றது இயல்.

மேல், உணர்வுடையான் முன் உற்ற துன்பம் உருவழிந்து கெடும் என்றார்; இதில், கலங்காத ஊக்கமுடையான்பால் இடும்பை வரின் அதுவே கலங்கிப்போம் என்றார்.

தம்பால் வந்த துன்பத்திற்கு அஞ்சி வருந்தாதவர் அத்துன்பத்திற்குத் துன்பத்தை விளைப்பர் என்பதாம.

இடும்பை படாமைதலால் இடும்பைப்படுதல் அதற்கு இல்லையாயினும், தன் தன்மை குன்றுதல் நோக்கி இங்ஙனம் சாற்றியதென்க. எய்தும் இடும்பைக்கு இளையாமல் நின்று தாம் செய்யும் வினையை மக்கள் திருந்தச் செய்யவேண்டுமென்பது கருத்து.

தாம் அலையாமல் நின்று தம்மை அலைக்கவந்த துன்பத்தையே ஆண்மையுடையார் அலைத்து விடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நளன்பாலும், கிள்ளிவளவனிடமும் உணரப்படும்.

## கதை.

நளன் அரசிழந்து அடவியிற் புகுந்து இடும்பைகள் பல எய்தி இறுதியில் உருவமாய் இருதுபன்னனிடம் போய்த் தேர்ப்பாகனாயினன். முடிமன்னனாகிய இவன் ஓர் அடியவன்போல் ஒடுங்கியிருந்தும் தன் உளவுறுதி குன்றாது ஊக்கி நின்றான். கலியன் வந்து இடையிடையே பல இடர்களை விளைத்தான். தீர்வரும் இன்னல் தம்மைச் செய்யினும் செய்ய சிந்தைப் பேரருளாளர் தத்தம் செய்கையிற் பிழைப்பதுண்டோ, கார்வரை நிறுத்தித் தன்னைக் கனலெழக் கலக்கக் கண்டும், ஆர்கலியமாருய்ப அமிழ்து பண்டளித்ததன்றே என்றவாறு இவன் யாதும் அசையாது நின்று ஆவதை ஆற்றினான். அல்லல் பல செய்தும் இவன் உள்ளங் கலங்காமல் உறுதிகொண்டு நிற்பதை நினைந்து கலியனே தன் நெஞ்சங் கலங்கி இவன் நேர்வந்து வணங்கி பின் நேர்வதைக் கூறினான்.

இழைத்த தீவினை தணந்தனன், இன்றுதொட் டுன்பேர்
வழுத்தினரையும் மருவலன்; மன்ன, என்றேத்த
அழற்கொடுஞ் சினந்தணிந்தனன் ஆடல் வேலரசன்
குழைத்த தான்றியில் ஏறினன் கொடிய வெங்கலியே.

அதன்பின் உற்ற இடும்பைகள் யாவும் முற்றும் ஒழிய எல்லா நலங்களும் எய்தி இவன் இனிது வாழ்ந்தான். எதற்கும் கலங்காமல் மனத்திட்பமுடையானாய் இவன் எதிர்ந்து நின்றதால் எல்லா இடும்பைகளும் இவன் முன் இழிந்தொழிந்தன. இடும்பைக்கு இடும்பை படாதவர், இடும்பைக்கு இடும்பை படுப்பர் என்னும் உண்மைக்கு இவன் உறைபுளாய் நின்றான்.

## கதை 2.

கிள்ளிவளவன் என்பவன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து அரசுபுரிந்த ஒரு சோழமன்னன். இவன் காலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னராம். இவனுடைய தந்தை பெயர் இராசகேசரி என்பர். இவன் அறிவும் வண்மையும் ஆண்மையுமுடையவன். அரசனுயிருந்தும் புலவரும் வியக்கத் தக்க அரிய கவிகளை விரைவில் பாடவல்லவன். தந்தை முடியு முன்னரே தளர்ந்திருந்த அரசை இவன் வந்து முயன்று மாண்புறச் செய்தான். தாழ்வுற்றிருந்தும் ஆள்வினையாண்மையால் இவன் வாழ்வுற்றுயர்ந்ததைக்கண்டு மறுபுலமன்னரும், மலையமான் திருமுடிக்காரி முதலிய உள்நாட்டு அரசரும் இவன்பால் பகைமை கொண்டு பல இடையூறுகளை விளைத்தனர். அவற்றிற்கெல்லாம் யாதும் கலங்காமல் நின்று தான் கருதிய எதையும் கருதியாங்கே பெற்று உறுதியோடு முயன்று இடும்பை செய்தவரனைவரையும் எதிர்ந்து வென்று இவன் உயர்ந்து நின்றான். இவன்பால் எய்திய இடர்களெல்லாம் யாதும் பயனின்றி இழிந்துபோயதை நினைந்து பகைவரெல்லாரும் இன்னலுற்று மெலிந்தார். ஒரு காரியத்தைச் செய்து முடித்தற்கு இவன் துணிந்து எழுங்கால் இடையே எவ்வளவு தடைகள் நேர்ந்தாலும், எவர் வந்து தடுத்தாலும், கொடுங்குறிகள் பல கூடி முன்னின்றாலும் கோடாமல் சென்று குறித்ததை இவன் முடித்தே மீளுவான். இயமனும் நாளெல்லையைப்

பார்த்தே ஓருயிரைக் கொல்வன்; இவன் எதையும் பாராமலே தான் எண்ணியபடியே எவரையும் வெல்வன். தடைபடாமல் சென்று இவன் பகையை வென்ற திறலையும், அப்பகைவர் கொண்ட நிலையையும், கோவூர்க்கிழார் என்னும் புலவர்பெருமான் ஒரு பாடலில் கூறியுள்ளார். அதனை இதனடியில் தருதும். அதன் பொருளை ஆய்ந்து காண்க.

காலனும் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே!
திசையிரு நான்கும் உற்கம் உற்கவும்;
பெருமரத் திலையின் நெடுங்கோடு வற்றல் பற்றவும்
வெங்கதிர்க் கனலி துற்றவும்; பிறவும்
அஞ்சுவரத் தகுந புள்ளுக் குரல் இயம்பவும்
எயிறுநிலத்து வீழவும்; எண்ணெய் ஆடவும்;
களிறுமேல் கொள்ளவும்; காழகம் நீப்பவும்;
வெள்ளிநோன்படை கட்டிலொடு கவிழவும்;
கனவின் அரியன காணா நனவிற்
செருச்செய் முன்ப, நின் வருதிறனோக்கி
மையல்கொண்ட ஏமமில் இருக்கையர்
புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்
கெவ்வம் கரக்கும் பைதல் மாக்களொடு
பெருங்கலக் குற்றன்றாற் றோனே காற்றோடு
எரிநிகழ்ந் தன்ன செலவிற்
செருமிகு வளவநிற் சினைஇயோர் நாடே.

எவ்வகை இடுக்கண்களுக்கும் இவன் இளையாமல் நின்று எண்ணிய எதையும் எண்ணியாங்கெய்திய திண்மையும், மேற்குறித்த வுண்மையும், பிறவும், இதில் பிறங்குதல் காண்க. இங்ஙனம் புலவர் பாடும் புகழுடையோனுய இவன்பால் எய்திய இடும்பைகளெல்லாம் இழிந்துபட யாதும் தளராமல் இவன் உயர்ந்து விளங்கினுன். துன்பத்திற்கு அஞ்சாதவர் துன்பத்திற்கே துன்பத்தைச் செய்வர் என்னும் பொய்யாமொழிக்கு இவனோர் பொருளாய் நின்றுன். விரிவைச் சோழர்குல முறையில் காண்க.

எய்திய இடும்பைக்கு இளையாதவனே எல்லா நலங்களும் எய்துவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

624 உற்ற இடுக்கணெல்லாம் ஊறுபட மாவளவன்
கொற்றமுற்றான் என்னே குமரேசா—பற்றி
மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற
இடுக்க ணிடர்ப்பா டுடைத்து. (௪)

இ—ள்.

**குமரேசா!** உளங்கலங்காமல் நின்ற மாவளவன் முன் உற்ற துன்பங்களெல்லாம் ஏன் உடைந்தொழிந்தன எனின் மடுத்தவா யெல்லாம் பகடு அன்னான் உற்ற இடுக்கண், இடர்ப் பாடு உடைத்து என்க.

பகடு என்றது தாங்கிநின்ற வினையைத் தளராது ஆற்றும் தகுதி கருதி. மடுத்தவாய் எல்லாம் = இடையூறு எதிர்ந்த இடங்களெல்லாம். மடுத்தல் = புகுதல், நிறைதல், எதிர்தல். பகடு = எருது. பசு யானை முதலியவற்றின் ஆண்பால் பகடு எனப்படும். யானையும் எருமையும் பெற்றமும் மற்றிவை, பான்மையினுரைக்கிற் பகடென்றுமே என்றது பிங்கலந்தை.

இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து = துன்பம் துயரப்படுதலை உடையது; இதன் பாய்ச்சல் பகடன்னான்பால் பலியாதாதலால் இடர்ப்பாடு இதற்கே உடைத்தாயிற்றென்க. ஆழ்மணல், அளற்று நிலம் முதலிய இடங்கள் எதிர்ந்தாலும் தளர்ந்துபடாமல் தான் தாங்கிவந்த பாரச் சகடத்தை வீரத்தோடு ஈர்த்து ஏறு வெளியிலுய்க்கும்; அதுபோல், பகை வறுமை முதலிய இடையூறுகள் இடையே புகுந்து தடைசெய்தாலும் அவற்றிற்கெல்லாம் அஞ்சாமல் நின்று தான் கருதிய வினையை உறுதியுடையவன் கடைபோகச் செலுத்துவன் ஆதலால் அவன் பகடன்னான் என நின்றான்.

மேல், இடும்பைக்கு இளைக்கலாகாதென்றார்; அங்ஙனம் இளையாமல் உழைத்துயர்தற்கு ஓர் உவமையை எடுத்துக்காட்டி இதில் உணர்த்தியருளினார். தடை நிகழ்ந்த இடங்களெல்லா

வற்றினும் பகடுபோல வினையைத்தாங்கி நடந்த வல்லானைச் சார்ந்த துன்பம் தானே துன்பப்படும் என்பதாம்.

இழிந்த பிறப்பாயிருந்தும் இடுக்கணுக்கழியாமல் நின்று மிடுக்குற்று உழைக்கும் மேன்மையால் உயர்ந்த மக்கட்கும் ஓர் சிறந்த உவமையாகப் பகடு ஈண்டு உணரநின்றது.

வல்வாய் உருளி கதுமெனமண்ட, அள்ளற்பட்டுத் துள்ளுபு துரப்ப நல் எருது முயலும் எனப் பாலைக்கௌதமனாரும், குண்டு துறை இடுமணற் கோடுற அழுந்திய, பண்டிதுறையேற்றும் பகட்டிணைபோல எனப் பெருங்கதை நூலாரும்; அச்சொடுதாக்கிய பாருற் றியங்கிய, பண்டச் சாகாட்டாழ்ச்சி சொல்லிய, வரிமணில் ஞெமரக் கற்பக நடக்கும், பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ? என ஔவையாரும் இதன் ஆள்வினையாண்மையை வியந்து அருளியுள்ளமை காண்க.

மாடுங்கூட மண்டிய இடுக்கணைக்கண்டு தளராமல் தான் கொண்ட சுமையைக் குறிக்கொண்டுய்க்கும் ஆதலால் அதனையுணர்ந்தேனும் மக்கள் எதற்கும் மனங்கலங்காமல் நின்று தம் தொழிலை முடிவுற இனிது செலுத்தவேண்டும் என்பது குறிப்பு.

எத்தனை இடையூறுகள் வந்தாலும் தாம் எடுத்த வினையைத் திருத்தமுறச்செய்து முடிப்பவரே சிறப்படைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாவளவன்பால் உணரப்படும்.

## கதை.

மாவளவன் என்பவன் ஆயிரத்தெண்ணூற்றெழுபதாண்டுகட்கு முன்னர் உறையூரிலிருந்து அரசுபுரிந்த ஒரு சோழமன்னன். இவன் மிக்க திண்மையோடு தக்க சூழ்ச்சியுமுடையவன். நுண் மதியாளன். இவன் இளைஞனாயிருக்கும் பொழுதே தந்தையாகிய பொலந்தேர்க்கிள்ளி என்பவன் இறந்துபோனான் ஆதலால் அவன் மேல் சினந்திருந்த பகைஞர் சிலர் அவ் அரசை அலைக்கத்துணிந்து அல்லல் பல விளைத்தார். இவன் வயதில் இளையனாயினும் முதியரும் வியக்கத்தக்க மதியுடையனாதலால் அவர் விளைத்துவந்த சதிகளெல்லாம் வீணாயொழிந்தன. பருவமெய்தியபின் அறிவும் ஆண்மையும் பொருந்த இவன் அரசுபுரிந்து வந்தான்; ஆயினும்

கருவுகொண்டு அவர் இடையிடையே பல இன்னலை இயற்றி வந்தார். அவற்றிற்கெல்லாம் இவன் அஞ்சாமல் நின்று பருவமறிந்து அவரனைவரையும் அடங்கவென்று முன்னிய எதையும் முன்னியாங்கு முடித்து முதன்மை பெற்று நின்றான். இவனது ஆள்வினை ஆண்மைகளை வியந்து வாள்வினை வீரரெல்லாரும் வணங்கிப் போற்றினர். யானை தேர் குதிரை காலாள் என்னும் நால்வகைப் படைகளையும் நலமுறப் பெருக்கித்தன் செங்கோலாணையை இவன் எங்கும் செலுத்தினன். எத்துணை இடையூற்றையும் பொருட்படுத்தாமல் எதிர்த்தகற்றி வினையைத் திருந்தச்செய்து வந்தானாதலால் தந்தையினும் பெருந்திருவுடையனாய் இவன் சிறந்து விளங்கினன். அதனால் பெருந்திருமாவளவன் என்று இவன் பெயர்பெற்று நின்றான். அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த பெருவழுதி என்னும் பாண்டிய மன்னனும் இவனது திட்பத்தையும் ஒட்பத்தையும் மகிழ்ந்து இவன்பால் மிக்க நட்புற்றிருந்தான். காரிக்கண்ணனார் மதுரைக்குமரனார் முதலிய புலவர் பெருமான்கள் பலரும் இவனது நிலைமையையும் தலைமையையும் புகழ்ந்து மகிழ்ந்துள்ளார். உற்ற இடுக்கணெல்லாம் ஊறுபட இவன் ஊக்கி முயன்று உயர்ந்து விளங்கினன். மடுத்தவாயெல்லாம் பகடு அன்னான் உற்ற இடுக்கண் இடர்ப்பாடுடைத்து என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

முந்நீர் நாப்பண் திமிற்சுடர் போலச்
செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்
உச்சி நின்ற உவவுமதி கண்டு
கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலியும் யானும் வல்விரைந்து
தொழுதனம் அல்லமோ? பலவே கானல்
கழியுப்பு முகந்து கல்நாடு மடுக்கும்
ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்பகட்டு அன்ன எங்கோன்
வலனிரங்கு முரசின் வாய்வாள் வளவன்
வெயில்மறைக் கொண்ட உருகெழு சிறப்பின்
மாலைவெண்குடை யொக்குமால் எனவே. புறநானூறு.

பகட்டன்ன எங்கோன் வளவனது வெண்குடையை மதி ஒக்கும் என இயைத்துக் காண்க. இது, இவன் குடையைச் சிறப்பித்து மருத்துவன் தாமோதரனார் என்பவர் பாடியது. இவன் குடை இவ்வுலகிலிருந்து கலியை நீக்குதல்போல், சந்திரன் விண்ணிலிருந்து இருளை நீக்குகின்றான் எனவும், அதனாலேதான் அவன் தொழப்படுகின்றான் எனவும், எத்துணை இடுக்கண்கட்கும் இளையாமல் பகடுபோல இவன் அரசபாரத்தைப் பொறுத்து நடத்தினான் எனவும், இதில் போற்றப்பட்டுள்ளமை காண்க. மடுத்தவாயெல்லாம் மனங்கலங்காமல் நின்று இவன் வினையை நடத்திய திண்மையும், மேற்குறித்த உண்மையும், இதனாலும் இனிது புலனாம்.

உறுந்துயர்க்குத் தளராமல் ஊக்கி முயலவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

625 கோடியல்லல் வந்துமுனங் கூடியுமேன் நற்கிள்ளி
கோடாமல் நின்றான் குமரேசா—கோடி
அடுக்கி வரினும் அழிவிலா னுற்ற
இடுக்கண் இடுக்கட் படும். (ரு)

இ—ள்

குமரேசா! அல்லல் பல வந்தும் நற்கிள்ளியை ஏன் யாதும் அசையாமல் அவை அகன்று தொலைந்தன எனின், அடுக்கி வரினும் அழிவு இலான் உற்ற இடுக்கண் இடுக்கட் படும் என்க.

அடுக்கி வரினும் = துன்பங்கள் இடைவிடாது மேன்மேல் வந்தனவாயினும்; அழிவு இலான் = உளவுறுதி குலையாதவன்; கலங்காதவன் என்றவாறு. உற்ற = அடைந்த. உறு என்னும் பகுதி ஒற்றிட்டிக் காலங்காட்டி எச்சமாய் நின்றது. உண்மை யுணர்வும், திண்மையுமுடையவர் அல்லல் பல உறினும் தம் உள்ளங்குலையார் என்க.

உடற்கு வருமிடர்நெஞ் சோங்கு பரத்துற்றோர்
அடுக்கு மொருகோடி யாக—நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பனிமொழியாய் அஞ்சுமோ
மண்ணிற் புலியை மதிமான். என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது. மேல்மேல் நெருங்கிவரினும் மனங்கலங்காதவன் முன் வந்த துன்பங்கள் தாமே துன்புற்றழியும் என்பதாம்.

உளத்தைக்கலக்கி ஒருவன் உறுதியை நிலைகுலைப்பதே இடுக்கண்கட்கு இயல்பாம்; கலங்காத வினையாளன்பால் அவை மலைமேல் எறிந்த மட்கலங்கள்போல் ஒருபயனுமுறாது இழிவுறுமாதலால் அழிவிலான் உற்ற இடுக்கண் இடுக்கட்படும் என்றார்.

எவ்வளவு இடுக்கண்கள் வந்தாலும் ஊக்கமுடையான் அவற்றிற்கு உளங்கலங்கான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நற்கிள்ளிபால் உணரப்படும்.

## கதை.

நற்கிள்ளி என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர் உறையூரிலிருந்து அரசுபுரிந்த தித்தன் என்னும் சோழமன்னனுடைய புதல்வன். அழகும் திண்மையுமுடையனாயினும் கல்வியில் கருத்தின்றி இவன் களித்துத் திரிந்தான். பருவமெய்தியும் தன் மரபுக்குரிய மாட்சியிலனாய்ப் பொறியின்பங்களையே நுகர்ந்து இவன் வறிது நிற்றலை நினைந்து தந்தை வருந்திநின்றான். கற்பக்கழிமடம் அஃகும்; மடம் அஃகப் புற்கந்தீர்ந்து இவ்வுலகின் கோளுணரும்; கோளுணர்ந்தால் தத்துவமாய நெறிபடரும்; அந்நெறி, இப்பாலுலகத்து இசைநிறீஇ; அப்பால் உயர்ந்த உலகம்புகும் என்று கல்வியினுயர்வையும், கல்லா மனிதர் கயவர்; உலகினில், பொல்லாவினைத்துயர்போகஞ் செய்வாரோ என்று கல்லாமையால் உளவாம இழிவுகளையும் எடுத்துக்கூறி எவ்வளவோ உணர்த்தியும் இவன் யாதும் கேளாமல் வாளாவிருந்தனனாதலால் தந்தை சினந்து இனி என்முன் நில்லாதே வெளியே போ என வெறுத்து விலக்கினான். இவன் விலகிப்போய் வேறுநாட்டை யடைந்து ஆண்டு அல்லல்பல கொண்டு

அரிதின் முயன்று கல்வி பயின்றான். பின்பு பொருளீட்ட முயன்றான். முயன்றும் வறுமைப்பாட்டால் உணவும் உடையுமின்றி மிகச் சிறுமைப்பட்டான். புல்லரிசிக்கூழே நாளும் பொருந்தி நுகர்ந்தான். ஆயினும் தன் உள்ளங்கலங்காமல் உழைத்துநின்று மல்லமரிலும் வாளமரிலும் எவரினும் இவன் வல்லுநன் என்று பெயரெடுத்தான். தன்னையடுத்த சிலர்க்கும் அவற்றைப் பயிற்றி வந்தான். வருங்கால் முக்காவல் என்னும் நாட்டில் ஆமூர் என்னும் நகரில் நாகன் என்று ஒரு வீரன் இருந்தான். மல்லமரில் மிக்கவும் வல்லுநனாதலால் ஆமூர்மல்லன் என்றே அவன் அழைக்கப்பட்டான். எவரும் வெல்லமுடியாதென்று அவனை எல்லாரும் புகழ்ந்தார். முடிமன்னரும் அவனுக்கு மனமடங்கியிருந்தார். இடும்பைகள் பல எய்தியும் தளராமல் தன் மனவுறுதியே துணையாகக் கொண்டிருந்த இவன் ஒருநாள் ஆமூரை அடைந்து அவனை மல்லுக்கு வருமாறு சொல்லி விடுத்தான். அவன் விரைந்து வந்து இவனோடு சினந்து பொருதான். அதில் அவனை இவன் வென்று விளங்கினன். அவன் விளிந்து தொலைந்தான். அவ்வெற்றித் திறத்தைக் கொற்றவனைவரும் கேட்டு இவனைக் கொண்டாடி நின்றார். தித்தனும் அறிந்து தன் மைந்தன் என்று சித்த மகிழ்ந்து வந்து இவனைத் தழுவிக் கொண்டுபோய்த் திருமுடி புனைந்து இவன் அரசுபுரியுமாறு அன்பு புரிந்தான். அதன்பின் நக்கண்ணை என்னும் பெண்ணை மணந்து முன்னிய போகங்களை நுகர்ந்து மன்னவனாகி இவன் மன்னியிருந்தான்.

இன்கடுங்கள்ளின் ஆமூர் ஆங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகால் மார்பொதுங்கின்றே ஒருகால்
வருதார் தாங்கிப் பின் ஒதுங்கின்றே
நல்கினும் நல்கானாயினும் வெல்போர்ப்
போரருந் தித்தன் காண்கதில் அம்ம
பசித்துப் பணைமுயலும் யானைபோல
இருதலை ஒசிய எற்றிக்
களம்புகு மல்லற் கடந்தடு நிலையே. புறநானூறு.

இது தன்னோடு மலைந்த மல்லனை நம் கிள்ளி வெல்லுங்கால் ஒரு காலை மண்டியாக மார்பிலே மடக்கிவைத்து மற்றொரு காலால் போரை விலக்கிக்கொண்டு, யானை மூங்கிலை வளைத்தொடிப்பது போல் தலையும் காலும் முறிய மோதி முடித்ததை வியந்து சாத்தந்தையார் என்னும் புலவர் பாடியது. தன்மேல் அடுக்கிவந்த துன்பங்களெல்லாம் அழிந்தொழிய இவன் அழிவின்றி நின்று ஆள்வினையாண்மையால் வாழ்வெய்திய மேன்மையைப் புலவர் பலரும் புகழ்ந்து பாடியுள்ளார். அடுக்கிவரினும் அழிவிலான் உற்ற இடுக்கண் இடுக்கட்படும் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

> என்னை, புற்கையுண்டும் பெருந்தோ ளன்னே
> யாமே, புறஞ்சிறை யிருந்தும் பொன்னனன்னம்மே
> போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே
> கல்லென் பேரூர் விழவுடை யாங்கண்
> ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்
> குமணர் வெரூஉம் துறையன் னன்னே. நக்கண்ணையார்.

இஃது இவன் பிரிவாற்றாமைக்கு இரங்கி இவன் மனைவியிசைத்தது. முன் இவன் அல்லலுற்றுப் புல்லரிசிக் கூழையுண்டதும், அக்காலத்தும் இவன் உளங்காமல் வென்றதும், பின் உயர்ந்து நின்றதும், பிறவும் இதனால் இனிது புலனும்.

துன்பங்கள் பல தொடர்ந்து வந்தாலும் துணிவுடையார் தளர்வுறார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

626 அற்றேம் அரசென்றோர் அல்லலின்றி யேன்போனன்
கொற்ற இராமன் குமரேசா—முற்றுமே
அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புதல் தேற்றா தவர். (சு)

இ—ள்.

**குமரேசா!** அரசிழந்தேம் என்று ஏன் அல்லற்படாமல் இராமன் அகன்று சென்றான் எனின், பெற்றேம் என்று ஓம்புதல் தேற்றாதவர், அற்றேம் என்று அல்லல் படுபவோ என்க.

படார் என்பது தோன்ற நின்றமையின் ஓகாரம் எதிர்மறைப் பொருளது. தேற்றாதவர் படார் என்றதனால் தேற்றுவார் படு வார் என்பதாயிற்று. அறுதல் பெறுதல் என்னும் வினைக்கு ஏற்ற எழுவாயை இதில் அமைத்துக் காண்க.

பெற்றேம் என்று ஓம்புதல் தேற்றாதவர் = செல்வம் பெற் றேம் என்று மகிழ்ந்து அதனை இறுகப்பிடித்து வைத்தலை அறி யாதவர். அல்லல் படுப ஓ = துன்பம் உறுவரோ; உறார் என்ற வாறு. வறுமை வந்தால் அதற்கு வருந்தாதிருத்தற்கு உபாயம் யாது என்பாரை நோக்கி இஃது இயம்பியதாகக் காண்க.

மேல், துன்பங்கள் மேன்மேல் வரினும் திண்மையுடையார் தம் சிந்தை கலங்கார் என்றார்; இதில், இருந்த செல்வம் இழந்து போயினும் அவர் வருந்தி வாடார் என்றார்.

செல்வம் பெற்றகாலத்தில் யாம் பெற்றேம் என்று அதனைப் பற்றி மகிழாதவர், அஃது அற்றகாலத்தில் யாதும் அல்லற்படார் என்பதாம்.

உள்ளபொருள் அழிந்தாலும் உயர்ந்தோர் தம் உள்ளம் அழி யார் என்பது கருத்து.

பெற்றேம் என்று பொருளை இறுகப்பற்றிப் பெருக மகிழாத குமணன், தம்பியால் அஃதற்றபொழுது யாதும் அல்லற்படாமல் அமைந்திருந்தது போல் எத்துணை வறுமையுற்ற பொழுதும் மேலோர் வருந்தி மெலியாமல் அதனியல்பைத் தெளிந்திருப்பார் என்க. திருவுறுகின்றுழி மகிழ்ந்துந் தீர்வுழிப்

பருவரல் எய்தியும் பாசந் தன்னிடை

அரிதுணர் கேள்வியர் அழுங்குவார் கொலோ

வருவது வரும் அது மறுக்கலாகுமோ. என்றதுங் காண்க.

தாம் எய்திநின்ற செல்வமுழுவதும் இழந்துவிட நேரினும் நல்ல அறிவுடையார் அதற்காகக் கலங்கிவிடார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமன்பால் உணரப்படும்.

## கதை.

தம் தந்தையாகிய தசரதன் விரும்பியாங்கு இராமர் முடி

புனைந்து அரசாள அமைந்திருந்தார். அவ் அமைவினையறிந்து அனைவரும் மிக மகிழ்ந்திருந்தார். கைகேசி புகுந்து இராமர் அரசினையிழந்து அடவியில் புகுமாறு வஞ்சனைபுரிந்தாள். இவர் யாதும் அல்லலுறாது அவ்வாறே செல்லலாயினர். இதனை இலக்குவன் அறிந்து என் அண்ணனுக்கு அரசையில்லையென்று செய்தவரை இவ்வுலகில் இல்லையென்று யான் செய்கின்றேன் என்று தன வில்லை வளைத்துக்கொண்டு வெகுண்டு ஓடி வந்தான். அத் தம்பியை இவர் தகவுற நோக்கினர். செல்வம் பெறுதலும், அறுதலும், ஊழ்வயமாகும். இதற்காக என் நம் தந்தை தாயாரை நீ நிந்தைபுரிகின்றாய் என்று அவன் சிந்தையைத் தேற்றினர். அவ்வமையம் இவர் அருளிமொழிந்த அருமையை இதனடியில் வரும் கவியுருவில் கருதிக் காண்க.

நதியின்பிழையன்று நறும்புனலின்மை அற்றே
பதியின்பிழையன்று பயந்துநமைப் புரந்தாள்
மதியின்பிழையன்று மகன்பிழையன்று மைந்த
விதியின்பிழை நீ இதற்கென்னை வெகுண்டதென்றான்.

இங்ஙனம் தேற்றிக்கொண்டு செல்வமிழந்தேமென்று சிறிதும் தியங்காமல் தேர்ந்து சென்றார். இவரைப் பிரிந்து வருந்திய பொழுது சீதை இவர் திருவிழந்தபோதும் நிலையழியாமல் சென்ற இதனையே நினைந்து நினைந்து தன் நெஞ்சமுருகினாள்.

மெய்த்திருப்பதம் மேவென்ற போதினும்
இத்திருத் துறந் தேகென்ற போதினும்
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை யுன்னுவாள்.

இதில் முன்னைய உண்மையும், இவரது ஒண்மையும் திண்மையும் ஊன்றி உணர்க. பொருள் உற்றகாலத்து அதனைப் பெற்றேம் என்று வியந்து போற்றுதவர், அஃது அற்றகாலத்து அதற்காக அல்லலுறார் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. விரிவை இராமாயணத்தில் காண்க.

தெருளுடை மனத்து மன்னன் ஏவலிற் றிறம்ப அஞ்சி
இருளுடை யுலகம் தாங்கும் இன்னலுக்கியைந்து நின்றான்
உருளுடைச் சகடம் பூண்ட உடையவனுய்த்த காரே று
அருளுடை யொருவன்நீக்க அப்பிணி யவிழ்ந்ததொத்தான்.

இப்பொழு தெம்மனோரால் இயம்புதற் கெளிதே யாரும்
செப்பருங் குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசக முணரக் கேட்ட
அப்பொழு தலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா.

இவை, அரசிழந்தபொழுது இராமர் அமைந்திருந்த நிலையைக் குறித்துக் கம்பர் கூறியன. செல்வம் பெற்றேம் என்று மகிழாமலும், அஃது அற்றேம் என்று அல்லலுறாமலும், இவர் அமர்ந்திருந்த இயல்பும், வறுமையுறினும் அறிவுடையார் உறுதி குலையார் என்னும் உண்மையும், இவற்றுள் ஒளிர்தல் காண்க.

இன்புவந் துற்றபோதும் எதிர்மறை யுற்றபோதும்
முன்புட னுறுமுறைமேன் விருப்புறார் முனிவும் செய்யார்
அன்புசிற் றுயிரகத்தும் அமைத்துவாழ் கின்ற நீரார்
வன்புறும் மலமுநீங்கத் திருவருள் மூழ்குமாண்பார்.

உற்ற செல்வம் ஒழிந்தாலும் உறுதியுடையார் தம் உள்ளங் கலங்கார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

627 தள்ளா இடும்பைவந்து சார்ந்தும் கணம்புல்லர்
கொள்ளார்துன் பென்னே குமரேசா—கொள்ளும்
இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம் மேல். (ஏ)

இ—ள்.

குமரேசா! இடும்பைகள் பல அடைந்தும் கணம்புல்லர் ஏன் துன் கலங்காமல் இருந்தார் எனின், உடம்பு இடும்பைக்கு இலக்கம் என்று, கலக்கத்தை மேல் கையாறாக் கொள்ளாது என்க.

வறுமை நோய் பகை முதலியன எவை வந்தாலும் உளங் கலங்காமல் நின்று மக்கள் உறுதியோடு முயலவேண்டும் என்று இதுவரை கூறினார்; இதில், உடம்பு வருந்துமே யென்று கருதி மனவுறுதிகுலைந்து தம் காரியத்தைக் கைவிடலாகாதென்கின்றார்.

உடம்பு இடும்பைக்கு இலக்கம் = உடம்புகள் துன்பத்துக்கே குறியிடம்.

மேல் கொள்ளாது = மேலோர் கொள்ளார். மேல் என்பது பொருளால் உயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாதலால் கொள்ளாது என்னும் ஒன்றன்பால் முற்றைக்கொண்டு நின்றது. ஆம் என்பது கட்டுரைச்சுவைக்கண்வந்த அசையாம். அன்றி, அங்ஙனங் கொள்ளாமையே மேலோர்க்கு இலக்கணமாம் என்பது தோன்ற நின்றது எனினுமாம்.

கலக்கம் என்றது துன்பத்தை; கலங்குதற்குக் காரணமாகிய துன்பம் ஈண்டுக்காரியமாகக் கழறநின்றது.

கையாறு என்னுஞ்சொல் ஒழுக்கநெறியையும், துன்பத்தை யும், வியப்பையும் உணர்த்திவரும். இடும்பை, கலக்கம், கையாறு என்னும் இம்மூன்றும் துன்பம் என்னும் ஒரு பொருளையே இதில் உணர்த்திநின்றன. கையாறு என்பது கவலையின் முதிர்ச்சி. கவலையாவது ஏதேனும் ஓர் அவலம் தோன்றின் என் செய்வேம் என ஏங்கி நிற்கச் செய்யும்; கையாறு அச்செயலுமின்றி மூர்ச்சிக்கச் செய்யும். அவலக் கவலை கையாறு அழுங்கல், தவலாவுள் ளம் தன்பால் உடையது மக்கள் யாக்கை; என்றது மணிமேகலை.

இடும்பை எய்துதல் தமக்கு இயல்பென்றே மேலோர் கருதிக்கொள்வர் என்பார் கலக்கத்தை மேல் கையாறக் கொள்ளாது என்றார். மேலோர் கொள்ளார் என்றதனால் அங்ஙனங் கொள் வோர் கீழோரேயாவர் என்பதாயிற்று.

மேல், உறுபொருள் இழந்தாலும் மேலோர் உளங்கலங்கார் என்றார்; துன்பத்திற்கே இவ்வுடம்பு இடம் என்று அவர் தெளிந் திருப்பாராதலால் எதற்கும் துணிந்துநிற்பர் என்று இதில்தொடர்ந் துணர்த்தினார்.

உடம்பு இடும்பைகளுக்கு இடம் என்று தெளிந்து தம்மேல் வந்த துன்பத்தை மேலோர் துன்பமாகக் கொள்ளார் என்பதாம்.

சலமலப்பேழை இருவினைப் பெட்டகம், ஆசைக்கயிற்றில்
ஆடும் பம்பரம், ஓயா நோய்க்கிடம் ஓடுமரக்கலம்
மாபாவிகாரம் மரணபஞ்சரம்; எனவும்,

பேதைமை என்னும் வித்திற் பிறந்துபின் வினைகளென்னும்
வேதனை மரங்கள்நாறி வேட்கைவேர் வீழ்த்தூழ்த்திக்
காதலும் களிப்புமென்னும் கவடுவிட்டு அவலப்பூத்து
மாதுயர் இடும்பை காய்த்து மரணமே கனியும்; எனவும்,

உடம்பை உணர்ந்திருப்பாராதலால் உற்றதுன்பங்களுக்கு அஞ்சி உயர்ந்தோர் தம் உள்ளங்கலங்கார் என்பது கருத்து.

அலக்கணுறுதலே பிறப்பின் இலக்கணம் என்று தெளிந்து எதற்கும் அஞ்சாமல் நின்று மக்கள் முயற்சி செய்யவேண்டுமென்பது குறிப்பு.

எத்துணை இடையூறுகள் வந்து தம்மை வருத்தினும் உளங் கலங்காமல்நின்று தாம் உள்ளியதை உயர்ந்தோர் உறுதிபெற முடிப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கணம்புல்லர்பால் உணரப்படும்.

## கதை.

கணம்புல்லர் என்பவர் இற்றைக்கு மூவாயிர ஆண்டுகட்கு முன்னர்ச் சோழமண்டலத்திலே இருக்கு வேளூர் என்னும் ஊரிலே யிருந்தவர். இவர் அன்பும் ஊக்கமும் அமையப்பெற்றவர். வருந்திமுயன்று பெரும்பொருள் தொகுத்தவர். தருமசீலை என்னும் இனியமங்கையை மணந்து இல்வாழ்க்கையிலமர்ந்து எல்லார்க்கும் உபகாரியாய் இவர் இதம்புரிந்துவந்தவர். வந்த விருந்தினரை மனமகிழ்ந்து உபசரித்துவிட்டு வரும் விருந்தினரை எதிர் விரும்பியிருந்தவர். இங்ஙனம் இருந்துவருங்கால் இவர் செல்வமுழுதும் காலகதியால் சிதைந்துபோயது. போயினும் இவர் உளந்தளராமல்நின்று உடல் வருந்தி முயன்றார். தாம் செல்வராயிருந்தபொழுது தில்லைப்பரமன் திருக்கோயிலுக்குள்

நாளும் இவர் விளக்கேற்றிவந்தார் ஆதலால் வறுமையுற்றும் அவ்வழக்கம் குன்றுமல் வழங்கிவந்தார். கணம்புல் என்னும் ஒருவகைப் புற்களைத் தொகுத்துக் கொணர்ந்து விலைப்படுத்தி அதற்கு நெய்யை வாங்கித் தாம் செய்யும் வினையைச் சிதையாமல் செய்தார். அதனால் கணம்புல்லர் என்று இவர் பெயர் புல்லிநின்றது. இவரது இயற்பெயர் நாகநாதர் என்பர். எய்திய இடர்களுக் கெல்லாம் சிறிதும் கலங்காமல் உடல்வருந்தி இங்ஙனம் இவர் உதற்றி வருங்கால் எடுத்துவந்த புல்லும் ஒருநாள் விலைப் படவில்லை ஆதலால் அதனையே மடுத்து விளக்கெரித்தார். அதுவும் குறித்தபொழுது வரையும் போதவில்லையாதலால் தம் தலை முடியை விரித்து அவ் எரியில் மடுத்தார். உற்ற இடுக்கணுக்கு உளங்கலங்காமல் உடம்பையும் வெறுத்துத் தாம் உள்ளியதையே உறுதிபெற முடிக்கும் இவரது ஒண்மையையும் திண்மையையும் உவந்து இறைவன் வெளிவந்து இவர்க்கு இன்னருள் புரிந்தார். அதன்பின் மிக இனியராகி அறுபத்துமூன்று நாயன்மார்களுள் இவரும் ஒருவராய் அமர்ந்து விளங்கினர். உடம்பு இடும்பைக்கு இலக்கமென்று கருதித் தமக்குவரும் கலக்கத்தை மேலோர் கலக்கமாகக் கொள்ளார் என்பதை உலகம் இவர்பால் கண்டது. விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.

இன்பமதடைந்த காலை இனிதெனமகிழ்ச்சி யெய்தார்
துன்பமதுற்றபோதும் துண்ணெனத் துளங்கிச் சோரார்
இன்பமுந்துன்பந்தானும் இவ்வுடற் கியைந்த வென்றே
முன்புறு தொடர்பையோர்வார் முழுவதும் உணர்ந்த நீரார்.

இடும்பையை இயல்பென்றே மேலோர் எண்ணிக் கொள்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

628 அன்றிடும்பை மிக்கடைந்தும் அத்திமன்னன் துன்பமுற்
குன்றிலன்முன் என்னே குமரேசா—என்றுமே [றுக்
இன்பம் விழையான் இடும்பை யியல்பென்பான்
துன்ப முறுதல் இலன். (அ)

இ—ள்

குமரேசா! பல இடும்பைகள் தன்னைவந்து பற்றியும் அத்திமன்னன் என் அல்லலுறாது இருந்தான் எனின், இன்பம் விழையான் இடும்பை இயல்பு என்பான், துன்பம் உறுதல் இலன் என்க.

இடும்பை இயல்பு என்பான் = துன்பம் அடைதல் இயல்பென்று கருதுவோன். இன்பத்தை விழைதலும், இடும்பையை இயல்பென்று எண்ணுமையும், துன்பமுறுதற்கு ஏதுவாகுமாத லால் அவ்விரண்டையும் ஈண்டு இணைத்துணர்த்தினர்.

துன்பமே மலிந்துள்ள இவ்வுலகில் ஒருவன் துன்பமுறா திருக்கவேண்டுமாயின் அவன் யாது செய்யவேண்டும் என்பாரை நோக்கி இஃது ஓதியதென்க.

நாவுக்கு அடிமைப்பட்டு தன் உடற்கு மிக்க சுகத்தை விரும்பாதவன் முயற்சி முதலியவற்றால் வருந்துன்பத்துக்கு வருந்தான் என்பார் இன்பம் விழையான் துன்பம் உறுதல் இலன் என்றார்.

தன் உடம்பை இடும்பைக்கே இலக்கம் என்று ஒருவன் கருதிக்கொள்ளவேண்டும் என்று மேல் அருளினர்; அங்ஙனம் கருதின் அதனால் வரும் பயன் யாது என்ன? அவனுக்கு ஒருபோதும் துன்பமுண்டாகாது என்று இதில் உணர்த்தினர்.

தனக்கு மிக இன்பத்தை விரும்பாதவனாய் இடும்பை அடைதல் இயல்பென்று தெளிந்திருப்பவன் எவ்வகையினும் துன்பம் உறான் என்பதாம்.

உடலை மினுக்கிக்கொண்டு உணர்ச்சியின்றி உல்லாசமாய்த் திரிபவன் தன் வாழ்நாளில் ஏதேனும் ஓர் இடையூறு எதிர்ப் படின் அதனையாற்றமாட்டாமல் உடனே அலமாலெய்தி அழி வான் என்பது குறிப்பு.

தொல்லை வினைப்பயனைத் துய்த்தற்குத் தொடர்ந்து வந்திருக் கும் இவ்வுடம்புக்கு இடும்பைவருதல் இயல்புதான் என்று

ஒன்றுக்கும் கலங்காமல் இருத்தல்வேண்டும்; அங்ஙனமின்றிக் கலங்குதல் அறிவின்மையாம் என்பது கருத்து.

பாரில் யார்க்கும் பழங்கண் சகசமாம்
வீரியங் கெட வெந்துயர்க் கஞ்சுதல்
போரில் நேர்ந்தவன் பொன்றலுக் கஞ்சலும்
நீரில் மீன்குளிர்க் கஞ்சலும் நேருமே. எனவும்,

பேறிழ வின்பந் துன்பம் பிணிமூப்பு பிறப்பிவற்றின்
ஆறுந்தா முன்னஞ்செய்த வினைவழி வருவதல்லால்
வேறொன்றால் ஆவதுண்டோ வினையென்பானின்ற தொன்று
மாறின்றாய் நின்றதல்லான் மற்றிவன் செய்ததுண்டோ.

எனவும், வருவன ஈண்டு எண்ணற்குரியன.

அல்லல் பல வந்தாலும் அறிவுடையார் தம் உள்ளங் கலங்கார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அத்திபால் அறியப்படும்.

## கதை

அத்தி என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் வஞ்சிநகரிலிருந்து அரசுபுரிந்த சேரமன்னன். இவன் பேரழகுடையவன்; வீரமும் வாய்ந்தவன். இசைநூலில் மிக வல்லுநன். பாவம், ராகம், தாளம் என்னும் மூவகைக்கலைகளிலும் இவன் முதன்மைபெற்றவன். இவன் பாதம்புரியின் விரதஞானிகளும் விழைந்துநோக்குவர். அதனால் ஆட்டன்அத்தி என இவன் அழைக்கப்பட்டான். ஏறுபோன்ற பீடுநடையுடன் தன் வீடுதோன்ற இவன் வெளியில் வருவான். ஏற்றியல் எழில் நடைப் பொலிந்த மொய்ம்பின், தோட்டிருஞ் சுரியல் மணந்த பித்தை ஆட்டனத்தி எனவும், ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின் ஆட்டனத்தி எனவும் அகநானூறிலும் இவன் போற்றப்பட்டுள்ளான். உறையூரிலிருந்து அரசுபுரிந்த பெருவீரனாகிய கரிகாலசோழனுடைய அருமைத்திருமகளை மணம்புரிந்து கொண்டு இவன் பெரும்போகங்களை நுகர்ந்திருந்தான். இவன் மனைவியாகிய அம்மாதரசியின் பெயர் ஆதிமந்தி என்பர். சிறந்த

போகங்களை யெய்தி இவன் நுகர்ந்திருந்தாலும் அவற்றில் முழுதும் ஆழ்ந்துவிடாமல் அறிவோடு சூழ்ந்து பிறவியின் பிழையை யறிந்து மறுமையை நோக்கிநின்றான். எத்தகைய இடர்வந்தாலும் சிறிதும் இவன் சித்தம் கலங்கான். தன் மாமனாகிய வளவன் ஆணையால் கழார் என்னும் நகரிலேயடுத்திருந்த காவிரித்துறையில் விழா ஒன்று நிகழ்ந்தது. தன் அருமை மனைவியோடு இவன் ஆங்கடைந்து ஓங்கிய சிறப்புடன் உவந்திருக்குங்கால் காவிரியில் புதுப்புனல் பொங்கிவந்தது. அதில் துணிந்து புகுந்து நீந்தி இவன் நீராடுங்கால் விரைந்துவந்த மேல்வெள்ளம் இவனை ஆழ்த்தித்தள்ளி யீர்த்துப்போயது. வெள்ளம் வெகுண்டு கடல்வரையும் விரைந்துதள்ளியும் இவன் உள்ளங் கலங்காமல் நீந்திப்போய் உடல்தளர்ந்து கடலலைகளில் மிதந்து ஒரு கரையினை யடைந்து சிறிதுபொழுது தியங்கிக்கிடந்து பின்பு உறுதிகொண்டெழுந்து ஆங்கு வந்த மருதி என்னும் பாடினியின் உதவியால் உடம்பைப் பண்படுத்திக்கொண்டு பன்னாட் கழிந்தபின் தன் பன்னியை வந்து கண்டான். உயிர்பிரிந்த உடல்போல் ஒளியிழந்துகிடந்த அவள் இழந்தவுயிர் எய்தியதுபோல் மிக மகிழ்ந்துகொண்டு இவனுக்கு எய்திய துயரைநினைந்து இரங்கி நொந்தாள்.

அஞ்சின மெனினும் மெய்யே யடைபவந் தடையுமானால்
அஞ்சுத லதனிலென்னே பயனமக்கு அதுவுமன்றி
அஞ்சுதல் துன்பந்தானே அல்லதும் அதனிற்சூழ்ந்த
நஞ்சன வினைகள்நம்மை நாடொறும் நலியுமென்றான்.

கறங்கென வினையினோடிக் கதியொரு நான்கினுள்ளும்
பிறந்துநாம் பெற்றபெற்ற பிறவிகள் பேசலாகா
இறந்தன இறந்துபோக எய்துவ தெய்திப்பின்னும்
பிறந்திட இறந்ததெல்லாம் இதுவும் அவ்வியல்பிற்றேயாம்.

என்னும் உறுதிகளை உணர்த்தி அவள் உளத்தைத் தேற்றி உடனழைத்துக்கொண்டு தன்னூரடைந்து எவர்க்கும் இன்னருள் புரிந்து எவ்வகை யின்னலுக்கும் இளையாமல் முன்னிய வினையை முன்னி யாங்குமுடித்து மன்னவர்மன்னனாய் இவன் மன்னியிருந்தான். வினைவழியால் வந்த உடம்புக்கு இடும்பை இயல்பென்று தெளிந்தவன் தான் வினை செய்யுங்கால் வருந்துன்பங்களுக்கு

அஞ்சிவிடான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்துநின்றது. விரிவைச் சேரர் குல முறையில் காண்க.

துன்பமுறவரினும் தளர்ந்துகலங்காதென்பது இதனால் கூறப் பட்டது.

---

629 மண்டிவந்து துன்பம் மருவிநின் றும் காளனன்று
கொண்டிலனேனன் துன்பம் குமரேசா—கொண்டாடும்
இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துட்
டுன்ப முறுத லிலன். (௯)

இ—ள்.

**குமரேசா!** துன்பம் வந்து தன்னை நெருங்கி நின்றும் காளன் ஏன் அன்று துயருறாது இருந்தான் எனின், இன்பத் துள் இன்பம் விழையாதான், துன்பத்துள் துன்பம் உறுதல் இலன் என்க.

இன்பத்துள் = இன்பம் எய்தியவிடத்து. துன்பத்துள் = துன்பம் வந்த இடத்து. இன்பமும் துன்பமும் இதில் ஆகுபெய ராய் நின்றன. விழையாதான் = விரும்பாதவன். இது வினையால ணையும் பெயர். விழையாதான் உறுதல் இலன் என்றதனால் விழைவான் உறுவான் என்பதாயிற்று.

புலனுகர்ச்சிக்கு ஏதுவாய பல இனிய பொருள்கள் பொருந் தப்பெற்று அவற்றைத்துய்க்குங்கால் தன்வசமழிந்து அதில் அழுந் தாதவன் அவையிழந்தபொழுதும் வருந்தாதலால் இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள் துன்பம் உறான் என்றார்.

தனக்கு மிகு சுகத்தை விரும்பாத அறிவுடையான் மேல் துயருறான் என்றார்; இதில் சுகம் அமைந்தபொழுது அதில் மிக அழுந்தாதவன் துயரடைந்தபொழுதும் மனம்வருந்தான் என்றார்.

இன்பத்தை நுகருங்காலத்தில் அதனை இனிதென மிக விரும் பாதவன் துன்பத்தை அனுபவிக்குமிடத்துத் துயருறான் என்ப தாம். எதுவரினும் தன் நிலைகுலையாமல் அணிவோடிருத்தலே அறிவுடைமையாம் என்க.

இன்பம் வந்துற்றகாலை இருங்களி எய்தல் தானும்
துன்பம் வந்துற்றகாலைத் துயருழந் தழுதல் தானும்
மன்பதை புரக்கும் வேந்தே யறிவிலார் மாட்சி; நல்லோர்
துன்பமும் இன்பந்தானும் தொல்வினைத் தொடர்ச்சி என்பார்.

என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

இன்ப நலங்கள் எய்தியபொழுது இறுமாந்து மகிழ்வோரும், துன்பங்கள் தொடர்ந்தகாலத்துத் துயருழந்து அழிவோரும் அறிவுடையராகார் என்பது கருத்து.

எதுவரினும் உறுதியாளர் தம் உளங்கலங்கார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காளன்பால் உணரப் படும்.

## கதை.

காளன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னர் மகதநாட்டிலே பிலவம் என்னும் நகரிலே யிருந்தவன். வணிகர் மரபினன். உருவும் திருவும் அறிவும் உடையவன். பேரருளாளராய புத்தர்பால் இவன் பேரன்புடையவன். இவன் இளைஞனயிருக்கும்பொழுதே தந்தையார் இறந்து போயினர். இவன் பருவமெய்தி வருங்கால் பருவ மங்கையர் பலர் இவனைப் பருவம்பார்க்க வந்தார். பொருந்தலின்பத்தில் மனம் பொருந்தாமல் முதலில் இவன் திருந்தியொழுகினும் அவர் திருத்திய செயல்களால் இவன் சித்தம் திரும்பி நுகர்ந்தான். எவ்வகை இடர் வந்தாலும் சிறிதும் தளராத இவன் அச்சேயிழையார் தம் செவ்வியில் தளர்ந்தான்.

வெய்யகூற் றுருத்தெறி வேல் விலக்கினும்
எய்துமூழ் வினைத்தொடர் எண்ணி மாற்றினும்
தையலார் முழுமதி முகத்திற் றங்கிய
மையகட் காலவேல் மாற்றலாகுமோ.

மலர்தோறும் வாவிவீழ்ந்து வண்டு மது நுகர்வதுபோல் மங்கையர் பலரை இவன் மருவி மகிழ்ந்தான். அங்ஙனம் மகிழினும் அறிவிழந்து அதில் அழுந்தி விடாமல் தெளிவுடனிருந்தான். இவனது களவியல் ஒழுக்கத்தை அந்நாட்டு வேந்தன் அறிந்து

இவனைக் கொலைசெய்யப் பணித்தான். குறித்தகாலம் வரும் வரையும் ஒரு கொடுஞ் சிறையில் இவனைப்பிணித்து வைத்திருந்து அது வந்தவுடனே கொலைக்களத்துக்குக் கொண்டுபோயினர். அவ்வமையத்தும் உள்ளங்கலங்காமல் வினைப்பயனை நினைந்து கொண்டு இவன் உறுதியோடு நின்றான். இவனது நிலையினை வியந்து ஓர் வணிகர் தலைமகன் விரைந்துபோய் இவனை விடுத்தருளுமாறு அரசனை வேண்டிப்பணித்தான். இவனது திண்மையையும் தெளிவையும் உணர்ந்து அம்மன்னனும் மகிழ்ந்தான். வதைபுரியாமல் வாழ்த்தி விடுத்தான். அதன்பின் குண்டலகேசி என்னும் ஓர் கன்னியை மணந்து எண்ணியாங்கெய்தி இவன் இன்புற்றிருந்தான். துன்பமுற்ற காலத்தும துயருறாமல் இவன் நின்றதைக் குறித்து அக்காலத்துப் புலவர்பாடிய கவி ஒன்று இதனடியில் வருகின்றது.

வேரிக் கமழ்தார் அரசன் விடுகென்ற போழ்தும்
தாரித்த லாகா வகையால் கொலை சூழ்ந்த பின்னும்
பூரித்தல் வாடுதல் என்றிவற் றற் பொலிவின்றி நின்றான்
பாரித்த தெல்லாம் வினையின்பயன் என்ன வல்லான்.

மேற்குறித்த வுண்மையும் இவன் இடுக்கணழியாத் தன்மையும் பிறவும் இதில் இனிது புலனாதலைக் கருதித் தெளிக. இன்பம் எய்திய காலத்தும், துன்பம் தோன்றியபொழுதும் அறிவுடையார் தம் நிலைகுலையார் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. விரிவை நீலகேசியில் காண்க.

உணர்வுடையார் ஒருகாலத்தும் தம் நிலைகுலையார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

630 மண்டியசீர் உத்திரனார் வாய்மைமன்னேன் இன்பமெனக்
கொண்டிருந்தார் துன்பைக் குமரேசா—உண்டான
இன்னாமை யின்பம் எனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு. (ய)

இ—ள்.

குமரேசா! நல்லுத்திரனாரும், அரிச்சந்திரரும் துன்பத்தை ஏன் இன்பம் என்று கருதித்துணிந்திருந்தார் எனின்,

இன்னாமை இன்பம் எனக்கொளின், தன் ஒன்னார் விழையும் சிறப்பு ஆகும் என்க.

இடுக்கணழியாமையால் எய்தும் பயன்களை இதுவரை அருளிவந்து, பெறுதற்கரிய சிறப்பையும் அதனால் பெற்றுவிடலாம் என்று உறுதிபெற இறுதியாக இதில் உணர்த்துகின்றார். கொளின் சிறப்பு ஆகும் என்றதனால் அங்ஙனங்கொள்ளாவிடின் இழிவாம் என்பதாயிற்று.

இன்னாமை = துன்பம்; இஃது இனிமை என்பதன் எதிர் மறைப் பண்புப்பெயர். ஒன்னார் = பகைவர்.

இன்னாமையை இன்பமாகக் கருதிக்கோடல் யார்க்கும் எளிதிற் கூடாததாதலால் அவ் அருமைதோன்றக் கொளின் என்றார். என என்னும் இடைச்சொல் இதில் உவமைநோக்கின்றது. இன்னாமையை விளைத்தற்குரியார் ஒன்னாராதலால் அவர் ஈண்டு உடன் எண்ணநின்றார். அவர் விளைவு உறுதியாளர்பால் நுழையாததாதலால் அதனைவிடுத்து விழைவாராயினர்.

மக்கள் என்றும் துன்பமுறுதிருத்தற்குரிய உபாயத்தை மேலுணர்த்தினர்; அத்துன்பத்தை இன்பமாகவே கருதிவிடின் அதனால் எல்லாமேன்மைகளும் எய்தும் என்று இதில் அருளினர்.

எவ்வளவு அல்லல்கள் இடையே எய்தினும் அவற்றையெல்லாம் நல்லனவாகவே கருதிக்கொண்டு தம் உளஉறுதி குன்றாமல் மக்கள் முயலவேண்டும் என்பது கருத்து.

எடுத்த கருமம் முடிவதன்முன் எய்துங்கெய்வத் தானுக
தொடுத்தமுயற்சியா லூடலிற் றேன்றும் வருத்தத் தானுக
மடுத்த பொருளின்மையினுக மைந்தா அடுக்கிவந்திடினும்
இடுக்கண்தனக்கு உள்அழியற்க; இன்பமதுவே எனத்

தெளிக. என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது.

தனக்கு வரும் துன்பத்தை இன்பமாக ஒருவன் கருதிக் கொள்வனுபின், அவன் பகைவரும் விரும்பிப் புகழ்தற்கேதுவாய மேன்மை அதனால் உண்டாம் என்பதாம்.

செல்வம் கல்வி முதலாயவற்றல் எவ்வளவு உயர்வுகளை ஒருவன் எய்திபிருப்பினும் அவன் பகைவர் அவனை நன்கு மதியார்

ஆதலால் அவரும் மதித்தற்குரிய மாட்சியை அடையவேண்டுமா யின் இடுக்கணுக்கு இளையாமல் அவன் இருக்கவேண்டும் என்க. ஒன்னலனுகிவந்து சுக்கிரீவன் தனக்கு இன்னல்இழைத்தபொழுது

மற்றினி யுதவியுண்டோ வானினும் உயர்ந்த மானக்
கொற்றவ நின்னை என்னைக் கொல்லிய கொணர்ந்துதொல்லைச்
சிற்றினக் குரங்கிேனாடும் தெரிவுறச் செய்தசெய்கை
வெற்றரசு எய்தி எம்பி வீட்டரசு எனக்கு விட்டான். என

வாலி இசைத்துக்கொண்டதுபோல் எய்திய, துன்பத்தை இன்ப மாகவே ஒருவன் எண்ணிக்கொள்வனுயின் அத்திண்மையையும், ஒண்மையையும் வியந்து பகைவரும் அவனை உவந்துகொள்வர் ஆதலால் ஒன்னார் விழைபும் சிறப்பு உண்டாம் என்றார்.

எதிர்ந்த துன்பங்களுக்கு இளையாமல் அவற்றை இன்ப மாகவேகொண்டு ஆண்மையோடு வினைசெய்வாராயின் அவர் எல் லாராலும் போற்றப்பட்டு மிகச்சிறந்தவராகி உலகில் உயர்ந்து விளங்குவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உத்திரன்கண்ணும், அரிச்சந்திரன்பாலும் உணரப்படும்.

## கதை.

உத்திரன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண் டுகட்கு முன்னர்ச் சோழ மண்டலத்திலே நெற்குடி என்னும் நக ரிலே யிருந்தவன். சோழமன்னரது மரபினைச் சார்ந்தவன். தன் முயற்சியால் எவரினும் இவன் உயர்ச்சியுற்றவன். தானே முய ன்று பல நூல்களையும் பயின்று புலமை நிரம்பினன். நன்னிலைக் கண் தன்னை நிறுப்பானும், தன்னை நிலைகலக்கிக் கீழிடுவானும், நிலையினும் மேல்மேல் உயர்த்து நிறுப்பானும், தன்னைத் தலையா கச் செய்வானும், தான்; என்னும் உண்மைக்குத் தன்னையே உறு திபாக இவன் உரிமைசெய்திருந்தான். உற்ற இடர்களுக்குத் தளராமல் உள்ளியதை உள்ளியாங்கே முடித்துயர்ந்த இவனது பான்மையையும் மேன்மையையும் நினைந்து சிலர் இவன்பால் வீண் பகைமைகொண்டு வெந்துயர் விளைத்தார். அவர் இழைத்த இடும்பைகளுக்கெல்லாம் இவன் யாதும் இளையாமல் இனிதமர்ந் திருந்தான். தன்னைப்பற்றிய தீயால் பொன்புடமிடப்பட்டு ஒளி

பெற்று மிளிர்வதுபோல் உற்ற துன்பங்களையெல்லாம் தனக்கு ஓர் ஊற்றமாகவே கருதி இவன் உயர்ந்து விளங்கினான். இவனது நிலையினை வியந்து இவன் பகைவரும் தலைசாய்ந்து வணங்க இவன் தலைமைபெற்று நின்றான். இன்னாமையை இன்பமெனக் கொள்ளின் தன் ஒன்னார் விழையும் சிறப்பு ஒருவனுக்கு உண்டாம் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. சோழன் நல்லுருத்திரன் எனவும் இவன் சொல்லப்படுவான். இவன் பாடிய கவி ஒன்று இதனடியில் வருகின்றது.

விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டளை மல்க வைக்கும்
எலிமுயன் றனைய ராகி யுள்ளதம்
வளன் வலி யுறுக்கும் உளம் இலாளரோடு
இயைந்த கேண்மை இல்லாகியரோ
கடுங்கட் கேழல் இடம்பட வீழ்ந்தென
அன்றவண் உண்ணாதாகி வழிநாட்
பெருமலை விடாகம் புலம்பவேட்டெழுந்து
இருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து
உரனுடை யாளர் கேண்மையொடு
இயைந்த வைகல் உளவாகிய ரோ. (புறம்.)

விளைநிலத்துட் புகுந்து வளைந்த கதிர்களை வெளவிக்கொண்டு தன் வளையுள் வைக்கும் எலிகள்போல், சிறிய முயற்சியைச் செய்து சிறுபொருளீட்டி அதையும் நுகராமல் பதுக்கிவைக்கும் பேதையர் நட்பு உறாமல் ஒழிந்து, பசித்தாலும் இடப்பக்கம் வீழ்ந்த இறைச்சியை உண்ணாமல் ஊக்கியெழுந்து தனக்குரிய உணவைத் தகுதிபெற நோக்கியுண்ணும் புலி போன்று கலங்காது முயலும் ஆண்மையுடையார் கேண்மையடையும் நாளே எனக்கு நன்னாளாம் என்று இவன் இதில் மொழிந்துள்ளமை காண்க. எய்திய இடுக்கண்களுக்குத் தளராமல் நின்று தான் எடுத்த வினையை இவன் முடித்த ஆண்மையும், முயற்சியாளர்பால் முற்றிய கேண்மையும், இன்னாதன தோன்றின் அவற்றை இனியன

வாகவே எண்ணி நின்ற பான்மையும் பிறவும் இதனால் இனிது புலனாம்.

### கதை 2.

அரிச்சந்திரன் அரசிழந்து அல்லல் பலவுமெய்திக் காசியை யடைந்து மனைவியையும் மகனையும் பிரிந்து பறையனுக்கு அடிமையாகிச் சுடலை காத்தும் தன் மனநிலை கலங்காமல் மகிழ்ந்திருந்தான். ஆண்டும் புகுந்து விசுவாமித்திரர் வேண்டும் துன்பங்களை விளைத்தார். யாதுவந்தாலும் எல்லாம் ஓர் நன்மைக்கே என்று இவன் எண்ணியமைந்தான். புதல்வனைப் பாம்பு தீண்டுமாறு பணித்து சந்திரமதியைக் கள்ளியென்றும், கொலைகாரியென்றும், காட்டிக் கட்டிப் பிடித்துக் கொண்டுவந்து இவன் கையில் வெட்டும்படி மூட்டிவிட்டு முனிவர் விலகிப் போனார். பொறுத்தற்கரிய அவ் இன்னலையும் பொறுத்துக்கொண்டு தன் மனைவியைக் கிழக்கு நோக்கியிரு என்று கூறி மன்னன் வாளையெடுத்தான். தன்னைக் குறித்து மன்னன் மனங்கலங்கிவிடலாகாதே என்று அக்கற்புத் தெய்வம் தன் கணவனுக்குச் சில உறுதிகளைக் கற்பித்துக் கை குவித்து நின்றாள். தான் செய்த இன்னல் பலவற்றையும் பொருட்படுத்தாமல் இனியனவாகவே கருதித் துணிவுகொண்டு நிற்கும் இவர் தம் தெளிவினை வியந்து முனிவரும் பகைமை நீங்கிப் பணிந்து போற்றினார். இன்னாமை இன்பம் எனக் கொளின் தன் ஒன்னார் விழையும் சிறப்பு ஒருவனுக்கு உண்டாகும் என்னும் உண்மையை உலகம் இவன்பால் அன்று உணர்ந்து நின்றது.

வழக்கின் என்றும் நீ வழிபடு தெய்வத்தை வணங்கிக்
கிழக்கு நோக்கி யீண்டிருவெனக் கிளிமொழிமடந்தை
பழக்கமான அக்கணவனைப் பாவி என் ஆவி
இழக்கற் கஞ்சி நீ அறம்வழுவேல் என இயம்பும்.

பொருந்து நீத்தத்திற் புற்புதவாழ்வைநீ மெய்யென்று
அருந்தவத்தையும் அறத்தையும் மெய்யையும் விடுத்து
வருந்தல் மன்னவ வழிவழி சிறக்கென வாழ்த்தி
இருந்தபின் சுடர்வாட்படை வலக்கையின் எடுத்தான்.

உலகுயிர்க் கெலாம் பசுபதி ஒருமுதலாயின்
அலகில் சீருடை யவன்மொழி மறையெனின் அதன்கண்
இலகறம் பலவற்றினும் வாய்மையீடில தேல்
விலகுறாமல் அவ்வாய்மையை விரதமாக்கொளின் யான்.
நெறியின் அன்னஎன் தனைவிடா நிறையிவட்குளதேல்
இறுதியின்மையைப் பெறுக; இல்லெனின் இவளிறுதி
பெறுகவென்று வாள்வீசினன் பேதைதன் கழுத்தில்
மறுமணத்திடும் மாலையாய் வீழ்ந்ததவ்வடிவாள்.

சந்திரமதியின் துணிவான சுந்தரமொழிகளும், இடுக்கண்களுக்கு அழியாமல் நின்று அரிச்சந்திரன் எடுத்த வினையை ஆற்றிய ஆண்மையும், அதனால் எய்திய மேன்மையும் இவற்றுள் மிளிர்தல் காண்க.

துன்பந்தோன்றினும் துணிவுடையார் அதனை இன்பமாகவே கருதிக்கொள்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

இடுக்கண்வந் துற்றகாலை எரிகின்ற விளக்குப் போல
நடுக்கமொன் றானுமின்றி நகுக; தான் நக்க போழ்தவ்
இடுக்கணை யரியும் எஃகாம்; இருந்தழு தியாவருய்ந்தார்;
வடுப்படுத் தென்னை ஆண்மை வருபவந் துறுங்க என்றே.

அடிகள் இவ்வதிகாரத்தின் முதலில் அருளியுள்ள பாவின்படியை இஃது அடியொற்றியிருத்தல் காண்க.

---

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

இடுக்கண் தோன்றுமாயின் உடனே நீ நகைத்து மகிழ்க; அதனைத்துடைத் தொழித்தற்கு இதுவே தனித்த உபாயமாம். வெள்ளம்போல இடும்பைகள் வரினும் அறிவுடையான் உள்ளி உணரின் அவை ஒழிந்துபோம். துன்பத்திற்கு ஒருவன் கலங்கவில்லையாயின் அவன்பால் வந்த துன்பங்கள் தாமே நொந்து மீளும். உளங்கலங்காது முயலும் ஊனுடையான்கண் உற்ற துன்பங்கள் குற்றமுற்றொழியும். துன்பங்கள் இடைவிடாது நெருங்கி வரினும் ஒருவன் நிலைகலங்காதிருப்பின் அவைதாமே நிலைகுலைந்தழியும். செல்வம் பெற்றகாலத்துப்பற்றி மகிழாதார் அஃது அற்றகாலத்தில் அல்லல் அடையார். தம் உடம்புகள்

இடும்பைக்கே இலக்கென்று மேலோர் எண்ணியிருப்பர்; கீழோர் அங்ஙனம் எண்ணாது கவல்வர். தன் உடற்கு இன்பத்தை விரும்பாமல் இடும்பையே இயல்பென்று தெளிந்திருப்பவன் என்றும் துன்பமுறான். இன்பமெய்தியபொழுது இனிதென மகிழாதவன் துன்பம் வந்தபொழுது துயருற்றழியான். தனக்கு வந்த துன்பத்தை இன்பமென்று கருதி ஒருவன் அமைந்து ஆற்றுவனாயின் பகைவரும் அவனைப் பணிந்துபோற்றுவார்.

கூஉ-வது இடுக்கணழியாமை முற்றிற்று.

முதலாவது அரசியல் முடிந்தது.

---

# இரண்டாவது
# அங்கவியல்.

அரசியல் முதலாவது ஆதலால் இஃது இரண்டாவதென நின்றது. படை குடி அமைச்சு முதலிய அரசுறுப்புக்களின் இயல்பைக் கூறுதலால் அங்கவியல் என இது பெயர்பெற்றது. அங்கம் = உறுப்பு. இதுமுதல் அவையஞ்சாமை ஈறாகவுள்ள பத்து அதிகாரங்களும் இவ் இயலுக்கு உரிமையாம். பால், இயல், அதிகாரம் என்பன இந்நூலில் பெரும் பிரிவுக்கும் சிறுபிரிவுக்கும் அதனுட்பிரிவுக்கும் உரிமையாக முறையே அமைந்துள்ளன.

---

## 64-ம் அதிகாரம் அமைச்சு.

அஃதாவது அமைச்சரது இயல்பு. அமைச்சர் என்றது மந்திரிகளை. கை கால் முதலிய உறுப்புக்களுள் உடலுக்குக் கண் எப்படியோ அப்படியே படை முதலியவற்றுள் அரசற்கு அமைச்சர் மிகச் சிறந்த உரிமையுடையவராதலால் அவ் அருமை தோன்ற இவ் இயலில் இதனை முதலில் வைத்தார். இறைமாட்சி முதல் இடுக்கணழியாமையீறாகச் சொல்லப்பட்ட அறங்களை யுணர்ந்து உலகம் காத்துவரும் அரசனுக்கு உடனிருந்து துணை

புரியும் அமைச்சன்பால் அமைந்திருக்கவேண்டிய குணங்களும் செயல்களும் இவையென இதில் உணர்த்தப்படுகின்றன.

---

631 காலமொடு கருவி கண்டேன் குலச்சிறையார்
கோலமுறச் செய்தார் குமரேசா—சாலும்
கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்ட தமைச்சு. (க)

இ—ள்

குமரேசா! குலச்சிறையார் கருவிகளையமைத்துக்கொண்டு காலம் அறிந்து தன் வினையை என் இனிமைபெறச் செய்து முடித்தார் எனின், கருவியும், காலமும், செய்கையும், செய்யும் அருவினையும், மாண்டது, அமைச்சு என்க. அமைச்சனுக்கு வேண்டிய மாட்சிகள் இவையென இஃதுணர்த்துகின்றது.

கருவி என்றது கருமநிகழ்ச்சிக்குவேண்டிய உபகரணங்களை; ஈண்டு இடம் நோக்கிப் பொருளும் படையும் கொள்க. காலம் என்றது வினை இனிது முடிதற்கு ஏற்ற பருவத்தை. செய்கை என்றது வினையைச் செய்துமுடிக்கும் விதத்தை.

கருதிய வினையை இனிது முடித்தற்குக் காலத்தினும் செய்கையினும் கருவி, மிக உரிமையுடையதாதலால் அவ்வருமை தோன்ற அதனை முதலில் வைத்தார். வடநூலார் இதனைச் சாதனம் என்பர். கருமசாதனம் கருவி என்ப; என்றது இயல். அருவினை = அரியகாரியம்; அஃதாவது சிறு முயற்சியால் பெரும் பயன் தருவது. மாண்டது அமைச்சு = மாட்சிமைப்பட்டவனே மந்திரியாவன். அமைச்சு என்பது பொருளால் உயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாதலால் மாண்டது என்னும் ஒருமை வினையோடு உற்று முடிந்தது. அடுத்து வருவனவற்றிற்கும் இங்ஙனமே கொள்க.

கால முதலியவற்றை நுனித்துணர்ந்து சீலமோடு வினைசெய்யும் சால்புடையவரையே தமக்குத் துணைவராகக் கோலுடை மன்னர் குறிக்கொள்ளவேண்டுமென்று இது குறித்ததென்க.

காலமும் இடனும் ஏற்றகருவியும் தெரியக் கற்ற
நூலுற நோக்கித் தெய்வநுனித்தறங் குனித்தமேலோர்
சீலமும் புகழ்க்குவேண்டும் செய்கையுந் தெரிந்துகொண்டு
பால்வரும் உறுதியாவும் தலைவற்குப் பயக்கும் நீரார்.

என்று அமைச்சர் இயல்பை விளக்கிக் கம்பர் அருளியுள்ளதும் ஈண்டு அறியத்தக்கது.

ஒருகாரியத்தைச் செய்யப் புகுங்கால் அதற்குவேண்டிய கருவிகளையும், அதற்கு ஏற்ற காலத்தையும், அதனைச் செய்து முடிக்குந் திறத்தையும், அங்ஙனம் செய்யப்படும் அவ் அரிய வினையையும், மாண்புறத் தெளிந்துகொண்டவனே மந்திரியாவன் என்பதாம்.

வருபொருள் பெருக்கல், உறுநிலம் பேணல், மறுநிலங்கோடல், முதலிய அரிய வினைகளை மேற்கொண்ட அமைச்சன் அவற்றிற்குரிமையாகப் பொருள்படை முதலிய சாதனங்களை முதலில் அமைத்துக்கொண்டு காலமறிந்து முறையோடு நின்று மாண்புற அவற்றை முடிக்கவேண்டும் என்பார் வினையாண்டது அமைச்சு என்றார்.

ஏர் எருது முதலிய சாதனங்களை அமைத்துக்கொண்டு பருவமறிந்து தன் உழவுத்தொழிலை முறைமையோடு செய்யும் அறிவுடையுழவன்போல் தன் அரசகாரியத்தை மாட்சிபெற அமைச்சன் ஆற்றவேண்டும் என்க. மதிமாட்சியும் வினைமாட்சியும் மந்திரிக்கு உறுதியாக நன்கு அமைந்திருக்கவேண்டும் என்பது கருத்து.

கனிபயன் பயப்பச் சிறுமுயற்சியினால் நலத்தகு வினையுமற்றனைய
வினையினைத் தொடங்குங் காலது தனக்குவேண்டிய பொருள்களும் படையும், இனிதுறுபொழுதும் உபாயமும் செயலும் இடைப்படும் ஊறுகள் நீக்கித், துனிவறமுடிவு போக்கிடுமாறுஞ் சூழ்தரவல்லவன் அமைச்சன்; என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

இம்மாட்சிகள் யாவும் அமையப் பெறுதவரை அமைச்சனாக அரசன் அமைத்துக் கொள்ளலாகாது என்பது குறிப்பு.

அரிய காரியங்களையும் பருவமறிந்து வழிவற முயன்று சிறந்த அமைச்சர் செய்துமுடிப்பர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை குலச்சிறையார்பால் உணரப்படும்.

## கதை

குலச்சிறையார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டி நாட்டிலே மணமேற்குடி என்னும் நகரிலே பிறந்தவர். கல்வியறிவு ஒழுக்கங்களிற் சிறந்தவர். ஆண்மைத் திறத்தில் இவர் மிக மேன்மைபெற்றவர். எத்தகைய அரியவினைகளையும் எளிதில் முடிக்கும் தெளிவினையுடையவர். அக்காலத்தில் உறையூரிலிருந்து அரசுபுரிந்த சோழமன்னன் இவரது மனமாட்சியையும் வினைமாட்சியையும் அறிந்து மகிழ்ந்து இவரைத் தன்பால் அழைத்துவைத்து அன்பு செய்துவந்தான். அவ்வளவன் தனது அருமைத்திருமகளாகிய மங்கையர்க்கரசியை நெடுமாறன் என்னும் பாண்டியனுக்கு மணம்புரிந்து தருங்கால் துணையாக இவரையும் உடன் விரும்பித்தந்தான். அப்போழுகியின் சீர்மையையும் இக்கூரறிவாளரது நேர்மையையும் கண்டு வழுதி மன்னன் பெருமகிழ்வு கொண்டான். பின்பு, தனக்கு அருமை மந்திரியாக அமைத்துக்கொண்டு அம்மன்னன் இவரை மிக ஆதரித்துவந்தான். இவர் அவனுக்கு இன்னுயிர்த் துணைவராயிருந்தார்.

மலர்மகள் மார்பன் பொன்னி மன்னவன் பயந்த தெய்வக்
குலமகளுடனே வந்த குலச்சிறை குணனுங் கேள்வித்
தலைமையும் மதியும் மிக்க தன்மையும் தூக்கி நோக்கி
நலமலி யமைச்சனுக்கி நானிலம் புரக்கு நாளில்

வல்வினை வலியால் மெய்யில் வலியசூன் அடைந்தான்போலக்
கொல்வினை இலராய் வஞ்சங் கொண்டுழன் றுடுத்த பாசம்
வெல்வினை யறியா நக்க வேடர்சொல் வலையிற் பட்டு
நல்வினை யுதவாத் தென்னன் நான்மறையொழுக்கம் நீத்தான்.

இங்ஙனம் மன்னன் நிலை திரிந்ததனால் சமணர் தலைவர் பலரும் நெருங்கித் தமது நினைவின்படி நடத்தினர். தெவ்வர் சிலர் தோன்றி எவ்வம் விளைத்தார். இங்ஙனம் அல்லல் பல புகுந்தும்

இவர் யாதும் தளராமல் குடிகளை ஆதரித்துக் கொண்டு ஆங்காலத்தை யெதிர்நோக்கி நின்று அரசனைச் சீர்திருத்தும்பொருட்டுத் திருஞானசம்பந்தரை மதுரைக்கு எழுந்தருளும்படியாக்கி அப்பெருந்தகையால் அரசனைத் திருந்தச் செய்து அமணரனைவரையும் அறவே தொலைத்து யாதொரு குறைவும் தோன்றாவண்ணம் அரசை நிலைபெறச் செய்தார். படைகளை யமைத்துக்கொண்டு பகைவரைத் தொலைத்தும், காலமறிந்து நின்று காவலனைத் திருத்தியும், கருதிய வினையைக் கருதியாங்கு முடித்து அரசைக் காத்தும் இவர் ஆட்சிசெய்த மாட்சியை அனைவரும் போற்றினர். கருவியும் காலமும் செய்கையும் செய்யும் அருவினையும் மாண்டது அமைச்சு என்னும் உண்மைக்கு இவர் உரிமையாய் அமைந்து நின்றார். இம் மதிமந்திரியின் மன நலத்தை வியந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளும் பெருநம்பி குலச்சிறை தன் அடியார்க்கும் அடியேன் என்று புகழ்ந்து மகிழ்ந்துள்ளார். விரிவைப் பெரியபுராணத்தில் காண்க.

காலமறிந்து வினைகளைச் சீர்பெறச் செய்பவனே அமைச்சனாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

632 தேர்ந்துகுடி காக்குந் திறலால் சுமந்திரன்சீர்
கூர்ந்துநின்றான் என்னே குமரேசா—சார்ந்துநின்ற
வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு. (2)

இ—ள்.

குமரேசா! கலையில் தெளிவிலும் காக்குந்திறலிலும் வாள்வினை வலியிலும் ஆள்வினை அமைவிலும் சுமந்திரன் ஏன் எவரினும் மிகச்சிறந்து நின்றான் எனின், வன்கண், குடிகாத்தல் கற்றறிதல், ஆள்வினையோடு அவ் ஐந்துடன் மாண்டது, அமைச்சு என்க. அவ் என்னும் சுட்டு இதில் வருவிக்கப்பட்டது.

மந்திரிக்குரிய மாட்சிகள் இவையென மேற்குறித்தவற்றோடு இது சேர்த்துணர்த்துகின்றது.

வன்கண் என்றது மனத்திண்மையை; அஃதாவது வினை நிகழ்ச்சியில் தளராமை. குடிகாத்தல் முதலிய அரிய தொழில்களை வழுவறச் செய்தற்குரிய அமைச்சர்க்கு இத்திண்மை உண்மையாக முதலில் இருக்கவேண்டும் ஆதலால் முன்னுற நின்றது. இறைபுரியுங்கால் கண்ணோடலாகாதென்பதை இஃது எண்ணி வந்தது. ஒருகுடியைக் காக்கும் பொருட்டு ஒரு மனிதனையும், ஓர் ஊரைக் காக்கும்பொருட்டு ஒரு குடியையும், ஒரு நாட்டைக் காக்கும்பொருட்டு ஓர் ஊரையும், ஒழிக்கலாம் என்பது அரச தருமம் ஆதலால் அத்தகைய காக்குந்தொழிலை மேற்கொண்டு ஊக்கி நிற்கும் அமைச்சன் வன்கண்மை இலனாயின் அது நன்கு முடியாது ஆதலின் அவனுக்கு இஃது இன்றியமையாதென்க.

ஆள்வினை என்றது முயற்சியை; ஆளும் வினை என விரித்து அதன் கருத்தைக்காண்க. ஓடு என்னும் இடைச்சொல் இதில் ஓடு என நீண்டு நின்றது. வன்கண் முதலிய எண்பொருள் தோறும் தனித்தனிகொண்டு இதனை இணைத்து நோக்குக. என்றும் எனவும் ஒடுவும் தோன்றி, ஒன்று வழியுடைய எண்ணினுட்பிரிந்தே: என்ற இயல் விதியையும் ஈண்டு எண்ணிக்கொள்க.

மனத்திண்மையும், குடிகாத்தலும், கல்வியறிவும், முயற்சியும், ஆகிய இந்நான்கும் மேற்குறித்த ஐந்துடனே அமையப் பெற்றவனே அமைச்சனாவான் என்பதாம்.

வன்கண், குடிகாத்தல், கற்றறிதல், ஆள்வினை என நான்கு தானே உள்ளன; ஐந்து என்றது என்னையெனின் இதிலுள்ள ஐந்து என்னும் எண்ணுப்பெயர் மேற்கவியில் குறித்த கருவி, காலம், செய்கை, அருவினை, மாட்சி, என்னும் ஐவகையையும் குறித்ததாகக்கொள்க. இங்ஙனம் கொள்ளாமல் இத்தொகைக்கு இதிலேயே வகை காணத்துணிந்து, கற்றறிதல் என்பதைக் கற்றலும், அறிதலும் என்று பிரித்தேனும், ஆளும் வினையும் என வேறு பிரித்து ஆள் என்பதற்கு உருவநலம் என்று கொண்டேனும், தொகைக்கு இயையப் பொருத்தினும் பொருந்தும்; ஆயினும் அதனோடு தொடர்ந்துள்ள உடன் என்பதற்குப் பொருள் பொருந்தவில்லை; என்னை? உடன்

என்பது மூன்றாவதன் சொல்லுருபாய் நின்று உடனிகழ்ச்சிப் பொருளில் வரும்; ஈண்டு அஃது இயையாமை காண்க. என்னையா! இது, இக்கவி அடுத்திராமல் வேறொருபக்கம் தொடுத்திருந்தால் என்னும்? எனவும், ஒரு பாட்டிலுள்ள தொகைச்சுட்டு மற்றொன்றிலுள்ளவற்றை எட்டிச்சுட்டுமா? எனவும், முட்டிப் பார்க்கும்படி இது கட்டப்பட்டுள்ளமையைக் கருதிக் காண்க.

கருவிகளையமைத்துக், காலம் ஓர்ந்து, செயல்வகை தேர்ந்து, அருவினை ஆய்ந்து, அனைத்தினும் சிறந்து; திண்மை, குடிகாக்கும் தன்மை, கற்றுயர்ந்த ஒட்பம், கருமம் ஆற்றும் திட்பம், என்னும் இவையாவும் ஒருங்கு வாய்ந்த பெருந்தகையாளரே மந்திரியாதற்குத் தகுந்தவராவர் என்பது கருத்து.

அறிவு துணிவு ஆண்மை முதலிய மேன்மைகள் யாவும் சிறந்த அமைச்சன்பால் இயல்பாகவே அமைந்திருக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுமந்திரன்பால் உணரப்படும்.

## கதை.

சுமந்திரன் என்பவன் திருவயோத்தியிலிருந்து அரசுபுரிந்த தசரதமன்னனுடைய தலைமையமைச்சன். திண்மையும் தண்மையும் உண்மையுமுடையவன். நுண்மதியாளன். நூலறிவோடு சீலமும் வாய்ந்தவன். அமைச்சருக்குரிய மாட்சிகள் யாவும் ஒருங்கே அமையப் பெற்றவன். தேர் ஊர்தலிலும் இவன் மிகச்சிறந்தவன். சம்பரனோடு அமர்குறித்துத் தசரதன் உம்பர் சென்றிருந்த பொழுது அரசைப் பண்போடு இவன் பாதுகாத்து வந்தவன். சுதுணன் அருணன் துருவன் அசகன் சுமதி முதலிய அமைச்சர் பலரும் இவன் அருள்வழி யொழுகி நடைமுறையைப் பின்பற்றி இவனுடனமர்ந்திருந்தார்.

குலமுதல் தொன்மையும் கலையின் குப்பையும்
பலமுதற் கேள்வியும் பயனும் எய்தினர்
நலமுதல் நலியினும் நடுவு நோக்குவார்
சலமுதல் அறுத்தருந் தருமந் தாங்கினர்

உற்றது கொண்டு மேல்வந் துறுபொருள் உணரும் கோளார்
மற்றது வினையின்வந்த தாயினும் மாற்றலாற்றும்
பெற்றியர்; பிறப்பின் மேன்மைப் பெரியவர்; அரியநூலுங்
கற்றவர்; மானம் நோக்கில் கவரிமா வனைய நீரார்.

எனக் கம்பரால் போற்றப்பட்ட அத்தகவுடையாரனைவரும் இப் பெருந்தகையாளனைத் தமக்கு நாயகனாகக் கொண்டு நயந்து போற்றினர். உடுத்திரள்களுள் உவாமதிபோல் அவருள் இவன் உயர்ந்து விளங்கினன். இராமன் வனம்புகுந்த துயரால் மன்னன் மனங்கலங்கி மாண்டபின் உயிரில்லாத உடல்போல் அயோத்தி நிலைகுலைந்திருந்தது. பரதனும் அதனைப்பாராமல் முன்னவனையே முன்னியுளைந்து தனியே முடங்கியிருந்தான். அக்காலத்தில் இவன் நிலை கலங்காமல் நின்று நேர்ந்த அல்லல்களை யெல்லாம் நீக்கிக்கொண்டு அரசை நிலைபெறச் செய்து நீதி வழுவாமல் நிகழ்த்திவந்தான். பதினன்கு ஆண்டுகள் கழித்து இராமர் வந்து நோக்கி இவன் மாட்சியையும், ஆட்சியையும் மதித்து மகிழ்ந்தார். வேந்தன் இல்லாதிருந்தும் தளராமல் நின்று குடிகளைக் காத்து அரசைத் தாங்கி வந்த இவனது ஆள்வினை ஆண்மைகளை வியந்து அனைவரும் புகழ்ந்தார். வன்கண், குடிகாத்தல், கற்றறிதல், ஆள்வினையோடு ஐந்துடன் மாண்டது அமைச்சு என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

அறிவும் ஆண்மையுமுடையவனே அமைச்சனவான் என்பது இதனல் கூறப்பட்டது.

---

633 திண்டோள் மதிவாணன் தேர்ந்து பிரித்தான்பின்
கொண்டான் சேர்த் தென்னே குமரேசா—கண்டு
பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு. (௩)

இ—ள்.

குமரேசா! மதிவாணன் பகைவரைப் பிரித்தும் சேர்த்தும் எல்லாரையும் ஏன் அருளோடு பேணிவந்தான் எனின், பிரித்தலும், பேணிக்கொளலும், பிரிந்தார்ப் பொருத்தலும், வல்லது அமைச்சு என்க.

வல்லது அமைச்சு என்றதனால் அஃதில்லது அமைச்சாகாது என்பதாயிற்று. மேற்கூறியாங்கே மாண்டது என்னாது ஈண்டு வல்லது என்றார் பிரித்தல் முதலியவற்றைத் திருத்தமுற ஆற்றுதலின் ஆற்றலும் அதன் அருமையும் கருதி. பிரித்தல், பேணிக்கொளல், பொருத்தல், என்னும் இவ்வினைகட்கு ஏற்ற செயப்படு பொருளை இதில் வருவித்துக்கொள்க.

பிரிந்தார்ப் பொருத்தலும் = பிரிந்தாரைச் சேர்த்துக்கொள்ளுதலும், வல்லது அமைச்சு = வல்லவனே மந்திரியாவன். மேற்குறித்த ஒன்பதோடு இம்முத்தொழிலிலும் அவன் முதன்மை பெற்றிருக்கவேண்டும் என்றவாறு.

பேணிக்கொளல் என்றது கொடை இன்சொல் முதலியவற்றால் தன் குடிபடைகளை அமைச்சன் ஆதரித்துக்கொள்ளவேண்டும் என்றபடி.

மேல், அறிவு ஆண்மை முதலிய மாட்சிகளையுடையவனே அமைச்சனாதற்கு உரியவன் என்றார்; இதில், பகைவரைப் போர்க்கவும் சேர்க்கவும் அவன் வல்லனாதல்வேண்டும் என்கின்றார்.

பகைவர்க்குத் துணையாயுள்ளாரைப் பிரித்துவிடுதலும், தம்பாலுள்ளாரைப் பிரியாமல் பாதுகாத்துக்கொள்ளுதலும், தம்மினும் பிறரினும் நின்று முன்னே பிரிந்து வந்தவரைப் பின் சேர்த்துக்கொள்ளுதலும் வல்லவனே அமைச்சன் ஆவான் என்பதாம்.

செறிந்துநின்ற பகைவரைப் பிரிந்துபடுமாறு செய்பவில்லையாயின் அவர் வலி மிகவுடையராய்த் தமக்கு நலிவுசெய்வாராதலால் பிரித்தலும்; அங்ஙனம் பிரிக்கப்பட்டவரையும், தம்மிடத்தில் நின்று ஏதேனும் ஓர் ஏதுவால் முன் பிரிந்துபோனவரையும், இதம்பெறத் தம்மொடு பொருத்திக்கொள்ளவில்லையாயின் பொருந்தாரோடு மீண்டும் பொருந்திநின்று பெருந்துயர் விளைப்பராதலால் அது விளையாவண்ணம் பொருத்தலும், அமைச்சர்க்கு உரித்தாயிற்றென்க. மித்திரபேத முதலிய தந்திரங்கள் யாவும் மந்திரிக்கு வேண்டுமென்றவாறு. பொருத்தல் பிரித்தல்களை வடநூலார் முறையே சந்தி விக்கிரகம் என்பர்.

சொல் இரண்டு புகலேன்; இனிச்சமரில் நின்று வெங்கணை தொடேன்; என்று, வில் இரண்டினும் உயர்ந்த வில்லதனை வேறிரண்டுபட வெட்டி எறிந்துவிட்டு வெறுத்துப் போமாறு விதுரனைப்பிரித்து விடுத்து, அசுவத்தாமனைக் கலைத்து, ஆனவரையில் கன்னனைப் பொருத்திக் கண்ணன் செய்ததுபோல் தன் அரசனுக்கு உறுதி பயக்கும் உபாயங்களைப் பருவமறிந்து விரகோடு அமைச்சன் விரைந்து செய்யவேண்டும் என்பது கருத்து.

மிகைவினை வரினும் அசைவுறுவன்கண் விழுக்குடி காத்த லாள் வினைநூல் வகையுறச் சூழ்ந்து விடுவென வீடுத்து வகுப்பன வகுத்திடல் வேண்டில் பகைவர்தம் துணையைப் பிரித்தல் தம்மிடத்துப் பயின்றவர் பகைவர்பாற் புகாமல், தகையுறச்செய்தல் பிரிந்தவர்தம்மைத் தம்மொடுபொருத்தலும் அமைச்சாம்; என்றதும் ஈண்டு அமையநோக்குக.

எவ்வித காரியங்கள் வந்தாலும் அஞ்சாமல்நின்று ஆள்வினை புரிந்து பிரித்தல் பொருத்தல் முதலிய பேருபாயங்களை ஏற்றபெற்றி எதிரறிந்துசெய்து சிறந்த அமைச்சர் என்றும் தம் அரசுக்கு இதமே செய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மதிவாணன்பால் உணரப்படும்.

## கதை

மதிவாணன் என்பவன் இற்றைக்கு ஆயிர ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே தஞ்சாக்கூர் என்னும் நகரில் இருந்தவன். திருவிலும் அறிவிலும் இவன் மிகச்சிறந்தவன். பெருங்கொடையாளன். வினைத்திட்பத்தோடு மனத்திட்பமும் வாய்ந்தவன். சேரன் சோழன் என்னும் இருபெருவேந்தரும் ஒருவரோடொருவர் மாறுபட்டுப் பெருங்கலகம் விளைக்கும்பொழுது இவன் புகுந்து செய்த ஓர் சதுர்ந்த வினையால் அவ் இருவரும் பகைமை நீங்கி இன்புற்றிருந்தார். வாரம்படாமல் நீதி கூறவேண்டுமாயின் வாணன் வரவேண்டுமென்று மன்னர் கூறுவர். இவனது உண்மை திண்மை ஒண்மைகளை வியந்து மக்களனைவரும் போற்றினர். அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த சந்திரகுலதீபன் என்னும் பாண்டிய மன்னன் இவன் மதிமாட்சிகளையறிந்து மகிழ்ந்து அழைத்துவந்து தனக்கு அமைச்சனாக்கிக்கொண்டான்.

ஆம் மன்னனுக்கு இன்னுயிர்த் துணையாயிருந்து நன்னயம்பெற அரசை இவன் நடாத்திவந்தான். வருங்கால் காஞ்சிநகரத்தி லிருந்து அரசுசெய்த சயசிங்கன் என்னும் பல்லவன் தன் படைச் செருக்கால் இம்மன்னன்பால் பகைமைகொண்டிருந்ததை இவன் அறிந்து சூழ்ந்து அவருட் பலர் பிரிந்துபடுமாறு பேதஞ்செய்து அவனை நீதிகுன்றாமல் வென்று தன்பால் வந்தவரைப் பாதுகாத்து நின்றான். எங்கும் பகைமையை நீக்கிக் குடிகளை இவன் தகைமை யோடு பேணினான். இவனது அமைச்சியல்பை வியந்து மறுபுல மன்னரும் பெருமகிழ்வு கொண்டார். பிரித்தலும், பேணிக் கொளலும், பிரிந்தாரைப் பொருத்தலும் வல்லது அமைச்சு என் னும் உண்மைக்கு இவன் உரிமையாய் நின்றான். இவனது மேன்மையையும் பான்மையையும் மகிழ்ந்து புகழ்ந்து பொய்யா மொழிப் புலவர் இவன்மேல் நானூறு பாடல்கள் பாடியுள்ளார். தஞ்சைவாணன்கோவை என அந்நூல் இவன் பெயரால் இன்றும் நின்று நிலவுகின்றது. வழுதி மன்னனுக்கு விழிபோல் நின்று இவன் உறுதிசெய்துள்ள அருமைபெருமைகளைப் புலவர் உரிமை யோடு உள்ளம் உருகி மொழிந்துள்ளார்.

சுற்றுநின் றெரியுஞ் செம்பொன் மணிமுடி சுடரச்சூட்டி
வெற்றிவெண் குடைநீழல் வேந்தன்வீற் றிருக்குமேனும்
மற்றவன் மனமுங்கண்ணும் வாழ்க்கையும் வலியும் சால்பும்
அற்றமில் அரசுங்கோலும் ஆபவர் அமைச்சரன்றே. (சூளாமணி).

தன் அரசுக்கு இதந்தருஞ் செயல்களை அமைச்சன் இனிது செய்யவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

634 நன்று தெரிந்து நளன்பால் குணசீலன்
குன்றாதேன் சொன்னான் குமரேசா—நின்று
தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு. (ச)

இ—ள்

குமரேசா! குணசீலன் எதையும் நுணுகித் தெளிந்து மன்னன்பால் ஏன் இனிது சொன்னான் எனின், தெரிதலும்

தேர்ந்து செயலும் ஒருதலையாச் சொல்லலும் வல்லது அமைச்சு என்க.

அமைச்சன் பிறர்பால் ஆற்றவேண்டியவற்றை மேலருளினார்; தன்பால் அவன் போற்றவேண்டியவற்றை இதில் சாற்றுகின்றார்.

ஒருதலையா = ஒரே முடிவாக: உறுதியாக என்றவாறு.

தெரிதல், செய்தல், சொல்லல் என்னும் இம்மூன்றும் மனம் மெய் மொழிகளை முறையே நோக்கி வந்தன என்க.

தெரிதலும் = தான் செய்யக் கருதிய காரியத்தின் இயல்புகளை நன்றாக ஆராய்தலும். தெரிந்து, தேர்ந்தவன், செயலும் சொல்லுமே சீர்பெறத் திருந்தி நிற்கும் ஆதலால் அவ்வுரிமை தோன்ற அவை முன் பொருந்தி நின்றன.

மேல், பிரித்தல் முதலிய மூன்றும் அமைச்சனுக்கு வேண்டும் என்றார்; இதில், தெரிதல் முதலிய இம்மூன்றும் அவன் சிறந்திருக்கவேண்டும் என்கின்றார்.

ஒரு வினையின் இயல்பை வழுவற அறிதலும், அதனை இனிது றத் தெளிந்து முடிவுறச் செய்தலும், எதையும் ஓர்ந்து துணிந்து சொல்லுதலும் ஆகிய இவை வல்லவனே அமைச்சன் ஆவான் என்பதாம்.

மந்திரிக்கு அழகு வரும் பொருளுரைத்தல் என்றபடி எந்தக் காரியத்தையும் எதிரறிந்து நோக்கி நுணுகித் தெளிந்து தன் அரசனுக்குத் துணிவு தோன்றுமாறு அமைச்சன் துணிந்து சொல்ல வேண்டுமென்பது கருத்து.

செறிந்தவர் தெளிந்தநூலார் சிறந்தவை தெரிந்து சொன்னால்
அறிந்தவை யமைந்து செய்யும் அமைதியான் அரசனாவான்;
செறிந்தவர் தெளிந்தநூலார் சிறந்தவை தெரிந்து கூறி
அறிந்தவை இயற்றுகிற்கும் அமைதியார் அமைச்சராவார்.
என்ற சூளாமணியையும் ஈண்டுச் சூழ்ந்து நோக்குக.

தன் காரியங்களைத் திருந்தச் செய்து தன் அரசனுக்கு உறுதியாயதைத் துணிந்து சொல்லுவோனே சிறந்த அமைச்சன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குணசீலன் பால் உணரப்படும்.

## கதை.

குணசீலன் என்பவன் நிடதநாட்டிலே மாவிந்தம் என்னும் நகரிலிருந்தவன். அந்நாட்டு மன்னனாகிய நளனுக்கு இவன் அமைச்சன். கருவிநூல்களையும் அறிவு நூல்களையும் இவன் கசடறக் கற்றவன். நல்ல சீலமுள்ளவன். சொல்வன்மையில் அக்காலத்தில் எவரும் தனக்கு நிகரில்லாதவன். அறிஞர் பலர் கூடியும் அரிதில் உணரமுடியாத ஒரு பொருளை இவன் எளிதில் உணரும் இயல்பினையுடையவன். ஒருவன் அகக்குறிப்பை அவன் முகத்தால் நோக்கி இன்ன நிலையுடையான்; இது கருதி வருகின்றான் என முன் எண்ணி மொழியும் ஒண்மையாளன். கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும், உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின், நன்னயப்பொருள்கோள் எண்ணருங் குரைத்தே; என்னும் உண்மை மொழிக்கு இவனோர் உவமையாய் நின்றான். இவன் மரபினரனைவரும் நிடதவேந்தர்க்கு வழிவழியாகவே அமைச்சியல் புரிந்தார். அம்முறைமையின்படி நளமன்னனுக்கு இவனும் அமைச்சனாகி ஆட்சியை நடாத்தினான். எத்தகைய நுண்ணிய கருமங்களையும் எண்ணித் துணிந்து யாதும் வழுவின்றி இவன் இயற்றிவந்தான். வருங்கால் புட்கரன் என்பவன் தன் அரசை வஞ்சிக்கக் கருதி அடுத்தடுத்து வந்தான். இவன் எதிரறிந்து நோக்கி அவன் வஞ்சக் குறிப்பை அரசன் நெஞ்சறிய உணர்த்தினான். உணர்த்தியும் ஊழ்வலியால் உணராதொழிந்து ஒருநாள் அவனோடு நளன் கவறாடத் துணிந்தான்.

ஐயநீ ஆடுதற் கமைந்த சூதுமற்
றெய்துநல் குரவினுக்கு இயைந்த தூதுவெம்
பொய்யினுக்கு அருந்துணை புன்மைக்கு ஈன்றதாய்
மெய்யினுக்கு உறுபகை என்பர் மேலையோர்.

சீலநற் றருமமெய் சிதைக்குந்; தெண்டிரை
வேலைமுற் றிருநிலக் கிழமை வீழ்த்திடும்;
மாலுறுத் திடுங்கவ றாடல், மன்ன! கேள்
கோலிழுக் கரசர்தங் கொள்கைத் தென்பவே. என ஒரு

தலையா நின்று இவன் உரைத்துத் தடுத்தான். அதுபொழுது உணராதொழியினும் நளன் அல்லலுற்றபொழுது இவன் உள்ளத் தெளிவையும் சொல்லின் விளைவையும் உள்ளி யுளைந்தான். பின் வந்து இவனை உவந்து புகழ்ந்தான். தன்னுடனிருந்த மந்திரியர் பலரினும் மொழி நலத்தினும் செயல் நலத்தினும் இவன் முந்துற நின்றான். தெரிதலும், தேர்ந்து செயலும், ஒருதலையாச் சொல்லலும் வல்லது அமைச்சு; என்னும் உண்மை மொழிக்கு இவனோர் உறையுளாய் நின்றான்.

ஐயமறத் தெளிந்து ஆவதை முன்னறிந்து சொல்வோனே அமைச்சனாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

635 பண்டறிந்த யூகியினைப் பட்டியையேன் நற்றுணையாக்
கொண்டிருந்தார் மன்னர் குமரேசா—கொண்ட
அறனறிந் தான்றமைந்த சொல்லான் எஞ்ஞான்றும்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை. (ரு)

இ—ள்.

குமரேசா! எதையும் நுணுகி யறிந்து வழுவறச் சொல்லவல்ல யூகியையும், பட்டியையும் ஏன் தமக்கு உரிமைத்துணையாக அரசர் தழுவிக் கொண்டார் எனின், அறன் அறிந்து ஆன்று அமைந்த சொல்லான், எஞ்ஞான்றும் திறன் அறிந்தான் தேர்ச்சித் துணை என்க.

அறிந்தான், சொல்லான் துணை என்றதனால் அவையில்லானைத் துணையாகக் கொள்ளலாகாதென்பதாயிற்று.

அறன் அறிந்து = அரசனுக்குரிய அறங்களை அறிந்து; என்றது குடிகளைக் காத்தல், கொடியரைத் தேய்த்தல், படிமுறை பேணல் முதலிய மனுநெறிகளை யுணர்ந்து என்றவாறு. ஆன்று = அறிவால் நிறைந்து; ஆன்றல் = நிறைதல், மிகுதல். அமைந்த = குணங்களமைந்த; இந்நிறைவும் அமைவும் இல்வழிச் சொல், நயம்பயவாது ஆதலால் அவற்றை அது நயந்து நின்றது. திறன் அறிந்து = வினைசெய்யும் திறங்களையறிந்து; அஃதாவது இயற்றல், ஈட்டல், காத்தல், வகுத்தல் முதலிய வேந்தின் தொழில்

களைச்சார்ந்தாற்றும் விதங்களை ஓர்ந்து எண்க. தேர்ச்சித்துணை என்றது மந்திரியை; காரியத்தை ஆராய்ந்து தெளிதற்குத் துணையாய் அமைந்திருப்பவன் என்றபடி.

மேல், பிரித்தல் பொருத்தல் தெரிதல் தேர்தல் என்னும் இவற்றில் அமைச்சன் சிறந்தவனாதல்வேண்டும் என்றார்; இதில் தன் அரசனுக்கு வேண்டிய எல்லா நலங்களையும் ஆராய்ந்து என்றும் மாறுபாடிலனாய் அன்போடு அவன் இருக்கவேண்டும் என்கின்றார்.

அரச தருமங்களை நுணுகியறிந்து, அறிவால் நிறைந்து, அமைதியான சொல்லையுடையனாய் எக்காலத்தும் வினைசெய்யும் திறங்களை இனிதுணர்ந்தவனே அமைச்சனாவான் என்பதாம்.

செல்வக்காலத்தும் அல்லற்காலத்தும் என்றும் நிலைதிரியாமல் நின்று உறுதியை நலமுறச் சொல்பவனையே அமைச்சனாக அரசன் அமைத்துக் கொள்ளவேண்டும் என்பது கருத்து.

அறிவதும் செயலும் மொழிவதும் அரசர்க் காக்கமேகுறித்தனவாகும்
திறனும் நன்றறியா அரசருக்குறுதி செப்பலும்; செய்வன வேனும்
உறமுலகியற்கைக் கொத்திடிற் செயலும்; ஒருவினைக் கியைந்த பல்
செயலுள், இறுவுவ தொன்றால் வாய்ப்ப எஞ்ஞான்றும் நிகழ்த்தலும் அமை
ச்சருக்கியல்பாம். என்றதும் ஈண்டு நினைவுறத்தக்கது.

அறிவும் சொல்வன்மையும் அன்பும் ஆண்மையும் என்னும் குன்றாமலுடையவரையே தமக்குச் சூழ்ச்சித் துணைவராக அரசர் சூழ்ந்துகொள்ளவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை யூகியிடமும், பட்டிபாலும் உணரப்படும்.

## கதை.

யூகி என்பவன் வத்தவ தேயத்திலே கௌசாம்பி நகரினருகிலிருந்த விபுலகிரியிலே இருந்தவன். அந்தணர் மரபினன். பிரமசுந்தரன் என்னும் முனிவருடைய புதல்வன். தாய் பெயர் பிரமசுந்தரி. இவன் கலைகள் பலவும் கசடறக் கற்றவன். அறிவு ஆண்மை அமைதி முதலிய உயர் குணங்கள் யாவும் ஒருங்கே நிறைந்தவன். வில்வன்மையோடு சொல்வன்மையிலும் இவன் மிகச்சிறந்தவன். கருதிய எதையும் கருதியாங்கு முடிக்கும் உறுதி

புடையவன். இவனது மதிநலத்தை வியந்து அந்நாட்டு மன்னனாகிய உதயணன் என்பவன் தனக்குத் தேர்ச்சித்துணையாக இவனைச் சேர்த்துக்கொண்டான். அம்மன்னனுக்கு இன்னுயிர்த் துணைவனாய் இளமைமுதற்கொண்டே இவன் உடனமர்ந்திருந்தானாதலால் பேரன்புடையனாய் ஆவலையறிந்து அவனுக்கு அருள் புரிந்துவந்தான். தன்னுடனிருந்த உருமண்ணுவா, இடவகன், வயந்தகன் முதலிய மந்திரிகள் மூவரினும் இவன் முதன்மை வாய்ந்தவன். தன் அரசனை அவந்திநாட்டு வேந்தனாகிய பிரச்சோதனன் வஞ்சித்து உச்சயினி நகரத்தில் சிறைப்படுத்தியிருந்ததை அறிந்து ஆண்டு அஞ்சாது புகுந்து அருஞ் சூழ்ச்சி செய்து அவனை மீட்டிக் கொணர்ந்தான். அச்சிறை மீட்சியில் மதிநுட்பத்தோடு இவன் செய்த அற்புதச் சூழ்ச்சிகள் அளவிடலரியன.

கொடிக் கோசம்பிக் கோமகனாகிய
வடித்தேர்த் தானை வத்தவன் தன்னை
வஞ்சஞ் செய்துழி வான்றளை விடீஇய
உஞ்சையிற் றோன்றிய யூகி யந்தணன். என்று மணி

மேகலையில் மேற்குறித்த இவனது குணநலங்களை வியந்து கூல வாணிகன் சாத்தனார் கூறியுள்ளார். அரச தருமங்களை நுணுகியறிந்து எல்லாமாட்சிகளும் தன் ஆட்சியில் எய்துமாறு எண்ணி ஆற்றி, அல்லல் உற்ற பொழுதும் தன் அரசன்பால் இவன் அன்பு குன்றாமல் ஆண்மையோடு நின்று இன்பு செய்துவந்தான்.

கெட்டகாலை விட்டனர் என்னாது
நட்டோர் என்பது நாட்டினை நன்றெனை; எனவும்

கருத்திற் சூழ்ச்சியொடு கானத்தகவயிற்
பெருத்திறல் வேந்தனெம் பெருமாற்சிறைகொள
மாயச்சாக்காடு மனங்கொளத் தேற்றி
ஆயமூதூர் அகம்புக்கு அவன்மகள்
நாகுவளை முன்கை நங்கையை யத்தழீஇப்
போகெனப் புணர்த்த போகாப் பெருந்திறல்
யூகி மன்னுக வுலகினுள்; எனவும்
ஆன்முலைப்பிறந்த வால்நிற அமிர்தம்

மலைப்பெய் நெய்யொடு தலைப்பெய் தாங்கு
வேறுபட் டேகினும் கூறுபட்டியலா
அன்பினின் அளைஇய நண்பினின் அமைதியும்
அசைவில் தானை விசைய வெண்குடைப்
பெருநில மன்னர் கருமங் காழ்த்த
வருமதி நுனித்த அமைச்சி னாற்றலும்

இன்னவை பிறவும் தன்வயின் தாங்கி; எனவும் தன் உடனிருந்த இடவகனாலும் பிறராலும் இவன் புகழ்ந்துபோற்றப் பட்டுள்ளான். அரியவினைகளை ஆய்ந்துசொல்லி இன்னுயிரினும் தன் அரசனை இனிதுபேணி, ஆட்சியைப்போற்றிவந்த இவனது மாட்சியை வியந்து மறுபுலமன்னரும் மகிழ்ந்து புகழ்ந்தார். அறன் அறிந்து, ஆன்றமைந்த சொல்லான், திறனறிந்தான் தேர்ச்சித்துணை; என்னும் உண்மையை உலகம் இவன்பால் தேர்ந்து நின்றது. மதிநூகி எனவும் யூகந்தாயன் எனவும் இவன் வழங்கப்படுவான். தன்பெயருக்கேற்பவே மதிநலத்தில் எவருந் தனக்கு நிகரில்லாதவனாய் இவன் நிலவியிருந்தான். விரிவைக் கொங்குவேள் மாக்கதையில் காண்க.

## கதை 2.

பட்டி என்பவன் அவந்தி நாட்டிலே உச்சையினி நகரில் இருந்தவன். சந்திரசன்மாவினுடைய புதல்வன். தாய் பெயர் சௌந்தரவல்லி. பர்த்துருகரி, விக்கிரமார்க்கன் என்னும் இவ்இருவருக்கும் இவன் தம்பியாவன். வாருசிக்கு மூத்தவன். மதிநலத்தில் இவன் மிகச்சிறந்தவன். சூழ்ச்சித்துறையில் எவரும் தனக்கு நிகரில்லாதவன். அரசதருமங்களை நுணுகியறிந்தவன். விக்கிரமார்க்கன் மன்னனாயபோது அவனுக்கு இவன் மந்திரியாயிருந்து ஆட்சியை மாட்சிபெற நடாத்திவந்தான். இவன் சொல்வழி ஒழுகியதால் அல்லல்யாதுமின்றி அம்மன்னன் இசைதிசை பரப்பி இனிது வீற்றிருந்தான். இந்நுண்மதியாளனைச் சூழ்ச்சியால் வெல்லக்கருதி விரைந்து வந்தவரனைவரும் வெண்மதியாளராய் வெள்கி அகன்றார். இவனது சொல்வன்மைகொண்டே தன் வில்வன்மையை அம்மன்னன் எங்கும் விளங்க நிறுத்தி

னான். எதிர்வதை இனிதறிந்து இதஞ்செய்துவந்த இம்மதி யுடையானையே தனக்கு உயிர்த்துணையாக அவன் உவந்து கொண்டிருந்தான். அறனறிவும், ஆன்று அமைந்த சொல்லும், திறனறிவுமுடையானே தேர்ச்சித் துணை என்பதை உலகம் இவன்பால் தெரிந்து நின்றது.

அரசதருமங்களை நுணுகியறிந்து இனிது சொல்லவல்லவனே அமைச்சனாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

636 பொன்று மதிக்கபிலர் பொன்னோன்முன் மற்றவர்சீர்
குன்றிநின்ற தென்னே குமரேசா—நன்று
மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை. (௬)

இ—ள்.

குமரேசா! கபிலர் வியாழன் என்னும் இவர்பால் பகைவர் செய்த சூழ்ச்சிகள் யாவும் ஏன்பயனற்று அழிந்தன எனின், மதிநுட்பம், நூலோடு உடையார்க்கு, அதிநுட்பம் முன் நிற்பவை யா உள என்க.

யா உள என்றது யாதும் இல்லை என்பதை உணர்த்தி நின்றது. யாவை என்னும் பன்மைவினா விகுதிகுன்றி யா என வந்தது. யாவையோபல எனற்பாலது யா பலகொல்லோ எனப்புறத்தில் வந்தது காண்க. மதிநுட்பம்—நுட்பமாகிய மதி. என்றது நுண்ணறிவை. அறிவுக்கு நுண்மையாவது எத்தகைய அரிய பொருள்களையும் ஊடுருவிச்சென்று விரைவில் நுழைந்து காணும் வன்மை. இவ்வன்மையுடையதே பேரறிவு என்னும் தன்மையடையும். இது நூலறிவுக்கு முன்னதாய் ஊழ்முறையால் அமையும் தனி அறிவாதலால் அத்தகுதி தோன்ற முதலில் நின்றது. இதனை இயற்கையறிவு என்பர். நூலறிவு செயற்கை எனப்படும். திருவுடைமையைக் கருவிலேயே பெற்றிருக்கும் அரசர் போல் அறிவுடைமையை இயல்பிலேயே அமைச்சர் அடைந்திருக்கவேண்டும் என்றவாறு.

நூல் என்றது நூலாலெய்தும் அறிவை; இது கருவி ஆகு பெயர்.

அதிநுட்பம் — மிக்க நுட்பத்தையுடைய காரியம். அதி என்பது மிகுதிப்பொருள் தருவதோர் இடைச்சொல்.

சூழ்ச்சித்துணையாய் நின்று அரசர்க்கு இதஞ் செய்யும் அமைச்சர் அறிவும் சொல்வன்மையும் பெரிதும் உடையராதல் வேண்டுமென்று மேலருளினார்; அவர் மதிநுட்பமுடையராய் நின்று பிறர் செய்யும் சதிகளனைத்தையும்வென்று சதுரராகி உயர்ந்திருக்க வேண்டுமென்று இதில் உணர்த்துகின்றார்.

நுண்ணிய அறிவோடு நூலறிவுமுடையராய அமைச்சர்க்கு முடித்தற்கரியனவாய் முன்னிற்கவல்ல மிக்க நுட்பத்தையுடைய காரியங்கள் யாதும் இல்லை என்பதாம்.

எந்தக்காரியங்களையும் எளிதில்முடிக்க வல்லனாய், சூழ்ச்சியால் எவரும் தன்னை வெல்ல முடியாதென்னும்படி அமைச்சன் அறிவால் விளங்கியிருக்கவேண்டுமென்பது கருத்து.

ஐயறிவும் தம்மை யடைய ஒழுகுதல்
எய்துவ தெய்தாமை முற்காத்தல்—வைகலும்
மாறேற்கு முன்னர் நிலையறிதல் இம்மூன்றும்
வீறுசால் பேரமைச்சர் கோள். என்றதும் ஈண்டு கருதத்தக்கது.

அரிய காரியங்களையும் அறிவுடையமைச்சர் எளிதில் முடிப்பரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கபிலர் பாலும், வியாழன்பாலும் உணரப்படும்.

## கதை.

கபிலர் பாரிக்கு இன்னுயிர்த்துணைவராயமைந்து அங்கு இருக்குங்கால் சேரன், சோழன், பாண்டியன் என்னும் முடிமன்னர் மூவரும் அவனரசைக் கவர்ந்துகொள்ளக்கருதி விரைந்து சூழ்ந்து பறம்பைவந்து வளைந்துகொண்டார். பறம்பு என்பது பாரி வள்ளலது ஊரினருகிலுள்ளதோர் மலை. சிறந்த வளங்களையுடையது. அம்மன்னர் இவ்வள்ளலை வென்றுவிடவேண்டுமென்று பன்முறையும் முயன்று படுசூழ்ச்சிகள் செய்தும் இம்மதி

மந்திரியின் சூழ்ச்சியால் அவையாவும் பாழாயினமைகண்டு முடிவில் பெரும்படையோடு வந்து கடுங்கோபங்கொண்டு நின்றார். அவர் தம் நிலையையும் நிகழ்வையும் இவர் எதிர் அறிந்துநின்று தம் மலையாணுக்குள்ளேயே குளங்களையும் விளைநிலங்களையு முளவாக்கிப்புறத்தில் வந்து பகைவர் வளைந்தால், அகத்திலுள்ளவர் யாதும் வருத்தமின்றி வாழ்தற்குரிய வகைகளனைத்தையும் வகுத்திருந்தார்; வெளியே பறந்துசென்று விளைநிலங்களிலிருந்து முதிர்ந்த கதிர்களைக்கொணர்ந்து தருமாறு பல கிளிகளையும் புறக்களையும் நன்குபழக்கி வைத்திருந்தார். ஆதலால் நெடுங்காலமாக அவர் வளைந்து நின்றும் இவர் தளர்ந்துவிடாமல் விளைபொருள்களை விளைவித்தும், பறவைகளை விடுத்துக் கதிர்களைக்கொணர்வித்தும் தம் குடிகளைப் பேணினார். நெடுநாளானபின் ஒரு நாள் இவர் வெளியே வந்து அம்மூவரையும்நோக்கி அடியில்வரும் பாவினைக் கூறினார்.

அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்
உழவ ருழாதன நான்குபயனுடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளையும்மே
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க்கும்மே
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே
நான்கே, அணிநிற ஓரி பாய்தலின்மீதழிந்து
திணிநெடுங் குன்றம் தேன் சொரியும்மே
வான்கண் அற்று அவன் மலையே; வானத்து
மீன்கண் அற்று அவன் சுனையே; யாங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்
தாளிற் கொள்ளலிர்; வாளில் தாரலன்;
யான் அறிகுவன் அது கொள்ளுமாறே
சுகிர்புரி நரம்பின் சீறியாழ்ப் பண்ணி
விரையொலி கூந்தல் நும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங்குன்றும் ஒருங்கு ஈயுமே. என இவர் பாடியுய்த்தார்.

இதனை நோக்கி அவர் பேடழிந்து நின்றார். சூழ்வினையா லும், வாள் வலிபாலும் நீவிர் எம்மை வெல்லகில்லீர்; நும் மனைவி யர் அருகில் நின்று ஆடிவர, யாழைக் கையிலேந்திக்கொண்டு நீர் பாடிவருவீராயின் எம் அரசன் நாடு முழுவதையும் பரிசிலாக நமக்குப் பரிந்து நல்குவன் என்று இவர் துணிந்து வரைந்துள் ளமையை இதில் ஆழ்ந்து உணர்க. பின்னர் அம்மன்னர் மூவரும் தம் எண்ணங்கள் இந் நுண்ணறிவாளன் முன் யாதும் பலியாது என்று அறிந்து நாணி அகன்றுபோனார். மதிநுட்பம் நூலோடு உடையானைத் தனக்கு அமைச்சனாக ஒருவன் அமைத்துக் கொள் வனாயின் அவ் அரசனை வெல்லுதல் யார்க்கும் அரிது என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்இசை
வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின்று
செழுஞ்செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி

யாண்டுபல கழிய வேண்டுவயிற் பிழையா
தாளிடூஉக் கடந்து வாளமர் உழக்கி
ஏந்துகோட் டியானை வேந்தரோட் டிய
கடும்பரிப் புரவிக் கைவண் பாரி; (அகம்.)

இது நக்கீரனார் பாடியது. கிளிகளைப் பழக்கி விடுத்துக் கதிர்களைக் கொணர்வித்துத் தன் அரசனை இவர் போற்றியதும், இவர் மதி வலிகொண்டு அவன் பகைவரை ஓட்டியதும், இவரது நுண்மதித் திண்மையும் மேற்குறித்த உண்மையும் இதனால் இனிது புலனாம்.

## கதை 2.

வியாழன் என்பவர் பிரமபுத்திரராகிய அங்கிரா முனிவரு டைய புதல்வர். தாய் பெயர் சிரத்தாதேவி. மனைவி தாரை. இவர் பொன்னிறமுடையவராதலால் அனைவரும் இவரைப் பொன்னேன் என்பர். தெய்வமந்திரி, சிகண்டிசன், சீவன், அமை ச்சன் ஆண்டளப்பான் ஆசான் வேதன் வேந்தன் எனவும் இவர்க்குப் பெயர்களுமுண்டு. புலமையாளருள் இவர் தலைமையா

னவர். தம் தவநலத்தால் இவர் கிரகபதம் பெற்றார். இவரது பதவி செவ்வாய் மண்டலத்துக்குமேல் இரண்டிலக்க யோசனையிலுள்ளதென்பர். அதிமதிநுட்பமோடு அதிகலை கற்று விதிமுறை வழாத நெறியுடையவரும் குருவென மதிக்கும் பெருமையுடையவர். இவரது மதிநலத்தை வியந்து அமரர் கோனாகிய இந்திரன் இவரைத் தனக்கு மந்திரியாக வகுத்துக் கொண்டான். அவனுக்குச் சூழ்ச்சித் துணைவராய் முன் அமைந்திருந்த ஆயிர அமைச்சரினும் இவர் தலைவராய் நின்று மறை புரிந்து வந்தார். இவரது ஆதரவால் அவன் யாதும் அல்லலின்றி முறை புரிந்து நின்றான்.

மாலமர் நெடுங்கடல் மதலை மாசிலாக்
காலமைந் தொழுகுமேற் கரையுங் காணுமே
நூலவர் நுழைவொடு நுழைந்து செல்லுமேல்
வேலவர் ஒழுக்கமும் வேலை காணுமே. என்றபடி

இவர் மதிவழியொழுகி அவன் மகிழ்ந்திருந்தான். அங்ஙனம் இருந்துவருங்கால் அசுரமன்னர் பலர் இடையிடையே வந்து இவனை வெல்லமுயன்றார். மிக்க மதிமானான சுக்கிரனைத் தமக்குத்துணையாகக்கொண்டு அவர் படுசூழ்ச்சி பலவும் செய்தார். அவற்றையெல்லாம் இவர் மதிமாட்சியால் மாற்றியழித்துத் தம் ஆட்சியைப் போற்றிவந்தார். ஆயினும் இறந்து போனவரை எழுப்பித்தரும்படியான மிருத சஞ்சீவி என்னும் மந்திரத்தை அவ் அசுரமந்திரி நன்கு அறிந்திருந்தானாதலால் அப்பகைவர் மிகவும் ஊக்கிநின்றார். நின்றுவருங்கால் சயந்தி என்னும் பேரழகியுடன் கூடிப் பெரும்போகங்களை நுகர்ந்து அவள் இன்பச்சுவையிலழுந்திச் சுக்கிரன் அறிவுமயங்கி இருந்தான். அவ்வமையம் இவர் சுக்கிரன்போல் சென்று அசுரர்பக்கல் நின்று ஓர் அற்புதச் சூழ்ச்சியைச்செய்து அவனை வெறுத்து நீக்கும்படி விளைத்து நீங்கினார். அப் பிரிவினையால் அசுரர் சிறுமையுற அமரர்கோன் பெருமையுற்றான். தம் சூழ்ச்சித்திறத்தால் எவரையும் வென்றுவிளங்கிய வெள்ளிமுதலியோர் எண்ணம் யாதும் பலியாமல் இவர்முன் இழிந்து நின்றார். மதி நுட்பம் நூலோடு உடையாரை வெல்லுதற்குரிய அதிநுட்பமான காரியம்யாதும் இல்லை

என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. மந்திரிக்குரிய மாட்சிகள் யாவும் இயல்பாகவே இவர்பால் நன்கு அமைந்திருந்தன. விரிவைத்தேவி பாகவதத்தில்காண்க.

வால்வளை பரவிமேயும் வளர்திரை வளாகமெல்லாம்
கோல்வளை வுறுமறக் காக்கும் கொற்றவன் நெடியனேனும்
மேல்விளைபழியும் வெய்ய வினைகளும் விலக்கிநின்றார்
நூல்வினை புலவரன்றே நுணங்குபோ தணங்குதாரீர் (சூளாமணி)

மதிநுட்பமுடைய மந்திரிக்கு முடியாத அதிநுட்பமான காரியம் யாதும் இல்லை என்பது இதனால் கூறப்பட்டது.

---

637 நன்றறிந்தும் மெய்க்கீர்த்தி நாடி யுலகியற்கை
குன்றாதே தன் செய்தான் குமரேசா—நின்ற
செயற்கை யறிந்தக் கடைத்தும் உலகத்
தியற்கை யறிந்து செயல். (எ)

இ—ள்.

குமரேசா! சத்தியகீர்த்தி யாவும் நன்கு அறிந்திருந்தும் உலக இயற்கையை என்மேவிச் செய்தான் எனின், செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து இயற்கை அறிந்து செயல் என்க.

மதிநுட்பம் நூலோடுடையராயினும் உலக இயற்கையை அறிந்து அவர் வினைசெய்யவில்லையாயின் அவ்அறிவால் பயனில்லையாதலால் அறிந்தக்கடைத்தும், அறிந்து செயல் என அடுத்தருளினார். செயல் = செய்க; உடன்பாட்டுவியங்கோள்.

செயற்கை அறிந்தக்கடைத்தும் = நூல்வழியால் வினைசெய்யுந் திறங்களை நன்கு அறிந்திருந்தாலும். உம்மை உயர்வு சிறப்பு.

நுண்ணறிவோடு நூலறிவிலும் அமைச்சன் சிறந்திருக்க வேண்டும் என்று மேல் உணர்த்தினார்; அங்ஙனம் எல்லாவகை அறிவுகளிலும் சிறந்திருப்பினும் உலகநடையினை யறிந்து அதற்குப் பொருந்த அவன் ஒழுகவேண்டும் என்று இதில் உணர்த்துகின்றார்.

வினைசெய்யுந் திறங்களை அமைச்சன் நன்கு அறிந்திருப்பினும், உலக இயல்பினை அறிந்து அதற்கு இயைய அதனைச் செய்யவேண்டும் என்பதாம்.

பல கற்றிருந்தாலும் உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லானாயின் அவன் அறிவில்லாதவன் என்று பழிக்கப்படுவனாதலாலும் எவ்வது உறைவது உலகம், உலகத்தோடு அவ்வது உறைவதே அறிவாம்; ஆதலாலும், அறிவுடை யமைச்சன் இதனை அறிந்து ஒழுகவேண்டும் என்க.

நூல் நெறியால் பேரறிவினைத் தாம் அடைந்திருப்பினும் உலக நெறியைத் தழுவியே சிறந்த அமைச்சர் ஒழுகுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சத்தியகீர்த்தியால் உணரப்படும்.

## கதை.

சத்தியகீர்த்தி என்பவன் திருவயோத்தியிலிருந்து அரசு புரிந்த அரிச்சந்திரனுடைய அருமை அமைச்சன். இவன் நுண்ணறிவாளன். மிக்க தண்ணளியுடையான். எல்லாவுயிர்களும் இன்புற இனிய இதங்களையே நாளும் எண்ணி யியற்றி அம்மன்னனுக்குக் கண்போல் இருந்தான். நல்ல வெளிப்படுத்துத் தீய மறந்தொழிந்து, ஒல்லை யுயிர்க்கு ஊற்றங்கோலாகி—ஒல்லுமெனின், மாயம் பிறர்பொருட்கண் மாற்றாக மானத்தால், ஆயின் அழிதல் அறிவு. என்னும் பாவின் இயல்புகள் யாவும் இவன்பால் மேவியிருந்தன. சிறந்த கல்வியுடையனாய் உயர்ந்த நிலையிலிருந்தும் தன் உளம்போனபடி உளுற்றாமல் இடங் காலங்களுக் கேற்ப உயிர்களின் இயல்புகளை உணர்ந்துகொண்டு பொருந்துமாறு வினைகளைப் போற்றிவந்தான். எவ்வதுறைவது உலகம், உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு என்னும் உண்மைக்கு இவன் உரிமையாயிருந்தான். தன்னுடன் இருந்த அமைச்சரெவரினும் உணர்ச்சித்திறத்தால் இவன் உயர்ந்து விளங்கினான். கோசிகர் வந்து அரிச்சந்திரனை வஞ்சித்து அரசைக் கவர்ந்துகொண்டதை யறிந்து குறுநிலமன்னரும் வீ ர ரு ம் திரண்டு அம்முனிவரை முனிந்தார். அனைவரும் அவரை அகங்கடுத்து வைதார்.

சடைபிடித்தும் கரம்பிடித்தும் தாள்பிடித்தும் மாவுரியாற் றகைத்துடுத்த
உடைபிடித்தும் சீர்த்தவனை யுபர்வனத்தில் இப்பொழுதே ஓட்டுகின்றோம்
மடைபிடித்த வயல்சூழும் வளநாடு நீபுரக்க வருவாய் என்று
படைபிடித்த மலர்க்கரத்தால் பதம்பிடித்து விறல்வேந்தர் பணிந்து
[வீழ்ந்தார்.

அவ்வமைபத்து அச்செயல் தகுதியற்றது என அவரை விலக்கி அரசைத் துறந்துவிட்டு தன் அரசனைத் தொடர்ந்து இவன் அயைந்துபோனான். இவனது அறிவையும் செயலையும் வியந்து முனிவரும் புகழ்ந்தார். செயற்கை அறிந்தக்கடைத்தும், உலகத்து இயற்கை அறிந்து செயல்: என்னும் உண்மைக்கு உரிமையாகி இவன் உணர்த்திநின்றான்.

உலக இயற்கைக்குப் பொருந்துமாறே அமைச்சன் வினைகளைச் செய்யவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

638 தேருமடல் சச்சந்தன் சீறிவைதும் தத்தனென்
கூறினன் நீதி குமரேசா—மீறி
அறிகொன் றறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன். (அ)

இ—ள்.

**குமரேசா!** **தான்** கூறியதை அறியாமல் சச்சந்தன் சீறி வைதும் உருத்திரதத்தன் பின்னும் அவனுக்கு ஏன் உறுதி கூறினன் எனின், அறி கொன்று அறியான் எனினும், உறுதி கூறல் உழைபிருந்தான் கடன் என்க.

அறிகொன்று = அறிவையழித்து; அஃதாவது தனக்கு உறுதிகூறினோரது உணர்வை ஓர்ந்துகொள்ளாது இகழ்ந்து தள்ளி என்றபடி. அறிவு என்பது விகுதிகுன்றி அறி என நின்றது. உம்மை இழிவு சிறப்பு. உழையிருந்தான் என்றது அமைச்சனை; உழை = பக்கம். சூழ்ச்சித்துணையாய் என்றும் அரசனுக்கு அருகே இருப்பவனாதலால் அவன் இங்ஙனம் அறையநின்றான். உழைநிலையாளர் என்றார் உதயணன்கதையார். உறுதி என்றது உறுதி பயக்கும் உண்மைகளை; அஃதாவது அரசனுக்கு நன்மை தருவதாய காரியங்களை.

கோறலும், அறியாமையும், உறுதிகூறற்கு உறுதிதாரா ஆத லால் கடன் என அதனை உறுதிபெற உணர்த்தினர்.

தாம் சொன்ன புத்தியைக் கேளாமல் மன்னர் மாறி யிகழின் அமைச்சர் என்ன செய்யவேண்டும் என்பாரை நோக்கி இஃது இயம்பியதென்க.

அமைச்சன் எத்துணை அறிவுடையனுயினும் உலக இயற் கையைத்தழுவித் தன் வினைகளைச் செய்யவேண்டுமென்று மேல் உணர்த்தினர்; தான் உரைத்ததை உணராமல் அரசன் வெறுத்து இகழினும் உறுதியை வற்புறுத்தி அமைச்சன் அவனுக்கு உரைக்க வேண்டும் என்று இதில் உணர்த்துகின்றார்.

தனக்கு உறுதி கூறுவாரது உணர்வையுங் கொள்ளாமல், தானுகவும் அரசன் உணரானுயினும், அருகிலிருந்த அமைச்சன் அது நோக்கி நீங்கிவிடாமல் அவனுக்கு நீதி கூறவேண்டுவது தன் கடமையாம் என்பதாம்.

அறிவிலனுகி அரசன் இழிவுறினும் உழையிருந்தவனுவது உறுதியை உணர்த்தலாகாதா என்று உலகம் அமைச்சனையே பழிக்குமாதலால் தனக்கு இறுதிவரினும் உறுதியை அரசனுக்கு அவன் உரைக்கவேவேண்டும் என்க.

தான் உரைத்த உண்மையை யுணராததோடு
எடுத்தொருவருக் கொருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினக்கிதழகோ தகைவில் வெள்ளி
கொடுப்பது விலக்கு கொடியோய் உனதுசுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி விடுகின்றாய்; என்று

மாவலி கடுத்துவைதும் சுக்கிரன் அடுத்துநின்று நீதியைத் தொடுத்துக் கூறியதுபோல் இறுதிவரினும் தம் அரசனுக்கு உறுதியை வற்புறுத்தி அமைச்சர் உரைக்கவேண்டும் என்றவாறு.

விசயதாரொடு பகைகொளலாகாது என்று எங்கராயன் என் னும் அமைச்சன் உறுதியை இனிதறிந்து உரைத்தும் அதனை உட்கொள்ளாததோடு

பிழைக்க உரைசெய்தனை பிழைத்தனை யெனக்குறுதி
பேசுவது வாசிகெடவோ

முழைக்கண் இளவாளரி முகத்தெளி தெனக்களிறு
 மூட்டியெதிர் கிட்டிவருமே;
என்னுடைய தோள்வலியும் என்னுடைய வாள்வலியும்
 யாதும் அறியாது பிறர்போல்
நின்னுடைய பேதைமை யினாலுரை செய் தாயிது
 நினைப்பளவில் வெல்லல் அரிதோ. என்று

கலிங்கமன்னன் எள்ளிவைதபொழுதும், தான் இகழ்ந்து நீங்காமல்

இன்று சீறினும் நாளையச் சேனைமுன்
நின்ற போழ்தினில் என்னை நினைத்தியால்;
அரசர் சீறுவ ரேனும் அடியவர்
உரைசெயாதொழி யார்க ளுறுதியே;

என்று அம்மதிமான் கூறியதும் ஈண்டு மனங்கொளத்தக்கது.

தான் உரைத்ததை உணராமல் அரசன் வெறுத்து வையி னும் அறிவுடை அமைச்சன் அவனுக்கு உறுதியை மறுத்தும் வற்புறுத்தி உரைப்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை உருத்திரதத்தன்பால் உணரப்படும்.

## கதை.

உருத்திரதத்தன் என்பவன் ஏமாங்கத நாட்டிலே இராச மாபுரி என்னும் நகரிலே யிருந்தவன். சச்சந்தனுடைய மந்திரி. அறிவொழுக்கங்களில் இவன் மிகச் சிறந்தவன். நூல்வழி மாறு மல் அரசர்க்குரிய நால்வகை உபாயங்களையும் நன்குதெளிந்தவன். உயிர்கள்பால் பேரன்புடையவன். தன் அரசன் விசையையின் இன்பச் சுவையிலாழ்ந்து அரசைக் கட்டியங்காரன்பால் ஈயத் துணிந்தபொழுது அது தீயது என்று தன்னுடனிருந்த நிமித்தி கன் முதலாயினோர் தடுத்துங் கேளாமல் தான் கருதியதையே முடித்துவிடுமாறு அவன் கடுத்துநின்றான். அவ்வமையம் இவன் அடுத்துநின்று,

ஆரறி விகழ்தல் செல்லா ஆயிரஞ் செங்கணானும்
கூரறி வுடையநீரார் சொற்பொருள் கொண்டு செல்லும்
பேரறி வுடைமைநீயும் பிணையனாட் கவலஞ் செய்யும்
ஓரறி வுடைமை யென்றான் உருத்திரதத்தன் என்பான்.

இங்ஙனம் புகழ்ந்து நின்று உறுதியை இவர் நயந்து கூறியும், அவன் அறிந்து கொள்ளாமல் மேலும் முனிந்து இகழ்ந்தான்.

மூரித்தேந் தாரினாய் நீ முனியினும் உறுதி நோக்கிப்
பாரித்தேன் தருமநுண்ணூல் வழக்கது வாதல்கண்டே;

என்று மீண்டும் உறுதியை இவர் துணிந்து கூறினர்.

அறிகொன்று அறியான் எனினும் உறுதி உழையிருந்தான் கூறல் கடன்; என்னும் உண்மையை உலகம் காண இவர் உணர்த்தி நின்றனர். விரிவைச் சிந்தாமணியில் காண்க.

தம்முயிர்க் குறுதியெண்ணார் தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாது நின் றுரைக்கும் வீரர்
செம்மையில் திறம்பல் செல்லாத் தேற்றத்தார் தெரியுங்காலம்
மும்மையும் உணரவல்லார் ஒருமையேமொழியும் நீரார்.

என அமைச்சர் இயல்பைக் குறித்துக் கம்பர் கூறிய இவ்வருமைக் கவி ஈண்டுக் கருதத்தக்கது.

செவிசுடச் சென்றாங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் போரா—களிமதத்த
கைம்மா வயக்கதே பாகுமற் றேத்திறத்தும்
அம்மாண் பினவே அமைச்சு. (நீதிநெறிவிளக்கம்)

தன் அரசனுக்கு உறுதியானதை அமைச்சன் இடித்துக் கூற வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

639 பண்டு புரோசனனைப் பாண்டவரேன் பாவியென்று
கொன்றொழித்தார் அஞ்சிக் குமரேசா—அன்றிப்
பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோர்
எழுபது கோடி யுறும். (௯)

இ—ள்.

குமரேசா! தமக்கு மந்திரியாக வந்திருந்து மாறெண்ணிய புரோசனனைப் பாண்டவர் ஏன் பயந்து ஒழித்தார் எனின், பழுது எண்ணும் மந்திரியின், பக்கத்துள் ஓர் எழுபதுகோடி தெவ், உறும் என்க.

உழையிருந்து அரசர்க்கு உறுதிசூழும் அமைச்சரது பான்மை மேன்மை கேண்மை ஆண்மை முதலியவற்றை இதுவரை உரைத்தார்; அங்ஙனமின்றி அவர் இறுதி சூழுவராயின் உடனே அவரை இழித்து ஒழிக்க வேண்டுமென்று இனி உணர்த்துகின்றார்.

பாவி என்று கொண்டது அவன் தீமை மிகுதிகண்டு என்க.

பக்கம் என்பது அருகையும் அயலையும் குறித்துவரும். மந்திரிக்கும் இதனைக்கொண்டு கூட்டுக.

பழுது=குற்றம், பொல்லாங்கு, தீங்கு. பயமின்மையையும் அருமையாக இஃது உணர்த்திவரும்; பழுது பயமின்றே; என்றது தொல்காப்பியம். கோடி என்றது ஒரு பேரெண்; நூறு நூறாயிரங்கொண்டது; மிகுதியை உணர்த்தற்கோர் தகுதியாக இவ் எண் ஈண்டு எண்ண நின்றது. பகைமையை உணர்த்திவரும் தெவ் என்னும் சொல் ஈண்டு ஆகுபெயராய் நின்று பகைவரைக் குறித்தது. தெவ்வுப் பகையாகும் என்றது இயல். ஓர் எழுபதுகோடி தெவ் உறும்=ஓர் எழுபதுகோடி பகைவர் எளிதாக அமைவர். உறுதல்=எதிர்தல், நிகர்தல், அடைதல். எழுபதுகோடி பகைவரினும் பழுதுடைய ஒரு மந்திரி கொடியவன் என்பார் எண்ணும் மந்திரியின் எழுபதுகோடியுறும் என்றார். இன் உருபு எல்லைப் பொருளது. தெவ் ஓர் என்று பிரியாமல் தெவ்வோர்என ஓரே பதமாகக் கொள்ளலாகாது; அங்ஙனங் கொண்டால் உறும் என்னு முற்றோடு அஃது உற்றுமுடியாது; என்னை? பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில், செல்லாதாகும் செய்யுமென் முற்றே; என்றது இயல் விதியென்க. எழுபது கோடி தலை எனவும் பாடம்.

பழுது எண்ணுவோர் பகைவரே ஆதலால் அவரை எழுபதுகோடி என அளவெடுத்துக்காட்டித் தீய மந்திரியின் கொடுமையைத் தெளிய விளக்கிய அழகை இதில் தெளிந்து நோக்குக.

அருகிலிருந்து தீங்கு எண்ணுகின்ற மந்திரியினும் அயலிலுள்ள ஓர் எழுபதுகோடி பகைவர் அரசனுக்கு மிக இனியராவர் என்பதாம்.

தனக்கு உறுதி சூழ்பவன்போல் அருகிலிருந்து இறுதி சூழும் இவனது சூழ்வை அரசன் எளிதில் அறிய இயலாது ஆதலால் அறிந்து காத்தற்கு புறப்பகைவரினும் அகப்பகையாயுள்ள இவன் மிக அஞ்சத்தக்கவன் என்பது கருத்து.

உரிமையுடையவன்போல் உழையிருந்து கொண்டே தனக்கு அழிவை எண்ணிய விச்சுவ ரூபனை இந்திரன் வெட்டி வீழ்த்தியதுபோல் தீய அமைச்சரை அரசன் உடனே தீர்த்துவிடவேண்டுமென்க.

மந்திரி தீயவனுயின் கொடும்பகைவரினும் கொடியவனாகக் கருதி உடனே அவனை அரசன் ஒழித்துவிடவேண்டும் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை புரோசனன்பால் உணரப்படும்.

## கதை.

புரோசனன் என்பவன் இற்றைக்கு ஐயாயிரஆண்டுகட்கு முன்னர் அத்தினுபுரியில் இருந்தவன். துரியோதனனுக்கு இவன் இனிய நண்பன், கொடிய வஞ்சன். அரசர்க்குரிய நால்வகை உபாயங்களிலும் நன்கு தேர்ந்தவன்; ஆயினும் கேடு சூழ்வதில் சகுனியினும் கோடிபங்கு கொடியவன். தகைமையில்லாத கௌரவர்களோடு பாண்டவர் உடனிருந்தால் பகைமை விளையுமென்று கருதி ஐவரும் தனியரசாகச் சிலகாலம் காசியிலிருந்து வாழும்படி வீடுமன் முதலியோர் நாடி விடுத்தார். அங்ஙனம் விடுக்குங்கால் இக்கெடுமதியாளனைத் துரியோதனன் முதலியோர் தனியே யழைத்து வைத்து அங்கு அமைச்சனுய்ச் சென்று அமையமறிந்து ஐவரையும் கொன்று விடும்படி கூறிவிடுத்தார். இப்பொல்லாதவன் அச்செல்வ மக்களுக்கு நல்ல மந்திரிபோல் நடித்து மெழுகால் ஒரு சிறந்தமாளிகையைப் புனைந்து அதில் அவர் இருந்துவரும்படி செய்து தானும் உடனிருந்துகொண்டு அவர்க்கு அழிவை நினைந்து வந்தான். இவ்வஞ்சன் எண்ணத்தைப் பலஇங்கிதங்களால் அப்பஞ்சவர் உணர்ந்தார். உணர்ந்தும், உடனே நீக்குதற்கு அஞ்சித் தனித்தனியே தம்மைத் தற்காத்துக்கொண்டு அம்மன்னர் என்றும் இவனை நீங்காமல் நின்று பாம்போடு உடனுறைவதுபோல் பழகிவந்தார்.

பார்த்தரோடொரு மனைவயிற் பயில்பவர் போல
வேந்தவரும் மந்திரவலியினுல் மிக்கோர்
காந்து நெஞ்சுடை அமைச்சனைக் கைவிடாரணுகித்
தாந்த மெய்யென வுயிரெனத் தனித்தனி சார்ந்தார்.

புறப்பகைவர் பலகோடியர் வரினும் அஞ்சாத அவ்வீரர் உட்பகையாய இக்கொடிய மந்திரிக்கு உள்ளங்கலங்கி யிருந்து பின் ஒருநாள் இவனை ஒழித்துயர்ந்தார். பழுது எண்ணும் மந்திரியிற் பக்கத்துள் தெவ்ஓர் எழுபது கோடி உறும்; என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. விரிவைப் பாரதத்தில் காண்க.

கொடிய மந்திரியை உடனே அரசர் கடியவேண்டும் என்பது இதனுல் கூறப்பட்டது.

640 என்னை முரணினிதா எண்ணிவைத்தும் பின்முடியான்
கொன்னே விடுத்தான குமரேசா—முன்னே
முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர் (ய)

இ—ள்

குமரேசா! மூரன் என்பவன் தான் செய்யவேண்டிய காரியங்களைச் செவ்வையாக ஆராய்ந்து வைத்தும் பின் ஏன் அவற்றைத் துணிந்து முடிக்கமாட்டாமல் இழிந்து நின்றான் எனின், திறப்பாடு இலாஅதவர் முறைப்படச்சூழ்ந்தும் முடிவு இலவே செய்வர் என்க.

முடியான் விடுத்தான்=முடியாளுய் விடுத்தான். முன்நின்ற முற்று இதில் எச்சமாய் நின்றது. இலாதவர், இலவே செய்வர் என இயைத்துக் காண்க. ஏகாரம் தெளிவுதோன்ற நின்றது.

இலாதவர் செய்வர் எனவே உடையார் அங்ஙனம் செய்யார் என்பதாயிற்று. அளபெடை இசை நிறைத்து நின்றது.

சூழ்ச்சியுடையனுயினும் வினையை ஆற்றும் மாட்சி யிலனுயின் அவனை அமைச்சனுகப் போற்றிக்கொள்ளாமல் புறத்தே போகவிட வேண்டும் என்று இஃது உணர்த்துகின்றதென்பதை உய்த்துணர்ந்து கொள்க.

முறைப்பட சூழ்ந்தும்=ஒழுங்காக எண்ணிவைத்தும்; என்றது செய்தற்குரிய காரியங்களை இன்னவிதமாகச் செய்யவேண்டும் என்று முன்னதாகவே அளவுபட ஆராய்ந்தும் என்றவாறு.

திறப்பாடு=கூறுபாடு; அஃதாவது கருதியதைக் கடைபோகச்செய்யும் உறுதி.

மேல், பழுது எண்ணும் மந்திரியைப் பகைவரினும் கொடியனென்று கருதிவிடுக என்முர்; இதில், வினைமுடிக்கும் திறன் இல்லாதவனை எவ்வகையானும் விரும்பாதே என்கிமுர்.

வினைசெய்யுந் திறன் இலாதவர், செய்தற்குரிய காரியங்களை முதலில் ஒழுங்குபட எண்ணிவைத்தும், செய்யுங்கால் அவை முடிவிலவாகவே செய்வர் என்பதாம்.

இன்ன இன்னவிதமாகச் செய்யவேண்டுமென்று ஒருகாரியத்தைக் குறித்து முன்னதாகவே நன்முக ஆராய்ந்துகொண்டு செய்யப் புகுந்தபின் மனத்துணி வின்மையால் அதனைத் திருந்தச்செய்து முடிக்கமாட்டாமல் இடையே கைவிடுவராயின் அத்தகைய கோழை அமைச்சனை அரசன் கைக்கொள்ளலாகாது என்றவாறு.

முறையுறச் சூழ மாத்திரமன்றி முடிக்கமாட்டாத மந்திரியும், இறைவனுக்கு அகிதம எண்ணும் மந்திரியும், எழுது சித்திரத்தினும் ஆகா; என்றதும் ஈண்டுச்சிந்திக்கத்தக்கது.

கலையறிவுகொண்டு வினை முடிவை வரிசைப் படச்சொல்லி வறிதே யிருக்கும் வாயாடியினும் துணிவோடு நின்று அதனை இனிது முடிக்கும்உறு தியாளனேஉயர்ந்தவனுவன் என்க.கலைமாட்சியினும், வினைமாட்சியுடையவ னையே தன் ஆட்சிக்குத்துணையாக அரசன் அணைத்துக் கொள்ளவேண்டும் என்பதாம்

கற்றதொன் றின்றி விடினுங் கருமத்தை
அற்ற முடிப்பான் அறிவுடையான்—உற்றியம்பு
நீத்தநீர்ச் சேர்ப்ப இளையானே யாயினும்
மூத்தானே யாடுமகன். என்ற பழமொழியும்ஈண்டுஎண்ணத்தக்கது.

ஆடுமகன் என்றது எதையும் முடிவுறத் துணிந்து செய்யவும் சொல் லவும் வல்லவன் என்றவாறு.

நுண்ணிய அறிவுடையராயினும் தாம் எண்ணிய வினையை இனிது முடிக்கும் திண்மை இலராயின் அவர்க்கு அமைச்சர் என்னும் தன்மை இல்லை யென்பது கருத்து.

சூழ்ச்சித்திறத்தோடு வினையை ஆற்றுந் திறத்திலும் அமைச்சர் சிறந் திருக்கவேண்டுமென்பது குறிப்பு.

தாம் கருதிய கருமங்களைக் கருதியபடியே உறுதியோடு நின்று முடிவு பெறச் செய்யாதவர் இழிவுறுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை முரன்பால் உணரப்படும்.

## கதை.

முரன் என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர்ச் சோதிகம் என்னும் நகரிலிருந்தவன். வஞ்சச்சூழ்ச்சியில் இவன் மிகவும் வல்லவன். அஞ்சா நெஞ்சினன். நரகாசுரனுடைய மந்திரிகள் எண்மரில் இவன் முதன்மையானவன். திண்ணியனுயினும் நுண்மையில்லாதவன். அவன் விழைந்தபடியே இசைந்தொழுகும் இழிந்த இயல்பினன்.

மன்னவர் செவியழல் மடுத்ததாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவர் அமைச்சர்கள் துணைவர் மேலையோர்
ஒன்னலர் விழைந்தவா றுனாக்கின் றார்களே. என்னும்

இறுதி மொழிக்கு இவனோர் இலக்காய் நின்றான். அதிதியின் காதணியைக் கவர்ந்து கொண்டுவரவேண்டுமென்று அரசன் குறித்த பொழுது இவன் யாதும் தடுக்காமல் உடனிருந்து உறுதிகூறி விடுத்தான். இந்திரனோடு அமர்செய்ய விரும்பித் தந்திரமாகச் சூழ்ந்து ஒருகால் இவன் தானையோடு சென்றான். அவ்வானவர் வந்து மண்டியபொழுது உறுதியாய் நின்று உடன்று பொராமல் இவன் உளங்கலங்கி மீண்டான். இங்ஙனமே எண்ணிய வினையை இயற்றப்புகுங்கால் இடையே தோன்றிய இடையூறுகளுக்கு அஞ்சிப் பலமுறையும் இவன் இடைந்துநொந்தான். சூழ்ச்சி கூறிப் பிறரை மூட்டி விடுவனேயன்றித் தான் முன்னின்று ஒன்றையும் இவன் முடிக்கமாட்டான். இங்ஙனம் இருந்துவருங்கால் கண்ணன் வந்து தன் மன்னனுடன் கடும்போர் புரிந்தபொழுது ஆழியால் இவன் மடிந்து விழுந்தான். இவனை அழித்து வென்றதால் முராரி என்று கண்ணனுக்கு ஒருபெயர் முளைத்து நின்றது. முராரி=முரனை அழித்தவன். சூழச்சி வல்லவனாயிருந்தும் வினையாற்றலின்மையால் ஆட்சித்துறையில் இவன் மாட்சி யுறிலன். முன்னுற இனிது சூழினும் முரன்பின் முடிவுற எதனையும் முடியான் என அனைவரும் இகழ்ந்து புகல இவன் விளங்கியிருந்தான். முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர் திறப்பாடு இலாதவர்; என்னும் உண்மை மொழிக்கு இவன் உரிமையாய் நின்றான்.

வினை செய்யும் திறமில்லாதவனை அமைச்சனாக அரசன் அமைக்கலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

வீங்குநீர் உலகங்காக்கும் விழுநுகம் ஒருவனாலே
தாங்கலாந் தன்மைத் தன்று தளையவிழ் தயங்கு தாரீர்
பாங்கலார் பணியச் சூழும் நூலவர் பாகமாகப்
பூங்குலாம் அலங்கல் மாலைப் புரவலன் பொறுக்குமன்றே. (சூளாமணி)

தீயவனும் மந்திரியால் நல்வேந்துந் தீவேந்தாம்; தீமையில்லாத்
தூயவனும் மந்திரியால் தீவேந்தும் நல் வேந்தாம்; தொடர்ச்சிபோல
ஆயநெறி மன்னவரால் அமைச்சரும்அப் படியாவராதலாலே
நேயவிவேகத் தமைச்சனுண்டாகில் எப்பயனும் நிருபற்குண்டாம்.
(வாசிட்டம்)

---

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

கருவி கால முதலாயவற்றை ஆராய்ந்துகொண்டு வினையை இனிது முடிக்க வல்லவனே அமைச்சனாவான். ஆண்மை திண்மை அறிவு முயற்சி முதலிய உயர்ச்சிகள் யாவும் அவனுடையனாதல் வேண்டும். பகைவர் பாலுள்ளாரைப் பிரித்துவிடவும் அங்ஙனம் பிரித்தவரைத் தன் அரசுக்கு

இதம்புரியுமாறு பொருத்திக்கொள்ளவும் அவன் வல்லனாதல் வேண்டும். எதையும் கூர்ந்து செய்யவும் ஓர்ந்து சொல்லவும் அவன் தேர்ந்திருத்தல் வேண்டும். அரசனுக்குரிய அறங்களையும், வினைசெய்யும் திறங்களையும், விளங்க உணர்ந்து துணிந்து சொல்பவனே சூழ்ச்சித் துணையாவன். நுண்ணறிவோடு நூலறிவு முடையனாய் அமைச்சன் இருப்பனாயின் பகைவர் எண்ணங்கள் அவன் முன் யாதும் பலியா. எவ்வளவு அறிந்திருந்தாலும் உலக இயற்கையைஅறிந்து அதற்குப்பொருந்த அவன் செய்தல்வேண்டும். அரசன் அறியாது சினந்தாலும் அவனுக்கு உறுதியை அமைச்சன் துணிந்து சொல்லவேண்டும். மந்திரி கெடுமதியனாயின் கொடியன் என்று அஞ்சி உடனே அரசன் அவனைக் கடிதல்வேண்டும். வினைசெய்யும் ஆற்றலில்லாத அமைச்சனைக் கனவிலும் அரசன் கைக்கொள்ளலாகாது.

சஅ-வது அமைச்சு முற்றிற்று.

---

# 65-ம் அதிகாரம் சொல்வன்மை.

அஃதாவது சொல்லுதலில் வல்லுநனாதல். பிரித்தல் பொருத்தல்களைச்செய்து அரசகாரியங்களைத் திருத்தமுற ஆற்றுதற்குரிய அமைச்சருக்கு உறுதியாக இவ்வன்மை இனிது அமைந்திருக்க வேண்டுமாதலால் இஃது ஈண்டு வைக்கப்பட்டது. மன்னனுக்கு வில்வன்மைபோல் மந்திரிக்குச் சொல்வன்மை இன்றியமையாதென்க. இறைமாட்சியை யடுத்துக் கல்வியை வைத்து அமைச்சுக்குப்பின் இச்சொல் வன்மையை நிறுவியுள்ளமைக்கு உரியவாயஅரிய நயங்களைத் துருவி நோக்குக.

641 பண்டனுமான் நாநலத்தைப் பாராட்டிச் சீராமன்
கொண்டாடி னானென் குமரேசா—உண்டாகும்
நாநல மென்னும் நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉம் அன்று. (க)

இ—ள்.

**குமரேசா!** அனுமானது நாநலத்தை இராமன்ஏன் மிகவும் வியந்து கொண்டாடினான் எனின், நாநலம் என்னும் நலன்உடைமை, அந்நலம் யாநலத்து உள்ளதூஉம் அன்று என்க. அளபெடை இன்னிசை பெற நின்றது. சொல்வன்மையே எல்லா நன்மைகளுள்ளும் சிறந்தது என்று இஃது உணர்த்துகின்றது

நாநலம்=நாவால் உளதாம் நன்மை; என்றது சொல்வன்மையை நூலோரும் மேலோரும் நாநலமென்றே சொல்வன்மையைத் தொன்று தொட்டு வழங்கி வந்துள்ளார் என்பது என்னும் என்றதனால் விளங்கி நின்றது.

யாநலத்தும்=எந்நலங்களுள்ளும். சிறப்பும்மை பிரித்துக் கூட்டப்பட்டது. யா—வினாவிடைச்சொல் உள்ளது அன்று=அடங்கியிருப்பது அல்லை; மிகுந்துள்ளது என்ற படி.

கல்விநலம், செல்வநலம், அறிவுநலம், உருவநலம், முதலிய எல்லா நலங்களினும் சொல்நலம் மிக்கவும் சிறந்தது என்பார் அந்நலம் யாநலத்துள்ளதும் அன்று என்றார்.

அமைச்சன் முறைப்படச்சூழ்ந்து எந்தக்காரியத்தையும் முடிவுறச் செய்யவேண்டுமென்று மேலதிகாரத்தின் இறுதியில்அருளினார்; இதில் அவன் திறப்படச் சொல்லுதலில் வல்லனாதல் வேண்டும் என்கின்றார்.

நாவினது நலம் என்று சொல்லப்படுகின்ற சொல்வன்மையே ஒருவனுக்கு நல்ல உடைமையாம்; அந்நலம் கல்வி செல்வ முதலிய எந் நலத்தினும் சிறந்தது என்பதாம்.

அதிகாரத்தில் வன்மை எனக் குறித்திருத்தலால் அது கொடுமை மேலதோ? என்று மறுகுறுமலும், எல்லா நலங்களையும் தருதற்குரிய தலைமையுடையது என்னும் அதன் நிலைமை தோன்றவும், நா நலம் எனச் சொல்வன்மையை இதில் நலம்பெற வைத்தார்.

விலங்கினம் முதலிய மற்ற இனங்களெவற்றினும் மக்கள் சிறந்தவராதற்கு நாவாடல் ஒன்றே காரணமாகும்; அதனை நலம்பெறப் பெற்றவன் எல்லா நலங்களையு முடையவனாய் எவரினும் உயர்ந்து விளங்குவான் என்பது கருத்து.

மணி பொன் முதலிய அணி கலங்களினும் சொல் நலம் யாரும் விரும்பும் வண்ணம் பேரழகைத் தந்து எங்கும் சீர்பெறச்செய்யும் ஆதலால் தம் உயிருடைமையாக மக்கள் அதனை உணர்ந்துகொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

கல்வி முதலிய பிறவன்மைகளையுடையனாயினும் அமைச்சன் சொல்வன்மை இலனாயின் வருவதோர்ந்து உறுதி கூறிப் பிரித்தல் பொருத்தல்களைத் திருத்தமுறச் செய்ய இயலாது ஆதலால் இவ்வன்மை அவனுக்கு உயிர்த்தன்மையாயுறைந்திருக்க வேண்டும் என இயலுரிமைக்கேற்ப இதனை இயைத்துக் காண்க.

நா நலம் உடையவன் எல்லா நலங்களையும் ஒருங்கே அடைந்து எங்கும் சிறந்து என்றும் உயர்ந்து விளங்குவான் என்பது இதில்உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அனுமான்பால் உணரப்படும்.

## கதை.

அனுமான் சுக்கிரீவனுக்குச் சூழ்ச்சித் துணைவனாகி உடனமர்ந்திருந்தகாலத்து இராம இலக்குவர்கள் அம்மலைச்சாரல் வழியே சீதையை நாடிவந்தார். அவ்வில்வீரர்களைக்கண்டவுடனே வானரர்களெல்லாரும் வெருண்டு வெருவி விரைந்தோடினர்; மன்னன் முதலியோர் மனங்கலங்கி இன்னலுறுங்கால் அஞ்சன்மின் என்று ஆதரவுசொல்லி இருத்திவிட்டு இவன் மாத்திரம் தனியே அவர்இயல்பு தெளிய எழுந்து போந்தான்; மறைந்துநின்றுகொண்டு நெடிது ஆராய்ந்து இனியொன்று தெளிந்த பின் அவர் எதிரே தோன்றினான்; இராமன் வில்லையூன்றியகையினனாய் வியந்து நோக்கி நீ யார்? என அவனை நேரே வினவினான்.

மஞ்செனத் திரண்டகோல மேனிய மகளிர்க் கெல்லாம்
நஞ்செனத் தகையவாகி நளிரிரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சமொத் தலர்ந்த செய்ய கண்ண! யான் காற்றின் வேந்தற்கு
அஞ்சனை வயிற்றின் வந்தேன் நாமமும் அனுமன் என்றான்.

மேல் வினவியதற்கு இங்ஙனம் இவன் எதிர்விடைதந்தான். மேனிய! கண்ண! என விழைந்து குழைந்து விளித்ததையும், அவற்றிற்குக் கொடுத்துள்ள அடைமொழிகளின் நுண்பொருள்களையும் நுனித்து நோக்குக. ஈண்டுரைப்பிற்பெருகும். பொருள் பொதிந்த இவ் அரியமொழிகளைக் கேட்டவுடனே இராமன் இவனது அறிவினை வியந்தான்; அச்சொற்களின் மேன்மையையும் இவன் சொன்னபான்மையையும் உன்னி உன்னி உள்ளமுருகினான்; அதன்பின் உழைநின்ற தம்பியை விழைவுடன் நோக்கினான்.

இல்லாத வுலகத் தெங்கும்இங்கிவன் இசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக் கடலுமே என்னுங் காட்சி
சொல்லாலே தோன்றிற் றன்றே யார்கொல் இச்சொல்லின் செல்வன்
வில்லார்தோள் இளையவீர விரிஞ்சனோ விடைவல்லானோ.

எனவிளம்பிநின்றான். நிற்குங்கால், நீவிர்யாவிர்? நும்பெயர்என்ன? எங்கிருந்துவருகிறீர்? எங்கேபோகின்றீர்? என்று இவைமுதலியவரலாறுகளை இராமன்பால் அறிய விரும்பிய அனுமான் அப்பெரியவன்பால் இங்ஙனம் வினவுதல் தகுதியன்றெனக் கருதினான்; ஆயினும் சுக்கிரீவன்பாற் போய் அவரைக் குறித்துச்சொல்லவேண்டியிருத்தலால் என்செய்வதென்று நினைந்தான்; ஓர் சொல்லால் இவையாவும் அவர்வாயிலிருந்து வெளிவருமாறு சூழ்ந்தான்; யாரென விளம்புகேன்யான் எம்குலத்தலைவர்க்கு உம்மை வீரநீர், பணித்திர்; என்று விநயமாக வினவினான். இவனது விநயத்தையும்

நாநலத்தையும் அவர் மிகவியந்து தம்வரலாறு முழுவதையும் தெளிவுறஉரைத்தார்; இங்ஙனம் உணர்ந்து கொண்டு சுக்கிரீவன்பால் உணர்த்தச் சென்றவன் அவர் உரைத்தன ஒன்றும் உரையாமல் "வாலியின் உயிர்தெறக் காலன் வந்தனன்" எனக்கருத்துற உரைத்து அழைத்துச்சென்றான். அவ் வில் வீரரிருவரையும் சுக்கிரீவனையும் தன்சொல்வலியால் பிணித்து என்றும்பிரியாநட்பினராக இணைத்து வைத்துத் தான் எண்ணிய யாவும் எண்ணியாங்கேமுடித்துத் தன் மன்னன் இழந்திருந்த அரசை மீண்டும் எய்தும் படிசெய்தான். அமைச்சியல் முறையில் நின்று இவன் செய்துள்ள இராசதந்திரங்கள் அளவிடலரியன. வாக்கு வன்மையில் எவருந்தனக்கு நிகரில்லாதவனாய் நிலவிநின்றான். தென் சொற்கடந்து வடசொற்கடற்குஎல்லைகண்ட இராமனே இவன் நாநலத்தைவியந்து சொல்லின் செல்வன் என்று சொல்லிமகிழ்ந்துள்ளான் என்றால் இவனது சொல்லாற்றலை எவர் முடிவுறச் சொல்லவல்லார்; இவனது நாவின் நலத்தைவிளக்குதற்குரியபாவினங்கள் பல கம்பரது காவிய உலகிலுள்ளன; அவற்றுட் சில ஈண்டுத்தந்து காட்டுதும்.

கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்
தெண்டிரை யலைகடல் இலங்கைத் தென்னகர்
அண்டர் நாயகஇனித் துறத்தி ஐயமும்
பண்டுள துயருமென்று அனுமன் பன்னுவான்.

கண்ணினும் உளைநீ தையல் கருத்தினும் உளைநீ வாயின்
எண்ணினும் உளைநீ கொங்கை இணைக்குவைதன்னின் ஒவ்வா
தண்ணல் வெங்காமனெய்த அலரம்புதொளைத்த ஆறாப்
புண்ணினும் உளைநீ உன்னைப்பிரிந்தமை பொருந்திற்றாமோ.

உன்குலம் உன்னதாக்கி யுயர்புகழ்க்கு ஒருத்தியாய
தன்குலம் தன்னதாக்கித் தன்னையித்தனிமைசெய்தான்
வன்குலம்கூற்றுக்கீந்து வானவர்குலத்தை வாழ்வித்து
என்குலம் எனக்குத் தந்தாள் என்னினிச்செய்வதெம்மோய்.

விற்பெருந் தடந்தோள்வீர வீங்குநீர் இலங்கைவெற்பில்
நற்பெருந்தவத்தளாய நங்கையைக் கண்டேன் அல்லேன்
இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்பதொன்றும்
கற்பெனும் பெயர தொன்றும் களிநடம்புரியக்கண்டேன்.

இவை இலங்கைபுகுந்து சீதையைக்கண்டுவந்து இராமன்பால் உணர்த்துங்கால் அனுமான் உரைத்தன. இக்கவிகளின் உள்ளுறைப்பொருள்களை ஊன்றி நோக்கின் இவனது நாநலத்தின் மேன்மை நன்குதோன்றும்.

நாநலம் என்னும் நலனுடைமையே எல்லாநலங்களுள்ளும் அமைச்சர்க்குச் சிறந்தது என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

நாநலமே எவற்றுள்ளும் மேலானது என்பது இதனால் கூறப்பட்டது.

---

642 என்றும் சோர் வின்றி இடவகனேன் சொல்லினைமுன்
குன்றாமல் காத்தான் குமரேசா = நன்றாகும்
ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. (உ)

இ—ள்

குமரேசா! தன் சொல்லின்கட் சோர்வு தோன்றாமல் இடவகன் ஏன் என்றும் போற்றி வந்தான் எனின், ஆக்கமும் கேடும் அதனால் வருதலால் சொல்லின்கட் சோர்வு காத்து ஓம்பல் என்க.

ஒன்றைச் சொல்லுங்கால் சோர்வுபடாமல் சொல்லவேண்டும் என்று இது சொல்லுகின்றது.

என்றும்=எக்காலத்தும்; இன்பம் இடர் முதலிய எவையடைந்த பொழுதும் என்றவாறு. உம்மை எஞ்சாமையை உணர்த்தி நின்றது. நன்மையின் பயனாய்த் தோன்றி எல்லா நலங்கட்கும் ஏதுவாய் நிற்றலால் நன்றாகும் என்பதை ஆக்கம் நயந்து நின்றது. அறுபதினாயிரம் ஆண்டு மாண்டுற, உறுபகையொடுக்கி இவ்வுலகையோம்பிய தசரத மன்னனும் தன் சொல்லாலேயே அல்லலடைந்தழிந்ததுபோல் ஆராயாது கூறிவிடின் தீராத பெருங்கேடு அதனால் சேர்ந்துவிடும் ஆதலால் சோர்வுறாமல் என்றும் அதனைத் தேர்ந்து காக்கவேண்டும் என்க.

அதனால் என்றது சொல்லால் என்றவாறு; காரணப் பொருளதாய இச்சுட்டுப் பெயரைச் சொல் என்னும் இயற்பெயர்க்குப் பின் நிறுத்தாமல் முன்னுறக் கூறியது என்னையெனின்; முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே என்னும் இயல் விதிக்கு இசைதர என்க.

காத்து ஓம்பல்=பாதுகாத்துப் போற்றுக; ஓம்பல் உடன்பாட்டு வியங்கோள். சோர்வு=மறதி, தளர்வு தவறு. தன் சொல்லில் தவறுபுகாவண்ணம் என்றும் கூர்ந்து ஓர்ந்து தெளிந்து அளந்து சொல்லுக என்பார் சொல்லின்கட் சோர்வு காத்து ஓம்பல் என்றார். வாய்கொண்டபடி சொல்லலாகாதென்பதாம். சொல்லில் சோர்வுதோன்றின் அதனால் எல்லாத் தீமைகளும் எய்தும் ஆதலால் காத்தல் என்றதோடு அமையாது ஓம்பல்

என மீண்டும் உறுதிபெற உரைத்தார். சொற்சோர்வுடைமையின் எச்சோர்வும் அறிப என்றது காஞ்சி சொற்சோர்வுபடேல் என ஔவையாரும்; சொல்லுங்கால் சோர்வின்றிச் சொல்லுதல் மாண்பினிதே எனப் பூதஞ்சேந்தனாரும் ஓதியுள்ளமை காண்க. திரைகடல் ஓடல் முதலிய பெரியமுயற்சிகளைச்செய்து அரிதில் எய்துதற்குரிய ஆக்கமும், மடியில் மிக இழிந்துகாணும்கேடும் சொல் ஒன்றானே ஒருவன் காணலாம் என்ற இதனால் அதன் இயல்பும் வன்மையும் இனிது காணப்படும். இக்காட்சி வாணிகத்துறையிலுள்ளவர்க்கு அடிக்கடி எளிதிற் புலனாம். கெடுப்பது எடுப்பது மழை வல்லது என்றதுபோல் இஃது ஈண்டு எண்ணநின்றது.

மேல், எல்லா நலங்களுள்ளும் சொல் நலமே சிறந்தது என்றார்; இதில், சோர்வுபடாமல் அதனைச் சொல்லுக என்றார்.

ஆக்கமும் கேடும் தம்சொல்லால் வரும் ஆதலால் அத்தகைய சொல்லின்கண் சோர்வுபடாதபடி அமைச்சர் போற்றிக் காக்கவேண்டும் என்பதாம்.

சொல்லால் எய்தும் நயபயங்களைச் சுட்டிக்காட்டி அதனைப் பாதுகாத்து ஒழுகும் விதத்தைப் பரிந்து கூறிய அடிகளது பெருங்கருணையை இதில் அறிந்து மகிழ்க.

சோர்வுறாது சொல்லி ஆக்கம் பெற்றார் கேகயன் சாங்கியன் முதலாயினார். சொல்லின்கட் சோர்வால் அல்லலுற்றவர் அரிச்சந்திரன், மாவலி, கும்பகருணன், மதுகைடவர், வலாரி முதலாயினார்.

நற்பால கற்றாரும் நாடாது சொல்லுவர்
இற்பாலர் அல்லார் இயல்பின்மை நோவதென்
கற்பால் இலங்கருவி நாடமற் றியாரானும்
சொற்சோர் விலாதாரோ இல்; என்ற இதனால் சொல்லின்கட்
சோர்வுபடாதவரது அருமையும் ஆண்மையும் இனிது புலனாம்.

சோர்தலில்லாத சொல்லாளரையே அமைச்சராக அரசன் கொள்ள வேண்டும் என்பது குறிப்பு.

தம் சொல்லில் சோர்வு புகாவண்ணம் அறிவுடையார் என்றும் காத்து ஒழுகுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இடவகன்பால் உணரப்படும்.

### கதை.

இடவகன் என்பவன் வச்சநாட்டிலே புட்பகம் என்னும் நகரிலிருந்தவன். அறிவு வீரம் அமைதி முதலிய உயர் குணங்கள் யாவும் ஒருங்கே

யுடையவன். அந்நாட்டு மன்னனாகிய உதயணனுக்கு மந்திரியாய் நின்று இவன் இசை திசை பரப்பிவந்தான். இவனது மதிமாட்சியையும் வினை மாட்சியையும் நோக்கி இன்னுயிர்த் துணைவனாக எண்ணி அம்மன்னன் இவன்பால் இன்புற்றிருந்தான். பகைவர்களால் நேர்ந்த இடையூறுகள் பலவற்றையும் நீக்கி அவ் அரசை இவன் இனிது பேணிநின்றான். அதனை நினைந்து நினைந்து அவன் நேயமீக்கூர்ந்தான்.

நெஞ்ச மகிழ்ந்து நீத்துமிக வுடைய
துன்பப் பெருங்கடற் றுறைக்கட் பொருந்திய
இன்பப் பெரும்புணை யாயினிர் எமக்கென
அன்புடை யருண்மொழி நன்புபல பயிற்றி

இன்புறத்தழுவி இவனை அவன் ஏத்திப் புகழ்ந்தான். தளராமல் நின்று தன் ஆட்சியை மாட்சிபெற இவன் போற்றிவந்தமைக்காக ஐம்பது சிறு நாடுகளையும், இருந்து ஆளுதற்குப் புட்பகம் என்னும் சிறந்த ஒரு நகரத்தையும், உதயணன் இவனுக்கு உவந்து தந்தான். அங்ஙனம் உதவியும் தானோர் அரசனாக விரும்பாமல் அமைச்சனாகவே நின்று யாதும் சோர்வுறாமல் அவனுக்குப் பேருதவிகள் செய்து பேணி வந்தான். தன் சொல்லினும் செயலினும் என்றும் சோர்வுறாமல் இவன் நின்று நிலவினான். இவனது சொல்வன்மையை வியந்து பகைவரும் புகழ்ந்தார். இடவகன் ஒரு சொல்லாடின் உலகமுழுவதும் அதனைத் தலைக் கொண்டாடும் என எங்கும் புகழ் இவன் இசைபெற்றிருந்தான். முன்னும் பின்னும் ஓர்ந்து தெளிந்து ஒரு சோர்வும் புகாமல் தன் சொல்லைக் காத்துவந்தானாதலால் ஆக்கம் பலவும் பெற்று அரசனாகி இவன் அமர்ந்திருந்தான். ஆக்கமும் கேடும் அதனால் வருதலால் சொல்லின்கட் சோர்வை மேலோர் காத்து ஓம்புவர் என்பதை உலகம் இவன்பாற் கண்டுதெளிந்தது. விரிவைப் பெருங்கதையில் காண்க.

சொல்லின்கட் சோர்வுபடலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

643 வென்றிச் சிவேதனேன் வேட்கையுறச் சொல்நலம்
குன்றாமல் ஓர்ந்தான் குமரேசா—நின்றுமுன்னே
கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல். (௩)

இ—ள்.

குமரேசா! எவரும் விழைந்து கேட்குமாறு சிவேதன் ஏன் இனிது சொல்லினன் எனின், கேட்டார்ப் பிணிக்கும் தகைஅவாய்க் கேளாரும் வேட்பமொழிவதாம் சொல் என்க.

வில்வலியாளராலும் வெல்லப்படாதவனைத் தன் சொல்வலியால் பிணித்துத் தோழமை கொண்டான் ஆதலால் வென்றி என்னும் அடை அவனை ஒன்றி நின்றது. நலம் குன்றாமல் ஓர்ந்தான் என்றது தன் அரசுக்கு நலம் பயக்கும் செயல் வகைகளை வழுவற ஆராய்ந்து தெளிந்தான் என்றவாறு. முன்னே நின்று=எதிரே விரும்பி நின்று.

கேட்டார்=அன்பாய்க் கேட்டவர்; அஃதாவது தான் சொல்வதை விருப்பமாக ஏற்றுக் கொண்டவர். தகை=அழகு, குணம், தகுதி. கேளார்=இன்புற்றுக் கேளாதார்; என்றது இனிதா ஏற்றுக் கொள்ளாதார் என்க.

உம்மை இறந்தது தழீஇயதோடு இழிவும் தோன்ற நின்றது.

தகை அவாய்=தகுதிகளை அவாவி; தன்னைக் கேட்டு நிற்பவரைப் பிணித்துக்கொள்ளும் குணங்களைப் பொருந்தி என்றபடி. அவாவுதல்—விரும்புதல், சார்தல். தகையனவாய் என்று கொண்டால் மொழிவது என்னும் ஒருமையோடு அஃது இயையாமை காண்க.
வேட்ப மொழிவது=விரும்பும்படி சொல்வது.

மேல், சொல்லிற் சோர்வுபடலாகாது என்றார்; இதில், எவரும் விரும்பும் வண்ணம் இனிதாகச் சொல்லுக என்கின்றார்.

விருப்பாய் ஏற்றுக் கொண்டவரைத் தன் வயப்படுத்தும் தகுதிகளைப் பொருந்தி, வெறுப்பாய் ஏற்றுக் கொள்ளாதாரும் விரும்பும் வண்ணம் சொல்வதே ஒருவனுக்குச் சொல்லாம் என்பதாம்.

தன் சொல்லை முன் நின்று கேட்டவர் உவகை மிக்கூர்ந்து அங்ஙனம் கேளாதவரிடம் போய்ச்சொல்ல, அவரும் விரும்பிவந்து கேட்குமாறு சொல்லுவதே ஒருவனுக்குச் சொல்லாம் எனவும் இது பொருள்படும். இனி, கேட்டார் என்றது நூற்பொருளைக் கேட்டாரெனக் கற்றவரையும், கேளார் என்றது அங்ஙனம் கேளாதவர் எனக் கல்லாரையும் குறிக்கும் எனினும் பொருந்தும்; ஆயினும் பொருட் சிறப்பில்லை.

இவன் சொல்வதை நாம் கேட்பதா? என முன் இகழ்ந்திருந்தவரும் பின் திரண்டுவந்து உவந்து கேட்கும்படி புத்தர் சொல்லியதுபோல் குணங்கள் பொருந்தச் சொல்லவேண்டும் என்றவாறு.

உறவினர் அயலவர் பகைவர் முதலிய எவரும் விழைந்து கேட்கும் வண்ணம் அழகுற மொழிய வல்லவரே அமைச்சராதற்கு உரியராவரென அதிகாரத்தோடு பொருந்த இதனை அமைத்து நோக்குக.

எவரும் விரைந்து ஏற்றுக் கொள்ளுமாறு இனிது சொல்லவல்லவரே அமைச்சருள் மிகச்சிறந்தவராவர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை சிவேதன்பால் உணரப்படும்.

## கதை.

சிவேதன் என்பவன் அவந்தி நாட்டிலே உச்சயினி என்னும் நகரில் இருந்தவன். அந்நாட்டு வேந்தனாகிய பிரச்சோதனனுடைய மந்திரிகளுள் ஒருவன். மிக்க மதிநுட்பமுடையவன். கலைகள் பலவும் வழுவறக்கற்றவன். சூழ்ச்சித்துறையில் தேர்ச்சிபெற்றவன். மதியோங்காட்சி மாமுது சிவேதன் எனத்தன் மன்னன் வாயால் வாழ்த்த நின்றவன். இன்சொல்லாளன். உறுதி பயப்ப இனிதுகூறும் இவனது அருமை மொழிகளைக் கேட்க யாவரும் விழைவர். பொல்லாதவராயினும் இவன் சொல்லைக் கேட்பின் நல்லவராகி இவன்பால் நயந்து நிற்பர். தனக்குப் பகைவனாய் நின்ற உதயணனை நட்பாக்கொண்டு தன் மகளை அவனுக்கு மனைவியாக உதவவிரும்பிய பிரச்சோதனன் அவ்வரிய வினையை இனிது முடித்து வருதற்குத் தகுதியானவன் இவனே என்று தெளிந்து அவன்பால் உய்த்தான். இவன் சென்று சிறையிலிருந்த அவனைக் கண்டான். வலையிலகப்பட்ட மடங்கலேறு போல் செற்றமிக்கூர்ந்து அமைய நோக்கி அடங்கியிருக்கும் அவனது நிலைமையை நுணுகி நோக்கி இன்முகத்தோடு போய் அணுகி நின்று இனிய உரைகள் பல பணிவுடன் மொழிந்து தன் அரசன் உள்ளியுள்ளதை அன்புற இவன் உணர்த்தி நின்றான். செறிவு தெளிவு இனிமை முதலிய நலங்கள் ததும்ப இவன் சொல்லியவற்றைக் கேட்டவுடனே உளங்களிகூர்ந்து உழுவலன்போடு இவனை அவன் தழுவி நின்றான். தன்பகைமையை யொழித்து நகைமுகத்தனாய் இவனுடன் நண்ணிவந்து அரசன் இசைவின்படியே இசைந்து மகிழ்ந்தான். பின்பு இவனையும் உடனழைத்துக் கொண்டு தன் நகரை யடைந்து அரிய வரிசைகள் பல உரிமையோடு செய்து அவன் உவந்து போற்றினன். கேளாதவனாய் நின்றதன்னையும் இவன் சொல்வலியால் ஈர்த்துக் கேளாக்கிவைத்த இவனது பான்மையையும் மேன்மையையும் வியந்து அரசன் முதலாக அனைவரும் புகழ்ந்தார். கேட்டார்ப்பிணிக்கும் தகையவாய்க்கேளாரும் வேட்ப மொழிவதாம்சொல் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து மகிழ்ந்தது. விரிவைப் பெருங்கதையில் காண்க.

சொல்லாவது இன்னது என்பது இதனால் கூறப்பட்டது.

644 தேர்ந்து வளவன் திறனறிந்து நாகனூர்
கூர்ந்து சொன்னார் என்னே குமரேசா—சார்ந்த
திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளும் அதனினூஉங் கில். (ச)

இ—ள்.

குமரேசா! தகுதிகளை இனி தறிந்து நாகனூர் என் உறுதிபெறச் சொல்லினார் எனின், சொல்லைத் திறன் அறிந்து சொல்லுக; அறனும் பொருளும் அதனின் ஊங்கு இல் என்க. அளபெடை இன்னிசை தரவந்தது

உறுதிப்பொருள்களை நுணுகித்தெளிந்து, தனது நிலையினையும் மன்னன் தகுதியையும் இனிதுஅறிந்து, அனைவரும் விழைந்து கேட்குமாறு உண்மையும், நுண்மையும், தண்மையும் பொருந்த உரைத்தாராதலால் தேர்ந்து, அறிந்து, கூர்ந்து சொன்னார் என்றாம்.

அறிந்து சொல்லுதலால் அறனும் பொருளும் உளவாம் என்றதனால் அறியாது சொல்லின் மறனும் வறுமையும் மருவும் என்பதாயிற்று.

திறன்—குணம், கூறுபாடு தகுதி. திறனறி கிளவியான் தேர்ந்தநூல் வலான்; என்றதும் ஈண்டு ஓர்ந்துகொள்க.

திறன் அறிந்து—திறங்களை அறிந்து; அஃதாவது தன்னுடைய நிலைமையையும் தன் சொல்லைக் கேட்பவருடைய தகுதிகளையும் உணர்ந்து என்க. என்றது கல்வி செல்வம் ஒழுக்கம் குடிப்பிறப்பு பருவம் உருவம் என்னும் இவற்றால் தனக்கும் அவர்க்கும் உள்ள ஏற்றத்தாழ்வுகளின் கூறுபாடுகளை இனிது அறிந்து என்றவாறு. இங்ஙனம் அறிவோரைத் திறவோர் எனவும் சான்றோர் எனவும் ஆன்றோர் கூறுவர். திறவோர் காட்சியிற்றெளிந்தனம்;எனக் கணியன்பூங்குன்றனாரும், திறவோர் புகழ்ந்த திண்ணன்பினனே; எனப் பொத்தியாரும், புறத்தில்புகன்றுள்ளமை காண்க.

அதனின் ஊங்கு—அங்ஙனம் சொல்லுதலினும் மேம்பட்ட. ஊங்கு என்பது முன்னிலையிடத்தையும் உயர்வையும் உணர்த்துவதோர் இடைச்சொல். அறனும் பொருளும் அதுவேயாம் என்னாது அதனின் ஊங்கு இல் என்றார் இன்மை முகத்தால் உண்மை மிக உறுதிபெறுதல் கருதி.

மேல், எவரும் விரும்பும் வண்ணம் இனிதாகச் சொல்லுக என்றார்;

இதில், யாண்டும் தகுதியறிந்து கூறுக என்கின்றார்.

தன் சொல்லைத் தகுதியறிந்து சொல்லுக; அங்ஙனம் சொல்லுதலே ஒருவனுக்கு அறனும் பொருளும் ஆகும் என்பதாம்.

சொல்லைத் திறன் அறிந்து சொல்லுக என்றவுடனே அங்ஙனஞ் சொல்லுதலால் வரும்பயன் யாது என வினவ அவரைநோக்கி இஃது ஓதியதாகக் காண்க. முன்னது விதி; பின்னது அவ்விதிவழியொழுகினோர் எய்தும் பயன் என்க.

இம்மை மறுமை என்னும் இருமையினும் பெருமை எய்தற்குரிய பொருள் அறங்களைத் திறனறிந்து சொல்வோர் எளிதில் எய்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நாகனார்பால் உணரப்படும்.

## கதை.

நாகனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ச் சோழமண்டலத்திலே வெள்ளைக்குடிஎன்னும் ஊரிலேயிருந்தவர். பல நூல்களையும் தெளிவுறப் பயின்று புலமை நிறைந்தவர். மரபில் இவரை மறவர் என்பர். வேளாளர் எனவுங் கூறுவர். இவர் நல்ல சீலமுள்ளவர். சொல்வன்மையிற் சிறந்தவர். அரசராயினும் அடியவராயினும் நடுநிலை பிறழாமல் உண்மையை உறுதிபெற உரைக்கும் திண்மையாளர். எதையும் நுணுகி யுணர்ந்து இனிது கூறும்இவரது தகுதியை வியந்து அந்நாட்டிலுள்ளார் எவரும் இவரை நயந்து போற்றினர். வல்வழக்கையே தமக்கு வெல்வழக்காக விழைந்து திரியும் புல்வழக்குடையாரும் இவர் சொல்வழியொழுகினர். வெள்ளைநாகன் சொல்லை வெல்லவல்லார் இல்லை என்று எங்கும்இவர் விளங்கிநின்றார். புலவராயிருந்தும் பரிசில்வாழ்க்கையை மேற்கொள்ளாமல் உழவுத் தொழிலையே விழுமிதாக் கொண்டு இவர் உவந்து வாழ்ந்தார். ஒரு காலத்தில் மழைபெயலின்மையால் அந்நாட்டில் நிலவளங்குறைந்தது. அதனால் அரசனுக்கு இறை செலுத்த இயலாமல் குடிகள் அலமரலுற்றனர்; அக்காலத்தில் அரசுபுரிந்திருந்த குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்னும் சோழ மன்னனிடம் இவர்போய் நாட்டின் நிலையை ஒருபாட்டில் அமைத்து நன்கு சொல்லினர். அதனைக் கேட்டவுடனே அம்மன்னன் பெருமகிழ்வுகொண்டு இவரது நாநலத்தையும் பாநலத்தையும் நயந்து புகழ்ந்தான். நிலுவையாய் நின்ற நிலவரியனைத்தையும் நீக்கிவிடுத்து அமைச்சராக இவரை அவன் அணைத்துக் கொண்டான். தகுதியறிந்து கூறும் இவரது உறுதிமொழிகளால் அறம்பலபுரிந்து அவன் சிறந்து விளங்கினான். இவரும் பெரும் பொருளுடையராய் உயர்ந்து நின்றார். திறன் அறிந்து சொல்லுக சொல்லை அறனும் பொருளும் அதனினூஉங்கு இல்லை என்னும் உண்மையை உலகம் காணஇவர் உணர்த்தி நின்று உரைவன்மையில் உயர்ந்து விளங்கினர். இவரது நாவின் நலத்தை அடியில்வரும் பாவிற்காண்க.

நளியிரு முந்நீர் ஏணியாக
வளியிடை வழங்கா வானஞ்சூடிய
மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்
முரசுமுழங்கு தானை மூவருள்ளும்
அரசெனப் படுவது நினதே பெரும
அலங்குகதிர்க் கனலி நால்வயின் தோன்றினும்
இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்
அந்தண் காவிரி வந்துகவர் பூட்டத்
தோடுகொள் வேலின் தோற்றம் போல
ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்
நாடெனப் படுவது நினதேயத்தை, ஆங்க
நாடு கெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே
நினவகூறுவல் எனவ கேண்மதி
அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து
முறை வேண்டு பொழுதிற் பதன் எளியோர் ஈண்டு
உறைவேண்டு பொழுதிற் பெயல் பெற்றோரோ
ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயின் மறைக் கொண்டன்றோ அன்றேவருந்திய
குடிமறைப்பதுவே கூர்வேல் வளவ!
வெளிற்றுப் பனந் துணியின் வீற்றுவீற்றுக்கிடப்பக்
களிற்றுக் கணம் பொருத கண்ணகன் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
யூன்று சால் மருங்கின் ஈன்றதன் பயனே
மாரி பொய்ப்பினும் வாரிகுன்றினும்
இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்
காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகன் ஞாலம்
அது நன்கு அறிந்தனை யாயின் நீயும்
நொதுமலாளர் பொது மொழி கொள்ளாது
பகடு புறந்தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறந் தருகுவை யாயின் நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே. (புறம்)

இது வளவனிடம் இவர் கூறியது. அரசனது தகுதியை நன்கு தேர்ந்து காலம் ஓர்ந்து யாவரும்வியந்து கொள்ளுமாறு உறுதியை இனிது சொல்லிய இவரது ஒண்மையும், அதனால் எய்தியநன்மையும், மேற்குறித்தவுண்மையும் பிறவும் இதனால்இனிது புலனும்.

திறனறிந்து சொல்லின் அதனால் அறனும் பொருளும் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

645 எள்ள இடமின்றி ஏனோதொல் காப்பியனார்
கொள்ள மொழிந்தார் குமரேசா—உள்ளிநின்று
சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை யறிந்து. (ரு)

இ—ள்

குமரேசா! பிறர் எள்ளி வெல்லுதற்கு இடமின்றித் தொல்காப்பியனார் என் முன் இனிது சொல்லினார் எனின், பிறிது ஓர் சொல் அச்சொல்லை வெல்லும்சொல் இன்மை அறிந்து, சொல்லைச் சொல்லுக என்க.

அறிந்து சொல்லுக என அமைத்து நோக்குக.

தம் சொல்லில் குற்றங்கூறிவிடவேண்டுமென்று சூழ்மி நின்றும் அவர்க்கு அது கூடவில்லையாதலால் எள்ள இடமின்றி என்றும், தம் சொல் வென்றியுடையதாய் நின்று நிலவுமாறு நன்றாக நிலைத்து ஆராய்ந்து கூறினார் ஆதலால் உள்ளி நின்று என்றும், உரைக்க நின்றார்.

அதங்கோட்டாசான் முதலிய அறிஞரனைவரும் உவந்து கொள்ளுமாறு உரைத்து நின்றார் ஆதலால் கொள்ளமொழிந்தார் என்றார்.

பிறிது ஓர் சொல்=மற்றவர் கூறும் மாற்றுச் சொல். அச் சொல் என்றது தான் சொல்லக் கருதிய அச்சொல்லை என்றவாறு.

வெல்லும் சொல்=வெல்லவல்லசொல். வினைத்தொகை. அரசர்பெருமானாகிய இராமன், தோலாவென்றியனாய் வில்வலியில் விளங்கி நின்றது போல், சொல்வலியில் அமைச்சர் சிறந்திருக்கவேண்டுமென்பார் வெல்லும் சொல் இன்மையறிந்து சொல்லைச் சொல்லுக என்றார்.

யாண்டும் வழுவுறாமல் விழுமிதாகச் சொல்லுதலைத் தனக்கு இயல்பாக அமைச்சன் உடையனாயின் அவனையுடைய அரசன் எவராலும் வெல்லப்படாதவனாய் உலகமுழுவதும் ஒருங்கே கொண்டு உயர்ந்து விளங்குவான்

என்ற உசன தந்திரமும் ஈண்டு உள்ளத்தக்கது. பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுந் செல்வர்க்கு, மதிமொழி யிடன்மாலை வினைவர்போல் வல்ல வர் என்றது கலி. அரசன், அமைச்சன் என்னும் இருவர்க்கும் இயல்பாக விளக்கியுள்ள உரிமைகளை இதில் உய்த்துணர்க.

மேல், தகுதியறிந்து சொல்லுக என்றார்; இதில் யாண்டும் தலைமை பெறச் சொல்லுக என்கின்றார்.

தன் சொல்லை வெல்லவல்லதாய் வேறோர் சொல் இல்லாதபடி உணர்ந்து அமைச்சன் சொல்லைச் சொல்லவேண்டும் என்பதாம்.

இனி, பிறிது ஓர் சொல்லும், வெல்லும் சொல்லும் இல்லாதவாறு உன் சொல்லைச் சொல்லுக எனவும் இது பொருள்படும்; அஃதாவது ஒப்புயர் வற்றதாய் என்றும் உயர்ந்து நிற்கும் சொல்லைச் சொல்லுக என்றவாறு.

தன் சொல்லை வெல்லவல்லார் எவரும் இல்லையென்னும்படி அமைச்சர் விளங்கி இருக்கவேண்டும் என்பது கருத்து.

உண்மை திண்மை நுண்மை தண்மை முதலிய நன்மைகள் யாவும் பொருந்திய சொல்லே யாண்டும் வெல்லும் சொல்லாம்; அத்தகைய சொல்லையுடையவரே அரசர்க்குத் துணைசெய்ய வல்லவராவர் என்பது குறிப்பு.

எவரும் வியந்து போற்றுதற்குரிய சிறந்த சொல்லையே உயர்ந்தோர் சொல்லுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தொல்காப்பியர்பால் உணரப்படும்.

## கதை.

தொல்காப்பியர் என்பவர் சமதக்கினி முனிவருடைய அருமைப் புதல்வர். பரசுராமருடன் பிறந்தவர். திரணதூமாக்கினியென்பது இவரது இயற்பெயர். இவரதுகாலம் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னராம். இவர் நுண் மாண் நுழை புலமுடைய புண்ணிய வடிவினர். அருந்தவத்திற் சிறந்த அகத்தியமுனிவரிடம் இவர் அமர்ந்திருந்து கற்றவர். அதங்கோட்டாசான் துராலிங்கன் செம்பூட்சேய் வையாபிகன் வாய்ப்பியன் வாமனன் கழாரம்பன் அவிநயன் காக்கைபாடினியன் நற்றத்தன் பனம்பாரன் என்னும் இப்பதினொருவரும் இவர்க்குப் பள்ளித் தோழராவர். அவரனைவரினும் அறிவிலும் நிறையிலும் இவர் பெரியவராயினர்.

வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்கு விளக்காகென
வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புகழ்
ஆனாப் பெருமை அகத்தியன் என்னும்

அருந்தவ முனிவன் ஆக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப புரைதப உணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப்பியா; எனப்பல்

லோர் புகழும் பான்மையுடையராய் எல்லாக் கலைகளிலும் இவர் வல்லுநரா யினர். அதன்பின் அமிழ்தினுமினிய நம் தமிழ்மொழிக்கு விழுமிதாக ஓர் இலக்கண நூலை இவர் விளங்கச் செய்தனர். திட்பமும் நுட்பமும் ஒட்ப முமுடைய அந்நூல் தொல்காப்பியம் என இவர் பெயரால் வழங்கப்படு கின்றது. அதனை முடித்துக் கொண்டு சயமாகீர்த்தி என்னும் பாண்டிய மன்னனுடைய அவையில் இவர் அரங்கேற்றத் துணிந்தபொழுது அங்குக் குழுமியிருந்த புலவர் பலரும் இவர் சொல்வனவற்றுள் ஏதாவது ஒன்றை யேனும் மறுத்துவிடவேண்டுமென்று எதிர்த்து நின்றார். இடையிடையே எதிர்மொழி தந்தார். அவர் நிகழ்த்திய தடைகளனைத்தையும் கிடைகொ ளச் செய்து இவர் கிளர்ந்து மொழிந்தார். அவருள் முதல்வராய் நின்ற அதங்கோட்டாசான் என்பவர் ஆனவரையும் பார்த்து இவர் சொல்லை வெல் லமுடியாமையால் பின் வியந்து துதித்தார்.

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத், தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச்
செந்தமிழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத்தோனே போக்கறு பனுவல்
நிலந் தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற்கு அரில் தபத்தெரிந்து
மயங்கா மரபின் எழுத்து முறைகாட்டி
மல்கு நீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமையோனே; என்று

பனம்பாரனர் முதலாக அனைவரும் புகழ்ந்து இவர் அடிதொழுது நின்றார். இவர் ஒன்று சொல்லின் அது வேதவாக்கே என வியந்து போற்றினர்.

வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்
வான் யாறு அன்னதூய்மையும் வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்படர் ஒழுக்கமும்

திங்களன்ன கல்வியும் திங்களொடு
ஞாயிறன்ன வாய்மையும் யாவதும்
அஃகா அன்பும் வெஃகா வுள்ளமும்
துலைநா வன்ன சமனிலை யுளப்பட
எண்வகை யுறுப்பின ராகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையும் தாளாண்மையும்
உலகியல் அறிதலும் நிலைஇய தோற்றமும்
பொறையும் நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவும் உருவும் ஆற்றலும் புகழும்
சொற்பொருள் உணர்த்தும் சொல்வன்மையும்
கற்போர் நெஞ்சங் காமுறப் படுதலும்
இன்னோர் அன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பின் நல்லா சிரியர். எனத்

தொல்லோர் சொல்லிய மாட்சிகளெல்லாம் ஒருங்கே மருவப் பெற்று எங்கும் வெல்லும் சொல்லராய் இவர் விளங்கியிருந்தார். இவரது சொல்வன்மையை வியந்து ஆசிரியர் அகத்தியனாரும் அன்பு மீக்கூர்ந்தார். சொல்லுக சொல்லைப் பிறிது ஓர் சொல் அச்சொல்லை வெல்லுஞ் சொல் இன்மையறிந்து; என்னும் உண்மைக்கு இவரோர் உறையுளாய் நின்றார்.

வெல்லவல்ல சொல்லையே யாண்டும் சொல்லவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

646 அன்றெவரும் வேட்கையுற ஆந்தையார் சொல்லிநலங்
குன்றாதேன் ஓர்ந்தார் குமரேசா—நின்றவர்முன்
வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள். (சு)

இ—ள்.

குமரேசா! ஆந்தையார் எவரும் விரும்பும் வண்ணம் சொல்லிப்பிறருடைய சொல்லின்பயனை என் நுணுகி அறிந்துகொண்டார் எனின், வேட்பத் தாம்சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல், மாட்சியின் மாசு அற்றார் கோள் என்க.

அரசன்முதலாக அவையிலிருந்தாரனைவரும் விழைந்து கேட்குமாறு கூறி, தன்னை வினவினாரது சொல்லின் பயனைக்குறிப்பால் உணர்ந்து கொண்டார் ஆதலால் வேட்கையுறச் சொல்லி நலம் குன்றாது ஓர்ந்தார்; என்றும்.

வேட்பத்தாம்சொல்லி = எவரும் விரும்பும் வண்ணம் தாம்இனிது சொல்லி. விருப்பம் என்பதை யுணர்த்திவரும் வேள் என்னும்வினைப்பகுதி பகரவிகுதி பெற்றுவேட்பஎன நின்றது. வேள்வி விறல் வேந்தன் தான் வேட்ப; என்ற இதில் விரும்ப என்னும் பொருளில் அது விளங்கிநிற்றல் காண்க.

கோடல் = கொள்ளுதல்; உணர்ந்து கொள்ளுதல் என்றவாறு. கொள் என்னும் பகுதி முதல் நீண்டு தல்விகுதி கொண்டு சந்திபெற்றுக் கோடல் என நின்றது.

மாசுஅற்றார் கோள் = குற்றமற்றோரது குறிக்கோள். கோள் = கொள்கை, இயல்பு, குணம், துணிவுகளை உணர்த்திவரும். கோள் கருதும்; என்ற வெண்பா மாலையில் இதன் பொருளைக் குறித்துக்காண்க.

தாம் கருதியதைவிழுமிதாகப் பிறர்க்கு இனிது கூறலும்; கூறஅறியாது குளறுபடையாகப் பிறர் உளறினும் அவர் கருத்தைக் குறிப்பாலுணர்ந்து கொள்ளுதலும் சிறந்தமதிமான்கட்கு இயல்பாம் என்பார் சொல்லிக் கோடல் மாசு அற்றார் கோள் என்றார்.

சொல்லியக்கால் சொல்லின் பயன்காணும் தான்பிறர்
சொல்லிய சொல்லை வெலச் சொல்லும் பல்லார்
பழித்தசொல் தீண்டாமற் சொல்லும் விழுத்தக்க
கேட்டார்க்கு இனியவாய்ச் சொல்வானேற் பூக்குழலாய்
நல்வயலூரன் துஞ்சாது அணியகலம்
புல்லலின் ஊடல் அரிது. என்றது தகடூர். இதில் அடிகளது

பொருளும் சொல்லும் பலபொருந்தியுள்ளமை காண்க.

எவரும் விரும்பிக் கேட்குமாறு தாம் இனிது சொல்லி; பிறர்தவறுபடச் சொல்லினும் அச்சொல்லின்பயனை ஓர்ந்து கொள்ளுதலே சான்றோருள் குற்றமற்றோரது குணமாம் என்பதாம்.

எச்சொல் எத்தன்மைத்தாயினும் அச்சொல்லின் மெய்ப்பொருளை ஓர்ந்து கொள்ளும் ஒண்மையும் பகைவரும்விழைந்து கேட்கும்படி தெளிவாக இனிது சொல்லும் வன்மையும் அமைச்சனாக உள்ளவனுக்கு உண்மையாக அமைந்திருக்கவேண்டும் என்பது கருத்து.

நல்லாவின் பாலின் நறுந்தேன் கலந்தென்னப் பன்னூல்
வல்லாருமாகி மதிநுட்பரு மாகிச் சோர்வில்
சொல்லால் அடையார் மனமும் களிதூங்கச் சொல்லிப்
பல்லார் பிறர்சொற் பயன் ஆய்ந்துநுகரவல்லார். என அமைச்சர்

இயல்பைக் குறித்துப்பரஞ்சோதி முனிவர் அருளியுள்ளதும் ஈண்டு அறியத்தக்கது.

எதையும் அழகுபெற இனிது சொல்லிப் பிறர்கூறும் வழுவுரைகளின் கருத்துக்களையும் நுணுகியுணர்ந்து கொள்வோரே உணர்வுடையாருள் உயர்ந்தவராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆந்தையார்பால் உணரப்படும்.

## கதை.

ஆந்தையார் என்பவர் பாண்டிநாட்டிலே பிசிர் என்னும் ஊரிலேயிருந்தவர். ஊரையும் பேரையும் இணைத்துப் பிசிராந்தையார் என இவரை யாவரும் அழைப்பர். பெருந்திருவுடையவர். சிறந்த கல்வி தெளிந்த சீலம் நிறைந்த அமைதி முதலிய உயர்ந்த நலங்கள்யாவும் ஒருங்கே வாய்ந்தவர். இவரதுகாலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னராம். இவர் இல்வாழ்க்கை மிகவும் இன்பமுடையது. இவரது இனிய மனைவியார் பெயர் புனிதவதியார் என்பர். அவர், பொறையும் அறிவும் பொற்பும் கற்பும், நிறைபெருங்குணங்கள் பிறவு முடையவராதலால் இவர் கவலையாது மின்றித் தலைமையோடு வாழ்ந்தார். அருங்கலைவினோதராய் அரிய கவிகளை எளிதில் பாடவல்லவராய் விளங்கியிருந்தார். இவரது கல்விநலத்தையும் சொல்வளத்தையும் தெரிந்து முடியுடைமன்னர் மூவரும் இவர்பால் பெருநண்புகொண்டிருந்தார். இவர் செயல்களும் மொழிகளும் மிகப்புனிதமானவை. கல்வியறிவில்லாரும் இவர் சொல்வதைக் கேட்க மேலும் மேலும் வேட்கையுற்று நிற்பர். அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த அறிவுடை நம்பி என்னும் பாண்டியமன்னன் ஈண்டிய கேள்வியுடைய இவரை வேண்டியழைத்துத் தன்னோடு உடன்வைத்துக் கொண்டு இவர் கூறும் உறுதிமொழிகளைக் கேட்டு உவந்து வந்தான். வருங்கால் ஒருநாள் அரசனுக்கு நெருங்கிய சுற்றத்தார் இருவர் வந்து நம்நாடு மிகச் செழித்துள்ளது குடிகளிடம் இறைப்பொருளை அதிகமாக வாங்கவேண்டும் என்று அரசனிடம் உரைத்தார். உடனிருந்த இவர் நகைமுகத்தராய் அரசன் முகமெதிர்ந்து நோக்கினார்;

காய்நெல் லறுத்துக் கவளம் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறு செறு வாயினும் தமித்துப் புக்குணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடு பெரிது நந்தும்
மெல்லியன் கிழவனாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு

பரிவுதப எடுக்கும் பிண்ட நச்சின்
யானைபுக்க புலம் போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே. என

உறுதியும் அருளும் நிலைபெற மொழிந்தார். மா என்னும் அளவினும் குறைந்த நிலமாயினும் முறையோடு நின்று உண்ணின் அதில் விளைவதை யானை நெடுநாள் உண்ணலாம்; அது புகுந்து உண்டால், நூறு வேலியளவு பெரிய நிலமாயினும் வறிதே பாழ்படும்; அதுபோல் அரசன் முறைமீறி வரிவாங்கப் புகின் உலகம் கெடுவதோடு அவனுக்குப் பழியுமாகுமென அழகுற இவர் அருளியுள்ளதை அவ்வேந்தன் விழைந்து கேட்டு வியந்து புகழ்ந்து இவர் சொல்லின் வழியே நடந்து எல்லாவுயிர்கட்கும் இன்பு செய்து வந்தான். உறையூரிலிருந்து அரசுபுரிந்த கோப்பெருஞ் சோழன் என்னும் மன்னன் இவரது குணநலங்களைக் கேள்வியுற்றுத் தன் இன்னுயிர்த் துணைவராக இவரை எண்ணியிருந்தான். இவர் ஒருநாள் ஆங்கு அடைந்தபொழுது அம்மன்னன் தழுவி மனமுருகி நின்றான். அவனைச் சூழ்ந்திருந்தவர் இவரை ஆழ்ந்து நோக்கினர். இவர் மிகவும் முதியராயிருந்தும் அப்பருவத்துக்குரிய நரை திரை முதலியன யாவும் இன்றி இளமைப் பொலிவோடு எழிலுற விளங்கி நிற்றலை வியந்து மகிழ்ந்தார். அதன் உண்மையை உணர விழைந்தார். "புலவீர்! ஆண்டுகள் பலவாகியும் முழுமதிபோல் அழகுற நீர் நிலவியிருத்தற்குக் காரணம் யாது"? எனக் கருதி வினவினர். அவர்தம் உள்ளக் குறிப்பை ஓர்ந்துகொண்டு உடனே ஒரு பாடலால் இவர் இனிதாக விடை பகர்ந்தார். அதனை இதன் அடியில் காட்டுதும். அதன் பொருளை ஆய்ந்து காண்க.

யாண்டு பலவாக நரையில வாகுதல்
யாங்காகிய ரென வினவுதி ராயின்,
மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்;
யான் கண் டனையர் என் இளையரும்; வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும் அதன் தலை;
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழுமூரே. (பிசிராந்தையார்.)

இதனைக் கேட்டவுடனே அவர் அடைந்த உவகைக்கு அளவேயில்லை. எவரும் விரும்பும் வண்ணம் இனிது சொல்லி, எதையும் நுணுகியுணர்ந்து கொள்ளுகின்ற இவரது மாட்சியை வியந்து அனைவரும் போற்றிப்புகழ்ந்தார். வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல் மாட்சியின் மாசற்றார் கோள்; என்னும் உண்மைக்கு இவரோர் உறையுளாய் நின்றார்.

இவரது மனநலம், இனநலம், மனைநலம், உடல்நலம், உணர்வுநலங்கள்யாவும் மேற்குறித்த இவர் உரைநலங்களால் உணரலாம். விரிவைப் புலவர் மான்மியத்தில் காண்க.

நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலும்; நூற்கேலா
வெண்மொழி வேண்டினுஞ் சொல்லாமை;—நன்மொழியைச்
சிற்றின மல்லார்கட் சொல்லலும்; இம்மூன்றும்
கற்றறிந்தார் பூண்டகடன். (திரிகடுகம்)

எதையும் நுணுகியறிந்து இனிதுசொல்லவேண்டும் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

647 உற்றமொழி வல்ல உருமணனை வெல்லவந்தும்
குற்றமுற்றேன்மீண்டார் குமரேசா—முற்றச்
சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சா னவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது. (எ)

இ—ள்.

**குமரேசா!** சொல்லவல்ல உருமணனை வெல்லவந்தும்முடியாமல் ஏன் வெள்கிப் போனுர் எனின், சொலல்வல்லன், சோர்வுஇலன், அஞ்சான், அவனை இகல் வெல்லல் யார்க்கும் அரிது என்க.

இது, சொல்வன்மையுடையானை எவரும் வெல்ல முடியாதென்கின்றது.

உற்றமொழி = பொருள்பொதிந்த சொல். பிரச்சோதனன் உறவினர் மாறுபாடாகவந்து இவனை வெல்லக்கருதியும் முடியாமல் வெள்கிமீண்டார் ஆதலால் குற்றமுற்று மீண்டார் என்றேம்.

இகல் = வலி, போர், மாறுபாடு. இகலோடு செற்றம்நீங்கிய மனத்தினர்; என்முர் கீரனுர். இகல் மிகநவின்று; என்றது பரிபாடல்.

யார்க்கும் என்றது அறிவு ஆற்றல்களில் எத்துணைச் சிறப்புடையராயினும் என்றவாறு. உம்மை முற்றுப் பொருளது.

சொல்லுதலில் வல்லனுயினும் சோர்வுடையனுயின் அவ்வன்மை பயன்படாதாதலால் அதனை அடுத்துச் சோர்வின்மையும், அவ் இரண்டும் உடையனுயினும் அச்சம் இருந்தால் பேடிகை வாள் போல் அவை பீடுபெறு ஆதலால் அஞ்சாமையும் அதன் பின் எஞ்சாமல் கூறினுர்.

சொல்வன்மை சோர்வின்மை அஞ்சாமை என்னும் இம் மூன்று குணங்களையும் தனக்கு உடைமையாகக் கொண்டுள்ள அமைச்சனைச்சொற்போர் விளைத்தோ, பேதித்தல் முதலிய சூழ்ச்சிகளை இழைத்தோ, எவரும் மாறுபாடாய் நின்று வென்றுவிட முடியாதென்பார் அவனை இகல் வெல்லலயார்க்கும் அரிது என்றார்.

மேல், இன்சொல்லோடு நுண்புலமுடையனாய் அமைச்சன் இருத்தல் வேண்டும் என்றார்; இதில், சோர்வின்மையும் அஞ்சாமையும் அவனுக்கு என்றும் எஞ்சாமல் வேண்டும் என்கின்றார்.

சொல் வல்லனாய்ச் சோர்வுஇல்லனாய் அஞ்சாதவனாய் ஒருவன் இருப்பானாயின் அவனைப்பேதித்து வெல்ல யாருக்கும் முடியாது என்பதாம்.

சொல்வன்மையும் சோர்வின்மையுமுடைய அமைச்சனை வஞ்சஞ்செய்து எவரும் வெல்லமுடியாதென்பது கருத்து.

அஞ்சாமையும்சோர்வின்மையுமுடைய அங்கதனை வஞ்சமாகப் பிரித்துத் தன வசஞ்செய்ய விரும்பி,

அந்நரர் இன்றுநாளை யழிவதற்கு ஐயமில்லை
உன்னரசு உனக்குத் தந்தேன் ஆளுதி ஊழிகாலம்
பொன்னரி சுமந்தபீடத் திமையவர் போற்றிசெய்ய
மன்னவனாக யானே சூட்டுவன் மகுடம் என்று இராவணன்

சூழ்ச்சியோடு பேதித்துச் சொல்லியபொழுது;

வாய்தரத் தக்கசொல்லி என்னையுன் வசஞ்செய்வாயேல்
ஆய்தரத் தக்கதன்றோ தூதுவந்து அரசதாள்கை
நீதரக் கொள்வேன்யானே இதற்கினி நிகர்வே றெண்ணின்
நாய்தரக் கொள்ளும் சீயம் நல்லரசு என்று நக்கு; இகழ்ந்து விட்டு அங்கதச்சிங்கம் எழுந்து செல்ல அவன் இழிந்து நின்றது போல் சொல்வல்லவனை வெல்லக்கருதியவன் அதுமுடியாமை கண்டு வெள்கிநிற்பன் என்க.

சொல்வன்மை சோர்வின்மை அஞ்சாமை என்னும் இக்குணங்களையுடையவனே அமைச்சனாவான் என்பதும், அவனை எவரும் வஞ்சிக்கமுடியாதென்பதும், குன்றாவென்றியனாய் என்றும் அவன் நின்று விளங்குவான் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை உருமண்ணுவாவின் பால் உணரப்படும்.

## கதை.

உருமண்ணுவா என்பவன்வத்தவ நாட்டிலேசௌசாம்பி என்னும் நகரில் இருந்தவன். இவனது காலம் இற்றைக்கு இரண்டாயிரத் தெழு

நூறு ஆண்டுகட்கு முன்னராம். இவன் அரியநூல்கள்பலவும் ஆய்ந்தவன். பெரியபோரவீரன். அந்நாட்டு மன்னனாகிய உதயணனுக்கு மந்திரியாயிருந்து ஆட்சியை மாட்சிபெறப் போற்றிவந்தவன். தன் உயிரினும் இனியனாக அவ்அரசனை இவன் எண்ணியிருந்தான். அறிவு அன்பு அமைதி பண்பு செறிவு நிறை முறை பொறைமுதலிய உயர்குணங்களெல்லாமொருங்கேயுடையவன். யாண்டும் சோர்வில்லாதவன். மிக்கசூழ்ச்சியோடு நின்று பகைவர்கள் செய்து வந்த இடையூறுகள் எல்லாவற்றையும் ஒழித்துத் தன் அரசைக்காத்தவன். இவன், வில்வன்மையில் சிறந்தவனாயினும் தன் சொல்வன்மையானேயே உறுபகையடக்கி உயர்புகழ்பெற்றான். எத்துணைத்தீயவராயினும் இவன் முகநோக்கி நின்று ஒருமொழி கேட்பராயின் பின்பு இவன் வழிநோக்கி நிற்பர். அஞ்சாமல் நின்று அரியகாரியங்களையும் எளிதில் முடித்து வந்த இவனது அறிவு ஆற்றல்களை வியந்து தன் மார்புற இறுகத் தழுவிப் புகழ்ந்து பலவரிசைகளையும், மேலானவருவாய்களையுடைய பல ஊர்களையுமுதவி நால்வகைச் சேனைகளையும் மன்னன் இவனுக்கு நயந்து தந்தான். அதன்பின் தனது இனிய மனைவியாகிய இராசனையோடு சயந்திநகரிலமர்ந்து அரியபோகங்களை நுகர்ந்து அரசபதவியை இவன் அடைந்திருந்தான்; ஆயினும், அம்மன்னனுக்கு இன்னுயிர்த்துணைவனாய் நன்னயஞ்செய்து வந்தான். இவனை இகலிவெல்ல எண்ணியிருந்த பகைவர் இவனது சொல்வன்மை சோர்வின்மை அஞ்சாமை முதலியவற்றைக் கண்டு அஞ்சி யாதும் பலியாமல் அடங்கி நின்றார். சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை, இகல் வெல்லல் யார்க்கும் அரிது என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. விரிவைப் பெருங்கதையில் காண்க.

உவகையின் மகிழ்ந்தாண் டுறையுங் காலை
உயர்பெருந் தோல்சீர் உருமண் ணுவாவிற்கு
எழுநா டோறு முழுநகர் புகழப்
படிவ முத்தீக் கடிகைக் கணனும்
ஐம்பெருங் குழுவும் அத்தி கோசமும்
மன்பெருஞ் சிறப்பின் மனைப்பெருஞ் சனமும்
தேனேர் தீஞ்சொற் றேவி மார்களும்
தானையுஞ் சூழத் தானே யணிந்துதன்
நாம மோதிரம் நன்னாட் கொண்டு
சேனாபதியவன் ஆகெனச் செறித்துப்
பன்னூறாயிரம் பழுதின்று வருவன
மன்னூர் வேண்டுவ மற்றவற் கீத்துக்

குதிரையுந் தேருங் கொலைமருப் பியானையும்
எதிரிய சிறப்போ டெனைப்பல நல்கிப்
பண்பார் சாயற் பதுமாபதிதன்
கண்போல் தோழி காண்டகு காரிகை
இயைந்த வேற்கண் இராசனை யென்னும்
வயங் கிழை யாதரொடு வதுவை கூட்டிப்
பெருங் கடிச் சிறப்பும் பெயர்த் தொருங் கருளி
இருங்கடல் வரைப்பின் இசையொடு விளங்கிய
சயந்தியம் பதியும் பயம்படு சாரல்
இலாவா ணகமும் நிலாவ நிறீஇக்
குரவரைக் கண்டவர் பருவரல் தீர
ஆண்டினி திருந்து யாம் வேண்ட வருகென.

இது, சொல்வல்லனாய் நின்று தனக்குத் துணைபுரிந்துவந்த உருமண்ணுவாவுக்கு உதயண வேந்தன் உதவியவெகுமதிகளைக் குறித்துக் கொங்கு வேளார் கூறியது. இவனது தன்மையும் மேற்குறித்த உண்மையும் பிறவும் இதனால் இனிது புலனாம்.

சொல்வன்மையுடையானை மாறுபாடாக யாரும் வெல்லமுடியாது என்பது இதனால் கூறப்பட்டது.

---

648 வெள்ளிமொழி கேட்டவுடன் வேலசுரர் மேல்விரைந்து
கொள்ளநின்றார் என்னே குமரேசா—துள்ளி
விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். (அ)

இ—ள்

**குமரேசா!** சுக்கிரன் சொல்லை அசுரரெல்லாரும் விரைந்து கேட்டு அதின்படி என் விழைந்து நடந்தார் எனின், நிரந்து இனிது சொல்லுதல் வல்லார்ப் பெறின், ஞாலம் விரைந்து தொழில் கேட்கும் என்க. பெறின் கேட்கும் எனப்பெய்துகாண்க.

வெள்ளி—சுக்கிரன்; வெண்ணிறமுடையவனாதலால் இப்பெயரை அவன் மேவி நின்றான். உடன் என்றது கேட்ட அப்பொழுதே விரைந்து இசைந்து அசுரர் தொழில்செய்தமை விளங்க நின்றது.

இது, சொல்வன்மையின் அருமையையும் அதனையுடையாரெய்தும் பெருமையையும் உணர்த்துகின்றது.

ஞாலம் கேட்கும்=உலகத்தார் கேட்பர். உலகத்தைக் குறித்துவரும் ஞாலம் என்னும் சொல் ஆகுபெயராய் நின்று அதிலுள்ளவரை இதில் உணர்த்தி நின்றது.

நிரந்து=வரிசையாக நிறைத்து; என்றது தான் சொல்லுதற்குரிய பொருள்களை நிரல்படச் செறித்துவைத்து என்றவாறு. நிரத்தல்=பரத்தல் நிறைதல். நீர் நிரந்து ஏற்ற நிலந்தாங்கு அழுவத்து; என்று பரிபாடலிலும், நிரந்து இலங்கருவிய நெடுமலை என ஐங்குறு நூற்றினும், இஃது அமைந்து நிற்றல் காண்க.

சொல்லுதல் வல்லார்ப் பெறின்=சொல்லவல்லாரைப் பெறுவாராயின்; பெறின் என்றது அருமைதோன்ற நின்றது.

சொல்லுதலில் ஒருவன் வல்லுநனாயின் அதனால் அவனுக்கு உண்டாம் பயன் என்னை? என்பாரை நோக்கி இஃதியம்பியதாகக் காண்க.

மேல், சொல்லவல்லானையாரும் வெல்லமுடியாதென்றார்; இதில், அவன் சொல்லின் வழியே உலகம் செல்லும் என்கின்றார்.

முறை பிறழாமல் இனிதாகச் சொல்லுதல் வல்லாரைப் பெறுவாராயின் அவர் சொல்லுந் தொழிலை உலகத்தார் விரைந்து கேட்பர் என்பதாம்.

நிரந்து விரைந்து ஞாலம் தொழில் கேட்குமென்று கொண்டால் ஒன்றுகூடி விரைந்து வந்து தொழில் யாது? என்று உலகத்தார் கேட்பர் என்பதாம்.

சோர்வில்லாமல் சொல்லவல்லானுக்கு உலகமுழுவதும் ஒருங்கே வசமாம் என்பது கருத்து.

மென்மதுர வாக்கால் விரும்பும் சகங்கடின
வன்மொழியி னாலிகழும் மண்ணுலகம்—நன்மொழிசேர்
ஓதுகுயி லேதங் குதவியது கர்த்தபந்தான்
ஏதபரா தஞ்செய்த தின்று. என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

சொல்வன்மையுடையான் எத்துணை வன்மையுடையாரையும் தன் வசஞ்செய்து கொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுக்கிரன்பால் உணரப்படும்.

## கதை.

சுக்கிரன் என்பவன் பிருகுமுனிவரது மரபில் வந்தவன். கவி என்னும் முனிவருடைய புதல்வன். கலைகள் பலவும் கசடறக் கற்றவன்.

மதிநுட்பத்தோடு மனத் திட்பமுமுடையவன். ஆட்சிக்குரிய சூழ்ச்சித் துறைகளில் எவருந்தனக்கு நிகரில்லாதவன். குபன் என்னும் அரசனால் அடியுண்டு மார்பு பிளந்து மடிந்து வீழ்ந்த ததீசிமுனிவரை மிருதசஞ்சீவினி என்னும் மந்திரவலியால் உயிர்ப்பித்து அவனை வெல்லுதற்குரிய தந்திரத்தை உணர்த்தினவன். தன் தவத்தால் கிரகபதம் பெற்றவன். இவனது நிலயம் தாரகைமண்டலத்திற்குமேல் இரண்டிலக்க யோசனையிலுள்ளதென்பர். சொல்வன்மையில் எவரினும் இவன் சிறந்தவன். இவன் மொழிகளைக் கேட்டவுடன் எவரும் இவன் வழியமைந்தொழுகுவர். தன் சொல்வலியால் எவரையும் பேதிக்கவல்ல நாரதமுனிவரும் இவனது நாவலத்தை வியந்து இவன்பால் நயந்து நின்றார். இவனது மதித்திறத்தையும் மொழித்திறத்தையும் தெளிந்து அசுரகுல வேந்தனாகிய அசுரேந்திரன் என்பவன் தனக்கு அமைச்சனாக இவனைப் போற்றிக்கொண்டான். அதனால் அசுரமந்திரி என இவன் பெயர் பெற்று நின்றான். பார்க்கவன், சுங்கன், பளிங்கு, புகர், கவி, மழைக்கோள், உசனன் எனவும் இவனுக்குப் பெயர்களுண்டு. சுக்கிரன் என்பதற்கு வெண்ணிறமுடையவன் என்பது பொருள். சூரபன்மன் துணைவர்களோடு நின்று தவம்புரிந்து இறைவனிடம் வரங்களைப் பெற்று அசுரர்களுக்கெல்லாம் இறைவனாகி வந்தபொழுது இடையே புகுந்து சிலமொழிகளை இவன் இசைத்து நின்றான். உடனே இவனடியில் வீழ்ந்து தொழுது இவன் உரைத்தபடியே அவன் ஒழுகிவந்தான். சந்திரன் தோன்றிய காலத்தில் கடல் கிளர்ந்தெழுதல் போல் இவனைக் கண்டபொழுது அசுரர்களெல்லாரும் உளங்கிளர்கொண்டு திகழ்வர். பொல்லாதவர்களாகிய அசுரரனைவரையும் தன் சொல்லால் அடக்கிவந்தான். வருங்கால் கயமுகன் என்னும் அசுரவீரன் வரபலத்தால் சிறந்து அரசனாயினன். அவன் மிகக் கொடியவன். கடல்போன்ற பெரும் படைகளையுடையவன். எவர்மொழியும் கேளாமல் தன் மனம்போன போக்கில் மதர்த்துத் திரிபவன். அவன்பால் ஒருநாள் இவன் அன்பால் அடைந்தான். அவனது உணர்வையும் இயல்பையும் ஓர்ந்துகொண்டு இனிதாகச் சில உறுதிகளை யுணர்த்தினன். அவன் உவந்து கேட்பதை உணர்ந்து மேலும் நிரந்து கூற நினைந்தான்.

மீயுயர் தவத்தை யாற்றாய் விமலனை யுணராய் ஒல்லார்
மாயமும் திறனும் சீரும் வன்மையும் சிறிதுந் தோராய்
ஏய இவ்வுடலம் நில்லா தென்பதுங் கருதாய்வாளா
போயின பன்னாள் என்னீ புரிந்தனை புந்தி இல்லாய். (1)

ஆற்றிடு தருமம் விஞ்சை அரும்பெறல் மகவுசீர்த்தி
ஏற்றிடு கொற்றம் ஆற்றல் இருநிதி பெருமை யின்பம்
நோற்றிடு விரதம் சீலம் நுவலரும் போதம் யாவும்
கூற்றுவன் கூவு ஞான்று குறித்திடிற் கூடுமோதான். (2)

சீரிய துடலம் என்கை தெரிந்திலை நிலைத்தல் செல்லா
தாருயிர் வலைசயு மென்ப தறிந்திலை யாயுட் பன்னாட்
சாருதல் வேண்டு மென்னுந் தகைமையு நினைத்தியல்லை
பாருயிர் இறப்ப நுங்கி யிருப்பதோ பரிசுமாதோ. (3)

மந்திர மில்லைமாய மில்லையோர் வரமும் இல்லை
தந்திர மில்லை மேலோர் தருகின்ற படையொன்றில்லை
அந்தர அமரரெல்லாம் அனிகமாய்ச் சூழ நின் மேல்
இந்திரன் பொருவான் செல்லின் யாதுநீ செய்திமாதோ. (4)

சிறியதோர் பயனைத் தூக்கித் தீயவர் செய்யுஞ் சூழ்ச்சி
அறிகிலவாகி வீழ்வுற் றகப்படு மாவும் மீனும்
பறவையும் என்ன ஒவ்வார் புணர்ப்பினிற் படுதிபின்னே
விறலொடு வலியும் சீரும் மேன்மையும் இன்றி நின்றாய். (5)

ஆதலின் எவர்க்கு மேலாம் அரன்றனை யுன்னி யாற்ற
மாதவம்புரிதி; அன்னான் வரம்பல கேட்டவெல்லாம்
தீதற வுதவும் பின்னர்த் தேவர் உன்னேவல் செய்வார்
மேதகுமுலகுக் கெல்லாம் வேந்தனாயிருத்தி யென்றான். (6)

நிரந்து இனிதுசொல்லுதலின் இவன் வன்மையை இதில் தெளிந்து காண்க. இவ் இனிய மொழிகளைக் கேட்டவுடனே அவன் மிகவும் மகிழ்ந்து உடனே இவன் அடியில் விழுந்து அருளியபடியே செய்து ஒழுகிவந்தான். அசுரரெல்லாரும் இவன்யாது சொல்லினும் உடனே ஏற்று அதனை ஆற்றி நின்றார். விரைந்து தொழில் கேட்கும் ஞாலம், நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப்பெறின்; என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. அரசர்க்குரிய நீதிகளனைத்தையும் திரட்டி வடமொழியில் இவன் ஓர் நூல்இயற்றியுள்ளான். அது சுக்கிர நீதி என இவன்பெயரால் வழங்கப்படுகின்றது. இவனது உணர்வின் திறமும் சொல்வன்மையும் அதில் இனிதுகாணப்படும். விரிவைக் காசிமான்மியத்தில் காண்க.

சொல்வன்மையுடையானுக்கு உலகமெல்லாம் ஒருங்கேவசமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

649 மற்றோர் பலசொன்னார் மாசற்ற ஔவையொன்றேதன்
குற்றமறச் சொன்னார் குமரேசா—பற்றிப்
பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர். (௯)

இ—ள்.

குமரேசா! ஔவையார் சுருக்கமாக ஒருமொழியே சொன்னார்; மற்றவரேன் பல சொல்லினார் எனின், மாசு அற்ற சிலசொல்லல் தேற்றாதவர், பலசொல்லக் காமுறுவர் என்க.

இது, விளக்கமுற எதையும் சுருக்கிச் சொல்லுக என்கின்றது.

மற்றோர்என்றது மன்னன்அவையில் தன்னுடனிருந்த கூத்தன் முதலிய புலவர்களை. மாசற்ற என்றது மனத்தூயராய் நின்ற அவர்தம் மாட்சி கருதி.

தேற்றாதவர் காமுறுவர் என்றதனால் தேறினார் அங்ஙனம் காமுறார் என்பதாயிற்று. பல சில என்பன பலவின்பால் குறிப்பு வினையாலணையும் பெயர்கள். பல சொற்களை; சில சொற்களை; என்க.

காமுறுவர்=ஆசைகொள்வர்; மாசு அற்ற=குற்றமில்லாத. தேற்றாதவர்=தெளியாதவர். மன்ற=தெளிய; மன்ற என்பது தெளிவுப் பொருளை உணர்த்திவரும் ஓர் இடைச்சொல். நிச்சயத்தையும் குறித்துவரும். மன்ற என்கிளவி தேற்றஞ் செய்யும்; என்றது தொல்காப்பியம். அன்பிலன் மன்ற பெரிதே; மாலைவந்தன்று மன்ற; என ஐங்குறு நூற்றினும், ஆண்டோர் மன்ற இம்மண்கெழு ஞாலம்; எனப் பதிற்றுப் பத்தினும், வல்லை மன்ற நீநயந்தளித்தல்; எனப்புறத்தினும், தக்கது மன்ற மிக்கோன் கூற்று எனப் பெருங்கதையினும், மேற்குறித்த பொருளை யுணர்த்தி இது வந்துள்ளமை காண்க.

மேல், நிரந்து எளிதாக இனிது சொல்லுக என்றார்;
இதில், தெளிவாகஎதையும் சுருங்கச் சொல்லுக என்கின்றார்.

குற்றமற்றனவாச் சிலவாய சொற்களைத் தெளிவாகச் சொல்லுதலை அறியமாட்டாதார், பலவாகச் சொற்களைத் தொடுத்துச் சொல்ல விரும்புவர் என்பதாம்.

பொருள் தெளிவாக விளங்குமாறும், சொல்லில்வழுவுறாமலும், மிகாமலும் சொல்லவேண்டும் என்பார் மன்ற மாசற்ற சில சொல் என்றார். மிகைபடக்கூறேல் என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

தன் கருத்தைச் சுருங்கிய சொல்லால் விளங்கவைப்பவரே அறிவிற் சிறந்தவராவர்; அல்லாதார் அதில் இழிந்தவரேயாவர் என்பது கருத்து.

வாலி, வால்செலாதவா யலது இராவணன்
கோல்செலாதவன் குடைசெலாதரோ; என அனுமான் கூற்றாகக் கம்பர் கூறியுள்ள இதனை நுணுகி ஆராயின் சொல்லின் சுருக்கமும், பொருளின் பெருக்கமும் சொன்னவர் தேற்றமும் இனிதுதெளிவாம்.

நூலுக்குச் சிறப்பென்று விதந்து சொல்லப்பட்ட அழகுகள் எவற்றினும் இச்சுருக்கச் சொல்லையே முதன்மையாக வைத்து இயலும் இசைத்தது. துவரை உள்ளதா? என்று ஒருவணிகனிடம் கேட்டால் அது, இல்லையாயின் உழுந்து உள்ளது என்று அவன் சொல்லவேண்டும்; அங்ஙனம் சொல்லின் அவ் இரண்டனது இன்மை உண்மைகளையும் சுருங்கிய ஒரு சொல்லால் ஒருங்கே உணர்த்தியதாம்.

தம்பால் இல்ல தில்லெனின் இனனாய்
உள்ளது கூறி மாற்றியும் உள்ளது
சுட்டியும் உரைப்பர் சொற் சுருங்குதற்கே; என்னும் இயல் விதியும் இதனைச் சுட்டிநின்றது.

கடையிலிருக்கும் வணிகருக்குங் கூட இச்சுருக்கம் இன்றியமையாது வேண்டப்படுமாயின் அரசியற்றுறையில் தலைமைபெற்றிருக்கும் அமைச்சர் எத்துணைத் தேர்ச்சியுடையராய் இதில் இருக்கவேண்டும் என்பதை எண்ணியுணர்க.

கடல்மடை திறந்தாற்போல் முழங்குகின்றார் என்று வழங்குமாறு பயனிலவாய சொற்களை மூச்சு விடாமல் தொடுத்துச் சொல்வோரைச் சொல்வன்மையாளர் என்று கொள்ளலாகாதென்பது குறிப்பு.

சொற்களை வீணாக விரிக்காமல் சுருக்கமாகவே சிறந்த அறிவுடையார் யாண்டும் சொல்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஒளவையார்பால் உணரப்படும்.

## கதை.

ஒளவையார் கல்விச் செவ்வியோடு சொல்லின் செவ்வியாலும் விளங்கி உலகமெங்கும் உலாவி அமிழ்தினும் இனிய கவிகளைப்பாடி உக்கிரப்பெருவழுதி, சேரமான் வெண்கோ, அதியமானெடுமானஞ்சி, முதலிய மதியுடைமன்னர் பலரையும் மகிழ்வித்து வந்தார். விரிந்தபொருள்களைச் சுருங்கிய சொல்லால் எவரும் எளிதில் தெளிந்துகொள்ளுமாறு விளக்கிக்கூறுவர்.

கொடியவராயினும் இவர் சொல்லைக் கேட்டால் உடனே இவர்க்கு அவர் அடியவராவர். மிகைபடக் கூறேல் என்று தாம் விதித்தபடியே யாண்டும் இவர் சுருக்கமுற உரைத்து நின்றார். சுருங்கச் சொல்லுதலில் எவரும் தன க்கு நிகரில்லாதவர். கடுகைத்துளைத்தேழ் கடலைப்புகட்டிக், குறுகத்தறித்த குறள்; என்று நம் தேவர் நூலைக் குறித்து இடைக்காடர் புகழ்ந்த பொழுது இவர் அதனினுஞ்சுருக்கமாக அணுவைத்துளைத் தேழ்கடலைப்புகட்டிக்குறு கத்தறித்தகுறள் என்றார். மூன்று பிறை வரும்படி ஒரு பாட்டுப்பாடுக என ஒட்டக்கூத்தரை நோக்கி இவர் உரைத்தபொழுது அவையில் நின்று அவன் பாடினன். அதில் இரண்டுமாத்திரம் வந்தன. உடனே இவர் அவனை நோக்கி ஓட்டா ஒருமதி கேட்டாய்; என்றார். இவர் சொல்லிய அச்சொல் லின் நுட்பத்தை நோக்கி எல்லாரும் வியந்தார். சில்வகை எழுத்திற் பல் வகைப் பொருளைச், செவ்வன் ஆடியிற் செறித்து இனிது விளக்கித் திட்ப நுட்பங்கள் சிறந்து வரச்செய்யும் இவர் செய்யுளின் அருமையைக் கம்பர் முதலிய பெரும்புலவர்களும் விரும்பிப் புகழ்ந்தார். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் இவ்வுறுதிப் பொருள் நான்கையும் ஒருபாவில் அமைத்துத் தருக என்று அரசன் உரைத்தபொழுது உடனே

ஈதல் அறம்; தீவினைவிட் டீட்டல் பொருள் எஞ்ஞான்றும்
காதல் இருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே இன்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு. என்று இவர்

பாடித்தந்தார். பாண்டியமன்னன் இதற்குப் பன்னீராயிரம் பசும்பொன் பரிசில் தந்தான் என்பர். குலோத்துங்க சோழன் உறையூரிலிருந்து முடி சூடுங்காலத்தில் இவர் அங்குப் போந்திருந்தார். மணிமகுடத்தை மன்னன் உச்சியில் வைத்தவுடனே அங்குக் குழுமியிருந்த புலவரனைவரும் அவன் செங்கோலனாய் நின்று நெடிது வாழவேண்டும் என்று தனித்தனியே கவி கள் பாடினர். இவர் 'வரம்புயர' என்று வாய்மலர்ந்து நின்றார். புலவரெல் லாரும் பலபடவிரித்து நெடிய கவிகள்பாட இவர் மாத்திரம் யாதும் பாடா மல் இதனை ஓதினரேயென்று மன்னன் மறுகி நின்றான். அவன் நிலையை நோக்கி இவர் இதன் பொருளை விரித்தார். "வரம்புயர, நீருயரும்; நீருயர, நிலம் உயரும்; நிலம் உயர, நெல் உயரும்; நெல் உயரக், குடி உயரும்; குடியு யரக், கோல் உயரும்; கோல் உயரக், கோன் உயர்வான்," என்றார். இதனைக் கேட்டவுடனே மன்னன் முதலா அங்கு மன்னியிருந்தார் அனைவரும் மகிழ்ச்சி மீக்கூர்ந்து இவர்தம் மதித்திறத்தையும் மொழித்திறத்தையும் பெரிதும் மதித்துப் போற்றினர். பலபடச் சொல்லியார் பயனுறாது நின்

றார். ஒன்றே சொல்லி இவர் உயர் புகழ்பெற்றார். பலசொல்லக் காமுறுவர் மன்ற மாசற்ற சிலசொல்லல் தேற்றாதவர்; என்னும் உண்மையை இவர் அன்று உணர்த்தி நின்றார்.

வார்சான்ற கூந்தல் வரம்புயரா வைகலும்
நீர்சான்றுயரவே நெல்லுயரும்—சீர்சான்ற
தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயரும்
ஓவா துரைக்கும் உலகு. (சிறுபஞ்சமூலம்)

இது சங்கப் புலவராகிய காரியாசான் கூறியது. மேல் ஔவை சுருக்கிச் சொல்லிய கருத்து இதில் விரிக்கப்பட்டுள்ளமை காண்க.

சொற்றாற்றுக் கொண்டு சுனைத்தெழுதல் காமுறுவர்
கற்றாற்றல் வன்மையுந் தாந்தேறார்—கற்ற
செலவுரைக்கு மாறறியார் தோற்ப தறியார்
பலவுரைக்கு மாந்தர் பலர். (நாலடியார்.)

சொல் தாறுகொண்டு=சொற்களாகிய முட்கோல்களைக் கொண்டு.

சுருங்கச் சொல்வோரே சொல்வன்மையிற் சிறந்தவராவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

650 கீரன் முதற்சிலரே கீர்த்தியுற்றார் மற்றவர் சீர்
கூரவில்லை என்னே குமரேசா—ஈர
இணர்ஊழ்த்தும் நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார். (ம)

இ—ள்.

**குமரேசா!** தாம் கற்றதனை விரித்துரைத்த நக்கீரன் முதலாயினோர் மிக்க புகழை எய்தினர், மற்றவர் என் அங்ஙனம் எய்தவில்லை எனின், கற்றது உணர விரித்து உரையாதார், இணர் ஊழ்த்தும் நாறாமலர் அனையர் என்க. உம்மை சிறப்புணர நின்றது.

கூர்தல்=மிகுதல். ஈர இணர்=ஈரத்தையுடைய இணர். ஈரம்=குளிர்ச்சி. சிலரே உற்றார் என்றது பலர் உறாமை கருதி. ஏகாரம் தெளிவுப் பொருளது. மற்றவர் என்றது உசனசன்மன் முதலாயினோரை.

சொல்வன்மையினது நன்மையும், அதனையுடையாரது தன்மையும், அதனால் உளவாம் மேன்மைகளும், இதுவரை அருளினார்; அஃதின்மையாலெய்தும் இழிவினை இறுதியாக அறுதியிட்டு உறுதிபெற இதில் உணர்த்து கின்றார்.

மேல், சுருக்கிச் சொல்லுக என்றுணர்த்திவிட்டு ஈண்டு விரித்துரைக்க என்றது விருத்தமன்றோ எனின், அச்சுருக்கம் சொல்லின் மேலது; இவ் விரிவு பொருளின் மேலது; ஆதலால் அங்ஙனம ஆகாதென்க. சொற்சுருக்க மும் பொருட்பெருக்கமும் பொருந்தச் சொல்லுக என்றவாறு.

இணர்=பூங்கொத்து, தளிர். ஊழ்த்தும்=மலர்ந்தும்; ஊழ்த்தல் என்பது மலர்தல், புலர்தல், உதிர்தல், முதிர்தல்களை யுணர்த்திவரும. மெல் லிணர்க் கண்ணியிலைந்த மைந்தர் எனப்புறத்தினும், எக்கர் ஞாழல் இணர் படு பொதும்பர் என ஐங்குறு நூற்றினும், கோடி இணரூழ்த்த என்று குறுந் தொகையிலும், கொன்றை கொடி இணர் ஊழ்ப்பக் கொடிமலா மன்றல மலர; எனப் பரிபாடலிலும் இவை வந்தன காண்க.

இணர் ஊழ்த்தும்=கொத்தின்கண் மலர்நதிருந்தும். நாறாமலர்=நாறா த பூ; என்றது மணம் வீசாத மலர் என்றவாறு. நாறுதல்=மணத்தல். கற்றவனுக்கு மலரை ஒப்புக்கூறியது எற்றுக்கெனின்,

மங்கலமாகி யின்றி யமையாது
யாவரும் மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே. என அவன் குணங் கள் பல அதன்கண் இணங்கியிருத்தலான் என்க.

தாம் கற்றுள்ளதனைப் பிறர் உணரும் வண்ணம் விரித்து உரைக்க மாட்டாதவர், கொத்தாய் மலர்ந்திருந்தும் நாறாத பூவை ஒப்பர் என்பதாம்.

கல்வி வன்மையுடையரேயாயினும் சொல்வன்மை இலராயின் அவர் இழிக்கத்தக்கவரேயாவர் என்பது கருத்து. கல்வியும் சொல்வன்மையும் ஒன்றை ஒன்று அவாவிக் குணியும் குணமும்போல்குலவியுள்ளது என்பதை இதில் உய்த்துணர்க.

கல்வியறிவில்லாத சொல்லும், சொல்வன்மையில்லாத கல்வியும் அத் துணைச் சிறப்படையாதென்பது குறிப்பு.

மணமுள்ள மலரை எவரும் விழைந்து சூடுவதுபோல் சொல்வன்மை யுடையவரை எல்லாரும் புகழ்ந்து போற்றுவர் என்க.

எதனையுடையராயினும் கல்வி ஒன்று இலராயின் அவரை முருக்கின் மணமிலா மலரென மதிப்பேன்; என்று நகுலன் கூறினன்; அத்தகைய கல்வியும் சொல்வன்மை யில்லையாயின் இழிக்கப்படும் என்ற இதனால் அத னது மேன்மை இனிது உணரப்படும்.

சொல்வன்மை எல்லாவற்றுள்ளும் சிறந்தது; அதனைச் சோர்வின்றி யாரும் விரும்பும் வண்ணம் தகுதியறிந்து உறுதிபெற இனிது சொல்ல வேண்டும்; அங்ஙனம் சொல்வோனை இகலி வெல்ல எவராலும் முடியாது; உலகமுழுவதும் அவன் வசமாகும்; எனச் சொல்வன்மையால் உளவாம் உயர்வுகளை முறையே அருளி வந்து, இறுதியாகச் சொற் சுருக்கமும் விளக்கமும் பொருந்த தன் கருத்தை விரித்துரைக்கமாட்டாதவர் எவ்வளவு கல்வியுடையாராயினும் இவ்வுலகில் அவர் நல்ல புகழையுடையார் என அதன் இன்மையால் எய்தும் இழிவினை விளக்கி இதனை இனிது முடித்த அடிகளது சொல்வன்மையை இதில் ஆய்ந்து காண்க.

யாதும் சோர்வின்றி யாண்டும் அஞ்சாமல் நின்று எவரும் விரும்பும் வண்ணம் இனிது சொல்லவல்லவனே அமைச்சனுவான் என்பதும், அல்லாதானை அமைச்சனாக அரசன் அமைத்துக் கொள்ளலாகாதென்பதும் இதன் கருத்தாகக் கொள்க.

சுருக்கிமெய் விளக்கி இனிமையும் பயனும் தொகுத்துய லார் மொழிக் கிடையாத், திருக்கிளர் மொழியைச் சோர்வற அவைக்கட் செல்லுமாறஞ்சுத லின்றி, யுரைக்கவல்லவரே அமைச்சர்களாவர் உறுமுறை பிறழ்தரப் பலவாய், விரிக்கவல்லவரும் கற்றது விளங்க விரிக்கமாட்டாருமெல்வியரே; என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

இறைவனூலுக்கு உரை விரித்துரைத்த கீரர், கபிலர், பரணர், இளநாகர் என்னும் இவர் புகழ் மீக்கூர்ந்து போற்றப்பட பிறர் அங்ஙனம் படாதவாறு போல் சொல்வன்மையுடையார் முன்னர் அஃதில்லாதவர் கல்லாதவராகவே கருதப்படுவார் என்க.

எவ்வளவு கல்வியுடையராயினும் சொல்வன்மையில்லாதார் எல்லாரானும் விரும்பிப் போற்றப்படார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உசனசன்மன்பால் உணரப்படும்.

## கதை.

உசனசன்மன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் மகதநாட்டிலே சாரதபுரி என்னும் நகரிலேயிருந்தவன். இவனுடைய தந்தைபெயர் நந்திகேதனன் என்பர். இவன் அந்தணர் மரபினன். பலநூல்களையும் நன்கு பயின்று புலமை நிரம்பினன். ஆயினும் பொறாமை கொண்டவன், எவரையும் இகழ்ந்தே கூறும் இழிந்த இயல்பினன். தன்னைப்போற் கற்றவரெவருமில்லையென்று தருக்கிக்களித்தவன். கல்வியிற்பெரிதும் வல்லவனுயிருந்தும் சொல்வன்மை சிறிதும்இல்லாதவன்.

தனியே யிருந்துகொண்டு பிறரை இகழ்ந்து கூறுவனேயன்றி அவையிலெ ழுந்து ஏதேனுமொன்று சொல்லவேண்டுமாயின் உள்ளங்கலங்கி உளறி அலறு வான். கற்றவன் என்று கருதி இல்லில் வந்து யாதாவதொன்று சொல்லுங் கள் என்று பிறர் நயந்துகேட்பினும் அவர்உணர்ந்துகொள்வரோஎன்று ஒன் றும் இவன் உரைக்கமாட்டான். இதனால் எவரும் இவனை எள்ளி நெருங் கார். இவனது இயல்பினையறிந்திருந்தும் கல்வி ஆசையால் தன் புதல்வனு க்குச் சிறிது சொல்லியருளுமாறு வேதசீலன் என்னும் வேதியனொருவன் இவனிடம் வந்து ஒருநாள் விரும்பிக் கேட்டான். இவன் யாதும் இரங்காமல் அறவே மறுத்தான். உடனே அவன் வெறுத்து வெகுண்டான். **சரசுவதி தருங்கலையைத் தன்னதேனப் பிறர்க்குதவாச் சண்டாளா நீ பிரமராக்கசாகிடுதி பிடிசாபம்;** என்று அவன் குடல் கொதித்துப்போ னான். அவ்வாறே இவன் படிவம் இழந்து பின் பாழ்பட் டிழிந்தான்.

கல்வியுடையனா யிருந்தும் தான் கற்றதை உரைக்க மாட்டமையோடு மனக்கோட்டமு முடையவனாயிருந்தபடியால் யாரும் இவனை மதிக்கவில்லை. இவனும் இருந்தும் இல்லாதவனாய் இழிந்து நின்றான். கல்வியிற் சிறந்தவ னாயினும் சொல்வன்மை இலனாயின் அவன் போற்றப்படான் என்பதற்கு ஏற்றமாக இவனையே அந்நாட்டார் எடுத்துக்காட்டினர். இணரூழ்த்தும்; நாறாமலரனையர் கற்றது உணர விரித்துரையாதார்; என்னும் உண்மையை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான். விரிவைப் பார்த்துருகிரியத்தில் காண்க.

சொல்வன்மை யில்லாதவன் மணமில்லாத மலர்போல் இழிக்கப்படு வன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

மயிர்வனப்புங் கண்கவரும் மார்பின் வனப்பும்
உகிர்வனப்புங் காதின் வனப்பும்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு. (சிறுபஞ்சமூலம்.)

கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச்—சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்துஞ்
செல்வமும் உண்டு சிலர்க்கு.

எத்துணைய வாயினும் கல்வி யிடமறிந்து
உய்த்துணர் வில்லெனின் இல்லாகும்—உய்த்துணர்ந்துஞ்
சொல்வன்மை யின்றெனின் என்னாம் அஃதுண்டேற்
பொன்மலர் நாற்ற முடைத்து. (குமரகுருபரர்)

## இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

சொல்வன்மையே எல்லா நலங்களுள்ளும் நனிசிறந்தது. அச்சொல் நல்லதாயின் ஆக்கம்பெருகும்; தீயதானால் கேடு உண்டாகும். எவரும் விரும்பி யேற்கும் வண்ணம் இனிது சொல்வதே சொல்எனத்தகும். தகுதி யறிந்து சொல்லின் அதனால் அறமும் பொருளும் உளவாம். தன்சொல்லை எவரும் வெல்லமுடியாதபடி அமைச்சர் தெளிந்து சொல்லவேண்டும். பிறர் விரும்புமாறு சொல்லி எதையும் நுணுகிஉணர்ந்துகோடலே உயர்ந்தோர் இயல்பாம். சோர்வில்லாமல் சொல்லவல்லவனையாரும் வெல்லலரிது. சொல் வன்மையுடையவனுக்கு உலகமுழுவதும் உடனே வசமாம். சொல்வலி யுடையார் எதையும் சுருக்கச்சொல்வர். அஃதில்லாதவர் பலசொல்லி அல்ல லுறுவர். கல்வியுடையராயினும் சொல்வன்மை யிலராயின் அவர் சிறந்து விளக்கார். சொல் நலமுடையவர், மணமுள்ள மலர்போல் எங்கும் நன்மதிப் புறுவர்.

கூறும் அதிகாரம் சொல்வன்மை முற்றிற்று.

## அணிந்துரை.

வண்ணை நே. வை. செல்லையா.

(Lahat Road Ipoh.)

புத்திமிக்க ஜெகவீர பாண்டியனின் போலொருவர் புவியின் மீதோ
எத்திசையும் இலையெனலாம் இன்றமிழின் தனிநூலை எவர்க்குமேற்கக்
கத்தியமும் பத்தியமும் கலந்துவரக் கதைதொடுத்துக் கருத்துங்கூறிச்
சுத்திசெய்தாய் திருக்குறளைச் சுவைசெய்தாய் குறைதவிர்த்தாய் தூய்மை
தானே. (I)

பொய்யாத மொழியுடைய திருக்குறளாந் தமிழ்ப்பெளவப் புணரிகாண
நையாத காவியக்கும் நலமளித்தான் ஐயிரண்டு நயமுமோங்க
ஒய்யார வண்பரிமே லழகனெனும் புலமைக்கோ னுண்மையாக
மையாரும் புகைக்கலனை நீயளித்தாய் எளிதுசெல மாண்பிதாமே. (2)

ஃ

(பொய்யாமொழியார்.)

தேசமிகு ஜெகவீர பாண்டிய நீ செய்தருளுந் திருநூ லொன்றை
ஈசனரு ளாலெய்தி யின்றுகண்டேன் என்னென்பேன் இனிமைமாண்பை
ஓசைமிகு கடலாடை யுலகிலுள்ளார்க் கின்னமிழ்தாம் அதனையுண்டோர்
மாசகன்ற மதிமிகுந்து மாறாத பேரின்பம் மருவி வாழ்வார். (1)

இன்னதொரு நூல்போல மேல்நாட்டில் இன்றொருநூல் எழுந்ததென்றால்
அன்னதன்சீர் என்னாகும் அதையுவந்து கற்பாரின் அளவார் சொல்வார்
மன்னவரும் மொழிமாறி மற்றவரும் நிலைமாறி மயங்கினாலும்
தன்னுடைய தன்மையினால் உலகமெங்கும் பரவியிந்நூல் தழைக்குந்தானே.

ஃ (2)

தெள்ளு கலைதேர் ஜெகவீர பாண்டியனும்
வள்ளுவர் பாவுரையால் வண்குறளாம்—தெள்ளமிர்தை
வாரியிந்த வையமுய்ய வைத்தான் கருணையினால்
மாரியென நின்றான் மகிழ்ந்து. (3)

# ORDER FORM.

# கட்டளைச் சீட்டு.

மானேஜர்
திருவள்ளுவர் நிலையம்,
தூத்துக்குடி.

தேய்தி ..........................................

ஐயா,

தாங்கள் 1100-ம் ௵ ஆவணி (15—9—24) தொடங்கி வெளியிட்டுவரும் "திருக்குறட் குமரேச வெண்பா" என்னும் நூலுக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு இதில் யான் குறித்திருக்கும் புத்தகங்களை அடியில்கண்ட என் விலாசத்திற்கு வி. பி. யில் / தபாலில் அனுப்பும்படி வேண்டுகின்றேன்.

## நூல் விவரம்.

| | | |
|---|---|---|
| அறத்துப்பால் 780 பக்கம் அழகுறப் பைண்டு செய்தது | ரூ. | 8—12—0 |
| பொருட்பால் முதற்பாகம் 800 பக்கம் அழகுறப் பைண்டு செய்தது. | ரூ. | 8—12—0 |
| ௸ இரண்டாம் பாகம் 800 பக்கம் .... | ரூ. | 8—12—0 |
| மேற்குறித்த மூன்று புத்தகங்களையும் ஒரே தடவையில் சேர்த்து வாங்கின் | ரூ. | 24—0—0 |
| அறத்துப்பால் மூலம் கலிகோ பைண்டு | ரூ. | 1—0—0 |
| 2, 3, 4, 5, 6வது தொகுதிகள் தனித்தனி | ரூ. | 4—0—0 |

கையொப்பம் ..........................................

விலாசம்:—பெயர் ..........................................

ஊர் ..........................................

போஸ்டு ..........................................

ஜில்லா ..........................................

குறிப்பு:—தாங்கள் ஆர்டர் அனுப்பும்போது மேற்குறித்த புத்தகங்களில் தங்களுக்குத் தேவையானவற்றைக் குறித்தனுப்பவேண்டும்.

## உயர்தரப் பாடசாலை அதிகாரிகளுக்கோர் வேண்டுகோள்.

# திருக்குறட் குமரேச வெண்பா

## மூலமும் உரையும்.

---

இந்நூலின் பகுதிகளைப் பாடசாலைகளில் வைத்துக் கற்பிக்கும்படி துரைத்தனத்தார் அங்கீகரித்து அனுப்பியிருக்கிறார்கள். மாணவர்களுக்கு இலக்கியச் சுவையோடு அரிய நீதி ஒழுக்கங்களையும் இந்நூல் இனிது பயக்குமாதலால் பாடசாலை ஆசிரியர்களும், பண்டிதர்களும் பயன்படுத்த வேண்டுகின்றோம்.

The book "Thirukkuralkumaresavenba" has been approved as suitable for school use at the meeting of the text book committee held on 10—3—26.

*Director of Public Instruction.*

*MADRAS.*

| | | |
|---|---|---|
| முதற்பாகம் (7-ம் வகுப்பிற்குரியது) | விலை ரூ | 0—12—0 |
| இரண்டாம் பாகம் (8-ம் வகுப்பிற்குரியது) | ,, | 0—12—0 |
| மூன்றாம் பாகம் (9-ம் வகுப்பிற்குரியது) | ,, | 0—12—0 |

SIR. T. N. SIVAGNANAM PILLAI, K. T.,

*Minister for Development Madras Government.*

The Commentary appended to each stanza is an interesting and novel departure from the traditional mode of annotating Kural, and deserves every praise for its lucidity of exposition, exhaustiveness, and wealth of illustrations and parallels from equally renowned Tamil classics. I am sure therefore that this work will form an invaluable addition to every library, Public and private.

T. N. SIVAGNANAM, 23rd June, 1926.

புத்தக நிலையங்களுக்கு உரிமையாக உத்தமமான பைண்டில் இவ்வுபரிய நூல் அமைக்கப்பட்டுள்ளது ஆதலால் வேண்டுவோர் அடியில்கண்ட விலாசத்திற்கு எழுதிக்கொள்க. விலை விபரம் முன் பக்கத்தில் காண்க. புத்தக நிலையங்கள் = Libraries.

அரியது! புதியது! இனியது! பெரியது!

# திருக்குறட் குமரேச வெண்பா

## மூலமும் உரையும்.

இந்நூல் ஆயிரத்து முந்நூற்று முப்பது அரிய குறள்களுக்கும் உரிமையான உண்மைச் சரிதங்களைத் தெரிய உணர்த்துவது. சிறந்த உரையோடு திருந்திய கதை விளக்கமும் பொருந்தியுள்ளது. இந்நூல் எல்லார்க்கும் எளிதாகப் பயன்படுமாறு 1100-ம் ஆண்டு ஆவணி (15—9—24) தொடங்கி மாதந்தோறும் தனித்தனிப் புத்தகங்களாக உயர்ந்த பதிப்பில் வெளிவருகின்றது. வேண்டுவோர் அடியிற்கண்ட விலாசத்திற்கு எழுதிக்கொள்க.

இந்நூலைக்குறித்து அறிஞர்கள் அனுப்பியுள்ள அபிப்பிராயங்களுள் சிலவற்றின் சுருக்கங்கள்.

மகா மகோபாத்தியாயர்.

பிரஹ்மஸ்ரீ உ. வே. சாமிநாதய்யரவர்கள் எழுதியது.

அன்பர் ஜகவீரபாண்டியரவர்கள் இயற்றிய திருக்குறட் குமரேச **வெண்பா** என்னும் நூலிற் சில வெண்பாக்களையும் அவற்றின் உரை முதலியவற்றையும் படித்துப் பார்த்து மெத்தச் சந்தோஷமடைந்தேன். இவர்களைப் பத்து வருஷங்களாக நான் அறிந்திருக்கிறேன். சிலமுறை இவர்களுடைய உபந்நியாசங்களை நான் கேட்டும் இன்புற்றதுண்டு. அதனால் நல்லவை வியப்பத் தமிழில் உபந்நியாசம் செய்வதில் இவர்கள் வல்லுநரென்பதை மட்டும் அறிந்திருந்தேன். இந்த நூலையும் உரையையும் பார்த்ததிற் செய்யுளியற்றுதலிலும், உரையெழுதுதலிலும், பல நூலாராய்ச்சியிலும் திறமையுள்ளவர்களென்பது எனக்குப் புலனாயிற்று.

திருக்குறள் சம்பந்தமாக இரங்கேசவெண்பா முதலிய சில பழைய நூல்கள் காணப்படினும் அவை இந் நூலைப்போல ஒவ்வொரு குறளுக்கும் ஒவ்வொரு வெண்பாவாக இயற்றப்பட்டில. ஒவ்வொரு வெண்பாவிற்கும் ஒவ்வொரு கதையை அமைத்து இயற்றும் இவர்களுடைய பெரு முயற்சி மிகப் பாராட்டற்பாலது. இஃது இனிது நிறைவேறுமாறு திருவருளைச் சிந்திக்கின்றேன்.

தியாகராஜ விலாசம்,<br>சென்னை.<br>20—2—29.

இங்ஙனம்,<br>வே. சாமிநாதையர்.

தமிழ்ச்சங்கம் மதுரை.

திருக்குறட் குமரேச வெண்பா என்னும் இவ் அரிய பெரிய நூல் திரு. ஜெகவீரபாண்டியனவர்களால் செய்யப்பட்டது. ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறள்களுக்கும் ஒவ்வோருண்மைச் சரித நிகழ்ச்சியை மிகப் பொருட் பொருத்தமுற இணைத்து வெண்பாவை முற்றுவித்துச் செல்லுந் திறம் வியந்து பாராட்டற்பாலது. அதுவன்றியும் இந்நூலுள் பொழிப்புரை, கருத்துரை, விசேடவுரை, கதைவிளக்க முதலிய இன்றியமையாத பல வகைக் குறிப்புக்களும் தக்கமேற் கோள்களுடன் இதன் ஆசிரியராலேயே எழுதிச் சேர்க்கப்பெற்றிருத்தல் அன்னாரது கல்விப் பரப்பையும், கட்டுரை வன்மையையும் நன்கு வெளியிடுகின்றது. முட்டுப்பாடின்றி இந்நூல் முடிவெய்துமாறு இறைவன் திருவருள் புரிக.

தமிழ்ச்சங்கம்.
5—9—28.

## H. A. POPLEY.

*National religious work secretary, South India.*

I have much pleasure in expressing my great appreciation of "Thirukkural Kumaresa Venba" which is being published by Jegaveerapandian Avl. of Tuticorin. I have been a subscriber to the publication from the outset and have very much enjoyed reading the numbers as they have come out. The illustrations to the various Kural verses are very apt and are couched in phrases which well fit the original. They are also very instructive in illuminating the meaning and purpose of the original.

The author has tried to be simple and exact and has produced a work that will be of real use to people in the Tamil country who desire to study this wonderful classic and to apply its teachings to everyday life.

I trust that the work will have a large circulation and heartily commend it to all Tamil scholars and to the Tamil public.

14th October 26. H. A. POPLEY.

மானேஜர், திருவள்ளுவர் நிலையம், தூத்துக்குடி.

வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி.